# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## ஏழாம் மடலம் - முதல் பாகம்

## ம - மா

## Vol. VII - Part - I


து.இராசேந்திரன் இ.ஆ.ப

அரசு செயலாளர்

தமிழ் வளர்ச்சி, அறநிலையங்கள் மற்றும் செய்தித்துறை

மற்றும்

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட

இயக்கக வெளியீடு

2007

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## ஏழாம் மடலம் - முதல் பாகம்

## (ம, மா)

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## VOL. VII-PART I


து. இராசேந்திரன், இ.ஆ.ப.
அரசு செயலாளர், தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும்
செய்தித் துறை

மற்றும்

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு

2007

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு – 19

முதற் பதிப்பு : 2007

A Comprehensive Etymological Dictionary of the Tamil Language, Vol. VII, Part - I

பதிப்புரிமை : தமிழ்நாட்டரசு
Government of Tamilnadu

விலை : உருபா 400/–

குறியீட்டெண் : Colon No. P.J1-J, 314"K.M4

வெளியிட்டோர் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை – 600 040.

அச்சீடு : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை 600 113.

நூல் கிடைக்குமிடம் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை – 600 040.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை – 600 113.

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி
## A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE
### VOL. VII- PART I

ஏழாம் மடலம் - முதல் பாகம்
(ம, மா)

பதிப்புக் குழு


து. இராசேந்திரன், இ.ஆ.ப.
*அரசு செயலாளர், தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும்*
*செய்தித் துறை*
மற்றும்
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)
*செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்*

கூர்ந்தாய்வாளர்
திரு.மா.பூங்குன்றன்

தொகுப்பாளர்கள்
திரு.முத்து.பிச்சை
முனைவர் மு.கண்ணன் (பகுதிப் பொறுப்பாளர்)
முனைவர் பா.வெற்றிச்செல்வன்
முனைவர் ச.செந்திலாண்டவன்
முனைவர் இரா.கு.ஆல்துரை
திரு.கா.இளமுருகு
திரு.ச.கி.கணேசன் (ஓவியர்)
*செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்*

மு. கருணாநிதி
முதலமைச்சர்



தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

நாள் 20.4.2007

## அணிந்துரை

அகரமுதலி திட்டத்தின் ஏழு மற்றும் எட்டாம் மடலங்கள் இதழ்களை விரிப்பது கண்டு என் இதயம் பெருமிதம் எய்துகிறது. ஒவ்வொரு மொழியிலும் அதன் சொற்களுக்கு வேர் மூலம் காண முற்படும்போது, பெரும்பாலான சொற்களின் வேர்மூலங்கள் அடுத்த மொழிகளில் சென்று நிற்கும். ஆனால், தமிழில் உள்ள சொற்களின் மூலங்கள் அனைத்தும் தமிழிலேயே அமைந்துள்ளன. இப்போது நடைமுறையில் வழங்குகிற தமிழ்ச் சொற்களும், உருவாகி வருகின்ற கலைச் சொற்களும், தொழில்நுட்பச் சொற்களும் ஏற்கனவே வழங்கிய வேர் மூலங்களிலிருந்து விரிந்தும் பெருகியும் வந்தனவும் வருவனவும் ஆகும்.

அறிவியல் வளர்ச்சி மிகுந்துள்ள இந்நாளில், செய்தித் தொடர்பாலும் தொழில் நுட்ப வளர்ச்சியாலும் உலகம் சுருங்கிவிட்ட நிலையில், ஒரு மொழியில் அண்டையயல் மொழிச் சொற்களெல்லாம் கலந்து விடுவது இயல்பு. இத்தகைய சூழ்நிலையிலும் தமிழ் தனித்தியங்க வல்லதாக நெடுங்காலமாக இயங்கிக் கொண்டு இருக்கிறது. இதைத்தான் பாவேந்தர் பாரதிதாசனார் 'தனித்தியங்கும் தன்மை தமிழினுக்கு உண்டு; தமிழே ஞாலத்தில் தாய்மொழி பண்டு' என்று ஆணித்தரமாகப் பாடி வைத்தார்.

அவ்வாறு, தமிழ், தான் தனித்தியங்குவது மட்டுமல்லாமல், பிற மொழிகளுக்கும் சொற்களை வாரி வழங்கிக் கொண்டுள்ளது. தமிழகத்திற்கு அப்பால் தனித்தனியே பிரிந்து வழங்கிவரும் திராவிட மொழிகளுக்கெல்லாம் தமிழ்மொழி வேர் மூலங்களை வழங்கியுள்ளதால், அவற்றின் அடிப்படையிலேயே அம்மொழிகளில் சொற்கள் பெருகியுள்ளமையைக் காண்கிறோம். அதனாலேயே, 'தமிழ் திரவிடத்திற்குத் தாய்' என்று தேவநேயப் பாவாணர் பறை சாற்றினார்.

இன்னும் பல மொழிகளிலுமுள்ள சொற்களின் வேர் மூலங்களும் தமிழிலேயே இருப்பதைக் காண நேர்கிறது. இது மொழியியல் உலகின் ஆய்வுப் போக்கைப் பல திருப்பங்களுக்கு உள்ளடக்குகின்றது. நெடுங்காலமாக வழக்கத்தில் இருப்பதும், தனித்தியங்க வல்லதும், பிறமொழிகளுக்குச் சொற்களை வழங்கவல்லதுமான மொழியே 'செம்மொழி' எனச் செம்மொழி இலக்கணம் வரையறுக்கப்படுகின்றது. தமிழின் இலக்கண இலக்கிய நூல்கள் இருட்டடிப்புச் செய்யப்பட்டு மறைக்கப்பட்டிருந்த காலமான கி.பி. 1857 அளவில் தமிழகம் வந்திருந்த கால்டுவெல் பெருமகனார் தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம் ஆகிய மொழிகளில் ஓர் ஒப்புமையைக் கண்டறிந்து, "திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்" (The comparative grammar of Dravidian Languages) என்ற நூலை வெளியிட்டார். அதன் வழி அவர் தன் ஆராய்ச்சியில் கண்ட முடிவுதான், "தமிழ் ஒரு செம்மொழி" என்பதாகும்.

அதன்பின், ஆங்கில அறிஞர்களான, "மெக்ளின்" போன்றவர்கள் தமிழ்மொழியில் உள்ள பதிவுகளையும், தமிழர்களின் பண்பாடு, நாகரிகம் ஆகியவற்றையும் அறிவியல், வானியல் போன்றவற்றில் அவர்கள் பெற்றிருந்த அறிவாற்றலையும் ஆராய முற்பட்டனர். அவற்றின்வழி அந்த அறிஞர் பெருமக்கள் எல்லாம், 'தமிழ் ஓர் உயர் தனிச் செம்மொழி' (Primary Classical) என்று வழிமொழிந்து சென்றனர்.

இவற்றின் தொடர்ச்சியாகத் தமிழை ஒரு செம்மொழி என அரசே அறிவிக்க வேண்டுமென்று பரிதிமாற் கலைஞர் தன் கோரிக்கையை முதன்முதலில் அரசின் முன்வைத்து வலியுறுத்தினார்.

ஆனால், இதை முழுவதுமாக அறிவியல் வழியாக மொழியியலில் நிறுவுவதற்குச் சொற்களுக்கு உரிய வேர் மூலம் காணும் சொற்பிறப்பியல் பணியே துணை நிற்கும் என்று, தன் வாழ்நாளையே சொல்லாய்வுக்கென ஒப்புவித்துக் கொண்டவர் 'மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர்'. இத்தகைய பலரது தொடர்ச்சியான சிந்தனைகளின், செயல்பாடுகளின் மூலமாகத்தான் தமிழ் ஒரு செம்மொழி என்பதற்கான அங்கீகாரத்தை இன்று நாம் வென்றெடுத்துள்ளோம்; வெற்றிவாகை சூடியுள்ளோம்.

தமிழ்மொழியில் வழங்கும் சொற்களுக்கெல்லாம் வேர்மூலம் காண்பது என்பது ஆழ்கடலில் முத்தெடுக்கும் பணியினும் கடினமானது; இந்தப் பணியொன்றே தமிழ் செம்மொழி என்பதை ஏற்கச் செய்யும் முதன்மைப் பணியாகும். இப்பணியில் மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் பல ஆண்டுகள் உழைத்து ஆராய்ச்சி நூல்கள் பலவற்றை உருவாக்கி வெளியிட்டுள்ளார்; 'உயர்தனிச்செம்மொழி' (The Primary Classical Language of the World) என்ற நூலைப் பல ஆண்டுகளுக்கு முன்னமேயே வெளியிட்டுள்ளார்.

தேவநேயப் பாவாணரின் இந்தச் சொல்லாராய்ச்சித் திறனை அறிந்து, அவர்தம் பணி தமிழ் உலகிற்குத் தேவை என்று நான் கருதியதால் 8.5.1974 அன்று, 'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககம்' என்னும் ஒரு துறையைப் புதிதாக நிறுவி, அதற்குப் பாவாணர் அவர்களையே இயக்குநராகவும் நியமனம் செய்து அகர முதலித் தொகுதிகள் வெளிவர ஆவன செய்ததை இவ்வேளையில் மகிழ்வுடன் நினைவு கூர்கிறேன். அதன் பயனாக, பணிகள் சிறப்பாக நிகழ்ந்து முதல் தொகுதி அணியமாகிக் கொண்டிருக்கும் நிலையில் பாவாணர் அவர்கள் திடீரென மறைந்தார்கள். அதற்குப்பின் அவர்தம் நூல்களை அடிப்படையாகக் கொண்டு, அவரின் அணுகுமுறையிலேயே தொடர்ந்து அகர முதலித்திட்டத்தின் அடுத்தடுத்தத் தொகுதிகள் வெளிவரலாயின.

பாவாணர் மறைவுக்குப் பின்னும், ஒவ்வொரு முறையும் அரசுப்பொறுப்பு ஏற்கிற போதும் இந்தத் துறையின் வளர்ச்சியில் நான் மிகுந்த அக்கறை செலுத்தி வந்துள்ளேன். 1996ஆம் ஆண்டில் தமிழ் ஆட்சி மொழி, தமிழ்ப் பண்பாட்டுக்கு எனத் தனி அமைச்சகம் உருவாக்கப்பட்டுச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்திற்குத் தேவையான கூடுதல் பணியாளர்கள், கணிப்பொறியமைப்பு போன்ற வசதிகள் செய்து கொடுக்கப்பட்டன.

இதுவரை, மும்மூன்று தொகுதிகள் கொண்ட ஆறு மடலங்களாக மொத்தம் 18 தொகுதிகள் சென்ற ஆண்டுவரை வெளிவந்து முடிந்துள்ளன. இப்போது 'ம', 'ய', 'வ' வரிசையில் ஆறு பகுதிகள் வெளிவருவது கண்டு மகிழ்ச்சியடைகிறேன். எஞ்சிய பகுதிகளும் விரைந்து வெளிவர வேண்டும் என்பது என் அவா. இந்த அகரமுதலிப் பகுதிகள் வெளிவர உறுதுணையாய் நின்ற தமிழ் வளர்ச்சி–பண்பாடு (ம) அறநிலையத் துறை சிறப்பு ஆணையர் மற்றும் அரசுச் செயலாளர் மற்றும் அகரமுதலித் திட்ட இயக்கத்தின் பொறுப்பு இயக்குநர் திரு. து. இராசேந்திரன், இ.ஆ.ப. அவர்களுக்கும், நூல்களை உருவாக்கியுள்ள அகரமுதலித் திட்டத்தின் ஆசிரியர், பணியாளர் குழுக்களுக்கும் எனது உளமார்ந்த பாராட்டுகள் உரித்தாகுக.

என்றும்,
அன்புடன்

(மு. கருணாநிதி)



மாண்புமிகு தமிழக முதலமைச்சர்
"முத்தமிழறிஞர்"
**கலைஞர் மு. கருணாநிதி**

*து. இராசேந்திரன்*, இ.ஆ.ப.,
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி, அறநிலையம் (ம) செய்தித் துறை
மற்றும்
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககம்,

# பதிப்புரை

*"வாழ்க தமிழ்மொழி வாழ்க தமிழ்மொழி*
*வாழ்க தமிழ் மொழியே!*
*வானம் அறிந்த தனைத்தும் அறிந்து*
*வளர்மொழி வாழிய வே!"* –பாரதி.

இலக்கிய வளமும் இலக்கணத் திட்பமும் கொண்ட – தொன்மையிலேயே பெருமை பெற்ற தமிழ் மொழியில் அகரமுதலி எனப்படும் சொற்பொருள் வரிசையடங்கிய நூல் மிகவும் பிற்கால வரவு.

தொல்காப்பியத்திலேயே அரிய சொற்கள் பலவற்றிற்குப் பொருள் கூறும் இயல்கள் உண்டு. பாடல்களில் சொற்களுக்குப் பொருள் கூறும் நூல்கள் எழுந்திருந்தன. ஆனால் பொது மக்களும் பயன்படுத்தும் வண்ணம் அனைவரும் புரிந்து கொள்ளும் வகையில் அமைந்த முதல் தமிழ் அகராதி நூல் சதுரகராதிதான் என்பர் மொழியறிஞர். கிறித்துவ மதம் பரப்ப வந்த மதப் பரப்புநரான வீரமாமுனிவர் தமிழ் கற்று திளைத்தபின் தமிழுக்கு அளித்த நூல்களில் அரிய நூலாக அறிமுகப்படுத்திய நூல் சதுரகராதி.

ஐரோப்பிய நாடுகளில்தான் அகராதி முதலில் தோன்றியது என்பர். ஐரோப்பிய நாடுகளில் ஒரு மொழியில் உள்ள சொற்கள் ஏற்கெனவே இலத்தீனத்திலிருந்தோ கிரேக்கத்திலிருந்தோ அல்லது இதுபோன்ற பழைய மொழிகளிலிருந்து வந்தவையாகவே இருக்கும். ஆங்கில மொழியை இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

இன்றைய நிலையில் உலகில் உள்ள அனைத்து மொழி அகரமுதலிகளும் ஒரு சேர அழிந்துபட்டுவிட்டது என்ற நிலை உருவானால் ஆங்கில மொழி பாதி அழிந்து பட்டுவிடும். எனவே பாதி மக்களுக்கு ஆங்கிலம் அகரமுதலியில்தான் வாழ்ந்து கொண்டுள்ளது.

ஆங்கிலம் பல மொழிகளின் கூட்டுமொழியாக பெரும்பங்கு இயங்குவதே அதற்கு மூலக் காரணமாகும்.

அவ்வாறுள்ள நிலையில் தமிழ் தனித்தியங்கும் தன்மையைப் பெரிதும் பெற்றுள்ளது. கல்வியறிவில்லாத ஒருவரும் கூட பல சொற்களை அதுவரை கேட்டுமறியாத நிலையில் கேட்ட மாத்திரத்தில் அதன் சூழ்நிலைப் பொருளைக் கொண்டும் ஒலி ஏற்ற இறக்கத்தைக் கொண்டும் புரிந்து கொள்வர். அதுமட்டுமல்லாது அதை அந்தப் பொருளிலேயே மீண்டும் பயன்படுத்த முன்வருவர்.

அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சி பெற்ற இந்தக் காலத்தில் கலைச்சொற்கள் உருவாக்கம் மிகுந்து ஏராளமான சொற்கள் தமிழ் மொழிக்குப் புது வரவாகக் கொள்ளப்பட்டுள்ளன. ஒரு துறை சார்ந்த கலைச்சொற்கள் மற்ற துறை சார்ந்தவர்களுக்கும் பொதுவாக அனைவர்க்கும் புரியும் வண்ணம் செய்வதற்கு அகரமுதலி கட்டாயம் தேவைப்படுகிறது.

தமிழிலேயே பல்வகைக் காரணங்களினால் பிறமொழிச் சொற்கள் கலந்து விடுவதால் நாளடைவில் மக்களின் பயன்பாட்டு நிலையில் பிறமொழிச் சொற்கள் ஏராளமாகத் தமிழில் கலந்து விடுகின்றன. அனைத்து மக்களும் அவற்றைப் புரிந்து கொள்ள அகரமுதலி தேவைப்படுகிறது. இந்த அகரமுதலி அச்சொற்களின் மூலமொழி எது என்பதையும் அந்த மொழியில் அதன்பொருள் என்ன என்பதையும் தமிழில் அது வடிவ மாற்றம், கருத்து மாற்றம் பெற்ற நிலை ஆகிய அனைத்தையும் தெரிவிக்கிறது.

ஆங்கில மொழிக்கு கீற்று (W.W. Skeat) என்பவர் 1879 இல் ஆங்கிலச் சொற்பிறப்பியல் அகரமுதலி வெளியிட்டார். அதில் ஆங்கில மொழிச்சொற்கள் எந்தெந்த மொழியிலிருந்து எந்தெந்தக் கருத்தில் ஆங்கிலத்திற்கு வந்தன என்பதான சொற்களின் வரலாற்றை எடுத்து கூறுவதாக அமைந்திருந்தது.

*"மொழி என்பது ஒரு மக்களினம் பேசும் பேச்சிலும், இயற்றும் இலக்கியத்திலும், ஆளும் சொற்களின் முழுமையான சொற்றொகுதி"*. சொற்களன்றி மொழியென்று தனி வேறாக ஒன்றுமில்லை. ஆதலால் சொல்லாராய்ச்சியே மொழியாராய்ச்சிக்கு அடிப்படை என்பர் அறிஞர் பெருமக்கள். அத்தகைய மொழியாராய்ச்சியில் தனது வாழ்நாள் முழுவதையும் அர்ப்பணித்துக் கொண்ட பெருமகனார் 'மொழி ஞாயிறு' தேவநேயப் பாவாணராவார். அவரது சீரிய தலைமையின்கீழ் தமிழ்நாடு அரசால் 1974இல் உருவாக்கப்பட்ட செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் என்னும் இத்துறை, அவரது அடிச்சுவடுகளைப் பின்பற்றி சொற்பிறப்பியல் அகரமுதலி பகுதிகளை தொகுத்து வெளியிட்டு வருகிறது. பேரகரமுதலி வெளியீடுகள் வரிசையில், ஏழாம் மடலத்தின் மூன்று பகுதிகளில் ம, மா வரிசை என்ற இப்பகுதி முதல் பகுதியாகும்.

இதில் சிக்கலான பல சொற்களின் வேர் மூலங்களை இத்தொகுதி எடுத்துக் காட்டுகிறது. சான்றாக

*'மல்லன்'* என்ற சொல்லுக்கு 'முல்' – 'மல்'. மல் = பருமை, வளம், வலிமை, திரட்சி என்று கூறப்பட்டுள்ளது. திரண்ட வலிமையுடைய இருவர் அல்லது இரு படைகள் கூடிப் பொருவது போர்; மல் + போர்= மற்போர்.

மேலும், *'மங்கலம்'* என்ற சொல்லுக்கும் *'மட்டம்'* என்ற சொல்லுக்கும் முறையே 14 மற்றும் 19 வகையான பொருள் விளக்கங்கள் அழகுறக் கொடுக்கப்பட்டுள்ளன. அதைப்போல *'மடம்'* என்ற சொல்லுக்கும் *'மடி'* என்ற சொல்லுக்கும் *'மண்டிலம்'* என்ற சொல்லுக்கும் *'மதம்'* என்ற சொல்லுக்கும் பல்வகைப் பொருள் விளக்கங்கள் பொருத்தப்பாட்டுடன் தரப்பட்டுள்ளன.

அதேப்போல *'மாதம்', 'மாலை'* மற்றும் *'மானம்'* ஆகிய சொற்களுக்கு மேற்கோள்களுடன் பொருள் விளக்கங்கள் தரப்பட்டுள்ளன.

இதுபோன்ற சிறப்புப் பொருள்களைத் தருவதன் வழி இந்த அகரமுதலி வேறெந்த அகரமுதலிக்கும் இல்லாத சிறப்பினைப் பெறுகிறது.

தமிழ் வளர்ச்சிக்குப் பல்லாற்றானும் ஊக்கம் அளித்து வரும் நம் ***மாண்புமிகு முதலமைச்சர்*** அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்பகுதியை உருவாக்குவதில் உறுதுணையாக நின்ற பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர்கள், பகுதிப் பொறுப்பாளர், தொகுப்பாளர்கள் உள்ளிட்ட அனைவரையும் பாராட்டுவதுடன் மேலும் சிறப்பாகப் பணியாற்ற வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறேன்.

7/3/2000

து. இராசேந்திரன்

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

# ம

ம[1] *ma,* மகரமெய்யும் அகர உயிருஞ் சேர்ந்த உயிர்மெய்யெழுத்து; the compound of ம் and அ.

*[ம் + அ.]*

ம[2] *ma,* பெ.(n.) ஏழிசைக் குறியீடுகளுள் நான்காவதாகிய உழை (மத்திமம்) எனப்படும் இசையி னெழுத்து (சிலப்.3:67, அரும்.); the symbol of the fourth note of the gamut (Mus.).

*[ம் + அ.]*

ம[3] *ma,* பெ.(n.) 1. நிலவு (இலக்.அக.); moon. 2. சிவன் (இலக்.அக.); *Šivaṉ.* 3. காலன் (இலக்.அக.); *Yamaṉ.* 4. காலம் (யாழ்.அக.); time. 5. நான்முகன் (யாழ்.அக.); Brahman. 6. திருமால் (யாழ்.அக.); *Tirumāl.* 7. நஞ்சு (யாழ்.அக.); poison.

*[ம் + அ.]*

மஃகான் *makkāṉ,* பெ.(n.) மகரவொற்று; the letter 'm'. *"மஃகான் புள்ளிமுன் வவ்வுந் தோன்றும்" (தொல்.எழுத்து.28).*

*[ம + கான்.]*

மக்கட்கதி *makkaṭ-kati,* பெ.(n.) நான்கு நிலைகளுள் மக்களாய்ப் பிறக்கும் பிறப்பு (சீவக.2790, தலைப்பு); birth as a human being, one of *nāṟ-kati* (q.v.).

*[மக்கள் + **Skt.** கதி.]*

**Skt.** கதி > த.நிலை.

மக்கட்கதியெழுத்து *makkaṭ-kati-y-eḻuttu,* பெ.(n.) ஆ, ஈ, ஊ, ஏ என்ற நான்கு உயிர் நெடிலும், ங, ஞ, ண, ந, ம என்ற ஐந்து மெய்யெழுத்துகளும் (பன்னிருபா, 24); the four long vowels ā, ī, ū, ē and the consonants ṅ, ñ, ṇ, n, m.

மக்கட்சேவகம் *makkaṭ-cēvagam,* பெ.(n.) மக்கள் ஊழியம்; service to the people. *"மக்கட் சேவகப் பேற்றுக்குப் பரப்பு ஒரு மாவுக்குக் குறுணியாக" (தெ.க.தொ. 4:33).*

*[மக்கள் + **Skt.** சேவகம்.]*

மக்கட்சேவகன் *makkaṭ-sēvagaṉ,* பெ.(n.) மக்கள் ஊழியன்; one who does personal service, social worker. *"தண்டுகிற நெல்லு மக்கட் சேவகர்க் கொண்டு" (தெ.க.தொ. 4:33).*

*[மக்கள் + **Skt.** சேவகன்.]*

மக்கட்டம்பிடி-த்தல் *makkaṭṭam-piḍi-,* 4 செ.கு.வி.(v.i.) இழுபறிப்படுதல் (யாழ்.அக.); to be landed in difficulties.

*[முக்கட்டு→முக்கட்டம்→மக்கட்டம் + பிடி-. முக்கட்டு = துன்பநிலை (தஞ்சை வழக்கு).]*

மக்கட்டாயம் *makkaṭṭāyam,* பெ.(n.) மகன் முறையாய் வரும் தாய வுரிமை; system of inheritance rights to the sons, succession in the time of sons, dist.fr. *maruma-k-kaṭṭāyaṉ.*

*[மகன்→மக்கள் + தாயம். (மக்கள் – ஆண்பாற் பன்மை.]*

மக்கட்டு[1] *makkaṭṭu,* பெ.(n.) மணிக்கட்டு (தக்கயாகப்.99, உரை); wrist.

*[மணிக்கட்டு→மக்கட்டு]*

**மக்கட்டு²** *makkaṭṭu,* பெ.(n.) அரையில் ஆடையின் மேற்கட்டுங்கட்டு; waistband. *"புதுப்புது மக்கட்டலை மக்கட்டினரே" (தக்கயாகப். 99).*

*[மேல் + கட்டு→மேக்கட்டு→மக்கட்டு.]*

**மக்கட்பரப்பு** *makkaṭ-parappu,* பெ.(n.) 1. மன்பதை; humanity, human beings. 2. நாட்டு மக்கள் (திவா.); inhabitants or citizens of a state, the public, the common wealth.

*[மக்கள் + பரப்பு.]*

**மக்கட்பாடு** *makkaṭ-pāḍu,* பெ.(n.) மக்களுடைய முயற்சி; human effort. *"மக்கட் பாட்டினானும் வலியானும்..... பெறலாவதன்று" (இறை.1, 10).*

*[மக்கள் + பாடு.]*

**மக்கட்பேறு** *makkaṭ-pēṟu,* பெ.(n.) 1. பிள்ளை; obtaining children. 2. பெறுகை; be getting children. *"அறிவறிந்த மக்கட் பேறல்ல பிற" (குறள், 61).*

*[மக்கள் + பேறு.]*

**மக்கடபுத்தி** *makkaḍa-putti,* பெ.(n.) குறும்புத் தனம் (வின்.); mischievous tendency.

*[ஒருகா.மழுக்கடம் + **Skt.**புத்தி.]*

**மக்கடி-த்தல்** *makkaḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) உருவழித்தல் (வின்.); to deform, disfigure.

*[மழுக்கடி→மக்கடி-,]*

**மக்கண்முரி** *makkaṇ-muri,* பெ.(n.) வடிவின் சிறியவ-ன்-ள் (கலித்.94); dwarf, chit, slip of a person, used in contempt.

*[மக்கள் + முரி (முரி = சிறுமை).]*

**மக்கம்¹** *makkam,* பெ.(n.) எருக்கு (மலை.); madar. maddar-*Rubia cordifolia.*

**மக்கம்²** *makkam,* பெ.(n.) நெய்வோர் தறி (வின்.); loom.

தெ. மக்கமு; க. மக்க.



**மக்கமல்லார்-தல்** *makkamallār-,* 2 செ.கு.வி. (v.i.) மல்லாந்து கிடத்தல் (வின்.); to lie on the back.

*[மக்க + (மீமிசை அடைச்சொல்) மல்லார். மலர் →மல்லார்-. மலர்தல் = முன்புறம் மேனோக்கி இருத்தல். "கவிழ்ந்த மண்டை மலர்க்குநர்யாரென" (புறநா.103).]*

**மக்கல்** *makkal,* பெ.(n.) கெட்டுப்போன பொருள்; anything spoiled. *அரிசி மக்கலாயிருக்கிறது (உ.வ.).*

*[முல் (பொருந்தற் கருத்து வேர்)→முள்→மள் →மள்கு. மள்குதல் = ஒளி குறைதல், குறைதல். மள்கு→மழுகு→மழுகுதல் = ஒளி குறைதல். மழுகு →மழுங்கு→மங்கு. மள்கு→மட்கு. மட்குதல் = மயங்குதல், ஒளி மங்குதல், அழுக்கடைதல், வலி குன்றுதல். மட்கு→மக்கு→மக்குதல் = ஒளி மழுங்குதல், அழுக்கேறுதல், கெட்டுப்போதல். மக்கு→மக்கல் (வே.க.4:60).]*

**மக்கல்நாற்றம்** *makkal-nāṟṟam,* பெ.(n.) கெட்ட வாடை; fusty, stink.

*[மட்கு→மக்கு. மக்கல் + நாற்றம்.]*

**மக்கல்லசூளை** *makkalla-šūḷai,* பெ.(n.) மக்கல்லம் பார்க்க; see *makkallam* (சா.அக.).

**மக்கல்லம்** *makkallam,* பெ.(n.) மகவீன்ற பெண்களின் கருப்பையிலிருந்து அழுக்கு முழுவதுமாய் வெளிப்படாததினால் ஏற்படும் நோய்; a disease in which *lochia* of newly delivered woman is obstructed in its exit by the local *voyu* and thereby causing growths (nodules) below the naval on the sides of the pelvis or the pubis. Severe piercing pain is felt about the region of navel stomach and bladder (சா.அக.).

**மக்கள்** *makkaḷ,* பெ.(n.) 1. மாந்தவினம்; human beings, in general. *"உயர்திணை யென்பனார் மக்கட் சுட்டே" (தொல்.சொல்.1).* 2. ஐம்பொறியுணர்வொடு மனவறிவுமுடைய உயிர்கள்; human beings for excellence as having the five senses as well as the mind which is the sixth sense. *"மக்கள் தாமே ஆறறி வுயிரே" (தொல்.பொருள்.588).* 3. பிள்ளைகள்; children. *"தம்பொரு ளென்ப தம்மக்கள்" (குறள், 63). "விலங்கொடு மக்களனையர் இலங்குநூல் கற்றாரோ டேனை யவர்" (குறள், 410). "மக்கள் தீர்ப்பே மகேசன் தீர்ப்பு" (பழமொழி).*

ம., க. மக்கள்.

**மக்கள்வழி** *makkaḷ-vaḻi,* பெ.(n.) மக்கள் சொத்துரிமை; patriarchal, system of inheritance in which the property descends to the sons.

*[மக்கள் + வழி.]*

**மக்களி¹-த்தல்** *makkaḷi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. குணமடைந்த நோய் திரும்புதல் (சென்னை); to return, relapse, as disease. 2. உடற் சந்து பிசகுதல்; to be dislocated, as the joints.

*[மறுக்களித்தல்→மக்களித்தல். ஒ.நோ. ஒருக்களித்தல்→ஒக்களித்தல்.]*

**மக்களி²-த்தல்** *makkaḷi-,* 18 செ.குன்றாவி. (v.t.) மாற்றுதல்; to modify, revoke, supersede, retract. *மக்களித்துப் பேசாதே (உ.வ.).*

*[மறுக்களி-,→மக்களி-,]*

**மக்களி³-த்தல்** *makkaḷi-,* 4 செ.கு.வி.(v.i.) புரளுதல்; dislocality.

*[மறுக்களித்தல்=மறுபுறம் திரும்புதல். மறுக்களி →மக்களி-,]*

**மக்களிக்குசுரம்** *makkaḷikku-šuram,* பெ.(n.) பழம்சுரம்; relapsing fever (சா.அக.).

**மக்களிப்பு** *makkaḷippu,* பெ.(n.) 1. புரளுகை; failures, defect, distortion. 2. குணமான நோய் திரும்புகை; returning or relapse, as of a disease.

*[மறுக்களிப்பு→மக்களிப்பு.]*

**மக்களுறை** *makkaḷuṟai,* பெ.(n.) மக்கள் மருந்து; medicine for human being (சா.அக.).

*[மக்கள் + உறை.]*

மக்கன் *makkaṉ,* பெ.(n.) மந்தன்; dullard.

*[முல் (பொருந்தற் கருத்து வேர்)→முள்→மள் →மள்கு→மட்கு. மட்குதல் = ஒளி மங்குதல், அழுக்கடைதல், வலி குன்றுதல். ஒ.நோ. வெள் → வெள்கு→வெட்கு. மட்கு→மக்கு = மந்தன், அறிவிலி. மக்கு→மக்கன் (வே.க.4:60).]*

மக்கனம் *makkaṉam,* பெ.(n.) 1. மூழ்குகை; immersion. 2. அவமானம் (வின்.); disgrace, shame.

*[மக்கு→மக்கனம்.]*

மக்கனீசம் *makkaṉīšam,* பெ.(n.) தங்கம்; refined gold (சா.அக.).

மக்காச்சோளம் *makkā-c-cōḷam,* பெ.(n.) ஒருவகைச் சோளம்; maize indian corn - *Zea mays.*



மக்காயன் *makkāyaṉ,* பெ.(n.) மூடன் (இ.வ.); dullard, idiot.

*[மக்கு→மக்கன்→மக்காயன்.]*

மக்காரெட்டி *makkā-reṭṭi,* பெ.(n.) பழைய நாணய வகை (சரவண. பணவிடு.58–59); an ancient coin.

மக்கி[1] *makki,* பெ.(n.) 1. மரவகை; ceylon gamboge. 2. குளிகை வகை (யாழ்.அக.); a medicinal pill.

மக்கி[2] *makki,* பெ.(n.) ஈ; house fly (C.G.).

மக்கி[3] *makki,* பெ.(n.) வெண்பார்க்கல் (யாழ்ப்.); marl, calcareous earth.

மக்கிக்கலவை *makki-k-kalavai,* பெ.(n.) பிசின் கலப்பு; a compound of gambage.

*[மக்கி + கலவை.]*

மக்கிக்குமக்கி *makkikku-makki,* பெ.(n.) ஈயடிச்சான் காப்பி; exact reproduction or copy (C.L.).

க. மக்கிகாமக்கி.

மக்கிகா *makkikā,* பெ.(n.) எருக்கு; muddar plant (சா.அக.).

மக்கிச்செடி *makki-c-ceḍi,* பெ.(n.) மக்கிப் பிசின் எடுக்கும் ஒருவகைச் சீனச்செடி; a kind of tree yielding gamboggi (சா.அக.).

மக்கிசாபுகையிலை *makkišā-pugai-y-ilai,* பெ.(n.) மூக்குத்தூள் புகையிலை; tabacco used for preparing snuff (சா.அக.).

மக்கிட்டுப்பிடி *makkiṭṭu-p-piḍi,* பெ.(n.) கைகளாற் கட்டிப் பிடிக்கும் பிடிப்பு; grip by throwing one's arms round another. *மக்கிட்டுப்பிடியாகப் பிடித்தான் (இ.வ.).*

*[மல் + கட்டு + பிடி.]*

மற்போர்க்குரிய கட்டுப்பிடி.

மக்கிமுக்கி *makki-mukki,* பெ.(n.) மக்கி[1] பார்க்க (யாழ்ப்.); see *makki*[1].

மக்கிமுக்கிமரம் *makki-mukki-maram,* பெ.(n.) ஒருவகைப் பிசின் மரம்; ceylon gamboge tree.

*[மக்கிமுக்கி + மரம்.]*

மக்கிறந்தம் *makkirandam,* பெ.(n.) பித்தளை; brass (சா.அக.).

மக்கு[1]–தல் *makku-,* 5 செ.கு.வி.(v.i.) 1. அழிதல் (வின்.); to die, perish. 2. மந்தமாதல்; to become dull. *"மக்கிய ஞானத் தீயால்" (கைவல்.தத்.90).* 3. கெடுதல்; to decay, as fruits. 4.அழுக்கேறுதல் (வின்.); to moulder. 5. ஈரத்தாற் கெட்டுப் போதல்; to be spoiled, as by dampness. *அரிசி மக்கிப் போய் விட்டது (உ.வ.).* 6. கருத்துப்போதல்; to become dark or block. *வெள்ளி மக்கி விட்டது (உ.வ.).*

*[முல் (பொருந்தற் கருத்துவேர்)→முள்→மள் → மள்கு→மட்கு. மட்குதல் = ஒளி மழுங்குதல், அழுக்கேறுதல், கருத்துப்போதல், கெட்டுப் போதல். மட்டு→மக்கு (வே.க.4:60).]*

மக்கு[2] *makku,* பெ.(n.) 1. மந்தகுணம்; sluggishness, doltishness. 2. அறிவிலி; ignorant person, dullard.

*[முல் → முள் → மள் → மள்கு → மட்கு → மக்கு (வே.க.4:60).]*

மக்கு[3] *makku,* பெ.(n.) 1. அடைமண்; soft clay for filling up crevices in walls. 2. மரவேலையிற் சந்து தெரியாமல் அடைக்கும் சாந்து; putty, in carpentry, filler.

*[மழுக்கு→மக்கு. மேடு பள்ளங்களை மழுக்கிச் சமன்படுத்தும் சாந்து அல்லது களிமண்.]*

மக்குரு *makkuru,* பெ.(n.) எலும்பு இளைத்தல்; emaciated bone.

*[மக்கு + உரு.]*

மக்குலம் *makkulam,* பெ.(n.) சிலாசத்து; a substance said to be oozing out from mountain (சா.அக.).

மக்கையன் *makkaiyan,* பெ.(n.) அறிவுக் குறையுடையவன்; dullard.

*[மழுக்கு→மக்கு→மக்கையன் (மு.தா.99).]*

மக[1] *maga,* பெ.(n.) 1. பிள்ளை; child, infant, young of an animal. *"மந்திம்மக" (சீவக. 1897).* 2. மகன் அல்லது மகள்; son or daughter. *"மகமுறை தடுப்ப" (மலைபடு.185).* 3. இளமை (யாழ்.அக.); young age, adolence.

*[முள் (இளமைக்கருத்துவேர்)→முளை= இளமை. முளையான் = சிறு குழந்தை. முள்→மள் →மள்ளன் = இளைஞன். மள்→மள→மழ = இளமை. "மழவும் குழவும் இளமைப் பொருள" (தொல்.உரி. 14). 'அழ மழப்போலும்' (திருக்கோ.147). மழ→மக.]*

மக[2] *maga,* பெ.(n.) மகமை[3] பார்க்க; see *magamai.*

*[மகமை →மக.]*

மகக்குழை *maga-k-kuḻai,* பெ.(n.) மாவிலை (தைலவ. தைல. அனுபந்த.61); mango leaf.

*[மக = இளமை. இளமையில் அழகாயிருப்பது எவ்வுயிர்க்கும் பொதுவியல்பு. இருப்பினும் மாந்தளிர் எல்லாவற்றுள்ளும் அழகாயிருந்தமையினால் மாந்தளிர் மேனி என்பன போன்ற வழக்குகள் எழுந்தன. அதன்வழி மக + குழை என்றாகி யிருக்கலாம். குழை = தழை.]*

மகச்சோறு *maga-c-cōṟu,* பெ.(n.) முப்பத் திரண்டறங்களுள் குழந்தைகட்குச் சோறளிக்கும் அறம்; food for infants, one of thirty two good deeds.

*[மக = இளமை, குழந்தை. மக + சோறு.]*

**மகட்கருமம்** *magaṭ-karumam,* பெ.(n.) பெண்ணை மணந்து கொள்ளுகை; taking a girl in marriage, as a duty. *"நின் மகற் கொரு மகட்கரும முன்னி" (சூளா.தூது.15).*

*[மகள் + கருமம்.]*

**மகட்கொடை** *magaṭ-koḍai,* பெ.(n.) தன் மகளை மணஞ்செய்து கொடுக்கை; gift of a daughter in marriage. *"நன்மகற் கல்லது மகட் கொடை நேரார்" (பெருங்.உஞ்சைக். 36, 93).*

*[மகள் + கொடை.]*

**மகட்கோடல்** *magaṭ-kōḍal,* பெ.(n.) பெண்ணை மணம் புரிகை (இலக்.வி.485, உரை.); marriage, as the acceptance of a girl.

*[மகள் + கோடல்.]*

**மகட்பாற்காஞ்சி** *magaṭpāṟ-kāñci,* பெ.(n.) முதுகுடித்தலைவனிடம் நின் மகளைத் தருக வென்று கேட்கும் அரசனோடு அவன் மாறுபட்டு நிற்பதைக் கூறும் புறத்துறை (தொல்.பொருள்.79, உரை.); theme describing the refusal of a person belonging to an ancient clan to give his daughter in marriage to a king who asks for her hand.

*[மகள் + பால் + காஞ்சி.]*

அகத்திணை ஏழனுள் பெருந்திணைக்குப் புறனாகியது காஞ்சித்திணை. அஃது ஒன்றற் கொன்று உரிமையாதல், யாக்கை, இளமை முதலிய பல நெறியானும் நிலையாத வுலக இயற்கைக்குப் பொருந்திய நெறியினை யுடையது (இலக்.வி.614. உரை.)

எண்வகை மணத்தினும் நான்கு மணம் பெற்ற பெருந்திணை போல இக்காஞ்சியும் அறமுதலாய மும்முதற் பொருளும் அவற்றது நிலையின்மையுமாகிய ஆறனுள்ளும், நிலையின்மை மூன்றற்குமுரித்தா யெல்லாத் திணைகட்குமொத்த மரபிற் றாகலானும் 'பின்னர் நான்கும் பெருந்திணை பெறு' மென்ற நான்குஞ் சான்றோ ரிகழ்ந்தாற் போல அறமுதலியவற்றது நிலையின்மை யுணர்ந்து அவற்றை அவரிகழ்தலானும் ஏறிய மடற்றிற முதலிய நான்கும் பொருந்தாக் காமமாயினவாறு போல உலகியல் நோக்கி நிலையாமை நாற் பொருளன்றாகலானும் உரிப் பொருளிடம் மயங்கி வருதலன்றித் தனக்கு நிலமில்லாத பெருந்திணை போல அறம்பொரு ளின்பம் பற்றி யன்றி வேறு நிலையாமை யென்றோர் பொருளின்றாதல் ஒப்புமையானும் காஞ்சித் திணை பெருந்திணைக்குப் புறத்திணை யெனப்பட்டது (த.சொ.அக.)

**மகட்பேசு-தல்** *magaṭ-pēšu-,* 5 செ.குன்றாவி. (v.t.) திருமணத்துக்குப் பெண்ணை உறுதிப் படுத்தல்; settle as a bride; to betroth a bride. *"வந்திருந்தென்னை மகட்பேசி" (திவ்.நாய்ச்.6, 3).*

*[மகள் +பேசு-,]*

**மகடி**[1] *magaḍi,* பெ.(n.) மகிடி பார்க்க (வின்.); see *magiḍi.*

**மகடி**[2] *magaḍi,* பெ.(n.) மேற்கட்டுள்ள வீடு; terraced house, storied building (C.G.).

*[மாடி→மகடி. ஒ.நோ. தட்டு-தகடு, தூள் - துகள், பால்→பகல்.]*

**மகடு**[1] *magaḍu,* பெ.(n.) 1. பெண்; female. 2. மனைவி; wife, spouse.

*[முல் (இளமைக் கருத்து வேர்)→முள்→முளை. முளையான் = சிறு குழந்தை. முள்→மள். மள்ளன் = இளைஞன், மறவன். மள்→மள→மழ. மழ= இளமை, இளமைக்குரிய பெண்மை. மழ→ மக = இளமை, பிள்ளை, மகன் அல்லது மகள். மக→மகள் = பெண், புதல்வி. மகள்→மகடு (வே.க.4:7).]*

**மகடு²** *magaḍu,* பெ.(n.) மகிடி பார்க்க (அரு.நி.); see *magiḍi.*

**மகடூஉ** *magaḍūu,* பெ.(n.) 1. பெண்; female, woman. *"மகடூஉ வறிசொல்" (தொல். சொல்.2).* 2. மனைவி; wife, spouse. *"இற்பொலி மகடூஉப் போல" (புறநா.33). "ஆடூஉ மகடூஉ ஆயிரு பெயர்க்கும்" (தொல். எழுத்து.271).*

*[மகடு→மகடூஉ.]*

தொல் பழங்காலங்களில் சொல்லி னிமைக்காக மெய்யீற்றுச் சொற்களோடு உகரஞ் சேர்ப்பது பேச்சு வழக்கில் இயல்பாயிருந்தது. இடவழக்காயினும் பெருக வழங்கிய இடவழக்குகள் ஆதலின் இதனை ஒப்ப முடிந்த உலக வழக்காகத் தொல்காப்பியரும் ஏற்றார். உயிரீற்றில் முடியும் வினைமுற்றுகளும் வினையெச்சங்களும் ஒப்புமையாக்கம் கருதி பெயரீற்றிலும் ஆட்சி பெறலாயின. வினையெச்ச வாய்பாடுகளில் செய்யூ என்னும் வாய்பாடு தொல்காப்பியத்தில் குறிக்கப் பெறுகிறது. இதனையொத்து அவன்கண்டு, அவன் கண்டான் என்னும் வினைமுற்றைக் கண்டூஉ எனவும் மகள் என்னும் பெயர்ச்சொல்லை மகள் →மகடு→மகடூஉ என்றும் அளபெடையில் நீட்டி ஒலிப்பது இனிமை கருதிய இடவழக்காம். கிரேக்க மொழியில் மொழியிடையிலும் இத்தகு உயிர்நீட்டங்கள் உளவென்பர். தமிழில் உயிர் அளபெடையாட்சி மிக்கிருந்ததற்கு ஆடூஉ, மகடூஉ போன்ற சொல்லாட்சிகள் தக்க சான்றுகளாகின்றன. வினைமுற்று உயிரீற்று அளபெடையாக தொன்முது காலத்தில் இருந்திருக்கலாம் என்பதற்குச் சான்றாக, கல்லாத தெலுங்கு மக்களின் பேச்சு வழக்கில் உகர ஈற்று ஏவல் வினைகள் அளபெடையாக ஒரொருகால் நீண்டொலிப்பதை இன்றும் கேட்க முடிகிறது.

**மகடூஉக்குணம்** *magaḍūu-k-kuṇam,* பெ.(n.) பெண்களுக்குரிய அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்னும் நாற்குணம் (இறை.2, உரை. பக்.29); feminine qualities, numbering four, viz. *accam, maḍam, naṇam, payiṟpu.*

*[மகள்→மகடு→மகடூஉ.குள்→குணம் (வளைவு, அடங்கிய தன்மை, பணிவு, ஒத்துவரும் இயல்பு, நலம், மேன்மை, மேம்பட்டு விளங்கும் திறம், அறிவு). மகடூஉ + குணம்.]*

**மகடூஉமுன்னிலை** *magaḍū-u-muṉṉilai,* பெ.(n.) பெண்ணை முன்னிலைப்படுத்திக் கூறுகை (காரிகை.பாயி.1, உரை.); vocative, addressing a woman.

*[மகள்→மகடு→மகடூஉ + முன்னிலை.]*

**மகண்மறுத்தல்** *magaṇ-maṟuttal,* பெ.(n.) மகண்மறுத்துமொழிதல் பார்க்க *(புறநா.109, துறைக்குறிப்பு.);* see *magaṇ-maṟuttu-moḻidal.*

*[மகள் + மறுத்தல்.]*

**மகண்மறுத்துமொழிதல்** *magaṇ-maṟuttu-moḻidal-,* பெ.(n.) பகைவீரன் தம் மகளை மணங்கோடற்கு விரும்பிக் கேட்கச் சிற்றரசர் மறுத்தலைக் கூறும் புறத்துறை (பு.வெ.5, 9); theme describing the refusal of a chieftain to give his daughter in marriage to a hostile warrior when demanded.

*[மகள் + மறுத்து + மொழிதல்.]*

**மகண்மா** *magaṇ-mā,* பெ.(n.) 1. பெண் வடிவங் கொண்ட ஒரு விலங்கு; a fabulous animal having the form of a woman. *"மைந்தரைப் பார்ப்பன மாமகண்மாக் குழாம்" (சீவக.1902).* 2. அலி (நன்.264.விருத்.); hermaphrodite.

*[மகள் + மா.]*

**மகண்மை**[1] *maganmai,* பெ.(n.) 1. பெண்டன்மை; womanhood. 2. மகளாகுந் தன்மை; daughter hood. *"தமரலாரும் மகண்மை கொள்ளக் கருதுங் குறியினாள்" (வெங்கையு. 154).*

*[மகள் + மை – மகண்மை.]*

**மகண்மை**[2] *maganmai,* பெ.(n.) மகமை பார்க்க; see *magamai. "அந்தராய மகண்மை கொளாதே மாகவும்" (தெ.க. தொ.3, 175, 28).*

**மகதந்திரம்** *maga-tandiram,* பெ.(n.) ஒரு சிற்ப நூல் (இருசமய. சிற்பசாத்.3); a treatise an architecture.

**மகதம்** *magadam,* பெ.(n.) மகிழம் பார்க்க; see *magilam* (சா.அக.).

**மகதுருமம்** *magaturumam,* பெ.(n.) அரசமரம்; peepul tree *ficus religiose* (சா.அக.).

**மகதேசன்** *magatēšan,* பெ.(n.) 1. மகத நாட்டரசன்; king of *Magadai.* 2. நடு நாட்டைச் சேர்ந்த மகதநாட்டுச் சிற்றரசன்; king of a part of the country in *nadu-nādu. "மகத தேசனாறைநகர் காவலன்" (பெருந்தொ.1192).*

*[மகதை + தேசன்.]*

**மகதேசன்பெருவழி** *magadēšan-peru vali,* பெ.(n.) சேலம் மாவட்டம், ஆத்தூர் வட்டம் ஆறகழூரிலிருந்து காஞ்சிபுரம் செல்வதற்காக வாணர்களால் அமைக்கப்பட்ட நெடுஞ்சாலை; a high way leading to *Kanchipuram* from *Aragalur, Attur* Taluk, *Salem* District formed by the *Bana* rulers.

*[மகதை + ஈசன் + பெருவழி.]*

மகதை மண்டலத்தை ஆண்ட வாணர்கள் மகதைப் பெருமாள், மகதேசன் என்றவாறு அழைக்கப்பட்டனர். "ஸ்வஸ்தி ஸ்ரீ மகதேசன் பெருவழி" என்ற எழுத்துகளும் கீழே குழிகளும் செதுக்கிய கல் ஒன்று சேலம் மாவட்டம் ஆத்தூர் வட்டம் ஆறகழூரில் கண்டுபிடிக்கப்பட்டு, சேலம் அருங்காட்சியகத்தில் பாதுகாக்கப்படுகிறது. அதன் கற்காரை (சிமிட்டி) வார்ப்பு சேலம் பொதுப்பணித் துறை ஆய்வு மாளிகையில் உள்ள வரலாற்றகத்தில் உள்ளது. ஒரு குழி ஒரு காதத்தைக் குறிக்கும். ஒரு காதம் 4 கல் (மைல்). 1 படைசால் (பர்லாங்கு) 220 அடி நீளத்திற்குச் சமம். ஒரு வரிக்கு 5 குழி வீதம் 4 வரிசையும் ஐந்தாவது வரிசையில் 6 குழியும் உள்ளன. ஐந்தாவது வரியில் கல் உடைந்துவிட்டது. 26 காதம் என்பது 105 கல்லும் 440 அடியும் ஆகும் (தோராயமாக 169 கிலோமீட்டர்).

**மகதை**[1] *magadai,* பெ.(n.) திப்பிலி பார்க்க; see *tippili.*

**மகதைப்பெருமாள்** *magadai-p-perumāl,* பெ.(n.) சேலம் மாவட்டம் ஆத்தூர் அருகிலுள்ள ஆறகழூரைத் தலைநகராகக் கொண்ட மகதை மண்டலத்தை ஆண்ட வாணர்களின் பொதுப் பெயர்; a general name of the *Banas,* who ruled *Magadhai mandalam* with *Aragalur* as capital near *Attur* of *Salem* District.

*[மகதை + பெருமாள்.]*

**மகதைமண்டலம்** *magadai-mandalam,* பெ.(n.) சேலம் மாவட்டம் ஆத்தூர் வட்டத்தில் அமைந்துள்ள ஆறகழூரைத் தலைமை யிடமாகக் கொண்ட வாணர்கள் ஆண்ட நாட்டுப் பகுதி; a region ruled by *Banas* with *Aragalur* near *Attur* in *Salem* District, as capital.

*[மகதம் + மண்டலம். ஒருகா. மகோதை → மகதை.]*

மகந்தரம் *magandaram,* பெ.(n.) 1. கள்; toddy. 2. பதநீர்; sweet toddy.

மகந்து *magandu,* பெ.(n.) துறவிகளின் மடத்திற்குத் தலைவனாயிருக்குந் துறவி; head of a religious establishment, superior of a monastery, who is succeeded on his death by the chief of his disciples (R.F.).

மகப்பால் *magappāl,* பெ.(n.) மகப்பால் வார்த்தல் பார்க்க (திவா.); see *magappāl-vārttal.*

*[மக + பால்.]*

மகப்பால்வார்த்தல் *magappāl-vārttal,* பெ.(n.) முப்பத்திரண்டறங்களுள் ஏதிலிப் பிள்ளைக்குப் பால் வார்த்தலாகிய அறம்; giving milk to infants, an act of charity, one of thirty two good deeds.

முப்பத்திரண்டறங்களாவன: 1. ஆதுலர் சாலை, 2. ஓதுவார்க்குணவு, 3. அறு சமயத்தோர்க்குணவு, 4. ஆவுக்கு வாயுறை, 5. சிறைச்சோறு, 6. ஐயம், 7. தின்பண்டம் நல்கல், 8. மகச்சோறு, 9. மகப்பெறுவித்தல், 10. மக வளர்த்தல், 11. மகப்பால், 12. அறவைப்பிணஞ் சுடுதல், 13. அழிந்தோரை நிறுத்தல், 14. வண்ணார், 15. நாவிதர், 16. வதுவை, 17. பூணூல், 18. நோய் மருந்து, 19. கண்ணாடி, 20. நாளோலை, 21. கண் மருந்து, 22. தலைக்கெண்ணெய், 23. பெண் நுகர்ச்சி, 24. அட்டுண், 25. பிறரறங்காத்தல், 26. தண்ணீப் பந்தர், 27. மடம், 28. தடம், 29. கா, 30. ஆவுறிஞ்சுதறி, 31. ஏறுவிடுத்தல், 32. விலையுயிர் கொடுத்துக் கொலையுயிர் மீட்டல்.

*[மகப்பால் + வார்த்தல்.]*

மகப்பெறுவித்தல் *maga-p-peṟuvittal,* பெ.(n.) முப்பத்திரண்டறங்களுள் மகவைப் பெறுவித்தல் ஆகிய அறம்; rendering assistance in child-birth, an act of charity, one of thirty two deeds.

*[மக + பெறுவித்தல்.]*

மகப்பேறு *maga-p-pēṟu,* பெ.(n.) பிள்ளைப் பேறு; giving birth to a child. *"மன்னன் மகப்பேற்றின் மனங்களித்து" (பிரமோத்.8, 122).*

*[மகவு + பேறு.]*

மகம் *magam,* பெ.(n.) ஈகம்; sacrifice. *"மகந்தான் செய்து வழி வந்தார்" (திருவாச. 21, 3).*

மகம்பூ *magam-pū,* பெ.(n.) பெருஞ்சீரகம் (சங்.அக.); common arise.



மகமாயி *magamāyi,* பெ.(n.) 1. மலைமகள்; *Pārvati. "பூதநாயக டத்துக் காமி மகமாயி" (திருப்பு.641).* 2. பெரியம்மைக்குரிய தேவதை; the Goddess of small-pox (Loc).

மகமுறை *maga-muṟai,* பெ.(n.) 1. விருந்து (அக.நி.); feast. 2. வேள்வி செய்யும் முறைமை (யாழ்.அக.); method of performing sacrifices.

**மகமேரு** *maga-mēru,* பெ.(n.) மகாமேரு பார்க்க; see *magā-mēru.*

**மகமை**[1] *magamai,* பெ.(n.) பொதுச் செயல்களுக்காக விரும்பிச் செலுத்தப்படும் ஒரு சிறு தன்னார்வ வரி; a voluntary tax or cess for common cause. *"திருமாலை திருவிளக்குவாகிய கயிங்கரியங்களுக்காக மகமை திட்டம் செய்து தானம்" (ஆவணம்–1, கல்–இரண்டாம் பகுதி.1).*

**மகமை**[2] *magamai,* பெ.(n.) குத்தகை (கொ. நா. ஆவ.74, பக்.309); tenure, lease.

**மகமை**[3] *magamai,* பெ.(n.) 1. கோயில் அறச்சாலை முதலியவற்றின் செலவுக்காக தண்டப்படும் வரி; contribution in grain for a temple or attram, levied from cultivators now given optionally, tax or contribution levied for a religious or charitable purpose bearing a certain definite preparation (R.F.). *"மானிய நிலம்பதி மகமையென்பதும்" (செவ்வந்திபு. உறையூர். 31).* 2. வணிகர்கள் தங்கள் ஊதியத்தில் இருந்து அறத்திற்குக் கொடுக்கும் தொகை; donation for charity consisting of a fixed percentage on the profits of commercial transactions. 3. நிலவரி வகை; an ancient land tax (S.I.I. vi, 187) (I.M.P. Cg.519).

**மகரக்குறுக்கம்** *magara-k-kuṟukkam,* பெ.(n.) தன் மாத்திரையின் அளவில் குறைந்த மகரமெய்; shorthand (ம்) as in போன்ம், one of ten *cārpeḻuttu* q.v. (Gram.) (நன்.96).

ம + கரம் – மகரம். மகரம் + குறுக்கம். கரம் – எழுத்துச் சாரியை. கரம், காரம், கான் என்னும் மூன்றும் பழந்தமிழ் எழுத்துச் சாரியைகள். இவற்றுள் கரம். கான் இரண்டும் நெட்டெழுத்திற்கு வாரா. ஆயினும் கரம், காரம், கான் இம்மூன்றும் குற்றெழுத்துச் சாரியைகளாய் வரும் (தொல். எழுத்து.137,உரை.).கரம் குற்றெழுத்திற்கும் காரம் நெட்டெழுத்திற்கும் சொல்லும் வழக்கு அச்சாரியைகளில் அமைந்துள்ள குறில் நெடில் வடிவங்களால் ஏற்பட்டதென்க. உயிரெழுத்தின் உதவியின்றித் தாமாக வொலிக்காத மெய் எழுத்துக்களை ஒலிப்பித்தல் பொருட்டும், தாமாக ஒலிக்கும் உயிரெழுத்துகளையும் எளிதாக ஒலிப்பித்தற் பொருட்டும், சில துணையொலிகளைப் பண்டைத் தமிழிலக்கண நூலார் அமைத்துள்ளனர். அவை எழுத்துச் சாரியை எனப்படும்.

வடமொழியாளர் கரம், காரம் என்னும் இரண்டையே தமிழினின்று கொண்டுள்ளனர். அதோடு குறிற்கு இரண்டையும் வேறுபாடின்றி ஆள்வர். இதனாற் சாரியையமைப்பின் தமிழ்மூலம் தெளிவாகத் தெரிகிறது. கரம், காரம் என்பன வடமொழியில் கர, கார என்று ஈறுகெட்டு நிற்கும். சாரியை என்னும் குறியீடும் வடமொழியிலில்லை (வ.வ.299).

**மகரகந்தம்** *magarakandam,* பெ.(n.) வெங்காயம் (சங்.அக.); onion.

**மகரகாலம்** *magara-kālam,* பெ.(n.) மா; mango.

**மகரசகா** *magara-cakā,* பெ.(n.) மருதோன்றி வகை (சங்.அக.); a kind of henna with ever-fresh flowers (சா.அக.).

**மகரசால்** *magarasāl,* பெ.(n.) மாமரம் (சா.அக.); mango tree (சா.அக.).

**மகரசாலம்** *magara-cālam,* பெ.(n.) மகர காலம் பார்க்க (சங்.அக.); see *magara-kālam* (சா.அக.).

மகரசிதம் *magara-cidam,* பெ.(n.) கொன்றை மரம்; a tree *konrai* (சா.அக.).

மகரசியா *magaraciyā,* பெ.(n.) செழுமலர்க் கொன்றை; large flower cassia - *Cassia florida* (சா.அக.).

மகரதம் *magaradam,* பெ.(n.) கொடிவேலி என்னுஞ் செடி; a plant, *plumbago zetanka* (சா.அக.).

மகரவிரி *magara-viri,* பெ.(n.) மகரவிருத்தி பார்க்க; see *magara-virutti* (சா.அக.).

மகரவிருத்தி *magara-virutti,* பெ.(n.) சேம்பு; a kind of Indian kales-*Tuber-colocasia* (சா.அக.).

மகரவேதிகம் *magara-vēdigam,* பெ.(n.) வாலுளுவை மரம்; intellect tree (சா.அக.).

மகரிப்பு *magarippu,* பெ.(n.) கையாந்தகரை எனுஞ் செடி; a plant (சா.அக.).

மகருதம் *magarudam,* பெ.(n.) கொடிவேலி எனும் நிலைத் திணை(மலை.); ceylon leadwort.

மகரை *magarai,* பெ.(n.) கடல்மீன் வகை; a sea-fish (இ.வ.).

மகலிங்கம் *maga-lingam,* பெ.(n.) மரவகை; weavers beam, *Sehrebera swietenioides* (L.).

மகவளர்த்தல் *maga-vaḷarttal,* பெ.(n.) மகவு வளர்த்தல் பார்க்க (சூடா.); see *magavu-vaḷarttal.*

மகவன் *magavan,* பெ.(n.) மகவான் பார்க்க (யாழ்.அக.); see *magavān.*

மகவாட்டி *magavāṭṭi,* பெ.(n.) மக்கட் செல்வமுடையவள் (யாழ்.அக.); woman blessed with children.

*[மக→மகவாட்டி.]*

மகவாதநோய் *maga-vāda-nōy,* பெ.(n.) ஒரு நோய்; complicated rhematic diseases (சா.அக.).

மகவாதரோகம் *magavāda-rōgam,* பெ.(n.) மகவாதநோய் பார்க்க; see *magavāda-nōy* (சா.அக.).

மகவான்[1] *magavān,* பெ.(n.) மகப்பேறுடையவன்; one who has children. *"தன் மசகனுறு மகவானாகச் செய்யும்" (தேவை.16).*

*[மக→மகவான்.]*

மகவான்[2] *magavān,* பெ.(n.) 1. இந்திரன்; Indiran. *"மகவான்மக ளிரங்கின னரற்ற" (பாரத. பதின்மூன்.168).* 2. சிவன் (சங்.அக.); lord *Śivan.*

மகவான்[3] *magavān,* பெ.(n.) யாகஞ் செய்பவன்; sacrificer. *"வேதாவை மிக்க மகவானாகக் கூட்டி" (தேவை.15).*

மகவின்கோள் *magavin-kōḷ,* பெ.(n.) வியாழன் எனும் கோள் (நாமதீப.100); the planet jupiter.

*[மகவு →மகவின் + கோள்.]*

மகவு *magavu,* பெ.(n.) 1. குழந்தை (திவா.); infant. *"மகவுமுலைவருட" (கம்பரா.தைல.13).* 2. மகன்; son. *"கொண்டதோர் மகவி னாசை" (அரிச்.பு.மயான.20).* 3. கோட்டில் வாழ் விலங்கின் பிள்ளை (தொல். பொருள். 569); young of animals living on trees, as of monkeys.

*[முல் = இளமைக் கருத்துவேர். முல்→முள் →முளை. முள்→மள்→மள→மழ = இளமை, குழந்தை. மழ→மக→மகவு (வே.க.4:60).]*

**மகவுவளர்த்தல்** *magavu-vaḷarttal,* பெ. (n.) முப்பத்திரண்டறங்களுள் குழந்தைகளை வளர்த்தலாகிய அறம் (பிங்.); fostering children, an act of charity, one of thirty two good deeds (q.v.).

*[மக→மகவு + வளர்த்தல்.]*

மகப்பால்வார்த்தல் பார்க்க.

**மகவேள்வி** *maga-vēḷvi,* பெ.(n.) ஆண் மகப்பேறு விரும்பிச் செய்யும் வேள்வி; sacrifice performed for obtaining male child. *"மிக்க மகவேள்விசெய் விருப்புடைய னாகி" (திருவிளை. தடாதகை.7).*

*[மக → மகவு + வேள்வி.]*

**மகள்** *magaḷ,* பெ.(n.) 1. பெண்மகவு; daughter. *"நல்கூர்ந்தார் செல்வமகள்" (கலித்.56).* 2. பெண்; woman, female, feminine, damsel. *"ஆய மகணீயாயின்" (கலித்.107).* 3. மனைவி; wife. *"மனக்கினியாற்கு நீ மகளாயதூஉம்" (மணிமே.21, 30). "பெண்மை அடுத்த மகள் என்கிளவியும்" (தொல்.சொல்.165).* 4. பெண் தெய்வம்; goddess. *திருமகள் (உ.வ.).* 5. தெய்வத்தாய்; god mother. *நிலமகள் (உ.வ.).*

*[முல் (இளமைக் கருத்து வேர்)→முள்→முளை. முளையான் = சிறுவன். முள்→மள்→மழ = இளமை, இளமைக்குரிய மென்மை. மழ→மக→மகள் (வே.க.4:60).]*

(மழ = மென்மை, இளமை. குழந்தைகளில் பெண்ணாயினும் ஆணாயினும் மென்மையும் இளமையும் பொதுவாதலின் பால்காட்டும் ஈறே ஆண் குழந்தையையும் பெண் குழந்தையையும் வேறுபடுத்தும். அள் – பெண்பாலீறு).

**மகளிக்கீரை** *magaḷi-k-kīrai,* பெ.(n.) கீரை வகை (யாழ்.அக.); cockscomb greens, quail grass-*Celosia argentea.*

**மகளிர்** *magaḷir,* பெ.(n.) பெண்கள்; woman. *"வசையில் வாழ்க்கை மகளிர் மலைத்தலல்லது" (புறநா.10). "பெற்றமும் கழுதையும் மேய்ந்த அப்பாழ் பொற்கொடி மகளிரும் மைந்தரும் கூடி நெற்பொலி நெடுநகர் ஆயினும் ஆகும்" (வெற்றிவேற்கை 55). 'இனம்போன்று இனம்அல்லார் கேண்மை மகளிர் மனம்போல வேறுபடும்' (குறள், 822).*

*[மகள்→மகளிர்.]*

**மகளிர்பருவம்** *magaḷir-paruvam,* பெ.(n.) 1. பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்ற எழுவகைப் பெண் பருவம் (திவா.); stages of woman's life, of which there are seven, viz. *pēdai, pedumbai, maṅgai, maḍandai, arivai, terivai, pēriḷampeṉ.* 2. வாலை, தருணி, பிரவுடை, விருத்தை என்ற நால்வகைப் பெண்பருவம்; stages of woman's life, numbering four, viz. *vālai, taruṇi, piravuṭai, viruttai.*

*[மகளிர் + பருவம்.]*

**மகளிரான்மலர்மரம்** *magaḷirāṉ-malar maram-,* பெ.(n.) உயர்பிரிவு (உத்தமசாதி)ப் பெண்களின் தொடுகை முதலிய செய்கைகளால் மலர்வனவாகக் கருதப்படும் மகிழ், ஏழிலைம்பாலை, பாதிரி, முல்லை, புன்னை, குரா, அசோகு, குருக்கத்தி, மரா, சண்பகம் என்ற பத்துவகை மரங்கள்

(இரத்தினச்.41, தலைப்பு); trees and plants believed to blossom by the very touch, look, etc, of woman of the highest class, numbering ten, viz. *magil, ēlilaimpālai, pādiri, mullai, punnai, kurā, ašōgu, kurukkatti, marā, cambagam.*

*[மகளிரால் மலரும் மரம்→மகளிரான் மலரும் மரம்→மகளிரான் மலர் மரம்.]*

**மகளீது** *magaḷīdu,* பெ.(n.) மகிழம்பூ பார்க்க; see *magilampū* (சா.அக.).

**மகளோது** *magaḷōdu,* பெ.(n.) நரிப்பாலை பார்க்க; see *nari-p-pālai* (சா.அக.).

**மகற்பலம்** *magar-palam,* பெ.(n.) பெரும்பலன்; great, strong, important result. *"மகற்பல வாஞ்சைஃபாலே" (சிவதரு. பரம.47).*

**மகன்** *magan,* பெ.(n.) 1. ஆண்மகவு; son. *"தன் மகன்றா யுயர்வும்" (தொல்.பொருள். 172).* 2. குழந்தை (வின்.); child. 3. ஆண் பிள்ளை; man, male person. *"செய்ந் நன்றி கொன்ற மகற்கு" (குறள், 110).* 4. சிறந்தோன்; exalted or esteemed or noble person. *"நூல்கற்ற மகன்றுணையா நல்லகொளல்" (நாலடி, 136).* 5. வீரன்; warrior. *'வேந்தன் மனம்போல வந்தமகன்' (பு.வெ.2, 5).* 6. கணவன்; husband. *"நினக்கிவன் மகனாகத் தோன்றியதூஉம் " (மணிமே.21: 29).*

*[முல் (இளமைக் கருத்து வேர்)→முள்→முளை. முளையான் = இளையோன், குழவி. முள்→மள். மள்ளன் = இளையோன், வீரன். மள்→மழ = இளமை, இளமைக்குரிய மென்மை. மழ→மக = இளமை, பிள்ளை. மக→மகன் (வே.க.4:6).]*

**மகன்மை**[1] *maganmai,* பெ.(n.) 1. மகன்றன்மை; sonship. *'மகன்மை கொண்டார்' (பெரியபு. தடுத்தாட்.5).* 2. ஆண்டன்மை (யாழ்.அக.); manliness.

*[மகன்→மகன்மை.]*

**மகன்மை**[2] *maganmai,* பெ.(n.) பழைய வரிவகை; an ancient tax. *"வலங்கை யிடங்கை மகன்மையும்" (தெ.க.தொ.3, 115).*

*[மகமை→மகன்மை.]*

**மகன்றில்** *maganril,* பெ.(n.) ஆண் பெண்களுள் ஒன்றைவிட்டு ஒன்று பிரியாத நீர்வாழ் பறவை வகையில் ஆண் பறவை; a male species of aquatic love bird. *"குறுங்காண் மகன்றிலன்ன வுடன்புணர் கொள்கை" (ஐங்குறு.381).*

*[மகன்றில் = ஆண் அன்றில்.]*



**மகனாலிமூலி** *maganāli-mūli,* பெ.(n.) சிறுமுன்னைவேர் பார்க்க; see *cirumunnai-vēr* (சா.அக.).

**மகாஅவிழ்தம்** *magā-avildam,* பெ.(n.) சுக்கு; dried ginger (சா.அக.).

**மகாகண்டம்** *magā-kandam,* பெ.(n.) பெரிய முள்ளங்கி; large radish-*Raphanus sativus* (சா.அக.).

மகாகண்ணி *magā-kaṇṇi,* பெ.(n.) இந்திர பாடாணம்; a variety of arsenic (சா.அக.).

மகாகணம் *magā-kaṇam,* பெ.(n.) குழந்தைகட்கு நாக்கு, உதடு புண்ணாகி, கண் வெளுத்து, உடல் வெதும்பிக் காணும் ஒருவகைக் கணைநோய்; a congenital disease of the children marked by anemia, ulcerated tongue and lips (சா.அக.).

மகாகற்பம் *magā-kaṟpam,* பெ.(n.) 1. சிறந்த கற்பமூலிகை; a superior drug or herb to prolong life, drug of all healing potency. 2. சித்தர்கள் பயன்படுத்தும் சிறந்த மருந்து; a superior medicinal preparation used by siddars to secure immortal youth (சா.அக.).

மகாகாசம் *magā-kāšam,* பெ.(n.) 1. ஒரு வகைக் காசநோய்; a kind of virulent asthma or bronchitis. 2. பரவெளி; atmosphere or ether (சா.அக.).

மகாகாலங்கம் *magā-kālaṅgam,* பெ.(n.) ஆதண்டை; a thorny shrub (சா.அக.).

மகாகாளி *magā-kāḷi,* பெ.(n.) ஆட்டுச்செவி அல்லது ஆடு தீண்டாப்பாலை; a bitter prostate plant.

மறுவ. ஆடுதின்னாப் பாலை.

மகாகுட்டம் *magā-kuṭṭam,* பெ.(n.) பெரு நோய்; leprosy (சா.அக.).

மகாகும்பி *magā-kumbi,* பெ.(n.) சாம்பற் பூசணி (மலை.); ash-gourd (சா.அக.).

மகாகுமரி *magā-kumari,* பெ.(n.) குங்குமச் செவ்வந்தி; a big variety of red chamomile (சா.அக.).

மகாகுழம்பு *magā-kuḻambu,* பெ.(n.) அகத்தியர் பெருங்குழம்பு; a wax like medicine (சா.அக.).

மகாகெந்தம் *magā-kendam,* பெ.(n.) சீதேவிசெங்கழுநீர் பார்க்க; see *šīdēvi-šeṅkaḻunīr* (சா.அக.).

மகாகெந்தா *magā-kentā,* பெ.(n.) கருப்புக் கடலை; a black bengal gram (சா.அக.).

மகாகோளி *magā-kōḷi,* பெ.(n.) கற்க திரவிய வகை; a medicinal drug. *"வாலுகம் மகாகோளி மகிழம்" (தைலவ.தைல.77).*

மகாசகை *magā-cagai,* பெ.(n.) வாடாத பூவுள்ள மறுதோன்றி மரம்; a tree yielding unfading flowers (சா.அக.).

மகாசங்கம் *magā-caṅgam,* பெ.(n.) 1. எலும்பு; bone. 2. நெற்றி; forehead (சா.அக.).

மகாசாயம் *magā-cāyam,* பெ.(n.) ஆலமரம்; banyan tree (சா.அக.).

மகாசாரக்கந்தம் *magā-cāra-k-kandam,* பெ.(n.) பேரீச்சு; date of wild variety (சா.அக.).

மகாசாரம் *magā-cāram,* பெ.(n.) சிறுவிடு கொள் பார்க்க; see *siṟuviḍu-koḷ* (சா.அக.).

மகாசாலினி *magā-cāliṉi,* பெ.(n.) தின்பீர்க்கு; a climber, species of sponge gourd (சா.அக.).

மகாசிங்கச்சுண்ணம் *magā-ciṅga-c-cuṇṇam,* பெ.(n.) துருசுச் சுண்ணம்; calcined white powder of copper sulphate (சா.அக.).

மகாசித்திரசாயனம் *magā-cittira-šāyaṉam,*பெ.(n.) தாளிப்பனை; talipot palm (சா.அக.).

மகாசிராவி *magā-cirāvi,*பெ.(n.) கோவைக் கொடி; a creeper (சா.அக.).

மகாசிரோட்டம் *magā-cirōṭṭam,* பெ.(n.) நாள்பட்ட வயிற்றுப்போக்கு; chronic diarrhoea (சா.அக.).

மகாசுவாசம் *magā-cuvācam,* பெ.(n.) கண்டத்தில் கலகலவென்று ஒலியுடன் விடும் பெரும் மூச்சு; sound sigh, a disease in which the patient breaths heavily lying sound in the throat, eyes fixed in gaze and with gramps at his sides (சா.அக.).

மகாத்திரம் *magāttiram,*பெ.(n.) தேக்கு; teak (சா.அக.).

மகாத்துருவம் *magā-t-turuvam,* பெ.(n.) வெண்கடம்பு மரம்; white cadamba tree (சா.அக.).

மகாதசம் *magā-dacam,* பெ.(n.) மாவுலிங்க மரம்; the tree mavulingam (சா.அக.).

மகாதமணி *magā-tamaṇi,* பெ.(n.) நெஞ்சகத்தின் இடது பக்கத்திினின்றும் கிளம்பும் ஒரு பெரிய செவ்வரத்தக் குழல்; a large artery starting from the left ventricle of the heart (aorta)(சா.அக.).



மகாதானம் *magā-tāṉam,* பெ.(n.) பெருங் கொட்டை; big seed (சா.அக.).

மகாதி *magāti,* பெ.(n.) திப்பிலி; long pepper plant (சா.அக.).

மகாதிம்பம் *magā-timbam,* பெ.(n.) ஒரு வகைப் பெருமரம்; species of a big tree (சா.அக.).

மகாநங்கை *magānangai,*பெ.(n.) மிளகாய் நங்கை பார்க்க; see *miḷagāy-nangai* (சா.அக.).

மகாநந்தை *magā-nandai,*பெ.(n.) கள்; toddy (சா.அக.).

மகாநாரி *magānāri,* பெ.(n.) சுரபுன்னை மரம்; *surabuṉṉai* tree (சா.அக.).

மகாபஞ்சமூலம் *magā-pañja-mūlam,* பெ.(n.) ஐந்து வகை மரத்தின் பட்டைகளைச் சேர்த்தரைத்த கூட்டு; the paste of barks of the five trees or herbs.

ஐவகை மரங்களாவன: 1. வில்வம், 2. முன்னை, 3. ஈகர்மூலி, 4. பாதிரி, 5. பெருமரம்.

மகாபத்திரம் *magā-pattiram,* பெ.(n.) 1. பனை மரம் (சங்.அக.); palmyra tree. 2. வில்வ இலை; leaf of bael tree. 3. தேக்கு; teak (சா.அக.).

மகாபத்திரி *magā-pattiri,* பெ.(n.) சிவப்பாமணக்கு; red castor plant (சா.அக.).

மகாபலம்¹ *magā-palam,*பெ.(n.) வில்வம்; bael (சா.அக.).

மகாபலம்² *magā-palam,* பெ.(n.) 1. கொழிஞ்சி; sylhet orange. 2. தூதுவளை; climbing brinjal. 3. தெங்கு; coconut-plant (சா.அக.).

மகாபலா *magā-palā*,பெ.(n.) 1. பேராமுட்டி; a plant. 2. வரித்தும்மட்டி; stripe country cucumber (சா.அக.).

மகாபலிகம் *magā-paligam*, பெ.(n.) வெள்ளைப் பூசணி; ash gourd (சா.அக.).

மகாபலிபுரம் *magāpalipuram-*, பெ.(n.) மாமல்லபுரம் பார்க்க; see *māmalla-puram.*

மகாபித்தம் *magā-pittam*, பெ.(n.) வில்வ மரம்; bael tree (சா.அக.).

மகாபிராணம் *magā-pirāṇam*, பெ.(n.) காகம்; crow (சா.அக.).

மகாமால் *magāmāl*,பெ.(n.) வில்வ இலை; leaf of bael tree (சா.அக.).

மகாமூர்க்கம் *magā-mūrkkam*, பெ.(n.) நாரத்தை; bitter orange tree (சா.அக.).

மகார்[1] *magār*, பெ.(n.) 1. மகன்கள்; sons. *"அவுணர்கோன் மகார்" (கந்தபு. மூவாயிர. 58).* 2. குழந்தைகள் (பிங்.); children. *"இளந்துணை மகாரின்" (பதிற்றுப். 71:7).*

*[முல் (இளமைக் கருத்து வேர்)→முள்→முளை →முளையான் = சிறு குழந்தை, சிறுவன். முள்→மள். மள்ளன் =இளைஞன், மறவன். மள்→மழ = இளமை, இளமைக்குரிய மென்மை, குழந்தை. மழ→மழவு = இளமை, குழந்தை. மழவு→மகவு = குழந்தை, மகன், மரத்தில் வாழும் விலங்கின் குட்டி. மழ→மக→மகள் = பெண், புதல்வி, மனைவி. மகள்→மகன்→மகார் (வே.க.4:7).]*

மகாரசிங்கி *magāra-śingi*,பெ.(n.) சினை முட்டை; ovum (சா.அக.).

மகாரசிதகாரம் *magāracitakāram*,பெ.(n.) மிளகு; pepper (சா.அக.).

மகாரசிதம் *magāracitam*,பெ.(n.) மாமரம்; mango tree (சா.அக.).

மகாரம்[1] *magāram*,பெ.(n.) கல்லுப்பு; rock salt.

மகாரம்[2] *magāram*,பெ.(n.) மகாரவெழுத்து; the mystic letter 'ம'.

*[ம + காரம்.]*

மகரம் பார்க்க; see magaram.

மகாரவி *magāravi*,பெ.(n.) கறுப்பரிசி; black rice (சா.அக.).

மகாரவுப்பு *magāra-v-uppu*, பெ.(n.) கல்லுப்பு (மூ.அ.); rock salt (சா.அக.).

மகாராசயோகி *magārāśa-yōgi*, பெ.(n.) பச்சைக் கற்பூரம்; crude camphor (சா.அக.).

மகாரிட்டம் *magāriṭṭam*, பெ.(n.) மலைவேம்பு; mountain neem (சா.அக.).

மகாலிங்கம் *magāliṅgam*,பெ.(n.) ஒரு மரம்; a tree-weaver bean (சா.அக.).

மகாலோகம் *magālōgam*,பெ.(n.) காகம்; crow (சா.அக.).

மகாவிக்கல் *magā-vikkal*,பெ.(n.) மிகுந்த ஓசையுடன் பிறக்கும் விக்கல்; hiccupps which produces a feeling of crushing pain at the vulnerable parts stretches out the body in full shaking all the limbs and causes severe thirst. It accurs with a considerable force accompanied by a loud sound (சா.அக.).

மகாவிருக்கம் *magā-virukkam*, பெ.(n.) சதுரக்கள்ளி; a kind of square *Spurge - cactus* (சா.அக.).

மகாவிருட்சாதி *magāviruṭcāti,* பெ.(n.) புல்லூரி; a parasite plant (சா.அக.).

மகாவில் *magāvil,*பெ.(n.) பேராமுட்டி எனும் மருந்துச் செடி; a medicinal plant (சா.அக.).

மகாவினிதம் *magā-viṉidam,*பெ.(n.) பேரா முட்டி எனும் மருந்துச் செடி; a medicinal plant (சா.அக.).

மகாவெள்ளை *magā-veḷḷai,* பெ.(n.) படிகக் கல்; a crystal stone (சா.அக.).

மகானிலம் *magā-ṉilam,* பெ.(n.) தகரை; plant (சா.அக.).

மகி *magi,*பெ.(n.) தேவாங்கு; Jemur the Indian sloth (சா.அக.).



மகிடி[1]–த்தல் *magiḍi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. மக்களித்தல் (வின்.); to be sprained, dislocated. 2. தலைகீழாக விழுதல் (இ.வ.), குப்புறக் கவிழ்தல்; to be over turned, to lie down in back.

*[மறுக்களி→மக்களி→மகளி→மகடி→மகிடி (கொ.வ.)]*

மகிடி[2] *magiḍi,*பெ.(n.) பாம்பாட்டியின் ஊது குழல்வகை; a kind of hautboy used by snake-charmers.

*[மகிழ் → மகிழி → மகுழி → மகுடி.]*

மனம் மகிழ்த்தும் ஓசைக்குரிய இசைக் கருவி.

மகிடி[3] *magiḍi,* பெ.(n.) 1. மந்திரத்தால் பொருளை மறைத்தலும் அதனைக் கண்டெடுத்தலுமாகிய மந்திரக்காரரிடையே நிகழும் போட்டி; trial of magical powers between two enchanters in which one hides some treasure from the other and challanges him to discover it by mantras. 2. வெளிக்காணாமற் புதைத்தும் புதைத்ததைக் கண்டெடுத்தும் ஆடும் விளையாட்டு வகை (வின்.); common play where things are hidden by one player and discovered by another.

*[மகிழ் → மகு → மகுழி → மகுடி. மகிழ்வு மிகுவிக்கும் விளையாட்டு. ]*

மகுடி என்பது மோடி எனத் திரிந்தது.

மகிடிக்குழல் *magiḍi-kuḻal,*பெ.(n.) மகிடி[2] பார்க்க; see *magiḍi.*

*[மகிடி + குழல்.]*

மகிடியெடு–த்தல் *magiḍi-y-eḍu-,* 18 செ. குன்றாவி.(v.t.) மகிடியில் மறைந்த பொருளைக் கண்டெடுத்தல் (வின்.); to search for and discover a thing hidden in *magiḍi.*

*[மகிடி + எடு–.]*

மகிடிவை–த்தல் *magiḍi-vai-,*4 செ.குன்றாவி. (v.t.) 1. பொருளை மந்திரத்தால் மறைப்பித்தல்; to hide treasure as magicians. 2. மகிடி விளையாட்டில் ஆடு கருவியைப் புதைத்தல்; to hide a play - thing, as players.

*[மகிடி[2] + வை–.]*

மகிணன் *magiṇaṉ,* பெ.(n.) 1. கணவன்; husband. *"நின் மகிணன் றனையும்" (கந்தபு. திருமண.29).* 2. மருதநிலத் தலைவன்; chief of an agricultural tract. *"தலைவன் பெயர் ஊரன் மகிணன்" (இறை. களவி.1, பக்.18).* 3. இறைவன்; lord. *"மதிய மூர்ச டாமோலி மகிணர்" (தக்கயாகப். 111).*

*[மகிழ் + நன் – மகிழ்நன் → மகிணன்.]*

மகிழ்த்தும் இயல்பினன்.

ஒ.நோ: வாழ்நன் →வாணன்.

மகிமை *magimai,* பெ.(n.) கொங்கணவர் என்னும் பெயரிய சித்தர்; one of the siddhars named *Koṅgaṇavar,* the author of several Tamil medical works (சா.அக.).

மகிரி *magiri,* பெ.(n.) நீலஞ்சோதி எனுஞ் செடி; a plant called *nīlañjoti* (சா.அக.).

மகிழ்¹–தல் *magiḻ-,* 4 செ.கு.வி.(v.i.) 1. அகங்களித்தல்; to joy, rejoice, exult. *"காணின் மகிழ்ந்துள்ளம்" (குறள், 1057).* 2. உணர்வழிய உவகையெய்துதல்; to forget oneself out of joy. *"உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும் கள்ளுக்கில்காமத்திற் குண்டு" (குறள், 1281).* 3. குமிழியிடுதல்; to bubble up in boiling. *'சோறு மகிழ்ந்து வருகிறது' (உ.வ.).*

*[முகு →மகு →மகிழ்.]*

மகிழ்²–தல் *magiḻ-,* 2 செ.குன்றாவி.(v.t.) 1. விரும்புதல்; to wish, desire. *"மங்கலவணியிற் பிறிதணி மகிழாள்" (சிலப்.4: 50).* 2. உண்ணுதல்; to take in drink. *"தேறன் மகிழ்ந்து" (புறநா.129).*

*[முகு →மகு →மகிழ்–.]*

மகிழ்³ *magiḻ,* பெ.(n.) 1. இன்பம்; joy exhilaration, happiness. *"மகிழ்சிறந்து" (புறநா.20, 32).* 2. குடிவெறி; intoxication from liquor. *"மகிழ்மிகச் சிறப்ப மயங்கினள் கொல்லோ" (ஐங்குறு.42).* 3. மது; toddy or liquor. *"பிழி மகிழுண்பார் பிறர்" (பு.வெ.2, 11).*

*[முகி → மகிழ்.]*

மகிழ்⁴ *magiḻ,* பெ.(n.) மணமுள்ள மலர் தரும் மரவகை; pointed-leaved ape-flower - *mimusaps elangi. "மகிழ்மாலை மார்பினன்" (திவ். திருவாய். 4, 10, 11).*

மகிழ்ச்சி *magiḻcci,* பெ.(n.) 1. உவகை; joy, pleasure, delight, gladness. *"மன்னா மகிழ்ச்சி யறிவுடையாளர்க ணில்" (நாலடி, 16).* 2. மகிழ்ச்சியணி (சூடா.) பார்க்க; see *magiḻcci-y-aṇi.*

*[மகிழ் → மகிழ்ச்சி.]*

மகிழ்ச்சிநிலை *magiḻcci-nilai,* பெ.(n.) உள்ள மிகுதி; elation of spirits. *"மார்பன் மடவரற் புணர்ந்த மகிழ்ச்சி நிலை" (பு.வெ.10, பொதுவி. முல்லைப்.1, கொளு).*

*[மகிழ்ச்சி + நிலை.]*

மகிழ்ச்சியணி *magiḻcci-y-aṇi,* பெ.(n.) மகிழ்ந்து சொல்லுகையாகிய அணிவகை (வீரசோ.அலங்.12); figure of speech in which joy is expressed.

*[மகிழ்ச்சி + அணி.]*

மகிழ்ச்சிவினை *magiḻcci-viṉai,* பெ.(n.) நல்லூழ், நல்வினை, அறம்; religious merit, good destiny or virtue. *"மேவிய மகிழ்ச்சி வினைப் பயனுண் குவர்" (மணிமே. 30:81).*

*[மகிழ்ச்சி + வினை.]*

மகிழ்த்தாரான் *magil-t-tāran,* பெ.(n.) மன்மதன் (நாமதீப.58, உரை.); *Kāmaṉ,* the Indian cupid.

*[மகிழ் + தாரன்.]*

மகிழ்நன் *magilnaṉ,* பெ.(n.) 1. மகிணன், 1 பார்க்க; see *maginaṉ.* *"மகிழ்நன் மகிழ்நன் பரத்தமை நோவேன் றோழி" (கலித்.75).* 2. மகிணன், 2 பார்க்க; see *maginaṉ.* *"எய்தின னாகின்று கொல்லோ மகிழ்நன்" (ஐங்குறு.24).*

*[மகிழ் + நன்.]*

மகிழ்வு *magilvu,* பெ.(n.) மகிழ்ச்சி பார்க்க; see *magilcci.* *"இன்பமு மகிழ்வு மெங்கும்" (பெரியபு. நாட்டு.31).*

*[மகிழ் → மகிழ்வு.]*

மகிழடிசேவை *magil-adi-cēvai,* பெ.(n.) சென்னை, திருவொற்றியூர்ச் சிவன் கோயிலில் நிகழும் ஒரு திருநாள்; a festival in the siva shrine of *Tiru-v-orriyūr* of Chennai.

*[மகிழடி + சேவை.]*

மகிழம் *magilam,* பெ.(n.) மணமுள்ள மரவகை மலர்; pointed - leaved ape-flower. *"வேங்கை மராஅ மகிழம்" (பரிபா.22, 7).*

*[மகிழ் → மகிழம். மனம் மகிழ்க்கும் நறுமண முள்ள மலர்.]*

மகிழம்பூ[1] *magilam-pū,* பெ.(n.) ஒரு பூவகை; *magilam* a kind of flower, *minu sopāclengi.*



மகிழம்பூ[2] *magilam-pū,* பெ.(n.) புடைவை வகை; a variety of saree. *மகிழம் பூவின் வடிவம் பொறித்த புடவை.*

மகிழம்பூத்தேன்குழல் *magilam-pū-t-tēṉ kulal,* பெ.(n.) மகிழம்பூப் பணிகாரம்; a kind of cake.

*[மகிழம்பூ + தேன்குழல்.]*

மகிழம்பூப்பணிகாரம் *magilambū-p-paṇigāram,* பெ.(n.) பணியார வகை; a kind of cake made in imitation of *magil* flowers.

*[மகிழம்பூ + பணிகாரம்.]*

மகிழமரம் *magila-maram,* பெ.(n.) மகிழ்[3] பார்க்க; see *magil.*

*[மகிழம் + மரம்.]*

மகிழலகு *magil-alagu,* பெ.(n.) மகிழம் விதை (திவ்.இயற்.1, 49); seed of the *magil* tree, formerly used in astrological calculation.

*[மகிழ் + அலகு.]*

மகிழிசை *magil-isai,* பெ.(n.) செந்துறைப் பாட்டுள் ஒரு வகை (யாப்.வி.538); a kind of *centurai-p-pāṭṭu.*

*[மகிழ் + இசை.]*

மகிழின்பரல் *magiḻiṉ-paral,* பெ.(n.) மகிழலகு பார்க்க; see *magiḻ-alagu.*

மகிளம் *magiḷam,*பெ.(n.) பூவிதழ் (யாழ்.அக.); petal.

மகிளி[1]-த்தல் *magiḷi-,*4 செ.கு.வி.(v.i.) மகிடி பார்க்க (வின்.); see *magiḍi.*

மகிளி[2] *magiḷi,*பெ.(n.) 1. மகிளிக்கீரை பார்க்க; see *magiḷi-k-kīrai.* 2. சேறு; mire (Nāñ).

மகிளிக்கீரை *magiḷi-k-kīrai,*பெ.(n.) கீரை வகை (வின்.); a species of greens.

மகிளிப்பருவம் *magiḷi-p-paruvam,* பெ.(n.) சேற்றுக் காலாக உழுது சாகுபடிக்குத் தகுதியான நிலை (நாஞ்.); condition of wet land prepared for *cēṟṟukkāl* cultivation.

*[மகிளி+பருவம். மகிளி = சேறு.]*

மகினம் *magiṉam,*பெ.(n.) ஆட்சிப் பரப்பு (யாழ்.அக.); jurisdiction of kingdom.

மகீ *magī,*பெ.(n.) மகி பார்க்க (யாழ்.அக.); see *magi.*

மகீசணி *magīcaṇi,* பெ.(n.) ஐந்திலை நொச்சி; a small tree.

மகுடஞ்சூட்டுதல் *maguḍāñ-cūṭṭudal,* பெ.(n.) முடிசூட்டு; coronation.

*[மகுடம் + சூட்டுதல்.]*

மகுடஞ்சூழ்-தல் *maguḍañ-sūḻ-,*2 செ.கு.வி. (v.i.) 1. கண்ணொளி மங்குதல்; to become dim as eye sight. *'அவனுக்குக் கண் மகுடஞ் சூழ்ந்து போயிற்று' (உ.வ.).* 2. செருக்கால் புறக்கணிப்புக்கு ஆளாதல்; to become regardless of others, as one elevated to a high office.

*[மகுடம் + சூழ்.]*

மகுடம் *maguḍam,* பெ.(n.) 1. மணிமுடி; crown. *"அரக்கன்றன் மகுடம்" (கம்பரா. முதற்போ. 246).* 2. தலைப்பாகை வகை (வின்.); head-dress, turban, cresft, tiara. 3. புனைவான உச்சி; anything crest - like, as the ornamental top of a temple car. 4. பல பாடல்களில் ஒரே வகையில் வரும் முடிவு; finishing part of stanzas in a poem, in the form of a refrain. 5. கட்டுரை முதலியவற்றின் தலைப்பு; title, captain. 6. சிவாகமம் இருபத்தெட்டனுள் ஒன்று (திருமந்.73); an ancient Saiva scripture, one of 28 civākamam, q.v. 7. ஓலைச் சுவடியின் மணி முடிச்சுக் கொண்டை (யாழ்ப்.); ornamental button of an *olai* book. 8. மாதர் காதணி வகை; a ear-ornament worn by women (J.). 9. மத்தளம் முதலியவற்றின் விளிம்பு (சங்.அக.); edge of drums. 10. பறை வகை (நாஞ்.); a kind of drum. 11. ஒளிமங்கல்(வின்.); dimness of vision, obscurity. *'எனக்குக் கண் மகுடமாயிருக்கிறது' (உ.வ.).*

*[முகடு (முகடம்)→ மகுடம்.]*

மகிழ்→மகிழம்→முகுளம் → முகுடம் → மகுடம். மொட்டுப் போன்ற கூம்பிய மணி முடி.

முகம்→முகடு = மூக்குப்போன்ற கூரையுச்சி. முகடு = உச்சி, வீட்டின் உச்சி, வாணமுகடு, தலை, உயர்வு. முகடு→(முகடம்)→மகுடம். இனி, முகிழ் → முகிழம்→முகுளம்→முகுடம்→மகுடம் = மொட்டுப் போற் கூம்பிய மணிமுடி என்றுமாம்.

வ. மகுட (t.), முகுட (t.) பேராசிரியர் பரோ இச்சொல்லைத் தென் சொல்லென்றே கூறுவர். (The Sanskrit Language p.381) முகுடம் பிறை வடிவினதென்றும், கிரீடம் குவிந்ததென்றும்,

மௌலி மும்முனைய தென்றும் மா.வி.அ.கூறும் (வ.மொ.வ.212, 213) (செல்வி.செப்.78, பக்.11) (மு.தா.105).

**மகுடயோகம்** *maguḍa-yōgam,* பெ.(n.) ஐந்தாமிடத்திற் குருவும் பத்தாமிடத்திற் சனியும் ஒன்பதாமிடத்திற் பஞ்சமாதிபதியும் இருக்க வரும் நிலை (சங்.அக.); a status, when Jupiter is situate in the fifth, Saturn in the tenth house and the lord of the fifth in the ninth house.

*[மகுடம் + **Skt.** யோகம்.]*

**மகுடி** *maguḍi,* பெ.(n.) 1. மகிடி[2] பார்க்க; see *magiḍi.* 2. ஓர் இசைக் கருவி; a kind of trumpet or flute. *"மகுடியின் கிளை யிமிழ்த்தனர்" (பாரத.அணி.15).*



**மகுமம்** *magumam,* பெ.(n.) மார்பு; breast, chest.

*[மருமம்→மார்பு, இலை. மருமம்→மகுமம்.]*

**மகுரக்கா** *magurakkā,* பெ.(n.) வழுதலை எனுஞ்செடி; brinjal plant (சா.அக.).

**மகுலம்** *magulam,* பெ.(n.) மகிழ்பூ; pointed-leaved ape-flower.

**மகுளம்பல்** *maguḷampal,* பெ.(n.) கவிழ் தும்பை; a species of dead nettle plant (சா.அக.).

**மகுளி** *maguḷi,* பெ.(n.) 1. ஓசை; sound, noise. *"உருடுடி மகுளியிற் பொருடெரிந் திசைக்கும் கடுங்குரற் குடிஞைய" (அகநா.19).* 3. எட்பயிர் முதலியவற்றிற்கு வரும் அரக்குநோய் (மலைபடு.103); redness, a disease affecting sesame and other plants.

**மகுளிபாய்-தல்** *maguḷi-pāy-,* 2 செ.கு.வி. (v.i.) நீரின்மையால் எள்ளு முதலிய செடி கொடிகள் செந்நிறமடைதல்; to turn red for want of water, as sesame, etc.

*[மகுளி + பாய்-.]*

**மகூலம்** *magūlam,* பெ.(n.) மலர்ந்த பூ; blossom flower.

**மங்கணசித்தர்** *maṅgaṇa-šittar,* பெ.(n.) ஒரு சித்தர் (அபி.சிந்.); a siddhar.

**மங்கம்மாள்** *maṅgammāḷ,* பெ.(n.) மதுரையி லிருந்து ஆண்ட நாயக்க வழி அரசி (சி.பெ.அக.); queen of the *Nāyakkar* clan who ruled *Pāṇḍya* Region from *Madurai.*

**மங்கல்** *maṅgal,* பெ.(n.) 1. கெடுகை; decaying, fading. 2. ஒளி மழுக்கம்; dimness, obscurity, growing dim. 3. இருள் கலந்த நேரம்; darkness, dusk. 4. உளி மழுங்கல்; blunt as edge of chisel.

*[முல் (பொருந்தற் கருத்து வேர்)→முள்→மள்→மள்கு. மள்குதல் = ஒளி குறைதல், குறைதல். மள்கு→மழுகு. மழுகுதல் = ஒளி குறைதல். மழுகு→மழுங்கு. மழுங்கல்=ஒளி குறைதல், பொலிவழிதல், கவனிப்பின்றி மறைந்துபோதல், கெடுதல். மழுங்கு→மங்கு→மங்கல் (வே.க.4:59).]*

**மங்கல்யம்** *mangalyam,* பெ.(n.) மங்கலியம் பார்க்க; see *mangaliyam.*

*[மங்கலியம்→மங்கல்யம்.]*

**மங்கல்லியம்** *mangalliyam,* பெ.(n.) 1. மங்கலியம் பார்க்க; see *mangaliyam.* 2. சந்தனம்; sandal wood. 3. தயிர் (யாழ்.அக.); curd. 4. பொன் (யாழ்.அக.); gold. 5. செவ்வீயம் (யாழ்.அக.); red lead.

*[மங்கலியம்→மங்கல்லியம்.]*

**மங்கலக்குடி** *mangala-k-kudi,* பெ.(n.) தஞ்சாவூர் மாவட்டத்தில் காவிரிக்கரையில் அமைந்துள்ள, தற்போது திருமங்கலக்குடி என வழங்கும் ஊர்; the present Thirumangala-k-kudi situated on the banks of cauvery in Thanjavur Dt. *"மாவிரியும் பொழில் மங்கலக் குடி" (அப்பர் தேவாரம்.187, 2) (இல.ஊ.பெ.).*

*[மங்கலம் + குடி.]*

**மங்கலக்கருவி** *mangala-k-karuvi,* பெ.(n.) 1. மழிப்புக்கத்தி; razor, as used for shaving on auspicious occasions like wedding. *"மங்கலக் கருவி முன்னுறுத்தி வாழ்த்தி" (சீவக.2411).* 2. யாழ் முதலிய இசைக்கருவிகள்; musical instruments, as yāl, etc. *"நங்கை கற்கு மங்கலக் கருவிக்கு" (பெருங்.உஞ்ஞைக்.34, 171).*

*[மங்கலம் + கருவி.]*

**மங்கலக்கிழமை** *mangala-k-kilamai,* பெ.(n.) செவ்வாய்க்கிழமை; Tuesday, as the day of Mars. *"மங்கலக் கிழமை தன்னிற் கைப்பலி கொடுத்து" (யசோதர. 2, 58).*

*[மங்கலம் + கிழமை.]*

செவ்வாய்க் கோளை செவ்வண்ணமாகப் பார்த்தது போலவே செம்மஞ்சள் நிறமாகவும், வடவர் பார்த்திருந்ததால் மஞ்சள்கோளை மங்கலக் கோளாக்கி, அதேபோல் செவ்வாய்க்கிழமை மங்கலக் கிழமையானது போலும்.

**மங்கலகரப்புல்** *mangalagara-p-pul,* பெ.(n.) அறுகம்புல்; the doob grass or harialli grass-cynodon dactylon or devil's grass (சா.அக.).

*[மங்கலம் →மங்கலகரம் + புல்.]*

**மங்கலகாரியம்** *mangala-kāriyam,* பெ.(n.) நற்சடங்கு; festive, auspicious or joyous ceremony.

*[மங்கலம் + காரியம். மங்கல்→மங்கலம்.]*

த. கருமம் > வ. காரியம்.

**மங்கலகீதம்** *mangala-gidam,* பெ.(n.) மங்கலப்பாட்டு பார்க்க; see *mangala-p-pāttu. "மங்கல கீதம் பாட" (கம்பரா.விடை கொடுத்த.5).*

*[மங்கலம் + Skt.கீதம்.]*

**மங்கலகௌசிகம்** *mangala-koucigam,* பெ.(n.) அராக வகை (வின்.); a musical mode.

*[மங்கலம் + Skt.கௌசிகம்.]*

**மங்கலகௌசிகை** *mangala-kaucigai,* பெ.(n.) மங்கலகௌசிகம் பார்க்க (வின்.); see *mangala-kaucigam.*

*[மங்கலம் + Skt.கௌசிகை.]*

**மங்கலச்செய்கை** *mangala-c-ceygai,* பெ.(n.) மங்கலகாரியம் பார்க்க (வின்.); see *mangala-kāriyam.*

*[மங்கலம் + செய்கை.]*

**மங்கலச்செறு** *maṅgala-c-ceṟu,* பெ.(n.) மாமல்லபுரத்தை அடுத்த சிறுதாவூர் என்ற ஊரின் அருகிலுள்ள ஊர்; name of a place near *Sirudāvūr* next to *Mamallapuram.* *"எங்கள் ஊர் உக்காவிரி வாய்க்காலுக்குத் தெற்கு மங்கச்செறும்" (தெ.க.தொ.I. கல்.42, 12).*

*[மங்கலம் + செறு.]*

**மங்கலச்சொல்** *maṅgala-c-col,* பெ.(n.) 1. நலத்தைக் குறிக்கும் மொழி (வின்.); auspicious word. 2. வாழ்த்து உரை (வின்.); languages of benediction. 3. செய்யுட்களின் முதலில் வரற்குரிய திரு, பூ, உலக முதலிய நன்மொழிகள் (வெண்பாப். முதல் மொழி.2); particular words or their synonyms considered auspicious to begin a poem with as *tiru, pū, ulagam,* etc.

*[மங்கலம் + சொல்.]*

**மங்கலசூத்திரம்** *maṅgala-šūttiram,* பெ.(n.) மங்கலநாண்; twisted thread in which the *tāli* is strung.

*[மங்கலம் + சூத்திரம்.]*

**மங்கலத்திருநாள்** *maṅgala-t-tirunāḷ,* பெ.(n.) நன்னாள் (மணிமே.10:83); holy day of festival.

*[மங்கலம் + திருநாள்.]*

**மங்கலத்துகில்** *maṅgala-t-tugil,* பெ.(n.) வெண்டுகில்; white cloth, as auspicious. *"மங்கலத் துகிலை வாங்கி" (சீவக. 1146).*

*[மங்கலம் + துகில்.]*

**மங்கலதினம்** *maṅgala-tiṉam,* பெ.(n.) மங்கலநாள் பார்க்க; see *maṅgala-nāḷ.*

த. நாள்; வ. தினம்.

*[மங்கலம் + Skt.தினம்.]*

**மங்கலதூரியம்** *maṅgala-tūriyam,* பெ.(n.) மங்களஇசை பார்க்க (வின்.); see *maṅgaḷa-išai.*

*[மங்கலம் + தூரியம்.]*

**மங்கலநதி** *maṅgala-nadi,* பெ.(n.) நன்னீ ராடற்குரிய பேராறு; sacred or holy river.

*[மங்கலம் + Skt. நதி.]*

**மங்கலநாண்** *maṅgala-nāṇ,* பெ.(n.) தாலிச் சரடு; twisted thread in which the *tāli* is strung. *"நிறைநெடு மங்கல நாணோ" (கம்பரா. நகர.2).*

*[மங்கலம் + நாண்.]*

மஞ்சள்நிறத்த நாண்.



**மங்கலநாள்** *maṅgala-nāḷ,* பெ.(n.) நன்னாள்; auspicious day. *"மங்கலநாட் கணித் தறிந்தனன்" (உபதேசகா. சிவ புண்ணிய.60).*

*[மங்கலம் + நாள்.]*

மங்கலநானம் *maṅgala-nāṉam,* பெ.(n.) மங்களநீராடல் பார்க்க; see *maṅgala-nīrāḍal.*

*[மங்கலம் + **Skt.**ஸ்நானம்.]*

மங்கலநீராடல் *maṅgala-nīrāḍal,* பெ.(n.) நற்செயல் தொடங்கும் போது செய்யும் நீராட்டம்; bath at the commencement of an auspicious ceremony.

*[மங்கலம் + நீராடல்.]*

மங்கலப்பத்திரிகை *maṅgala-pattirigai,* பெ.(n.) திருமணவழைப்பு (வின்.); marriage invitation.

*[மங்கலம் + **Skt.**பத்திரிகை.]*

மங்கலப்பாட்டு *maṅgala-p-pāṭṭu,* பெ.(n.) நன்னாளில் பாடும் பாடல்; music on auspicious occasions.

*[மங்கலம் + பாட்டு.]*

மங்கலப்பாடகர் *maṅgala-p-pāḍagar,* பெ.(n.) அரசர் முதலியவரைப் புகழ்வோர் (வின்.); bards, encomiasts.

*[மங்கலம் + பாடகர்.]*

மங்கலப்பிரதை *maṅgala-p-piradai,* பெ.(n.) மஞ்சள் (சங்.அக.); turmeric (சா.அக.).

மங்கலப்புருடன் *maṅgala-p-puruḍaṉ,* பெ.(n.) 1. மங்கல செயல் செய்யத் தகுதியுள்ளவன் (வின்.); the proper man to perform or conduct a ceremony or to communicate good tidings, as a married man. 2. எப்பொழுதும் நலந்துய்ப்போன் (இ.வ.); a man who is ever happy.

*[மங்கலம் + **Skt.** புருட(ஷ)ன்.]*

மங்கலப்பேரிகை *maṅgala-p-pērigai,* பெ.(n.) மங்கல காலங்களில் முழக்கும் முரசம் (வின்.); drum beaten an auspicious occasions.

*[மங்கலம் + பேரிகை.]*

மங்கலப்பொருத்தம் *maṅgala-p-poruttam,* பெ.(n.) செய்யுண் முதன் மொழிப் பொருத்தம் பத்தனுள் முதன் மொழியிடத்து மங்கலச் சொல் நிற்பது (வெண்பாப். முதன்மொழி.2); rule of propriety by which a *maṅgala-c-col* is used at the commencement of a poem, one of ten *ceyyuṉ-mudaṉ-moḻi-p-poruttam.*

*[மங்கலம் + பொருத்தம்.]*

மங்கலபத்திரம் *maṅgala-pattiram,* பெ.(n.) திரு முதலிய மங்கலச் சொற்களால் தொடங்கப்படுவதும், தலைவனும் பணியாளனும் உடன்பட்டுச் செய்து கொள்வதுமான ஒப்பந்த ஆவணம்; document indicating an agreement between master and servant embodying the terms of the contract of service, which begins with holy words like tiru, etc.

*[மங்கல + **Skt.** பத்திரம்.]*

மங்கலம்[1] *maṅgalam,* பெ.(n.) தஞ்சாவூர் மாவட்டத்தில் மழநாட்டில் இருந்த ஓரூர்; a village in Mazha nadu in Thanjavur Dt. *"மங்கலமானது மங்கலமாகிய வாழ் மூதூர்" (பெரியபு.30, 7).*

மங்கலம்[2] *maṅgalam,* பெ.(n.) 1. நலமான தன்மை; auspiciousness, propitiousness. *"குழலினாளை மங்கலக் கடிப்புச் சேர்த்தி" (சீவக.488).* 2. ஆக்கம்; achievement,

# மங்கல நாண் வகை


சொக்கர் மீனாட்சி தாலி


செட்டிநாடு தாலி


கேரள தாலி


கேரள தாலி


கிறித்தவர் தாலி


கொழும்பு கிறித்தவர்


கொழும்பு அம்மன்


தென்களை தாலி


வள்ளலார் தாலி


கிறித்தவர் தாலி


கிறித்தவர் தாலி


பிள்ளையார் தாலி


பிள்ளையார் தாலி


முதலியார் தாலி


ஆந்திரா பொட்டு தாலி


நாயுடு தாலி


துளசி தாலி


வொக்காலிகல் தாலி


பிராமின் தாலி


கிறித்தவர் தாலி


முஸ்லிம் தாலி


செட்டிநாடு தாலி


செட்டிநாடு தாலி


தெலுங்கு தத்தாபட்டு தாலி


கொழும்பு தாலி


தெலுங்கு தத்தாபட்டு தாலி


கொழும்பு தாலி


பிராமின் கீழ் துளசி தாலி


வொக்காலிகல் தாலி


கொழும்பு கொம்பு தாலி

means of accomplishment, good fortune. *"விண்வேண்டின் வேறாதன் மங்கலம் வேந்தர்க்கு" (பு.வெ.9, 10).* 3. பொலிவு; splendour. *"மணக்கோல மங்கலம் யாம் பாட" (பு.வெ.9, 22).* 4. நற்செயல் (பிங்.); good deed according to the *śastras.* 5. நன்மை; goodness, honour. *"மங்கலமென்ப மனைமாட்சி" (குறள், 60).* 6. திருமணம்; marriage. *"மங்கல வாழ்த்துப் பாடலும்" (சிலப். பதி.63).* 7. தாலி; marriage badge. *"மற்றை நல்லணிகள் காணுன் மங்கலங் காத்த மன்னோ" (கம்பரா. உருக்காட்டு.35).* 8. கொடை (திவா.); virtue. 9. சிறப்பு; excellence. *"சைவமங்கல வேதி யத் தாபதன்" (திருவிளை. விருத்த.13).* 10. வாழ்த்து; praise, panegyric, blessings. *"மங்கல மொழியும்" (தொல். பொருள்.244).* 11. மங்கலவழக்கு பார்க்க (நன்.267); see *mangala-valakku.* 12. எண் வகை மங்கலம்; eight auspicious objects. *"படிவ மங்கலங் களெட்டும் பரித்து" (திருவிளை. திருமணப். 143).* 13. சேர்க்கை; gathering, collecting. 14. தகனபலி (யாழ்.அக.); funeral oblation.

*[மங்கல்→மங்கலம்.]*

முல்→முள்→(மள்)→மண். மண்ணுதல் = மழித்தல். இந்தக் கத்தி மண்ணாது என்பது தென்னாட்டு வழக்கு. மள்→மழ்→மழி. மழித்தல் = மொட்டையடித்தல். மள்→மழ→மழுங்கு→மழுங்கன் = வேலைப்பாடில்லாத அணி. மங்கல் என்பது உளி மழுங்கல். மழுங்கு→மங்கு→மங்கல்→மஞ்சல்= மங்கலானநிறம். மங்கல் நிறம் = மஞ்சள் நிறம். வெண்மையுமன்றிப் பச்சையுமன்றி இடை நிகர்த்ததாய் மங்கிய நிறமாக விடுத்தலின் மஞ்சள் நிறம் முதலாவது மங்கல் எனப்பட்டது. மங்கல்→மஞ்சல்→மஞ்சள். ஒ.நோ. கழங்கு→கழஞ்சு. இலங்கு→இலஞ்சு→இலஞ்சி. மஞ்சல் = மஞ்சள் நிறமுள்ள சரக்கு.

தமிழ் நாட்டில் கணவனோடு கூடி வாழும் பெண்டிர் அழகிற்கும் உடல் நலத்திற்கும் மணத்திற்கும் மஞ்சள் தேய்த்துக் குளிப்பது வழக்கமாதலின் மஞ்சட்கும் மஞ்சள் நிறத்திற்கும் மங்கலத் தன்மை ஏற்பட்டு விட்டது. திருமண வரிசையில் வைக்கப்படும் பொருள்களில் மஞ்சளும் ஒன்றாகும். மங்கல்→மங்கலம் = மஞ்சட் பூச்சாற் குறிக்கப் பெறும் மகளிர் வாழ்க்கைநலம். மஞ்சளாலும் மஞ்சள் நிறத்தாலும் குறிக்கப் பெறும். நற்செய்தி (மு.தா.102).

வடவர் காட்டும் மூலம்

மங்க் = செல், இயங்கு. இதன் தவறானப் பொருத்தப்பாட்டினை உய்த்துணர்க.

**மங்கலம்பதினாறு** *mangalam-patināru,* பெ.(n.) எண் வகை மங்கலத்தோடு வாள், குடை, ஆலவட்டம், சங்கம், தவிசு, திரு, அரசியலாழி, ஓமாலிகை யென்ற எட்டுஞ் சேர்ந்த பதினாறு வகையான எடுபிடிகள் (பெருங். இலாவண, 5, 26, அரும்.); the sixteen auspicious paraphernalia, including, sword, umberlla, fan, conch, seat, the head ornament *tiru,* royal discus and pots containing fragrant drugs along with *aṭṭamangalam.*

*[மங்கலம் + பதினாறு.]*

**மங்கலமகளிர்** *mangala-magaḷir,* பெ.(n.) மங்கலமங்கையர் பார்க்க; see *mangala-mangaiyar. "மங்கல மகளிரொடு மாலைசூட்டி" (புறநா.332).*

*[மங்கலம் + மகளிர்.]*

**மங்கலமங்கையர்** *mangala-mangaiyar,* பெ.(n.) வாழ்வரசிகள்; women under coverture. *"மங்கல மங்கையராய் மன்னவர் கன்னியராய்" (பெருந்தொ.969).*

*[மங்கலம் + மங்கையர்.]*

**மங்கலமடந்தை** *mańgala-maḍandai,* பெ.(n.) 1. வாழ்வரசி; married woman, an auspicious. 2. மங்கலாதேவி பார்க்க; see *mańgalā-dēvi.* *"மங்கல மடந்தை கோட்டத்து" (சிலப்.30: 53).*

*[மங்கலம் + மடந்தை.]*

**மங்கலமரபு** *mańgala-marabu,* பெ.(n.) மங்கல வழக்கு பார்க்க (நன்.266, மயிலை.); see *mańgala-vaḻakku.*

*[மங்கலம் + மரபு.]*

**மங்கலமாந்தர்** *mańgala-māndar,* பெ.(n.) மங்கல காரியங்களைச் செய்வோர் (பெரியபு. மூர்த்தி.39); those who perform auspicious rites, as in a coronation.

*[மங்கலம் + மாந்தர்.]*

**மங்கலமுகூர்த்தம்** *mańgala-mugūrttam,* பெ.(n.) மங்கலமுழுத்தம் பார்க்க; see *mańgala-muḻuttam.*

*[மங்கலம் + முகூர்த்தம். முழுத்தம் → முகூர்த்தம்.]*

**மங்கலமுரசு** *mańgala-muraśu,* பெ.(n.) மங்கலப்பேரிகை பார்க்க; see *mańgala-p-pērigai.* *"மங்கல முரசின மழை யினார்த்தன" ( கம்பரா. கடிமண.41).*

*[மங்கலம் + முரசு.]*

**மங்கலமுழவம்** *mańgala-muḻavam,* பெ.(n.) மங்கலப்பேரிகை பார்க்க; see *mańgala-p-pērigai.* *"மங்கல முழவம் விம்ம" (பாரத. திரௌபதி மாலை.18).*

*[மங்கலம் + முழவம்.]*

**மங்கலமுழுக்கு** *mańgala-muḻukku,* பெ.(n.) நற்செயற் றொடங்குமுன் செய்யும் நீராட்டு; bath at the commencement of an auspicious ceremony.

*[மங்கலம் + முழுக்கு.]*

**மங்கலமுழுத்தம்** *mańgala-muḻuttam,* பெ.(n.) நல்லோரை; auspicious hour.

*[மங்கலம் + முழுத்தம்.]*

**மங்கலமொழி** *mańgala-moḻi,* பெ.(n.) மங்கலச்சொல் பார்க்க; see *mańgala-c-col.* *"மங்கல மொழியும், வைஇய மொழியும்" (தொல்.பொருள்.244).*

*[மங்கலம் + மொழி.]*

**மங்கலவண்ணம்** *mańgala-vaṇṇam,* பெ.(n.) மங்கலக் குறியான வெண்மைநிறம்; whiteness, as the auspicious colour. *"மங்கல வண்ணமாகிய வெள்ளணியும் அணிந்து" (தொல்.பொருள்.91, உரை).*

*[மங்கலம் + வண்ணம்.]*

**மங்கலவணி** *mańgala-v-aṇi,* பெ.(n.) 1. திருமங்கலியம்; marriage badge. *"அகலுண் மங்கலவணி யெழுந்து" (சிலப். 1:47, அரும்.).* 2. இயற்கையழகு; natural charm or beauty. *"மறுவின் மங்கல வணியே யன்றியும்" (சிலப்.2:63).* 3. மங்கலக்குறியாக அணியும் வெள்ளணி; white cloth or ornament, as worn at a wedding. *"மங்கல வணியினர்" (சீவக.603).*

*[மங்கலம் + அணி.]*

**மங்கலவரிகை** *maṅgala-varigai,* பெ.(n.) ஒருவனுக்குண்டாகும் நன்மைகளைக் குறிப்பதாகக் கருதப்படும் உள்ளங்கை வரிகை (திருவாரூ.குற.); a kind of distinctive line on the palm of the hand, believed to indicate one's fortune.

*[மங்கலம் →மங்களம் + **Skt.** வரிகை.]*

**மங்கலவழக்கு** *maṅgala-vaḻakku,* பெ.(n.) தகுதிவழக்கு மூன்றனுள் மங்கலம் அல்லாததை மங்கலமாகக் கூறும் வழக்கு (நன்.267, உரை.); euphemism, usage of an auspicious word to denote an inauspicious thing one of three *tagudi-vaḻakku,* q.v.

*[மங்கலம் + வழக்கு.]*

ஒருவர் துன்புறும் போது, அவரை ஆற்றித் தேற்றுவதும் அவரொடு தாமும் சேர்ந்து துன்புறுவதும், உயர்ந்தோர் இயல்பு. கண்ணன்ன கேளிரை இழப்பதும், எரி போன்ற வறுமையால் வாடுவதும் பெருந்துன்பமாம். அத்துன்பங்களை அவற்றிற்குரிய சொல்லாற் குறிப்பினும் அவற்றால் துன்புறுவோர்க்குத் துன்பம் பெருகுமென்று கருதி, இன்பமும் நன்மையும் குறிக்கும் சொற்களால் அவற்றைக் குறித்து வந்தனர் பண்டை மேலோர். இதனை மங்கல வழக் கென்பர் இலக்கணவாசிரியர்.

செத்தானைத் துஞ்சினான் என்றும், சாவைப் பெரும் பிறிது என்றும், சுடுகாட்டை நன்காடு என்றும், தாலியறுதலைத் தாலி பெருகிற்று என்றும் வறுமையை நிரப்பு என்றும், வறுமைப் பாட்டை நல் கூர்தல் என்றும் கூறுவது மங்கல வழக்காம்.

துஞ்சுதல்–தூங்குதல். நிரப்பு–நிறைவு, நல் கூர்தல்–நன்மை மிகுதல். இனி, சாவுக் கேதுவான நச்சுயிரிகளையும் மங்கலச் சொல்லாற் குறிப்பது வழக்கம். எ–டு: நல்ல பாம்பு (சொல்.112).

**மங்கலவள்ளை** *maṅgala-vaḷḷai,* பெ.(n.) உயர்குல மங்கையை ஒன்பது வெண்பாவில் வகுப்புறப் பாடும் சிற்றிலக்கியம் (பிரபந்தம்) (இலக்.வி.); a poem about a lady of noble birth, in nine veṇbās.

*[மங்கலம் + வள்ளை.]*

**மங்கலவாச்சியம்** *maṅgala-vācciyam,* பெ.(n.) நற்காலங்களில் இசைக்கப்படும் இசைக்கருவி; musical instruments played on auspicious occasion, usually nathasvaram and co-instruments colloq.

*[மங்கலம்→மங்களம் + வாச்சியம் (வாத்தியம் →வாச்சியம்).]*

**மங்கலவார்த்தை** *maṅgala-vārttai,* பெ.(n.) 1. நன்மொழி; auspicous language. 2. நற் செய்தி; good news. 3. மங்கலச்சொல் பார்க்க; see *maṅgala-c-col.*

*[மங்கலம் + **Skt.**வார்த்தை.]*

**மங்கலவாரம்** *ma gala-vāram,* பெ.(n.) 1. நல்லநாள்; auspicious day as Monday or Wednesday or a day when there is a favourable configuration of the planets. 2. மங்களவாரம் பார்க்க; see *maṅgaḷa-vāram.*

*[மங்கலம் + **Skt.**வாரம்.]*

**மங்கலவாழ்த்து** *maṅgala-vāḻttu,* பெ.(n.) சிற்றிலக்கியத்தின் முதலில் அல்லது இறுதியிற் செய்யப்படும் வழுத்து; salutation, praise, especially in the opening or the conclusion of a poem.

*[மங்கலம் + வாழ்த்து.]*

மங்கலவினைஞன் *mangala-viṉaiñaṉ,* பெ.(n.) 1. முடிதிருத்துவோன்; barber, as doing auspicous work. 2. மங்கலப்புருடன் பார்க்க (வின்.); see *mangala-p-puruḍaṉ.*

*[மங்கலம் + வினைஞன்.]*

மங்கலவெள்ளை *mangala-veḷḷai,* பெ.(n.) 1. சிற்றிலக்கியம் தொன்னூற்றாறனுள் சந்தமும் வெண்பாவும் விரவிய ஒன்பது பாடல்களாலேனும், கலிவெண்பா ஒன்றினாலேனும், ஒன்பது வெண்பாக்களினாலேனும், ஒன்பது சந்தங்களினாலேனும் உயர்குடிப் பிறந்த கற்புடை மடந்தையைப் புகழ்ந்துபாடும் சிற்றிலக்கியம் (பன்னிருபா. 300–302); poem on a chaste or continent lady of noble birth in nine mixed stanzas of *veṇpā,* and *vaguppu* metre or one *kaliveṇpā* or nine stanzas either in *veṇpā* or *vaguppu* metre, one of 96 pirapanthams, q.v. 2. சந்தனக் குழம்பு; sandal paste, as used an auspicious occasions. *"மங்கல வெள்ளை வழித்து" (சீவக.1477).*

*[மங்கலம் + வெள்ளை.]*

மங்கலவேளை *mangala-vēḷai,* பெ.(n.) மங்கலமுழுத்தம் பார்க்க (வின்.); see *mangala-muḻuttam.*

*[மங்கலம் + வேளை.]*

மங்கலன் *mangalaṉ,* பெ.(n.) 1. செவ்வாய்; the planet Mars. 2. மங்கலியன் (வின்.) பார்க்க; see *mangaliyaṉ.*

மங்கலாதேவி *mangalā-dēvi,* பெ.(n.) ஒரு பெண் தெய்வம் (சிலப்.30:53, அரும்.); celestial rymph.

*[மங்கலம் + தேவி.]*

மங்கலி[1] *mangali,* பெ.(n.) இல்லத்தரசி; married woman, as wearing the *tāli.*

*[மங்கலம்→மங்கலி.]*

மங்கலி[2] *mangali,* பெ.(n.) மங்கலியன் பார்க்க (வின்.); see *mangaliyaṉ.*

*[மங்கலம்→மங்கலி→மங்கலியன்.]*

மங்கலியக்காரி *mangaliya-k-kāri,* பெ.(n.) 1. மங்கலி பார்க்க; see *mangali.* 2. மனைவி; wife.

*[மங்கலம்→மங்கலியம் + காரி. காரி – உடைமை குறித்த பெண்பாலீறு.]*

மங்கலியகம் *mangaliyagam,* பெ.(n.) சிறு கடலை வகை (யாழ்.அக.); small bengal gram.

மங்கலியசூத்திரம் *mangaliya-šūttiram,* பெ.(n.) மங்கலசூத்திரம் பார்க்க; see *mangala-šūttiram.* *"மங்கலிய சூத்திரத்தை யணிந்த மகளிருடனே" (புறநா. 127, உரை).*

*[மங்கலம்→மங்கலியம் + சூத்திரம்.]*

மங்கலியப்பிச்சை *mangaliya-p-piccai,* பெ.(n.) கணவனுயிரைக் காக்குமாறு மனைவி இரந்து கேட்கை (கொ.வ.); wife's prayer to save her husband's life when he is in dying bed begging for preservation of her tali.

*[மங்கலம்→மங்கலி →மங்கலியம் + பிச்சை.]*

மங்கலியப்பெண்டுகள் *mangaliya-p-peṇḍugaḷ,* பெ.(n.) 1. வாழ்வரசிகளாய் இறந்தவரும் அவரவர் குடும்பத்தினரால் தெய்வமாகக் கொண்டாடப்படுவோருமாகிய

பெண்டிர்; woman who died during the lifetime of their husbands and are worshiped as deities of their families. 2. வாழ்வரசிகளாய் இறந்த மகளிர் பொருட்டுச் செய்யும் சடங்கு; a feast in honour of *mankaliya-p-penḍugaḷ*.

*[மங்கலம்→மங்கலியம் + பெண்டுகள்.]*

மங்கலியப்பொருத்தம் *maṅgaliya-p-poruttam,* பெ.(n.) மணப் பொருத்தம்; an agreement of horoscopes of the bride and the bridegroom regarding 'rajju' i.e. safety of *tāli* (astrol).

*[மங்கலம் →மங்கலியம் + பொருத்தம்.]*

மங்கலியம் *maṅgaliyam,* பெ.(n.) திருமணத்திற் கட்டப்படுந் தாலி; *tāli;* wedding badge.

*[மங்கலம்→ மங்கலி→ மங்கலியம்.]*

மங்கலியவதி *maṅgaliyavadi,* பெ.(n.) வாழ்வரசி; a married woman.

*[மங்கல்→ மங்கலி→ மங்கலியவதி.]*

மங்கலியன் *maṅgaliyaṉ,* பெ.(n.) முடி திருத்துவோன்; barber.

*[மங்கல்→ மங்கலி →மங்கலியன்.]*

மங்கலை[1] *maṅgalai,* பெ.(n.) மருத்துவத்தில் முன்னாளில் சிறந்திருந்த மருத்துவ மங்கை; nick name of a lady who experted herself in maternity cases (சி.பெ.அக.).

மங்கலை[2] *maṅgalai,* பெ.(n.) 1. கணவனோடு வாழ்பவள்; married woman. 2. திருமகள்; *Tirumagaḷ.* 3. மலைமகள்; *Malaimagaḷ.* 4. கொற்றவை; *Koṟṟavai.*

*[மங்கலம்→ மங்கலை.]*

மங்கலை[3] *maṅgalai,* பெ.(n.) முடி திருத்துவோர் குலப்பெண் (அம்பட்டச்சி) (வின்.); woman of the barber caste.

*[மங்கலியன் (ஆ.பா.)→மங்கலை (பெ.பா.).]*

மங்களகீதம் *maṅgaḷa-kītam,* பெ.(n.) மங்கலகீதம் பார்க்க (வின்.); see *maṅgala-kītam.*

*[மங்கலம் →மங்களம் + **Skt.**கீதம்.]*

மங்களப்பாடகர் *maṅgaḷa-p-pāḍagar,* பெ.(n.) மங்கலபாடகர் பார்க்க (வின்.); see *maṅgala-pāḍagar.*

*[மங்கலம்→மங்களம் + பாடகர்.]*

மங்களப்பாடவர் *maṅgaḷa-p-pāḍavar,* பெ.(n.) மங்கலபாடகர் பார்க்க (வின்.); see *maṅgala-pāḍagar.*

*[மங்கலம் →மங்களம் + பாடவர். பாடகர்→ பாடவர்.]*

மங்களம் *maṅgaḷam,* பெ.(n.) மங்கலம் பார்க்க; see *maṅgalam.*

*[மங்கலம் →மங்களம்.]*

மங்களர் *maṅgaḷar,* பெ.(n.) புத்தருள் ஒருவர் (மணிமே.பக்.369); a Buddha.

மங்களரேகை *maṅgaḷa-rēgai,* பெ.(n.) மங்கலவரிகை பார்க்க; see *maṅgala-varigai.*

*[மங்கலம்→மங்களம் + **Skt.** ரேகை. வரிகை →ரேகை.]*

மங்களவாத்தியம் *maṅgaḷa-vāttiyam,* பெ.(n.) மங்கலவாச்சியம் பார்க்க; see *maṅgala-vācciyam.*

*[மங்கலம்→மங்களம் + வாத்தியம் (வாத்தியம் →வாச்சியம்).]*

**மங்களவாரநாள்** *maṅgaḷavāra-nāḷ,* பெ.(n.) செவ்வாய்க்கிழமை; Tuesday. *சகாத்தம் 1668 இதில் மேற்செல்லா நின்ற அஷ்செய தை மி மங்கள வாற னாள் பூசனஷத்திரத்தில் (த.மரா.செப்.50, 17-41.)*

**மங்களவாரம்** *maṅgaḷa-vāram,* பெ.(n.) மங்கலவாரம் பார்க்க; see *maṅgala-vāram.*

*[மங்கலவாரம் →மங்களவாரம்.]*

**மங்களன்** *maṅgaḷaṉ,* பெ.(n.) மங்கலன் பார்க்க; see *maṅgalaṉ.*

*[மங்கலன்→மங்களன்.]*

**மங்களாசரணை** *maṅgaḷā-šaraṇai,* பெ.(n.) வாழ்த்து, வணக்கம், வத்து நிர்த்தேசம் என்ற முப்பகுதியுடைய நூன்முகம்; prefatory verse to a book or poem, of which there are three kinds viz. *vāḻttu, vaṇakkam, vattu-nirtēcam. "வாய்த்த நூன்முகத் துரைக்கு மங்களாசரணை வாழ்த்து வணக்கொடு வத்துநிர்த் தேசமூன்று" (வேதா.சூ.8).*

**மங்களாசாரம்** *maṅgaḷā-šāram,* பெ.(n.) மங்கலவாழ்த்து பார்க்க; see *maṅgala-vāḻttu. "மங்களாசாரமுரம்பெறு தேவமோதிலக்கணத்தில்" (பிரபோத.11, 4).*

**மங்களாரத்தி** *maṅgaḷāratti,* பெ.(n.) மங்களாலத்தி பார்க்க; see *maṅgaḷālatti.*

*[மங்கலம்→மங்களம் + ஆரத்தி. ஆலத்தி→ ஆரத்தி.]*

**மங்களாலத்தி** *maṅgaḷālatti,* பெ.(n.) 1. கடவுளுக்குச் சுழற்றியெடுக்கும் கருப்பூர ஆரத்தி; waving of camphor before a deity. *"மங்களாலத்தி யானவுடனே வட்டிலிலே திருப்படிக்கத்தை முகந்து" (கோயிலொ.59).* 2. நற்காலங்களில் மஞ்சணீர் சுற்றுகை; ceremony of waving turmeric water in a dish, an auspicious occasion.

*[மங்கலம் →மங்களம் +ஆலத்தி. ஆல் + ஆற்று–ஆலாற்று→ ஆலாத்து→ ஆலாத்தி. இனி, ஆலாத்தி→ஆராத்தி→ஆரத்தி என்றுமாம். ஆலாற்றுதல் = சுற்றச் செய்தல். ஆலத்தி பார்க்க.]*

**மங்களான்** *maṅgaḷāṉ,* பெ.(n.) குதிரைச் சாதி வகை (அசுவசா.151); a bread of horse.

**மங்களியம்** *maṅgaḷiyam,* பெ.(n.) 1. அரச மரம்; a tree. 2. பாலை மரம்; *pālai* tree (சா.அக.).

**மங்களூரோடு** *maṅgaḷūr-ōḍu,* பெ.(n.) ஒரு வகைத் தட்டோடு; Calicut tiles as from *mangalore.*

*[மங்களூர் + ஓடு.]*

மங்களூர் எனும் ஊரின் பெயரினால் அமைந்த ஓடு.

**மங்களை** *maṅgaḷai,* பெ.(n.) 1. மங்கலை[1] பார்க்க; see *maṅgalai. "மலைமக ளிகுளை மங்களை மண்டபமிழைத்து" (காஞ்சிப்பு. மாசாத்.35).* 2. பருவ நிலைகளுள் ஒன்று (வின்.); a period of human life. 3. யோகினி திசையிலொன்று (யாழ்.அக.); a direction in *yōgiṉi.*

*[மங்கலை→மங்களை.]*

**மங்கனிறம்** *maṅgaṉiṟam,* பெ.(n.) மங்கின நிறம்; dim or dingy colour.

*[மங்கல் + நிறம்.]*

மங்காமைகாத்தான் *maṅgāmai-kāttāṉ,* பெ.(n.) நெல்வகை; a kind of paddy. *"சீரிய லழகியவாணன் மங்காமை காத்தான்" (பறாளை. பள்ளு.24).*

மங்காரநெய் *maṅgāra-ney,* பெ.(n.) சுறா மீன் நெய்; shark lever oil (சா.அக.).

*[மங்காரம் + நெய்.]*

மங்காரம் *maṅgāram,* பெ.(n.) சுறாமீன்; shark (சா.அக.).



மங்கிணி *maṅgiṇi,* பெ.(n.) 1. மந்த அறிவுள்ளவ–ன்–ள்; extremely dull person. 2. பயனற்றவ–ன்–ள் (வின்.); mean, worthless person.

*[மங்கு →மங்கிணி.]*

மங்கிலம் *maṅgilam,* பெ.(n.) காட்டுத்தீ (யாழ். அக.); forest fire.

மங்கு[1]–தல் *maṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. குறைதல்; to grow less, to diminish. *"தாக மங்குதலின்மையால்" (விநாயகபு.80, 94).* 2. ஒளி மங்குதல்; to become dim, as light or eye-sight. 3. நிறங்குன்றுதல்; to grow pale, to loose lustre. 4. பெருமை குறைதல்; to be obscured, as splendour, glory, fame, to fade, as beauty, to decline in prosperity, as a religion, to be reduced in circumstance, power or authority. 5. வாட்டமுறுதல்; to be deprived of freshness, as the countenance, power or authority. 6. கெடுதல்; to decay, to be ruined. *"தீவினைத் தெவ்வெனும் பேர் மங்க" (திருநூற்.19).* 7. சாதல்; to die, perish. *"மங்கியு முற்பவித்து முழல் வல்லிடரில்" (திருப்போ. சந்.மட்டுவிருத்.7).*

*[முல் (பொருந்தற் கருத்து வேர்)→முள்→மள் →மள்கு. மள்குதல் = ஒளி குறைதல், குறைதல். மள்கு→மழுகு. மழுகுதல் = ஒளி குறைதல். மழுகு→மழுங்கு. மழுங்குதல் = ஒளி குன்றுதல், பொலிவழிதல், கெடுதல். மழுங்கு→மங்கு (வே.க.4:59).]*

மங்கு[2] *maṅgu,* பெ.(n.) 1. கேடு; ruin, loss. 2. வங்கு (வின்.); black spots on the face.

*[மழுங்கு→மங்கு.]*

மங்கு[3] *maṅgu,* பெ.(n.) சாடி (இ.வ.); polished earthern jar.



மங்குங்காலம் *mańguń-kālam,* பெ.(n.) தீமைக் காலம்; time of dearth or adversity, unpropitious season. *"மங்குங் காலத்திற்கு மா; பொங்குங் காலத்திற்குப் புளி" (பழ.).*

*[மங்கும் + காலம்.]*

மா மிகுதியாகக் காய்ப்பின் அந்த ஆண்டு மழை குறைந்து வறட்சி ஏற்படும் என்பதும் புளி மிகுதியாகக் காய்ப்பின் மழை மிகுந்து வளமை மிகும் என்பதும் பொதுவான மக்கள் நம்பிக்கை.

மங்குசனி *mańgu-šani,* பெ.(n.) மங்குநோய் முகன் பார்க்க; see *mańgu-nōy-mugan.*

*[மங்கு + **Skt.**சனி. சனி = நோய்முகன்.]*

***Skt.** சனி > த. காரி.*

மங்குநோய்முகன் *mańgu-nōy-mugan,* பெ.(n.) ஒருவனுடைய வாழ்நாளில் முதலில் வந்து தீமை செய்யும் ஏழரையாண்டுக் காரி; the first period of 7 1/2 years when saturn abides in the 12th, 1st and 2nd house from a person's *cantira-rāši,* indicating mis-fortunes.

மங்குல் *mańgul,* பெ.(n.) 1. ஒளிக்குறைவு; dim. 2. கண் தெரியாதவாறு குறைந்த மூடு பனி; fog. *"மங்குல் மனங்கவர" (பு.வெ.9, 45).* 3. இருட்சி; darkness. *"மங்குல் மாப்புகை" (புறநா.4, 103).*4. இரவு (திவா.); night. 5. இருண்ட முகில்; cloud. *"மங்குறோய் மணிமாட..... நெடுவீதி" (தேவா. 41, 7).* 6. கரிய வானம்; sky. *"மங்குல்வாய் விளக்கு மண்டலமே" (திருக்கோ. 177).* 7. வான வெளிப் பக்கமாகிய திசை; direction, point of the compass. *"புயன்மங்குலி னறை பொங்க" (கலித். 105, 25).*

*[மங்கு → மங்குல்.]*

மங்குல்வாணி *mańgulvāni,* பெ.(n.) வான் குரல்; voice from the heaven. *"மங்குல் வாணி யுதித்த மட மயிலே" (அருணகிரிபு. அருந்தவ. 162).*

*[மங்குல் + வாணி.]*

வானி→ வாணி. வானத்திலிருந்து வரும் குரல்.

மங்குலம் *mańgulam,* பெ.(n.) 1. மழுக்கம்; cloudiness, murkiness, obscuration. 2. கலக்கம்; perturbation, confusion of mind. 3. முகவாட்டம்; gloominess, gravity of countanance. 4. பார்வை மந்தம்; dullness of the eye, dimness of sight. 5. ஐயம்; uncertainty, doubtfulness. 6. நிறக்குறைவு; Indistinctness, obscure ness, paleness, as of a colour.

*[மங்கு →மங்குல் →மங்குலம்.]*

மங்குலி *mańguli,* பெ.(n.) இந்திரன்; Indran, as the Lord of the clouds. *"அமிர்தங் கடைந்தவ னஞ்ச மங்குலி" (திருப்பு.559).*

*[மங்குல் →மங்குலி.]*

மங்குளம் *mańguḷam,* பெ.(n.) மங்குலம் பார்க்க; see *mańgulam.*

மங்கை *mańgai,* பெ.(n.) 1. பெண்; woman. வாலிழை மடமங்கையர் (புறநா.11). 2. 12 முதல் 13 வயது வரை உள்ள பெண்; a girl between 12 and 13 years. *"மொய் கொண்ட மங்கை யிடங்கடவா மாண்பினாள்" (பதினொ. திருக்கைலாய. உலா.100).* 3. கற்றாழை (சூடா.); aloe. 4. மங்கலம் பார்க்க; see *mańgalam. சீவரமங்கை, வரகுண மங்கை.* 5. இதளியம் (சங்.அக.); mercury. 6. பெண் பருவங்களுலொன்று; one of the feminine

stage *மங்கைப் பருவத்தாள் (உ.வ.). "நாளல்லா நாள் பூத்த நன்மலரும் போலுமே ஆளில்லா மங்கைக் கழகு" (மூதுரை, 3).*

*[மழுங்கு→மங்கு→மங்கை.]*

மணப் பருவத்திற்குரியவர் பதினாறாட்டைப் பருவத்தானும் பன்னீராட்டைப் பருவத்தாளும் என்று அகப்பொருளிலக்கணமும் மாகவானிகர் வண்கை மாநாய்கண் குலக்கொம்பர் ஈகைவான் கொடியன்னாள் ஈராறாண் டகவையாள் (சிலப். மங்கல.23) என்று இளங்கோவடிகளும் கூறுதலையும், பன்னீராட்டைப் பருவத்தார் மங்கை யெனப்படுதலையும் நோக்குக.

மங்கைபங்கன் *mańgai-pańgaṉ,* பெ.(n.) மங்கைபாகன் பார்க்க; see *mańgai-pāgaṉ. "மங்கைபங்கனை மாசிலா மணியை" (தேவா. 549, 5).*

*[மங்கை + பங்கன்.]*

மங்கைபங்காளன் *mańgai-pańgāḷaṉ,* பெ.(n.) மங்கைபாகன் பார்க்க (வின்.); see *mańgai-pāgaṉ.*

*[மங்கை + பங்காளன்.]*

மங்கைபாகன் *mańgai-pāgaṉ,* பெ.(n.) சிவ வடிவங்களுளொன்று; a form of *śiva* half male and half female. *"மங்கை பாகனை நோக்கி" (கம்பரா.அகலிகை.50).*

*[மங்கலம் + பாகன்.]*

மங்கைமூலி *mańgai-mūli,* பெ.(n.) வெள்ளை நாயுருவி; a white species of the plant Indian burr (சா.அக.).

மங்கையக்கண்ணி *mańgaya-k-kaṇṇi,* பெ.(n.) கற்பூரவல்லி; country borage (சா.அக.).

மங்கையர்க்கரசி *mańgayar-k-karaši,* பெ.(n.) 1. பெண்களிற் சிறந்தவள்; the best woman. 2. பெண்மைக் குணங்கள் நிறைந்தவள்; the woman who passess all femine qualities.

*[மங்கையர்க்கு + அரசி.]*

மங்கையர்க்கரசியார் *mańgayar-k-karašiyār,* பெ.(n.) நாயன்மார் அறுபத்து மூவருள் நின்ற சீர் நெடுமாறனுடைய தேவியாராகிய சிவனடியார்; the queen of the *Pāṇḍiya* king *Niṉṟacīr-Neḍumāṟa, Nāyaṉār,* a cononized *Šaiva* saint, one of 63.

*[மங்கையர்க்கு + அரசியார்.]*

மங்கையர்கோன் *mańgayarkōṉ,* பெ.(n.) திருங்கையாழ்வார்; a *Vaiṇava* saint. *"மங்கையர்கோன்..... அவதரித்த கார்த்திகை நாள்" (உபதேசரத்.9).*

*[மங்கு→மங்கை→மங்கையர் + கோன்.]*

மங்கஞ்சம்பா *mańgañ-campā,* பெ.(n.) ஏழு மாதத்திற் பயிராகக் கூடிய சம்பா நெல்வகை (விவசா.2); a kind of *campā* paddy, maturing in seven months.

மங்குநார் *mańgu-nār,* பெ.(n.) மக்கி உலர்ந்த நார்; fibre of plants, dry and decayed.

*[மக்கு → மங்கு + நார்.]*

மச்சங்கள் *maccańgaḷ,* பெ.(n.) இலாஞ்சன ரோகம்; moles (சா.அக.).

மச்சங்கொல்லி *maccań-kolli,* பெ.(n.) புகையிலை; tobacco (சா.அக.)

**மச்சசல்லி** *macca-calli,* பெ.(n.) மீன் எலும்பு; fish bone (சா.அக.).

**மச்சத்தின்கச்சம்** *maccattin-kaccam,* பெ.(n.) மீனெலும்பு (சா.அக.); fish bone, cuttle bone (சா.அக.).

**மச்சதாது** *macca-tādu,* பெ.(n.) எலும்புக்குள் இருக்கும் ஒருவகை மூலப்பொருள்; marrow of the bone (சா.அக.)

**மச்சதேசம்** *macca-tēšam,* பெ.(n.) தேசம் ஐம்பத்தாறனுள் ஒன்று; a country in Central India, one of 56 *tecam.*

**மச்சப்பொன்** *macca-p-pon,* பெ.(n.) மாற்றறிய வைத்திருக்கும் மாதிரிப்பொன்; piece of gold kept for a sample.

**மச்சம்**[1] *maccam,* பெ.(n.) உடம்பிலுண்டாகும் புள்ளி; mole on the skin.

மள் → மய் → மை = கருமை, முகில், காராடு.

மை → மயில் = கரு (நீல) நிறத் தோகையுள்ள பறவை.

மயில் → மயிலை = கருமை கலந்த வெள்ளைக் காளை.

மை → மயிர் = கரியமுடி.

மை → மயி → மசி = கரிய குழம்பு (தஞ்சை நாட்டார் எழுதும் மையை மசியென்றே கூறுவர்).

மசி → மசகு = வண்டிமை.

மச்சு → மச்சம் (மு.தா.181).

**மச்சம்**[2] *maccam,* பெ.(n.) 1. மச்சப்பொன் பார்க்க;see *macca-p-pon. "வன்றொண்டர் மச்சம் வெட்டிக் கைக்கொண்டு" (பெரியபு. ஏயர்கோன். 109).* 2. சுவடு, ஏடல்; trace, clue (இ.வ.).

**மச்சமாமுகம்** *macca-mā-mugam,* பெ.(n.) புல்லுருவி; a parasitic plant (சா.அக.).

**மச்சமுனி** *macca-muni,* பெ.(n.) பதினெண் சித்தருள் ஒருவரும் மருத்துவ நூலியற்றி யவருமான ஒரு சித்தர்; reputed mystic, author of treatises on medicine, one of *patinen-cittar* q.v.

**மச்சரேகை** *macc-rēgai,* பெ.(n.) ஆண்மகவு உண்டென்பதைக் குறிக்கும் உள்ளங்கை வரிக்கோடு; a line in the palm of hand, believed to denote the existence of male off spring.

**மச்சனம்** *maccanam,* பெ.(n.) நன்னீராட்டு (ஆறுமுகநா.14); baptism, immersion.

**மச்சாக்கி** *maccākki,* பெ.(n.) பொன்னாங் கண்ணி (நாமதீப.298); a plant.

**மச்சி**[1] *macci,* பெ.(n.) மச்சு[4] பார்க்க (சங். அக.); see *maccu.*

**மச்சி**[2] *macci,* பெ.(n.) 1. பூனைக்காலி; a climbing plant. 2. கிச்சிலி; orange. 3. கணுக்கால் எலும்பு; ankle bone (சா.அக.).

**மச்சிக்கண்ணி** *macci-k-kanni,* பெ.(n.) பொன்னாங்கண்ணி; sessile plant (சா.அக.).



**மச்சிக்கொடி** *macci-k-koḍi,* பெ.(n.) பூனைக் காலி; a climbing plant (சா.அக.).

**மச்சிகை**[1] *maccigai,* பெ.(n.) மோர்; butter-milk (சா.அக.).

*[மத்திகை→மச்சிகை. மத்தினால் கடையப்பட்ட மோர்.]*

**மச்சிகை**[2] *maccigai,* பெ.(n.) ஈ (வின்.); fly.

**மச்சிப்பாசி** *macci-p-pāci,* பெ.(n.) மச்சியாச்சி பார்க்க; see *macci-y-ācci.*

**மச்சியாகிதம்** *macciyāgitam,* பெ.(n.) பொற்றிலை கரிப்பான்; a eclipse plant (சா.அக.).

**மச்சியாங்கண்ணி** *macciyāṅ-kaṇṇi,* பெ.(n.) பொன்னாங்கண்ணி; sessile plant (சா.அக.).

மறுவ. மச்சியாத்தி, மச்சியாச்சி, மச்சாக்கி.

**மச்சியாச்சி** *macciyācci,* பெ.(n.) மச்சியாங் கண்ணி பார்க்க; see *macciyāṅ-kaṇṇi.*

**மச்சிருங்கி** *macciruṅgi,* பெ.(n.) களாவிழுதி; *Indian ipecacuanha* (சா.அக.).

**மச்சில்** *maccil,* பெ.(n.) மச்சு[1] பார்க்க; see *maccu*[1].

**மச்சினேயம்** *maccinēyam,* பெ.(n.) கம்பம்புல்; a kind of grass (சா.அக.).

**மச்சு**[1] *maccu,* பெ.(n.) 1. மட்டமாகச் செங்கல் குத்திப்பாவிய மேற்றளம்; terraced roof, flat-roof. 2. மேற்றளத்திற் பாவும் பலகை (வின்); wainscot ceiling. 3. மேல்மாடம்; upper story. *"மச்சணி மாடங்கள்" (திவ். திருவாய். 5, 9, 3).* 4. உத்தரமட்டத்தின் மேலுள்ள பலகைத் தடுப்பு (வின்.); board partition for the gable of a room or boarded enclosure of an upper room, loft under the roof of a house.

**மச்சு**[2] *maccu,* பெ.(n.) மச்சுப்பொன் பார்க்க; see *maccu-p-poṉ.*

**மச்சு**[3] *maccu,* பெ.(n.) 1. குற்றம் (சங்.அக.); blemish, fault. 2. ஒழுங்கின்மை; that which is improper. *"மச்சிது செய்தார் யாரோ" (பெரியபு. கண்ணப்ப.108).*

*[மள்→மரு→மறு = குற்றம். மள்→மச்சு (மு.தா. 182).]*

**மச்சு**[4] *maccu,* பெ.(n.) பூனைக்காலி; cow-hage.

**மச்சுகத்தி** *maccu-katti,* பெ.(n.) மரஞ் செடிகளைச் சீர்படுத்தும் கத்தி; pruning knife (C.G.).

தெ. மட்சுகத்தி, க. மச்சுகத்தி.

*[மச்சு + கத்தி.]*



**மச்சுக்கல்** *maccu-k-kal,* பெ.(n.) மேற்றளத்திற் பதிக்கும் செங்கல் வகை (யாழ்.அக.); ceiling brick.

*[மச்சு+கல்.]*

**மச்சுக்கால்** *maccu-k-kāl,* பெ.(n.) விட்டத்தின் நடுக்குத்துக் கால் (வின்.); king-post.

*[மச்சு+கால்.]*

**மச்சுப்பாவு-தல்** *maccu-p-pāvu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. மேற்றளத்தைப் பலகை முதலியவற்றால் மூடுதல்; to cover the floor of an upper storey with planks, bricks, etc. 2. மேலிடத்தைப் பலகையாலடைத்தல்; to make a board ceiling.

*[மச்சு+பாவு-, பரவு → பாவு-,]*

**மச்சுப்போ-தல்** *maccu-p-pō-,*8 செ.கு.வி. (v.i.) 1. மக்குதல்; to decay, rot. 2. சோறு குழைதல் (யாழ்ப்.); to be reduced to a mash by over-boiling, a rice.

*[மை-தல்→மை→மச்சு + போ-,]*

**மச்சுவா** *maccuvā,* பெ.(n.) ஏதம் நிகழும் போது பயன்படுத்திக் கொள்வதற்காகத் தோணியில் வைத்திருக்கும் சிறு படகு (க.ப.அக.); life boat.

**மச்சுவீடு** *maccu-vīḍu,* பெ.(n.) 1. மேற்றள முள்ள கட்டிடம்; house with a terraced roof. 2. பலகையடைப்புள்ள மேன்மாடி வீடு (வின்.); house with a wainscot ceiling.

*[மச்சு + வீடு.]*



**மச்சை**[1] *maccai,* பெ.(n.) அம்பெய்தற்குரிய குறி (வின்.); target.

**மச்சை**[2] *maccai,* பெ.(n.) மச்சம்[2], 3 பார்க்க; see *maccam*[2], *3.*

**மச்சை**[3] *maccai,* பெ.(n.) 1. எலும்பினுள்ளுள்ள மூளை; marrow of the bones. 2. உட்காய்ச்சல் (யாழ்.அக.); internal fever. 3. மீனம்பர் (யாழ்.அக.); irey amber.

**மச்சையுருக்கி** *maccai-y-urukki,* பெ.(n.) எலும்பினுட்பசை வற்றுதல்; a trophy of bone marrow (சா.அக.).

**மச்சையெலும்பு** *maccai-y-elumbu,* பெ.(n.) 1. எருதின் மச்சை யெலும்பு; medulla rubre. 2. நிணவெலும்பு; marrow bone (சா.அக.).

**மச்சைவாதம்** *maccai-vādam,* பெ.(n.) நாரத்தை; bitter orange (சா.அக.).

**மசக்கம்** *maśakkam,* பெ.(n.) 1. மயக்கம்; swoon, unconsciousness. 2. மந்தம்; dullness, indolence. *அவன் மசக்கம் பிடித்தவன் (இ.வ.).* 3. மசக்கை பார்க்க; see *maśakkai.*

*[முல் (பொருந்தற் கருத்த வேர்)→முள்→முய்→முய→முயகு→முயங்கு. முயங்குதல் = பொருந்துதல், தழுவுதல், புணர்தல், செய்தல். முயங்கிக் கொள்ளுதல் = கணவனும் மனைவியுமாக வாழ்தல். முயங்கு→முயக்கு = தழுவுகை. முயக்கு→முயக்கம் = தழுவுகை, புணர்ச்சி, தொடர்பு. முயக்கு→மயக்கு = போர் செய்கை, கலக்கம். மயக்கு→மயக்கம் = கலப்பு, ஒரு வேற்றுமையுருபு மற்றொரு வேற்றுமைப் பொருளிற் கலத்தல் (வேற்றுமை மயக்கம்). எழுத்துப் புணர்ச்சி, இருபாற் கலப்பாகிய அலி, அறிவின் திரிபு, அறியாமை, காமநோய், உணர்விழப்பு. மயங்கு→மசங்கு→மசக்கு→மசக்கம் (வே.க.4:57).]*

மசக்கல் *mašakkal*, பெ.(n.) மசங்கல், 1 பார்க்க; see *mašangal*.

*[மயக்கம் →மசக்கம் →மசக்கல்]*

மசக்கி *mašakki*, பெ.(n.) அழகாலும் தளுக்காலும் மயக்குபவள் (கொ.வ.); showily attractive woman.

*[மயக்கி→மசக்கி.]*

மசக்கிவைத்தல் *mašakki-vaittal*, பெ.(n.) நிலத்தை சீர்செய்து சமப்படுத்தி, நல்ல விளைநிலமாக செய்து வைத்தல்; reform the land meliorate. *சங்கரப்பாண்டியன் மாறஞ்துவனன் சிவ பத்தன் மசக்கி வைத்த நிலத்துக்கு கீழ் பாற்கெல்லை இத்தேவர் திருவிளக்கு (தெ.இ.க.தொ.19, கல்.372–3).*

மசக்கு–தல் *mašakku-*, 5 செ.குன்றாவி.(v.t.) 1. மயங்கச் செய்தல்; to charm, bewitch. *"லீலை யிலேயுற முறை மசக்கவும்" (திருப்பு.338).* 2. குழப்புதல்; to confuse, perplex. 3. ஆடையைக் கஞ்சிப் பற்று நீங்கும்படி கசக்குதல்; to crumple, as a cloth to get out the stiffening.

*[முல் (பொருந்தற் கருத்து வேர்)→முள்→முய் →முய→முயகு→முயங்கு→மயங்கு→மசங்கு→மசக்கு (வே.க.4:57).]*

மசக்குப்பரவிடு–தல் *mašakku-p-para viḍu-*, 18 செ.குன்றாவி.(v.t.) ஐயமுறப்படுதல்; to be confused, as regarding identity. *"தன்னொடு மசக்குப் பரவிடலாம் படியான தேவ சாதியையும்" (ஈடு.2, 2, 5).*

*[மயக்கு → மசக்கு + பரவிடுதல்.]*

மசக்கை *mašakkai*, பெ.(n.) 1. கருவுற்ற பெண்ணுக்கு உண்டாகும் மயக்கம்; morbid longings of a pregnant woman. 2. சூதகக் கட்டு (பைஷஜ. 258); amenorrhoea.

*[மயங்கு → மசங்கு → மசக்கு → மசக்குதல் = மயங்கச் செய்தல், குழப்புதல். மசக்கு→மசக்கம் →மசக்கை (வே.க.4:57).]*

மசக்கைக்காரி *mašakkai-k-kāri*, பெ.(n.) மசக்கையாயிருக்கும் கருவுற்ற பெண்; pregnant woman suffering from morning sickness.

*[மசக்கை + காரி.]*

மசக்கைப்பண்டம் *mašakkai-p-paṇḍam*, பெ.(n.) கருவுற்ற பெண்கள் மசக்கைக் காலத்தில் விரும்பும் தின்பண்டம்; special articles of food, desired by pregnant women.

*[மசக்கை + பண்டம்.]*

மசகம்¹ *mašagam*, பெ.(n.) 1. கொசுகு (பிங்.); gnat, mosquito. *"மசகந்தர மென்னலாய்" (அஷ்டப். திருவேங்கடத். 59).* 2. நீர்த்துருத்தி (யாழ்.அக.); squirt.

*[மசகு →மசகம்.]*

மசகம்² *mašagam*, பெ.(n.) மயிர் (யாழ்.அக.); hair.

*[மள் → (மய்) மை = கருமை, முகில், காராடு, கரிய குழம்பு. மை→மயி →மசி = கரியகுழம்பு (தஞ்சை நாட்டார் எழுதும் மையை மசி யென்றே கூறுவர்). மசி → மசகு = வண்டி மை. மசகு → மசகம் (மு.தா.181).]*

மசகம்³ *mašagam*, பெ.(n.) மயக்கம் (யாழ். அக.); confusion.

*[மயக்கம்→மசக்கம்→மசகம்.]*

மசகரி *maśakari,* பெ.(n.) 1. மசகாரி (சிலப்.6, 169, அரும்.பாடபேதம்) பார்க்க; see *maśakāri.* 2. திரை (இ.வ.); curtain.

மசகவரி *maśaga-vari,* பெ.(n.) மசகாரி (சீவக.838, உரை.பாடபேதம்) பார்க்க; see *maśakāri.*

மசகாரி *maśakāri,* பெ.(n.) சித்திரப் பணி எழுதியதும் கொசுகுகளை விலக்குவதுமான அமளித் திரை (சிலப்.6, 169, அரும்) (சீவக. 838, உரை); decorated bed-curtain for protection against mosquitoes.

மசகி *maśagi,* பெ.(n.) அத்தி பார்க்க; see *atti.*

மசகிற்புள் *maśagiṟ-puḷ,* பெ.(n.) கடற்பறவை வகை (வின்.); a species of sea-gull.

மசகு[1]-தல் *maśagu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. சுணங்கி நிற்றல்; to linger, loiter, to hang about designedly. 2. மனந்தடுமாறுதல்; to hesitate, to be in suspence, to be undecided or undetermined.

*[மசக்கு → மசகு.]*

மசகு[2] *maśagu,* பெ.(n.) வைக்கோற் கரியோடு எண்ணெய்த்துணி கலந்து கட்டை வண்டியின் அச்சிலிடும் மை; mixture of oil and burnt straw, used as grease for country carts.

தெ. மசக.

*[மள் → (மய்) மை = கருமை, முகில், காராடு, கரியகுழம்பு. மை → மயில் = கரு (நீல) நிறத் தோகையுள்ள பறவை. மயில் → மயிலை = கருமை கலந்த வெள்ளைக் காளை. மை → மயிர் → கரியமுடி. மை → மயி → மசி = கரிய குழம்பு. மசி → மசகு.]*

மசங்கல் *maśaṅgal,* பெ.(n.) 1. பகலும் இரவும் கலக்கும் அந்திப்பொழுது (வின்.); twilight of evening. 2. மயக்கம்; confusion, perplexity. *"மசங்கற் சமண் மண்டைக்கையர்" (தேவா.567, 10).*

*[மயங்கு → மசங்கு → மசங்கல் (வே.க.4:57).]*

பகலும் இரவும் மயங்கும் - அந்திப் பொழுதை அந்தி மயங்கும் நேரம் என்னும் வழக்கை நோக்குக.

மசங்கு-தல் *maśaṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. மயங்குதல் (திவா.567, 10); to become confused, to be doubtful. 2. ஒளி குறைதல்; to become dull, to lose lustre. *'மேனியில் வன்னமு மசங் காதோ' (இராமநா. அயோத். 11).* 3. கசங்குதல் (வின்.); to be crumpled, to grow soft by use.

*[மயங்கு → மசங்கு-,]*

மசடன் *maśaḍaṉ,* பெ.(n.) குணங்கெட்டவன்; person of bad character. *"அசடனை மசடனை ஆசார வீணனை" (திருப்பு.557).*

*[மை → மயி → மசி → மச → மசடன்.]*

மசண்டை *maśaṇḍai,* பெ.(n.) மசங்கல், 1 பார்க்க; see *maśaṅgal.*

*[மச → மசள் → மசண்டை.]*

மசண்டைப்பொழுது *maśaṇḍai-p-poḻudu,* பெ.(n.) மசங்கல், 1 பார்க்க; see *maśaṅgal.*

*[மசண்டை + பொழுது.]*

மசணை *maśaṇai,* பெ.(n.) 1. மந்தன்; dullard, indolent person. 2. நெல்வகை; a kind of paddy.

மசதி *maśadi,* பெ.(n.) கடுகு ரோகிணி; medicinal root (சா.அக.).

மசந்தகடுக்கை *maśanda-kaḍukkai,* பெ.(n.) செழுமலர்க் கொன்றை; large flower cassie (சா.அக.).

மசநாய்க்கடி *maśa-nāy-k-kaḍi,* பெ.(n.) வெறிநாய்க்கடி; rabis do bite hydrophobia (M.L.).

*[மச + நாய் + கடி.]*

மசம்[1] *maśam,* பெ.(n.) 1. அளவு; measure. 2. சினம்; anger. 3. ஒலி; sound (சா.அக.).

மசம்[2] *maśam,* பெ.(n.) கொசுகு (வின்.); mosquito (சா.அக.).

மசகு[1] *maśagu,* பெ.(n.) நடுக்கடலில் திசை தெரியாது ஆழ்ந்தகன்ற இடம் (யாழ்ப்.); deep sea, far from shore, where there is no mark for guidance.

*[மயங்கு→மசகு.]*

மசகு[2]-தல் *maśagu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. கலங்கி நிற்றல்; to linger, loiter; to hang about designedly. 2. மனந்தடுமாறுதல்; to hesitate; to be in suspense; to be undecided or undetermined.

*[முள்→முய்→முய→முயகு→மயகு→மசகு (வே.க.(4:57).]*

மசமச-த்தல் *maśa-maśa-,* 4 செ.கு.வி.(v.i.) 1. தினவெடுத்தல் (இ.வ.); to itch. 2. செயலை முடிக்க காலந்தாழ்த்தல்; to be slow and indecisive. 3. தெளிவற்று கலங்கலான பார்வை; uncleared sight.

*[மய→மயத்தல் = மயங்குதல். மயமயத்தல் = தொடர்ந்து மயக்கத்தை ஏற்படுத்துதல். மயமயத்தல் →மசமச-த்தல்.]*

மசமசவெனல் *maśamaśa-v-eṉal,* பெ.(n.) 1. தினவெடுத்தற் குறிப்பு; itching. 2. தீர்மானமின்றி இழுத்தற்குறிப்பு; wavering, as in speech or action. 3. தெளிவற்ற பார்வையுணரல்; to feel glaring sight.

*[மயமய + எனல்→மசமச + எனல்→மச மசவெனல்.]*

மசமசெனல் *maśa-maśeṉal,* பெ.(n.) மசமச வெனல் பார்க்க; see *maśamaśa-v-enal.*

மசரகம் *maśaragam,* பெ.(n.) குருவி; sparrow (சா.அக.).



மசரதம் *maśa-radam,* பெ.(n.) கானல் நீர், பேய்த்தேர்; mirage. *"மசரத மனையவர் வரமும்" (கம்பரா.திருவவ.22).*

*[மச + Skt. ரதம்.]*

மசரைநோய் *maśarai-nōy,* பெ.(n.) கால்நடை நோய் வகை (பாலவா.1041); a disease of cattle.

மசரோகம் *maśarōgam,* பெ.(n.) 1. மறு; wart. 2. பாலுண்ணி; lichen (சா.அக.).

மசவு *maśavu,* பெ.(n.) மசகு[2] பார்க்க; see *maśagu.*

*[மசகு→மசவு.]*

மசறி *masari*,பெ.(n.) மீன் வகை; a kind of fish. *"நெற்றலி யசலிலை மசறி" (குருகூர்ப். 20).*

மசாரகம் *masāragam*,பெ.(n.) இந்திர நீலமணி; a kind of blue stone (சா.அக.).

மசால் *masāl*,பெ.(n.) மசாலை பார்க்க; see *masālai.*

*[மசாலை→மசால் (கொச்சை).]*

மசாலை[1] *masālai*, பெ.(n.) கறிச்செலவு; condiments, spices, curry -stuffs.

மசாலை[2] *masālai*,பெ.(n.) குதிரை முதலிய விலங்குகட்குக் கொடுக்கும் மருந்து; drugs mashed and given to horse and other animals.

மசாலைமேய்-த்தல் *masālai-mēy-*, 1 செ.குன்றாவி.(v.t.) குதிரை முதலிய விலங்குகட்கு மசாலை கொடுத்தல் (வின்.); to give *masālai* as to a horse.

*[மசாலை + மேய்-.]*

மசானக்கரை *masāna-k-karai*, பெ.(n.) மசானம் பார்க்க; see *masānam.*

*[மயானம்→மசானம் + கரை.]*

மசானக்கொள்ளை *masāna-k-kollai*, பெ.(n.) பகற்கொள்ளை; day-light robbery. *"மாயாவி தேடிய முதலெல்லாம் மசானக் கொள்ளையாய்ப் போகிறது" (பழ.).*

*[மயானம்→மசானம் + கொள்ளை.]*

மசானச்சாம்பல் *masāna-c-cāmbal*, பெ.(n.) பிணஞ்சுட்ட சாம்பல்; ashes of the corpse or dead body (சா.அக.).

*[மயானம் + சாம்பல்.]*

மசானம் *masānam*, பெ.(n.) 1. சுடுகாடு; cremation ground, burial place. 2. சுடலை; cremation ground.

*[மயானம் → மசானம். மாய்தல் = மறைதல், இறத்தல்.]*

மசி[1]-தல் *masi-*, 2 செ.கு.வி.(v.i.) 1. நெரநெர வென்றிராமல் வழுவழுப்பாயிருத்தல்; to be mashed, worked about with a ladle, reduced to pulp. 2. வளைந்து கொடுத்தல், விட்டுக்கொடுத்தல்; to yield, to be placable. *அவன் இலகுவிலே மசியமாட்டான் (உ.வ.).*

*[மத்து→மத்தி. மத்தித்தல் = மத்தினால் கடைந்து கூழாக்குதல். மதி→மசி; மசித்தல் = குழைத்தல். மசிதல் = குழைதல்.]*

மசி[2]-த்தல் *masi-*, 5 செ.குன்றாவி.(v.t.) 1. கடைந்து அல்லது பிசைந்து குழையச் செய்தல்; to mash, as food, to reduce to a thin pulpy consistence, as greens, fruits. 2. மைக் கட்டியை அல்லது களிம்பை நீரிற் குழைத்து எழுதுமை யுருவாக்குதல்; to prepare by mixing, as ink. *"மசித்து மையை விள்ள வெழுதி" (பதினொ. திருவாலங். மூத்.2).*

*[மத்து→மத்தி→மதி→மசி; மத்தித்தல் மத்தினாற் கடைதல். மதித்தல் = குழைத்தல்.]*

மசி[3] *masi*, பெ.(n.) 1. கரிய குழம்பு; liquid of thick consistency, paste in ink. *"மசிகலந் தெழுதப்பட்ட" (சூளா.தூது.83).* 2. மசகு[2] பார்க்க; see *masagu.*

*[மள்→(மய்) மை→மசி. மை = கருமை, முகில், காராடு, கரிய குழம்பு. மை→மசி.]*

மசிக்குப்பி *mašai-k-kuppi,* பெ.(n.) மசிக்கூடு பார்க்க (இ.வ.); see *maši-k-kūḍu.*

*[மசி[3]+ குப்பி.]*

மசிக்கூடு *maši-k-kūḍu,* பெ.(n.) எழுதுமை வைக்குங் குப்பி; ink-bottle, ink-stand.

*[மசி[3]+கூடு.]*




மசிகம் *mašigam,* பெ.(n.) புற்று (சங்.அக.); anthill.

மசிதானி *maši-tāṉi,* பெ.(n.) மசிக்கூடு பார்க்க; see *maši-k-kūḍu.*

மசிபதம் *maši-padam,* பெ.(n.) இறகுத் தூவல் (யாழ்.அக.); quill-pen.

மசிமையிலி *mašimai-y-ili,* பெ.(n.) வெட்க மில்லாதவன்; shameless person. *"வஞ்சகப் பேய்ச்சி பா லுண்ட மசிமையிலீ" (திவ்.நாய்ச்.3, 9),*

*[மசிமை + இலி.]*

மசியல் *mašiyal,* பெ.(n.) கடைந்து செய்த உணவு முதலியன (வின்.); anything mashed, mash, pulp.

*[மத்தி →மதி→மசி→மசியல்.]*

மசிர் *mašir,* பெ.(n.) 1. மயிர்; hair. 2. அறுகு; tender bermuda-grass.

*[மள் →(மய்) மை = கருமை, முகில், காராடு, கரிய குழம்பு. மை → மயில் = கரு (நீல) நிறத் தோகையுள்ள பறவை, மை →மயிர் = கரிய முடி (மு.தா.181), மயிர்→மசிர் (கொ.வ.).]*

மசிரன் *maširaṉ,* பெ.(n.) கூல (தானிய)க் கதிரை அரிக்கும் பூச்சி வகை; insect that eats into the stalks of dry crops.

*[மசிர்→மசிரன்.]*

மசில் *mašil,* பெ.(n.) மஞ்சில்[2] பார்க்க; see *mañcil[2].*

மசினை *mašiṉai,* பெ.(n.) சீமைச் சணல் (புதுவை.); hemp.

மசுக்கரம் *mašukkaram,* பெ.(n.) மூங்கில் (மலை.); spiny bamboo.

மசுரம் *mašuram,* பெ.(n.) கடலை (சங்.அக.); bengal gram (சா.அக.).

மசுரன் *mašuraṉ,* பெ.(n.) மசிரன் பார்க்க; see *maširaṉ.*

மசூரிகை *mašūrigai,* பெ.(n.) 1. ஒருவகை நோய்; a kind of disease. 2. கடலைக் கட்டி; boils of the size of gram (சா.அக.).

மசூரிப்பருப்பு *mašūri-p-paruppu,* பெ. (n.) ஒருவகைப் பருப்பு; a kind of pulse (சா.அக.).

மசை *mašai,* பெ.(n.) 1. மசகு[2] பார்க்க; see *mašagu. "வண்டிக்கு மசை போட்டாய் விட்டதா" (உ.வ.).* 2. மூடன் (இ.வ.); fool, idiot.

*[மசி→மசகு→மசை (கொச்சை).]*

**மஞ்சக்குடி** *mañja-k-kuḍi*, பெ.(n.) அறந்தாங்கி வட்டத்தில் திருப்புரவாசல் அருகில் உள்ள ஊர்; a place near *Thiruppuravasal* in *Aranthangi* Taluk. *"மஞ்சலக்குடிப்பற்றில் ஏம்பலான கலியுகராமநல்லூர்" (தெ.க.தொ. 8, கல். 210–2).*

**மஞ்சக்குளிப்பான்பணம்** *mañja-k-kuḷippāṉ-paṇam*, பெ.(n.) நாணய வகை; a kind of coin (Tr.Rev.m.ii,217).

**மஞ்சகம்**[1] *mañjagam*, பெ.(n.) கட்டில் (சங். அக.); bedstead.

**மஞ்சகம்**[2] *mañjagam*, பெ.(n.) மஞ்சுகம் பார்க்க (சங்.அக.); see *mañjugam.*

**மஞ்சகீடம்** *mañja-kīḍam*, பெ.(n.) மூட்டைப் பூச்சி (நாநார்த்த.1048); bug.

**மஞ்சட்கச்சி** *mañjaṭ-kacci*, பெ.(n.) மஞ்சணிறக் காய் காய்க்குந் தென்னை வகை; a species of coconut, bearing yellow nuts.

**மஞ்சட்கடம்பு** *mañjaṭ-kaḍambu*, பெ.(n.) நீண்ட மரவகை; a kind of cadamba tree (L.).

*[மஞ்சள் + கடம்பு. கடம்பு = மரவகை.]*

**மஞ்சட்கடிதம்** *mañjaṭ-kaḍidam*, பெ.(n.) மஞ்சள்கடிதம் பார்க்க; see *mañjaḷ-kaḍidam.*

*[மஞ்சள் + கடிதம்.]*

**மஞ்சட்கடிதாசி** *mañjaṭ-kaḍidāśi*, பெ.(n.) மஞ்சள்கடிதம் பார்க்க; see *mañjaḷ-kaḍidam.*

*[மஞ்சள் + கடிதாசி.]*

**மஞ்சட்கடுக்காய்** *mañjaṭ-kaḍukkāi*, பெ.(n.) வரிக்கடுக்காய்; a variety of gallnut (சா.அக.).

*[மஞ்சள் + கடுக்காய்.]*

**மஞ்சட்கடுதாசிகொடுத்தல்** *mañjaṭ-kaḍudāci-koḍuttal*, பெ.(n.) கடன் இறுக்க முடியாத நிலையேற்படுகை(கொ.வ.); becoming insolvent.

*[மஞ்சள்கடுதாசி + கொடுத்தல்.]*

**மஞ்சட்கரிசாலை** *mañjaṭ-kari-sālai*, பெ.(n.) மஞ்சள் பூவிடும் ஒருவகைக் கரிசலாங்கண்ணி (சா.அக.); a variety of eclipse plant bearing yellow flowers.

மறுவ. மஞ்சட்கரிப்பான், பொற்றிலைக் கரிப்பான்.

*[மஞ்சள் + கரிசாலை.]*



**மஞ்சட்கரு** *mañjaṭ-karu*, பெ.(n.) முட்டையின் மஞ்சணிறமான உள்ளீடு (வின்.); yolk of an egg.

*[மஞ்சள் + கரு.]*

**மஞ்சட்கல்**[1] *mañjaṭ-kal*, பெ.(n.) சொரிப் புள்ளிக் கல் (சா.அக.); a kind of mineral salt.

மஞ்சட்கல்² mañjaṭ-kal, பெ.(n.) மஞ்சள் நிறமுடைய கல்; a kind of yellow stone.

[மஞ்சள் + கல்.]

மஞ்சட்கலவாய் mañjaṭ-kalavāy, பெ.(n.) செந்நீல நிறமுடையதும் 10 1/2 விரலம் வளரக் கூடியதுமான கடல் மீன் வகை; a sea fish deep purplish-blue, attaining 10 1/2 inch in length, *Serranus flavocaeruleus*.

மஞ்சட்களவாணி mañjaṭ-kaḷavāṇi, பெ. (n.) மஞ்சட்டிருடி பார்க்க; see *mañcaṭṭiruḍi* (m.m.).

[மஞ்சள் + களவாணி.]

மஞ்சட்கனிச்சி mañjaṭ-kaṉicci, பெ.(n.) எட்டி (சா.அக.); nuxuomica.

மஞ்சட்காசித்தும்பை mañjaṭ-kāsi-t-tumbai, பெ.(n.) 1. ஒருவகை நோய்; a kind of disease. 2. பொன்னிறத் தும்பை; flowering plant with yellow flower (சா.அக.).

மஞ்சட்காஞ்சி mañjaṭ-kāñji, பெ.(n.) மர வகை; elliptic acuminate small leaved gamboge m.tr. *Garcinia timberti* (L.).

[மஞ்சள் + காஞ்சி.]

மஞ்சட்காணி mañjaṭ-kāṇi, பெ.(n.) மண விழாவின் போது பெண்ணுக்குப் பெற்றோர் அன்பளிப்பாக வழங்கும் நிலம்; settlement assignment of land to a daughter, a kind of dowry (C.G.).

[மஞ்சள் + காணி.]

மஞ்சட்காப்பு mañjaṭ-kāppu, பெ.(n.) 1. நெற்றியிலிடும் மஞ்சட் பொட்டு; mark of turmeric paste on the forehead, considered a charn. 2. கோயிற் றெய்வங்களுக்குச் சாத்தும் அரைத்த மஞ்சள் விழுது; turmeric paste with which a deity is coated. *"நெய்யிலை யடைக்காய் மஞ்சட் காப்பு" (உபதேசா. சிவத்துரோ.498).* 3. குழந்தைக்கு முதலெழுத்தறிமுகஞ் செய்யும் போது எழுதும் ஒலைக்கு மஞ்சள் பூசுகை; smearing with turmeric the ola leaf on which the first lesson of a child is written. 4.தெய்வங்களுக்கு நேர்த்திக் கடன் செலுத்துவோர் கையில் கட்டும் மஞ்சளில் தோய்த்த துணி; a piece of cloth wet in the turmaric paste tied on the forehand at the occassion of vow made to deity. 5. வினைத் தொடக்கத்தில் கையில் கட்டும் காப்பு மஞ்சள்; to tie an amulet, a yellow string on the arm in token of a vow and as a pledge of its fulfilment.

[மஞ்சள் + காப்பு.]

மஞ்சட்காமாலை mañjaṭ-kāmālai, பெ.(n.) குருதியில் பித்தநீர் கலப்பதால் கண்களும் தோலும் மஞ்சள் நிறமடைந்து காணப்படும் ஒரு நோய்; jaundice icterus.

[மஞ்சள் + காமாலை.]

மஞ்சட்காவி mañjaṭ-kāvi, பெ.(n.) மஞ்சள் நிறமான காவி; ochre of yellow colour.

[மஞ்சள் + காவி.]

**மஞ்சட்காளான்** *mañjaṭ-kāḷāṉ,* பெ.(n.) காளான் வகை (வின்.); a yellow mushroom.

*[மஞ்சள் + காளான்.]*

**மஞ்சட்கிலுகிலுப்பை** *mañjaṭ-kilu-kiluppai,* பெ.(n.) பெருங்கிலுகிலுப்பை (சித்.அக.); a kind of mattlewort.

**மஞ்சட்கிழங்கு** *mañjaṭ-kiḻaṅgu,* பெ.(n.) 1. கழிச்சற் (பேதி)க் கிழங்கு; rhuberb. 2. குளிக்குமஞ்சள்; turmeric used by women while bathing (சா.அக.).

**மஞ்சட்குங்குமத்துக்கழை-த்தல்** *mañjaṭ kuṅgumattukkaḻai-,* 4 செ. குன்றாவி. (v.t.) நற்செயல்களில் மஞ்சள் தாம்பூலம் முதலியன பெற்றுக் கொள்ளுதற்குப் பெண்டிரை அழைத்தல்; to invite women folk, on an auspicious occasion when saffron, red powder, betel, etc, are given.

*[மஞ்சள்குங்குமத்துக்கு + அழை-,]*

**மஞ்சட்குச்சி** *mañjaṭ-kucci,* பெ.(n.) மர மஞ்சள்; tree turmeric.

*[மஞ்சள் + குச்சி.]*

**மஞ்சட்குப்பஞ்செட்டி** *mañjaṭ-kuppañceṭṭi,* பெ.(n.) மஞ்சம்பத்துச்செட்டி பார்க்க (இ.வ.); see *mañjambattu-c-ceṭṭi.*

**மஞ்சட்குருவி** *mañjaṭ-kuruvi,* பெ.(n.) 1. தூக்கணங் குருவி; weaver-bird (m.m.1021). 2. குருவி வகை; turmeric bulbul, Ixos luteolus (m.m.102).

*[மஞ்சள் + குருவி.]*



**மஞ்சட்குளி¹-த்தல்** *mañjaṭ-kuḷi-,* 4 செ.கு.வி. (v.t.) 1. மகளிர் நீராடும் போது உடலுக்கு மஞ்சள் தடவி முழுகுதல்; to smear the face and the body with a thin paste of turmeric, as women in bathing. 2. பெண்டன்மையனாகுதல்; to consider oneself as a woman, said of a man in devision. *'அந்தச் செயலை முடிக்காமற் போனால் நான் மஞ்சட் குளிக்கிறேன்' (இ.வ.).* 3. மர முதலியன மஞ்சள் நிறங் கொள்ளுதல்; to become yellow, as trees in water-logged.

*[மஞ்சள் + குளி-த்தல்.]*

**மஞ்சட்குளி²-த்தல்** *mañjaṭ-kuḷi-,* 4 செ.கு.வி. (v.i.) பகட்டாய் வாழ்தல்; to lead a fashionable life. *"கொஞ்சி நீ மஞ்சட் குளிக்கிறாய்" (பஞ்ச.திருமுக.1217).*

*[மஞ்சள் + குளி-,.]*

**மஞ்சட்குளி³** *mañjaṭ-kuḷi,* பெ.(n.) 1. மஞ்சள் தேய்த்துக் குளிக்கை; bath after smearing the face and the body with turmeric paste. *"மஞ்சட் குளியை மறவாதே" (விறலிவிடு.).* 2. மஞ்சணீர்விளையாட்டு பார்க்க; see *mañjaṉīr-viḷaiyāṭṭu.*

*[மஞ்சள் + குளி.]*

**மஞ்சட்குறவான்** *mañjaṭ-kuṟavāṉ,* பெ.(n.) ஒருவகைக் கடல் மீன்; a kind of sea fish.

*[மஞ்சள் + குறவான்.]*

**மஞ்சட்கூவாளி** *mañjaṭ-kūvāḷi,* பெ.(n.) மஞ்சளரளி, மஞ்சள் பூப்பூக்கும் அரளிச்செடி; a plant with yellow flowers.

*[மஞ்சள் + கூவாளி.]*

**மஞ்சட்கெளிறு** *mañjaṭ-keḷiṟu,* பெ.(n.) கெளிற்று மீன் வகை; a fish of golden colour.

*[மஞ்சள் + கெளிறு.]*

**மஞ்சட்கொத்து** *mañjaṭ-kottu,* பெ.(n.) கிழங்குடன் கூடிய மஞ்சட் செடி; turmeric plant with its cluster of tubers, as auspicious. *'பொங்கலுக்குப் படைக்க மஞ்சட் கொத்து வாங்கி வா' (உ.வ.).*

*[மஞ்சள் + கொத்து.]*

**மஞ்சட்கொம்பு** *mañjaṭ-kombu,* பெ.(n.) மஞ்சட்டேறு பார்க்க (இ.வ.); see *mañjaṭṭēṟu.*

*[மஞ்சள் + கொம்பு.]*

**மஞ்சட்கொழுப்பன்** *mañjaṭ-koḻuppaṉ,* பெ.(n.) பறவை வகை; Indian oriole, oriolus kundoo.

**மஞ்சட்கொன்றை** *mañjaṭ-koṉṟai,* பெ.(n.) 1. சிறுமரவகை; sulphur-flowered senna. 2. பிரம்புக் கொன்றை; siamese tree senna.

*[மஞ்சள் + கொன்றை.]*

**மஞ்சட்கோங்கு** *mañjaṭ-kōṅgu,* பெ.(n.) சடைக்கோங்கு மரம்; a variety of silk cotton tree.

*[மஞ்சள் + கோங்கு.]*

**மஞ்சட்கோழிமீன்** *mañjaṭ-kōḻi-mīṉ,* பெ.(n.) கடல் மீன் வகை; a sea-fish buff, vertically banded; *Chaetodon octofasciatus.*

*[மஞ்சள் + கோழிமீன்.]*

**மஞ்சட்சாமந்தி** *mañjaṭ-cāmandi,* பெ.(n.) செவ்வந்தி வகை (வின்.); yellow chrysan-*Themum coronation.*

*[மஞ்சள் + சாமந்தி.]*

**மஞ்சட்சாரி** *mañjaṭ-cāri,* பெ.(n.) மஞ்சள் வெற்றிலை; yellow betel leaf (சா.அக.).

*[மஞ்சள் + சாரி.]*

**மஞ்சட்சாரை** *mañjaṭ-cārai,* பெ. (n.) 1. பாம்பு வகை (சீவரட்.); yellow rat-snake, *Zaolys mucos* . 2. நச்சுப்பாம்பு வகை; rock snake, *Bungarus fasciatus*, as having yellow marks on the sides of its head (m.m.751).

*[மஞ்சள் + சாரை.]*



மஞ்சட்சிட்டு *mañjaṭ-ciṭṭu,* பெ.(n.) தூக்கணாங் குருவி (இ.வ.); weaver bird.

*[மஞ்சள் + சிட்டு.]*

மஞ்சட்சித்தகத்தி *mañjaṭ-cittakatti,* பெ.(n.) மஞ்சட் செம்பை; a small tree which bears yellow flowers (சா.அக.).

மஞ்சட்சித்திரப்பூ *mañjaṭ-cittirappū,* பெ.(n.) செவ்வந்திப் பூ; yellow chamomile (சா.அக.).

மஞ்சட்சீனக்கிழங்கு *mañjat-cīṉa-k-kiḻaṅgu,* பெ.(n.) மருந்துச் செடி வகை; indian rhubarh (சா.அக.).

*[மஞ்சள் + சீனக்கிழங்கு.]*

மஞ்சட்செம்முள்ளி *mañjaṭ-cemmuḷḷi,* பெ.(n.) 1. செம்முள்ளி; thorny nail-dye. 2. செம்முள்ளி வகை; leser yellow nail-dye s.sh., *Barleria cuspidata.* 3. நீலம்பரம்; densespiked blue nail - dye (m.m.558).

*[மஞ்சள் + செம்முள்ளி.]*

மஞ்சட்செவ்வந்தி *mañjaṭ-cevvandi,* பெ.(n.) மஞ்சட்சாமந்தி பார்க்க (வின்.); see *mañjaṭ-cāmandi.*

*[மஞ்சள் + செவ்வந்தி.]*

மஞ்சட்சேவிதம் *mañjaṭ-cēvidam,* பெ.(n.) மக்காச்சோளம் பார்க்க; see *makkā-c-cōḷam* (சா.அக.).

மஞ்சட்சோகை *mañjaṭ-cōgai,* பெ.(n.) சோகை நோய் வகை; yellow sickness, cholorosis (M.L.).

*[மஞ்சள் + சோகை.]*

மஞ்சட்சோளம் *mañjaṭ-cōḷam,* பெ.(n.) சோள வகை (விவசா.3); a kind of maize.

*[மஞ்சள் + சோளம்.]*

மஞ்சட்டணக்கு *mañjaṭṭaṇakku,* பெ.(n.) கோங்கிலவு; false tragacanth.

*[மஞ்சள் + தணக்கு.]*

மஞ்சட்டாழை *mañjaṭṭāḻai,* பெ.(n.) தாழை வகை (சித்.அக.); a kind of aloe.

*[மஞ்சள் + தாழை.]*

மஞ்சட்டி *mañjaṭṭi,* பெ.(n.) மஞ்சிட்டி பார்க்க (வின்.); see *mañjiṭṭi.*

மஞ்சட்டிச்சேலை *mañjaṭi-c-cēlai,* பெ.(n.) சேலை வகை (தெ.க.தொ.7:22); a kind of saree.

*[மஞ்சட்டி + சேலை.]*

மஞ்சட்டிரளை *mañjaṭṭiraḷai,* பெ.(n.) கணவனை இழந்தவள் ஈமச்சடங்கில் சுற்றத்தார்க்கு வழங்கும் மஞ்சளுருண்டை; ball of turmeric paste given by a widow to her relations at the cremation of her husband, as a token of her blessing.

*[மஞ்சள் + திரளை. திரள் →திரளை.]*

மஞ்சட்டிருடி *mañjaṭṭiruḍi,* பெ.(n.) முகமும் மூக்கும் மஞ்சள் நிறமாயுள்ள கழுகுவகை; dung kite, *Neophron perenopterus* (m.m.284).

*[மஞ்சள் + திருடி.]*

மஞ்சட்டுணி *mañjaṭṭuṇi,* பெ.(n.) மஞ்சணீரில் தோய்த்த சீலை (வின்.); cloth dipped in water tinged with turmeric, as auspicious.

*[மஞ்சள் + துணி.]*

மஞ்சட்டேறு *mañjaṭṭēṟu*, பெ.(n.) மஞ்சட் கிழங்குத் துண்டு (வின்.); small piece of turmeric.

மஞ்சட்டோறு *mañjaṭṭōṟu*, பெ.(n.) மஞ்சட்டேறு (வின்.) பார்க்க; see *mañjaṭṭēṟu*.

மஞ்சட்பட்டி *mañjaṭ-paṭṭi*, பெ.(n.) ஒருவகை மஞ்சட் பூண்டு; guiana golden funnel dog bane (சா.அக.).

மஞ்சட்பால்கொடு-த்தல் *mañjaṭ-pāl-koḍu-*, 4 செ.கு.வி.(v.i.) தத்தெடுத்துக் கொள்ளுதல்; to adopt a child (Loc.).

*[மஞ்சள் + பால் + கொடு-.]*

மஞ்சட்பாவட்டை *mañjaṭ-pāvaṭṭai*, பெ.(n.) மஞ்சணாறி பார்க்க (வின்.); see *mañjaṇāṟi*.

மஞ்சட்பாவாடை *mañjaṭ-pāvāḍai*, பெ.(n.) சிற்றூர்த் தெய்வங்களை வழிபடும்போது அணிவிக்கும் மஞ்சணீரில் தோய்த்த புத்தாடை; new cloth immensed or dipped in water tinged with turmeric, put on while worshipping village deities.

*[மஞ்சள் + பாவாடை.]*

மஞ்சட்பூ *mañjaṭ-pū*, பெ.(n.) பவள மல்லிகை; night flowering jasmine.

*[மஞ்சள் + பூ.]*

மஞ்சட்பூச்சு *mañjaṭ-pūccu*, பெ.(n.) மகளிர் குளிக்கும் போது மஞ்சளரைத்துப் பூசிக் கொள்ளுகை; rubbing the face and body with turmeric paste as woman in bathing.

*[மஞ்சள் + பூச்சு.]*

மஞ்சட்பூதைவேனை *mañjaṭ-pūtai-vēṉai*, பெ.(n.) ஒருவகை (கற்பக) மூலிகை; a rejuvenating plant which bear yellow flowers (சா.அக.).

மஞ்சட்பொரி *mañjaṭ-pori*, பெ.(n.) சொர்ண பேதி; a mineral dissolving gold (சா.அக.).

மஞ்சணத்தி *mañjaṇatti*, பெ.(n.) நுணா மரம்; a tree with fragrant flowers.

மஞ்சணம் *mañjaṇam*, பெ.(n.) பற்பொடி; dentifrice.

மஞ்சணாங்கு *mañjaṇāṅgu*, பெ.(n.) சோலை கொடுக்காய்ப் புளி; a kind of gamboge.

மஞ்சணாடி *mañjaṇāḍi*, பெ.(n.) வைரமணியின் குற்றங்களுள் ஒன்றாகிய மஞ்சணிறக் கீற்று; yellow streak, a flaw in diamond.

*[மஞ்சள் + நாடி.]*

மஞ்சணாத்தி *mañjaṇātti*, பெ.(n.) மஞ்சணாறி பார்க்க; see *mañjaṇāṟi*.

*[மஞ்சணாறி→மஞ்சணாத்தி.]*

மஞ்சணாதி *mañjaṇādi*, பெ.(n.) 1. மரவகை; Indian mulberry, s.tr. *morinda citirifolia*. 2. செடி வகை; dying mulberry, s.sh. *Morinda tinctoria*. 3. கொடி வகை; small ach root s.cl. *Morinda umballata*.

*[மஞ்சள் + நாறி.]*

மஞ்சணாற்றி *mañjaṇāṟṟi*, பெ.(n.) மஞ்சணாறி பார்க்க (வின்.); see *mañjaṇāṟi*.

*[மஞ்சணாறி→ மஞ்சணாத்தி→மஞ்சணாற்றி.]*

மஞ்சணாறி *mañjaṇāṟi,* பெ.(n.) ஒரு வகை மரம்; morinda umbellata.

மஞ்சணி *mañjaṇi,* பெ.(n.) வேலிப்பருத்தி (உத்தாமணி); a twining creeper.

மஞ்சணிப்பு *mañjaṇippu,* பெ.(n.) மஞ்சள் நிறம்; yellowness.

மஞ்சணீர் *mañjaṇīr,* பெ.(n.) 1. நற்காலங்களில் பயன்படுத்தும் மஞ்சட் கரைத்த நீர்; water mixed with turmeric and other ingredients, for use on auspicious occasions. 2. திருமணத்தில் விருந்தினர் மீது மஞ்சணீர் தெளிக்கும் நான்காம் நாள்; fourth day of a wedding, as the time for sprinkling turmeric water, as guests.

*[மஞ்சள் + நீர்.]*

மஞ்சணீர்குடிப்பி-த்தல் *mañjaṇīr-kuḍippi-,* 4 செ.குன்றாவி.(v.t.) தத்தெடுத்துக் கொள்ளுங் குழந்தையை மஞ்சணீர் குடிப்பிக்குஞ் சடங்கினைச் செய்தல் (குருபரம்.354); to make a child drink turmeric-mixed water, as a ceremonial rite in adoption.

*[மஞ்சள் + நீர் + குடிப்பி-.]*

மஞ்சணீர்ச்சீட்டு *mañjaṇīr-c-cīṭṭu,* பெ.(n.) தத்தெடுப்பதைக் குறிக்கும் ஆவணம்; deed of adoption.

*[மஞ்சள் + நீர் + சீட்டு.]*

மஞ்சணீர்சுற்று-தல் *mañjaṇīr-šuṟṟu-,* 5 செ.குன்றாவி.(v.t.) ஆளான (சமைந்த) பெண்ணிற்குச் சடங்கு செய்தல்; to celebrate the puberscence of a girl with the prescribed ceremonies.

*[மஞ்சள் + நீர் + சுற்று-.]*

மஞ்சணீர்த்திருவிழா *mañjaṇīr-t-tiru-viḻā,* பெ.(n.) இளவேனில் விழா; the spring festival.

*[மஞ்சள் + நீர் + திருவிழா.]*

மஞ்சணீர்நதி *mañjaṇīr-nadi,* பெ.(n.) மஞ்சணீராறு பார்க்க; see *mañja-ṇīrāṟu.*

*[மஞ்சள் + நீர் +* **Skt.** *நதி.]*

மஞ்சணீர்ப்பிள்ளை *mañjaṇīr-p-piḷḷai,* பெ.(n.) தத்தெடுத்துக் கொண்ட பிள்ளை; adopted child.

*[மஞ்சள் + நீர் + பிள்ளை.]*

மஞ்சணீர்விளையாட்டு *mañjaṇīr-viḷaiyāṭṭu,* பெ.(n.) விழா, திருமணம் முதலியவற்றின் முடிவில் மஞ்சணீரிறைத்து விளையாடுகை; play of sprinkling turmeric mixed water at the close of a festival, marriage etc.

*[மஞ்சள் + நீர் + விளையாட்டு.]*

மஞ்சணீராறு *mañja-ṇīr-āṟu,* பெ.(n.) காஞ்சீபுரத்திற்கருகில் ஓடும் வேகவதியாறு; the river *vēgavadi,* flowing near *kāñjīpuram.* *'மஞ்சணீர் நதியின் பாங்கர்' (காஞ்சிப்பு. சார்ந்தா.47).*

*[மஞ்சள் + நீராறு.]*

மஞ்சணுணா *mañjaṇuṇā,* பெ. (n.) மஞ்சணாறி பார்க்க (வின்.); see *mañjaṇāṟi.*

*[மஞ்சள் + நுணா.]*

மஞ்சணை[1] *mañjaṇai,* பெ.(n.) சில சாதி மகளிர் கழுத்திலும், சிறுதெய்வங்களின் உருவங்களிலும் பூசப்படும் எண்ணெய்க்

குங்குமம் (குருகூர்ப்பள்ளு, 71); turmeric paint mixed with oil, smeared on the necks of women of certain castes and idols of minor deities.

*[மஞ்சள் + நெய். மஞ்சணெய் → மஞ்சணை.]*

**மஞ்சணை²** *mañjaṇai,* பெ.(n.) மஞ்சணாறி, 1 (வின்.) பார்க்க; see *mañjaṇāṟi.*

**மஞ்சத்தண்ணீர்கரைத்தல்** *mañjaṭ-taṇṇīr-karaittal,* பெ.(n.) பெண் பருவமடைதல் (இ.வ.); attaining puberty, as a girl.

*[மஞ்சள் + தண்ணீர் + கரைத்தல்.]*

**மஞ்சதி** *mañjati,* பெ.(n.) கையாந்தகரை என்னுஞ்செடி; a kind of plant.

**மஞ்சநீர்த்தகப்பன்** *mañja-ṉīr-t-tagappaṉ,* பெ.(n.) தத்தெடுத்துக் கொண்ட தந்தை; (புதுவை.); adoptive father.

*[மஞ்சள் + நீர் + தகப்பன்.]*

**மஞ்சநீலம்** *mañja-nīlam,* பெ.(n.) துருசு, துத்தநாகம்; copper sulphate.

**மஞ்சப்பத்துச்செட்டி** *mañja-p-pattu-c-ceṭṭi,* பெ.(n.) செட்டிச்சாதி வகை; a sub-division of chetties (E.T.ii, 910).

**மஞ்சம்** *mañjam,* பெ.(n.) 1. கட்டில் (பிங்.); bed-stead, couch, cot. *"மருவிய விறலியோடு மஞ்சநீ டலத்து வைகும்" (திருவாலவா.54, 34).* 2. இருக்கை யிடுதற்குரிய அடித்தளம்; platform, dais. *"மஞ்சமேறி மணித்தவி சேறினார்" (பாரத. குருகுலச்.120).* 3. சப்பரம் (யாழ்ப்.); canopied vehicle for idls.

**மஞ்சம்புல்¹** *mañjam-pul,* பெ.(n.) நுணா; morind tinctoria.

**மஞ்சம்புல்²** *mañjam-pul,* பெ.(n.) எலுமிச்சம் மணமுள்ள ஒருவகைப் புல்; lemon grass-*Androogon schoenanthus.*

**மஞ்சமண்டபம்** *mañja-maṇḍabam,* பெ.(n.) பள்ளியறை (யாழ்.அக.); bed chamber.

*[மஞ்சம் + மண்டபம்.]*

**மஞ்சமம்** *mañjamam,* பெ.(n.) அரக்காம்பல்; red water lilly plant (சா.அக.).

**மஞ்சரம்¹** *mañjaram,* பெ.(n.) இலைக்கள்ளி; leafly milk spurge (சா.அக.).



**மஞ்சரம்²** *mañjaram,* பெ.(n.) முத்து (சிந்தா. நி.); pearl.

**மஞ்சரா** *mañjarā,* பெ.(n.) மணித்தக்காளி; a plant (சா.அக.).

**மஞ்சலன்** *mañjalaṉ,* பெ.(n.) வில்லாளி; bowman.

**மஞ்சலிக்கான்** *mañjalikkāṉ,* பெ.(n.) மஞ்சிலிக்கான் பார்க்க; see *mañjilikkāṉ.*

**மஞ்சவாகை** *mañja-vāgai,* பெ.(n.) ஒருவகை வாகை; a variety of sirrassa tree.

*[மஞ்சள் + வாகை.]*

மஞ்சவெய்யில் *mañja-veyyil,* பெ.(n.) மஞ்சள்வெயில் பார்க்க; see *mañjal-veil.*

*[மஞ்சள் + வெய்யில்.]*

மஞ்சள்[1] *mañjal,* பெ.(n.) 1. செடிவகை; turmeric, curcuma longa. *"மஞ்சள் மெல்லிலை மயிர்ப்புறந் தைவர" (சிறுபாண். 44).* 2. மஞ்சணிறம்; yellow colour, as that of turmeric. *மஞ்சள் வெயில்.* 3. எலுமிச்சை (சங்.அக.); acid lime. 4. மஞ்சட்குருவி பார்க்க; see *mañjat-kuruvi.*

*[மங்கல்→மஞ்சள்.]*

மஞ்சள்[2] *mañjal,* பெ.(n.) அரிசனம்; Indian saffron.

மஞ்சள் வகைகள் : 1. விரலி மஞ்சள்; 2. சருகு மஞ்சள், 3. பூசு மஞ்சள், 4. கறி மஞ்சள், 5. கூகை மஞ்சள், 6. கத்தூரி மஞ்சள், 7. நாட்டு மஞ்சள், 8. சீமை மஞ்சள், 9. குரங்கு மஞ்சள்.

மஞ்சள்அட்டை *mañjal-attai,* பெ.(n.) கால் பந்தாட்டத்தில் தவறாக விளையாடிய ஆட்டக்காரரை எச்சரித்துக் காட்டப்படும் அட்டைத்துண்டு; yellow card shown in foot ball match as warning signal.

*[மஞ்சள் + அட்டை.]*

மஞ்சள்கடம்பை *mañjal-kadambai,* பெ.(n.) 1. மஞ்சள் நிறமான கடம்பை; yellow cadamba. 2. மஞ்சட்கடம்பை பார்க்க; see *mañjat-kadambai.*

*[மஞ்சள் + கடம்பை.]*

மஞ்சள்கடிதம் *mañjal-kadidam,* பெ.(n.) ஒருவர் கடனைத் திருப்பிக் கட்ட முடியாத நிலையைத் தெரிவிக்கும் அறிவிப்பு; petition given by a debtor unable to pay his debts notice of bankruptey.

*[மஞ்சள் + கடிதம்.]*

மஞ்சள்கண் *mañjal-kan,* பெ.(n.) ஒரு வகைக் கண்ணோய்; xanthelasma (சா.அக.).

*[மஞ்சள் + கண்.]*

மஞ்சள்கயிறு *mañjal-kayiru,* பெ.(n.) தாலியாக அணியும் மஞ்சள் தடவிய கயிறு; cord soaked in turmeric solution and worn as *tāli.*

*[மஞ்சள் + கயிறு.]*

மஞ்சள்கரு *mañjal-karu,* பெ.(n.) முட்டை யிலுள்ள மஞ்சள் நிறத்திலிருக்கும் உயிர்ப் பொருள்; yolk.

*[மஞ்சள் + கரு.]*

மஞ்சள்காப்பு *mañjal-kāppu,* பெ.(n.) கோயில் திருவிழாவின் போது இறைப்பற்றாளர்கள் கட்டி கொள்ளும் காப்பு; a piece of cloth with coin wet in the turmaric paste tied on the forehand at the occassion of deity function. *"வெற்றிலை நாற்பதுக்கு நெல்லிரு நாழியும் மஞ்சள் காப்புக்கு நெல்லுரியும் திருமடைப் பள்ளிக்கு விறகுக்கு குசக்கலத்துக்கு நெல் நாழியும்" (தெ.க. தொ.7, 409–6).*

*[மஞ்சள் + காப்பு.]*

மஞ்சள்குரு *mañjal-guru,* பெ.(n.) எலுமிச்சம் பழம்; lime fruit (சா.அக.).

*[மஞ்சள் + குரு.]*

**மஞ்சள்குருவி** *mañjal-kuruvi,* பெ.(n.) குருவி வகை; turmeric bulbul.

*[மஞ்சள் + குருவி.]*

**மஞ்சள்குளி-த்தல்** *mañjal-kuli-,* 4 செ.கு.வி. (v.i.) மஞ்சட்குளி-த்தல் பார்க்க; see *mañjat-kuli-.*

*[மஞ்சள் + குரு.]*

**மஞ்சள்தண்ணீர்** *mañjal-tannir,* பெ.(n.) மஞ்சள்நீராட்டுவிழா பார்க்க; see *mañjal-nirāttu-vilā.*

*[மஞ்சள் + தண்ணீர்.]*

**மஞ்சள்தாழை** *mañjal-tālai,* பெ.(n.) பொன்னிறத் தாழை; golden yellow or yellowish red screw pine very fragrant flower.

*[மஞ்சள் + தாழை.]*

**மஞ்சள்திணை** *mañjal-tinai,* பெ.(n.) திணை வகை; Italian millet.

*[மஞ்சள் + திணை.]*

**மஞ்சள்திருடி** *mañjal-tirudi,* பெ.(n.) கழுகு வகை; kind of eagle.

*[மஞ்சள் + திருடி.]*

**மஞ்சள்தெங்கு** *mañjal-tengu,* பெ.(n.) தென்னை வகை; a variety of coconut tree bearing big coconuts, whose shells are used as vessels.

*[மஞ்சள் + தெங்கு.]*

**மஞ்சள்நாகதாளி** *mañjal-nāga-tāli,* பெ.(n.) சப்பாத்துக் கள்ளி; cactus *opuntia dillenil.*

*[மஞ்சள் + நாகதாளி.]*

**மஞ்சள்நாங்கு** *mañjal-nāngu,* பெ.(n.) சோலைக் கொடுக்காய்ப் புளி; a species of gambage.

*[மஞ்சள் + நாங்கு.]*

**மஞ்சள்நாறிப்பட்டை** *mañjal-nāri-p-pattai,* பெ.(n.) நுணாப்பட்டை; the bark of *nunā* tree.

*[மஞ்சள்நாறி + பட்டை.]*

**மஞ்சள்நீர்** *mañjal-nir,* பெ.(n.) 1. முட்டையின் மஞ்சட் கரு; yellow of an egg. 2. மஞ்சள் கரைத்த நீர்; water mixed turmeric. 3. மஞ்சள் நிறமான நீர்; yellow coloured water. 4. மஞ்சள் நிறமான சிறுநீர் (மூத்திரம்); yellow coloured urine.

*[மஞ்சள் + நீர்.]*

**மஞ்சள்நீராட்டு** *mañjal-nirāttu-,* பெ.(n.) மஞ்சள்நீராட்டுவிழா பார்க்க; see *mañjal-nirāttu-vilā.*

*[மஞ்சள் + நீராட்டு.]*

**மஞ்சள்நீராட்டுவிழா** *mañjal-nirāttu-vilā,* பெ.(n.) பூப்பெய்திய பெண்களுக்கு நடத்தப்படும் சடங்கு; a ritual bath in turmeric mixed water for a girl who has attained pubterty.

*[மஞ்சள் + நீராட்டு + விழா.]*

**மஞ்சள்மந்தாரை** *mañjal-mandārai,* பெ.(n.) மந்தாரை வகை (வின்.); a species of mountain ebony.

*[மஞ்சள் + மந்தாரை.]*

**மஞ்சள்மல்லிகை** *mañjaḷ-malligai,* பெ.(n.) மல்லிகை இனத்தைச் சார்ந்த மஞ்சள் நிறமான நச்சுச் செடி; a poisonous climber resembling jasmine creeper with yellow flowers.

*[மஞ்சள் + மல்லிகை.]*

**மஞ்சள்முள்ளங்கி** *mañcaḷ-muḷḷaṅgi,* பெ.(n.) கிழங்கு வகை (இ.வ.); carrot-*Daucus carota.*

*[மஞ்சள் + முள்ளங்கி.]*

**மஞ்சள்முளை** *mañcaḷ-muḷai,* பெ.(n.) இரண்டொரு நாளான நென்முளை (நாஞ்.); paddy seedling, one or two days old.

*[மஞ்சள் + முளை.]*

**மஞ்சள்முளைக்கிடை** *mañcaḷ-muḷai-k-kiḍai,* பெ.(n.) விதைத்து இரண்டொரு நாள் சென்றபின் வயலிலிடும் ஆட்டுக்கிடை (நாஞ்.); penning sheep in a field where paddy has been sown recently.

*[மஞ்சள் + முளை+ கிடை.]*

**மஞ்சள்மெழுகு** *mañcaḷ-meḻugu,* பெ.(n.) தேன்மெழுகு; bee's wax.

*[மஞ்சள் + மெழுகு.]*

**மஞ்சள்மேகம்** *mañcaḷ-mēgam,* பெ.(n.) மேகநோய்; a kind of venereal disease.

*[மஞ்சள் + மேகம்.]*

**மஞ்சள்வசந்தம்** *mañcaḷ-vašandam,* பெ.(n.) ஒரு நற்செயல் (வின்.); a auspicious ceremony in which turmeric - mixed water in sprinkled.

*[மஞ்சள் + வசந்தம்.]*

**மஞ்சள்வரிக்குறவான்** *mañcaḷ-vari-k-kuṟavāṉ,* பெ.(n.) முதுகில் கறுப்பு மஞ்சள் வரிகளையுடைய கடல் மீன்; file fish.

*[மஞ்சள்வரி + குறவான்.]*



**மஞ்சள்வாங்கு-தல்** *mañcaḷ-vāṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) திருமணம் உறுதி செய்தல்; to settle a marriage.

*[மஞ்சள் + வாங்கு-.]*

**மஞ்சள்வாடை** *mañjaḷ-vāḍai,* பெ.(n.) மகப்பேற்றுப் பெண்களில் அறையிலிடும் மஞ்சட்பொடி மணம் (வின்.); scent of turmeric, as at the house when there is a lying-in.

*[மஞ்சள் + வாடை.]*

**மஞ்சள்விசிறி** *mañjaḷ-višiṟi,* பெ.(n.) சேலை வகை (இ.வ.); a kind of saree.

*[மஞ்சள் + விசிறி.]*

**மஞ்சள்விளையாட்டு** *mañjaḷ-viḷaiyāṭṭu,* பெ.(n.) மஞ்சணீர்விளையாட்டு பார்க்க (வின்.); see *mañcaṇīr-viḷaiyāṭṭu.*

*[மஞ்சள் + விளையாட்டு.]*

**மஞ்சள்வீரி** *mañjal-vīri,* பெ.(n.) மணலிக் கீரை (சா.அக.); a bitter kitchen greens (சா.அக.).

*[மஞ்சள் + வீரி.]*

**மஞ்சள்வெயில்** *mañcal-veyil,* பெ.(n.) மாலை வெயில் (கொ.வ.); yellow sunshine just before sunset, evening glow.

*[மஞ்சள் + வெயில்.]*

**மஞ்சள்வேட்டி** *mañcal-vēṭṭi,* பெ.(n.) மண மகன் முதலியோர் அணியும் மஞ்சணீற் றோய்த்த ஆடை; cloth dyed yellow, as worn by the bridegroom at the time of marriage.

*[மஞ்சள் + வேட்டி.]*

**மஞ்சளரளி** *mañjalarali,* பெ.(n.) மஞ்சள் நிறத்தில் பூக்கும் அரளி; மலையரளி, தங்க அரளி; exile olender, *thevetia nerifoloia.*

*[மஞ்சள் + அரளி.]*

**மஞ்சளலரி** *mañcal-alari,* பெ.(n.) மஞ்சளரளி பார்க்க; see *mañjal-arali.*

*[மஞ்சள் + அலரி.]*

**மஞ்சளாலாத்தி** *mañcal-ālātti,* பெ.(n.) மஞ்சணீரால் எடுக்கும் ஆரத்தி (வின்.); ceremony of waving turmeric-mixed water to avert the evil eye.

*[மஞ்சள் + ஆலாத்தி.]*

**மஞ்சளாவாரை** *mañcal-āvārai,* பெ.(n.) ஆவாரை; a shrub.

*[மஞ்சள் + ஆவாரை.]*

**மஞ்சளி** *mañcali,* பெ.(n.) வேலிப் பருத்தி (மலை.); hedge twiner.

**மஞ்சளி-த்தல்** *mañcali-,* 4 செ.குன்றாவி. (v.t.) மஞ்சணிறமாதல்; to turn-yellow. *"கண்கள் மஞ்சளித்து" (அசுவசா.88).*

*[மஞ்சள் → மஞ்சளி-.]*

**மஞ்சளிளங்கலையன்** *mañcal-ilaṅ-kalaiyaṉ,* பெ.(n.) நெல் வகை; a kind of paddy.

**மஞ்சளிளநீர்த்தென்னை** *mañcalila-nīr-t-teṉṉai,* பெ.(n.) மஞ்சட்தெங்கு பார்க்க; see *mañcaṭ-teṅgu.*

*[மஞ்சள் + இளநீர் + தென்னை.]*

**மஞ்சளிளவஞ்சி** *mañcalila-vañji,* பெ.(n.) மயில்வஞ்சி எனும் மரம்; a tree.

**மஞ்சளெண்ணெய்** *mañcal-eṇṇey,* பெ.(n.) 1. மஞ்சள் சேர்த்து வடித்த மருந்தெண்ணெய் (வின்.); a medicinal oil prepared with turmeric. 2. மட்டமான மண்ணெண்ணெய்; crude kerosene (Mod.).

*[மஞ்சள் + எண்ணெய்.]*

**மஞ்சன்¹** *mañcaṉ,* பெ.(n.) மஞ்சணிற முடையவன் (இ.வ.); man of yellow complexion.

*[மஞ்சலன் → மஞ்சன்.]*

**மஞ்சன்²** *mañcaṉ,* பெ.(n.) 1. மகன்; son. *"சுந்தரி தரு மஞ்சன்" (கந்தபு. திருவி.81).* 2. ஆண்மகன்; man, young man. *"எழுந்தனர் மஞ்சு தோய்புய் மஞ்சரே" (கம்பரா.கைகேசி.55).*

மஞ்சனப்புல் *mañjana-p-pul,* பெ.(n.) மஞ்சம்புல் பார்க்க (வின்.); see *mañjampul.*

*[மஞ்சனம் + புல்.]*

மஞ்சனி[1] *mañjaṉi,* பெ.(n.) பெண் (திவா.); woman.

மஞ்சனி[2] *mañjaṉi,* பெ.(n.) வேலிப்பருத்தி; hedge twiner.

மஞ்சா *mañjā,* பெ.(n.) இலைக்கள்ளி (மலை.); five-tubercled.

மஞ்சாக்குரு *mañcā-k-kuru,* பெ.(n.) எலுமிச்சை; acid lime.

மஞ்சாரி *mañcāri,* பெ.(n.) கஞ்சாங்கோரை (மலை.); white - basil.

மஞ்சாளி *mañcāḷi,* பெ.(n.) மஞ்சாடி பார்க்க; see *mañcāḍi.*

மஞ்சி[1] *mañci,* பெ.(n.) 1. சணல்; sunnhemp. 2. சணல் நார்; hemp fibre.

மஞ்சி[2] *mañci,* பெ.(n.) படகு; cargo boat wtih a raised platform.

*[மஞ்சு→மஞ்சி.]*



மஞ்சி[3] *mañci,* பெ.(n.) 1. சிறுவரம்பு; ridge between garden beds. 2. குறும்பு (இ.வ.); gable.

*[மஞ்சு→மஞ்சி.]*

மஞ்சி[4] *mañci,* பெ.(n.) மூடுபனி (இ.வ.); fog.

*[மஞ்சு→மஞ்சி.]*

மஞ்சி[5] *mañci,* பெ.(n.) சுங்கம் வாங்கி, கூட்டிக் கொடுப்போன்(வின்.); pimp, pander.

மஞ்சிக்கம் *mañcikkam,* பெ.(n.) ஊர்ப்புறத்துத் தரிசு நிலம்; uncultivated land near a village or town. *"மஞ்சிக்கமாகக் கிடந்த நிலத்தில் மூன்று பாடகந் திருத்தி" (தெ.க. தொ.III, 203, 14).*

மஞ்சிகம்[1] *mañcigam,* பெ.(n.) தாளி (பிங்.); hedge bind-weed.

மஞ்சிகம்[2] *mañcigam,* பெ.(n.) மஞ்சிகை[1] பார்க்க (பிங்.); see *mañcigai.*

மஞ்சிகன் *mañcigaṉ,* பெ.(n.) முடிதிருத்துவோன் (நாவிதன்); barber.

மஞ்சிகை[1] *mañcigai,* பெ.(n.) 1. பெட்டி; chest, box. *"யவன மஞ்சிகை" (பெருங். உஞ்சைக். 32, 745).* 2. கொட்டாரம்; store-room. *"கூழுடைக் கொழுமஞ்சிகை" (பட்டினப். 163).* 3. தொம்பை (பட்டினப்.163, கீழ்க் குறிப்பு); grain bin.

*[மஞ்சு→மஞ்சி→ மஞ்சிகை.]*

மஞ்சிகை[2] *mañcigai,* பெ.(n.) 1. தாளி; hedge bind-weed. 2. கையாந்தகரை; a plant found in wet places. 3. காதணி வகை; a ear-ornament. *"மஞ்சிகை துளைச் சிறு காதினுட் டுளங்க" (சீவக.2388).*

மஞ்சிட்டம் *maññciṭṭam*, பெ.(n.) மஞ்சாடி[1, 2] பார்க்க; see *maññcāḍi*.

மஞ்சிட்டி *maññciṭṭi*, பெ.(n.) 1. நீர்ப்பூடுவகை; munjeet, Indian madder, *rubia cordifolia* (I, P). 2. சாப்பிரா (சிறுமரவகை); arnotto. 3. சாயவேர்; chayroot for dyeing (L.).

மஞ்சிபலை *maññcipalai*, பெ.(n.) வாழை (யாழ். அக.); plantain.

மஞ்சிமம் *maññcimam*, பெ.(n.) அழகு (சிந்தா. நி.); beauty.

மஞ்சிமூட்டம் *maññci-mūṭṭam*, பெ.(n.) மூடு பனி (இ.வ.); thick fog.

*[மஞ்சு + மூட்டம்.]*

மஞ்சிரம் *maññciram*, பெ.(n.) காலாழி; toe-ring.

மஞ்சிரு *maññciru*, பெ.(n.) கையாந்தகரை எனுஞ்செடி; a plant found in wet places.

மஞ்சில் *maññcil*, பெ.(n.) முதுவரப்பு வழி; large embankment of cause way between paddy fields, used as a path.

மஞ்சிலிக்கான் *maññcilikkāṉ*, பெ.(n.) திருநீற்றுப் பச்சை; fragrant basil.

மஞ்சிவிரட்டு *maññji-viraṭṭu*, பெ.(n.) மஞ்சு விரட்டு பார்க்க; see *maññju-viraṭṭu*.

*[மஞ்சு + விரட்டு.]*

மஞ்சிறு *maññciṟu*, பெ.(n.) கையாந்தகரை எனுஞ் செடி; a plant found in wet places.

மஞ்சீரகம் *maññcīragam*, பெ.(n.) கழற்சி; molucca - bean.

மஞ்சு[1] *maññcu*, பெ.(n.) 1. அழகு (சூடா.); beauty, gracefulness. *"மஞ்சுடை மணி நகு மாலை மண்டபம்" (சூளா.குமார.17)*. 2. அணிகலன் (சூடா.); jewel.

மஞ்சு[2] *maññcu*, பெ.(n.) 1. வெண்முகில்; white cloud. *"மஞ்சென நின்றுலவும்" (சீவக.2853)*. 2. முகில்; cloud. *"யாக்கை மலையாடு மஞ்சு போற்றோன்றி" (நாலடி, 28)*. 3. பனி (பிங்.); dew. 4. மூடுபனி (இ.வ.); fog. 5. யானை முதுகு; back of an elephant.

மஞ்சு[3] *maññcu*, பெ.(n.) களஞ்சியம் (வின்.); store-house, granary.

மஞ்சு[4] *maññcu*, பெ.(n.) 1. கட்டில்; cot, bed-stead. 2. குறுமாடியின் அடைப்பு; board - partition or gable carried above the wall. 3. வீட்டு முகடு (பிங்.); ridge of a roof.

மஞ்சு[5] *maññcu*, பெ.(n.) 1. இளமை; youthful ness, juvenility. 2. வலிமை; strength, force. *"மஞ்சரங்கிய மார்பிலும்" (கம்பரா. இராவணன் வதை 168)*.

*[மைந்து→மந்து→மஞ்சு.]*

மஞ்சுக்கட்டை *maññcu-k-kaṭṭai*, பெ.(n.) முகட்டுச் சரிவு; sloping roof over the breadth of a house.

*[மஞ்சு[4] + கட்டை.]*

மஞ்சுவெருட்டு *maññcu-veruṭṭu*, பெ.(n.) 1. மஞ்சுவிரட்டு பார்க்க; see *maññju-viraṭṭu*. 2. ஆ கவர்கை (இ.வ.); cattle raid.

*[மஞ்சு[5] + வெருட்டு. வெருள்→வெருட்டு.]*

மஞ்சுளம் *mañcuḷam*, பெ.(n.) 1. அழகு; beauty, agreeableness. *"மலரடி மஞ்சுளப் பஞ்சி" (கம்பரா. ஊர்தேடு.32).* 2. இலேசு; softness, tenderness. *"மஞ்சுளமா கிருப்பது சுபுக நன்றென்பர்" (திருவிளை. உக்கிர. வேல்வளை.35).*

மஞ்சூடை *mañcūḍai*, பெ.(n.) 1. பெரிய கூடை; large basket. 2. பெட்டி; box.

மஞ்சைக்காணி *mañcai-k-kāṇi*, பெ.(n.) மஞ்சட்காணி (இ.வ.) பார்க்க; see *mañjaṭ-kāṇi*.

*[மஞ்சள்→மஞ்சை + காணி.]*

மஞ்ஞை *maññai*, பெ.(n.) மயில்; peacock. *"பழன மஞ்ஞை யுகுத்த பீலி" (புறநா.13).*

மஞ்ஞையீர்க்கு *maññai-y-īrkku*, பெ.(n.) மயிலிறகு; peacock's feather.

*[மஞ்ஞை + ஈர்க்கு.]*

மஞ்ஞையூர்தி *maññai-y-ūrdi*, பெ.(n.) முருகக் கடவுள்; Lord *Murugaṉ* as having a peacock for his vehicle.

*[மஞ்ஞை + ஊர்தி.]*

மட்கடம் *maṭkaḍam*, பெ.(n.) மண் ஏனம்; mud pot.

மட்கடி-த்தல் *maṭkaḍi-*, 4 செ.குன்றாவி.(v.t.) கெடுமாறு செய்தல்; to damage, to destroy, to lose by negligence.

*[மட்கு→மட்கடி-த்தல்.]*

மட்கண்டம் *maṭ-kaṇḍam*, பெ.(n.) கிணறு தோண்டும் போது காணும் மண்பாகம்; statum of earth as in sinking wells.

*[மண் + கண்டம்.]*

மட்கலம் *maṭ-kalam*, பெ.(n.) மண்ணாலான பாண்டம்; earthern vessel. *"பசுமட் கலத்துணீர் பெய்திரீஇ யற்று" (குறள், 660).*

*[மண் + கலம்.]*



மட்கு-தல் *maṭku*, 5 செ.கு.வி.(v.i.) 1. ஒளி மங்குதல்; to be dim, duskey, to be deprived of lustre, glory or brilliance. *"நாகத்தின் வஞ்சவாயின் மதியென மட்குவான்" (கம்பரா. அயோமு.12).* 2. வலுகுன்றுதல்; to lose strength, to become defficient. *"தரியலர் முனைமட்க" (பாரத. மீட்சி.176).* 3. மயங்குதல்; to be bewildered. *"மட்கிய சிந்தை" (கம்பரா. தைல.5).* 4. அழுக்கடைதல் (கொச்சை.); to become mouldy; to be foul or dirty. 5. அழிதல்; to be destroyed. *"மதத்தர் மட்கினர்" (பிரபோத.30, 58).*

*[மள்கு→மட்கு.]*

மட்குகை *maṭkugai*, பெ.(n.) குகை; crucible.

*[மண் + குகை.]*

மட்சாந்து *maṭ-cāndu*, பெ.(n.) சுவர்கட்ட உதவும் குழைத்த மண் சேறு; mud plaster used in building walls.

*[மண் + சாந்து.]*

மட்சுவர் *maṭ-cuvar,* பெ.(n.) மண்ணால் கட்டப்பட்ட சுவர்; mudwall.

*[மண் + சுவர்.]*

மட்டக்கொம்பன்சுறா *maṭṭā-k-kombaṉ-šurā,* பெ.(n.) பழுப்பு நிறமுள்ளதும் பலவடிகள் நீண்டு வளர்வதுமான மீன்வகை; hammer-head shark, grey, attaining several feet in length, *zygaena tudes.*

மட்டக்கோல் *maṭṭa-k-kōl,* பெ.(n.) 1. கொத்து வேலைக் கருவிகளுளொன்று (வின்.); rule, ruler, mason's smoothing rule. 2. மட்டப்பலகை (இவ்.) பார்க்க; see *maṭṭa-p-palagai.*

*[மட்டு→மட்டம். மட்டம் + கோல்.]*



மட்டக்கோலூசி *maṭṭa-k-kōlūši,* பெ.(n.) அறுவை மருத்துவக் கருவிகளுள் ஒன்று; one of the surgical instruments.

மட்டங்கட்டு-தல் *maṭṭaṅ-kaṭṭu-,* 5 செ. குன்றாவி.(v.t.) 1. தளம் முதலியவற்றின் ஏற்றத் தாழ்வைக் கயிறு மட்டப்பலகை முதலியவற்றினால் அறிதல்; to as certain the eveness or level of a surface by time or rule. 2. துளையின் தட்டுகளைத் தடைப் பொருளிட்டுச் சமனாக்குதல்; to balance at the scales.

*[மட்டு→மட்டம் + கட்டு-. மட்டம் = ஒரே அளவு.]*

மட்டச்சாவாளை *maṭṭa-c-cāvāḷai,* பெ.(n.) வெண்மை நிறமுள்ளதும் 25 விரலம் வரை வளர்வதுமான மீன் வகை; ribbon-fish, burrished silver, attaining 25 in. in length, *trichiurus muticuss.*

*[மட்டம் + சாவாளை.]*

மட்டச்சுவர் *maṭṭa-c-cuvar,* பெ.(n.) சிறுசுவர்; dwarf wall, breast wall (C.E.M.).

*[மட்டம் + சுவர். மட்டம் = குறைவான அளவு.]*

மட்டச்சுறா *maṭṭa-c-cuṟā,* பெ.(n.) சாம்பனிற முடையதும் 9 அடிவரை வளர்வதும் கொடியதுமான சுறா மீன்வகை; shark, grey, very ferocious, attaining 9 ft. in length, *carcharias gangeticus.*

*[மட்டம் + சுறா.]*

மட்டசுத்தம் *maṭṭa-šuttam,* பெ.(n.) 1. நன்கு அமைந்தது; that which is well-proportioned and smoothly formed. 2. முழுமை; entireness, absoluteness.

*[மட்டம் + **Skt.**சுத்தம். மட்டம் = ஒரே அளவு நிலை.]*

மட்டஞ்செய்-தல் *maṭṭañ-cey-,* 1 செ. குன்றாவி. (v.t.) 1. சமனாக்குதல்; to level, as the ground, to trim evenly, as a garland. *"கத்தரிகையால் மட்டஞ்செய்த மாலையினை" (பு.வெ.3, 3, கொளு. உரை).* 2. செவ்விதாகச் செய்தல்; to beautify, render attractive. *"மணிச்செய் கடிப்பினை மட்டஞ் செய்து" (பெருங்.உஞ்சைக்.34, 199).*

*[மட்டம் + செய். மட்டம் = ஒரே அளவு.]*

**மட்டத்தரம்** *maṭṭa-t-taram*, பெ.(n.) 1. தாழ்ந்த தரம்; inferior quality. 2. நடுத்தரம்; medium quality.

*[மட்டம் + தரம். மட்டம் = தாழ்வு.]*

**மட்டத்தாரை** *maṭṭa-t-tārai*, பெ.(n.) கூர்மை யற்ற விளிம்புடையது; anything smooth-edged, as a diamond. *"கட்டினவைரம் மட்டத்தாரை அறுநூற்று முப்பத்தாறும்" (தெ.க.தொ.2:78).*

*[மட்டம் + தாரை. மட்டம் = மட்டமாகத் தட்டப்பட்டது.]*

**மட்டத்தாரைச்சப்படி** *maṭṭa-t-tārai-c-cappaḍi*, பெ.(n.) மழுங்கிய விளிம்புடைய தட்டை வைரம் (தெ.க.தொ.2:78); flat diamond with smooth edges.

*[மட்டம் + தாரை + சப்படி. மட்டம் = மட்டமாகத் தட்டிச் சமப்படுத்தப்பட்டது.]*

**மட்டைத்தாரைச்சவக்கம்** *maṭṭai-t-tārai-c-cavakkam*, பெ.(n.) மழுங்கிய விளிம் புடையதும் சதுர வடிவுள்ளதுமான வைரக்கல்; square shaped diamond with smooth edges. *"மட்டத்தாரைச் சவக்கம் நூற்றறுபத் தொன்பதும்" (தெ.க.தொ.2:78).*

*[மட்டம் + தாரை + சவக்கம். மட்டம் = மட்டமாகத் தட்டப்பட்டது.]*

**மட்டத்திருக்கை** *maṭṭa-t-tirukkai*, பெ.(n.) செம்பசுமை நிறமுள்ள திருக்கை மீன் வகை; ray-fish grenish - brown *Rhinoptera adspensa.*

*[மட்டம் + திருக்கை.]*



**மட்டத்துருத்தி** *maṭṭa-t-turutti*, பெ.(n.) 1. நீர் முதலியன வீசுங் கருவி வகை; a kind of squirt. *"சுண்ணத்தையும் சந்தனத்தையும் ... மட்டத் துருத்தியாலும் நெடுநந் துருத்தியாலும் சிதற" (சீவக. 86, உரை).* 2. கம்மக் கருவி வகை (இ.வ.); a kind of hand-bellows. 3. நறுமணம் புகைக்கும் கலம் (வின்.); a small - sized perfuming pot.

*[மட்டம் + துருத்தி.]*

**மட்டநூல்** *maṭṭa-nūl*, பெ.(n.) சமநிலை பார்ப்பதற்கு உதவும் நூல்; measuring line.

*[மட்டு→மட்டம் + நூல். மட்டம் = ஒரே அளவு.]*

**மட்டப்பலகை** *maṭṭa-p-palagai*, பெ.(n.) 1. சமனறியுந் தச்சுக் கருவி; measuring rod, carpenter's, rule. 2. மணியாசிப் பலகை; mason's smoothing plane. 3. சமநிலை காட்டுங் கொத்துக் கருவி; mason's level, wooden frame with plumb line. 4. உயர்வு தாழ்ச்சிகளைக் காட்டவுதவும் அளவு கோடிட்ட பலகை; levelling staff. 5. வயலில் மண்கொண்டு செல்லும் தட்டுப் பலகை; a kind of flat sled for carrying soild from one part of a field to another (G.Tp.D.I.141).

*[மட்டு→மட்டம் + பலகை. மட்டம் = ஒரே சம அளவு.]*

**மட்டப்பா** *maṭṭa-p-pā*, பெ.(n.) மொட்டை மாடி (இ.வ.); open terrace, flat roof.

மட்டம் = ஒரே சம அளவு.

*[மட்டம்→மட்டப்பா.]*

**மட்டப்பாவீடு** *maṭṭa-p-pā-vīḍu*, பெ.(n.) மொட்டை மாடியுள்ள வீடு; house with open terrace.

மட்டம் = ஒரே சம அளவு.

*[மட்டம்→மட்டப்பா + வீடு.]*

**மட்டப்பாவு¹** *maṭṭa-p-pāvu*, பெ.(n.) மட்டப்பா பார்க்க; see *maṭṭa-p-pā*.

**மட்டப்பாவு²** *maṭṭa-p-pāvu*, பெ.(n.) குறைந்த அளவுள்ள பாவு; short lengthen warp.

*[மட்டம் + பாவு.]*

**மட்டப்பாறை** *maṭṭa-p-pāṟai*, பெ.(n.) ஒரு வகைக் கடல்மீன்; a sea fish.



**மட்டப்பிரி** *maṭṭa-p-piri*, பெ.(n.) வள்ளத்தின் உறுப்பு (க.ப.அக.); a part of the vallam.

**மட்டப்பொன்** *maṭṭa-p-poṉ*, பெ.(n.) மாற்றுக் குறைவான பொன் (வின்.); impure gold, as inferior in quality.

*[மட்டு→மட்டம் + பொன்.]*

**மட்டம்¹** *maṭṭam*, பெ.(n.) 1. அளவு; measure. 2. சமநிலை; evenness, flatness. 3. அளவுகோல்; rule, line, gauging rod. 4. எல்லை; limit, extent, bound, degree (w.). 5. ஊகம்; guess, conjecture. 6. ஒப்பு; equality in length, height, size, measure or quality. 7. சிறுமை; smallness. *"மட்டப்பூ" (தெ.க.தொ.2:84).* 8. தாழ்வு; inferiority, deficiency. 9. மிதம்; moderation. 10. செட்டு; furglity. 11. சிறு குதிரை (இ.வ.); pony. 12. வாழை, கரும்பு முதலியவற்றின் கன்று; sapling of plantain, bamboo, sugarcane etc. 13. பொன் மணியின் உறுப்பு வகை (வின்.); smooth round neck of gold bead. 14. ஆனைக் குட்டி; young male elephant. 15. ஒரே உயரமுள்ள நிலை; level. 16. சமவெண்; whole quantity, sum, leaving no over plus. 17. மூன்றொத்துடைய தாளம் (சிலப்.3:151, உரை); triple beat in measuring time. 18. குறைவு; der se. *"அவற்றில் ஆதரம் மட்டமாட கும்" (ஸ்ரீவசன.3, பிர.172).* 19. கேடயம் (வின்.); shield.

*[மட்டு→மட்டம்.]*

**மட்டம்²** *maṭṭam*, பெ.(n.) கள்; toddy. *"மட்டம் பெய்த மணிக்கலத் தன்ன.... சுனை" (குறுந்.193).*

**மட்டம்பார்-த்தல்** *maṭṭam-pār-*, 4 செ.கு.வி. (v.i.) பாதை சுவர் முதலியவற்றின் ஒழுங்கை நோட்டம் பார்த்தல்; to examine the level or straightness, as of a road or wall etc.

*[மட்டம் + பார்-. மட்டம் = ஒரே அளவு.]*

மட்டம்பிடி[1]–த்தல் *maṭṭam-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) மதிப்பிடுதல்; to estimate.

*[மட்டம் + பிடி–. மட்டம் = ஒரே அளவு.]*

மட்டம்பிடி[2]–த்தல் *maṭṭam-piḍi-,* 4 செ. குன்றாவி.(v.t.) 1. மட்டம்வெடி–, பார்க்க; see *maṭṭam-veḍi-.* 2. சமனாக்குதல் (இ.வ.); to level.

மட்டம்போடு–தல் *maṭṭam-pōḍu-,* 20 செ.கு.வி.(v.i.) வேண்டுமென்றே வேலை முதலியவற்றுக்கு வாராதிருத்தல்; to absent oneself wilfully. *'பள்ளிக்குச் செல்லாமல் மட்டம் போட்டு விட்டான்' (உ.வ.).*

*[மட்டம் + போடு–. மட்டம் = குறைவு.]*

மட்டம்வெடி–த்தல் *maṭṭam-veḍi-,* 4 செ.கு.வி.(v.i.) கிளை கப்புகள் உண்டாதல்; to shoot forth, branch out, as from the stem of a plant.

*[மட்டு→மட்டம் + வெடி–.]*

மட்டம்வை–த்தல் *maṭṭam-vai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. மட்டம்வெடி–த்தல் பார்க்க (யாழ். அக.); see *maṭṭam-veḍi-.* 2. மட்டங் கட்டு–தல் பார்க்க; see *maṭṭaṅkaṭṭu-.*

*[மட்டம் + வை–.]*

மட்டமாய்க்கூட்டல் *maṭṭamāy-k-kūṭṭal,* பெ.(n.) மொத்தமாய்க் கூட்டல்; to add in moderate quantity.

*[மட்டமாய் + கூட்டல்.]*

மட்டயந்திரம் *maṭṭa-yandiram,* பெ.(n.) சம நிலையை அறியும் கருவி (இக்.வ.); instrument for testing level.

*[மட்டு→மட்டம் + இயந்திரம்.]*

மட்டலகு *maṭṭalagu,* பெ.(n.) இழைப்புளியின் உருண்டை அலகு வகை; blade for the jack-plane.

*[மட்டு→மட்டம் + அலகு.]*

மட்டவிழைப்புளி *maṭṭa-v-iḻaippuḷi,* பெ.(n.) தச்சுக் கருவி வகை; jack plane, joiner's plane for coarse work.

*[மட்டம் + இழைப்புளி.]*



மட்டவேலை *maṭṭa-vēlai,* பெ.(n.) பரும்படியான வேலை (யாழ்.அக.); rough work, work not requiring much skill, as different from ilaippu and *nakāšu-vēlai.*

*[மட்டம் + வேலை.]*

மட்டவேலைக்காரன் *maṭṭa-vēlai-k-kāraṉ,* பெ.(n.) வெள்ளி தங்கவேலைகளில் காப்பு முதலிய பரும்படி வேலை செய்யுந் தட்டான்; smith whose work does not require much skill.

*[மட்டு→மட்டம் + வேலைக்காரன்.]*

மட்டறி[1]– தல் *maṭṭaṟi-,* 2 செ.குன்றாவி.(v.t.) 1. மதிப்பிடுதல்; to guess, make a rough estimate. 2. பழகியறிதல்; to bear in mind

so as to recognise or identify, to know well. 3. ஒப்பிடுதல்; to liken, compare with.

*[மட்டம்→ மட்டு + அறி–. மட்டம் = அளவு, மதிப்பு.]*

**மட்டறி²–தல்** *mattari-,* 2 செ.கு.வி.(v.i.) 1. அளவேற்படுத்துதல்; to fix a limit, to stint. 2. குறிப்பறிதல்; to understand indications.

*[மட்டம்→ மட்டு + அறி–.]*

**மட்டன்** *mattan,* பெ.(n.) மூடன்; dullard. *"கட்டைப் புத்தியன் மட்டன்" (திருப்பு.419).*

*[மட்டு →மட்டன். மட்டம் = அளவு குறைவு.]*

**மட்டனம்** *mattanam,* பெ.(n.) பூசுகை; smearing, rubbing over. *"மான்மதக் கலவைச் சாந்த மட்டனஞ் செய்து" (திருவிளை. உக்கிர. வேல்வளை.45).*

*[மட்டு→மட்டம்→மட்டனம்.]*

**மட்டாய்** *mattāy,* கு.வி.எ.(adv.) 1. அளவாய்; moderately, temperately. 2. வேண்டிய வளவாக; as much as in needed. 3. செட்டாக; sparingly, parsimoniously, frugally. 4. ஏற்கத்தக்கதாக; passably, tolerably.

*[மட்டு→மட்டாய். மட்டு = அளவு.]*

**மட்டாயுதம்** *mattāyudam,* பெ.(n.) வாள்; sword.

*[மட்டு + Skt.ஆயுதம்.]*

**மட்டி¹–த்தல்** *matti-,* 4 செ.கு.வி.(v.i.) மண்டலித்தல்; to be or become circular, to form into circles or ringlets, to coil.

*[முல்(வளைதற் கருத்து வேர்)→முள்→ முண்டு →மண்டு→மண்டி = காலை மடக்கி முழங்காலால் நிற்கை. முட்டு→ மட்டு→ மட்டி → மட்டி –த்தல் (வே.க.4:83).]*

**மட்டி²–த்தல்** *matti-,* 4 செ.குன்றாவி.(v.t.) வட்டமாகுதல்; to make circular. *"திரடோள்கண் மட்டித்தாட" (தேவா.12, 3).*

*[முட்டு→மட்டு→மட்டி →மட்டி–த்தல்.]*

**மட்டி³** *matti,* பெ.(n.) 1. மூடன்; dolt, blockhead. *"அறியாத.... மூடமட்டி" (திருப்பு.195).* 2. ஒழுங்கின்மை; clumsiness, awkwardness. 3. பரும்படி; roughness, coarseness. 4. மக்கு (இவ.); putty, cement for whiting. 5. மட்டிக்காரை பார்க்க; see *matti-k-kārai.* 6. சிப்பிமீன்; oyster, cockle, shell-fish. 7. மட்டிவாழை பார்க்க; see *matti-vālai.*

தெ., க. மட்டி.

*[முட்டு→மட்டு→மட்டி (வே.க.4:65).]*

**மட்டி⁴–த்தல்** *matti-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. அழித்தல்; to destroy. *"மணிகொள் குட்டிம மட்டித்து" (கம்பரா. பொழிலிறுத்.24).* 2. முறித்தல்; to break. *"மாங்கனிப் பணை மட்டித்து" (கம்பரா. பொழிலிறுத்.25).* 3. பூசுதல்; to put on, clap on, daub, as sandal paste. *"குளிர்சாந்த மட்டித்து" (திவ்.நாய்ச்.6, 10).* 4. மெழுகுதல்; to cleanse, as the floor. *"மணிநிலஞ் சந்தனங் கொண்டு மட்டியா" (மேருமந்.629).* 5. பிசைதல்; to mix and knead. *"சுண்ணமொடு மட்டித்துக் கலந்த குங்குமக் கொழுஞ் சேறு" (பெருங். உஞ்சைக்.40, 222–3).* 6. உறுதி செய்தல்; to ascertain, discover determine.

*[முட்டு→மட்டு→மட்டி–.]*

**மட்டி⁵** *matti,* பெ.(n.) மண்டலிக்கை; coiling, as of a snake, circuling as of a wrestler. *"மட்டியே முதலாவுள்ள மற்றொழிலின்" (பாரத.சடாசுர.18).*

மட்டிக்கம்பிவேட்டி *maṭṭi-k-kambi-vēṭṭi,* பெ.(n.) பொடிக் கம்பிக்கரையுள்ள முருட்டு வேட்டி (இ.வ.); coarse cloth with a narrow line border, worn by men.

*[மட்டுக்கம்பி →மட்டிக்கம்பி + வேட்டி.]*

மட்டிக்காய் *maṭṭi-k-kāy,* பெ.(n.) மட்டிக் கொடியின் காய்; fruit of *maṭṭi-k-koḍi* (சா.அக.).

மட்டிக்காரை *maṭṭi-k-kārai,* பெ.(n.) பரும்படியாக அரைத்த சுண்ணச்சாந்து; coarse or rough plaster.

*[மட்டு→மட்டி + காரை.]*

மட்டிக்கொடி *maṭṭi-k-koḍi,* பெ.(n.) ஒரு வகைச் செடி; a plant (சா.அக.).

மட்டிகேயம் *maṭṭi-kēyam,* பெ.(n.) விளாத்தி மரம்; a tree (சா.அக.).

மட்டிகை *maṭṭigai,* பெ.(n.) களத்தில் வைக்கோல் அரிக்கட்டு முதலியவற்றின் மேல் இடுஞ்சாணி முத்திரை; seal of cowdung put upon bundled sheats of paddy of straw on the threshing floor or upon corn sacks (m.m.483).

*[மட்டு→மட்டி →மட்டிகை.]*

மட்டிச்சிப்பி *maṭṭi-c-cippi,* பெ.(n.) சிப்பி மீனோடு (வின்.); oyster shell.

*[மட்டி + சிப்பி.]*

மட்டிடு-தல் *maṭṭiḍu-,* 17 செ.குன்றாவி.(v.t.) மட்டறி- பார்க்க (வின்.); see *maṭṭaṟi-,*

*[மட்டு →மட்டிடு-தல்.]*

மட்டித்தனம் *maṭṭi-t-taṉam,* பெ.(n.) மூடத்தனம்; stupidity, foolishness.

*[மட்டு →மட்டித்தனம்.]*

மட்டித்தாள் *maṭṭi-t-tāḷ,* பெ.(n.) கரட்டுத்தாள், மட்டமான தாள்; coarse paper.

*[மட்டு →மட்டி + தாள்.]*

மட்டித்தேயம் *maṭṭi-t-tēyam,* பெ.(n.) வெள்ளைக் கருங்காலி மரம்; a tree (சா.அக.).

மட்டித்தையல் *maṭṭi-t-taiyal,* பெ.(n.) பரும்படித் தையல் (வின்.); coarse sewing.

*[மட்டு→மட்டி + தையல்.]*

மட்டிப்படைக்கலம் *maṭṭi-p-paḍai-k-kalam,* பெ.(n.) மட்டி$^3$ பார்க்க (திவா.); see *maṭṭi.*

*[மட்டி$^3$ + படைக்கலம்.]*

மட்டிப்பாம்பு *maṭṭi-p-pāmbu,* பெ.(n.) ஒரு வகை பாம்பு; a variety of snake (சா.அக.).

*[மட்டி + பாம்பு.]*

மட்டிப்பால் *maṭṭi-p-pāl,* பெ.(n.) 1. மரவகை; entireleaved tree of heaven, l.tr. *Ailanthus mala-baricus.* 2. நறுமணப் பொருள் வகை; ailanthus balsam.

மட்டிப்பாலை *maṭṭi-p-pālai,* பெ.(n.) மட்டிப்பால் பார்க்க; see *maṭṭi-p-pāl.*

மட்டிப்புடவை *maṭṭi-p-puḍavai,* பெ.(n.) முருட்டுச் சீலை; coarse cloth worn by women.

*[மட்டி + புடவை.]*

**மட்டிமீன்** *maṭṭi-mīṉ*, பெ.(n.) மீன் வகை; a kind of fish. *"பருந்துவாயன் மட்டிமீன் பாரக் கெண்டை" (பறாளை.பள்ளு.15).*

*[மட்டி + மீன்.]*

**மட்டியம்** *maṭṭiyam*, பெ.(n.) தாள வகையு ளொன்று (பரத.தாள.19); a variety of time-measure one of *catta-tāḷam.*

**மட்டியூர்நிலவளவுகோல்** *maṭṭiyūr-nila vaḷavukōl*, பெ.(n.) கோச்சடையன் வீரபாண்டியனின் 5ஆவது ஆட்சியாண்டில் திருமயம் வட்டத்தில் வழக்கிலிருந்த ஒரு வகை அளவுகோல்; a measurement of *Tirumayam vattam* at the period of *Kōccaḍaiyaṉ-vīrapāṇḍiaṉ. "நிலம் முக்காணி முந்திரிகையும் மட்டியூர் நிலவளவுகோலால் இப்பழந்தேவதாநம் நீங்கலாக" (புது.கல்.361/2).*

**மட்டிலை** *maṭṭilai*, பெ.(n.) பச்சிலை (தைலவ. தைல.); mysore gamboge.

**மட்டிவாய்¹** *maṭṭivāy*, பெ.(n.) 1. திறந்தகன்ற வாய்; gaping mouth. 2. மட்டிவாயன், 3 பார்க்க; see *maṭṭi-vāyaṉ.*

*[மட்டி + வாய்.]*

**மட்டிவாய்²** *maṭṭivāy*, பெ.(n.) மங்கிய சிவப்பு நிறமுள்ளதும் ஓரடி வளர்வதுமான கடல்மீன் வகை; a sea-fish pale dull red, attaining one foot in length, scolopsis vosmerti.

*[மட்டி + வாய்.]*

**மட்டிவாயன்** *maṭṭi-vāyaṉ*, பெ.(n.) 1. திறந்தகன்ற வாயையுடையவன்; one who has a gaping mouth. 2. முப்பது விரலம் வளரக் கூடியதும் சாம்பல் நிறமுள்ளதுமான மீன்வகை; black rock-cod, silvery grey, attaining 30 in. in length, sparus berda. 3. 18 விரலம் வளர்வதும் சாம்பல் நிறமுள்ளதுமான கடல் மீன் வகை; a sea-fish, silver-grey, attaining 18 in. length *chrysophrys datria.*

*[மட்டி + வாயன்.]*



**மட்டிவாழை** *maṭṭi-vāḻai*, பெ.(n.) வாழை வகை (நாஞ்.); a kind of plantain.

*[மட்டி + வாழை.]*

**மட்டிவேலை** *maṭṭi-vēlai*, பெ.(n.)1. பரும்படியான வேலை; rough work opp. to fine work. 2. திறமை வேண்டாத வேலை; work not requiring inteligence or skill.

*[மட்டி + வேலை.]*

**மட்டு¹** *maṭṭu*, பெ.(n.) 1. அளவு; measure, quantity, standard, degree, size, proportion, amount. 2. எல்லை; limit, extent, boundary, scope, range. *"வடிவுக்கோர் மட்டுண்டாமோ" (ஞானவா. தேவா.1).* 3. குத்து மதிப்பு; estimate, conjecture, as from the eye-sight. 4. அளவு; moderateness, tolerableness. 5. பொதுத் தன்மை; that which is middling

or common place. *"மட்டாய்ச் செலவிடு" (உ.வ.).* 6. நிலவளவு வகை; a standard of land measurement. 7. மட்டம்¹ பார்க்க; see *maṭṭam.*

*[முல் (பொருந்தற் கருத்து வேர்)→முள்→முட்டு→மட்டு (வே.க.4:65).]*

ஒள்றோடொன்று முட்டுகிற நிலையிலேயே ஒன்றன் நீள அளவு தெரியும்.

மட்டு² *maṭṭu,* பெ.(n.) 1. கருவி (திவா.); a weapon. 2. கிளிஞ்சல் வகை; calm. 3. மீன் வகை; meretrix. 4. ஒரு வகை மரம்; a kind of tree.

மட்டு³ *maṭṭu,* பெ.(n.) 1. தேன்; honey. *"மட்டுவாயவிழ்ந்த தண்டார்" (சீவக.1145).* 2. கள்; toddy, fermented liquor. *"வெப்புடைய மட்டுண்டு" (புறநா.24).* 3. சாறு; sweet juice. *"கருப்பு மட்டுவாய் மடுத்து" (திருவாசக.5, 80).* 4. உடலுறவின்போது கிளர்ச்சி யுண்டாவதற்காகப் பருகும் பருகம்; drink taken at the time of sexual union. *"மட்டுடை மணமகள்" (சீவக.98).* 5. மது வைக்குஞ் சாடி; liquor jar. *"மட்டுவாய் திறப்பவும்" (புறநா. 113).* 6. மணம்; fragrant smell. *"மட்டுநீறொடும்" (இரகு. இரகுவுற். 23).*

*[முல்→ முள்→முட்டு→முத்து. முத்துதல் = பொருந்துதல், ஒத்தல், கலத்தல். முத்து→மத்து = கலப்பு, கலக்கம், மயக்கம், மயக்கஞ் செய்யும் பித்தம், மயக்கம் தரும் கள், தீங்கள்ளாகிய தேன், பித்தமுண்டாக்கும் ஊமத்தை. மத்து→மட்டு (வே.க.4:67).]*

மட்டுக்கட்டு¹-தல் *maṭṭu-k-kaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. ஒரு நிலைக்கு வருதல்; to form a judgement after observation. 2. இனமறிந்து கொள்ளுதல்; to recognise identify. 3. அனுமானித்தல்; to infer. 4. உணர்தல்; to comperhend. 5. மதிப்பிடுதல்; to estimate. 6. அளவுக் குட்படுதல்; to stint, limit. 7. தடுத்தல்; to hinder.

*[மட்டு² + கட்டு-.]*

மட்டுக்கட்டு²-தல் *maṭṭu-k-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) சரிநிலைக்கு வருதல்; to be brought to the normal condition or limits.

*[மட்டு + கட்டு-.]*

மட்டுக்குமிஞ்சு-தல் *maṭṭukku-miñcu-,* 5 செ.கு.வி. (v.i.) அளவு கடத்தல்; to exceed bounds, as in eating, to be excessive, as prices.

*[மட்டுக்கு + மிஞ்சு-.]*

மட்டுக்குழி *maṭṭu-k-kuḻi,* பெ.(n.) அளவாக வெட்டிய குழி; excavated pit. *"அதனைச் சூழப் பறித்துக் கிடக்கின்ற மட்டுக் குழிகளினுள்ளே" (பெரும்பாண்.108, உரை).*

*[மட்டு + குழி.]*

மட்டுக்கோணம் *maṭṭu-k-kōṇam,* பெ.(n.) நேர்கோணம் (யாழ்.அக.); right angle.

*[மட்டு + கோணம்.]*

மட்டுக்கோல் *maṭṭu-k-kōl,* பெ.(n.) அளவு கழி; measuring rod.

*[மட்டு + கோல்.]*

மட்டுத்தப்பு¹-தல் *maṭṭu-t-tappu,* 5 செ.கு.வி.(v.i.) 1. இலக்குத் தவறுதல்; to miss an aim; to take a wrong direction.

2. மதிப்புத் தவறுதல்; to exceed propriety, to behave or speak disrespectfully or impolitely. 3. அளவு கடந்து செலவிடுதல்; to live extravagantly. 4. அளவு மிஞ்சுதல்; to act conceitedly, to assume airs.

*[மட்டு + தப்பு-.]*

மட்டுத்தப்பு² *mattu-t-tappu,* பெ.(n.) சரி கவனமின்மை; impropriety, immoderation.

*[மட்டு + தப்பு.]*

மட்டுத்திட்டம் *mattu-t-tittam,* பெ.(n.) 1. மதிப்பு; guess, estimate, conjecture. 2. அளவு; extent, amount, limit. 3. நடத்தை; character, worth, merit.

*[மட்டு + திட்டம்.]*

மட்டுப்படு-தல் *mattu-p-padu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. அளக்கப்படுதல்; to be measured, gauged. 2. வரையறைப்படுதல்; to be limited, circumscribed, curbed. *"மட்டுப் படாக் கொங்கை மானார்" (தனிப்பா.1, 149, 54).* 3. உணரப்படுதல்; to be comprehended, understood. 4. குறைதல்; to decrease, grow less.

*[மட்டு + படு-.]*

மட்டுப்பால் *mattu-p-pāl,* பெ.(n.) மட்டிப்பால் பார்க்க (பதார்த்த.116); see *matti-p-pāl.*

மட்டுப்பிடி-த்தல் *mattu-p-pidi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. இனமறிந்து கொள்ளுதல்; to recognise, identify. 2. உணர்தல்; to comprehend. 3. தீர்மானம் செய்தல்; to decide, determine. 4. அளத்தல் (இ.வ.); to measure.

*[மட்டு + பிடி-.]*

மட்டுப்பிரமாணம் *mattu-p-piramāṇam,* பெ.(n.) சரியளவு (யாழ்.அக.); correct measure.

மட்டும் *mattum,* பெ.அ.(adv.) 1. வரை; until, so far, as far as. *'அந்த ஊர் மட்டும் போவோம்' (உ.வ.).* 2. மாத்திரம்; only. *'நீ மட்டும் போகலாம்' (உ.வ.).*

*[மட்டு = எல்லை. மட்டும் = (இட எல்லை, ஆள் எல்லை) எல்லை வரையறுப்பு.]*

மட்டுமதிப்பு *mattu-madippu,* பெ.(n.) 1. தகுதிக்கேற்ற மதிப்பு; due regard for another's character or rank, politeness. 2. நன்னடை; good behaviour.

*[மட்டு + மதிப்பு.]*

மட்டுமதியம் *mattu-madiyam,* பெ.(n.) 1. சரியளவு; actual measurement. 2. நடுவளவு; moderation. 3. மட்டுத்திட்டம் பார்க்க; see *mattu-t-tittam.*

*[மட்டு + Skt. மத்திய→மதியம்.]*

மட்டுமரியாதை *mattu-mariyādai,* பெ.(n.) மட்டுமதிப்பு பார்க்க; see *mattu-madippu.*

*[மட்டு + Skt. மரியாதை.]*

மட்டுமருங்கு *mattu-marungu,* பெ.(n.) மட்டு மதிப்பு பார்க்க; see *mattu-madippu.*

*[மட்டு + மருங்கு.]*

மட்டுமிஞ்சு-தல் *mattu-miñju-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. அளவு மிஞ்சுதல்; to be excess in proportion. 2. அளவு தப்புதல்; to go wrong in proportion.

மட்டுவாயூடகம் *maṭṭu-vāy-ūḍagam,* பெ.(n.) 1. வெண்ணிறமுள்ள கடல் மீன்வகை; sea-fish, silvery, Gerreslucidus. 2. வெண்ணிற முடையதும் நாலரைவிரற்கடை வளர்வதுமான கடல்மீன் வகை; a sea-fish, silvery, attaining 4 1/2 inch in length, Gerres setifer.

மட்டை[1] *maṭṭai,* பெ.(n.) 1. தெங்கு, பனை முதலியவற்றின் மடல்; leaf-stalk of fern or palm, stem of plantain. 2. தேங்காயின் மேல் தோடு; husk of coconut. 3. 4500 வெற்றிலை அல்லது 45 கவுளி கொண்ட வெற்றிலைக்கட்டு; a bundle of 4500 betel leaves. 4. பந்தடிக்கும் மட்டை; bat. 5. பாம்பு; snake. *"மட்டையிடம் குட்டி வலம்" (பழ.).*

*[மட்டு →மட்டை.]*

மட்டை[2] *maṭṭai,* பெ.(n.) 1. மொட்டை; baldness. *"கொய்யப்பட்ட மட்டையாகிய தலையுடனே" (புறநா.261, உரை).* 2. உடற் குறை; headless body, trunk. 3. மூடன்; stupid fellow.

*[மொட்டை →மட்டை.]*

மட்டை[3] *maṭṭai,* பெ.(n.) 1. பயனற்றவ–ன்–ள்–து; worthless person or thing. *"இந்த மட்டைக் கிறுத்த தெல்லா போதும்" (விறலிவிடு.889).* 2. மட்டமான நெல்; a variety of paddy, as inferior. 3. மாசுள்ள நென்மணி; coarse grain in paddy.

*[முல் (பொருந்தற் கருத்து வேர்)→முள்→ முட்டு→மட்டு = அளவு, எல்லை, குத்து மதிப்பு, சிறுமை, தாழ்வு, குறைவு, அடக்கம், சிக்கன அளவு, ஒப்பு. மட்டு→மட்டை (வே.க.4:66).]*

மட்டைக்கங்கு *maṭṭai-k-kaṅgu,* பெ.(n.) பனை முதலியவற்றின் மட்டையடியிலுள்ள ஓலை; leaves on either side of the lower part of palmyra stem.

*[மட்டை + கங்கு.]*

மட்டைக்கட்டுவடலி *maṭṭai-k-kaṭṭuvaḍali,* பெ.(n.) மட்டை நிரம்பிய இளம்பனை; young *palmyra* tree thick with leaves.

*[மட்டைக்கட்டு + வடலி.]*

மட்டைக்குதிரை *maṭṭai-k-kudirai,* பெ.(n.) நெசவுக் கருவியின் ஒருறுப்பு; trestle for preparing the warp in weaving.

*[மட்டை + குதிரை.]*



மட்டைக்கொம்பு *maṭṭai-k-kombu,* பெ.(n.) விலங்கின் விரி கொம்பு; horns of an animal extending side ways.

*[மட்டை + கொம்பு. மட்டை = விரிவது.]*

மட்டைக்கோரை *maṭṭai-k-kōrai,* பெ.(n.) கோரை வகை; smooth sedge, *Cyperus procerulus.*

*[மட்டை + கோரை.]*

மட்டைகட்டு-தல் *mattai-kattu-*, 5 செ.குன்றாவி. (v.t.) மட்டைவைத்துக்கட்டு-, பார்க்க; see *mattai-vaittu-k-kattu-*.

*[மட்டை + கட்டு-.]*

மட்டைகடி-த்தல் *mattai-kadi-*, 4 செ.கு.வி. (v.i.) பிள்ளைகள் உதடு கடித்தல்; to bite the lower lip, as a child.

*[மட்டை+கடி-.]*

மட்டைச்சாறு *mattai-c-cāru*, பெ.(n.) பனை மட்டைச்சாறு; juice of the stalk or stem of the leaf of palmyra (சா.அக.).

*[மட்டை+சாறு.]*

மட்டைச்சொண்டு *mattai-c-condu*, பெ.(n.) பெரிய உதடு; large lip.

*[மட்டை + சொண்டு.]*

மட்டைத்தும்பு *mattai-t-tumbu*, பெ.(n.) பனைநார்; fibre of the palmyra stem.

*[மட்டை + தும்பு.]*

மட்டைத்தேள் *mattai-t-tēl*, பெ.(n.)1. பிள்ளைத் தேள்; a kind of scorpion. 2. பூரான் வகை; a kind of centipede.

*[மட்டை + தேள்.]*

மட்டைதட்டு¹-தல் *mattai-tattu-*, 5 செ.கு.வி. (v.i.) தென்னை மட்டையை நசுக்கி நாரெடுத்தல்; to beat the integument of the coconut to form coir.

*[மட்டை + தட்டு-.]*

மட்டைதட்டு²-தல் *mattai-tattu-*, 5 செ.கு.வி. (v.i.) ஏழையாதல்; to become poor.

*[மட்டை + தட்டு-.]*

மட்டைப்படல் *mattai-p-padal*, பெ.(n.) பனை மட்டையாலாகிய வேலி; fence of palmyra stems.

*[மட்டை + படல்.]*

மட்டைப்பூச்சி *mattai-p-pūcci*, பெ.(n.) புழு வகை; tape-warm.

*[மட்டை + பூச்சி.]*

மட்டைப்பூசை *mattai-p-pūšai*, பெ.(n.) மட்டையடி³-, 2 பார்க்க; see *mattai-y-adi-*.

*[மட்டை + பூசை.]*

மட்டையடி¹-த்தல் *mattai-y-adi-*, 4 செ.கு.வி. (v.i.) 1. வறுமையால் வருந்துதல்; to suffer from destitution. 2. பிறன் பொருட்டுத் தொல்லைமேற் கொள்ளுதல்; to worry oneself in another's cause.

*[மட்டை + அடி-.]*

மட்டையடி²-த்தல் *mattai-y-adi-*, 4 செ.குன்றாவி. (v.t.) பகடி பண்ணுதல்; to ridicule.

*[மட்டை + அடி-.]*

மட்டையடி³-த்தல் *mattai-y-adi-*, பெ.(n.) 1. ஆண் தெய்வத்துக்கும் அம்மனுக்கும் உள்ள காதற் கலகத்தைக் குறிக்கோளாய்க் கொண்டு தேவரடியாரும் கோயிற் பணியாளர்களும் அவரவர்க்கும் முறையே படிநிகராளிகளாய் நின்று நடத்தும் கோயிற்றிருவிழா; a temple festival in which dancing girls and temple servants take sides representing the Goddess and the God respectively and enact their love-quarrel. 2. இகழ்ச்சிக் குறியாகத்

தேங்காய் மட்டையால் அடிக்கை; beating with the coconut husk, in contempt. 3. பகடி (இ.வ.); ridicule.

*[மட்டை + அடி–.]*

**மட்டையடியடி¹–த்தல்** *maṭṭai-y-aḍi-aḍi-*, 4 செ.குன்றாவி.(v.t.) வாழை மட்டையால் அடித்து விளையாடுதல்; to beat with plaintain stems in sport.

*[மட்டையடி + அடி–.]*

**மட்டையடியடி²–த்தல்** *maṭṭai-y-aḍi-aḍi-*,4 செ.கு.வி.(v.i.) 1. விருந்து பண்ணாம விருத்தல்; to receive impolitely. 2. ஏளனமாகப் பேசுதல் (இ.வ.); to use obscene language.

*[மட்டையடி + அடி–.]*

**மட்டையடியாகச்செய்தல்** *maṭṭai-y-aḍiyāga-c-ceydal*, பெ.(n.) 1. வேறுபாடில்லாமல் ஒரேயடியாக செய்யப்படும் செய்கை; doing the same thing for all account. 2. புரிந்து கொள்ளாமல் ஒரே செயலை எந்த விடத்தும் செய்யும் செய்கை; doing the samething for all place without understanding.

**மட்டையர்** *maṭṭaiyar*, பெ.(n.) சமணர்; jains, as bald-headed. *"துவரியாடையர் மட்டையர் சமண் தொண்டர்கள்" (திவ். பெரியதி. 2, 1, 6).*

*[மொட்டை → மட்டை → மட்டையர்.]*

**மட்டைவைத்துக்கட்டு¹–தல்** *maṭṭai-vaittu-k-kaṭṭu-*, 5 செ.குன்றாவி.(v.t.) 1. கூடையின் மேற்பகுதியைப் பனை மட்டையின் பிளந்த சிம்பு வைத்துப் பின்னுதல்; to fasten the top of a basket with fibres of palmyra stem. 2. உடைந்த எலும்புகள் கூடும்படி மரச்சிம்பு வைத்துக் கட்டுதல்; to fasten splints on a broken limb.

*[மட்டைவைத்து + கட்டு–.]*

**மட்டைவைத்துக்கட்டு²–தல்** *maṭṭai-vaittu-k-kaṭṭu-*, 5 செ.கு.வி.(v.i.) ஒருவன் குறையைத் தாங்கிப் பேசுதல்; to support another in his fault.

*[மட்டைவைத்து + கட்டு–.]*

**மட்பகை** *maṭ-pagai*, பெ.(n.) 1. மட்கலத்தை அறுக்குங் கருவி; potter's instrument for paring clay. 2. மட்பகைவன் பார்க்க; see *maṭ-pagaivaṉ*.

*[மண் + பகை.]*

**மட்பகைஞன்** *maṭ-pagaiñaṉ*, பெ.(n.) மட்பகைவன் பார்க்க; see *maṭ-pagaivaṉ*.

*[மண் + பகைஞன்.]*

**மட்பகைவன்** *maṭ-pagaivaṉ-*, பெ.(n.) குயவன் (சூடா.); potter.

*[மண் + பகைவன்.]*



மட்பலகை *maṭ-palagai,* பெ.(n.) சுடாத செங்கல்; unburnt brick. *"திருப்பணிக்குப் பயிலுஞ் சுடுமட் பலகை பலகொணர் வித்து" (பெரியபு. ஏயர்கோ.49).*

*[மண் + பலகை.]*

மட்பனை *maṭ-paṉai,* பெ.(n.) நிலப்பனை; moosly root.

*[மண் + பனை.]*

மட்பாண்டம் *maṭ-pāṇḍam,* பெ.(n.) மண்ணால் செய்த ஏனங்கள்; earthern vessels.

*[மண் + பாண்டம்.]*

மட்பாம்பு *maṭ-pāmbu,* பெ.(n.) நிலத்தைத் தாங்குவதாகத் தொன்மங்களால் கருதப் படும் ஆயிரம் தலை கொண்ட பாம்பு; mythological thousand - headed serpent which supporting the earth. *"மட்பாம்பு நெளிய.... மிக்கு நடந்தது பெரும்படைச் சாத்து" (திருவாலவா. 39, 20).*

*[மண் + பாம்பு.]*

மடக்கடி *maḍa-k-kaḍi,* பெ.(n.) 1. கோணல்; crookedness. 2. சமமின்மை; uneveness, as of a road, bank, shore, etc. 3. ஏதம்; danger, peril, hazard. 4. சூழ்ச்சி; indirectness or crabbedness of an answer calculated to deceive. 5. தந்திரம்; stratagem, device, craft. 6. வலைக்குட் படுத்துகை; entrapping, entangling ensnaring.

*[மடக்கு + அடி.]*

மடக்கம் *maḍakkam,* பெ.(n.) 1. வளைவு; flexure, crook. 2. வணக்கம்; reverence, veneration. 3. பணிவு; subjection, subordination, compliance, conformity. 4. மனவடக்கம்; restraint, limitation. 5. நோய் திரும்புகை (நாஞ்.); return, relapse, as of fever.

*[முல் (வளைதற் கருத்துவேர்)→முள்→ முடங்கு→மடங்கு→மடக்கு = வளைவு, மூலை முடக்கு, தடுப்பு, தடை. மடக்கு→மடக்கம் (வே.க.4:82).]*

மடக்கல் *maḍakkal,* பெ.(n.) முடக்கல்; bending as in limbs - flexing.

*[முடக்கல்→மடக்கல்: உகர அகரத்திரிவு (ஒ.நோ.) குடைதல்→கடைதல்.]*

மடக்கனியான் *maḍakkaṉi-y-āṉ,* பெ.(n.) ஓணான்; lizard.

மடக்காணி *maḍa-k-kāṇi,* பெ.(n.) மடத்துக்கு விடப்பட்ட நிலம்; donates land for abbey. *"திருவீழிமிழலை திருநாவுகரசன் மடக் காணி" (திரு.வீழி.கல்.573/1977).*

*[மடம் + காணி. காணி = நிலம்.]*

மடக்கிடு-தல் *maḍakkiḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) 1. மேற்செல்லாது தடுத்து வைத்தல்; to check, to keep within certain limits. *"மடக்கிடன் மனமொடு" (பெருங். உஞ்சைக். 34, 50).* 2. வாய்மடுத்தல் (ஈடு.2, 3, 9, ஜீ); to swallow at a single draught.

*[மடக்கு + இடு-.]*

மடக்கியல் *maḍakkiyal,* பெ.(n.) சுரிதகம் (யாழ். அக.); last member of a *Kalippā.*

*[மடக்கு + இயல்.]*

மடக்கிளி *mada-k-kili*, பெ.(n.) 1. இளங் கிளி; young parrot. *"சிறையாரு மடக்கிளியே யிங்கேவா" (தேவா.).* 2. பெண்; woman, charming like a parrot. 3. நீலங்கலந்த சாம்பல் நிறமுள்ளதும் பதின்மூன்று விரற்கடை வளரக் கூடியதுமான கடல்மீன் வகை; a sea-fish, bluish grey, attaining 13 inch in length, *therapon jarbua.*

மடக்கிறால்¹ *madakkiral*, பெ.(n.) மீன் வகையு ளொன்று; a kind of fish.

மடக்கிறால்² *madakkiral*, பெ.(n.) சிப்பிமீன் வகை; prawn, *astacus carcinus.*

மடக்கீதம் *madakkidam*, பெ.(n.) ஒருவகை நஞ்சு; a kind of arsenic.

மடக்கு¹-தல் *madakku-*, 5 செ.குன்றாவி.(v.t.) 1. மடித்தல்; to bend, as the arms, knees, to draw in, fold, shut, as knife, to double, to deflect. *"வால்விசைத் தெடுத்து வன்றாண் மடக்கி" (கம்பரா.கடறாவு.17).* 2. திருப்புதல்; to turn about, as a horse, carriage or vessel, to turn back. *"தடுத்திடை மடக்குதன் மானும்" (காஞ்சிப்பு. நகர.6).* 3. மாறிமாறிச் செய்தல்; to repeat. 4. வென்று கீழ்ப்படுத்துதல்; to subdue, as in war, conquer, to surpass. 5. வாயடக்குதல்; to stop by argument or sophistry; to confute, to over power. 6. கால்நடை முதலியவற்றை ஒருசேர அடக்கி வைத்தல்; to compress; to restrain; to keep together, as cattle in a row. *"இந்த வயலுக்கு ஒருநாள் மாட்டுக்கடை மடக்க வேண்டும்" (உ.வ.).* 7. பண்டம் முதலியவற்றைத் தன் வசப்படுத்துதல்; to engage, as a servent, to secure for oneself, as an article or cargo, preventing others from obtaining it. 8. தடுத்தல்; to stop or hinder, as proceedings, to quash. 9. அழித்தல்; to destroy; to kill. *"மடக்கு வாயுயிரை யென்னா" (கம்பரா. கும்பக. 188).* 10. பணிவாக்குதல்; to tame, humble. 11. உடற்கட்டுக் குலைதல்; to break the constitution as disease. 12. மருந்து முதலியவற்றின் கடுமை முதலியவற்றை முறித்தல்; to counteract, as force; to reduce, as the power of a medicine, the action of a poison; to check, as a fire from spreading. 13. தவச அரியறுத்தல்; to reap, as sheaves of corn. 14. உடுத்துதல்; to wear around the waist, as a garment. *"மடக்கினார் புலியின் றோலை" (தேவா.955, 1).* 15. ஒதுக்கிக் கட்டுதல்; to parcel out and enclose, as a piece of land.

மடக்கு²-தல் *madakku-*, 5 செ.கு.வி.(v.i.) திரும்பத் திரும்ப வருதல்; to recur, as letters or words. *"ஒரெழுத்து மடக்கலும்" (தண்டி.95).*

*[முல் = வளைதல் பொருள். முல்→முள்→முண்→முணவு→முணகு→முணங்கு→முணங்குதல் = வளைதல். முன்→முணம்→முடம் = வளைவு. முடம்→முடவு. முடவுதல் = நொண்டுதல். முடம்→முடங்கு. முடங்குதல் = வளைதல். முடங்கு→முடக்கு = வளைவு. முடக்கு→மடக்கு (வே.க.4:82).]*

மடக்கு³ *madakku*, பெ.(n.) 1. மூலைமுடுக்கு; bend, crook, flexure; corner. 2. வளைவு (கொ.வ.); inflection, deflection, refraction. 3. திருப்பு (இ.வ.); turn. 4. மடிப்பு; fold; folding, as of a knife or table. 5. மடக்குக் கத்தி பார்க்க; see *madakku-k-katti.* 6. தடை; curb, check, rebuff. 7. மாறிமாறி வருகை; repetition, constant recurrence.

8. தாறுமாறு; zigzag course. 9. நிலவளவு வகை; superficial measure of land, 1/2 acre, as a turn of ploughing cattle (G.Sm.D.I.i, 288). 10. செய்யுளில் சொல்சீர் முதலியன பொருள் வேறுபட்டு மீண்டும் மீண்டும் வருவதாகிய சொல்லணி வகை (தண்டி.90); repetion of a word, foot or line of poetry, in a stanza each time in a different sense. 11. ஒருதடவையில் உட்கொள்ளக் கூடிய நீர் (இ.வ.); mouthful of liquid swallowed at a time. 12. நூல்; thread.

*[முடங்கு →மடங்கு →மடக்கு.]*

மடக்கு[4] *maḍakku,* பெ.(n.) அளந்த நிலத்தின் வரி மதிப்பிற்குச் சமமான நிலம்; tax equivalent land area for newly measured land. *(ஆவணம் 1991, 10 – iii (1) அதிஇராசேந்திரனின் 3ஆம் ஆண்டு கல்வெட்டு (கி.பி.1070), அரியலூர் வட்டம் பெரிய திருக்கோணம் சௌந்தர பெருமாள் கோயில்).*

மடக்கு[5] *maḍakku,* பெ.(n.) பெரிய மண்ணகல், மண் ஏனம் மூடி; a large earthern plate.

மடக்குக்கட்டி *maḍakku-k-kaṭṭi,* பெ.(n.) மடக்குக் கவிழ்த்தது போலிருக்கும் ஒருவகை கட்டி; a kind of abscess to resemble an Indian saucer in its shape (சா.அக.).

*[மடக்கு + கட்டி.]*

மடக்குக்கட்டில் *maḍakku-k-kaṭṭil,* பெ.(n.) மடிக்கக்கூடிய கட்டில் (இக்.வ.); folding cot.

*[மடக்கு + கட்டில்.]*

மடக்குக்கத்தரி *maḍakku-k-kaṭṭari,* பெ.(n.) மடக்கி வைக்கும் சிறிய கத்தரிக் கோல் வகை (இ.வ.); folding scissors.

*[மடக்கு + கத்தரி.]*

மடக்குக்கத்தி *maḍakku-k-katti,* பெ.(n.) பிடிக்குள் மடக்கி வைக்குங் கத்தி வகை (இ.வ.); folding knife, clasp knife.

*[மடக்கு + கத்தி.]*



மடக்குக்கதவு *maḍakku-k-kadavu,* பெ.(n.) மடிப்புள்ள கதவு வகை; folding door.

*[மடக்கு + கதவு.]*

மடக்குக்கால்[1] *maḍakku-k-kāl,* பெ.(n.) வளை கால்; bandy leg.

*[மடக்கு + கால்.]*

மடக்குக்கால்[2] *maḍakku-k-kāl,* பெ.(n.) முட்டுக்கால்; support, prop.

*[மடக்கு + கால்.]*

மடக்குக்குடர் *maḍakku-k-kuḍar,* பெ.(n.) குடற்பகுதி; large intestings.

*[மடக்கு + குடர். குடல் →குடர்.]*

மடக்குச்சுரம் *madakku-c-curam,* பெ.(n.) மாறிமாறி வரும் காய்ச்சல்; a fever constantly recurring, intermittent fever.

*[மடக்கு+சுரம். மடக்கு = திருப்பு, திரும்பத் திரும்ப.]*

மடக்குத்தூரம் *madakku-t-tūram,* பெ.(n.) மடக்குத்தொலைவு பார்க்க; see *madakku -t-tolaivu.*

*[மடக்கு + தூரம்.]*

**Skt.** தூரம்; த. தொலைவு.

மடக்குத்தொலைவு *madakku-t-tolaivu,* பெ. (n.) அணைப்புத் தூரம் (இ.வ.); distance through which the furrow is turned.

*[மடக்கு + தொலைவு.]*

மடக்குநாற்காலி *madakku-nārkāli,* பெ.(n.) மடக்கக்கூடிய இருக்கை; folding chair.

*[மடக்கு + நாற்காலி.]*

மடக்குநீட்டு *madakku-nīṭṭu,* பெ.(n.) திருமுகவோலை; royal writ.

*[மடக்கு + நீட்டு.]*

மடக்குப்பிடிக்கத்தி *madakku-pidi-k-katti,* பெ.(n.) மடக்குக்கத்தி பார்க்க; see *madakku-k-katti.*

*[மடக்குப்பிடி + கத்தி.]*

மடக்குமடக்கெனல் *madakku-madakkenal,* பெ.(n.) நீர் குடிப்பதிலுண்டாகும் ஓர் ஒலிக்குறிப்பு; onom, expr. signifying gurgling of water in drinking.

மடக்குமண்டா *madakku-mandā,* பெ.(n.) மீன்பிடி கருவி வகை; a kind of fishing instrument (க.ப.அக.).

மடக்குமேசை *madakku-mēšai,* பெ.(n.) கால்களை மடக்கி வைத்தற்குரிய மேசை; folding table.

*[மடக்கு + மேசை.]*

மடக்குயில் *mada-k-kuyil,* பெ.(n.) குயில் போன்ற குரலினையுடைய பெண்; woman having a sweet voice like the koel.

*[மழ →மழம்→மடம் + குயில்.]*

மடக்குவரி *madakku-vari,* பெ.(n.) 1. இரண்டாம் விளைச்சலின் மேல் விதிக்கும் வரி; additional tax, as for a second corp. 2. வரிமேல் வரி; additional cess.

*[மடக்கு + வரி.]*

மடக்கெழுத்தாணி *madakkeluttāni,* பெ.(n.) கத்தியுடன் பிடிக்குள் அடங்கும் எழுத்தாணி வகை; folding style with knife.

*[மடக்கு + எழுத்தாணி.]*



மடக்கெனல் *madakkenal,* பெ.(n.) மடக்குமடக்கெனல் பார்க்க; see *madakku-madakkenal.*

*[மடக்குமடக்கெனல்→ மடக்கெனல்.]*

**மடக்கொடி** *mada-k-kodi,* பெ.(n.) இளம் பெண்; young woman, as tender. *"ஒரு மடக் கொடியாகி வந்து" (கம்பரா.அகலி.51). "மாபெரும் பாத்திரம் மடக்கொடி பெற்றனை" (மணிமே.).*

*[மழ→மழம்→மடம். மடம் + கொடி.]*

**மடங்கக்கூறு-தல்** *madanga-k-kūru-,* 5 செ.குன்றாவி.(v.t.) திரும்பக் கூறுதல்; to repeat. *"அவை.... மடங்கக்கூறல் வேண்டாவாம்" (தொல்.பொருள்.255, உரை).*

*[மடங்கு + கூறு-.]*

**மடங்கடி-த்தல்** *madangadi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. தோற்கச் செய்தல்; to subdue, suppress, restrain, repulse; to check, as in war or in argument; to put rout; to chase. 2. திரும்பச் செய்யும்படி பண்ணுதல் (இ.வ.); to compel, as a person, to re-do a thing.

*[மடங்கு + அடி-.]*

**மடங்கல்** *madangal,* பெ.(n.) 1. வளைகை; bending, being bent. 2. கோணம்; crook, angle, corner. 3. மீளுகை; returning. 4. மழுங்கிப் போகை; curving or blunting of the edge. 5. அடக்கம்; suppression, control. 6. ஒடுக்கம்; absorption. *"மைந்துடை யொரவனு மடங்கலுநீ" (பரிபா.1, 44).* 7. முடிவு; end. 8. இடி; thunderbolt. 9. வடவைத்தீ (பிங்.); submarine fire. *"மடங்கல் வண்ணங் கொண்ட கருந்திறல்" (பதிற்றுப்.628).* 10. ஊழிக்காலம்; termination of yuga. *"மடங்கற் காலை" (கலித்.120).* 11. கூற்றுவன்; God of death. *"மடங்கல் போற் சினைஇ" (கலித்.2).* 12. கூற்றுவனின் ஏவலர்; servant of God of death. *"தருமனு மடங்கலும்" (பரிபா.3, 8).* 13. அரிமா; lion. *"மடங்கலிற் சீறி மலைத் தெழுந்தார்" (பு.வெ.3, 24).* 14. அரிமா மாந்தன் (நரசிங்கம்); man-lion incarnation of *Tirumāl*. *"மடங்கலாய் மாறட்டாய்" (சிலப்.17, முன்னிலைப் பரவல், 3).* 15. யாளி; fabulous griffin. 16. நோய் வகை; a disease. 17. முற்றிவளைந்து சாய்ந்த கதிர் (இ.வ.); ripened sheaf of grain, prostrate in the field. 18. சம்பா அறுவடையான பின் விதைப்பி லுண்டாகும் கோடைப் பயிர் (இ.வ.); summer catch-corp. sown after *campā* has been reaped. 19. தாழை (அக.நி.); fragrant screw-pine.

*[முல் (வளைதற் கருத்துவேர்)→முள்→முண்→முண→முணவு→முணங்கு→முணங்குதல் = உள் வளைதல், உள்ளடங்குதல், அடங்குதல், குரலையடக்கிப் பேசுதல். முணங்கு = சோம்பலால் ஏற்படும் உடம்பு வளைவு, முடக்கம், சோம்பு, அடக்கம். முணங்கு→முடங்கு→முடக்கு = வளைவு, தெருவின் கோணம், முடக்கு (நெளி) மோதிரம். முடங்கும் நாக்கு, முடக்குநோய், தடை, காலத்தாழ்வு, வேலையின்மை. முடங்கு→மடங்கு → மடங்கல் (வே.க.4:82).]*

**மடங்கலர்** *madangalar,* பெ.(n.) பகைவர்; enemies, foes.

**மடங்கலூர்தி** *madangalūrdi,* பெ.(n.) கொற்றவை (அரிமா மீதமர்ந்தவள்); *Durgā*, as riding a lion.

*[மடங்கல் + ஊர்தி.]*

**மடங்கற்கணக்கு** *madangar-kanakku,* பெ.(n.) சாகுபடியான பயிரில் பலனைக் குறிக்கும் கணக்கு; accounts of the actual produce of a field.

*[மடங்கல் + கணக்கு.]*

மடங்கற்கொடியோன் *madaṅgaṟ-koḍiyōṉ*, பெ.(n.) வீமன் (சூடா.); *Bhima*, as having a lion banner.

*[மடங்கல் + கொடியோன்.]*

மடங்காநீர் *madaṅgā-nīr*, பெ.(n.) வற்றாத நீரூற்று (சினேந்.362, தலைப்பு); unfailing supply of water, as from a spring.

*[மடங்கா + நீர். 'ஆ' எதிர்மறை இடைநிலை.]*

மடங்கி *madaṅgi*, வி.எ.(adv.) இருந்து; on sitting posture. *"தலைப்போ கன்மையிற் சிறுவழி மடங்கி" (புறநா.223:2).*

மடங்கு¹-தல் *madaṅgu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. வளைதல் (பிங்.); to become bent, as the arm or leg. *"படையோன் முடங்கி மடங்கி" (கலித். 94, 9).* 2. முடங்குதல்; to be shut, closed, folded, as a knife or table. 3. கோணுதல்; to be inflected, deflected, refracted, bent out of place. 4. வளைந்து செல்லுதல்; to bend, turn, as a road, or river. 5. மீளுதல்; to turn about. 6. சொல் முதலியன திரும்ப வருதல்; to be repeated. *"என்று மடங்கக் கூறல் வேண்டாவாம்" (தொல். பொருள்.255, உரை).* 7. திருகுதல்; to be twisted, distorted, as a limb. 8. குறைதல்; to be diminished. *"மடங்கா விளையுள் வயலூரர்" (சிலப்.23:119).* 9. சுருங்குதல்; shrink. *"மூப்புக் காலத்து உடலின் தோல் மடங்கும்" (உ.வ.).* 10. ஒடுங்குதல்; to be absorbed. (திருக்கோ. 75, உரை). 11. நெளிதல்; to be battered. 12. கீழ்ப்படுதல்; to submit, yield, surrender. *"காரொலி மடங்க....... களத்தினார்த்த பேரொலி" (கம்பரா. நாகபாச.291).* 13. தாழ்தல்; to be humbled, tamed, reduced, as pride, to be broken down, as the constitution. *"இகழ்பாடுவோ ரெருத்த மடங்க" (புறநா.40, பாடபேதம்).* 14. செயலறுதல்; to be indolent, inactive. *"உழவினார் கைம்மடங்கின்" (குறள், 1034).* 15. சூடடங்குதல்; to be decreased in force, as the wind or heat, to yield, as a disease or poison to medicines or *mantras*. 16. நிறுத்தப் பெறுதல்; to be stopped, hindered, to be quashed, as proceedings. *"மண்டமரின்றொடு மடங்கும்" (கம்பரா.கும்ப.267).* 17. தடுக்கப்படுதல்; to be turned off, diverted, thrown back, as weapons. 18. வாயடங்குதல்; to be silenced by argument, by sophistry, by authority, to be checked, confuted, refuted. 19. சொத்துரிமையாளர் இறந்தபின் சொத்து முதலியன ஒருவன்பால் அடைந்து விடுதல் (கொச்சை.); to be lodged with one's as property on the death of the owner.

*[முல் (வளைதற் கருத்து வேர்)→முள்→முண். முண→முணவு→முணகு→முணங்கு. முணங்குதல் = உள்வளைதல், உள்ளடங்குதல், அடங்குதல், குரலையடக்கிப் பேசுதல். முணங்கு = சோம்பலால் ஏற்படும் உடம்புவளைவு, முடக்கம், சோம்பு, அடக்கம். முணங்கு→முடங்கு. முடக்கு = வளைவு, தெருவின் கோணம், முடக்கு மோதிரம் (நெளி). முடங்கும் நாக்கு, முடக்குநாய், தடை, காலத்தாழ்வு, வேலையின்மை. முடங்கு→மடங்கு.]*

மடங்கு² *madaṅgu*, பெ.(n.) 1. மடி, அளவு; measure, quantity, degree. *"இரு மடங்காக வெய்தும்" (சூளா.கல்யா.165).* 2. அடக்கம்; suppression, control. 3. மடங்குத்தீர்வை பார்க்க; see *madaṅgu-t-tīrvai*. 4. நோய் (யாழ்.அக.); disease. 5. இழைக் கயிறு (யாழ்.அக.); coir rope.

*[முல் (வளைதற்கருத்து வேர்)→முள்→முடங்கு→மடங்கு.]*

**மடங்கு[3]** *madangu,* பெ.(n.) 1. மணங்கு[3] பார்க்க; see *manangu.* 2. பங்கு; share, portion.

**மடங்குக்கட்டு-தல்** *madangu-k-kattu-,* 5 செ.கு.வி.(v.i.) வலையை அளவாகக் கட்டுதல்; tie the fishing net in the limited area.

**மடங்குத்தீர்வை** *madangu-t-tirvai,* பெ.(n.) தண்டவரி; penal assessment (R.T.).

*[மடங்கு + தீர்வை.]*

**மடங்குபலன்** *madangu-palan,* பெ.(n.) முற்றி வளைந்து சாய்ந்த கதிர்; ripened sheaf of grain, protrate in the field.

**மடங்கைப்பூடு** *madangai-p-pūdu,* பெ.(n.) எழுத்தாணிப் பச்சிலை எனுஞ்செடி; a plant whose flower shoots up in the form of a style.

**மடசாம்பிராணி** *madašāmbirāni,* பெ.(n.) மடையசாம்பிராணி 1, பார்க்க (இ.வ.); see *madaiya-šāmbirāni.*

*[மடையசாம்பிராணி→மடசாம்பிராணி.]*

**மடத்தனம்** *mada-t-tanam,* பெ.(n.) 1. மூட குணம்; stupidity, dullness. 2. மடம்[1],1 பார்க்க; see *madam.*

*[மடமை + தனம்.]*

**மடத்துவாசல்மறியல்** *madattuvāšal-mariyal,* பெ.(n.) நாட்டுக் கோட்டைச் செட்டிகள் மடத்து அதிகாரிகளை முன்னிட்டுக் கொண்டு செய்யும் பஞ்சாயத்து வகை; an old form of *pañcāyat* among *Nāttu-k-kōttai-c-cetties*, dist. fr. *Kōvil-vāšal-mariyal* (E.T.V.263).

*[மடத்துவாசல் + மறியல்.]*

**மடதருமம்** *mada-tarumam,* பெ.(n.) 1. மடத்துக்குச் செய்யும் தருமம்; donation to a mutt. 2. மடத்திற் புரியுந் தருமம்; alms given at a mutt.

*[மடம் + Skt. தருமம்.]*

**மடதாளம்** *mada-tālam,* பெ.(n.) மட்டிய தாளம் பார்க்க; see *mattiya-tālam.*

*[மட்டியதாளம்→மடதாளம்.]*

**மடதி** *madati,* பெ.(n.) ஆலங்கட்டி; hail stone (சா.அக.).

**மடந்தை[1]** *madandai,* பெ.(n.) 1. பெண்; woman, lady. *"இடைக்குல மடந்தை" (சிலப்.16:2).* 2. மகளிர் பருவம் ஏழனுள் பதினான்கு முதல் பத்தொன்பது அகவை வரையுள்ள பருவத்துப் பெண்; woman between the aged of 14 and 19. *"மங்கல மடந்தையை நன்னீ ராட்டிச்" (சிலப்.). "உடம்பொடு உயிரிடை என்னமற்று அன்ன மடந்தையொடு எம்மிடை நட்பு" (குறள், 1122).* 3. பருவமாகாத பெண் (யாழ்.அக.); girls who have not attained puperty. 4. சேம்புவகை (நாஞ்.); a kind of Indian kales.

*[முல் (இளமைக் கருத்துவேர்)→முள்→முளை. முளை = வித்தினின்று முளைத்த சிறுவெளிப்பாடு, இளமை, மரக்கன்று, சிறு பிள்ளை, மகன். முளை→முளையான் = சிறுகுழந்தை. முள்→மள்→மள்ளன் = இளைஞன், மறவன், படைமறவன், குறிஞ்சி நிலவாணர். மள்→மள→மழ = இளமை, குழந்தை. மழ→மழம்→மழல்→மழலை = இளமை, குழந்தைகளின் இனிய திருந்தாச் சொல். மழ→மழம்→மடம் = இளமை, இளமைக்குரிய மென்மை, இளமைக்குரிய அழகு, இளமைக்குரிய அறியாமை, பெண்பாற் குணம் நான்கனுள் கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமையாகிய பேதைமை. மழ→மட→மடம்→மடந்தை (வே.க.4:5).]*

**மடந்தை²** *madandai,* பெ.(n.) 1. மரமஞ்சள்; tree turmeric. 2. அரிதாரம்; orpiment.

**மடந்தையாயிரு-த்தல்** *madandai-y-āy-iru-,* 3 செ.கு.வி.(v.i.) மகப்பெறும் பருவத்தினளாதல்; to be of child-bearing age. *"அவள் மடந்தையா யிருக்கிறாள்" (உ.வ.).*

*[மடந்தையாய் + இரு-.]*

**மடநடை** *mada-nadai,* பெ.(n.) மென்னடை; gentle gait, as a women and children. *"மடநடை பெண்மை வனப்பென்ப தோராய்" (சீவக.2125).*

*[மள்→மழ→மழலை = இளமை, குழவி, மழ → மழம் →மடம் = இளமை. மடம் + நடை.]*

**மடநோக்கு** *mada-nōkku,* பெ.(n.) மருண்ட பார்வை; bashful, timid look. *"பெருமட நோக்கிற் சிறுநுதல்" (பு.வெ.11, 7).*

*[மடம் + நோக்கு.]*

**மடப்பசுதி** *mada-p-pašudi,* பெ.(n.) கருங் கூளி; a black vulture (சா.அக.).

**மடப்பதிங்கம்** *mada-p-padingam,* பெ.(n.) உளுந்து; black gram (சா.அக.).

**மடப்பதியினாம்** *mada-p-padiyiṉām,* பெ.(n.) பணியாளர்களுக்கு மோரும் உணவு மளிப்பதற்காக விடப்படும் இறையிலி நிலம் (இ.வ.); endowment for supplying butter-milk and food for public officers.

*[மடம்² + பதி + உருது. இனம்→இனாம்.]*

**மடப்பம்¹** *madappam,* பெ.(n.) 1. மென்மை; tenderness. 2. இணக்கம்; acquiescence. 3. பேதைமை; simplicity, credulity.

*[முல் (இளமைக் கருத்துவேர்)→முள்→மள். மள்ளன் = இளைஞன், மறவன். மள்→மள→மழ = இளமை, குழந்தை. மழ→மட →மடப்பு→மடப்பம் (வே.க.4:5).]*

**மடப்பம்²** *madappam,* பெ.(n.) 1. மருத நிலத்தூர்; town in an agricultural tract. 2. ஐந்நூறு ஊர்களுக்குத் தலைமை பெற்ற ஊர்; chief town admist 500 villages.

**மடப்பம்³** *madappam,* பெ.(n.) அரண்மனையிற் பணி செய்யும் பெண் (யாழ்.அக.); female inmate of a palace.

**மடப்பள்ளி** *mada-p-paḷḷi,* பெ.(n.) மடைப் பள்ளி பார்க்க (வின்.); see *madai-p-paḷḷi.*

*[மடைப்பள்ளி → மடப்பள்ளி.]*

**மடப்பளி** *mada-p-paḷi,* பெ.(n.) மடைப்பள்ளி பார்க்க; see *madai-p-paḷḷi.*

*[மடைப்பள்ளி→மடப்பள்ளி→மடப்பளி.]*

**மடப்பளிப்பால்** *mada-p-paḷi-pāl,* பெ.(n.) தென்னங்கள்; coconut toddy (சா.அக.).

**மடப்பற்று** *mada-p-paṟṟu,* பெ.(n.) மடத்துக்குரிய சொத்து (யாழ்.அக.); property of a monastery.

*[மடம்² + பற்று.]*

**மடப்புறத்துஇறையிலி** *madappuṟattu-iṟaiyili,* பெ.(n.) வரிகள் நீக்கிய கோயில் நிலம்; tax free temple land. *"படுவூர்க் கோட்டத்து காவிரிப்பாக்கப் பற்று திருபாற்கடலில் இவருக்குக் காணியான நிலத்தில் இவருக்கு மடப்புறத்து இறையிலி" (தெ.க.தொ.17, கல்.759-3).*

*[மடப்புறத்து + இறையிலி.]*

மடம்¹ *madam,* பெ.(n.) 1. அறியாமை; ignorance, folly. *"மடப்படலின்றிச் சூழுமதி வல்லார்" (சீவக.1927).* 2. மகடூஉக் குணம் நான்கனுள் கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமையாகிய பேதைமை; simplicity, credulity, artelessness, one of four *magadū-u-kkuṇam. "வாலிழை மட மங்கையர்" (புறநா.11).* 3. அழகு; beauty. *"மடக்கணீர் கோரும்" (சிலப்.17, உரைப்பாட்டு மடை).* 4. மென்மை; tenderness, delicacy. *"தெளி நடை மடப்பிணை" (புறநா.23).* 5. இணக்கம்; acquiescence. *"அஞ்சிறைய மடநாராய்" (திவ்.திருவாய்.1, 4, 1).*

*[முல் (இளமைக் கருத்துவேர்)→முள்→முளை. முளை = வித்தினின்று முளைத்த சிறுவெளிப்பாடு, இளமை, மரக்கன்று, சிறு பிள்ளை, மகன். முளை→ முளையான் = சிறுகுழந்தை. முள்→மள்→மள்ளன் = இளைஞன், மறவன், படைமறவன், குறிஞ்சி நிலவாணர். மள்→மள→மழ = இளமை, குழந்தை. மழ→ மழம்→ மழல்→ மழலை=இளமை, குழந்தைகளின் இனிய திருந்தாச் சொல். மழ→ மழம்→மடம் = இளமை, இளமைக்குரிய மென்மை, இளமைக்குரிய அழகு, இளமைக்குரிய அறியாமை, பெண்பாற் குணம் நான்கனுள் கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமையாகிய பேதைமை. மழ→மட →மடம். முள்→மள் →மள்ளன் = இளைஞன், வீரன். மள்→மழ = இளமை, குழவி. மழவுங்குழவும் இளமைப் பொருள (தொல்.உரி, 14). மழ→மட →மடம் (வே.க.4:5).]*

இரு திணையிலும் பெண்பால் ஆண்பாலினும் மடம் மிக்கதாகக் கருதப்படுவதால் மடவரல், மடந்தை முதலிய பெயர்கள் உயர்திணையிலும் மந்தி, மூடு முதலிய பெயர்கள் அஃறிணையிலும் பெண்பாலைக் குறிக்க வெழுந்தன (மு.தா.42).

மடம்² *madam,* பெ.(n.) 1. துறவியர் தங்குமிடம்; hermitage. *ஆண்டிகள் கூடி மடம் கட்டினாற்போல்? (பழ.).* 2. இரப்போர்க்கு உணவளிக்குமிடம் அல்லது இரப்போர் உண்டு தங்குமிடம்; a place where pilgrims and religious mendicants are fed. *"வல்லநாட்டு ஸ்ரீ கோவிஞ்சபாடி மடத்தில் உண்ண" (தெ.க.தொ.13:33).* 3. ஊர்ப் பொதுக் கட்டடம், உசாவடி (சாவடி); a public building in a village. 4. வழிப்போக்கர் தங்குமிடம்; rest-house. 5. கோயில்; temple. 6. இடம்; place. 7. தேர் (யாழ்.அக.); car.

*[முல் (துளைத்தற் கருத்து வேர்)→முள்→மள் →மடு = ஆற்றிடைப் பள்ளம், அருவி விழும் பள்ள நீர்க் குண்டு, ஆற்றிடைக் குட்டை, ஆவின்மடி. மடு →மடுத்தல் = வாயில் வைத்தல், உண்ணுதல், விழுங்குதல், ஊட்டுதல், நிறைத்தல், சேர்த்தல், உட்புகுத்துதல், உட்செலுத்துதல், அமிழ்த்துதல். மடு →மடம் (வே.க.4:91).]*

மடம்³ *madam,* பெ.(n.) 1. இதளியம்; mercury. 2. பெருங்காயம்; asafoetida (சா.அக.).

மடமடக்கி *mada-madakki,* பெ.(n.) வட்டத் திருப்பி; root of twining plant (சா.அக.).

மடமட—த்தல் *mada-mada-,* 4 செ.கு.வி. (v.i.) ஒலித்தல்; to gurgle, rattle.

மடமடப்பு *mada-madappu,* பெ.(n.) ஒலிக்கை; gurgling, purling, rattling.

*[மடமட →மடமடப்பு.]*

மடமடவெனல் *mada-mada-v-eṇal,* பெ.(n.) மடமடெனல் பார்க்க; see *mada-madeṇal.*

*[மடமட + எனல்.]*

மடமடெனல் *mada-madenal,* பெ.(n.) 1. ஓர் ஒலிக்குறிப்பு; onom. expr. signifying gurgling, as water, rattling, rustling. 2. விரைவுக் குறிப்பு; being in haste, acting with despatch.

*[மடமட + எனல்.]*

மடமயில்¹ *madamayil,* பெ.(n.) அறியாப் பெண்; an innocent girl.

*[மடம் = அழகு, முதிராஅறிவு. மடம் + மயில்.]*

மடமயில்² *mada-mayil,* பெ.(n.) அழகிய பெண்; woman, beautiful like peafowl.

*[மடம் = அழகு. மடம்¹ + மயில்.]*

மடமான் *madamān,* பெ.(n.) பெண்; woman, as timid as a deer. *"மட மானினைப் போத வென்று" (திவ்.பெரியதி.3, 7, 1).*

*[மடம்¹ + மான்.]*

மடமை¹ *madamai,* பெ.(n.) அறிவின்மை; idiocy.

*[மடம்→மடமை.]*

மடமை² *madamai,* பெ.(n.) பேதைமை; ignorance, stupidity, silliness, folly. *"விருந்தோம்ப லோம்பா மடமை" (குறள், 89).*

*[மழ→மட→மடமை.]*

மடல் *madal,* பெ.(n.) 1. பனை முதலியவற்றின் ஏடு (சூடா.); flat leaf of palm, plantain and screwpine. *"கொழுமடற் குமரி வாழை" (சீவக.274).* 2. பனங்கருக்கு; jagged stem of a palmyra leaf. *"ஒழிமடல் விறகிற் கழி மீன் சுட்டு" (புறநா.29).* 3. தான் காதலித்த தலைவியைப் பெறாவிடத்துத் தலைவன் ஏறுதற்பொருட்டுப் பனங்கருக்காற் குதிரை போற் செய்த ஊர்தி; horse of palmyra stems on which a thwarted lover mounts to proclaim his grief and win his love. *"ஏறிய மடற்றிறம்" (தொல். பொருள்.51).* 4. கலிவெண்பாவின் உறுப்பாகிய உலாமடல் (சூடா.); *ulā-madal,* a poem in *kali-venpā* metre. 5. பூவிதழ்; flower petal. *"மடல் விரிமலர்" (பாகவத.1, மாயவன–9). "மடல் பெரிது மகிழ் இனிது கந்தம்" (மூதுரை–12).* 6. கிளை; branch. *"மடற்பெரிய வாலின் கீழ்" (தேவா.26, 10).* 7. கண்ணிமை; eye-lid. *"கண்மடல்".* 8. திருநீறும் சந்தனமும் வைக்கும் கலம் (சீவக. 1147, உரை); receptacle for sacred ashes and sandal. *"பொன்னின் புஷ்கரப் பத்திமடல் ஒன்று" (தெ.க.தொ.2, 15).* 9. சோளக்கதிர் முதலியவற்றின் மேலுறை (வின்.); sheath, as of Indian corn, plantain flower, etc. 10. காதுச்சுணை (யாழ்.அக.); external border or tip of the ear. 11. தோண் மேலிடம் (வின்.); shoulder blade. 12. ஆயுதவலகு; blade of a weapon. *"மடற்றலைக் கதிர்கொள் வேலான்" (இரகு.குசண.35).* 13. கை; hand. *"மடலோடுமடல் சேரக்கட்டி" (வெங்கைக்கோ. 8).* 14. ஏற்றக்கழி; standing pole of a well - sweep. 15. சிறுவாய்க்கால் (வின்.); branch channel. *"பொய்தலை அடுத்த மடலின் கண்ணும்" (தொல். பொருள்.111).*

மடல்² *madal,* பெ.(n.) கடிதம்; ஓலை வடிவிலோ, தாள் வடிவிலோ செய்திகளை எழுதியனுப்பும் ஏடு; letter.

மடல்வாத்து *madal-vāttu,* பெ.(n.) மயிலைப் போன்ற தோகையினை யுடைய நீர்ப்பறவை வகை; a water-fowl resembling the black cormorant, but with a different-coloured bill and plumage like a peacock's.

*[மடல் + வாத்து.]*



மடல்வாழை *madal-vālai,* பெ.(n.) பேயன் வாழை; a kind of banana.

*[மடல் + வாழை.]*

மடலட்டு *madalattu,* பெ.(n.) பனைவெல்லம்; palm jaggery.

*[மடல் + அட்டு. மடல் = பனை.]*

மடலவிழ்-தல் *madalavil-,* 2 செ.கு.வி.(v.i.) இதழ்விரிதல்; to burst, as flower-sheath.

*[மடல் + அவிழ்-.]*

மடலாந்து *madalāndu,* பெ.(n.) மட்டைப்படல் பார்க்க; see *mattai-p-padal.*

மடலி *madali,* பெ.(n.) இளம்பனை; young palmyra tree.

*[மட →மடல் = இளமை. மடல் →மடலி.]*

மடலி-த்தல் *madali-,* 4 செ.கு.வி.(v.i.) மடங்கித் திரும்புதல் (யாழ்.அக.); to bend, double.

*[முல் (வளைதற் கருத்து வேர்)→முள்→முண் →முண்டு→மண்டு→மண்டி = காலை முடக்கி முழங்காலால் நிற்கை. மண்டிபோடுதல், மண்டியிடுதல் என்னும் வழக்கை நோக்குக. மண்டு→மண்டலம் = வட்டம், வட்ட வடிவம். மண்டலம்→மண்டலி. மண்டலித்தல் = வளைத்தல், பாம்பு முதலியன வட்டமாகச் சுற்றியிருத்தல், வில்லாளி காலை வளைத்து வட்டமாக்குதல். மண்டலி→மடலி (வே.க.4:83).]*

மடலூர்-தல் *madalūr-,* 2 செ.கு.வி.(v.i.) தான் காதலித்த தலைவியை அடைதல் வேண்டிப் பனைமடலாலான குதிரையைத் தலைவன் ஏறி ஊர்தல்; to ride a horse of palmyra stems, as a disappointed lover to win his love. *"மடலூர்தல் யாமத்து முள்ளுவேன்" (குறள், 1136).*

*[மடல் + ஊர்-.]*

மடலூர்ச்சி *madal-ūrcci,* பெ.(n.) மடல் 3, 4 பார்க்க; see *madal.*

*[மடல் + ஊர்ச்சி.]*

மடலேறு-தல் *madal-ēru-,* 5 செ.கு.வி.(v.i.) மடலூர்-, பார்க்க; see *madalūr-,* *"நோனாவுடம்பு முயிரு மடலேறும்" (குறள், 1132).*

*[மடல் + ஏறு-.]*

மடவரல் *mada-varal,* பெ.(n.) 1. மடப்பம்; simplicity, artlessness. *"மடவரலுண்கண் வாணுதல் விறலி" (புறநா. 89).* 2. பெண்;

woman. "மடவர னோக்கம்" (குறள், 1085). "மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே" (திருமுருகா.100–102).

[முல் (இளமைக் கருத்துவேர்)→முள்→முளை = வித்திினின்று முளைத்த சிறு வெளிப்பாடு, இளமை, சிறுபிள்ளை, மகன். முள்→மள்→மழ. மழவு = இளமை, குழந்தை. மழ→மட→மடம் = இளமை, இளமைக்குரிய மென்மை. மடம்→மடந்தை = பெண். மடம்→மடம்வால் →மடவரல் (வே.க.4:6).]

இருதிணையிலும் பெண்பால் ஆண்பாலினும் மடம் மிக்கதாகக் கருதப்படுவதால் மடவரல், மடந்தை முதலிய பெயர்கள் உயர்திணையிலும், மந்தி மூடு முதலிய பெயர்கள் அஃறிணையிலும் பெண்பாலைக் குறிக்க வெழுந்தன (மு.தா.42).

மடவள் *maḍavaḷ*, பெ.(n.) அறிவிலாள்; stupid woman. "மடவளம்ம நீ யினிக் கொண்டோளே" (ஐங்குறு.67).

[முள்→மள்→மள→மழ = இளமை, குழந்தை. மழ→மழம் + மடம் = இளமை, மென்மை, அழகு. மடம் →மடவள் (வே.க.4:5).]

மடவளாகம் *maḍavaḷāgam*, பெ.(n.) கோயிலைச் சூழ்ந்துள்ள வீதி; streets around a temple. "இம்மடவளாகத்து இருக்கிற குடிகளுக்கு" (தெ.க.தொ.3, 48). "குன்றத்தூரின் மடவளாகந் தானாக்கி" (சேக்கிழார்.பு.19).

[மடம்² + வளாகம்.]

மடவன் *maḍavaṉ*, பெ.(n.) அறிவிலான்; stupid person. "மடவர் மெல்லியர் செல்லினும்" (புறநா.106).

[முள் → மள் → மள → மழ → மழம் → மடம் → மடவன் (வே.க.4:5).]

மடவா–தல் *maḍa-vā-*, 18 செ.கு.வி.(v.i.) மடப்பம் வருதல்; to be charming, as a girl. "கொல்லிக் குடவரைப் பாவையின் மடவந்தனளே" (குறுந். 100).

[மடம்→மட + வா–.]

மடவாமீன் *maḍavā-mīṉ*, பெ.(n.) மடவை 4 பார்க்க; see *maḍavai*.

மடவாயம் *maḍavāyam*, பெ.(n.) மகளிர் விளையாட்டுக் கூட்டம்; company of girl-playmates of a maiden. "மடவாயமாகி மிடையும் பதினெண் கணத்து மடவாரும்" (தக்கயாகப்.307).

[மடம்² + ஆயம்.]

மடவார் *maḍavār*, பெ.(n.) 1. மகளிர்; woman, lady. "வலம்வந்த மடவார்க ணடமாட" (தேவா.278, 1). 2. மூடர்; fools. "வன்மையுள் வன்மை மடவார்ப் பொறை" (குறள், 153).

மடவாழை *maḍa-vāḻai*, பெ.(n.) பேயன் வாழை; a kind of banana (G.Sm.D.I. i, 215).

[மடல் + வாழை.]

மடவாள் *maḍavāḷ*, பெ.(n.) பெண் (திவா.); woman. "குழன்மடவாள் கூறுடைய ளொருபாகம்" (திருவாச.5, 17).

[மடவள்→மடவடாள்.]

மடவி *maḍavi*, பெ.(n.) மடவியர் பார்க்க; see *maḍaviyar*.

[மட→மடவி.]

மடவியர் *maḍaviyar*, பெ.(n.) 1. மடவார்[1] பார்க்க; see *maḍavār*. "மடவியரைச் சிந்தை விருப்பஞ் செய்வித்தல்" (கொக்கோ. பாயி.12). 2. மடவார்[2] பார்க்க; see *maḍavār*. "வரையகவாணர் மடவியரே" (இறை.18, உரை. மேற்.).

[மடம்→மடவி→மடவியர் (வே.க.4:5).]

**மடவிளாகம்** *mada-vilāgam* பெ.(n.) கோயிலைச் சுற்றியுள்ள தெருவில் மடத்திற்கென்று அமைக்கப்பட்ட நிலப்பகுதி (மடவளாகம்); a land allotted for the street around the temple. *"ஸ்ரீகுலொத்துங்க சொழவிண்ணகராழ்வா(ன்) கொயிலிற் திருமடவிளாகத்து(த்) தெற்கில்பருமட" (தெ.க. தொ.IV, கல்.134/1986).*

**மடவை** *madavai,* பெ.(n.) 1. கவைக்கால்; post. *"மடவையிடைக்கழல் வைப்பார்போல்" (சேதுபு. தேவிபுர.64).* 2. துடுப்பு; oar, paddle. 3. தணக்கு; whirling-nut. 4. வெண்ணிற முள்ள மீன் வகை (பதார்த்த. 932); grey mullet, silvery, mugil oligolepe.

**மடவைக்கெண்டை** *madavai-k-kendai,* பெ.(n.) மீன் வகை (யாழ்.அக.); a species of carp.

*[மடவை + கெண்டை.]*

**மடவைச்சுறா** *madavai-c-curā,* பெ. (n.) சுறா மீன் வகை; a kind of *šurā* fish.

*[மடவை + சுறா.]*

**மடவைமயக்கி** *madavai-mayakki,* பெ.(n.) பெண்கள் மயங்க வைக்கும் செடி; a plant which enchants woman (சா.அக.).

**மடவோர்** *madavōr,* பெ.(n.) 1. மடவார், 1 பார்க்க; see *madavār. "பெருமதர் மழைக்கண் மடவோர்க்கு" (மணிமே.19:73).* 2. மடவார் 2 பார்க்க; see *madavār. "மக்களிர் சிறந்த மடவோ ருண்டோ" (மணிமே.6:104).*

*[மடவார்→மடவோர்.]*

**மடற்கள்ளி** *madar-kalli,* பெ.(n.) ஒரு வகைக் கள்ளி; a kind of spurge (சா.அக.).

*[மடல் + கள்ளி.]*

**மடற்பரி** *madar-pari,* பெ.(n.) மடல்³ பார்க்க; see *madal³.*

*[மடல் + பரி.]*

**மடற்பனை** *madar-panai,* பெ.(n.) சங்குப் பனை; a tree.

*[மடல் + பனை.]*

**மடற்பாளை** *madar-pālai,* பெ.(n.) பூம்பாளை (யாழ்.அக.); tender spathe.

*[மடல் + பாளை.]*

**மடற்றுத்தம்** *madarruttam,* பெ.(n.) துத்த வகை; native hydrous silicate of zinc, calamine.

*[மடல் + துத்தம்.]*

**மடறுங்கி** *madarungi,* பெ.(n.) சிறுதும்பை பார்க்க; see *šiṟu-tumbai* (சா.அக.).

**மடன்¹** *madan,* பெ.(n.) 1. அறியாமை; ignorance. *"இன்சொலார் தன் மடனொக்கு மடனு முண்டோ" (கம்பரா.உண்டாட்டு.10).* 2. கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை; credulity; proneness to accept another's opinion and holding fast to it. *"சாயலு நாணு மடனு மென்றா" (தொல். பொருள்.247).*

*[மடம் →மடன்.]*

**மடன்²** *madan,* பெ.(n.) அறிவிலான்; ignorant person.

க. மடன்.

*[மடம் →மடன்.]*

மடன்மா *madaṉ-mā*, பெ. (n.) மடல் 3 பார்க்க; see *maḍal 3*. *"மடன்மாகூறு மிடனுமா ருண்டே" (தொல்.பொருள்.99).*

*[மடல் + மா.]*

மடா *maḍā*, பெ.(n.) ஏன வகை; large earthern vessel. *"அடைச்சேம் பெழுந்த வாடுறு மடாவின்" (பதிற்றுப்.24, 20).*

*[முழுத்தல் = பருத்தல். முழு→முழா→முடா→ மிடா = பெருத்த மண்பானை. மிடா→மடா.]*

மடாதிபத்தியம் *maḍātipattiyam*, பெ.(n.) கோயில் அல்லது மடத்தின் மேலாண்மை (யாழ்.அக.); management of affairs of a temple or mutt.

*[மடல் + Skt.அதிபத்தியம்.]*

மடாதிபதி *maḍādipati*, பெ.(n.) மடத்துத் தலைவன்; head of a monastery.

*[மடம் + Skt.அதிபதி.]*

மடாரெனல் *maḍār-eṉal*, பெ.(n.) ஓர் ஒலிக்குறிப்பு; onom. expr. signifying crashing noise. *"மரம் மடாரென்று முறிந்தது" (உ.வ.).*

*[மடார் + எனல்.]*

மடாலயம் *maḍālayam*, பெ.(n.) மடம்² 1, 2 பார்க்க; see *maḍam*.

*[மடம் + ஆலயம்.]*

மடி¹–தல் *maḍi-*, 2 செ.கு.வி.(v.i.) 1. மடங்குதல்; to be bent, folded, turned down, lapped in. *"வள்ளுகிர் மடிய" (கம்பரா.கும்ப.182).* 2. நுனி மழுங்குதல்; to be turned, as an edge or a point. *"வயிரவாளை..... வாய்மடிய வீழ்த்த" (வாயுசங்.யாவுஞ்.3).* 3. தலை சாய்தல்; to droop, as the head of one asleep or as sheafs of grain in a field. 4. வீழ்தல்; to fall on. *"மடி மடிந்து மாண்ட வுஞற்றி லவர்க்கு" (குறள்,* 604). 5. வாடுதல் (இ.வ.); to wither, as leaves. 6. சுருளுதல்; to roll, as waves. *"மடிதிரை தந்திட்ட..... முத்தம்" (நாலடி, 224).* 7. முயற்சியறுதல்; to be indolent, inactive. *"மடியாவினைஞர்" (பெரும்பாண்.254).* 8. தூங்குதல்; to sleep. *"மன்பதை யெல்லா மடிந்த விருங்கங்குல்" (கலித்.65).* 9. சுருங்குதல்; to shrink, contract. *"வீங்கு சுரை மடிய" (அகநா.54.).* 10. ஊக்கங்குறைதல்; to be dispirited. *"உவவு மடிந்துண் டாடியும்" (பட்டினப்.93).* 11. அழிதல்; to perish; to be destroyed. *"குடிமடிந்து குற்றம் பெருகும்" (குறள், 604).* 12. சாதல்; to die. *"வல்லது மடிதலே யென்னின் மாறுதிர்" (கம்பரா. அதிகார.6.).* 13. தானியங்கேடுறுதல்; to become mouldy, as rice. *"மடிந்துபோன அரிசி" (உ.வ.).* 14. திரண்டு செல்லுதல்; to rush in together as a crowd. *"மக்கள் திருவிழாக் காண மடிகிறார்கள்" (உ.வ.).* 15. கொப்புள முடைதல்; to break, to be broken as a blister.

*[முடிதல் = வளைத்து அல்லது மடித்துக் கட்டுதல். முடி→மடி = வளைந்து மடங்குதல். முட்டு →முட்டி→முடி = இறுதி. முடி→மடிதல் = 1. சாதல், 2. அழிதல்.]*

மடி²–த்தல் *maḍi-*, 2 செ.குன்றாவி.(v.t.) அழித்தல்; to kill destroy. *"மரனெலா மடிப்ப" (கம்பரா. தாடகை.35).*

*[முட்டு→முட்டி→முடி. முடிதல் = இறுதியாதல், முற்றுப் பெறுதல், நிறைவேறுதல், செய்ய முடிதல். வாணாள் முடிந்து இறத்தல், அழிதல். முடி→மடிதல் = சாதல், அழிதல். மடித்தல் = அழித்தல் (வே.க.4:65).]*

மடி³–த்தல் *madi-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. மடக்குதல்; to fold, as the arms, to fold up, as cloth, as paper, to double up, shut up, as a folding knife. 2. வளைதல்; to bend, turn down, turn in curl. 3. பேச்சில் மடங்க வடித்தல்; to baffle in speech, confound by artifice, as in an argument. 4. அழித்தல்; to kill, destroy. *"மரனெலா மடிப்ப" (கம்பரா.தாடகை.35).* 5. உழக்குதல்; to tramble down, to throw into confusion.

*[முல் (வளைதற் கருத்துவேர்)→முள்→ முண்டு →முண்டி →முடி. முடிதல் = வளைத்து அல்லது சுற்றிக் கட்டுதல். முடித்தல் = கூந்தலைக் கட்டுதல், பூமாலை கொண்டையிற் கட்டியணிதல். முடி = பறவை பிடிக்குங் கண்ணி, கட்டு, முடிச்சு, உச்சியில் முடிக்கும் மயிர்க்கட்டு வகை, நாற்று முடி. முடி →மடி (வே.க.4:85).]*

மடி⁴ *madi,* பெ.(n.) 1. மடங்குகை; bending down, as sheaf of paddy. 2. வயிற்று மடிப்பு; crease in abdomen. 3. வயிறு; belly, stomach. *"இடாகினிப் பேய் வாங்கி மடியகத்திட்டாண் மகவை" (சிலப்.9: 22).* 4. அரை; waist. *"பணப்பையை மடியிற் கட்டிக் கொண்டான்" (உ.வ.).* 5. மடித்த தொடையின் மேற்பகுதி; lap. *"குழந்தை அவன் மடியில் உட்கார்ந்து கொண்டிருந்தது" (உ.வ.).* 6. ஆடை, தாள் முதலியவற்றின் மடிப்பு; orget. *"சேமமடிந்த பொழுதில்" (குறிஞ்சிப். 156).* 7. ஆடை; cloth, garment. *"குறியவு நெடியவு மடிதரூஉ விரித்து" (மதுரைக்.520).* 8. தூய்மையாக உடுத்தும் மரவுரி, பட்டு, பருத்தி முதலியவற்றாலாகிய ஆடை வகை; cloth made of the fibre of trees, coarse silk, cotton, etc., as ceremonially pure. *"உடுக்க மடி கொண்டுவா" (கொச்சை.).* 9. தீட்டில்லா நிலை; ceremonial purity, as of one who has bathed. *'நான் மடியாயிருக்கிறேன், எண்ணைத் தொடாதே' (உ.வ.).* 10. பல துண்டுகள் கொண்ட ஆடை வகை; piece consisting of a certain number of clothes. 11. பை போன்ற முந்திச் சொருக்கு; fold in a cloth wrapped round the waist, answering for a pocket. *பாக்கை மடியில் கட்டலாம் தோப்பை மடியிலே கட்டலாமா?' (பழ.).* 12. வலை வகை; a kind of net. 13. மீன்வலையோடு சேர்ந்த பெரும்பை; large bag attached to a finishing net. 14. மாடு முதலியவற்றின் முலையிடம்; udder, especially of a cow. *"மடி வெண் டிங்களா" (கம்பரா.ஊர்தே.56).* 15. அடக்கம்; submission. 16. தனிமை (பிங்.); loneliness. 17. சோம்பல்; sloth, idleness, indolence. *"போகூழாற் றோன்று மடி" (குறள், 371). "மடியை மடியா ஒழுகல் குடியைக் குடியாக வேண்டு பவர்" (குறள், 602).* 18. சோம்பலுடையவன்; lazy person. *"களி மடி மானி" (நன்.39).* 19. நோய் (பிங்.); disease. 20. கேடு (பிங்.); ruin, loss, detriment, damage. 21. பொய் (பிங்.); lie, falsehood. 22. பகை; hatred, emity. 23. முடைநாற்றம்; bad odour. *"மடிநாறு மேனி" (தேவா.30, 4).* 24. இரட்டைக் கட்டுமரம்; double catamaram (G.Tn. D.I.229). 25. சோறு (அக.நி.); boiled rice. 26. தாழை 1; fragrant screw-pine. 27. தாழை விழுது (தைலவ.தைல.125); external root of the screw-pine. 28. மடங்கு; turn, time. *"கூற்றினும் மும்மடி கொன்றான்" (கம்பரா.இலங்கையெரி.57).*

மடி⁵–தல் *madi-,* 4 செ.குன்றாவி.(v.t.) மறத்தல்; to forget. *"சேம மடிந்த பொழுதில்" (குறிஞ்சிப்.156).*

மடிக்கதம் *maḍi-k-kadam*, பெ.(n.) மலைப் பூவரசு; mountain portia tree (சா.அக.).

மடிக்கதிர் *maḍi-k-kadir*, பெ.(n.) கதிரறுப் போர்க்குப் பரிசாகக் கொடுக்குந் தவசக் கதிர்; perquisite of grain given to women engaged in reaping a crop (M.M.452).

*[மடி[2] + கதிர்.]*

மடிக்கயிறு *maḍi-k-kayiṟu*, பெ.(n.) பரதவர் பயன்படுத்தும் நீண்ட கயிறு; coden rop.

*[மடி + கயிறு.]*

மடிக்குருவி *maḍi-k-kuruvi*, பெ.(n.) வெற்றிலை; betel leaf.

*[மடி + குருவி.]*

மடிகசக்கு—தல் *maḍi-kašakku-*, 5 செ. குன்றாவி.(v.t.) மடிபிசை—தல் பார்க்க (வின்.); see *maḍi-pišai-*.

*[மடி + கசக்கு—.]*

மடிகட்டு[1]—தல் *maḍi-kaṭṭu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. தூய ஆடை அணிதல்; to dress in ceremonially pure cloth. 2. ஆடையை உலர்த்தல்; to dry a washed cloth. 3. மணப் பெண்ணின் மடியில் வெற்றிலை பாக்குப் பழங்கட்டுதல்; to the betels and fruits in the cloth of a bride.

*[மடி + கட்டு—.]*

மடிகட்டு[2]—தல் *maḍi-kaṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) அதிகமாக எடுத்துக் கொள்ளுதல் (இ.வ.); to take in large quantity.

*[மடி[2] + கட்டு—.]*

மடிகட்டு[3]—தல் *maḍi-kaṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) கடற்கரைக்கு வந்துவிட்ட பெரு வலையின் வாயை (மீன்கள் வெளி வராதிருக்க)க் கட்டுதல்; to tie up the finishing net.

*[மடி + கட்டு—.]*

மடிகட்டை *maḍi-kaṭṭai*, பெ.(n.) பெரிய வலையிலுள்ள மடியின் வாயை அகற்றிப் பிடிக்கக் கட்டப்பட்டிருக்கும் கட்டை; wodden log tied in the mouth of the finishing net for wide opening.

*[மடி + கட்டை. மடி = வலை.]*

மடிகம் *maḍigam*, பெ.(n.) தாழை; fragrant screw pine (சா.அக.).

மடிகம்பு *maḍi-kambu*, பெ.(n.) 1. தறிமரம்; web beam. 2. வலைக்கம்பு (யாழ்.அக.); main pole of a fishing net.

*[மடி[3] + கம்பு.]*

மடிகாது *maḍi-kādu*, பெ.(n.) நாய் முதலியவற்றின் மடிந்த காது; lop ear, as of a dog.

*[மடி + காது.]*

மடிகாரன் *maḍi-kāraṉ*, பெ.(n.) நாட்டுப் படகில் தொழில் செய்வோர்; one who used to fishing by country boat.

*[மடி + காரன்.]*

மடிகால் *maḍi-kāl*, பெ.(n.) முழந்தாளிடும் போது மடித்த கால்; bent leg as when kneeling.

*[மடி + கால்.]*

மடிச்சீலை[1] *maḍi-c-cīlai*, பெ.(n.) தூய ஆடை; ceremonically pure cloth.

*[மடி + சீலை. சேலை→சீலை.]*

மடிச்சீலை[2] *mado-c-cilai,*பெ.(n.) 1. மடியிற் கட்டிக் கொள்ளும் பணப்பை; purse kept in the gridle. *"மடிச்சீலை கொட்டித் தாராதவரார்" (விறலிவிடு.117).* 2. நீர்ச்சீலை; forelap.

*[மடி + சீலை. சேலை→சீலை.]*

மடிச்சுக்கட்டி *madiccu-k-katti,* பெ.(n.) புழுவகை (யாழ்.அக.); a kind of worm.

மடிசஞ்சி *madicañji,* பெ.(n.) மடிவேட்டி வைத்தற்குரியதும் புல் அல்லது கம்பளியா லானதுமான பை; bag made of reed or wool for keeping clothes ceremonially pure.

*[மடி + சஞ்சி.]*

மடிசல் *madical,* பெ.(n.) 1. நீர்த் தொடர்பால் பொருள்களில் உண்டாகும் கெடுதி; damage caused by lapse of time or by dampness. 2. நாட்பட்டுக் கெட்ட தவசம்; grain injured by time.

*[மடி → மடிசல்.]*

மடிசாறுபாய்-தல் *madišāru-pāy-,* 2 செ.கு.வி. (v.i.) நீர்ப்பொருள் ஒழுங்காய் நேரே விழாது பக்கம் விலகிச் சிந்துதல் (இ.வ.); to be spilled in pouring a liquid, as from carelessness.

*[மடி + சாறு + பாய்-.]*

மடிசாறு *madicāru,*பெ.(n.) மடிதாறு பார்க்க (இ.வ.); see *madi-tāru.*

*[மடிதாறு →மடிசாறு.]*

மடிசீலை *madi-cilai,* பெ.(n.) நீர்ச்சீலை (கோவணம்) (இ.வ.); forelap.

*[மடி + சீலை.]*

மடிசெவி *madicevi,*பெ.(n.) மடிகாது பார்க்க; see *madi-kādu.*

*[மடி + செவி.]*

மடிதடவு-தல் *madi-tadavu-,*5 செ. குன்றாவி. (v.t.) 1. பிறன்பொருளைக் கவரல்; to pick-pocket, skealthily remove purse, jewels, etc. from a person. *"தன்னை விசுவசித்து உடன் கிடந்தவனை மடி தடவினவனைப் போல" (ஈடு.10, 8, 2. அரும்.).* 2. ஏதேனும் மறைத்து வைத்திருப்பதைப் பார்க்க மடியைத் தடவி ஆய்தல்; to examine one's clothes and see if anything is kept hidden. *"மடிதடவாத சோறும்" (ஸ்ரீவசன.3, 28).*

*[மடி + தடவு-.]*

மடிதப்பு-தல் *madi-tappu-,* 5 செ.கு.வி.(v.i.) (வலையின் உறுப்பாகிய) மடியை அலசுதல்; washing the net.

*[மடி + தப்பு-.]*

மடிந்தகாது *madinta-kādu,* பெ.(n.) மடிந்து அகன்ற காது; flap ear.

*[மடிந்த + காது.]*

மடிப்பங்கால் *madippankāl,*பெ.(n.) மடிகால் பார்க்க; see *madi-kāl.*

மடிப்பணம் *madi-p-panam,* பெ.(n.) கைப் பணம்; cash on hand.

*[மடி + பணம்.]*

மடிப்பாளி *madi-p-pāli,*பெ.(n.) மோசக்காரன்; cheat, defraud, impostor.

மடிப்பிச்சை *madi-p-piccai-,*பெ.(n.) 1. இடுப்புத் துணியிலேற்கும் பிச்சை; alms received in one's loin-cloth. 2. தாழ்மையாய்க் கேட்கும்

பிச்சைப் பொருள்; alms begged for in a mean manner. *'தெய்வமே இந்தப் பிள்ளையை மடிப்பிச்சை தரவேணும்' (உ.வ.).*

*[மடி² + பிச்சை.]*

மடிப்பிள்ளை *madi-p-pillai,* பெ.(n.) கைக் குழந்தை; child in arm.

*[மடி + பிள்ளை.]*

மடிப்பிளை *madi-p-pilai,* பெ.(n.) மடிப்பினை பார்க்க; see *madi-p-pinai.*

*[மடிப்பினை → மடிப்பிளை.]*

மடிப்பினை *madi-p-pinai,* பெ.(n.) ஈய மூலப்பொருள், வங்க மணல் (யாழ்.அக.); lead ore.

மடிப்பு¹ *madippu,* பெ.(n.) 1. ஒன்றைப் பல பகுதிகளாக மடித்திருப்பது; fold, doubling, plait. 2. மடிப்புத்தையல் பார்க்க; see *madipp-t-taiyal.* 3. மடிப்படையாளம்; crease mark of a fold. 4. தொந்தி மடிப்பு; fold, crease in the abdomen as from obesity. 5. மோசம்; trick, fraud, imposture, entanglement. *'மடிப்பான பேச்சு' (உ.வ.).* 6. இருபோகம்; double crop (C.G.).

*[மடி → மடிப்பு.]*

மடிப்பு² *madippu,* பெ.(n.) மடிக்கக் கூடிய கதவு ஆடும் இரும்புக் கருவி; folding hinge.

*[மடி → மடிப்பு.]*

மடிப்புக்கதவு *madippu-k-kadavu,* பெ.(n.) மடக்கக் கூடிய கதவு; folding door.

*[மடி → மடிப்பு + கதவு.]*

மடிப்புக்காரன் *madippu-k-kāran,* பெ.(n.) மடிப்பாளி பார்க்க; see *madi-p-pali.*

மடிப்புக்கால் *madippu-k-kāl,* பெ.(n.) மடிகால் பார்க்க; see *madi-kāl.*

*[மடிப்பு + கால்.]*

மடிப்புடவை *madi-p-pudavai,* பெ.(n.) 1. மடித்த ஆடை; folded cloth. *"சிறியனவும் நெடியனவுமாகிய மடிப்புடவைகளை" (மதுரைக். 520, உரை).* 2. மகளிரின் சீலை; saree which is ceremonially pure.

*[மடி + புடவை.]*

மடிப்புத்தையல் *madippu-t-taiyal,* பெ.(n.) மடித்துத் தைக்குந் தையல்; hemming.

*[மடிப்பு + தையல்.]*

மடிப்புப்பேச்சு *madippu-p-pēccu,* பெ.(n.) கவர் பொருள்படுஞ் சொல்; equivocal speech.

*[மடிப்பு + பேச்சு.]*

மடிப்புப்பேசு-தல் *madippu-p-pēšu-,* 5 செ.கு.வி.(v.i.) கவர் பொருள்படக் கூறுதல் (வின்.); to use words in a double sense with intent to deceive.

*[மடிப்பு + பேசு-.]*

மடிப்பெட்டி *madi-p-petti,* பெ.(n.) 1. சீலை வைக்கும் ஓலைக் கூடை; ola basket for keeping cloths ceremonially. 2. அரை மடியிலமைக்கும் வெற்றிலைப் பாக்குப் பை (வின்.); betel pouch carried in the waist-fold.

*[மடி + பெட்டி.]*

மடிப்பெழுத்தாணி *madippeluttāni,* பெ.(n.) கைப்பிடியுள் மடங்கும் எழுத்தாணி வகை; foldable iron style.

*[மடிப்பு + எழுத்தாணி.]*

**மடிப்பை** *maḍi-p-pai,* பெ.(n.) 1. அரை மடியிற் கட்டிய பை; purse kept in the girdle. 2. அடைப்பை (யாழ்.அக.); bag for keeping betel. 3. மடிசஞ்சி பார்க்க; see *maḍi-cañci.*

*[மடி + பை.]*

**மடிபிசை-தல்** *maḍi-pišai-,* 2 செ.குன்றாவி. (v.t.) பால் சுரக்கும்படியாகப் பசுவின் மடியைத் தடவுதல்; to chafe the udder of a cow in milking.

*[மடி + பிசை-தல்.]*

**மடிபிடி[1]-த்தல்** *maḍi-piḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. கட்டாயப்படுத்துதல்; to compel, as seizing by the waist cloth. *"மடிபிடித்துக் காற்கட்டி விலக்க வொண்ணாதபடி யாயிருக்கை" (ஈடு.5, 3, 5).* 2. வலுவிற் சண்டைக்கு அழைத்தல் (இ.வ.); to pick a quarrel. 3. வழக்காடுதல் (வின்.); to dispute.

*[மடி + பிடி-.]*

**மடிபிடி[2]** *maḍi-piḍi,* பெ.(n.) 1. கட்டாயம்; compulsion, as caused by seizing by the waist cloth. *"தூதரென்று மடிபிடியதாக நின்று" (திருப்பு.1204).* 2. சண்டை; altercation, dipute. 3. மாத்துவப் பெண்கள் மடி நோற்கத் தொடங்குகை (இ.வ.); commencement of the observance of ceremonial purity by Mādhva women.

*[மடி+பிடி.]*

**மடிபிடிவழக்கு** *maḍi-piḍi-vaḻakku,* பெ.(n.) பகைவரிருவர் ஒருவர் மேலொருவர் தொடுக்கும் வழக்கு; mutual complaint, application for redress by both parties to a dispute.

*[மடிபிடி + வழக்கு.]*

**மடிமாங்காய்போடு-தல்** *maḍi-māṅgāy-pōḍu-,* 19 செ.கு.வி.(v.i.) 1. செய்யாததைச் செய்ததாக ஏறிட்டுக் குற்றங் கூறுதல்; to charge falsely, putting a mango in another's possession in order to acccuse him of theft. 2. கையூட்டுக் கொடுத்தல் (யாழ்ப்.); to bribe.

*[மடிமாங்காய் + போடு-.]*

**மடிமாங்காயிடு-தல்** *maḍi-māṅgā-y-iḍu-,* 17 செ.கு.வி.(v.i.) மடிமாங்காய்போடு-, பார்க்க; see *maḍi-māṅgāy-pōḍu-.* *"மடிமாங்காயிட்டு விஷயீகரிக்க வந்திருக்கிறவன்" (திவ்.திருநெடுந். 9, பக்.73).*

*[மடிமாங்காய் + இடு-.]*

**மடிமாறி** *maḍi-māṟi,* பெ.(n.) முடிச்சுமாறி (இ.வ.); pick-pocket.

*[மடி + மாறி.]*

**மடிமூத்தார்தாழி** *maḍi-mūttār-tāḻi,* பெ.(n.) முதுமக்கட்டாழி; large urn found in ancient burial places.

*[மடி + மூத்தார்தாழி.]*

**மடிமை** *maḍimai,* பெ.(n.) சோம்பு (தொல். பொருள்.260); idleness, sloth, inactivity.

*[மடி →மடிமை.]*

**மடியல்** *maḍiyal,* பெ.(n.) மடிசல் பார்க்க; see *maḍišal.*

*[மடிசல் →மடியல்.]*

மடியில் *maḍi-y-il*, பெ.(n.) கூடாரம்; tent. *"மடியில்விட்டு" (சேதுபு.அகத்.33).*

*[மடி + இல்.]*



மடியிறக்கு-தல் *maḍi-y-iṟakku-*, 5 செ.கு.வி. (v.i.) ஈனுவதற்கு முன் பசுவின் மடி பருத்தல் (வின்.); to have udder distended, as a cow before calving.

*[மடி+இறக்கு-,]*

மடியுண்டடிப்பான் *maḍiyuṇḍaḍi-p-pāṉ*, பெ.(n.) பூசனி; pumpkin (சா.அக.).

மடியுறை *maḍiyuṟai*, பெ.(n.) விம்மிதம்; astonishment, bewilderment. *"மருளெனக் கருதிய மடியுறை கேண்மதி" (பெருங். உஞ்சைக். 48, 111).*

*[மடி + உறை.]*

மடியேந்து-தல் *maḍi-y-ēndu-*, 5 செ.குன்றாவி. (v.t.) மடியேல்-, பார்க்க; see *maḍi-y-ēl-*.

*[மடி + ஏந்து-.]*

மடியேல்-தல் *maḍi-y-ēl-*, 9 செ.குன்றாவி. (v.t.) பிச்சையெடுத்தல் (யாசித்தல்); to beg, as receiving alms in one's cloth. *"பிரயோசனத்துக்கு மடியேற்கை யன்றிக்கே" (ஈடு.3, 7, 1).*

மடில் *maḍil*, பெ.(n.) தாழை; fragrant screw pine (சா.அக.).

மடிவலை *maḍi-valai*, பெ.(n.) வலை வகை (க.ப.அக.); boat seine, bag net.

*[மடி + வலை-.]*

மடிவி-த்தல் *maḍivi-*, 4 செ.குன்றாவி.(v.t.) 1. முனை மழுங்கச் செய்தல்; to blunt, as the edge of an instrument. 2. கொல்லுதல்; to kill.

*[மடி →மடிவி-,]*

மடிவிடு-தல் *maḍi-viḍu-*, 20 செ.கு.வி.(v.i.) மடியிறக்கு-, பார்க்க (வின்.); see *maḍi-y-iṟakku-*.

*[மடியிறக்கு →மடிவிடு-.]*

மடிவு *maḍivu*, பெ.(n.) 1. சோம்பல்; inactivity, indolence. *"ஒடியா முறையின் மடிவிலையாகி" (புறநா.29).* 2. உற்சாகக் குறைவு; discouragement. 3. அழிவு (வின்.); ruin, loss, destruction. 4. சாவு; death.

*[மடி →மடிவு.]*

மடிவை *maḍi-vai*, பெ.(n.) தழை; fonage. *"மடிவைக் குறுந்தொடி மகளிர்..... முனையின்" (அகநா.226).*

மடு¹-த்தல் *maḍu-*, 4 செ.குன்றாவி.(v.t.) 1. உண்ணுதல்; to take food or drink. *"மடுத்தவனஞ்சமுதா" (தேவா.238, 3).* 2. நிறைத்தல் (வின்.); to fill, penetrate, suffuse, as adour. 3. சேர்த்தல்; to unite, join. *"பிணக்குவை கொண்டோடிக்.... கடல் கங்கை மடுத்திடை தூராதே" (கம்பரா. குகப்.21).* 4. அடக்கிக் கொள்ளுதல்; to hold, contain. *"மடுத்து மாமலையேந்தலுற்றான்"*

*(தேவா.823).* 5. ஊட்டுதல்; to cause to eat or drink; to feed. *"ஒண்டொடி மகளிர் மடுப்ப" (புறநா.56).* 6. தீ மூட்டுதல்; to kindle. *"கொலைஞ ருலை யேற்றித் தீ மடுப்ப" (நாலடி, 331).* 7. அமிழ்த்துதல்; to immerse, cause to sink. *"ஞானவாரி மடுத்து" (சி.சி.8, 16).* 8. குத்துதல்; to gore, pierce, thrust. *"கூர்நுதி மடுத்தத னிறஞ் சாடி" (கலித்.52, 3).* 9. மோசம் பண்ணுதல்; to inveigle, to entrap, to act treacherously. *'அவனை மடுத்து விட்டான்' (இ.வ.).* 10. விழுங்குதல்; to devour. *"வரவர வாய்மடுத்து" (நீதிநெறி, 64).* 11. மயக்குதல் (யாழ்ப்.); to charm. 12. செலுத்துதல்; to cause; to go or enter. *"மதியொடு பாம்பு மடுப்பென்" (கலித்.144, 21).*

மடு²–த்தல் *madu-,* 4 செ.கு.வி.(v.i.) இடையூறு எதிர்ப்படுதல்; to meet with obstacle. *"மடுத்த வாயெல்லாம் பகடன்னான்" (குறள், 624).*

*[முல் (துளைத்தற் கருத்துவேர்)→முள்→முழ →முழுகு→முழுங்கு. முழுங்குதல் = முழுகுதல், தொண்டைக்குள் அல்லது வயிற்றிற்குள் முழுகச் செய்தல், விழுங்குதல். முள்→மள்→மடு (வே.க.4:90).]*

மடு³ *madu,* பெ.(n.) 1. நீர்நிலை (பிங்.); pond, pool. *"கங்கை வருநீர் மடுவுள்" (திருவாச.6, 26).* 2. ஆற்றிடைப் பள்ளம்; deep place in a river or channel. *"ஆறிடுமேடு மடுவும்போ லாஞ் செல்வம்" (நல்வழி, 32).*

*[முள்→முள்கு; முள்குதல் = உட்செலுத்துதல். முள்→மள்→மடு = ஆற்றிடை பள்ளம்.]*

மடுத்தடி–த்தல் *madu-t-tadi-,* 18 செ.குன்றாவி. (v.t.) மடங்கடித்தல், ஏற்காமல் தள்ளுதல்; to frustrate an object.

*[மடி→மடு→மடுத்து + அடி-.]*

மடுத்தல் *maduttal,* பெ.(n.) சுத்தியல் (வின்.); hammer.

*[மடி→மடு→மடுத்தல்.]*



மடுப்படு–த்தல் *madu-p-padu-,* 20 செ. குன்றாவி.(v.t.) ஆழ்ந்திருத்தல்; to be deep. *"மடுப்படுக்குஞ் சுருதிப் பொருள்" (தேவா. 80, 10).*

மடுப்பு¹ *maduppu,* பெ.(n.) 1. அடைவு; containing. 2. நிறைப்பு; filling up, suffusion. 3. உண்கை; taking food. 4. மோசஞ்செய்கை; deceiving, inveigling. 5. ஏமாற்றம்; baffing frustration, disappointment. 6. கேடு; injury.

*[மடு→மடுப்பு.]*

மடுப்பு² *maduppu,* பெ.(n.) மடிப்பு பார்க்க (யாழ்.அக.); see *madippu.*

*[மடு→மடுப்பு (கொச்சை).]*

மடுமீன் *madu-min,* பெ.(n.) ஆற்றின் மடுவில் தங்கியிருக்கும் மீன்; fish existing in the deep place of a river.

*[மடு + மீன்.]*

மடுமுழுங்கி *madu-mulungi*, பெ.(n.) நீர் வெள்ளை எனும் நெல் வகை; a kind of paddy.

மடுவங்கரை *maduvankarai*, பெ.(n.) குளக்கரை (வின்.); side or brink of a pool or tank.

*[மடு + அம் + கரை.]*

மடுவிடு¹-தல் *madu-vidu-*, 20 செ.கு.வி. (v.i.) ஆற்றில் மடுவுண்டாதல்; to make a deep place in a river or channel.

மடுவிடு²-தல் *madu-vidu-*, 18 செ.குன்றாவி. (v.t.) கன்றைத் தாய்ப்பால் குடிக்க விடுதல்; to feed calf in cow's udder.

மடுவிப்புருதி *maduvi-p-purudi*, பெ.(n.) கட்டி வகை; a kind of abscess (சா.அக.).

மடை¹ *madai*, பெ.(n.) 1. தொளை (திவா.); hole, aperture. 2. வாய்; mouth. 3. குளத்திற்கு வாய் போன்ற மதகு; small sluice of a tank. *"உழவ ருடைத்த தெண்ணீர் மடை" (தஞ்சைவா.151).* 4. மதகுப் பலகை; shutters of a sluice. 5. நீரணை; dam by which the flow of water in a channel is obstructed. 6. ஓடை; channel. *"மடை தோறும் கமலமென் பூச்செறி யெறும்பியூர்" (தேவா.379, 9).* 7. அணிகலக் கடைப்பூட்டு; clasp, as of an ornament. *"மடைசெறி முன்கைக் கடகமொடு" (புறநா. 150).* 8. படைக்கலமூட்டு; joint, as in a spear. *"மடையவிழ்ந்த....... வேல்" (சீவக.293).* 9. அழுத்தின ஆணி; nail, rivet. *"மடைகலங்கி நிலை திரிந்தன" (புறநா.97).* 10. உண்ணுஞ்சோறு (பிங்.); boiled rice. 11. சமையல் வேலை; cooking. *"அடுமடைப் பேய்க் கெலாம்" (கலிங்.139).* 12. தெய்வப் படையல்; oblation of food to a deity. *"மடை யடும்பால்" (கலித்.109).*

**OE.** mete = food. **OS.** meti, mat; **OHG.** maz; **ON.** matr; **Goth.** mats; **E.** meat.

*[முல் (துளைத்தற் கருத்து வேர்)→முள்→ மள் →மடு = ஆற்றிடைப் பள்ளம். அருவி விழும் பள்ளநீர்க் குண்டு, ஆற்றிடைக் குட்டை, ஆவின்பால் மடி. மடு→ மடுத்தல் = வாயில் வைத்தல், உண்ணுதல். விழுங்குதல், ஊட்டுதல், நிறைத்தல், சேர்த்தல், உட்புகுத்துதல், குத்துதல், உட்செலுத்துதல். மடு→மடை (வே.க.4:91).]*

மடை² *madai*, பெ.(n.) 1. மடைமை, பேதைமை; ignorance. 2. மூதறிவின்மை; silliness. 3. அறிவு மழுக்கம்; stupidity.

*[முள்→மள்→மள்ளன் = இளைஞன், வீரன். மள்→மழ = இளமை, குழவி. மழவுங் குழவும் இளமைப் பொருள (தொல்.பொருள்.உரி.14). மழ→மழவு = இளமை, குழவி. மழவு→மழவன் = இளைஞன், வீரன். மழ→மழமை = இளமை. மழ→மத→மட→மடம் = இளமை, மடமை. மட→மடப்பு→மடப்பம் = இளமை, மடமை. மட→மடை = மடைமை. இருதிணையிலும் பெண்பால் ஆண்பாலினும் மடம் மிக்கதாகக் கருதப்படுவதால் மடவரல், மடந்தை முதலிய பெயர்கள் அஃறிணையிலும் பெண்பாலைக் குறிக்க வெழுந்தன (மு.தா.42).]*

மடை³ *madai*, பெ.(n.) 1. சமையல் வேலை; cooking. *"அடுமடைப் பேய்க்கெலாம்" (கலிங்.139).* 2. சோறு; boiled rice. 3. படையல் உணவு; oblation of food to a deity. *"மடையடும்பால்" (கலித்.109).*

*[மடுத்தல் = உண்ணுதல். மடு→மடை = உணவு.]*

**மடை**[4] *madai,* பெ.(n.) பழைய நாணய வகை; an ancient coin (I.m.p.cg.1009-10).

**மடை**[5] *madai,* பெ.(n.) 1. நீர்நிலைகளிலிருந்து நிலங்களுக்கு நீர் பாய்கின்ற திறப்பு; way to irrigation water cannal. *"ஸ்ரீகான பள்ளியில் மழவராயப்புத்தேரியில் முதல் மடையில் நம்பிராட்டியற்கு அமுது படிக்கு" (தருமகல்.1, தொ.1, 32).* 2. ஓடை; channel.

*[மடு→மடை.]*

**மடைக்கடல்** *madai-k-kadal,* பெ.(n.) ஆற்று நீர் கடலில் கலக்கும் கடற்பாகம் (யாழ்.அக.); river-mouth, that part of the sea where the river joins it.

*[மடை + கடல்.]*

**மடைக்கலப்பானை** *madai-k-kala-p-pānai,* பெ.(n.) ஒரு வகைப் பானை; a kind of pot.

*[மடை + கலம் + பானை. மடை = சமையல் தொழில்.]*

**மடைக்கலம்** *madai-k-kalam,* பெ.(n.) சமையல் ஏனம்; cooking utensil. *"மடைக்கலஞ் சிதைய வீழ்ந்த மடைபானை" (மணிமே.21: 56).*

*[மடை + கலம்.]*

**மடைக்கழி-த்தல்** *madai-k-kali-,* 4 செ.குன்றாவி.(v.t.) மதகு திறத்தல் (புதுவை.); to open the sluice.

*[மடை + கழி-.]*

**மடைகோலு-தல்** *madai-kōlu-,* 5 செ.கு.வி. (v.i.) வயலுக்கு நீர்பாய்ச்சுதல்; to attend to the irrigation of fields.

*[மடை + கோலு-. மடை = மதகு.]*

**மடைச்சாதி** *madai-c-cādi,* பெ.(n.) அறிவு குறைந்த கூட்டத்தார் (வின்.); ignorant folk.

*[மடை + சாதி. மடம் →மடை.]*

**மடைத்தலை** *madai-t-talai,* பெ.(n.) மதகு; sluice, head of a channel. *"மடைத் தலையிலோடுமீ னாட" (மூதுரை, 16).*

*[மடை + தலை.]*



**மடைத்தனம்** *madai-t-tanam,* பெ.(n.) அறிவுக் குறை; folly.

*[மடத்தனம்→மடைத்தனம்.]*

**மடைத்தொழில்** *madai-t-tolil,* பெ.(n.) சமையல் தொழில்; work of cooking. *"மடைத் தொழிற்கு மிக்கோன்" (நள.கலிநீங்.25).*

*[மடை + தொழில். மடு→மடை = சமையல்.]*

**மடைத்தொழிலோன்** *madai-t-tolilōn,* பெ.(n.) சமையற்காரன் (பிங்.); cook.

*[மடை + தொழிலோன்.]*

**மடைதிறப்போன்** *madai-tira-p-pōn-,* பெ.(n.) மடைவெட்டி (நாஞ்.) பார்க்க; see *madai-vetti.*

*[மடைதிறப்போன்→ மடைவெட்டி.]*

**மடைதிறப்புக்கதிர்** *madai-tirappu-k-kadir,* பெ.(n.) அறுவடைக் காலத்தில் மடை வெட்டிக்குக் கொடுக்கும் நெற்கதிர்; perquiste in kind to *madai-vetti,* during harvest.

*[மடைதிறப்பு + கதிர்.]*

**மடைநில்-தல்** *madai-nil-,*14 செ.கு.வி. (v.i.) வேண்டும் போதெல்லாம் பெற்றம் பால் சுரத்தல்; to secrete milk in cow whenever we need. *இந்த மாடு மடைநிற்காது (சென்னை).*

*[மடை + நில்-.]*

**மடைநூல்** *madai-nūl,* பெ.(n.) சமையற் கலை நூல்; art of cookry, treatise on cooking. *"மடைநூற் செய்தியும்" (மணிமே.2: 22).*

**மடைப்பண்டம்** *madai-p-pandam,* பெ.(n.) இறைவனுக்குப் படைக்குஞ் சோறு; rice offerings to a deity.

*[மடை + பண்டம்.]*

**மடைப்பள்ளி**[1] *madai-p-palli,* பெ.(n.) கோயில் முதலியவற்றின் அடுக்களை; cook-house, kitchen, especially of a temple. *"அடுந்தீ மாறா மடைப்பள்ளி யாகி" (கல்லா.23, 37).*

*[மடை + பள்ளி.]*

**மடைப்பள்ளி**[2] *madai-p-palli,* பெ.(n.) 1. அரண்மனைச் சமையற்காரன்; steward of a palace. 2. ஒரு சாதி (யாழ்ப்.); a caste of people.

*[மடை + பள்ளி.]*

**மடைப்பளி** *madai-p-pali,* பெ.(n.) மடைப் பள்ளி பார்க்க; see *madai-p-palli.*

*[மடைப்பள்ளி→மடைப்பளி.]*

**மடைப்பின்தொட்டி** *madai-p-pin-totti,* பெ.(n.) ஏரிக்கு வெளிப்புறத்தில் மதகின் ஓரமாய்க் கட்டப் பெற்ற தொட்டி (இ.வ.); cistern outside a tank-bund near its sluice.

*[மடை + பின் + தொட்டி.]*

**மடைபரவு-தல்** *madai-paravu-,* 5 செ.கு.வி. (v.i.) மடைபோடு-, பார்க்க (யாழ்ப்.); see *madai-pōdu-.*

*[மடை + பரவு-.]*

**மடைபோடு-தல்** *madai-pōdu-,* 19 செ.கு.வி. (v.i.) இறைவனுக்குச் சோறு படைத்தல்; to lay out rice offerings before a deity.

*[மடை + போடு-. மடை = உணவு.]*

**மடைமாறி** *madai-māri,* பெ.(n.) புரட்டுக்காரன்-ரி; cheat, deceitful person. *"தொழுதாள் மடைமாறி சொல்வாள்" (விறலி விடு.803).*

**மடைமுகம்** *madai-mugam,* பெ.(n.) 1. மடைத்தலை பார்க்க; see *madai-talai.* 2. மடைக்கடல் பார்க்க (யாழ்ப். அக.); see *madai-k-kadal.*

*[மடை + முகம்.]*

**மடைமுன்தொட்டி** *madai-mun-totti,* பெ.(n.) ஏரிக்கு உட்புறத்தில் மதகு ஓரமாய் நீர் வேகத்தைக் குறைத்தற்குச் சதுர வடிவிற் கட்டப்பட்ட தொட்டி (இ.வ.); cistern inside a tank - bund in front of a sluice; to lesson water pressure at its head.

*[மடை + முன் + தொட்டி.]*

**மடைமை** *maḍaimai,* பெ.(n.) அறியாமை; ignorance.

*[மடி → மட →மடம் = மடந்தை. மடம்→மடைமை (வே.க.4:6).]*

**மடையசாதி** *maḍaiya-cādi,* பெ.(n.) மடைச் சாதி பார்க்க (வின்.); see *maḍai-c-cādi.*

*[மடைச்சாதி→ மடையசாதி.]*

**மடையசாம்பிராணி** *maḍaiya-cāmbirāṇi,* பெ.(n.) 1. அறிவுக்குறைவன் (யாழ்.அக.); dunce. 2. மட்டிப்பால் பார்க்க; see *maṭṭi-p-pāl.* 3. மடையன்சாம்பிராணி பார்க்க; see *maḍaiyaṉ-šāmbirāṇi.*

**மடையடை-த்தல்** *maḍai-y-aḍai-,*4 செ.கு.வி. (v.i.) 1. நீர்பாயுங் காலை மூடுதல்; to close the source of irrigation. 2. தீர்மானமான விடை சொல்லுதல்; to give a definite reply.

*[மடை + அடை.]*

**மடையன்**[1] *maḍaiyaṉ,* பெ.(n.) சமையற்காரன்; cooking man. *"இவ்வறச் சாலை மடையன் ஒருவனுக்கு" (தெ.க.தொ.5, கல்.223). "மடைக்கலஞ் சீழ்ந்த வீழ்ந்த மடையனை" (மணி.21, 56).*

*[முல் (துளைத்தற் கருத்து வேர்)→ முள்→மள் →மடு = ஆற்றிடைப் பள்ளம், அருவி விழும் பள்ளநீர்க்குண்டு. மடு→மடுத்தல் = வாயில் வைத்தல், உண்ணுதல். மடு→மடை = தொளை, வாய், உண்ணுஞ் சோறு, சமையல் வேலை. மடை→மடையன் (வே.க. 4:92).]*

**மடையன்**[2] *maḍaiyaṉ,* பெ.(n.) மடைவெட்டி பார்க்க; see *maḍai-veṭṭi.*

*[மடை→ மடையன். மடை = மதகுக் கதவு.]*

**மடையன்**[3] *maḍaiyaṉ,* பெ.(n.) அறிவுக் குறைவாளன்; block-head. *"மடையர் பொருள் பெறமருவிகள்" (திருப்பு.828).*

*[மழ→மழம்→மடம்→மடயன்→மடையன். மடம் = இளமை, இளமைக்குரிய அறியாமை (வே.க.4:6).]*

**மடையன்சாம்பிராணி** *maḍaiyaṉ-šāmbirāṇi,* பெ.(n.) 1. மரவகை; malabar mohogany. 2. மடையசாம்பிராணி பார்க்க; see *maḍaiya-šāmbirāṇi.*

**மடையன்நீர்** *maḍaiyaṉ-nīr,* பெ.(n.) தெளிந்த நீர்; crystal water.

*[மடை + நீர் – மடையன்நீர்.]*

**மடையான்** *maḍaiyāṉ,* பெ.(n.) 1. மடை வெட்டி பார்க்க; see *maḍai-veṭṭi.* 2. பறவை வகை (பதார்த்த.896); heron, ardea. 3. உள்ளான் வகை; a grey snipe.

மடை = நீரோடை. மடையில் நிற்கும் பறவை மடையான்.

**மடையுப்பு** *maḍai-y-uppu,* பெ.(n.) சோற்றுப்பு; common salt.

*[மடை + உப்பு. மடை = சமையல் தொழில். சமையலுக்குப் பயன்படும் உப்பு.]*

**மடைவெட்டி** *maḍai-veṭṭi,* பெ.(n.) நீர்மடை திறப்போன்; sluice opener, servent watching the irrigation works and distributing the water (R.T.).

*[மடை + வெட்டி. மடை = நீர்நிலை.]*

**மண்**[1] *maṉ,* பெ.(n.) 1. நிலவுலகம்; the earth, the world. *"மண்ணொடு புகழ் நிறீஇ" (பு.வெ.2, 5).* 2. ஐம்பூதத்தொன்று; earth, as

an element. "புனலொடு மண்ணும் விண்ணும்" (திருவாச.5, 8). 3. நீராடுங்காற் பூசிக்கொள்ளும் பத்துவகை மண்; clods of earth taken from ten specified places and rubbed on the person in purificatory baths. "ஆடுநீரன பத்து மண்களும்" (சீவக.2418). 4. புழுதி (பிங்.); dust, dirt. 5. திருநாமத்துக்குரிய வெள்ளிய மண்கட்டி; white earth used by *Vaiṣṇavas* in marking their fore-head. "ஈராறு நாம முறை செய்துமண் கொடிடுவார்கள் காணுமிமை யோர்" (பா்ரத.ஒன்பதாம்.1). 6. தரை (வின்.); dry ground, soil, land. 7. அணு; atom, particle, grain. "மண்டிணிந்த நிலனும்" (புறநா.2). 8. சுண்ணச் சாந்து; lime-mortar, cement. "மண்ணோ டியைந்த மரத்தனையர்" (குறள், 576). 9. மத்தள முதலியவற்றிற் பூசும் மார்ச்சனை; paste smeared on the head of a drum for toning it. "மண்கனை முழவின்" (மலைபடு.370). 10. மனை; house-site. "நான் கோயிலில் மண்பெற்றது அவ்வேளாளனாலே" (திவ்.கண்ணிநுண்.3, வியா.). 11. வயல்; cultivable field. 'அவன் மண் மனையில்லாதவன்' (இ.வ).

[முல் (பொருந்தற் கருத்துவேர்) → மல் → மண்.]

பல அணுக்கள் அல்லது உறுப்புகள் பொருள்கள் பொருந்துவதால் (ஒன்று சேர்வதால்) திரட்சி அல்லது பருமை உண்டாகும்.

ஒ.நோ. சேரே திரட்சி (தொல்.உரி.65). மிகுதியால் வளமும் பருமையால் வன்மையும் உண்டாகும்.

**மண்**² *maṇ*, பெ.(n.) 1. கழுவுகை; washing. "மண்ணீருமாகாது" (மூதுரை, 12) (அக.நி.). 2. ஒப்பனை; adornment, decoration. "மண்கெழுமறவன்" (பு.வெ.4, 15, கொளு.).

**மண்கட்டு-தல்** *maṇ-kaṭṭu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. புற்றுக்கட்டுதல்; to throw up earth, as white ants. 2. மாழைகளை உருக்குதற்காகக் கருக்கட்டுதல்; to make moulds of earth for casting metals.

[மண் + கட்டு-.]

**மண்கட்டை** *maṇ-kaṭṭai*, பெ.(n.) வாணக் குழலின் களிமண்ணடைப்பு; base of rocket, formed of clay. 2. உடம்பு; human body.

[மண் + கட்டை.]



**மண்கண்டம்** *maṇ-kaṇḍam*, பெ.(n.) மண்பார் பார்க்க (வின்.); see *maṇ-pār*.

**மண்கணை** *maṇ-kaṇai*, பெ.(n.) 1. குடமுழவு வகை (பிங்.); a large hemi spherical drum. 2. முழவுப் பொது (அக.நி.); drum.

**மண்கத்திரி** *maṇ-kattiri*, பெ.(n.) ஒரு வகைப் பாம்பு; a kind of snake (சா.அக.).

**மண்கல்** *maṇ-kal*, பெ.(n.) 1. செங்கல்; brick. 2. வெள்ளைச் சுக்கான் கல்; white kunkur stone.

[மண் + கல்.]

**மண்கல்லுச்சத்து** *maṇ-kallu-c-cattu,* பெ. (n.) பல கல்லுச் சத்து; the essence of several stones.

**மண்கலம்** *maṇ-kalam,* பெ.(n.) மட்கலம் பார்க்க; see *maṭkalam.*

*[மட்கலம் →மண்கலம்.]*

**மண்கவரை** *maṇ-kavarai,* பெ.(n.) சேலம் மாவட்டத்தில் மண்ணிலிருந்து உப்புக் காய்ச்சும் ஒட்டர் வகையார்; a class of *oṭṭar* in *Salem* district, who manufacture salt from earth (E.T.iv. 455).

*[மண் + கவரை.]*

**மண்கிடங்கு** *maṇ-kiḍaṅgu,* பெ.(n.) 1. மண்ணெடுத்த குழி; pit made by digging earth. 2. கல்லறை (யாழ்ப்.); grave.

*[மண் + கிடங்கு.]*

**மண்கிணறு** *maṇ-kiṇāṟu,* பெ.(n.) 1. களி மண்ணில் தோண்டிய கட்டடமில்லாத கிணறு; well dug out in clay, without walling. 2. மணற்பாங்கில் தோண்டப்பட்ட கிணறு (யாழ்.அக.); well in a sandy tract.

*[மண் + கிணறு.]*

**மண்கிழங்கு** *maṇ-kiḻaṅgu,* பெ.(n.) சிறு கிழங்கு பார்க்க; see *siṟu-kiḻaṅgu.*

*[மண் + கிழங்கு.]*

**மண்குகை** *maṇ-kugai,* பெ.(n.) 1. நிலவறை; cave in the earth. 2. குளவிக்கூடு; hornet's nest. 3. மண்மூசை; crucible.

*[மண் + குகை.]*

**மண்குத்திப்பாம்பு** *maṇ-kutti-p-pāmbu,* பெ.(n.) ஒருவகைப் பாம்பு; a kind of snake (சா.அக.).

*[மண்குத்தி + பாம்பு.]*

**மண்குத்துநோய்** *maṇ-kuttu-nōy,* பெ.(n.) குழந்தை ஈன்றவுடனே மார்பு, தலை, கீழ் வயிறு முதலிய இடங்களில் காணும் பொறுக்கவியலாத குத்தல் நோய்; an unbearable pain due to the irregular discharge or retention of after birth. The pain is felt in the abdomen, chest, head and other places in the system (சா.அக.).

*[மண்குத்து + நோய்.]*

**மண்குத்துநோவு** *maṇ-kuttu-nōvu,* பெ.(n.) பிள்ளைப் பேற்றின் பின் உண்டாகும் நோவு (சீவரட்.208); after delivery pains.

*[மண்குத்து + நோவு.]*

**மண்கும்பம்** *maṇ-kumbam,* பெ.(n.) மண் மேடு பார்க்க (யாழ்.அக.); see *maṇ-mēḍu.*

*[மண் + கும்பம்.]*

**மண்கும்பி** *maṇ-kumbi,* பெ.(n.) மண்மேடு பார்க்க (யாழ்.அக.); see *maṇ-mēḍu.*

*[மண் + கும்பி.]*

**மண்குழை-த்தல்** *maṇ-kuḻai-,* 4 செ.கு.வி. (v.i.) சுவர் முதலியன கட்டுதற்கு உதவுமாறு மண்ணைக் குழைத்துச் சாந்தாக்குதல்; to mix water with clay or mud to form a semi-liquid mass as in building a wall.

*[மண் + குழை-.]*

**மண்குளி-த்தல்** *maṇ-kuḷi-*,4 செ.கு.வி.(v.i.) புழுதியாகுதல்; to roll in the dust, to take a sand-bath, as a beast or bird.

*[மண் + குளி-.]*

**மண்கூட்டாளன்** *maṇ-kūṭṭāḷaṉ,* பெ.(n.) குயவன்; potter. *"மண் கூட்டாளன் மனைவயின் மறையவும்" (பெருங். உஞ்சைக். 46, 332).*

*[மண் + கூட்டாளன்.]*

**மண்கூர்மை** *maṇ-kūrmai,* பெ.(n.) வளையலுப்பு; a salt obtained from the fuller's earth.

*[மண் +கூர்மை.]*

**மண்கொட்டு** *maṇ-koṭṭu,* பெ.(n.) மண்வெட்டி பார்க்க; see *maṇ-veṭṭi. "அத்தனை மண் கொட்டால் வெட்டா" (கடம்ப.பு.இலீலா.34).*

*[மண் +கொட்டு.]*

**மண்கொத்தளம்** *maṇ-kottaḷam,* பெ.(n.) மண்ணாற் செய்த மதிலுறுப்பு (யாழ். அக.); part of a rampart, made of mud.

*[மண் + கொத்தளம்.]*

**மண்கோபுரக்கல்** *maṇ-kōpura-k-kal,* பெ. (n.) செங்கல்; brick.

*[மண் + கோபுரம் + கல்.]*

**மண்சாடி** *maṇ-cāḍi,* பெ.(n.) 1. மண்ணாற் செய்த பாண்டம்; earthern jar. 2. யானைக் குன்றி மரம்; a tree.

*[மண் + சாடி.]*

**மண்சாடிக்குண்டுமணி** *maṇšāḍi-k-kuṇḍumaṇi,* பெ.(n.) மண்சாடிக்குன்றி மணி பார்க்க; see *maṇšāḍi-k-kuṉṟimaṇi.*

*[மண் + சாடி + குண்டுமணி. குன்றிமணி →குண்டுமணி.]*

**மண்சாடிக்குன்றிமணி** *maṇšāḍi-k-kuṉṟimaṇi,* பெ.(n.) பெரிய குன்றிமணி; big relty seed (சா.அக.).

*[மண் + சாடி + குன்றிமணி.]*

**மண்சாந்து** *maṇ-šāndu,* பெ.(n.) குழைத்த சேறு (இ.வ.); mud plaster.

*[மண் + சாந்து.]*

**மண்சிலை** *maṇ-šilai,* பெ.(n.) கற்காவி (யாழ். அக.); red ochre.

*[மண் + சிலை.]*

**மண்சிவப்பு** *maṇ-šivappu,* பெ.(n.) கருஞ் சிவப்பு (யாழ்.அக.); dark red.

*[மண் + சிவப்பு.]*

**மண்சீலை** *maṇ-šīlai,* பெ.(n.) மருந்து புடமிடக் கலத்தின்மேற் சுற்றும் மண்ணூட்டிய துணி (கொ.வ.); piece of cloth coated with luting and tied either round the mouth of the pot for calcining medicines or round the medicines to be calcined.

*[மண் + சீலை.]*

**மண்சீலைசந்துசெய்-தல்** *maṇ-šīlai-šandu-šey-,*1 செ.குன்றாவி.(v.t.) மண்சீலை செய்-, பார்க்க; see *maṇ-šīlai-šey-.*

*[மண் + சீலை + சந்து + செய்-.]*

**மண்சீலைசெய்-தல்** *manšīlai-šey,* 1 செ.குன்றாவி.(v.t.) சீலை மண் செய்தல்; to lute the crucible which containes the medicine to be calcined.

*[மண் + சீலை + சந்து + செய்-.]*

**மண்சுதை** *man-šudai,* பெ.(n.) சுண்ணச் சாந்து; chunnam plaster.

*[மண் + சுதை.]*

**மண்செய்கை** *man-šeygai,* பெ.(n.) மண் வேலை பார்க்க (யாழ்.அக.); see *man-vēlai.*

*[மண் + செய்கை.]*

**மண்செய்-தல்** *man-šey,* 1 செ.குன்றாவி. (v.t.) மண்சிலைசெய்-தல் பார்க்க; see *man-šilai-šey-.*

*[மண் + செய்-.]*

**மண்சேய்** *man-šēy,* பெ.(n.) செவ்வாய் (நாமதீப.90); mars, as son of the earth.

*[மண் + சேய்.]*

**மண்சோறு** *man-šōru,* பெ.(n.) 1. தெய்வத்திற்கு நேர்ந்து கொண்டு கோயில் தரையில் சோறிட்டு உண்ணும்போது; as per take vow eat the rice food from temple floor. 2. மணற்சோறு பார்க்க (யாழ்.அக.); see *manar-šōru.*

*[மண் + சோறு.]*

**மண்டக்கம்** *mandakkam,* பெ.(n.) முத்துக் குளிப்போனை மேலிழுக்கும் கயிறு (வின்.); rope used for hauling up divers in pearl fishery.

**மண்டக்கன்** *mandakkan,* பெ.(n.) மண்டக்காள் பார்க்க; see *mandakkāl.* "மண்டக்க னேறாமல்" (நெல்விடு.222).

*[மண்டக்கம் →மண்டக்கன்.]*

**மண்டக்காள்** *mandakkāl,* பெ.(n.) முத்துக் குளிப்பவனைக் கயிறு கொண்டு மேலிழுப்பவன்; one that hauls up divers in pearl fishery.

*[மண்டக்கம் + ஆள் - மண்டக்காள்.]*

**மண்டக்கு** *mandakku,* பெ.(n.) மண்டக்கம் பார்க்க (வின்.); see *mandakkam.*

*[மண்டக்கம்→மண்டக்கு.]*

**மண்டகப்படி**[1] *mandaga-p-padi,* பெ.(n.) மண்டபச்செலவு பார்க்க; see *mandaba-c-celavu.*

**மண்டகப்படி**[2] *mandaga-p-padi,* பெ.(n.) 1. பகடி; ridicule. 2. அடி; tharshing, beating.

**மண்டகப்படிச்செலவு** *mandaga-p-padi-c-celavu,* பெ.(n.) மண்டபச்செலவு பார்க்க; see *mandaba-c-celavu.*

*[மண்டகப்படி + செலவு.]*

**மண்டகம்**[1] *mandagam,* பெ.(n.) மண்டபம்[1] பார்க்க; see *mandabam.* "மண்டகம் எடுத்த நிலத்தொடும்" (S.I.I.i, 150, 61).

*[மண்டபம்→மண்டகம்.]*

**மண்டகம்**[2] *mandagam,* பெ.(n.) சருக்கரை போடாத பூரி; a wheat cake prepared without sugar (வின்.).

**மண்டகி** *mandagi,* பெ.(n.) ஆமணக்குச் செடி; castor plant (சா.அக.).

**மண்டங்கள்ளி** *mandangalli,* பெ.(n.) கள்ளி வகை; cement plant s.t.r. *Euphorhia trigona.*

**மண்டபச்செலவு** *maṇḍaba-c-celavu,* பெ. (n.) இறைவன் (உற்சவமூர்த்தி) மண்டபத்தில் எழுந்தருள்வதற்காகச் செய்யுஞ் செலவு; expense incurred for receiving a deity in a *maṇḍapam* during a festival.

*[மண்டபம் + செலவு.]*

**மண்டபப்படி**[1] *maḍaba-p-paḍi,* பெ.(n.) 1. மண்டபச்செலவு பார்க்க; see *maṇḍaba-c-celavu.* 2. திருநாட் சிறப்பு; special celebration to a deity at a festival. *இன்றைக்கு நாலாம் மண்டபப்படி (உ.வ.).* 3. திருவிழாவில் இறைவன் தங்குமிடம் (கொ.வ.); halting place for a deity in a festival procession.

**மண்டபப்படி**[2] *maḍaba-p-paḍi,* பெ.(n.) மடைப் பண்டம் பார்க்க; see *maḍai-p-paṇḍam.*

**மண்டபம்**[1] *maṇḍabam,* பெ.(n.) திருநாளில் இறைவன் தங்குவதற்காகக் கட்டப்பட்ட கற்கட்டடம்; pavilion in a temple or other place used during festivals for the reception of idols when they are carried in procession, generally a square or rectangular hall with a flat roof supported by pillars. 2. ஒப்பனைப் பந்தல்; temporary saloon or open shed decorated for festive occasion. 3. சாவடி; public hall or rest - house.

*[மண்டுதல் = நெருங்குதல், நிறைதல், நிறைந்து கூடுதல். மண்டு = செறிவு, மிகுதி. மண்டு→மண்டகம்→மண்டபம். ஒ.நோ. வாணிகம் →வாணிபம்.]*

**மண்டபம்**[2] *maṇḍabam,* பெ.(n.) மண்டலம்[1] பார்க்க; see *maṇḍalam.*

**மண்டபவெழினி** *maṇḍaba-v-eḻiṉi,* பெ.(n.) கூடாரம்; tent or pavilion resembling a hall. *"கண்டங்குத்திய மண்டப வெழினியுள்" (பெருங். உஞ்சைக்.37. 103).*

*[மண்டபம் + எழினி.]*

**மண்டம்**[1] *maṇḍam,* பெ.(n.) 1. நீர்ப் பொருளைக் காய்ச்சும் போது அல்லது புளிப்புச் சேர்க்கும் போது மேலெழும் ஏடு; skimmings, scum froth or foam, as on boiling or fermenting liquids. 2. தயிரேடு; cream of curdled milk. 3. ஆமணக்கு (மலை.); castor plant.

**மண்டம்**[2] *maṇḍam,* பெ.(n.) 1. ஒருவகைக் கஞ்சி; a kind of rice pap. 2. மண்டை; skull. 3. நொதி; bear yeast (சா.அக.).

**மண்டையந்தம்** *maṇḍaiyandam,* பெ.(n.) சோறு; cooked rice (சா.அக.).

**மண்டயிலம்** *maṇḍayilam,* பெ.(n.) 1. மண்ணிலூறும் (தயிலம்) நெய்; oil springing from the earth - crude oil. 2. மண்ணெ(ண்ணெ)ய்; kerosine oil. 3. மண்ணில் வடிக்கும் எண்ணெய்; oil extracted from the mud.

*[மண் + **Skt.** தைலம்.]*

**மண்டர்** *maṇḍar,* பெ.(n.) படைவீரர் (திவா.); heroes, champions, soldiers.

**மண்டல்** *maṇḍal,* பெ.(n.) வெள்ளத்தின் அடியில் திரளும் மண், வண்டல்; sediment.

*[மண்டு→மண்டல் (மு.தா.159).]*

**மண்டல்வலை** *maṇḍal-valai,* பெ.(n.) வலை வகை; kind of fishing net.

*[மண்டல் +வலை.]*

வலையின் சிறப்புத் தன்மை:- மிதப்புக் கட்டைகள் சிறியனவாகவும், கீங்காக் கற்கள் பெரியனவாகவும் இருக்கும். 400 முதல் 500 அடி நீளமுடையது. தடித்த கயிற்றாலானது. 5 அங்குல கண்களையுடையது (க.ப.அக.).

மண்டலச்சீரந்தாதி *mandala-c-cirandādi,* பெ.(n.) ஒரு செய்யுளின் இறுதியடியின் இறுதிச் சீரும் முதலடியின் முதற்சீரும் ஒன்றாய் வரப் பாடும் அந்தாதி வகை; a kind of Šir-antādi in whcih the last foot of the last line of a stanza is the same as the first line. *"மண்டல எழுத்தந்தாதி, செந்நடை எழுத்தந்தாதி, மண்டல அசையந்தாதி, மண்டலச் சீரந்தாதி, செந்நடை அடியந்தாதி, மண்டல மயக்கந்தாதி, செந்நடை மயக்கந்தாதி, மண்டல இடையிட்ட அடியந்தாதி எனக் கொள்க" (யாப்.வி.52, பக்.193).*

*[மண்டலம் + சீர் + அந்தாதி.]*

மண்டலசெயம் *mandala-ceyam,* பெ.(n.) உலக வெற்றி; world - conquest.

*[மண்டலம் + செயம்.* **Skt.***Jayam.]*

மண்டலநிலை *mandala-nilai,* பெ.(n.) வில்லோர் நிலை நான்கினுள் ஒன்று; a posture in archery. *"வில்வளைத் தெதிர் மண்டல நிலையாய்" (பாரத.நிரை.67).*

*[மண்டு - வளைதல். மண்டு → மண்டலம். மண்டலம் + நிலை.]*

மண்டலநெறி *mandala-neri,* பெ.(n.) எந்திரச் சக்கரம் வரைதற்குரிய நெறிமுறைகள் (வின்.); directions for making diagrams for worship.

*[மண்டலம் + நெறி.]*

மண்டலபுருடன் *mandala-purudan,* பெ.(n.) 16ஆம் நூற்றாண்டில் சூடாமணி நிகண்டை இயற்றிய சமண ஆசிரியர்; author of *šūdāmaninigandu* of 16th century a Jain.

மண்டலபூசை *mandala-pūšai,* பெ.(n.) 40, 41 அல்லது 45 நாட்களுக்குத் தொடர்ந்து நடைபெறும் வழிபாடு; the ceremony of anoiting idols continually for 40, 41 or 45 days.

*[மண்டலம் + பூசெய் → பூசை.]*

மண்டலம்[1] *mandalam,* பெ.(n.) 1. நிலவுலகம்; the earth. *"மண்டலந் தனைஇ..... குளிரவே வைத்தோன்" (பாரத.குருகுல.3).* 2. வட்டம் (பிங்.); circle, sphere, orbit. *"சுடர் மண்டலம்" (திருநூற்.80).* 3. வட்ட வடிவம் (திவா.); disc, as of sun or moon or clouds. 4. கதிரவன் பரிப்பு; ecliptic. 5. கதிரவன் மறைப்பின் போதான நிலவின் வட்டப்பாதை; circle of the moon during eclipse. 6. ஒரு பகுதி; region, as of sun, moon or clouds. *'மேக மண்டலம்' (உ.வ.).* 7. நாட்டின் பெரும்பகுதி; district, division of a country. *'சோழ மண்டலம்' (உ.வ.).* 8. ஊர் (பிங்.); town. 9. மந்திரச் சக்கரம் (வின்.); mystic circular diagram. 10. குதிரையின் வேக வகை; a pace of horse. *"பண்ணிய வீதிபற்றி மண்டலம் பயிற்றினானே" (சீவக.795).* 11. கூட்டம்; assembly, serried array. *"சேனை மண்டலங்களுடனே" (பாரத. பத்தாம்.30).* 12. பரிவேடம்; halo, as round sun or moon. *'சூரியனைச் சுற்றி மண்டலம் போட்டிருக்கிறது' (உ.வ.).* 13. 108 சிற்றிலக்கியங்களுள் ஒன்று; one of 108 upanisad. 14. நடுவிரல் நுனியும் பெருவிரல் நுனியும் கூடி வளைந்திருக்க மற்ற

விரல்களும் ஒக்க வளைந்து நிற்கும் இணையாவினைக்கை (சிலப்.3, 18, உரை); a gesture with one hand in which the tips of the middle finger and the thumb are joined and the other fingers are bent, one of 33 *iṇaiyā-viṉai-k-kai.* 13. காதலியின் இணைவில் காதலனிடும் நகக்குறி ஆறனுள் வட்ட வடிவமுள்ள அடையாளம் (கொக்கோ.5, 58); circular nail mark made on a woman's body by her lover during sexual union. 14. வில்லோர் நிலையில் ஒன்று (சூடா.); a posture in archery. 15. வட்ட வடிவமான படை வகுப்பு; array of an army in a circular form. 16. மேலுலகம்; heaven. *'பரமண்டலம்' (உ.வ.).*

*[முல் (வளைதற் கருத்து வேர்)→முள்→முட்டு →முட்டை = சுழி, சுண்ணம். முள்→(மள்)→(மண்)→ மணி = வட்டமான வெண்கலம். முண்டு →மண்டு. மண்டுதல் = வளைதல். மண்டு→மண்டலம் = வட்டம், வட்டகையான நாட்டுப் பிரிவு, நாற்பான் நாள் வட்டம் (மு.தா.244).]*

மண்டலம்[2] *maṇḍalam,* பெ.(n.) 1. பாம்பு முதலியவற்றின் சுற்று; coil, as of a snake or rope. *"மண்டலம் பயிலுரகர்" (பாரத. குருகுல.3).* 2. வட்டவடிவ படையமைப்பு வகை; array of an army in a circular form.

*[முல் (வளைதற் கருத்து வேர்) முள்→முட்டு → முட்டை=சுழி, சுண்ணம். முள்→(மள்)→(மண்)→ மணி = வட்டமான வெண்கலம். முண்டு→மண்டு. மண்டுதல் = வளைதல். மண்டு→மண்டலம் (மு.தா.244).]*

மண்டலம்[3] *maṇḍalam,* பெ.(n.) 40, 41, 45 நாள் கொண்ட காலவளவு; days and time of 40, 41, 45.

*[மண்டு→மண்டலம்.]*

மண்டலம்போடு-தல் *maṇḍalam-pōḍu-,* 2 செ.கு.வி. (v.i.) 1. பாம்பு முதலியன வட்டமாய்ச் சுற்றியிருத்தல்; to form into circles or coils as a snake. 2. சுற்றிச் சுற்றி வட்டமிடுதல்; to pass round one another in a circle, as combatants, to describe circles in the air, as birds. 3. சக்கரம் முதலியன வரைதல்; to make ornamental, strological or mystic diagrams, commonly circular. 4. மண்டலமிடு-தல் பார்க்க; see *maṇḍala-miḍu-.*

*[மண்டலம் + போடு-.]*

மண்டலமட்டி *maṇḍalamaṭṭi,* பெ.(n.) மண்டலாட்டி பார்க்க; see *maṇḍalāṭṭi.*

*[மண்டலம் + மட்டி.]*

மண்டலமயக்கந்தாதி *maṇḍala-mayakk andādi,* பெ.(n.) 1. ஒரு செய்யுளின் இறுதி யடியின் இறுதி எழுத்து அசை அல்லது சீர் முதலடியின் முதலெழுத்து அசை அல்லது சீரோடு ஒத்து வருமாறு பாடப்படும் மயக்கந்தாதி வகை (யாப்.வி.52, உரை); a kind of *mayakkantādi* in which the last letter, syllable or foot of the last line of a stanza is the same as the first letter, syallable or foot of its first line. 2. மண்டலச்சீரந்தாதி பார்க்க; see *maṇḍala-c-cīrantādi.*

*[மண்டலம் + மயக்கு + அந்தாதி.]*

மண்டலமழை *maṇḍala-maḻai,* பெ.(n.) பரந்து பெய்யும் மழை (வின்.); rain falling over a wide area.

*[மண்டலம் + மழை. மண்டலம் = பரப்பு.]*

மண்டலமாக்கள் *maṇḍala-mākkaḷ,* பெ.(n.) 1. அரசர்; kings, rulers. *"மண்டல மாக்கள் பிரிதோருவங் கொண்டும்" (சிலப்.8, 89, உரை, மேற்.).* 2. மண்டிலமாக்கள் பார்க்க; see *maṇḍila-mākkaḷ.*

*[மண்டலம் + மாக்கள்.]*

மண்டலமிடு-தல் *maṇḍalamiḍu-,* 20 செ. கு.வி.(v.i.) 1. மண்டலம்போடு- பார்க்க; see *maṇḍalam-pōḍu-.* 2. உணவு உண்பதற்கும், பூசை முதலியவற்றிற்காகவும் நீர் தெளித்துத் தடவி இடம் பண்ணுதல்; to prepare a place by cleaning it with water as for dining or and worship. *"நீரைத் தெளித்துத் தடவி மண்டலமிட்டு" (சிலப்.16, 41, உரை.).* 3. ஒரு மண்டல காலம் வழிபடுதல்(திவ்.நாய்ச்.1, வியா.); to perform worship for a *maṇḍalam.* 4. பரிவேடங் கொள்ளுதல்; to have a halo, as the sun or moon.

*[மண்டலம் + இடு-.]*

மண்டலர் *maṇḍalar,* பெ.(n.) அருகபதம் பெற்றவரில் ஒரு சாரார் (சி.சி.பர.ஆசீவகன் மறுதலை, 2); a class of Arhats.

*[மண்டலம் + அர்.]*

மண்டலவசையந்தாதி *maṇḍala-vaśai-andādi,* பெ.(n.) 1. ஒரு செய்யுளின் இறுதி யடியின் இறுதியசையும் முதலடியின் முதலசையும் ஒன்றாக வரும்படி பாடப்படும் அசையந்தாதி (யாப்.வி.52, உரை); a kind of *aśai-andādi* in which the last syllable of the last line of a stanza is the same as the first syllable of its first line. 2. மண்டலச்சீரந்தாதி பார்க்க; see *maṇḍala-c-cīrandādi.*

*[மண்டலம் + அசை + அந்தாதி.]*

மண்டலவடியந்தாதி *maṇḍala-v-aḍi-andādi,* பெ.(n.) ஒரு செய்யுளிறுதியடியின் இறுதி எழுத்து, அசை அல்லது சீர் முதலடியின் முதல் எழுத்து, அசை அல்லது சீருடன் ஒத்து வருமாறு பாடப்படும் அந்தாதி வகை (யாப்.வி.52, உரை); a kind of *andadi* in which the last letter, syllable or foot of the last line of a stanza is the same as the first letter, syllable or foot of its first line.

*[மண்டலம் + அடி + அந்தாதி.]*

மண்டலவர்சம் *maṇḍala-varsam,* பெ.(n.) மண்டலமழை பார்க்க; see *maṇḍala-maḻai.* *"ஆதிமழை என்று மண்டல வர்ஷமாக்கி" (திவ். திருப்பா.4, வியா.).*

*[மண்டலம் +* **Skt.** *வர்சம்.]*

மண்டலவன் *maṇḍalavaṉ,* பெ.(n.) மண்டல புருடன் (சூடா.3, 78) பார்க்க; see *maṇḍala-puruḍaṉ.*

*[மண்டலம் + அவன்.]*

மண்டலவிதி *maṇḍala-vidi,* பெ.(n.) மண்டல நெறி பார்க்க; see *maṇḍala-neṟi.*

*[மண்டலம் + விதி.]*

**Skt.** விதி > த. நெறி.

மண்டலவியூகம் *maṇḍalaviyūgam,* பெ.(n.) வட்டமாக அமைக்கும் படை வகுப்பு (குறள், 767, உரை); circular array, as of any army.

*[மண்டலம் + வியூகம்.]*

மண்டலவிரியன் *mandala-viriyan,* பெ.(n.) மண்டலி³ பார்க்க (இ.வ.); see *mandali.*

*[மண்டலம் + விரியன்.]*

**Skt.** வியூகம் > த. படையமைப்பு.

மண்டலவெழுத்தந்தாதி *mandala-v-eluttandādi,* பெ.(n.) 1. ஒரு செய்யுளின் இறுதியடியின் இறுதியெழுத்தும் முதலடியின் முதலெழுத்தும் ஒன்றாய் வரப் பாடப்படும் எழுத்தந்தாதி வகை (யாப்.வி.52, உரை); a kind of *eluttandādi* in which the last letter of the last line of a stanza is the same as the first letter of its first line. 2. மண்டலச்சீரந்தாதி பார்க்க; see *mandala-c-cirandādi.*

*[மண்டலம் + எழுத்து + அந்தாதி.]*

மண்டலாகாரம் *mandalāgāram,* பெ.(n.) வட்ட வடிவம் (வின்.); circular shape, circular course.

*[மண்டலம் + ஆகாரம்.]*

மண்டலாசி *mandalāši,* பெ.(n.) 1. பழைய திருவனந்தபுரம் மாநிலத்தில் மன்னர் இறந்தபோது தலைவிரித்துப் போட்டு இழவு கொண்டாட அமர்த்தப்படுவோர்; professional mourners, who bewail at the demise of the king in the old *Travancore* state. 2. அடங்காப்பிடாரி; termagent, shrew.

மண்டலாட்டி *mandalatti,* பெ.(n.) இலுப்பை மரம் (மலை.); a species of mahwa.

மண்டலாதி *mandalādi,* பெ.(n.) மாங்காய்; mango (சா.அக.).

மண்டலாபிடேகம் *mandalābidēgam,* பெ.(n.) மண்டலபூசை பார்க்க; see *mandala-pūšai.*

*[மண்டலம் + Skt.அபிசேகம்.]*

மண்டலார்த்தம் *mandalārttam,* பெ.(n.) 1. அரை வட்டம்; semi circle. 2. அரை விட்டம், ஆரம்; semi-diameter.

*[மண்டலம் + Skt. அர்த்தம்.]*

மண்டலி¹–த்தல் *mandali-,* 20 செ.கு.வி.(v.i.) 1. மண்டலம்போடு–, பார்க்க; see *mandalam-pōdu-.* 2. காலை வளைத்து வட்டமாக்குதல்; to bend the legs in a low-like form. 3. இறுதிப் பாட்டின் அல்லது இறுதி அடியின் இறுதி எழுத்து, அசை, சீர் என்பனவற்றுள் ஏதேனும் ஒன்று முதற்பாட்டின் அல்லது முதல் அடியின் முதல் எழுத்து, அசை, சீர் என்பனவற்றுள் ஒன்றாய் வருமாறு இசைத்தல்; to compose a poem so that the last letter, syllable or foot of its last line or stanza is the same as the first letter, syllable or foot of its first line or stanza.

*[முல் (வளைதற் கருத்து வேர்) முள்→முட்டு →முட்டை = சுழி, சுன்னம். முள்→(மள்)→(மண்)→ மணி = வட்டமான வெண்கலம். முள்→முண்→ முண்டு→மண்டு→மண்டி→மண்டியிடுதல் = காலை மடித்தல் அல்லது மடக்குதல். மண்டு →மண்டலம்→ மண்டலி– (வே.க.4:83).]*

மண்டலி²–த்தல் *mandali-,* 20 செ.குன்றாவி. (v.t.) வளைத்தல்; to surround.

*[மண்டு→மண்டலம்→ மண்டலி–.]*

மண்டலி³ *mandali,* பெ.(n.) உடலில் வட்டப் பொட்டுகள் நிறைந்த நச்சுப் பாம்பு வகை; a venemous serpent, as marked with round spots.

*[மண்டு→மண்டலம்→ மண்டலி.]*



மண்டலி⁴ *mandali,* பெ.(n.) மண் (சூடா.); earth.

மண்டலி⁵ *mandali,* பெ.(n.) கூட்டம் (சது.); crowd, company.

மண்டலிகம் *mandaligam,* பெ.(n.) கருங்கூளி; black variety of vulture (சா.அக.).

மண்டலிகன் *mandaligan,* பெ.(n.) 1. அரசன்; king. *"மண்டலிகர்க் கெல்லா மகுடம் போல்வான்" (பிரமோத்.8, 11).* 2. நாட்டின் ஒரு பகுதியை யாளும் அதிகாரி; viceroy, petty ruler, ruler of a limited region. *"திருவேங்கடநாத மண்டலிகன்" (பணவிடு. 52).*

*[முள்→(மள்)→(மண்)→மணி = வட்டமான வெண்கலம். முண்டு→ மண்டு→ மண்டி→ மண்டியிடுதல் = காலை மடித்தல் அல்லது மடக்குதல். மண்டுதல் = வளைதல். மண்டு→ மண்டலம் = வட்டம், வட்டகையான நாட்டுப் பிரிவு. மண்டலம்→மண்டலி→மண்டலிகன்.]*

மண்டலிகனை *mandaliganai,* பெ.(n.) கொட்டைப் பாக்கு; areca nut (raw.) (சா.அக.).

மண்டலிசிதம் *mandališidam,* பெ.(n.) 1. கடுகு; mustard. 2. தேன்; honey. 3. வியர்வை; perspiration (சா.அக.).

மண்டலிப்பாம்பு *mandali-p-pāmbu,* பெ.(n.) சுருட்டை, பனையன், விரியன் முதலிய வளையமிட்டு செல்லும் பாம்பு, நீளமாகவும் தோலில் வளையக் குறியுடன் ஒளிரும் பாம்பு; a snake generally found lying in circle, those which are large and slow and marked with ring like or circular spots on their skin and have the glow of the sun or fire - viper snake.

*[மண்டலி + பாம்பு.]*

மண்டலியாழ் *mandali-yāl,* பெ.(n.) பெரும் பண்களுள் ஒன்று (பிங்.); a melody type.

*[மண்டலி + யாழ்.]*

மண்டலீகன் *mandaligan,* பெ.(n.) 1. மண்டலிகன்¹ பார்க்க; see *mandaligan. "பலமன்னியர் மண்டலீகர்" (உத்தரரா. திருவோலக். 11).* 2. மண்டலிகன்² பார்க்க; see *mandaligan²*.

*[மண்டலிகன்→மண்டலீகன்.]*

மண்டலேச்சுவரன் *mandalē-c-cuvaran,* பெ.(n.) 1. நாற்பது யோசனை சதுரம் பரப்புள்ளதும், நூறு நூறாயிரம் ஊர்கள் கொண்டதுமான நாட்டையாளும் தனியரசன்; emperor, independent morach, paramount sovereign who rules over a country 40 yōjanas square or containing over 100,000 hamlets.

2. சிவதீக்கையின் போது நடுக்கும்பத்தின் அடியில் இடப்படும் யந்திரம் (இ.வ.); a figure drawn on the ground, on which the principal pot is placed, in *Šivadik*.

*[மண்டலம் + ஈச்சுவரன்.]*

மண்டலேசன் *maṇḍalēšaṉ*, பெ.(n.) மண்டலேச் சுவரன் பார்க்க; see *maṇḍalē-c-cuvaraṉ*.

*[மண்டலம் + ஈசன்.]*

மண்டலேசுரன் *maṇḍalēšuraṉ*, பெ.(n.) மண்டலேச்சுவரன் பார்க்க; see *maṇḍalē-c-cuvaraṉ*.

*[மண்டலம் + ஈசுவரன்.]*

மண்டவம் *maṇḍavam*, பெ.(n.) சுங்கச்சாவடி (வின்.); custom house.

*[மண்டபம்→மண்டவம்.]*

மண்டா *maṇḍā*, பெ.(n.) மீன், பன்றி வகைகளைக் குத்த உதவும் ஈட்டி வகை (வின்.); harpoon, hog-spear with short barked prongs.



மண்டாங்கி *maṇḍāṅgi*, பெ.(n.) மண்தாங்கிப் பலகை பார்க்க; see *maṇtāṅgi-p-palagai*.

*[மண் + தாங்கி. மண்தாங்கி →மண்டாங்கி.]*

மண்டாங்கிச்சுவர் *maṇḍāṅgi-c-cuvar*, பெ.(n.) குறட்டின் முன்னே கட்டப்படுங் குத்துக் கற்சுவர்; retaining wall.

*[மண் + தாங்கி + சுவர். மண்தாங்கிச்சுவர் →மண்டாங்கிச்சுவர்.]*

மண்டாடி *maṇḍāḍi*, பெ.(n.) வள்ளத்தைச் செலுத்துபவர்; sailor of *vaḷḷam*.

மண்டி[1] *maṇḍi*, பெ.(n.) காலை முடக்கி முழந்தாளால் நிற்கை; kneeling, kneeling on one knee, as an archer. *"ஒரு கால் மண்டியாக.... மடித்து வைத்து" (புறநா.80, உரை).*

*[முள் (வட்டக்கருத்து வேர்). முள்→முண்டு→ மண்டு→மண்டி. மண்டியிடுதல் = காலை மடித்தல் அல்லது மடக்குதல்.]*

மண்டி[2] *maṇḍi*, பெ.(n.) 1. வண்டல் (வின்.); sediment, dregs, settlings, lees. 2. கலங்கல் நீர்; muddy water.

க., தெ. மட்டி.

*[மண்டுதல் = நெருங்குதல், திரளுதல். மண்டு →மண்டி (மு.தா.159).]*

மண்டி[3] *maṇḍi*, பெ.(n.) 1. தவசம் (தானியம்) மொத்தமாக விற்குமிடம்; wholesale grain market. *'மண்டித் தெரு' (உ.வ.). "பூரிய் மாக்க ளுண்பது மண்டி நாரரி நறவ முகுப்ப நலனழிந்து" (பரிபா.6, 48).* 2. பெருவணிகம் செய்யும் பண்டகசாலை (வின்.); shop, stall, warehouse, large shop where things are sold wholesale or in large quantities.

*[முல் (பொருந்தற் கருத்து வேர்)→மல்= பருமை, வளம், வலிமை. பல அணுக்கள் அல்லது உறுப்புகள் அல்லது பொருள்கள் பொருந்துவதால் (ஒன்று சேர்வதால்) திரட்சி அல்லது பருமை உண்டாகும். ஒ.நோ. சேரே திரட்சி (தொல்.உரி.65) மிகுதியால் வளமும் பருமையால் வலிமையும் உண்டாகும். மல்→மண்→மண்டி.]*

**மண்டிக்கலம்** *mandi-k-kalam*, பெ.(n.) 72 படி கொண்ட முகத்தலளவை; gain measure of 72 *padi*.

*[மண்டி + கலம்.]*

**மண்டிக்கிட–த்தல்** *mandi-k-kida-*, 3 செ.கு.வி.(v.i.) அடர்ந்து வளர்ந்திருத்தல், நிறைந்திருத்தல்; growing wild in the fields. *"புகழ் மண்டிக் கிடக்கும் தமிழ் நாடு" (பாரதியார்).*

*[மண்டி + கிட–.]*

**மண்டிகை** *mandigai*, பெ.(n.) அப்ப வகை (பிங்.); a kind of cake.

*[மண்டி →மண்டிகை. மண்டி = வளைவு.]*

**மண்டிதம்** *mandidam*, பெ.(n.) சிறுகீரை (மலை.); a species of amaranth.

**மண்டிபோடு–தல்** *mandi-pōdu-*, 20 செ.கு.வி. (v.i.) முழங்கால் முட்டிமேல் நிற்றல்; to stand with leg or legs bent, as in player or in archery. ***வீட்டுப்பாடம் செய்யாததால், வகுப்பில் மண்டி போட்டான் (உ.வ.).***

*[மண்டி + போடு–.]*



**மண்டியிடு–தல்** *mandi-y-idu-*, 20 செ.கு.வி. (v.i.) முழந்தாளில் நிற்றல்; to stand on the knees, as for prayer. *இறைவன் முன் மண்டியிட்டார் (உ.வ.).*

*[மண்டி + இடு–.]*

**மண்டிரவல்** *mandi-raval*, பெ.(n.) இரவலாகப் பெற்ற நகையை வறுமையால் அடகு வைக்கை (வின்.); pledging borrowed jewellery, when in straits.

*[மண்டி + இரவல்.]*

**மண்டிலக்கடவுள்** *mandila-k-kadavul*, பெ.(n.) நிலவு; the moon. *"மறுவுடை மண்டிலக் கடவுளை வளைத்த" (பெருங். இலாவண.9, 168).*

*[மண்டிலம் + கடவுள்.]*

**மண்டிலநிலை** *mandila-nilai*, பெ.(n.)1. தேசிக் கூத்தின் வகை (பிங்.); a posture in *tēśi-k-kūttu*. 2. மண்டலம்[14] பார்க்க; see *mandalam*[14].

*[மண்டலம் + நிலை - மண்டலநிலை→ மண்டிலநிலை.]*

**மண்டிலம்** *mandilam*, பெ.(n.) 1. வட்டம்; circle, orbit. 2. வட்ட வடிவு; disc, as of sun or moon. *"செஞ்ஞாயிற்றுப் பரிப்புச் சூழ்ந்த மண்டிலமும்" (புறநா.30).* 3. வட்டமா யோடுகை; coursing in a circle. *"செலவொடு மண்டிலஞ் சென்று" (பு.வெ.12, வென்றிப், 14).* 4. குதிரை (பிங்.); horse, a running in a circle. *"கழிப்புலாய் மண்டிலங் கொட்பு" (இன்னா.35).* 5. நாட்டின் பெரும் பகுதி; district, division of a country. 6. நிலம்; the earth. *"கடல்சூழ் மண்டிலம்" (குறுந்.300).* 7. கதிரவன்; sun. *"பகல் செய்*

*மண்டிலம் பாரித் தாங்கு" (பெரும்பாண்.442).* 8. நிலவு; moon. *"செய்வுறு மண்டிலம்" (கலித்.7).* 9. தேசிக் கூத்தின் வகை; a posture in *tēsi-k-kūttu*. 10. வானம் (பிங்.); air, atmosphere, heavens. 11. கண்ணாடி; mirror. *"மையறு மண்டிலம் போலக் காட்ட" (மணிமே. 25, 127).* 12. பாம்பு முதலியவற்றின் சுற்று; coil, as of a snake or rope. 13. வட்ட வடிவப் படையமைப்பு வகை (குறள், 767, உரை); array of an army in a circular form. *"மண்டிலத் தருமையும்" (தொல்.பொருள்.41).* 14. ஒரு நாட்டிய முத்திரை (பிங்.); a posture. 15. வில்லோர் நிலையுளொன்று; a posture in archery, one of four *villōr-nilai.*

*[முள்→முட்டு→முட்டை = சுழி, சுன்னம். முள் →(மள்)→(மண்)→ மணி = வட்டமான வெண்கலம். முண்டு→மண்டு→மண்டி. மண்டியிடுதல் = காலை மடித்தல் அல்லது மடக்குதல். மண்டி→மண்டிலம் (மு.தா.244).]*

*"ஒத்தா ழிசையும் மண்டில யாப்பும்*
*குட்டமு நேரடிக் கொட்டின வெண்ப"*
*(தொல்.செய்.114).*
*"மண்டிலங் குட்ட மென்றிவை யிரண்டும்*
*செந்தூக் கியல வென்மனார் புலவர்"*
*(தொல்.செய்.116).*

இங்ஙனம் மண்டில யாப்புத் தொல் காப்பியத்திலேயே சொல்லப்பட்டிருத்தலையும் "என்மனார் புலவர்" என்னும் முன்னூல் பலவற்றைக் குறிக்குந் தொடரையும் ஊன்றி நோக்குக.

நிலைமண்டில வாசிரியப்பா, அடிமறிமண்டில வாசிரியப்பா என்னும் அகவற்பா வகைகள், தொன்றுதொட்டு வழங்கி வருவன. தமிழ் யாப்பு முறை முற்றும் ஆரியச் சார்பற்றது.

மண்டில மாக்கள் = நாட்டின் பகுதியை ஆளும் அதிகாரிகள்.

பழஞ் சோழ நாட்டில் பிரிவான தொண்டை மண்டலமும், பழஞ் சேர நாட்டின் பிரிவான கொங்கு மண்டலமும் போன்ற பல மண்டலங்கள், முதற்காலத்தில் மண்டில மாக்கள் அல்லது மண்டலிகர் என்னும் அதிகாரிகளாலேயே ஆளப்பட்டு வந்திருத்தல் வேண்டும். அவர்கள் அரசு குடும்பத்தினராகவோ, உழுவித்துண்ணும் வேளாண் தலைவராகவோ, குறுநில மன்னராகவோ, தண்டத் தலைவராகவோ இருந்திருக்கலாம்.

எண்ணூற்றுக் காவத அளவு முழுகிப்போன பழம் பாண்டி நாடான *"செந்தமிழ் வழக்கொடு சிவணிய நிலமும்"* பனிமலைவரை பரவியிருந்த பழஞ் சேர சோழ நாடுகளும், இருந்த முதுபழங்காலத்தில், முத்தமிழ் வழங்கிய முந்து தமிழகம் எத்துணையோ மண்டலங்களாகப் பகுக்கப்பட்டு மண்டலிகரால் ஆளப்பட்டு வந்திருத்தல் வேண்டும்.

பாண்டியன் குடிப்பெயர்களுள் ஒன்றான பஞ்சவன் என்னுஞ் சொல், முதலிரு கழகக்கால அல்லது தலைக் கழகக்காலப் பாண்டியர், துணையரையர் (அல்லது மண்டலிகர்) ஐவரைக் கொண்டு நாடாண்டமையை யுணர்த்தும்.

*"பஞ்சவ னீடு கூனும்"* என்று 15ஆம் நூற்றாண்டு அருணகிரிநாதர் பாடியது போன்றே, *"பழியொடு படராப் பஞ்சவ வாழி"* என்று 2ஆம் நூற்றாண்டு இளங்கோவடிகளும் பாடியிருத்தல் வேண்டும்.

அஞ்சவன் என்னுஞ் சொல்லே, பிற்காலத்தில் வடமொழியிலும் தென்மொழியிலும் பஞ்சவன் என்று திரிந்ததாகத் தெரிகின்றது (கை–ஐ–ஐயது–ஐது–ஐந்து–ஐந்தவன்–ஐஞ்சவன்–அஞ்சவன்–பஞ்சவன்).

ஒ.நோ.: அப்பளம் - தெ. அப்படமு; க. பப்பள; ம. பப்படம்; வ. பர்ப்பட்ட. அப்பளக் கட்டையால் மாவை அப்பளித்தமைப்பது அப்பளம்.

முண்டு, மண்டு, மண்டி, மண்டலம், மண்டலிகன், மண்டலித்தல், மண்டிலம் முதலிய சொற்கள் மேலையாரிய மொழிகளில் இல்லை.

Mandalian (Dim. Mandolined) என்னும் இத்தாலிய நரப்பிசைக் கருவிப் பெயரும், மண்டிலியாழ் என்னும் தென்சொல்லில் திரிபாய் இருத்தல் வேண்டும்.

தமிழின் தென்மை, தொன்மை, முன்மை முதலிய தன்மைகளை நடுநிலையாக ஆராய்ந்தறிந்தவர்க்கு, மேற்கூறியவையெல்லாம் வெள்ளிடை மலையாம்.

**மண்டிலமாக்கள்** *mandila-mākkal,* பெ.(n.) நாட்டின் பகுதியை ஆளும் அதிகாரிகள்; viceroys, petty rulers. *"மண்டிலமாக்களும் தண்டத் தலைவருமாய்" (தொல்.பொருள்.30, உரை).*

*[மண்டிலம் + மாக்கள்.]*

**மண்டிலயாப்பு** *mandila-y-āppu,* பெ.(n.) நாற்சீரடிச் செய்யுள் (தொல்.பொருள்.427); verse of four feet to a line.

*[மண்டிலம் + யாப்பு.]*

**மண்டிவணிகம்** *mandi-vanigam,* பெ.(n.) மொத்த வணிகம் (வின்.); wholesale trade.

*[மண்டி + வணிகம்.]*

**மண்டு¹-தல்** *mandu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. நெருங்குதல்; to be close together, crowded, pressed. *"விரிசடை மண்டியலைந்திட" (கோயிற்பு.பதஞ்சலி.40).* 2. விரைந்து செல்லுதல்; to move swiftly. *"கடற்படை குறிப்ப மண்டி" (புறநா.6).* 3. திரளுதல்; to collect together, to around, to come in flocks, throngs; to press, rush. *"கால்விசைத் தோடிக் கடல்புக மண்டி" (திருவாச. 2, 135).* 4. உக்கிரமாதல்; to grow vehement, to wax fierce. *"மண்டமர்" (பு.வெ.1, 1).* 5. ஒளியுமிழ்தல்; to glow, to blaze. *"மண்டு மெரியுள்" (பு.வெ.1, 1).* 6. அதிகமாதல்; to increase, to become excessive. *"மண்டிய கடும்பசி தனக்கு" (தாயு.ஆனந்தமான.4).* 7. ஈடுபடுதல்; to be fascinated, charmed, engrossed. *"முற்பட வடிவிலே மண்டுகிறாள்" (ஈடு.5, 3, 1).*

*[முண்டுதல் = நெருங்குதல். முண்டு → மண்டு (மு.தா.82).]*

**மண்டு²-தல்** *mandu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. செலுத்துதல்; to thrust in. *"நுதிமுக மழுங்க மண்.... மதிலபாயு நின் களிறு" (புறநா.31).* 2. நெருக்கித் தாக்குதல்; to press upon, close in, to attack. *"அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்" (புறநா.62).* 3. நிரம்ப உண்ணுதல்; to eat and drink greedily. *"இரை மண்டி" (தேவா.72, 8).* 4. சேரவிணைத்தல்; to insert and fasten. *"கால்மண் டெஃகம்" (மலைபடு.129).* 5. மூண்டு பொருதல்; to oppose, resist, fight against with vehemence. *"ஒருவன் மண்டிய நல்லிசை நிலையும்" (தொல். பொருள்.72).* 6. கவர்தல் (வின்.); to snatch, to steal. 7. தாங்குதல் (வின்.); to support, prop.

*[முள் → முண்டு → மண்டு. மண்டுகால் = முட்டுக்கால் (மு.தா.82).]*

மண்டு³ *mandu,* பெ.(n.) 1. செறிவு; pressing, throughing. 2. மிகுதி; plenty, abundance.

*[முள்→முண்டு→மண்டு (மு.தா.89).]*

மண்டு⁴ *mandu,* பெ.(n.) மூடன்; fool.

M. monda; K. monda.

*[முள்→(மள்)→மழு→மழுகு→மழுங்கு→மழுக்கு →மழுக்கம். முள்→முட்டு→மொட்டை = மட்டை. முழு மொட்டை →முழுமட்டு.முள்→(மொள்)→மொழுக்கு →மொழுக்கட்டை →மொக்கட்டை= மழுக்கமானது. முள்→ (மொள்) → மொண் → மொண்ணை → மண்ணை →மன்→மண்→மண்டு.]*

மண்டுகால் *mandu-kāl,* பெ.(n.) முட்டுக்கால் (வின்.); prop.

*[மண்டு + கால்.]*

மண்டூக்கி *mandūkki,* பெ.(n.) மீன் வேட்டைக்குப் பயன்படும் முனையில் கொக்கி போல் வளைந்த இரும்புக் கருவி; fishing instrument.

மண்டூகசீவன் *mandūga-šīvan,* பெ.(n.) தவளைக்கல் (யாழ்.அக.); laterite.

*[மண்டூகம் + சீவன்.]*

மண்டூகபன்னி *mandūga-panni,* பெ.(n.) அழிஞ்சில் (மூ.அ.); sage leaved alangium.

மண்டூகம்¹ *mandūgam,* பெ.(n.) 1. தவளை (பிங்.); frog. 2. மூடன் (கொ.வ.); fool. 3. தேரை; toad. 4. இரும்புத்துரு; iron rust iron oxide.

மண்டூகம்² *mandūgam,* பெ.(n.) மண்டூரம் (யாழ்.அக.) பார்க்க; see *mandūram.*

மண்டூகி *mandūgi,* பெ.(n.) பெண் தவளை; female frog (சா.அக.).

மண்டூகை *mandūgai,* பெ.(n.) விலைமகள் (சிந்தா.நி.); prostitute.

மண்டூரசிந்தூரம் *mandūra-šindūram,* பெ.(n.) இருப்புக் கிட்டத்தாற் செய்த செந்நிறச் சாம்பல் (அறப்.சத.51); calcinated iron ore, as medicine.

*[மண்டூரம் + சிந்தூரம்.]*

மண்டூரம் *mandūram,* பெ.(n.) இருப்புக் கிட்டம் (வின்.); iron dross, oxide of iron, refuse of melted iron.

மண்டெரி *manderi,* பெ.(n.) 1. பெருந்தீ; great fire. 2. காட்டுத் தீ (காடாக்கினி.); wild fire (சா.அக.).

மண்டை¹ *mandai,* பெ.(n.) 1. மட்கலம்; earthern vessel. *"காதலனடி நீர் சுடுமண் மண்டையின்..... மாற்றி" (சிலப்.16, 39).* 2. ஒரு முகத்த லளவை (தொல். எழுத்து.170, உரை); a standard measure. 3. இரப்போர் கலம், திருவோடு; mendicant's begging bowl. *"புலராமண்டை..... கொழுநிணம் பொருப்ப" (புறநா.103).* 4. இரப்போர்கலம் போன்ற தலையோடு; skull, cranium, brain-pan. 5. தலையோடுள்ள தலைப் பகுதி; eranium. *"செவ்வாயனைத்தான் வணங்கா மண்டை யிருக்கும்" (அஷ்டப்.திருவேங்கடத்தந்.61).* 6. தலை; head. 7. தென்னை முதலியவற்றின் தலைப்பக்கம் (நாஞ்.); to portion as of palms. 8. இளவரசன் மகுடம்; crown of the prince.

க. மண்டே; ம. மண்ட.

*[முல் (துளைத்தற் கருத்து வேர்)→முள் →மொள்→மொண்டான் = நீர் மொள்ளுங் கல வகை. மொள்→மொண்டை→மொந்தை = மொள் கலம், கள் மொண்டு வார்க்கும் அளவைக் கலம், சிறு மரப்பாண்டம், ஒரு கட்பாறை வகை. மொண்டை→மண்டை (வே.க.4:92).]*

மண்டை[2] *maṇḍai,* பெ.(n.) விலைமகள்; prostitute. *"நீலி நாடகமும் பயில் மண்டைகள்" (திருப்பு.67).*

மண்டைக்கட்டு *maṇḍai-k-kaṭṭu,* பெ.(n.) 1. தலையிற்கட்டும் கட்டு; a bandage to the head. 2. தலைப்பாகை வகை; a kind of mitre turban.

மண்டைக்கடுவன் *maṇḍai-k-kaḍuvaṉ,* பெ.(n.) தலையிற் காணும் சொறிப்புண் வகை (பாலவா.687); chronic eczema of the head.

*[மண்டை + கடுவன்.]*

மண்டைக்கண் *maṇḍai-k-kaṇ,* பெ.(n.) குழிந்த கண், உள்ளாங்கண் (வின்.); sunken eye.

*[மண்டை + கண்.]*

மண்டைக்கரப்பன் *maṇḍai-k-karappaṉ,* பெ.(n.) மண்டைக்கரப்பான் பார்க்க; see *maṇḍai-k-karappāṉ.*

*[மண்டை + கரப்பன்.]*

மண்டைக்கரப்பான் *maṇḍai-k-karappāṉ,* பெ.(n.) தலையில் வரும் கரப்பான் நோய் வகை (பைஷஜா.); ring worm of the head.

*[மண்டை + கரப்பான்.]*

மண்டைக்கருப்பன் *maṇḍai-k-karuppaṉ,* பெ.(n.) ஊர்க் காவல் தெய்வம்; a village deity.

*[மண்டை + கருப்பன்.]*

மண்டைக்கருவம் *maṇḍai-k-karuvam,* பெ.(n.) மிகு செருக்கு; self-conceit, headstrongness.

*[மண்டை + கருவம். கரு + அம். கரு = உயர்வு, பெருமை, செருக்கு. 'அம்' சொல்லாக்க ஈறு.]*

மண்டைக்கல் *maṇḍai-k-kal,* பெ.(n.) விரால் தலைக்கல்; stone in the head (சா.அக.).

மண்டைக்கனம் *maṇḍai-k-kaṉam,* பெ.(n.) 1. தடுமண் பிடிப்பதால் தலை கனத்திருக்கை; heavyness of head, due to cold. 2. மண்டைக்கருவம் பார்க்க; see *maṇḍai-k-karuvam* (இ.வ.).

*[மண்டை + கனம்.]*

மண்டைக்காறல் *maṇḍai-k-kāṟal,* பெ.(n.) வெண்மை நிறமுடையதும், பத்து விரலம் வளர்வதுமான கடல் மீன் வகை; a sea fish, silvery, attaining 10 inches and more in length.

*[மண்டை + காறல்.]*

மண்டைக்குடைச்சல் *maṇḍai-k-kuḍaiccal,* பெ.(n.) 1. மண்டைக்குத்து பார்க்க; see *maṇḍai-k-kuttu.* 2. சிக்கலான பணிமேற் குறித்த சொல் வழக்கு; an idiom for the complicated task.

*[மண்டை + குடைச்சல்.]*

மண்டைக்குத்தல் *maṇḍai-k-kuttal,* பெ.(n.) மண்டைக்குடைச்சல் பார்க்க; see *maṇḍai-k-kuḍaiccal.*

*[மண்டை + குத்தல்.]*

மண்டைக்குத்து *maṇḍai-k-kuttu,* பெ.(n.) 1. தலைநோவு; headache. 2. தலைநோவு வகை; neuralgia.

*[மண்டை + குத்து.]*

**மண்டைக்குழி** *mandai-k-kuli,* பெ.(n.) பிறந்த குழந்தைகளுக்கு தலைப்பகுதியின் நடுவில் காணப்படும் மெல்லிய சவ்வு போன்ற மூடிய பகுதி; the cranial cavity.

*[மண்டை + குழி.]*

**மண்டைக்கெளிறு** *mandai-k-keliru,* பெ.(n.) மீன் வகை; a kind of fish.

*[மண்டை + கெளிறு.]*



**மண்டைக்கொழுப்பு** *mandai-k-koluppu,* பெ.(n.) மிகு செருக்கு; self conceit; headstrongeness.

*[மண்டை + கொழுப்பு.]*

**மண்டைக்கோழை** *mandai-k-kōlai,* பெ.(n.) சளி அதிகமாகும் தலைநோய் வகை (யாழ். அக.); accumulation of mucus in the head.

*[மண்டை + கோழை.]*

**மண்டைச்சூலை** *mandai-c-cūlai,* பெ.(n.) நோய் வகை (யாழ்.அக.); a kind of disease.

*[மண்டை + சூலை.]*

**மண்டைப்பாணர்** *mandai-p-pāṇar,* பெ.(n.) உண்கலமேந்தி இரக்கும் பாணர் வகையார்; a class of musicians, as begging with bowls. *"இசைப்பாணரும் மண்டைப் பாணரும் யாழ்ப்பாணருமெனப் பலராம்" (தொல்.பொருள்.91, உரை).*

*[மண்டை + பாணர்.]*

**மண்டைப்பீனசம்** *mandai-p-pīṇašam,* பெ.(n.) பீனச நோய் வகை (வின்.); a disease of the head.

*[மண்டை + பீனசம்.]*

**மண்டைப்புழு** *mandai-p-pulu,* பெ.(n.) 1. மண்டைப்பூச்சி பார்க்க; see *mandai-p-pūcci.* 2. மண்டைக்கருவம் பார்க்க; see *mandai-k-karuvam.*

*[மண்டை + புழு.]*

**மண்டைப்புழுவருதல்** *mandai-p-pulu-varudal,* பெ.(n.) பிடிவாதங் காட்டுகை (வின்.); obstinancy.

*[மண்டை + புழு + வருதல்.]*

**மண்டைப்பூச்சி** *mandai-p-pūcci,* பெ.(n.) தலையோட்டினுள்ளிருப்பதும் ஒருவனோடு மாய்வதுமாய்க் கருதப்படும் புழு வகை; a worm believed to live in the skull of a person and die with him. *'அவனுக்கு மண்டைப் பூச்சி மாய்கிற காலம்' (உ.வ.).*

*[மண்டை + பூச்சி.]*

**மண்டைப்பெரியதனக்காரன்** *mandai-p-periya-daṇa-k-kāraṇ,* பெ.(n.) தொட்டியர் தலைவனது பட்டப் பெயர்; headman in the *Thottiyar* community.

*[மண்டை + பெரியதனக்காரன்.]*

மண்டையடைப்பான் *mandai-adaippāṉ,* பெ.(n.) சன்னி நோய் வகை; apoplexy (இ.வ.).

*[மண்டை + அடைப்பான்.]*

மண்டையிடி *mandai-y-idi,* பெ.(n.) 1. தலை வலி; headache. 2. பீனசம்; neuralgia.

*[மண்டை + இடி.]*

மண்டையெலும்பு *mandai-y-elumbu,* பெ.(n.) தலையோடு; carnial bone.

மண்டையோட்டுப்பொருத்து *mandai-y-ōṭṭu-p-poruttu,* பெ.(n.) மண்டையெலும்புப் பொருத்து; joint of the skull bones.

மண்டையோடு *mandai-y-ōdu,* பெ.(n.) ஓடு போன்ற தலையெலும்பு; skull, cranium.

*[மண்டை + ஓடு.]*

மண்டைவலி *mandai-vali,* பெ.(n.) தலைவலி; headache.

*[மண்டை + வலி.]*

மண்டைவறளுதல் *mandai-varaludal,* பெ.(n.) எண்ணெய்க் குளியலில்லாமையால் உண்டாம் தலையெரிச்சல் (வின்.); burning sensation in the head, due to omission of oil bath.

*[மண்டை + வறளுதல்.]*

மண்டைவியாதி *mandai-viyādi,* பெ.(n.) மண்டைநோய் பார்க்க; see *mandai-nōy.*

*[மண்டை + Skt. வியாதி.]*

மண்டைவெல்லம் *mandai-vellam,* பெ.(n.) மொத்தையாகத் திரட்டிய வெல்லம் (இ.வ.); jaggery or coarse cane - sugar in hemispherical moulds.

*[மண்டை + வெல்லம்.]*

மண்டோதரி *mandōdari,* பெ.(n.) இலங்கை வேந்தன் இராவணன் மனைவி, சிற்பி மயனுடைய மகள்; wife of Ravana, the king of Lanka and the daughter of Maya, the great architect of Rakshasas. *"மண்டோதரி காதலன் வான்புக" (திவ். பெரியாழ்.5, 4, 5).*

மண்ணகம் *maṉṉagam,* பெ.(n.) 1. நாடு; country. *"மண்ணகங் காவன் மன்னன்" (பு.வெ.9, 5 கொளு.).* 2. மனை; land for construction. *"மண்ணகம் ஒருவழி வகுத்தனர் கொண்டு" (சிலப்.3:96).*

*[மண் + அகம்.]*

மண்ணகமடந்தை *maṉṉaga-madandai,* பெ.(n.) மண்மடந்தை பார்க்க; see *maṉ-madandai. "கண்ணகன் பரப்பின் மண்ணக மடந்தை" (சிலப்.5: 3).*

*[மண்ணகம் + மடந்தை.]*

மண்ணகை *maṉṉagai,* பெ.(n.) கச்சோலம்; a kind of aromatic substance.

மண்ணங்கட்டி *maṉṉaṅgaṭṭi,* பெ.(n.) மண்ணாங்கட்டி பார்க்க (தொல்.எழுத்து. 405, உரை); see *maṉṉāṅgaṭṭi.*

*[மண் + அம் + கட்டி – மண்ணங்கட்டி.]*

மண்ணசை *maṉ-ṉ-aśai,* பெ.(n.) மண்ணாசை பார்க்க; see *maṉ-ṉ-āśai. "எஞ்சா மண்ணசை..... அடல் குறித்தன்று" (தொல். பொருள்.62).*

*[மண் + நசை. நசை = விருப்பம், ஆசை.]*

**மண்ணடி[1]–த்தல்** *maṉ-ṇ-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. மண் கொணர்ந்து கொட்டுதல்; to bring and deposit earth as for the level. *பள்ளத்தை நிரப்பி மேடாக்க, மண்ணடிக்க வேண்டும் (உ.வ.).* 2. மண் மேடிடுதல் (கொ.வ.); to silt, as in a river.

**மண்ணடி[2]–த்தல்** *maṉ-ṇ-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) சீர் கெடுத்தல்; to ruin. *'வாழ்வில் மண்ணடித்து விடுவார்கள்' (உ.வ.).*

*[மண் + அடி–.]*

**மண்ணடைப்பான்** *maṉ-ṇ-aḍaippāṉ,* பெ.(n.) ஒரு நோய்; a disease.

*[மண் + அடைப்பான்.]*

**மண்ணம்** *maṉṇam,* பெ.(n.) நீர்த்த சுண்ணாம்பு (திவா.); slaked lime.

**மண்ணரசு** *maṉ-ṇ-arašu,* பெ.(n.) பூவரசு; portia tree.

*[மண் + அரசு.]*

**மண்ணரிநார்** *maṉ-ṇ-ari-nār,* பெ.(n.) குயவர் திருவையில் வனைந்த கலத்தை அறுத்து எடுக்கப் பயன்படும் முறுக்கு நூல் (வின்.); potter's string to cut the pot - thrown on the wheel.

*[மண் + அரி + நார்.]*

**மண்ணரியாளன்** *maṉṇari-y-āḷaṉ,* பெ.(n.) மண்ணரிவாளன் பார்க்க; see *maṉṇari-v-āḷaṉ.*

*[மண் + அரி + ஆளன்.]*

**மண்ணரிவாளர்** *maṉ-ṇ-arivāḷar,* பெ.(n.) குயவர்; potter.

*[மண் + அரிவாளர்.]*

**மண்ணரிவாளன்** *maṉ-ṇ-arivāḷaṉ,* பெ.(n.) மண்ணரிவாளர் பார்க்க; see *maṉ-ṇ-arivāḷar.*

*[மண் + அரி + ஆளன்.]*

**மண்ணரை–த்தல்** *maṉ-ṇ-arai-,* 4 செ.கு.வி. (v.i.) சோம்பியிருத்தல் (யாழ்.); to be lazy, to lounge.

*[மண் + அரை–,]*

**மண்ணவர்** *maṉṇavar,* பெ.(n.) மக்கள்; human beings. *"மண்ணவர் விண்ணவர் வணங்க" (தேவா.52, 6).*

*[மண் + அவர்.]*

**மண்ணறை** *maṉṇaṟai,* பெ.(n.) மண்பூச்சு (வின்.); plastering with mud.

*[மண் + அறை.]*

**மண்ணன்[1]** *maṉṇaṉ,* பெ.(n.) மந்தன் (வின்.); clod hopper, dullard, stupid person.

*[மண் + அன்.]*

**மண்ணன்[2]** *maṉṇaṉ,* பெ.(n.) சின்னம்மை நோய் வகை; a kind of chicken pox.

*[மண் + அன்.]*

**மண்ணா** *maṉṇā,* பெ.(n.) மீன் வகை (வின்.); a kind of fish.

**மண்ணாகம்** *maṉ-ṇāgam,* பெ.(n.) 1. மண்நாகம் பார்க்க; see *maṉ-ṇāgam.* 2. மண்புழு; earth worm.

*[மண் + நாகம்.]*

**மண்ணாங்கட்டி**[1] *maṉ-ṉ-āṅ-kaṭṭi,* பெ.(n.) மண்கட்டி (தொல்.எழுத்து.405, உரை), கெட்டிபட்ட மண்திரள்; clod, clod pole.

*[மண் + அம் + கட்டி - மண்ணங்கட்டி → மண்ணாங்கட்டி.]*

**மண்ணாங்கட்டி**[2] *maṉ-ṉ-āṅ-kaṭṭi,* பெ.(n.) வெறுப்பு, சலிப்பு இவற்றால் வெளிப்படுத்தும் சொல்; an expression of contempt or disgust. *அவன் ஒரு மண்ணாங்கட்டியும் செய்யமாட்டான்.*

**மண்ணாசை** *maṉṉāšai,* பெ.(n.) நிலத்தை அடைவதற்கான பற்று; desire to grab land.

*[மண் + ஆசை.]*

**மண்ணாட்டி** *maṉṉāṭṭi,* பெ.(n.) மாரெலும்பு; breast bone (சா.அக.).

**மண்ணாடி**[1] *maṉṉāḍi,* பெ.(n.) மண்டாடி பார்க்க; see *maṇḍāḍi* (சா.அக.).

**மண்ணாடி**[2] *maṉṉāḍi,* பெ.(n.) மலை நாடுகளில் ஊர்த் தலைமையுள்ள மக்கள் (வின்.); a caste of village - headmen in the hills.

*[மன்றாடி → மண்ணாடி.]*

**மண்ணாதம்** *maṉṉādam,* பெ.(n.) உவர் மண்; dhoby's earth (சா.அக.).

**மண்ணாந்தை** *maṉṉāndai,* பெ.(n.) அறிவிலி (கொ.வ.); dolt, idiot.

*[மண் + அந்தை - மண்ணந்தை → மண்ணாந்தை.]*

**மண்ணாய்ப்போ-தல்** *maṉṉāy-p-pō-,* 4 செ.கு.வி.(v.i.) வசை; an abuse, desiring the other person to go ruined.

*[மண் + ஆய் + போ-.]*

**மண்ணாவான்** *maṉṉāvāṉ,* பெ.(n.) ஒரு வசைச் சொல்; fellow to go to dust, a term of abuse.

*[மண் + ஆவான்.]*

**மண்ணான்** *maṉṉāṉ,* பெ.(n.) புதரவண்ணான், இராப்பாடி, தாழ்த்தப்பட்ட மக்களுக்கு துணி துவைப்பவர்; washerman for depressed people.

*[மண் + அன் - மண்ணன் → மண்ணான். மண்ணுதல் = கழுவுதல்.]*

**மண்ணானை** *maṉṉāṉai,* பெ.(n.) கரு; foetus.

**மண்ணி**[1] *maṉṉi,* பெ.(n.) 1. மண்ணன் (வின்.) பார்க்க; see *maṉṉaṉ.* 2. 13 விரலம் வளர்வதும் வெளிறின பச்சை நிறமுள்ளதுமான நன்னீர் மீன் வகை; murrel, a fresh - water fish, greenish, attaining 13 inch. in length. 3. சோழ நாட்டிலுள்ளதோர் ஆறு; a river in *Cola* country. *"மண்ணித் தென் கரைமேல்.... நாங்கை" (திவ்.பெரியதி.4, 1, 5).*

**மண்ணி**[2] *maṉṉi,* பெ.(n.) ஆறு (தெ.க.தொ. 13, கல்.212–8); river.

**மண்ணிடு-தல்** *maṉṉiḍu-,* 4 செ.கு.வி.(v.i.) 1. சுவருக்கு மண்பூசுதல்; to plaster with mud. 2. கால்கழுவுகையில் மண்ணால் தூய்மை செய்தல்; to clean oneself with mud, as after evaculation. 3. மண்ணடி (நாஞ்.) பார்க்க; see *maṉṉaḍi.*

*[மண் + இடு-.]*

**மண்ணியற்று** *maṉṉiyaṟṟu,* பெ.(n.) மட்கலம் (சங்.அக.); mud pot.

*[மண் +இயற்று.]*

**மண்ணில்வேந்தன்**[1] *mannil-vēndan,* பெ.(n.) 1. எலுமிச்சை; lime fruit. 2. மண்புழு; earth worm.

*[மண்ணில் + வேந்தன்.]*

**மண்ணில்வேந்தன்**[2] *mannil-vēndan,* பெ.(n.) மண்ணிலவேந்தன் பார்க்க; see *mannila-vēndan.*

*[மண்ணிலவேந்தன் →மண்ணில்வேந்தன்.]*

**மண்ணிலம்** *man-nilam,* பெ.(n.) நிலவுருண்டை (வின்.); the earth.

*[மண் + நிலம்.]*

**மண்ணிலவேந்தன்** *mannila-vēndan,* பெ. (n.) 1. பூவரசு; portia tree. 2. அரசு (மலை.); pipal. 3. முடிதும்பை (வின்.); a fragrant plant. 4. வெற்றிலை (மலை.); betal vive.

*[மண் + நிலம் + வேந்தன்.]*

**மண்ணிற்கீழ்சேர்-த்தல்** *mannir-kil-cēr-,* 4 செ.கு.வி.(v.i.) புடம்போட்டு மண்ணிற் புதைத்து வைத்தல்; to burry in the earth.

*[மண்ணின் + கீழ் + சேர்-.]*

**மண்ணின்பிறட்டு** *mannin-pirattu,* பெ.(n.) பேரோசனை பார்க்க; see *pērōšanai* (சா.அக.).

**மண்ணினாதம்** *manninādam,* பெ.(n.) உவர் மண் (யாழ்.அக.); fuller's earth.

*[மண்ணின் + நாதம்.]*

**மண்ணீட்டாளர்** *manniṭṭāḷar,* பெ.(n.) 1. குயவர்; potter. 2. மண் அல்லது சுதையால் பாவை முதலியன செய்வோர்; those who make images etc. in mud, cement or plaster. 3. சிற்பக் கலைஞர் (சூடா.); masons, sculpter.

*[மண் + ஈடு + ஆளர்.]*

**மண்ணீடு** *mannīḍu,* பெ.(n.) 1. திண்ணை (பிங்.); pyal. 2. மாடப்புரை (வின்.); niche in a wall for a light or an image. 3. வேயா மாடம் (சூடா.); terraced house. 4. சுதையாற் செய்த பாவை வடிவம்; plaster image. *"உயிர்களும் மவ்வுயிரிடங்களும்...மண்ணீட்டிற் பண்புற வகுத்து" (மணிமே.6: 200).*

*[மண் + ஈடு.]*

**மண்ணீர்** *mannīr,* பெ.(n.) கழுவ உதவும் நீர்; water fit only for washing. *"கடல் பெரிது மண்ணீரு மாகாது" (வாக்குண்.12).*

*[மண் + நீர்.]*

**மண்ணீர்மை** *mannīrmai,* பெ.(n.) உலகவியல்பு; worldliness, earthliness. *"மண்ணீர்மையாலே மயங்காது" (தாயு.பராபர. 333).*

*[மண் + நீர்மை.]*

**மண்ணீரல்** *mannīral,* பெ.(n.) இடது விலாவை யொட்டியுள்ள ஈரல்; spleen.

*[மண் + ஈரல்.]*



**மண்ணீரலடைப்பான்** *mannīral-aḍaippān,* பெ.(n.) மண்ணீரற்சன்னி பார்க்க; see *mannīrar-šanni.*

*[மண்ணீரல் + அடைப்பான்.]*

மண்ணீரற்சன்னி *maṇṇīraṟ-šaṉṉi,* பெ.(n.) சன்னிநோய் வகை; splenic apoplexy.

*[மண்ணீரல் + சன்னி.]*

மண்ணு[1]–தல் *maṇṇu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. நீராடுதல்; to bathe, to perform ablutions. *"மண்ணு மங்கலமும்" (தொல். பொருள்.68).* 2. மூழ்குதல்; to immerse oneself completely, as in water. *"பனிக்கய மண்ணி" (புறநா.79).*

*[முள் → முழு → முழுகு → முழுக்கு → முழுகு = குளித்தல், மூழ்குதல். முள் → (மள்) → மண் → மண்ணு–தல் = குளித்தல் (மு.தா.290).]*

மண்ணு[2]–தல் *maṇṇu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. கழுவுதல்; to wash, clean by washing. *"மண்ணி மாசற்ற நின் கூழையுள்" (கலித்.107).* 2. பூசுதல்; to smear, anoint. *"தண்ணருந் தகரங் கமழ மண்ணி" (குறிஞ்சிப்.108).* 3. செய்தல்; to do, make, perform. *"ஆவுதி மண்ணி" (மதுரைக்.494).* 4. ஒப்பனை செய்தல் (பிங்.); to adorn, beautify, decorate. 5. செப்பமிடுதல்; to polish, perfect, finish, as a gem. *"மண்ணுறு மணியின்" (புறநா.147).*

*[முள் → (மள்) → மண் → மண்ணு (மு.தா.290).]*

மண்ணுக்கிரையாய்ப்போ–தல் *maṇṇu-k-kiraiyāi-pō-,* 8 செ.கு.வி.(v.i.) சாதல், நீங்குதல்; death.

*[மண்ணுக்கு + இரையாய்ப்போ–.]*

மண்ணுக்குடையவன் *maṇṇu-k-kuḍaiyavaṉ,* பெ.(n.) 1. நிலவுரிமைக்காரன் (இ.வ.); proprieter of land, land lord. 2. அரசன் (வின்.); king. 3. குயவர்; potter.

*[மண் + கு + உடையவன்.]*

மண்ணுக்குப்போடு[1]–தல் *maṇṇukku-p-pōḍu-,* 19 செ.குன்றாவி.(v.t.) கடுஞ் சிறையிலிடுதல்; to award rigorous imprisonment.

*[மண் + கு + போடு–.]*

மண்ணுக்குப்போடு[2]–தல் *maṇṇukku-p-pōḍu-,* 19 செ.குன்றாவி.(v.t.) நன்றி கெட்டவனுக்கு உதவுதல்; to do a great favour to one who proves ungrateful.

*[மண் + கு + போடு–.]*

மண்ணுடையாள் *maṇṇuḍaiyāḷ,* பெ.(n.) புல்லுருவி; a parasitic plant.

மண்ணுடையான் *maṇṇuḍaiyāṉ,* பெ.(n.) 1. வேளார், குயவர்; potter. 2. அரசர்; king.

மண்ணுண்ணி *maṉ-ṉ-uṇṇi,* பெ.(n.) 1. ஒரு வகைப் பாம்பு; a kind of snake. 2. மந்தன்; a dull man. 3. மண்புழு; earth worm.

மண்ணுண்(ணு)–தல் *maṉ-ṉ-uṉ-,* 4 செ.கு.வி. (v.i.) தோற்று விழுதல்; to be thrown down defeated. *"எதிரிகள் மண்ணுண்ணும் படியான திவ்யாயுதங்களைத் தரித்திருக்கிற நீ" (ஈடு.7, 2, 6).*

*[மண் + உண் – மண்ணுண்(ணு)–.]*

மண்ணுணி *maṉ-ṉ-uṇi,* பெ.(n.) 1. மண்ணுளிப் பாம்பு; a kind of snake. 2. மண்ணில் உண்டாகும் புழு வகை (வின்.); earthworm. 3. திருமால்; *Tirumāl* as devouring the earth. *"மலர் சிலம்படியை மண்ணுணி போய்ச் சந்தியாதயர" (சிவப். பிரபந். சோணசைல.83).* 4. ஒன்றுக்கு முதவாதவன் (வின்.); mean, worthless person, as eating dirt.

*[மண் + உணி.]*

மண்ணுதலைவிடக்கல் *mannutalai-viḍakkal,* பெ.(n.) அஞ்சனக்கல் பார்க்க; see *añcaṉakkal* (சா.அக.).

மண்ணுநீர் *mannu-nīr,* பெ.(n.) 1. மஞ்சன நீர்; water for bathing. *"மண்ணுநீர் மருளவாட்டி" (சீவக.2326).* 2. மண்ணீர்; water for washing.

*[மண்ணு + நீர்.]*

மண்ணுப்பு[1] *mannuppu,* பெ.(n.) துரிசை வெளுக்கச் செய்யுமோர் உப்பு; a salt that classifies copper sulphate (சா.அக.).

*[மண் + உப்பு.]*

மண்ணுப்பு[2] *mannuppu,* பெ.(n.) உப்பு வகை; potash.

மண்ணுப்பெய்-தல் *mannu-p-pey-,* 4 செ. குன்றாவி.(v.t.) குளிப்பாட்டுதல்; to bathe, wash. *"மண்ணு நீராலழகனை மண்ணு பெய்து" (சீவக.1345).*

*[மண்ணு + பெய்-.]*

மண்ணுமங்கலம் *mannu-maṅgalam,* பெ.(n.) 1. அரசன் முடிபுனைந்த காலந் தொடங்கி யாண்டுதோறும் முடிபுனைந்து நன்னீ ராடுதலைக் கூறும் புறத்துறை (தொல். பொருள்.91); theme describing the ceremonial bath of a king on the day of his coronation and on the successive anniversaries of that day. 2. மாற்றரசனது மதிலையழித்த அரசன் மங்கலமாக நன்னீ ராடுதலைக் கூறும் புறத்துறை (தொல். பொருள்.91); theme describing the purificatory bath of a victorious king on the destruction of a hostile king. 3. தோல்வி கண்ட வேந்தனான பகைவன் பெயரானே, அவன் முடி புனைந்து வென்ற வேந்தன் நன்னீராடுதலைக் கூறும் புறத்துறை; theme describing a ceremonial bath of a conquerer, when he assumes the crown and title of the vaniquished enemy. *"குடுமி கொண்ட மண்ணுமங்கலமும்" (தொல்.பொருள்.68).*

*[மண்ணு + மங்கலம்.]*

மண்ணுருவி *mannuruvi,* பெ.(n.) குழித்தைலம் (சங்.அக.); a medicinal oil.

*[மண் + உருவி.]*

மண்ணுலகு *maṉ-ṉ-ulagu,* பெ.(n.) நில வுருண்டை (சூடா.); the earth.

*[மண் + உலகு.]*

மண்ணுள்ளார் *maṉ-ṉ-uḷḷār,* பெ.(n.) மக்கள் (வின்.); the human beings.

*[மண் + உள்ளார்.]*

மண்ணுளி *mannuḷi,* பெ.(n.) மண்ணுளிப் பாம்பு பார்க்க; see *mannuḷi-p-pāmbu.*

*[மண்ணுணி→மண்ணுளி.]*

மண்ணுளிக்காரம் *mannuḷi-k-kāram,* பெ.(n.) அரிதாரம் (சங்.அக.); yellow orpiment.

*[மண்ணுளி + காரம்.]*

மண்ணுளிப்பாம்பு *mannuḷi-p-pāmbu,* பெ.(n.) 1. பாம்பு வகை; a kind of snake. 2. மண்ணில் உண்டாகும் புழு வகை (வின்.); earth worm.

*[மண் + உணி + பாம்பு – மண்ணுணிப்பாம்பு →மண்ணுளிப்பாம்பு.]*

**மண்ணுளியன்** *mannuliyan,* பெ.(n.) மண்ணுளிப்பாம்பு பார்க்க (நாமதீப.257); see *mannuli-p-pāmbu.*

க. மண்ணுளிக.

*[மண் + உளியன்.]*

**மண்ணுளுவை**[1] *mannuluvai,* பெ.(n.) சேற்றில் புதைந்து கொள்ளும் நன்னீர் மீன் வகை; a fresh water fish which hides in the mud.

*[மண் + உளுவை.]*



**மண்ணுளுவை**[2] *mannuluvai,* பெ.(n.) ஏறக்குறைய 7 அடி வளர்வதும் மங்கற் சிவப்பு நிறமுள்ளதுமான கடல்மீன் வகை; mudskate, dull brown, attaining nearly 7 feet in length.

*[மண் + உளுவை.]*

**மண்ணுறு-த்தல்** *mannuru-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. கழுவுதல் (திருமுரு.25, உரை); to wash, cleanse, to polish, as a gem. 2. ஒப்பனை செய்தல்; to adorn, beautify, decorate. *"மகரப் பகுவாய் தாழ மண்ணுறுத்து" (திருமுரு.25).* 3. மஞ்சன மாட்டுதல்; to bathe, as an idol. *"வார்க்கோல மாலை முலையார் மண்ணுறுப்ப வாடி" (சீவக.2352).*

*[மண் + உறு-.]*

**மண்ணெடு-த்தல்** *man-n-uedu-,* 4செ.கு.வி. (v.i.) 1. குழியினின்று மண்ணை நீக்குதல்; to remove earth, as from a pit. 2. மண்ணைப் பறித்துக் கிளப்புதல் (வின்.); to dig up earth, as rats, white ants etc. 3. கோட்டுமண் கொள்ளுதல் (வின்.); to toss up earth, as cows with their horns. 4. வயலை வெட்டித் திருத்துதல் (வின்.); to lower the level of a field by removing earth. 5. மட்கலம் செய்வதற்கான வண்டல் அல்லது களி மண்ணை ஏரியிலிருந்தோ வயலிலிருந்தோ வெட்டி எடுத்து மேட்டுப் பகுதியில் குவித்து வைத்தல்; to remove silt or clay for making pots from tank beds or paddy fields and stack at uptands.

*[மண் + எடு-.]*

**மண்ணெண்ணெய்** *man-n-enney,* பெ.(n.) மண்ணெய் பார்க்க; see *manney.*

*[மண் + எண்ணெய் (எள் + நெய்).]*

**மண்ணெய்** *man-ney,* பெ.(n.) நிலத்தடியிலிருந்து எடுத்து தூய்மை செய்யப்பட்டு, எரிபொருளாய்ப் பயன்படும் எண்ணெய் வகை; kerosene oil, petroleum, naptha, a rock oil.

*[மண் + நெய்.]*

முதன்முதலாக எள்ளிலிருந்து எடுக்கப்படும் நெய் 'எண்ணெய்' என்று வழங்கப்பட்டு அதன்பின் 'எண்ணெய்' என்பதே அனைத்திலிருந்தும் எடுக்கப்படும் நெய்க்கும் பொதுப்பெயரானது.

கடலை + நெய் (எண்ணெய்) = கடலையெண்ணெய்.

**மண்ணேறிவிடு-தல்** *maṇ-ṇ-ēṟi-viḍu-,* 4 செ.கு.வி.(v.i.) 1. நீர் கெட்டுப்போதல்; to become foul as water. 2. புண் அழுக்கடைதல்; to become dirty as a sore. 3. வண்டல் மண் படிதல்; to silt, as in a river.

*[மண் + ஏறி + விடு-.]*

**மண்ணேறு-தல்** *maṇṇēṟu-,* 4 செ.கு.வி. (v.i.) சுவரில் ஏறுதல்; to scale as a wall. *திருடன் மண்ணேறிக் குதித்து ஓடிவிட்டான் (உ.வ.).*

*[மண் + ஏறு-.]*

**மண்ணை**[1] *maṇṇai,* பெ.(n.) 1. கூர்மழுக்கம்; bluntness. *"மண்ணை வெண்கோட்டுச் சிறுகண் யானை" (அகநா.24).* 2. மூடன் (சூடா.); ignorant, stupid or dull person. *"இம்மணியை நின்மணியொடு கலக்கும் மண்ணை தானுளனோ" (மேருமந்.303).* 3. இளமை (பிங்.); juvenility, youth. *"மண்ணை நல்லான்" (ஞானா.34, 9).* 4. காலின் கெண்டைச் சதை (நாஞ்.); calf of the leg. 5. பேய் (சூடா.); devil, hobgoblin. *"செறிந்தன கழுகுடன் மண்ணை" (கந்தபு. சிங்கமு.85).* 6. கொடிவகை (மலை.); a kind of creeper.

*[மொண்ணை→மண்ணை.]*

**மண்ணை**[2] *maṇṇai,* பெ.(n.) 1. வாலுளுவை; a drug plant. 2. வெங்காயம்; onion (சா.அக.).

**மண்ணைக்கட்டி**[1] *maṇṇai-k-kaṭṭi,* பெ.(n.) அதிங்கு எனும் பயிரி; plant.

*[மண்ணை + கட்டி.]*

**மண்ணைக்கட்டி**[2] *maṇṇai-k-kaṭṭi,* பெ.(n.) தொண்டைப்புண் வகை; inflammation of toncils.

*[மண்ணை + கட்டி.]*

**மண்ணைக்கரையேறுதல்** *maṇṇai-k-karai-ERudal,* பெ.(n.) காலின் கெண்டைச் சதை மேலேறுகை (நாஞ்.); spasmodic and involentary movement in the calf of the leg.

*[மண்ணை + கரை + ஏறுதல்.]*

**மண்ணைநாங்கு** *maṇṇai-nāṅgu,* பெ.(n.) சிறுநாகப் பூ வகை; narrow leaved ceylon iron wood.

*[மண்ணை + நாங்கு.]*

**மண்ணைப்பூ** *maṇṇai-p-pū,* பெ.(n.) வெங்காயப் பூ; the flower of onion.

*[மண்ணை + பூ.]*

**மண்ணொட்டர்** *maṇṇoṭṭar,* பெ.(n.) மண் வேலை செய்வோர் (வின்.); men doing earthwork, well diggers, wall builders.

*[மண் + ஒட்டர்.]*

தமிழ் நாட்டில் வாழும் உழைப்பிற்கு அஞ்சா இனம். கிணறு தோண்டுதல், கல் உடைத்தல், வாய்க்கால் வெட்டுதல் போன்ற எல்லா வேலைகளிலும், இந்தியா முழுவதும் ஈடுபட்டுள்ளனர்.

**மண்ணொட்டி** *maṇṇoṭṭi,* பெ.(n.) ஒருவகை வெள்ளை நஞ்சு; white arsenic in its native state.

*[மண் + ஒட்டி.]*

**மண்ணோகதம்** *maṇṇōkatam,* பெ.(n.) ஒரு தலைப்பூடு; garlic with only one tooth (சா.அக.).

மண்ணோடு *mannōdu,* பெ.(n.) ஒருவகை ஓடு; a kind of tiles.

மண்ணோர் *mannōr,* பெ.(n.) மக்கள்; human beings as inhabitants of earth. *"மண்ணோர் மருந்து" (திருவாச.11, 19).*

*[மண் →மண்ணோர்.]*

மண்தாங்கி *mantāṅgi,* பெ.(n.) மண்தாங்கிப் பலகை பார்க்க; see *man-tāṅgi-p-palagai.*

*[மண் + தாங்கி.]*

மண்தாங்கிப்பலகை *man-tāṅgi-p-palagai,* பெ.(n.) கதவுநிலைக்கு மேலுள்ள சுவரைத் தாங்கும் பலகை; lintel.

*[மண் + தாங்கி + பலகை.]*



மண்திண்ணிச்சத்து *man-tinni-c-cattu,* பெ.(n.) செவ்வட்டை; centipede (சா.அக.).

*[மண் + திண்ணி + சத்து.]*

மண்தைலம் *man-tailam,* பெ.(n.) பூசு நெய் வகை, நெய்மம் (வின்.); bitumen.

*[மண் + Skt. தைலம்.]*

மண்தோண்டி *man-tōndi,* பெ.(n.) மண் தோண்டி எடுக்கும் பொறி; dredger.

மறுவ. மண்வாரி, மண்வெட்டி.

*[மண் + தோண்டி.]*

மண்நாகம் *man-nāgam,* பெ.(n.) மண்ணுளிப் பாம்பு பார்க்க; see *mannuli-p-pāmbu.*

*[மண் + நாகம்.]*

மண்பவளம் *man-pavalam,* பெ.(n.) பவளம் போன்று மண்ணாற் செய்த போலிகை (வின்.); immitation coral, made of clay.

*[மண் + பவளம்.]*

மண்பாக்கு *man-pākku,* பெ.(n.) ஒருவகைத் தரங்குறைந்த பாக்கு; an inferior kind of areca-nut.

*[மண் + பாக்கு.]*

மண்பாச்சி *man-pācci,* பெ.(n.) மண்ணீரல்; spleen.

*[மண் + பாச்சி.]*

மண்பாடு *man-pādu,* பெ.(n.) நிலத்தினியல்பு; nature of the soil or land. *"திருவயோத்யையில் மண்பாடுதானே ராமபக்தியைப் பிறப்பிக்குமா போலே" (ஈடு.4, 9, 11).*

*[மண் + பாடு.]*

மண்பாண்டம் *man-pāndam,* பெ.(n.) மட்கலம் பார்க்க; see *mat-kalam.*

*[மண் + பாண்டம்.]*

மண்பார் *man-pār,* பெ.(n.) கிணறு வெட்டுகையில் பாறையின் கீழ்க் காணப்படும்

கெட்டிமண் (வின்.); stratum of hard clay below the rocky stratum, in well digging.

*[மண் + பார்.]*

மண்பிடி *man-pidi,* பெ.(n.) களி மண்ணிலுள்ள பசை (யாழ்.அக.); the sticky nature of clay.

*[மண் + பிடி.]*

மண்புரை *man-purai,* பெ.(n.) மண் பொதிந்த வீடு; mud hut. *"மண்புரை பெருகிய மரமுளி கானம்" (ஐங்குறு.319).*

*[மண் + புரை.]*

மண்புளி-த்தல் *man-puli-,* 4 செ.கு.வி.(v.i.) 1. மண் குழைந்து நல்ல சாந்தாதல்; to ferment and become well-seasoned and sticky, as mortar mixed and pounded on the preceding day. 2. நிலம் மழையால் இளகி மென்மையாதல்; to become soft by continued rain, as land.

*[மண் + புளி-.]*

மண்புழுங்கு-தல் *man-pulungu-,* 5 செ.கு.வி. (v.i.) முதல் நாள் உரிய அளவு மணலோடு கலந்து, நன்கு மதித்து வைத்த மண் குயவனார் திருவையில் எளிதில் வனையும் வண்ணம் மென்மையாதல்; clay mixed with proper proportion of sand, the previous day, to ferment and become seasoned, so as to be easily thrown on the wheel of the potter.

*[மண் + புழுங்கு-.]*

மண்பூச்சு *man-pūccu,* பெ.(n.) சுவர் முதலியவற்றை மண் சாந்தால் தீற்றுகை; plastering with mud.

*[மண் + பூச்சு.]*

மண்பூசு-தல் *man-pūsu-,* 5 செ.கு.வி.(v.i.) சுவர் முதலியவற்றிற்கு மண் சாந்து தீற்றுதல்; to plaster with mud.

*[மண் + பூசு-.]*

மண்பொதுத்தந்தை *man-podu-t-tandai,* பெ.(n.) படைப்புக் கடவுள், நான்முகன் (பிங்.); *Nanmugan,* as the common father of the world.

*[மண் + பொது + தந்தை.]*

மண்பொறி *man-pori,* பெ.(n.) சுடுமண் இலச்சினை; terracotta seal. *"கூந்தன் மண்பொறி" (சிலப்.13: 84).*

*[மண் + பொறி.]*

மண்போடு-தல் *man-pōdu-,* 20 செ.கு.வி. 1. கேடுசெய்தல் (வின்.); to ruin a person, as throwing mud into his month. 2. வைது, மண்ணை வாரித் தூற்றுதல்; to curse one, throwing up mud in the air.

*[மண் + போடு-.]*

**மண்மக்கள் *man-makkal,* பெ.(n.) வேளாளர்; *velālars,* as the childen of the earth.**

*[மண் + மக்கள்.]*

மண்மகள் *man-magal,* பெ.(n.) நிலமடந்தை; goddess of earth. *"திருமகளு மண்மகளு மாய்மகளுஞ் சேர்ந்தால்" (திவ்.இயற்.1, 42).*

*[மண் + மகள்.]*

மண்மகள்புதல்வர் *man-magal-pudalvar,* பெ.(n.) மண்மக்கள் பார்க்க; see *man-makkal*

*[மண்மகள் + புதல்வர்.]*

**மண்மகன்** *maṇ-magaṉ,* பெ.(n.) குயவர்; potter. *"நிமித்தக் காரண சிவன் மண்மகன் போல நின்று" (சி.சி.1, 18, ஞானப்.)*

மறுவ. மண்மான், மண்ணீட்டாளர், மண்ணுடையார், வேளார்.

*[மண் + மகன்.]*

**மண்மடக்கு** *maṇ-maḍakku,* பெ.(n.) மண்ணால் செய்த (மடக்கு) ஏனம், பானை மூடி; earthern sauce or dish. *'மண்மடக்கில் வைத்து மேல் மடக்கால் மூடு' (உ.வ.).*

*[மண் + மடக்கு.]*

**மண்மடந்தை** *maṇ-maḍantai,* பெ.(n.) 1. மண்மகள் பார்க்க; see *maṇmagaḷ. "திருமடந்தை, மண்மடந்தை யிரு பாலுந் திகழ" (திவ்.பெரியதி.3, 10, 1).* 2. பூவுலகத்துப் பெண்; woman of the earth.

*[மண் + மடந்தை.]*

**மண்மலி** *maṇ-mali,* பெ.(n.) மருக்கொழுந்து (மலை.); southern - wood.

*[மண் + மலி.]*

**மண்மழை** *maṇ-maḻai,* பெ.(n.) மண்மாரி பார்க்க; see *maṇmāri. "மாமுகிற் கணம்...... மண்மழையைத் தீ முகங்களா லிறைத்தன" (செவ்வந்திப்பு. உறையூ. 56).*

*[மண் + மழை.]*

**மண்மறைவு** *maṇ-maṟaivu,* பெ.(n.) மண் மறைவில் புடம் போடல்; burrying under the earth or calcifying in sand bath (சா.அக.).

*[மண் + மறைவு.]*

**மண்மாரி** *maṇ-māri,* பெ.(n.) 1. மண்ணாகப் பெய்யும் மழை; shower of dust, dust storm. *"மண்மாரி பெய்கவிந்த வான்" (தனிப்பா.i, 64, 127).* 2. வறுமை (இ.வ.); adversity.

*[மண் + மாரி.]*

**மண்மாலை** *maṇ-mālai,* பெ.(n.) செம்மண்; red earth (சா.அக.).

*[மண் + மாலை.]*

**மண்மூசை** *maṇ-mūšai,* பெ.(n.) மருந்து செய்யவும் மாழைகளை யுருக்கவும் உதவும் மண்ணாலான குகை (கொப்பு) (கொ.வ.); earthern crucible for calcinating medicines or melting metals.

*[மண் + மூசை.]*

**மண்மூடி** *maṇ-mūḍi,* பெ.(n.) மண்ணாலான பெரிய மூடி; a large earther dish.

*[மண் + மூடி.]*

**மண்மேடிடு-தல்** *maṇ-mēḍiḍu-,* 20 செ.கு.வி. (v.i.) ஆறு, வயல் முதலியன மணலால் தூர்ந்து மேடாய்ப் போதல்; to silt, as a river, field, etc.

*[மண்மேடு + இடு-.]*

**மண்மேடு** *maṇ-mēḍu,* பெ.(n.) மண்ணாலான குன்று; earthern mound.

*[மண் + மேடு.]*

**மண்வட்டகை** *maṇ-vaṭṭagai,* பெ.(n.) மண் ஏனம்; earthern ware.

*[மண் + வட்டகை.]*

**மண்வருசம்** *maṇ-varušam,* பெ.(n.) மண்மாரி பார்க்க; see *maṇ-māri.* *"உறையூரிற் கல்வருஷமும், மண் வருஷமும் பெய்வித்து" (தக்கயாகப்.205, உரை).*

*[மண் + Skt.வருசம்.]*

**மண்வாரி** *maṇ-vāri* பெ.(n.) மண்ணோடு வீசும் பெருங்காற்று (வின்.); violent wind drifting the dust.

*[மண் + வாரி.]*

**மண்வினைமாக்கள்** *maṇ-viṉai-mākkaḷ,* பெ.(n.) குயவர்; potters as workers in clay. *"மண்வினை மாக்க டம்வினை முடிமார்" (ஞானா.41, 11).*

*[மண் + வினை + மாக்கள்.]*

**மண்வெட்டி** *maṇ-veṭṭi,* பெ.(n.) மண் தோண்டுங் கருவி வகை (இ.வ.); spade, hoe, especially with short handle.

*[மண் + வெட்டி.]*



**மண்வெட்டிக்காரர்** *maṇ-veṭṭi-k-kārar,* பெ.(n.) கரூர் வட்டாரத்தில் உழவுத் தொழில் செய்யும் இனத்தார் (இ.வ.); a community of agricultural labourers, as seen always with spades.

*[மண் + வெட்டி + காரர்.]*

சாதியைச் சுட்டாமல், தொழில் சார்ந்த அடையாளத்தோடு சுட்டும் மதிப்புச் சொல்.

**மண்வெட்டிப்பல்** *maṇ-veṭṭi-p-pal,* பெ.(n.) மண்வெட்டி போல அகன்று, தட்டையாய் உள்ள பல் (இ.வ.); broad and incisor tooth, a being like a spade.

*[மண்வெட்டி + பல்.]*

**மண்வேலை** *maṇ-vēlai,* பெ.(n.) மண்ணால் கரை முதலாயின இடுந்தொழில்; earth work excavation for canals, building foundation and embankments.

*[மண் + வேலை.]*

**மண¹-த்தல்** *maṇa-,* 3 செ.கு.வி.(v.i.) 1. கலத்தல்; to be united, mingled. *"அறையும் பொறையு மணந்த தலைய" (புறநா.118).* 2. வந்து கூடுதல்; to come together. *"நிரை மணந்த காலையே" (சீவக.418).* 3. நேர்தல்; to happen. *"மருவுற மணந்த நட்பு" (கலித்.46).* 4. பொருந்துதல்; to be fixed, attached. *"மத்தகத் தருவியின் மணந்த வோடையை" (சீவக. 2211).* 5. கமழ்தல்; to emit fragrance. *"மணந்த சோலையும்" (அரிச்.பு.விவாக.98).* 6. விளங்குதல்; to shine. *"தேவர் மருட மணக்குங் கழல் வீரா" (திருப்பு.527).*

*[மணம்→மண-த்தல்.]*

**மண²-த்தல்** *maṇa-,* 12 செ.குன்றாவி.(v.t.) 1. திருமணம் புரிதல்; to wed. *"மணந்தார் பிரிவுள்ளி" (நாலடி, 397).* 2. புணர்தல் (பிங்.); to copulate with. *"மாசில்வண் சேக்கை மணந்த புணர்ச்சியுள்" (கலித்.24).* 3. கூடியிருத்தல்; to live in company with.

*"மணக்குங்கான் மலரன்ன தகையவாய்" (கலித்.25).* 4. அணைத்தல்; to embrace. *"திருந்திழை மென்றோள் மணந்தவன்" (கலித்.).*

*[மணம் →மண-.]*

**மணக்கத்தம்புல்** *maṇakkattam-pul,* பெ.(n.) ஒருவகைப் புல்; a kind of grass (சா.அக.).

*[மணக்கத்தம் + புல்.]*

**மணக்கத்தை** *maṇakkattai,* பெ.(n.) நெல் வகை; a kind of paddy.

**மணக்கத்தையரிசி** *maṇakkattai-y-arisi,* பெ.(n.) ஒரு வகை சிவப்பரிசி; a kind of red rice for pudding and cakes.

*[மணக்கத்தை + அரிசி.]*

**மணக்காப்புச்சீமந்தம்** *maṇakkāppu-c-cīmandam,* பெ.(n.) மகளிரின் முதற் கருப்பத்தில் வளைகாப்புடன் சேர்த்துச் செய்யும் சீமந்தச் சடங்கு (இ.வ.); the celebration of a woman during the period of her first pregnancy called *cīmandam*, along with bangle wearing ceremony.

*[மணம் + காப்பு + சீமந்தம்.]*

**மணக்கால்** *maṇakkāl,* பெ.(n.) கலியாணப் பந்தலிடுவதற்கு முதலில் நடும் முழுத்தக் கால் (இ.வ.); first post set up in an auspicious hour for a marriage pavilion.

*[மணம் + கால்.]*

**மணக்கால்நம்பி** *maṇakkāl-nambi,* பெ.(n.) மாலியப் பெரியார்களுள் ஒருவர் (குருபரம்.); a *Vaishnava Acharya.*

*[மணக்கால் + நம்பி.]*

**மணக்கிழத்தி** *maṇa-k-kiḻatti,* பெ.(n.) கறுப்பறுகு; a black variety of dub grass (சா.அக.).

*[மணம் + கிழத்தி.]*

**மணக்குடவர்** *maṇa-k-kuḍavar,* பெ.(n.) திருக்குறளாசிரியர்களுள் ஒருவர்; a commentator on the *kuṟaḷ.* *"தருமர் மணக்குடவர்...... வள்ளுவர் நூற் கெல்லையுரை செய்தாரிவர்" (பெருந்தொ. 1538).*

*[மணம் + குடவர்.]*

**மணக்குடையர்** *maṇa-k-kuḍayar,* பெ.(n.) மணக்குடவர் பார்க்க (தொண்டை.சத.40, மேற்கோள்.); see *maṇa-k-kuḍavar.*

*[மணக்குடவர்→மணக்குடையர்.]*

**மணக்குழம்பு** *maṇa-k-kuḻambu,* பெ.(n.) வயிற்றின் மீதும், மார்பின் மீதும் பூசிக் கொள்ளும் சந்தனங் கலந்த ஒருவகை மணக் குழம்பு; a sandal wood paste with other drugs is smeared over the abdomen, and chest.

*[மணம் + குழம்பு.]*

**மணக்கோல்** *maṇa-k-kōl,* பெ.(n.) மலரம்பு; flower arrow of *kāmaṉ.* *"மணக்கோ றுரந்த..... மதனை" (கல்லா. 31, 8).*

*[மணம் + கோல்.]*

**மணக்கோலம்**[1] *maṇa-k-kōlam,* பெ.(n.) 1. திருமணத்துக்குரிய ஒப்பனை; wedding dress or costume. *"மணக்கோலமதே பிணக்கோலமதாம் பிறவியது" (தேவா. 934, 7).* 2. திருமண ஊர்கோலம் (இ.வ.); marriage procession. 3. மணச்சடங்கின்

முன்னிகழும் மணமகனது ஊர்கோலம் (வின்.); procession of the bridgroom just before his marriage.

[*மணம் + கோலம்.*]

**மணக்கோலம்²** *mana-k-kōlam,* பெ.(n.) வாழை; plantain (சா.அக.).

**மணக்கோலமூலி** *mana-k-kōla-mūli,* பெ.(n.) 1. காட்டு முருங்கை; wild mornika tree. 2. ஒருவகை நில ஆவாரை; senna leaved shrub (சா.அக.).

**மணக்கோவை** *mana-k-kōvai,* பெ.(n.) ஒருவகைக் கோவை; used for curry *Kovai* fruit tender (சா.அக.).

**மணங்கட்டு-தல்** *manan-kattu-,* 5 செ.கு.வி. (v.i.) நறுமண மூட்டுதல்; to fumigate with odours, perfume.

[*மணம் + கட்டு-.*]

**மணங்கல்** *manangal,* பெ.(n.) 1. பெரும்பானை (அக.நி.); big pot. 2. யானை; elephant.

**மணங்கிளர்-தல்** *manan-kilar-,* 11 செ.கு.வி. (v.i.) மணந்தட்டு-, பார்க்க; see *manan-tattu.*

**மணங்கு¹** *manangu,* பெ.(n.) ஆட்டுக்குட்டி (திவா.); lamp.

**மணங்கு²** *manangu,* பெ.(n.) இருவாட்சி (மலை.); tuscan jasmine.

**மணங்கு³** *manangu,* பெ.(n.) நிறைவகை; a standard weight, 25 lbs.

**மணங்கு⁴** *manangu,* பெ.(n.) மடங்கு², 1 பார்க்க; see *madangu.*

[*மடங்கு → மணங்கு.*]

**மணங்குலை-தல்** *manan-kulai-,* 2 செ.கு.வி. (v.i.) நிலைகுலைதல்; to be ruined in circumstances. *"மக்கி மணங் குலைந்து" (இராமநா.யுத்.81).*

**மணங்கொம்பு** *manankombu,* பெ.(n.) மணுகுப்பூ பார்க்க; see *manugu-p-pū.*

**மணஞ்சேரி** *mananjēri,* பெ.(n.) தஞ்சாவூர் மாவட்டத்தில் காவிரிக்கு வடகரையில் அமைந்துள்ள ஊர்; a town on the northern banks of cauvery in Thanjavur Dt. *"மயிலொரு மல்கிய சோலை மணஞ்சேரி" (பெரியபு.152-1).*

[*மணம் + சேரி. மணம் = திருமணம்.*]

**மணத்தக்கள்ளி** *manatta-k-kalli,* பெ.(n.) இலைக்கள்ளி; leafy milk spurge (சா.அக.).

**மணத்தக்காளி** *mana-t-takkāli,* பெ.(n.) மணித்தக்காளி பார்க்க; see *mani-t-takkāli.*

[*மணித்தக்காளி → மணத்தக்காளி (கொ.வ.).*]

**மணத்தூண்** *mana-t-tūn,* பெ.(n.) திருவரங்கத்தில் அரங்கநாதர் கோயிலுட் புறத்திலுள்ள இரட்டைத் தூண்கள் (திவ். பெருமாள், 1, 2); the two pillars in the court of *Thiruvarangam* temple.

**மணந்தட்டு-தல்** *manan-dattu-,* 5 செ.கு.வி. (v.i.) நறுமணம் வீசுதல் (யாழ்.அக.); to be fragrant; to spread sweet smell.

[*மணம் + தட்டு-. மணம் = நறுமணம்.*]

**மணந்தவன்** *manandavan,* பெ.(n.) கணவன்; husband. *"மணந்தவர் தேர்........ தோன்றும்" (திருக்கோ.326).*

[*மணம் → மணந்தவன். மணம் = திருமணம்.*]

மணப்பந்தல் *maṇa-p-pandal,* பெ.(n.) திருமணத்தில் இடப்படும் ஒப்பனைப் பந்தல் (வின்.); marriage pavilion erected and decorated for the occasion.

*[மணம் + பந்தல். மணம் = திருமணம்.]*

மணப்பறை *maṇa-p-paṟai,* பெ.(n.) திருமண முழவு; marriage drum. *"மன்றங் கறங்க மணப்பறை யாயின"* (நாலடி, 23).

*[மணம் + பறை. மணம் = திருமணம்.]*

மணப்பாகு[1] *maṇa-p-pāgu,* பெ.(n.) முறுகாத வெல்லப்பாகு; meltless treacle (சா.அக.). *'முறுகிய வெல்லப்பாகிற்கு எதிரானது'.*

மணப்பாகு[2] *maṇa-p-pāgu,* பெ.(n.) பாகு வகை (பதார்த்த.182); a kind of treacle.

மணப்பாரி *maṇa-p-pāri,* பெ.(n.) ஓர் அம்மை; a kind of measles (சா.அக.).

மணப்பிரண்டை *maṇa-p-piraṇḍai,* பெ.(n.) நறுமணப் பிரண்டை; a kind of fragrant plant (சா.அக.).

*[மணம் + பிரண்டை.]*

மணப்பு *maṇappu,* பெ.(n.) 1. நறுமணம்; scent, odour, perfume. *"முழுவதும் மணப்புள்ள சந்தனநெய்" (தைலவ.பாயி.16, உரை).* 2. புணர்ச்சி (வின்.); copulation. 3. சாரம் (யாழ்.அக.); essence. 4. செல்வமுடைமை (யாழ்.அக.); possession of extensive properties.

*[மணம் → மணப்பு.]*

மணப்பூச்சு *maṇa-p-pūccu,* பெ.(n.) உடம்பிற் பூசும் சந்தனக் குழம்பு முதலியன; fragrant paste of camphor, sandal, etc., for the person. *"கார்கால மணப்பூச்சின் குணம்" (பதார்த்த.1432).*

*[மணம் + பூச்சு. மணம் = நறுமணம்.]*

மணப்பொடி *maṇa-p-poḍi,* பெ.(n.) நறுந்துகள்; scented powder.

*[மணம் + பொடி. மணம் = நறுமணம்.]*

மணப்பொருத்தம் *maṇa-p-poruttam,* பெ.(n.) 1. திருமணப் பொருத்தம்; agreement in the horoscopes of a bridgroom and a bride with reference to their fitness for marriage. 2. திருமண உடன்படிக்கை (வின்.); marriage contract, written agreement between parties marrying or giving their children in marriage.

*[மணம் + பொருத்தம். மணம் = திருமணம்.]*

மணம் *maṇam,* பெ.(n.) 1. கூடுகை; union, as of lovers. *"ஏதிலார் மணந்தனில் மனம்போக்கும்" (காசிக.மகளிர்.10).* 2. எண் வகையான திருமணம் (பிங்.); marriage, of which there are eight kinds. 3. நறுநாற்றம்; fragrance. *"மணநாறு படப்பை" (பெரும்பாண்.354).* 4. நறுமணப் பொருள்; fragrant substance. *"மணங்கமழ் நாற்றம்" (மதுரைக்.447).* 5. மதிப்பு; respectability, dignity. *பணமுள்ளவனுக்கே மணமுண்டு (பழ.).* 6. நன்னிலை; prosperity, affuence. *"மக்கி மணங்குலைந்து" (இராமநா.உயுத்.81).*

தெ. மநுவு; க. மணம்.

*[முல் (பொருந்தற் கருத்து வேர்) → முள் → மள் → மண் → மண. மணத்தல் = பொருந்துதல். மண → மணம் (வே.க. 4:63).]*

**மணம்பிடி-த்தல்** *manam-pidi-,* 4 செ. குன்றாவி.(v.t.) 1. மோப்பம் பிடித்தல்; to perceive by smell or scent, as dogs. 2. நறுமணம் முதலியவற்றால் இழுக்கப்படுதல் (யாழ்ப்.); to be attracted by dainties, as children; to be attracted by smell, as insects. 3. முடைநாற்றம் வீசுதல் (வின்.); to stink.

*[மணம் + பிடி. மணம் = நறுமணம், முடைநாற்றம்.]*

**மணம்புரி-தல்** *manam-puri-,* 2 செ.குன்றாவி. (v.t.) திருமணம் செய்தல்; to marry.

*[மணம் + புரி-. மணம் = திருமணம்.]*

**மணமக்கள்** *mana-makkal,* பெ.(n.) புதிதாய்த் திருமணம் செய்து கொள்பவர்கள்; newly married couples, newly-weds.

*[மணம் + மக்கள்.]*

கணவன் மனைவியுமாக ஒருவருக்கொருவர் வாழ்க்கைத் துணைவராய் இல்லறம் தொடங்கும் இருவரும், திருமணத்தன்று மணமக்கள் எனப்படுவர். அவ்விருவரையும் பிரித்துக் கூறுங்கால், மணமகன் மணமகள் என்றும், மணவாளன் மணவாட்டி என்றும், பெண் மாப்பிள்ளை (மணவாளப்பிள்ளை) என்றும், பெண் பிள்ளை என்றும், கூறுவது வழக்கம். மணமகனைப் பிள்ளை என்பது வடார்க்காட்டு வழக்கு (த.தி. முன்.vi).

**மணமகள்** *mana-magal,* பெ.(n.) திருமணப் பெண்; bride.

*[மணம் + மகள்.]*

**மணமகன்** *mana-magan,* பெ.(n.) 1. திருமண மாப்பிள்ளை; bridegroom. *"மணமகன் போல நின்றான்" (சீவக.2185).* 2. கணவன் (சூடா.); husband. *"மணமகனே பிணமகனாய்" (திருவிளை. பழியஞ்.40).*

*[மணம் + மகன்.]*

**மணமண்டபம்** *mana-mandabam,* பெ.(n.) திருமண மண்டபம் (யாழ்.அக.); marriage pavilion.

*[மணம் + மண்டபம்.]*

**மணமலி** *mana-mali,* பெ.(n.) மருக்கொழுந்து (மலை.); southern wood.

*[மணம் + மலி.]*

**மணமாலை** *mana-mālai,* பெ.(n.) திருமணத்தில் மணமக்கள் சூடும் பூமாலை; garland for the bride and bridegroom at a wedding. *"மணமாலை அந்தரி சூட்ட" (திவ்.நாய்ச். 6, 3).*

*[மணம் + மாலை.]*

**மணமுரசு** *mana-murašu,* பெ.(n.) விழா முரசு (சிலப்.5:141); drum used at festivals and marriages.

*[மணம் + முரசு.]*

**மணமுழவு** *mana-mulavu,* பெ.(n.) மருதநிலப் பறை (தொல்.பொருள்.18, உரை); drum of the agricultural tract.

*[மணம் + முழவு.]*

**மணமேற்குடி** *mana-mērrkudi,* பெ.(n.) நின்றசீர் நெடுமாறன் என்ற பாண்டிய மன்னனின் அமைச்சர் குலச்சிறையார் பிறந்த ஊர்; the native place of *kulacciṟayār,* the minister of *Ninrašīr Neḍumāṟan,* the Pandya king. *"குருந்தவிழ் சாரல் மணமேற்குடி மண்குலச் சிறையே" (திருத்தொண்டர்.26).*

மணல் *maṉal,* பெ.(n.) 1. பொடியாயுள்ள பிதிர்மண்; sand; gravel. *"பெருமணலுலகமும்" (தொல். பொருள்.5).* 2. மரகதக் குற்றம் எட்டனுள் ஒன்று (சிலப்.14:184); flaw in emerald, one of eight *maragada-k-kuṟṟam.*

மணல்தரம் *maṉal-taram,* பெ.(n.) மணற்றரை பார்க்க; see *maṉaṟṟarai* (loc.).

மணல்தாரா *maṉal-tārā,* பெ.(n.) மணற்றாரா பார்க்க; see *maṉaṟṟārā* (சா.அக.).

மணல்திட்டு *maṉal-tiṭṭu,* பெ.(n.) கடலுள் காணலாகும் சிறுசிறு திட்டுகள்; a small mount found in sea.

*[மணல் + திட்டு.]*

மணல்திட்டை *maṉal-tiṭṭai,* பெ.(n.) மணற் குன்று; sand hill; sand bank.

*[மணல் + திட்டை.]*

மணல்தொட்டி *maṉal-toṭṭi,* பெ.(n.) மருந்தைப் புடம் போடுவதற்காக மணல் நிரப்பிய இரும்புத் தொட்டி; an iron tub full of sand used in the calcination of medicinal powders (சா.அக.).

*[மணல் + தொட்டி.]*

மணல்மத்திகை *maṉal-mattigai,* பெ.(n.) மணற்குளியல்; sand bath (சா.அக.).

மணல்மறைவுபுடம் *maṉal-maṟaivu-puḍam,* பெ.(n.) புடம் போடுவதற்குரிய மருந்தடங்கிய குப்பியைக் கழுத்தளவு மணலுக்குள் புதைத்து வைத்தல்; to keep the bottle containing medicine to be calcined in slow; cow dung fire concealed in the sand up to the neck (சா.அக.).

*[மணல் + மறைவுபுடம்.]*

மணல்முள்ளங்கி *maṉal-muḷḷaṅgi,* பெ.(n.) ஆற்றுமுள்ளி பார்க்க; see *āṟṟu-muḷḷi* (சா.அக.).

மணல்மேடு *maṉal-mēḍu,* பெ.(n.) ஆற்றுவாய்ப் பக்கம் மேடாகக் குவிந்திருக்கும் மணல் குவியல்; sand pile near river side.

*[மணல் + மேடு.]*

மணல்வாரி *maṉal-vāri,* பெ.(n.) 1. மண் தோண்டி பார்க்க (இக்.வ.); see *maṉ-tōṇḍi.* 2. நெல்வகை; a kind of paddy. *"சேரு மணல்வாரி குளவாளை" (பறாளை. பள்ளு. 23).* 3. புல்வகை (யாழ்.அக.); a kind of grass. 4. சின்னம்மை வகை; measles (இ.வ.). 5. மணல்போக்கி பார்க்க; see *maṉal-pōkki.*

*[மணல் + வாரி.]*

மணல்வாரிச்சடங்கு *maṉal-vāri-c-caḍaṅgu,* பெ.(n.) தொல் தமிழர் திருமணத்தில் குடத்தில் மணலைக் கொட்டி நீர் வார்க்கும் நடப்பு வகை; ceremony of putting sand into a big pot and pouring in water, a custom at the wedding of *Tol-tamilar.*

*[மணல்வாரி + சடங்கு.]*

மணலக்கம்பம் *maṉala-k-kambam,* பெ.(n.) பால்வீதி மண்டலம் (யாழ்.அக.); the milky way.

மணலடித்தரிசு *maṉalaḍi-t-tarisu,* பெ.(n.) மணல் மேவிப் பாழ்பட்ட நிலம் (இ.வ.); land rendered waste by accumulation of sand.

*[மணலடி + தரிசு.]*

மணலி[1] *maṇali,* பெ.(n.) சேக்கிழார் நமிநந்தியடிகள் புராணத்தில் சுட்டும் திருவாரூர் வட்டத்தில் திருநெல்லிக்காவல் அருகிலிருந்த ஊர்; a town near *Thirunallikkaval* in *Thiruvarur* Taluk, which is mentioned by *Šēkkiḻar* in *Naminandiaḍigaḷ purāṇam.* *"தேவர் பெருமாள் எழுச்சி திருமணலிக் கொருநாள் எழுந்தருள" (பெரியபு.நமி.22).*

*[மணல்→மணலி.]*

மணலி[2] *maṇali,* பெ.(n.) கீரைவகை (பதார்த்த. 593); sandgreens, *Gisekia pharnacloides.*

மணலி[3] *maṇali,* பெ.(n.) 1. மருக்கொழுந்து (மலை.); southern wood. 2. நெல்வகை (நாமதீப.351); a kind of paddy. 3. பாம்பு வகை (நிகண்டு); a kind of snake.

மணலிக்கீரை *maṇali-k-kīrai,* பெ.(n.) கீரை வகை; a kind of greens (சா.அக.).

*[மணலி + கீரை.]*

மணலிக்கோரை *maṇali-k-kōrai,* பெ.(n.) உப்பங்கோரை; a kind of nut grass (சா.அக.).

*[மணலி + கோரை.]*

மணலிரும்பு *maṇal-irumbu,* பெ.(n.) மணல் கலந்த இரும்பு; iron ore.

*[மணல் + இரும்பு.]*

மணலுறிஞ்சி *maṇal-uṟiñji,* பெ.(n.) மணலைப் பறித்துப் போக்கும் பள்ளமடை (இ.வ.); under sluice, to draw away sand.

*[மணல் + உறிஞ்சி.]*

மணலூர் *maṇalūr,* பெ.(n.) மணலூர்புரம் (திருவாலவா.53, 6) பார்க்க; see *maṇalūr-puram.*

மணலூர்புரம் *maṇalūr-puram,* பெ.(n.) பாண்டியரது பழைய தலைநகரம் (பி.வி.2, உரை); an ancient *pāṇḍiya* capital.

மணலேறு *maṇal-ēṟu,* பெ.(n.) முத்துக் குற்றவகை (சிலப்.14:193, உரை); a flaw in pearls.

*[மணல் + ஏறு.]*

மணலை *maṇalai,* பெ.(n.) மணலைமீன் பார்க்க (வின்.); see *maṇalai-mīṉ.*

*[மணலைமீன்→மணலை.]*

மணலைமீன் *maṇalai-mīṉ,* பெ.(n.) கல் நவரை என்னும் மீன் வகை (வின்.); a sea fish.

*[மணலை + மீன்.]*

மணலொத்திடம் *maṇalottiḍam,* பெ.(n.) மணலை வறுத்து ஒத்திடமிடுதல்; the application of hot sand for affected part of the body (சா.அக.).

*[மணல் + ஒத்திடம்.]*

மணவணி *maṇa-v-aṇi,* பெ.(n.) மணக் கோலம் பார்க்க; see *maṇa-k-kōlam.* *"ஒரு பெருநாளான் மணவணி காண மகிழ்ந்தனர்" (சிலப்.1:42). "மணஅணி அணிந்த மகளிர் ஆங்கே பிணஅணி அணிந்துதம் கொழு நரைத் தழீஇ உடுத்த ஆடை கோடியாக முடித்த கூந்தல் விரிப்பினும் விரிப்பர்" (உலகநீதி, 56).*

*[மணம் + அணி.]*

மணவருக்கம் *maṇa-varukkam,* பெ.(n.) நறுமணச் சரக்கு வகை; aromatic substance.

*[மணம் + வருக்கம். மணம் = நறுமணம்.]*

**மணவரைபுடம்** *maṉavarai-puḍam,* பெ.(n.) மணற்புடம்; sand bath (சா.அக.).

**மணவறை** *maṉa-v-aṟai,* பெ.(n.) 1. திருமண மண்டபம்; chamber or dais for the performance of the marriage rites. *"என்னெஞ்ச மணவறை" (குமர.பிர.மீனாட். இரட்.2).* 2. பள்ளியறை; bed-chamber. *"மணவறை யியற்றினாரே" (சீவக.837).*

*[மணம் + அறை. மணம் = திருமணம்.]*

**மணவறைத்தோழன்** *maṉavaṟai-t-tōḻaṉ,* பெ.(n.) மாப்பிள்ளைத் தோழன் (வின்.); bridegroom's companion; best man.

*[மணவறை +தோழன்.]*

**மணவன்னம்** *maṉa-vaṉṉam,* பெ.(n.) உப்பிலி பார்க்க; see *uppili* (சா.அக.).

**மணவாட்டி** *maṉavāṭṭi,* பெ.(n.) 1. மணமகள்; bride. 2. மனைவி (பிங்.); wife. *"இவன் மணவாட்டி சேந்தங்குரத்தி" (தெ.க.தொ. 125).*

*[மணம் + ஆட்டி. மணம் = திருமணம். ஆட்டி = பெண்பாலீறு. எ.டு. மூதாட்டி, பெருமாட்டி, திருவாட்டி.]*

**மணவாரி** *maṉavāri,* பெ.(n.) பெரு நெல் வகை; a kind of coarse paddy.

**மணவாளதாசர்** *maṉa-v-āḷa-dāšar,* பெ.(n.) பிள்ளைப் பெருமாளையங்கார்; an author.

**மணவாளம்** *maṉa-vāḷam,* பெ.(n.) நேர் வாளம்; croton seed (சா.அக.).

**மணவாளமாமுனி** *maṉa-vāḷa-māmuṉi,* பெ.(n.) 14-ம் நூற்றாண்டில் வாழ்ந்தவரும் உபதேச ரத்தினமாலை முதலிய நூல்கள் இயற்றியவருமான தென்கலை மாலியர்; an *ācārya* of the *teṉkalai šri vaisṇavas,* author of *upadēca-rattiṉa-mālai* and other works, 14th C.

**மணவாளன்** *maṉa-v-āḷaṉ,* பெ.(n.) 1. மண மகன்; bridegroom. 2. கணவன்; husband. *"மலையான் மணவாளா" (திருவாச.6:40).*

*[மணம் + ஆளன்.]*

**மணவாளன்சோறு** *maṉa-v-āḷaṉ-cōṟu,* பெ.(n.) மாமியார் மருமகனுக்குத் திருமணவறையிற் செய்யும் விருந்து; the ceremonial feast in the bridal chamber, given to the bridegroom by the bride's mother.

*[மணவாளன் + சோறு.]*

**மணவாளன்தழுக்கல்** *maṉa-v-āḷaṉ-taḻu-k-kal,* பெ.(n.) (கிறித்.) திருமணத்தில் மணமகனையும் மண மகளையும் அவரவர் பெற்றோர்களும் உற்றோர்களும் தனித்தனி தழுவும் சடங்கு (E.T.vi.453); the ceremony in which the bridegroom and the bride are embraced by their respective parents and relations.

**மணவாளி** *maṉa-v-āḷi,* பெ.(n.) 1. மணமகன்; bridegroom. 2. மணமகள்; bride.

*[மணம் + ஆளி.]*

**மணவிற்கூத்தனானகாலிங்கராயன்** *maṉaviṟ-kūttaṉāṉa-kāliṅgarāyaṉ,* பெ.(n.) குலோத்துங்க சோழனின் படைத் தலைவன்; Major General of *Kulōthuṅga cōḷaṉ* (சி.பெ.அக.).

சைவ சமயப் பற்றுடையவன்; தில்லையில் பொற்கூரை அமைத்தான்; நூற்றுக்கால் மண்டபம், பெரிய திருச்சுற்று மாளிகை, தேவார மண்டபம் ஆகியவை அமைத்தான். ஞானசம்பந்தர் கோயிலுக்கும் பொன் வேய்ந்தான். பூம்பொழில் அமைத்தான். திருவதிகை வீரட்டானேச் சுரத்திலும் கூரைக்குப் பொன் வேய்ந்தான்.

மணவிற்கோட்டம் *manvir-kōttam,* பெ.(n.) தொண்டை மண்டலத்து 24 கோட்டங்களுள் ஒன்று (S.I.I.i, 119); one of the 24 *kōttams* of *tondaimandalam.*

மணவினை *mana-vinai,* பெ.(n.) திருமண நடப்பு (சடங்கு); marriage ceremony.

*[மணம் + வினை.]*

மணவீசம் *mana-višam,* பெ.(n.) மாதுளை (சங்.அக.); pomegranate.

மணவு *manavu,* பெ.(n.) பலகறை; cowry.

மணவை *manavai,* பெ.(n.) அடுப்பு (தைலவ. தைல.பாயி.14); oven, hearth, cooking place.

*[மண் → மணவை.]*

மணவோலை *mana-v-ōlai,* பெ.(n.) திருமண அழைப்பிதழ்; invitation to a marriage.

*[மணம் + ஓலை.]*

மணற்கல் *manar-kal,* பெ.(n.) மணற்பாங்கான பாறை (வின்.); sand stone, aqueous rock.

*[மணல் + கல்.]*

மணற்காடை *manar-kādai,* பெ.(n.) மணலி லிருக்கும் பொன்னைச் சப்பி வாழும் தவளையைப் போன்ற ஓர் உயிரி; a creature like frog living on gold mixed up in sandy places (சா.அக.).

*[மணல் + காடை.]*

மணற்கால் *manar-kāl,* பெ.(n.) மணற் பாங்கான நிலம் (இ.வ.); sandy soil.

*[மணல் → மணற்கால். ஒ.நோ.ஆற்றங்கால், சேற்றங்கால்.]*

மணற்காலப்பள்ளி *manar-kāla-p-palli,* பெ.(n.) மணற் மேடாக உள்ள ஊர்; sand hillock place or village. *“இந்நாட்டு வெளாநாட்டு மணற் காலப்பள்ளியுந் திறப்பான் பரகேசரி தேவதானங்களும் திருவடிகள் தேவதானங்களும்” (தெ.க.4, தொ.2, 4, 46).*

மணற்காளான்[1] *manar-kālān,* பெ.(n.) 1. தவளை; a frog. 2. மணலில் முளைக்கும் காளான்; a kind of mushroom grown in the sandy places (சா.அக.).

மணற்காளான்[2] *manar-kālān,* பெ.(n.) மணற்றவளை பார்க்க (வின்.); see *manarravalai.*

மணற்கீரை *manar-kirai,* பெ.(n.) மணலி, 1 பார்க்க; see *manali.*

*[மணல் + கீரை.]*

மணற்குருவி *manar-kuruvi,* பெ.(n.) மணற் காடை பார்க்க; see *manar-kādai.*

*[மணல் + குருவி.]*

மணற்குன்றம் *manar-kunram,* பெ.(n.) மணலின் திட்டை; sand-heap, sand-bank, sand dunes. *“வெண்மணற் குன்றமும் விரிபூஞ் சோலையும்” (மணிமே. 1:64).*

*[மணல் + குன்றம்.]*

மணற்குன்று[1] *maṇaṟ-kuṉṟu*, பெ.(n.) மண் மேடு; sand hillock. *"எருக்காட்டுச் சேரியில் மணற்குன்று கல்லியும் குழி தூர்த்தும்" (தெ.க.தொ.22, கல்.32–1).*

*[மணல் + குன்று.]*

மணற்குன்று[2] *maṇaṟ-kuṉṟu*, பெ.(n.) புடம் போடுவதற்காகக் குவிக்கும் மணலின் திரள்; a heap of sand intended for purposes of calcination.

*[மணல் + குன்று.]*

மணற்குன்று[3] *maṇaṟ-kuṉṟu*, பெ.(n.) மணற் குன்றம் பார்க்க (சங்.அக.); see *maṇaṟ-kuṉṟam.*

*[மணல் + குன்று.]*

மணற்கூகை *maṇaṟ-kūgai*, பெ.(n.) தவளை (வின்.); frog.

*[மணல் + கூகை.]*

மணற்கூர்கை *maṇaṟ-kūrgai*, பெ.(n.) வளையலுப்பு; a kind of salt (சா.அக.).

மணற்கை *maṇaṟ-kai*, பெ.(n.) மணற்றரை பார்க்க; see *maṇaṟṟarai.*

மணற்கொழிப்பான் *maṇaṟ-koḻippāṉ*, பெ.(n.) அம்மை வகை (இ.வ.); an eruptive disease, as resembling sand.

*[மணல் + கொழிப்பான். மணல் போன்ற சிறு கொப்புளங்களாய்த் தோன்றும் அம்மை.]*

மணற்கோட்டை *maṇaṟ-kōṭṭai*, பெ.(n.) 1. மணலாலான கோட்டை; sand embankment, as a rampart. 2. வெள்ளத்தைத் தடுக்க இடும் மணற் குவியல் (பதிற்றுப்.30, உரை); protecting bank of sand, as of a river in floods.

*[மணல் + கோட்டை.]*

மணற்கோடு *maṇaṟ-kōḍu*, பெ.(n.) மணற் கோட்டை பார்க்க; see *maṇaṟ-kōṭṭai. "மணற்கோடு கொண்டு" (பதிற்றுப்.30:27).*

*[மணல் + கோடு. கோட்டை→கோடு.]*

மணற்கோவை *maṇaṟ-kōvai*, பெ.(n.) மணலிற் படருங் கோவைக் கொடிவகை (மூ.அ.); a kind of creeper growing in a sandy tract, a climbing plant.

*[மணல் + கோவை.]*

மணற்சாரி *maṇaṟ-šāri*, பெ.(n.) மணற்றறை பார்க்க (உ.வ.); see *maṇaṟṟaṟai.*

*[மணல் + சாரி.]*

மணற்சுண்ணாம்பு *maṇaṟ-cuṇṇāmbu*, பெ.(n.) மணல் மிகுந்துள்ள சுண்ணாம்புக்கல்; sandy limestone.

*[மணல் + சுண்ணாம்பு]*

மணற்சோறு *maṇaṟ-cōṟu*, பெ.(n.) குழந்தைகள் விளையாட்டில் சோறாகக் கருதும் மணல்; sand, regarded as rice by children. *"சிறியார் மணற் சோற்றிற் றேக்கிடுமாபோல்" (திருமந்.306).*

*[மணல் + சோறு.]*

மணற்பருவம் *maṇaṟ-paruvam*, பெ.(n.) புழுதிக்காலாக உழுது உழவுக்கு ஏற்ற நிலை; preparation of a *nañjai* and for *puḻudi-k-kāl* cultivation.

*[மணல் + பருவம்.]*

மணற்பாக்கு *maṇaṟ-pākku,* பெ.(n.) கெடாம லிருப்பதற்காக மணலிற் புதைத்து வைக்கும் பாக்கு (யாழ்ப்.); arecanut, preserved by being kept buried in sand.

*[மணல் + பாக்கு.]*

மணற்பாங்கு *maṇaṟ-pāṅgu,* பெ.(n.) மணற்றறை பார்க்க; see *maṇaṟṟaṟai.*

*[மணல் + பாங்கு.]*

மணற்பாடு *maṇaṟ-pāḍu,* பெ.(n.) பயிரிடுவதற்குத் தகாத மணல் பாங்கான நிலம்; sandy soil unfit for cultivation.

*[மணல் + பாடு.]*

மணற்பாறை *maṇaṟ-pāṟai,* பெ.(n.) மென்மைத் தன்மையுடைய பாறை; sedimentry rock; rock formed by the seas and lakes depositing sand and mud in their shores or the bottom.

*[மணல் + பாறை.]*

மணற்புடம் *maṇaṟ-puḍam,* பெ.(n.) மணல் மறைவில் போடும் புடம்; sand bath.

*[மணல் + புடம்.]*

மணற்புரம் *maṇaṟ-puṟam,* பெ.(n.) மணலூர் புரம் பார்க்க (திருவாலவா.53:10); see *maṇalūr-puram.*

*[மணல் + புரம்.]*

மணற்பொருக்கு *maṇaṟ-porukku,* பெ.(n.) கருஞ்சுக்கான்; black lime stone (சா.அக.).

மணற்போக்கி *maṇaṟ-pōkki,* பெ.(n.) வாய்க்காலில் மணல் கழிவதற்காக ஏற்படுத்திய வழி (இ.வ.); sand escape.

*[மணல் + போக்கி.]*

மணற்றரம் *maṇaṟṟaram,* பெ.(n.) மணற்றரை பார்க்க (W.G.); see *maṇaṟṟarai.*

*[மணல் + தரம்.]*

மணற்றரை *maṇaṟṟarai,* பெ.(n.) மணல் பாங்கான நிலம் (வின்.); sandy soil; sandy tract of land.

*[மணல் + தரை.]*

மணற்றவளை *maṇaṟṟavaḷai,* பெ.(n.) தவளை வகை (வின்.); mud frog.

*[மணல் + தவளை.]*

மணற்றாரா *maṇaṟṟārā,* பெ.(n.) தாராவகை (வின்.); a species of wild duck or teal.

*[மணல் + தாரா.]*

மணற்றிருக்கை *maṇaṟṟirukkai,* பெ.(n.) திருக்கைமீன் வகை (வின்.); a kind of thorn-back fish.

*[மணல் + திருக்கை.]*

மணாட்டு *maṇāṭṭu,* பெ.(n.) மணமகளாகு நிலை; brideship. *"மணாட்டுப் புறஞ் செய்யுங் கொலோ" (திவ்.பெரியாழ்.3, 8, 4).*

*[மணம்→மணாட்டு.]*

மணாட்டுப்பெண் *maṇāṭṭu-p-peṇ,* பெ.(n.) மருமகள்; daughter-in-law. *"நந்த கோபருடைய மணாட்டுப் பெண்ணாய்" (திவ்.திருப்பா.18, வியா, பக்.168).*

*[மணாட்டு + பெண்.]*

மணாட்டுப் பெண் என்பது முறையே மாட்டுப்பெண் நாட்டுப் பெண் என மருவி, மருமகள் என்னும் பொருளில், தஞ்சை வட்டாரத்தில் வழங்கி வருகின்றது (த.தி.முன்.vi).

**மணாளன்** *maṇāḷaṉ,* பெ.(n.) 1. மணமகன்; bridegroom. *"நித்த மணாளர் நிரம்ப வழகியர்" (திருவாச.17, 3).* 2. கணவன்; husband. *"மானேர் நோக்கி மணாளா போற்றி" (திருவாச.4, 135).*

*[மணம் → மணாளன்.]*

**மணி** *maṇi,* பெ.(n.) 1. தொன்மணிகள் (பிங்.); gem, nine precious stones. 2. நீல மணி (திவா.); sapphire. *"முண்டகங் கதிர்மணி கழாஅலவும்" (சிறுபாண். 148).* 3. மாணிக்கம்; ruby. *"மணிவாய்க் கிள்ளை" (கல்லா.50, 23).* 4. முத்து (பிங்.); pearl. 5. சிந்தாமணி; a supernatural gem. *"உம்பர்தரு தேனுமணிக் கசிவாகி" (திருப்பு. விநாயகர் துதி.2).* 6. பளிங்கு; crystal. *"மணியுட் டிகழ்தரு நூல்போல்" (குறள், 1273).* 7. கண்மணி; apple of the eye. *"கருமணியிற் பாவாய்" (குறள், 1123).* 8. அக்கமணி (உருத்திராக்கம்) தாமரைமணி முதலியன; sacred bead, as rudrak or lotus seed. *"மாசிலாத மணிதிகழ் மேனி" (பெரியபு. திருக்கூட்ட.6).* 9. கூலமணி; grain of corn. *நெல்மணிக் குவியல் (உ.வ.).* 10. நஞ்சுநீக்குங் கல்; snake - stone. *"மணிமந்திர மாதியால்" (தாயு. பரிபூரண.9).* 11. நிலாக்காந்தக்கல்; moon stone. *"நீடுநீர் மணிநீரும்" (சீவக.2418).* 12. மணிமாலை; necklace of beads. *"நேரின மணியை நிரல்பட வைத்தாங்கு" (தொல்.பொருள்.480).* 13. அணிகலன்; jewel. 14. உருண்டை வடிவுள்ள பொருள்; small round thing, as bead. *"மணியிருதலையுஞ் சேர்த்தி" (சீவக.2977).* 15. வலையினோரத்திற் கட்டிய உருண்டைகள்; round sinkers attached, to a net. *"இனமணி விளிம்புறக் கோத்து" (திருவாலவா.22, 13).* 16. மீன் வலையின் முடிச்சு; knot in a fishing net. *"மணிவலை".* 17. நண்டு, தேள் முதலியவற்றின் கொடுக்குமணி (வின்.); knuckle or joint of lobster, scorpion, etc. 18. ஆட்டினதர் (வின்.); wattle on the throat of a sheep. 19. வீடு பெற்ற உயிர் (ஆன்மா); liberated soul. *"மணியினுக் கொளி" (சீவக.3100).* 20. அழகு (சூடா.); beauty. *"மணிக்காத்து" (கல்லா.4).* 21. கதிரவன் (பிங்.); sun. 22. ஒளி; light. *"செம்மணி மணிபழுத் தமைந்த வாய்" (கம்பரா.இலங்கைகே.12).* 23. நன்மை (பிங்.); goodness, auspiciousness. 24. சிறந்தது; that which is excellent. *மணியான செய்தி சொன்னான் (உ.வ.).* 25. கருமை (பிங்.); blackness. 26. கண்டை; bell; gong. *"மணிகிளர் முன்றிற் றென்னவன்" (புறநா.388, 13).* 27. கண்டையோசை; sound, as of bell, gong, etc. *"மணி கேட்கிறது" (உ.வ.).* 28. அறுபது நிமிடம் நேரம் (mod.); hour. 29. ஒன்பது; the number 9. *"மணிநாள்" (தைலவ.தைல.115).* 30. ஆண் குறியின் நுனி (இ.வ.); tip of the penis. 31. பெண்குறியின் ஓர் உறுப்பு (யாழ்.அக.); a part of the pudendum muliebre.

*[முல் (இளமைக் கருத்து வேர்) → முள் → முண் → முண. முணமுணத்தல் = வாய்க்குள் மெல்லப் பேசுதல். முண் → மண் → மணி (வே.க. 4:3).]*

**மணிக்கஞ்செடி** *maṇikkañ-ceḍi,* பெ.(n.) மணிச்சட்டி பார்க்க (யாழ்.அக.); see *maṇi-c-caṭṭi.*

*[மணிச்சட்டி → மணிக்கஞ்செடி.]*

**மணிக்கட்டி** *maṇi-k-kaṭṭi,* பெ.(n.) நெய் முதலிய உறைந்த பொருள்களின் மீது உண்டாகும் கட்டி (வின்.); bead - like formation on the surface of congealed substances, as ghee, lard.

*[மணி + கட்டி.]*

**மணிக்கட்டு** *maṇi-k-kaṭṭu,* பெ.(n.) கைத்தலத்திற்கும் முன்கைக்கும் இடைப்பட்ட பொருத்திடம்; wrist, carpus. *"மணிக் கட்டதனை வளைத்திட லென்ப" (பரத. பாவ.24).*

தெ., க. மணிகட்டு; ம. மணிக்கட்டு.

*[மணி + கட்டு.]*

**மணிக்கட்டுநாடி** *maṇi-k-kaṭṭu-nāḍi,* பெ. (n.) மணிக்கட்டில் பார்க்கும் நாடி; pulse selt at the wrist.

*[மணிக்கட்டு + நாடி.]*

**மணிக்கட்டெலும்பு** *maṇi-k-kaṭṭelumbu,* பெ. (n.) மணிக்கட்டிலுள்ள எலும்புகள்; wrist bones.

*[மணிக்கட்டு + எலும்பு.]*

**மணிக்கட்டை** *maṇi-k-kaṭṭai,* பெ.(n.) வலை மிதப்பதற்காக மேலே கட்டப்படும் மரக்கட்டைத் துண்டு; a piece of log tie up on a fishing-net.

*[மணி + கட்டை. மணி = சிறியது.]*

**மணிக்கடை** *maṇi-k-kaḍai,* பெ.(n.) மணிக் கட்டு; wrist.

*[மணிக்கட்டு→மணிக்கடை.]*

**மணிக்கடைநாடி** *maṇi-k-kaḍai-nāḍi,* பெ. (n.) மணிக்கட்டுநாடி பார்க்க; see *maṇi-k-kaṭṭu-nāḍi.*

*[மணிக்கடை + நாடி.]*

**மணிக்கடைநூல்** *maṇi-k-kaḍai-nūl,* பெ.(n.) மணிக்கட்டின் சுற்றளவைக் கொண்டு அவரவர் நோயின் தன்மையைக் கூறும் நூல்; a treatise describing the methods of diagnosing diseases by using a thread and measuring the wrist and fingers.

*[மணிக்கடை + நூல்.]*

**மணிக்கணக்கு** *maṇi-k-kaṇakku,* பெ.(n.) கடியாரப்படியுள்ள ஒழுங்கு (உ.வ.); mechanical regularity like clock-work.

*[மணி + கணக்கு.]*

**மணிக்கயிறு**[1] *maṇi-k-kayiṟu,* பெ.(n.) 1. கண்டாமணியை இழுத்தடிக்குங் கயிறு; bell - rope. 2. முடிச்சுள்ள சாட்டைக் கயிறு; whip-lash with knots. 3. பாசக்கயிறு; yama's noose. *"மணிக் கயிற்றினாற் றளைத்தனர்" (உபதேசகா. சிவ புண்ணிய. 272).* 4. முத்துவடம்; string of pearls. *"மணிக்கயிற் றூசன் மறலிய விடத்தும்" (பெருங். உஞ்சைக்.34, 116).* 5. முறுக்கு நன்கமைந்து மெல்லிதான கயிறு (இ.வ.); finely twisted cord.

*[மண் + கயிறு. மணி = சிறியது.]*

**மணிக்கயிறு**[2] *maṇi-k-kayiṟu,* பெ.(n.) நாயுருவி; a plant Indian burr (சா.அக.).

மறுவ. மணிக்கருது.

**மணிக்கழலை** *maṇi-k-kaḻalai,* பெ.(n.) ஒரு நோய்; an ulcer.

*[மணி + கழலை.]*

**மணிக்காக்கை** *maṇi-k-kākkai,* பெ.(n.) காக்கை வகை; a kind of crow.

*[மணி + காக்கை. மணி = சிறியது.]*

**மணிக்காடை** *maṇi-k-kāḍai,* பெ.(n.) சிறு காடை வகை; button-quail. *"மணிக்காடை முட்டை" (விறலிவிடு. 628).*

*[மணி + காடை. மணி = சிறியது.]*

**மணிக்காம்பு** *maṇi-k-kāmbu,* பெ.(n.) 1. மணி இழைத்துச் செய்த கால்; jewelled stand or leg. *"தானோர் மணிக்காம்பு போனிமிர்ந்து" (திவ்.இயற்.பெரியதி.).* 2. தக்காளி (சங்.அக.); tomato.

*[மணி + காம்பு.]*

**மணிக்காரி** *maṇi-k-kāri,* பெ.(n.) வெண் காரம்; borax (சா.அக.).

**மணிக்கால்** *maṇi-k-kāl,* பெ.(n.) வலையின் அடிப்பகுதி நீரில் அமிழ்வதற்காகக் கோக்கப்படும் சுட்ட மண்ணுருண்டை; round fired glay die at the bottom of fishing net.

*[மணி + கால். மணி கட்டும் கடைப்பகுதி.]*

**மணிக்காலறிஞர்** *maṇi-k-kāl-aṟiñar,* பெ.(n.) மணிகளின் குணமறிந்த வணிகர்; merchants skilled in the knowledge. *"மணிக்காலறிஞர் பெருங்குடி" (கல்லா. முருக.துதி).*

*[மணிக்கால் + அறிஞர்.]*

**மணிக்காளி** *maṇi-k-kāḷi,* பெ.(n.) மணித் தக்காளி (மூ.அ.); black nightshade.

*[மணித்தக்காளி→மணிக்காளி (கொ.வ.).]*

**மணிக்காற்பள்ளி** *maṇi-k-kāṟ-paḷḷi,* பெ.(n.) அரசர்க்குரிய சிவிகை வகை (சூடா.); a kind of palanquin for king.

*[மணிக்கால் + பள்ளி.]*

**மணிக்குடர்** *maṇi-k-kuḍar,* பெ.(n.) 1. சிறுகுடல், மணிக்குடல்; small intestines. 2. நஞ்சு; poison.

*[மணி + குடல்→ குடர். மணி = சிறியது.]*

**மணிக்குடல்** *maṇi-k-kuḍal,* பெ.(n.) சிறுகுடல் (உ.வ.); small intestines.

*[மணி + குடல். மணி = சிறியது.]*

**மணிக்குடற்நோய்** *maṇi-k-kuḍaṟ-nōy,* பெ.(n.) ஒருவகைக் குடல் நோய்; tuberculosis of the bowels or small intestines.

*[மணிக்குடல் + நோய்.]*

**மணிக்குடற்புழு** *maṇi-k-kuḍaṟ-puḻu,* பெ.(n.) சிறுகுடற் புழு; round worm occupying the upper part of the small intestines.

*[மணிக்குடல் + புழு.]*

**மணிக்கூடு** *maṇi-k-kūḍu,* பெ.(n.) 1. மணிதூங்கு மாடம் (கட்டட.நாமா.4); belfry-stand; bell-tower. 2. கடிகாரமமைந்த கோபுரம்; clock-tower, clock-house. 3. கடியாரக்கூடு (யாழ்ப்.); clock case. 4. கடிகாரம் (வின்.); clock, as containing a bell. 5. நாழிகை வட்டில் (யாழ்.அக.); clepsydra; hour-glass. 6. சாயப்பூடுவகை (இ.வ.); a plant used in dyeing.

*[மணி + கூடு.]*

**மணிக்கூண்டு** *maṇi-k-kūṇḍu,* பெ.(n.) மணிக்கூடு, 1, 2 பார்க்க (இ.வ.); see *maṇi-k-kūḍu.*

*[மணி + கூண்டு.]*

**மணிக்கை** *maṇi-k-kai,* பெ.(n.) மணிக்கட்டு பார்க்க; see *maṇi-k-kaṭṭu.*

*[மணிக்கட்டு→மணிக்கை.]*

**மணிக்கொச்சம்** *maṇi-k-koccam,* பெ.(n.) மணிக்கயிறு, 5 பார்க்க (இ.வ.); see *maṇi-k-kayiṟu.*

**மணிக்கொட்டை** *maṇi-k-koṭṭai,* பெ.(n.) சிற்றாமணக்குக் கொட்டை; castor seed.

*[மணி + கொட்டை.]*

**மணிக்கோரை** *maṇi-k-kōrai,* பெ.(n.) கோரை வகை (வின்.); a kind of sedge.

*[மணி + கோரை.]*

**மணிக்கோவை**[1] *maṇi-k-kōvai,* பெ.(n.) சிறு மணிக்கோவை பார்க்க; see *siṟu-maṇi-k-kōvai.*

*[மணி + கோவை.]*

**மணிக்கோவை**[2] *maṇi-k-kōvai,* பெ.(n.) மணிமாலை; necklace of gems. *"பொன்னாண் கோத்த நன்மணிக் கோவை" (மணிமே.3:133).*

*[மணி + கோவை.]*

**மணிகட்டு-தல்** *maṇi-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) கதிரில் தவசமணி உண்டாதல்; to form grains, in ears of corn.

*[மணி + கட்டு-,]*

**மணிகடம்** *maṇi-kaḍam,* பெ.(n.) வேலிப் பருத்தி (உத்தாமணி) (சங்.அக.); hedge - twiner.

**மணிகண்டசாவி** *maṇi-kaṇḍa-cāvi,* பெ.(n.) மணிபிடிச்சாவி பார்க்க; see *maṇi-piḍi-c-cāvi.*

*[மணிகண்ட + சாவி.]*

**மணிகண்டன்** *maṇi-kaṇḍaṉ,* பெ.(n.) (நீலகண்டத்தையுடைய) சிவன்; *Śivaṉ,* as blue-necked. *"மணிகண்ட னென்னும் பேர் மற்றிதனால்" (பூவண.உலா, 50).*

*[மணி + கண்டன்.]*

**மணிகம்** *maṇigam,* பெ.(n.) நீர்க்குடம் (யாழ். அக.); water-pot.

**மணிகன்றிகை** *maṇi-kaṉṟigai,* பெ.(n.) மணிகர்ணிகை பார்க்க; see *maṇi-karṇigai. "காசியிற் சிறந்ததொன் மணிக்கன்றிகை" (கந்தபு.தக்கன்.சிவபூ.2).*

**மணிகன்னிகை** *maṇi-kaṉṉigai,* பெ.(n.) மணிகர்ணிகை பார்க்க; see *maṇi-karṇigai. "மணிகன்னிகையாடி" (காசிக. தேவ.அக.2).*

**மணிகாசம்** *maṇi-kācam,* பெ.(n.) கண்ணோய் வகை (யாழ்.அக.); an eye-disease.

**மணிகாரன்** *maṇi-kāraṉ,* பெ.(n.) மணி வேலை செய்பவன் (சங்.அக.); worker in precious stones.

**மணிகாரம்** *maṇi-kāram,* பெ.(n.) வெண் காரம் (மூ.அ.); borax.

**மணிகானனம்** *maṇi-kāṉaṉam,* பெ.(n.) கழுத்து (சிந்தா.நி.41); neck.

மணிகிலுக்கு-தல் *maṇi-kilukku-,* 5 செ.கு.வி. (v.i.) கைம்மணி யடித்தல் (யாழ்ப்.); to ring a hand bell.

*[மணி + கிலுக்கு.]*

மணிகுயிற்றுநர் *maṇi-kuyiṟṟunar,* பெ.(n.) முத்துக்கோப்பார் (பிங்.); makers or pearl garlands.

*[மணி + குயிற்றுநர்.]*

மணிகூடம் *maṇi-kūḍam,* பெ.(n.) இந்திரனின் விளையாட்டுச் செய்குன்று (சங்.அக.); an artificial hillock where Indra sports.

*[மணி + கூடம்.]*

மணிச்சட்டம் *maṇi-c-caṭṭam,* பெ.(n.) குழந்தைகளுக்கு எண் அறிவிக்க உதவும் மணிகள் கோத்த சட்டம்; a wooden trame with rows of coloured beads, for teaching arithmetic to children, abacus.

*[மணி + சட்டம்.]*



மணிச்சட்டி *maṇi-c-caṭṭi,* பெ.(n.) விளிம்பில் மணிவடிவமைந்த மண்சட்டி (யாழ்ப்.); earthern pot with a rim like a row of beads.

*[மணி + சட்டி.]*

மணிச்சம்பா *maṇi-c-cambā,* பெ.(n.) நீரிழிவைப் போக்கும் ஒருவகைச் சம்பா நெல்; a kind of paddy rice curing diabetics.

*[மணி + சம்பா.]*

மணிச்சிகை *maṇi-c-cigai,* பெ.(n.) குன்றி; crab's-eye. *"செங்கொடு வேரி தேமா மணிச்சிகை" (குறிஞ்சிப்.64).*

*[மணி + சிகை.]*

மணிச்சித்திரம் *maṇi-c-cittiram,* பெ.(n.) பொற்றலைக் கரிப்பான்; a prostate plant-eclipse plant bearing yellow flowers (சா.அக.).

மணிச்சுறா *maṇi-c-cuṟā,* பெ.(n.) சாம்பனிறமுள்ளதும் 12 அடி வளர்வதுமான சுறாமீன் வகை; black shark, grey, attaining 12 ft. in length.

*[மணி + சுறா.]*

மணிச்செப்பு *maṇi-c-ceppu,* பெ.(n.) மணியிழைத்த செப்பு; small casket set with precious stones. *"மாலைப் பெரு மணிச்செப்பும்" (சீவக.2474).*

*[மணி + செப்பு.]*

மணிச்சோதி *maṇi-c-cōdi,* பெ.(n.) வாயு தேவனது வில் (சங்.அக.); the bow of the wind-god.

மணிசகம் *maṇi-cagam,* பெ.(n.) மணீசகம் பார்க்க (யாழ்.அக.); see *maṇīcagam.*

மணிசரம் *maṇi-caram,* பெ.(n.) மணிக்கோவை பார்க்க (யாழ்.அக.); see *maṇi-k-kōvai.*

*[மணி + சரம். சரம் = கோவை.]*

**மணிசேகரம்** *maṇi-cēgaram,* பெ.(n.) காலனுடைய அந்தப்புரம் (சங்.அக.); yama's harem.

**மணித்தக்காளி** *maṇi-t-takkāḷi,* பெ.(n.) கரும்பச்சைநிற இலைகளையும் பழுத்த நிலையில் கருநிறமாக இருக்கும் சிறிய மணி போன்ற காய்களையுமுடைய ஒருவகைச் செடி; black night shade.

*[மணி + தக்காளி.]*

**மணித்தீவம்** *maṇi-t-tīvam,* பெ.(n.) பெண்கள் மாத்திரம் வாழும் ஒரு தீவு (பெருங். உஞ்சைக்.42, 181, குறிப்புரை); an island inhabited by women alone.

*[மணி + தீவம்.]*

**மணித்துத்தி** *maṇi-t-tutti,* பெ.(n.) சிறுதுத்தி (வின்.); five-winged capsule rose-mallow.

*[மணி + துத்தி. மணி = சிறியது.]*

**மணித்தைலம்** *maṇi-t-tailam,* பெ.(n.) ஆமணக்கு நெய்; oil of castor seed.

*[மணி + Skt.தைலம். மணி = ஆமணக்கு விதை. தில் = எள். திலம்–தைலம்–நெய்மம்.]*

**மணிதம்** *maṇitam,* பெ.(n.) மணியினோசை (யாழ்.அக.); sound of the bell.

*[மணி→மணிதம்.]*

**மணிதனு** *maṇi-taṉu,* பெ.(n.) வானவில் (யாழ்.அக.); rainbow.

*[மணி + தனு.]*

**மணிதாட்பத்திரி** *maṇi-dāṭ-pattiri,* பெ.(n.) சேலை வகை (இ.வ.); a kind of saree.

**மணிதிரள்(ளு)–தல்** *maṇi-tiraḷ-,* 16 செ. கு.வி.(v.i.) நெற்கதிரில் தவசமணி திரண்டு உருவடைதல்; to mature, as grain in corn-ears.

*[மணி + திரள்.]*

**மணிதீபம்** *maṇi-tībam,* பெ.(n.) மணித்தீவம் பார்க்க (சங்.அக.); see *maṇi-t-tīvam.*

*[மணி + தீபம்.]*

**மணிதுருவிடு–தல்** *maṇi-turuviḍu-,* 20 செ.கு.வி.(v.i.) மணிகளைச் சுத்தி செய்தல் (யாழ்.அக.); to cut and polish gem.

**மணிந்தம்** *maṇindam,* பெ.(n.) மணிபந்தம் பார்க்க (யாழ்.அக.); see *maṇi-bandam.*

*[மணிபந்தம்→மணிந்தம்.]*

**மணிநா** *maṇi-nā,* பெ.(n.) மணியின் நாக்கு; tongue of a bell. *"ஆடுங் கடைமணி நாவசை யாமல்" (தமிழ்நா.128).*

*[மணி + நா. நா = நாக்கு.]*

**மணிநாக்கு** *maṇi-nākku,* பெ.(n.) மணிநா பார்க்க; see *maṇi-nā.*

*[மணி + நாக்கு.]*

**மணிநிறம்** *maṇi-niṟam,* பெ.(n.) கருநீல நிறம்; dark blue colour, as of sapphire. *"மணிநிறம் கொண்ட மாமலை வெற்பில்" (ஐங்குறு.224).*

*[மணி + நிறம்.]*

**மணிநிறவண்ணன்** *maṇi-niṟa-vaṇṇaṉ,* பெ.(n.) மணிவண்ணன் பார்க்க; see *maṇi-vaṇṇaṉ.*

*[மணிநிறம் + வண்ணன்.]*

மணிநீர் *maṇi-nīr*, பெ.(n.) 1. மணிபோலும் நிறத்தினையுடைய நீர்; dark blue water, as in a tank. *"மணிநீரு மண்ணும் மலையும்" (குறள், 642). "துகில்சேர் மலர்போன் மணிநீர் நிறைந்தன்று புனலென மூதூர் மலிந்தன் றவருரை" (பரிபா.12, 93-4).* 2. மணியிலுள்ள நீர்; water of a gem.

*[மணி + நீர்.]*

மணிநீலகாசம் *maṇi-nīla-kāsam*, பெ.(n.) கண்ணோய் வகை; cataract (சா.அக.).

மறுவ. நீலகாசம்

மணிநெய் *maṇi-ney*, பெ.(n.) சிறு முத்துக் கொட்டை எண்ணெய்; oil pressed from the small castor seed.

*[மணி + நெய்.]*

மணிப்பவளம் *maṇi-p-pavaḷam*, பெ.(n.) தமிழும் வடமொழியும் விரவிய உரைநடை; a kind of style in which words of two languages as Tamil and Sanskrit are mixed.

மறுவ. மணிப்பிரவாளம்

*[மணி + பவளம்.]*

த. பவளம் > வ. பிரவாளம்.

ஒ.நோ. த. மதங்கம் > வ. மிருதங்கம்.

மணிப்பாரா *maṇi-p-pārā*, பெ.(n.) அரண்மனை வாயிலில் நேரத்தை அறிவிக்க அடிக்கும் மணிகட்டிய காவலிடம்; palace gate where the hours are struck. 2. அரண்மனை வாயிலில் மணியடித்துக் காவல்புரியும் வேலை; office of striking the hour-gong at a palace - gate.

*[மணி + பாரா (உருது).]*

மணிப்பாரி *maṇi-p-pāri*, பெ.(n.) 1. இராக் காவலாளரின் பாட்டு வகை; a kind of night -watchman's song. 2. மணியடித்துக் கொண்டு சுற்றும் இரவுக்காவலர்; patrol by night-watchman, sounding gongs.

*[மணி + பாரி.]*

மணிப்பால் *maṇi-p-pāl*, பெ.(n.) கடைக்கண் சிரங்கு; ulcer at the angle of the eye (சா.அக.).

மணிப்பிடிப்பு *maṇi-p-piḍippu*, பெ.(n.) நெற் கதிரில் மணி தோன்றுகை; formation of grains in the corn ears.

*[மணி + பிடிப்பு.]*

மணிப்பிரவாளம் *maṇi-p-piravāḷam*, பெ.(n.) மணிப்பவளம் பார்க்க; see *maṇi-p-pavaḷam.*

*[மணி + பிரவாளம்.]*

*த. பவளம்→ப்ரவளம்→ வ. பிரவாளம்.*

மணிப்புங்கம் *maṇi-p-puṅgam*, பெ.(n.) 1. பூவந்தி மரவகை (M.M.844); rusty soap-nut. 2. நெய்க்கொட்டான் (மலை.); soap-nut.

*[மணி + புங்கம்.]*

மணிப்புங்கு *maṇi-p-puṅgu*, பெ.(n.) மணிப் புங்கம் பார்க்க (பாலவா.); see *maṇi-p-puṅgam.*

*[மணிப்புங்கம் → மணிப்புங்கு.]*

மணிப்புறா *maṇi-p-puṟā*, பெ.(n.) புறாவகை (பதார்த்த.906); ring-dove, turtle-dove, spotted dove.

*[மணி + புறா.]*

**மணிப்புன்கம்** *maṇi-p-puṉgam,* பெ.(n.) மணிப்புங்கம் (இ.வ.); see *maṇi-p-puṅgam.*

*[மணிபுங்கம்→மணிப்புன்கம்.]*

**மணிப்புன்கு** *maṇi-p-puṉgu,* பெ.(n.) மணிப் புங்கம் (மலை.) பார்க்க; see *maṇi-p-puṅgam.*

*[மணிப்புங்கம்→மணிப்புன்கு.]*

**மணிப்பொச்சம்** *maṇi-p-poccam,* பெ.(n.) மணிக்கயிறு, 5 பார்க்க (இ.வ.); see *maṇi-k-kayiṟu.*

*[மணி + பொச்சம்.]*

**மணிபத்மம்** *maṇi-patmam,* பெ.(n.) புத்த பாதம் (மணிமே.3:65–6, அரும்.); the buddha's foot-print.

*[மணி + பத்மம்]*

**மணிபந்தம்** *maṇi-pandam,* பெ.(n.) மணிக் கட்டு பார்க்க; see *maṇi-k-kaṭṭu.* *"இரண்டு முழங்கையி னிரண்டு மணிபந்தத்து" (சைவச.பொது.192).*

*[மணி + பந்தம்.]*

**மணிபந்து** *maṇi-pandu,* பெ.(n.) மணிபந்தம் பார்க்க; see *maṇi-pandam.* *"கைகளும் மணிபந்தசைத்துற" (பெரியபு. திருநாவுக். 358).*

*[மணி + பந்து. பந்து = பந்தம்.]*

**மணிபர்வதம்** *maṇi-parvadam,* பெ.(n.) மணிகூடம் பார்க்க; see *maṇi-kūḍam.*

*[மணி + பர்வதம்.]*

**மணிபல்லவம்** *maṇi-pallavam,* பெ.(n.) காவிரிப்பூம்பட்டினத்திற்குத் தென்கிழக்கே 30 யோசனைத் தொலைவிலுள்ளதும் புத்த பாத அடிச்சுவடுடையதுமான ஒரு தீவு; an island, 30 *yōjanas* south-east of *Kāviri-p-pūmpaṭṭiṉam,* said to contain a foot-print of the buddha on a pedestal. *"மணிமேகலையை மணி பல்லவத்துய்த்து" (மணிமே.பதி.44).*

*[மணி + பல்லவம்.]*

மணிமேகலை பாவியத்தில் புத்த அடிச்சுவடு அமைந்துள்ளதாகக் கூறப்பட்ட இடம் இதுவேயெனக் கருதப்படுகிறது. தற்போது நயினாத்தீவு என்று அழைக்கப்படுகிறது.

புகாரிலிருந்து தெற்கே 30 யோசனை தூரத்தில் மணிபல்லவம் இருந்ததாக மணிமேகலை தெரிவிக்கின்றது. யோசனை என்பது 16 கல். 5 படைசால் (பர்லாங்) 440 அடி நீளம் ஆகும். இத் தொலைவு பொருத்தமாக இல்லை. ஒரு கூப்பிடுதூரம் 1 கல் 1 படைசால் 220 அடி நீளம். 30 கூப்பிடுதூரம் என்று இருந்திருந்தால் சரியாக இருக்கும்.

**மணிபிடி¹–த்தல்** *maṇi-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) மணிகட்டைப் பிடித்து நாடி பார்த்தல்; to feel the pulse at the wrist.

*[மணி + பிடி–.]*

**மணிபிடி²–த்தல்** *maṇi-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) மணிகட்டு–தல் பார்க்க (கொ.வ.); see *maṇi-kaṭṭu-.*

*[மணி + பிடி–.]*

**மணிபிடி³–த்தல்** *maṇi-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) கதிரில் தவசமணி பிடித்தல்; to format grains in the corn ears.

*[மணி + பிடி–. மணி = தவசமணி.]*

**மணிபிடிச்சாவி** *mani-pidi-c-cāvi,* பெ.(n.) முற்றாது கெட்டபயிர்; blighted ear of corn with few grains.

*[மணிபிடி + சாவி.]*

**மணிபிந்துமாலை** *mani-pindu-mālai,* பெ. (n.) கை, முளி, நெற்றி, மார்பு, தொடை இவ்விடங்களில் அழுந்தும்படி வைக்கும் பற்குறி; impressions of teeth made in the forehead, chest, thigh and wrist (சா.அக.).

**மணிபீசம்** *mani-pīšam,* பெ.(n.) மாதுளை; fruit pomegranate (சா.அக.).

**மணிபுட்பகம்** *mani-putpagam,* பெ.(n.) சகதேவன் சங்கு (பகவற்.1, 11); the conch of *Šahadēva.*

**மணிபூமி** *mani-pūmi,* பெ.(n.) மணி விளையும் நிலம்; ruby mine.

*[மணி + பூமி.]*

**மணிமகுடம்** *mani-magudam,* பெ.(n.) 1. மணிமுடி; crown set with precious stones, worn by great monarchs. 2. ஏட்டுச் சுவடியைக் கட்டுங் கயிற்றின் தலைமுடிச்சு (யாழ்.அக.); ornamented button of an ola bock.

*[மணி + மகுடம்.]*

**மணிமண்டபம்** *mani-mandabam,* பெ.(n.) 1. மணிக்கூடு, 1, 2 பார்க்க; see *mani-k-kūdu.* 2. மணியம்பலம் பார்க்க; see *maniyambalam.*

*[மணி + மண்டபம்.]*

**மணிமந்தம்** *manimandam,* பெ.(n.) இந்துப்பு (சங்.அக.); salt petre.

**மணிமந்திரௌசதம்** *mani-mantirau sadam,* பெ.(n.) நஞ்சு முதலியன நீக்கற்குரிய மணி மந்திரம் மருந்து பின்னும் மூவகை நீக்குகள்; gem, mantra and medicine, being three remedies for poison, etc.

**மணிமலர்** *mani-malar,* பெ.(n.) குவளை; blue nelumbo. *"மணிமலர்க் கோலை விடுகண்" (சீவக.1613).*

*[மணி + மலர்.]*

**மணிமலை** *mani-malai,* பெ.(n.) ஏழ்குன்ற நாட்டு மகேந்திர மலைக்குத் தெற்கே பெருவள நாட்டில் இருந்த பண்டைய ஊர்; an old place of Peruvalanadu, situated south of Mahendramalai of *Elkunra nādu.*

*[மணி + மலை.]*

இது மேரு மலையின் 49 கொடுமுடிகளில் ஒன்றாகக் கருதப்படுகிறது. இங்கு "மணிமலைத் தமிழ்ச் சங்கம்" என்ற பெயரில் தமிழ்ச் சங்கம் ஒன்று இருந்ததாகத் தெரிகிறது.

**மணிமாடம்** *mani-mādam,* பெ.(n.) 1. சிறந்த மாளிகை; beautiful palace. *"அம்பொனெடு மணிமாட வயோத்தி யெய்தி" (திவ். பெருமாள்.10, 8).* 2. திருநறையூர்த் திருமால் கோயில் (திவ்.பெரியதி.6, 6); a *Visnu* shrine at *Tiru-naraiyūr.*

*[மணி + மாடம்.]*

**மணிமாலை** *mani-mālai,* பெ.(n.) 1. முத்து வடம்; garland of pearls. 2. 96 சிற்றிலக்கியங்களுள் ஒன்றான வெண்பா இருபதும் கலித்துறை நாற்பதும் விரவச் செய்யும் சிற்றிலக்கியம் (சது.); a poem of 20

*venpā* and 40 *kali-t-turai*, one of 96 pirapantam, q.v. 3. திருமகள் (யாழ்.அக.); the goddess of wealth. 4. திருவாசியாகிய பிரபை (சங்.அக.); ornamental arch over the head of an idol. 5. காதலியின் உடலில் காதலனாற் செய்யப்பட்ட பற்குறி (யாழ்.அக.); (Erot.) a cirular mark left by the teeth of a lover on the body of his beloved, during sexual union.

*[மணி + மாலை.]*

**மணிமாளிகை** *mani-māligai*, பெ.(n.) மணி மண்டபம் பார்க்க; see *mani-mandabam.*

*[மணி + மாளிகை.]*

**மணிமான்** *mani-mān*, பெ.(n.) கதிரவன், சூரியன்; the sun.

**மணிமிடற்றன்** *mani-midarran*, பெ.(n.) துரிசு; blue vitriol.

**மணிமிடைப்பவளம்** *mani-midai-p-pavaļam*, பெ.(n.) 1. மணியும் பவளமுங் கலந்த மணி; necklace of gems and coral beads strung alternately. 2. அகநானூற்றின் இரண்டாம் பிரிவு; the second section of the anthology *akanānūru*. *"பாட்டு நூற்றென்பதும் மணிமிடைபவளம் எனப்படும்" (அகநா. பாயி.உரை, பக்.406).*

மணியும் பவளமும் விரவியுள்ள மாலையைப் போல ஒளி நயமும் பொருளமைதியும் ஒருங்கேயமையப் பெற்ற 180 அகப்பாடல்கள் கொண்ட இரண்டாம் பகுதி.

**மணிமுசுட்டை** *mani-mušuttai*, பெ.(n.) பேய்முகட்டை பார்க்க (சங்.அக.); see *pēy-mugattai.*

**மணிமுடி**[1] *mani-mudi*, பெ.(n.) விலை யுயர்ந்த கற்கள் பதிக்கப்பட்ட தலையணி; crown set with precious stones, worn by great monarches.

*[மணி + முடி.]*

**மணிமுடி**[2] *mani-mudi*, பெ.(n.) இறுகித் திரண்ட முடிச்சு; hard knot. *"மணிமுடி யேறின" (சிலப்.27:65).*

*[மணி + முடி.]*

**மணிமுடிச்சு** *mani-mudiccu*, பெ.(n.) மணி முடி, 2 பார்க்க; see *mani-mudi.*

*[மணி + முடிச்சு.]*

**மணிமுடிச்சோழன்** *manimudi-c-cōlan*, பெ.(n.) கி.பி.7-ம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் வாழ்ந்த சோழ மன்னன்; a *Cōla* king ruled over at middle period of the seventh century.

*[மணிமுடி + சோழன்.]*

இவனது மகள் மங்கையர்க்கரசி. பாண்டிய மன்னன் அரிகேசரி மாறவர்மன் மங்கையர்க்கரசியை மணந்தான் (பிற்காலச் சோழ வரலாறு – சதாசிவப் பண்டாரத்தார், பக்.8).

**மணிமேகலாதெய்வம்** *mani-mēgalā-deyvam*, பெ.(n.) மணிமேகலை காவியத்தில் மணிமேகலையை ஆற்றுப்படுத்தும் இறை மகள்; goddess, who guided *Manimēgalai* in the epic *Manimēgalai* (சி.பெ.அக.).

*[மணிமேகலை + தெய்வம்.]*

**மணிமேகலை**[1] *mani-mēgalai*, பெ.(n.) 1. இந்திரனேவலால் தீவங்கள் சிலவற்றைக் காவல் புரிந்துவந்த தேவதை (சிலப்.15:33);

tutelary goddess gurading certain islands by Indra's command. 2. கோவலனுக்கு மாதவிக்கும் பிறந்த மகள்; the daughter of *Kōvalaṉ*, the hero of the *Cilappatikāram*, by *Mādavi*. 3. கூலவாணிகன் சாத்தனார் இயற்றியதும் ஐம்பெரும் பாவியத்து ளொன்றாகியதும் மணிமேகலையின் துறவைக் கூறுவதுமான புத்த நூல்; a buddhistic epic poem on the renunciation of *Maṇimēgalai*, by *Kūla-vāṇigaṉ-cāttaṉār*, one of *Imperuṅ-kāviyam*. 4. இடையில் அணியும் அணிகலன் வகை; woman's jewelled girdle. *"வாரார வீக்கி மணிமேகலை திருத்தி" (திவ்.இயற். சிறிய.ம.10).*

**மணிமேகலைதுறவு** *maṇi-mēgalai-tuṟavu*, பெ.(n.) மணிமேகலை, 3 பார்க்க (மணிமே. பதிகம்.97); see *maṇi-mēgalai*.

*[மணிமேகலை + துறவு.]*

**மணிமேடை** *maṇi-mēḍai*, பெ.(n.) மணிக்கூடு, 1, 2 பார்க்க (இ.வ.); see *maṇi-k-kūḍu*.

*[மணி + மேடை.]*

**மணியக்காரன்** *maṇiya-k-kāraṉ*, பெ.(n.) சிற்றூர், கோயில் முதலியவற்றில் மேல் கண்காணிப்பு செய்வோன்; headman of a village; superintendent of a temple, etc. (R.F.). *"துடிமணியக்காரர்" (விறலிவிடு. 1055).*

தெ. மணியக்காடு; க. மணியக்கார; ம. மணியக்காரன்.

*[மணியம்→மணியக்காரன்.]*

**மணியங்காக்கை** *maṇiyaṅ-kākkai*, பெ.(n.) சாம்பல் நிறமுள்ள காக்கை வகை (வின்.); royston crow, ashy in colour.

*[மணி + காக்கை.]*

**மணியச்சட்டம்** *maṇiya-c-caṭṭam*, பெ.(n.) தலைமை; உயர்நிலை; official power. *"அவர் மணியச் சட்டமெல்லா முன்னுடைய சட்டமே" (பணவிடு.175).*

*[மணியம் + சட்டம்.]*

**மணியம்** *maṇiyam*, பெ.(n.) ஊர், கோயில், மடம் முதலியவற்றை மேற்பார்க்கும் வேலை; office of the village headman, employed as a revenue subordinate of the government for which he holds a *Māṇiyam* or receives payment; superintendence of temples, mutts, palace, custom-houses, etc. *"துர்ச்சனர் தமக்கேற்ற மணியம்" (அறப்.சத.49). "தேளுக்கு மணியம் கொடுத்தால் இரவிற்கு இரவு கொட்டும்" (பழ.).*

**மணியம்பலம்** *maṇiyambalam*, பெ.(n.) அவை மண்டபம்; hall. *"மறையவர் தம் மணியம்பலத் துளினிதிருந்து" (T.A.S.i, 4).*

*[மணி + அம்பலம்.]*

**மணியரங்கம்** *maṇi-y-araṅgam*, பெ.(n.) நிலா முற்றம்; terrace. *"அணிமணியரங்கம்.... மாள்வோ னேறி" (சிலப்.28:65).*

*[மணி + அரங்கம்.]*

**மணியாசப்பலகை** *maṇiyāśa-p-palagai*, பெ.(n.) மணியாசுப்பலகை பார்க்க (கொ.வ.); see *maṇiyāśu-p-palagai*.

*[மணியாசு + பலகை.]*

மணியாசம் *maṇi-y-āšam,* பெ.(n.) 1. மணியாசுப் பலகை பார்க்க; see *maṇiyāšu-p-palagai.* 2. சுவர் முதலியவற்றுக்கு இடும் மெருகு; polish, as given to laster on walls.

*[மணியாசுப்பலகை→மணியாசம்.]*

மணியாசமிடு-தல் *maṇiyācam-iḍu-,* 4 செ.குன்றாவி.(v.t.) சுவர் முதலியவற்றை மெருகிடுதல் (கொ.வ.); to polish plaster with a polishing board.

*[மணியாசம் + இடு-.]*

மணியாசனம் *maṇi-y-āšaṇam,* பெ.(n.) மணியாசுப்பலகை பார்க்க (ஈடு, 5, 1, 5 ஜீ); see *maṇiyāšu-p-palagai.*

*[மணி + Skt.ஆசனம் > த. இருக்கை.]*

மணியாசி *maṇiyāši,* பெ.(n.) 1. மரவகை (யாழ்.அக.); a tree. 2. மணியாசுப்பலகை பார்க்க (வின்.); see *maṇiyācu-p-palagai.*

*[மணியாசுப்பலகை→மணியாசி.]*

மணியாசிக்கட்டை *maṇiyāci-k-kaṭṭai,* பெ.(n.) மணியாசுப்பலகை பார்க்க (யாழ்.அக.); see *maṇiyācu-p-palagai.*

*[மணியாசுப்பலகை→மணியாசுக்கட்டை.]*

மணியாசு *maṇiyāšu,* பெ.(n.) மணியாசுப் பலகை பார்க்க (யாழ்.அக.); see *maṇiyācu-p-palagai.*

*[மணியாசுப்பலகை→மணியாசு.]*

மணியாசுக்கல் *maṇiyāšu-k-kal,* பெ.(n.) சுண்ணாம்பு தீற்றிய சுவரில் மெருகுண்டாம்படி தேய்க்குங் கல் (இ.வ.); stone used for polishing the plaster on walls.

*[மணியாசு + கல்.]*

மணியாசுப்பலகை *maṇiyāšu-p-palagai,* பெ.(n.) சுவர்த்தலத்திற்கு மெருகிடும் பலகை (கொ.வ.); polishing board.

*[மணியாசு + பலகை.]*



மணியாட்டங்கொடி *maṇi-yāṭṭaṅ-koḍi,* பெ.(n.) ஒருவகைக் கொடி; a kind of climber (சா.அக.).

மணியாடி *maṇi-y-āḍi,* பெ.(n.) குலகுரு (G.Tp.D.1, 91); family priest.

மணியாத்தி *maṇi-y-ātti,* பெ.(n.) காட்டாத்தி; a small tree.

மணியாமணக்கு[1] *maṇi-y-āmaṇakku,* பெ.(n.) பறங்கியாமணக்கு; chine castor plant (சா.அக.).

மணியாமணக்கு[2] *maṇi-y-āmaṇakku,* பெ.(n.) பப்பாளி (மலை.); papaw.

மணியிலையான் *maṇi-y-ilaiyāṉ,* பெ.(n.) ஈவகை (யாழ்ப்.); a kind of fly.

மணியீரல் *maṇi-y-īral,* பெ.(n.) குடலின் ஒரு பகுதி (வின்.); part of the intestines.

*[மணி + ஈரல்.]*

மணியுப்பு *maṇi-y-uppu,* பெ.(n.) கறியுப்பு (சங்.அக.); common salt.

*[மணி + உப்பு.]*

மணியுயிர் *maṇi-y-uyir,* பெ.(n.) முத்தி பெற்ற ஆன்மா; liberated salt. *"மணியுயிர் பொன்னுயிர்" (சீவக.3111).*

*[மணி + உயிர்.]*

மணியூது-தல் *maṇi-y-ūdu-,* 5 செ.கு.வி. (v.i.) தீயில் ஊதிப்பொன்மணி திரட்டுதல் (யாழ்.அக.); to make gold beads by blowing in a chafing dish.

*[மணி + ஊது-,]*

மணியெண்ணி[1] *maṇi-y-eṇṇi,* பெ.(n.) நென் மணி எண்ணுபவன் (வின்.); person, as counting grains.

*[மணி + எண்ணி.]*

மணியெண்ணி[2] *maṇi-y-eṇṇi,* பெ.(n.) கருமி, கஞ்சன்; stingy person.

மணியெலும்பு *maṇi-y-elumbu,* பெ.(n.) முதுகின் முள்ளந்தண்டு; vertebral.

*[மணி + எலும்பு.]*

மணிரங்கு *maṇi-raṅgu,* பெ.(n.) ஒரு வகைப் பண்; a medlody - type.

மணிராக்கம் *maṇirākkam,* பெ.(n.) சாதிலிங்கம் (சங்.அக.); vermilion.

மணிலிங்கம் *maṇiliṅgam,* பெ.(n.) அறிவன் (சங்.அக.); the planet mercury.

மணிவட்டம் *maṇi-vaṭṭam,* பெ.(n.) 1. வீரக் கழல் (மலை.); warrior's anklering. 2. சிலம்பு (வின்.); tinkling anklet. 3. சேகண்டி (வின்.); gong.

*[மணி + வட்டம்.]*

மணிவடம்[1] *maṇi-vaḍam,* பெ.(n.) மணிகளால் ஆன மாலை; one string of round beads. *"திரள் மணி வடம் ஒன்று" (தெ.க.தொ.2, பக்.413).*

*[மணி + வடம்.]*

மணிவடம்[2] *maṇi-vaḍam,* பெ.(n.) 1. மணிச்சரம்; string of gems. 2. அக்க மணி முதலிய மணிகளாலான மாலை; of *rudrāksa* or other beads. 3. முத்து மாலை; string of pearls. 4. பாதசாலம்; anklet. 5. அணிவடம், வீரக்கழல்; warrior's ankle-ring.

*[மணி +வடம்.]*

மணிவண்ணன் *maṇi-vaṇṇaṉ,* பெ.(n.) திருமால்; *Tirumāl,* as sapphire - coloured. *"திண்டோன் மணிவண்ணா" (திவ்.திருப்பல்.1).*

*[மணி + வண்ணன்.]*

மணிவலை *maṇi-valai,* பெ.(n.) மீன் பிடிக்கும் ஒருவகை வலை; casting - net, as having bead.

*[மணி + வலை.]*

மணிவளர்த்தி *maṇi-vaḷartti,* பெ.(n.) கண்ணோய் வகை; an eye disease (சா.அக.). *'கடைக்கண்ணில் பலதரமும் மணிப்பால் எழும்புவதும் உடைவதுமா யிருக்கும் கண்ணோய்'.*

மணிவாசல் *maṇi-vāšal,* பெ.(n.) ஒப்பனை மிகுந்த தலைவாயில்; jewelled or decorated gate, as of a palace.

*[மணி + வாசல்.]*

மணிவாளம் *maṇi-vāḷam,* பெ.(n.) உருக்கு; steel (சா.அக.).

மணிவித்து *maṇi-vittu,* பெ.(n.) சிற்றாமணக்குக் கொட்டை; small castor seed.

*[மணி + வித்து.]*

மணிவித்தையுள்ளோன் *maṇi-vittai-y-uḷḷōṉ,* பெ.(n.) தூதுவளை; a thorny climber the leaves one used in curry (சா.அக.).

மணிவினைஞர் *maṇi-viṉaiñar,* பெ.(n.) 1. மணி வேலைக்காரர்; those who work in precious stones. *"இலங்குமணி வினைஞ ரிரீஇய மறுகும்" (மணிமே.28:45).* 2. முத்துக் கோப்பார் (சூடா.); those who string pearls.

*[மணி + வினைஞர்.]*

மணிவீசம் *maṇi-vīšam,* பெ.(n.) மாதுளை (மலை.); pomegranate.

மணிவேம்பு *maṇi-vēmbu,* பெ.(n.) ஒரு வகை வேம்பு; a kind of margose tree.

*[மணி + வேம்பு.]*

மணிவேர் *maṇi-vēr,* பெ.(n.) மணியைப் போன்ற திரட்சியை ஆங்காங்குடைய வேர்; a root bearing bead like elevation.

*[மணி + வேர்.]*

மணீசகம் *maṇī-šagam,* பெ.(n.) நிலவுக்கல்; moonstone.

மணு *maṇu,* பெ.(n.) எட்டு வீசை கொண்ட மணங்கு என்னும் நிறுத்தலளவு (கொ.வ.); maund, a standard weight = 8 viss = 40 seers = 25 lbs., varying in different localities.

*[மணங்கு → மணுங்கு → மணு.]*

மணுகுப்பூ *māṇugu-p-pū,* பெ.(n.) பயிற்றமா முதலியன சேர்த்துச் செய்த பணியார வகை (இ.வ.); a confection made of pulse, rice.

மணை[1] *maṇai,* பெ.(n.) 1. அமர்வுப் பலகை; low, wooden seat. *"நூலே கரக முக்கோல் மணையே" (தொல்.பொருள்.626).* 2. மண மேடை முதலியன (பிங்.); low, earthern dais. 3. பலகை; board, plank. *"கடலம் பவளம் மணையில்" (சீவக.922).* 4. யானை மேற்றவிசு (பிங்.); howdah. 5. வெட்டுக்கருவின் அடிக்கட்டை (ஐங்குறு.); wooden base for cutting instruments. 6. பாதம் வைக்கும் படி (யாழ்.அக.); foot - stool. 7. பருத்தியினின்று பஞ்சு பிரிக்குங் கருவி (வின்.); instrument for ginning cotton. 8. தேங்காய்த் துருவலகு (யாழ்.அக.); instrument for scraping coconut.

மணை[2] *maṇai,* பெ.(n.) 1. மழுங்கற் கருவி (j.); blunt instrument. 2. மழுங்கல் (யாழ்.அக.); bluntness.

மணைக்கத்தி *maṇai-k-katti,* பெ.(n.) மழுங்கற் கத்தி (வின்.); blunt knife.

*[மணை + கத்தி. மொண்ணை → மொணை → மணை.]*

மணையன் *maṇaiyaṉ,* பெ.(n.) 1. அறிவுக் கூர்மையற்றவன்; dull person. 2. மழுங்கற் கருவி; blunt weapon.

*[மொண்ணை → மொணை → மணை → மணையன்.]*

மணையிற்கோட்டம்[1] *maṇaiyiṟ-kōṭṭam,* பெ.(n.) அரக்கோணம் வட்டத்திலிருந்த பண்டைய நாட்டுப் பிரிவுகளில் ஒன்று; an

ancient division of *arak-kōṇam.* *"ஜயங்கொண்ட சோழ மண்டலத்து மணையிற் கோட்டத்து புரிசை நாட்டு ஊரோடகத்து" (தெ.க.தொ.5, க.881-10).*

**மணையிற்கோட்டம்²** *maṇaiyiṟ-kōṭṭam,* பெ.(n.) வாலாசாபேட்டையின் பண்டைய ஆட்சிப் பிரிவு; an administrative division of *Vālāca-pēṭṭai.* *"இத்தேவர் தேவதானம் மணையிற் கோட்டத்துப் புரிசை நாட்டுச்" (தெ.இ.க.தொ.22, கல்.270-5).*

**மத்தக்காளி** *matta-k-kāḷi,* பெ.(n.) பூடு வகை (யாழ்.அக.); a plant.

**மத்தகக்குழிவு** *mattaga-k-kuḻivu,* பெ.(n.) மத்தகங்குழிதல் பார்க்க; see *mattagaṅ-kuḻidal.* *"மத்தகக்குழிவு தராசம்" (கல்லா. 47).*

**மத்தகத்தகடு** *mattaga-t-tagaḍu,* பெ.(n.) யானை முகத் தகடு (அ) முன்தலைப் பகுதி தகடு; fore head plate. *"மத்தகத் தகடு ஒன்று பொன் பதின்கழஞ்சு" (தெ.கல்.தொ.2, பக்.410-99).*

*[மத்தகம் + தகடு.]*

**மத்தகங்குழிதல்** *mattagaṅ-kuḻidal,* பெ.(n.) மாணிக்கக் குற்றங்களுளொன்று; a flaw in rubies. *"மிகவுறு தராச மத்தகங் குழிதல்" (திருவாலவ. 25:14).*

*[மத்தகம் + குழிதல்.]*

**மத்தகசம்** *mattagaśam,* பெ.(n.) மதயானை; must elephant. *"தன்னை யொரு ஞானமத்தகச மென வளர்த்தாய்" (தாயு.மௌன.1).*

*[மத்தம் + கசம். கயம்→கசம்.]*

**மத்தகசுத்தி** *mattaga-śutti,* பெ.(n.) மாணிக்கக்கணங்களுள் ஒன்று (திருவாலவா. 25, 13); a good feature of rubies.

*[மத்தகம் + சுத்தி.]*

**மத்தகதி** *mattakati,* பெ.(n.) 1. தாழ்வு நடை; slow beat as in pulse. 2. மெல்லிய நடை; slow pace.

**மத்தகம்¹** *mattagam,* பெ.(n.) 1. தலை;head. *"மத்தகத்திடைக் கைகளைக் கூப்பி" (திவ். பெரியாழ்.4, 5, 2).* 2. உச்சி; top, crown. *"வாள்..... மத்தகத் திறுப்ப" (சீவக.2251).* 3. நெற்றி; forehead. *"மத்தகஞ்சேர் தனிநோக்கினன்" (திருக்கோ.106).* 4. தலைக்கோலம்; a kind of head ornament, worn by women. *"மத்தக நித்திலம்" (பரிபா.165).* 5. யானையின் கும்பத்தலம் (சூடா.); round protuberance on the temples of an elephant. *"மத்தயானை மத்தகத்து" (திவ்.திருச்சந்.58).* 6. யானை நெற்றி (பிங்.); elephant's fore-head. 7. முகப்பு; front. *"மத்தகமணியொடு" (சிலப்.6, 91).* 8. மலை நெற்றி (சூடா.); face of precipitous rock. 9. தரிசுநிலம் (வின்.); arid land.

*[மொத்தகம்→மத்தகம்.]*

உடம்பில் மொத்த உருண்டை வடிவானதும் முகாமையானதும் தனித்திருப்பதுமான உறுப்பு தலை என்பது கருதி இப்பெயர் வந்திருக்கலாம். வடமொழியில் 'மஸ்தக' என்பது வேர் காட்டப்படவில்லை.

**மத்தகம்²** *mattagam,* பெ.(n.) காற்றோட்டமற்ற இறுக்கமான சூழல்; sultriness state of being humid.

மத்தகமாலை *mattaga-mālai,* பெ.(n.) 1. கோத்த மலர் (பிங்.); wreath of flowers. 2. தலையில் அணியும் மாலை; garland worn on the head. *"மத்தகமாலை யொடு மணமகள் போல்வது" (பெருங்.உஞ்சைக்.38, 297).*

*[மத்தகம் + மாலை.]*

மத்தகமூலம் *mattaga-mūlam,* பெ.(n.) கழுத்து; neck.

*[மத்தகம் + மூலம்.]*

மத்தக *mattagan,* பெ.(n.) மதி மயங்கினவன்; intoxicated person. *"மத்தகர்க்கன்றோ மறுபிறப்பு" (திருமந். 2069).*

*[மந்தகன் → மந்தகம்.]*

மத்தகாசம் *matta-kāšam,* பெ.(n.) கண்ணோயி னொன்று (யாழ்.அக.); an eye - disease.

மத்தகிரிக்கண்டிராயன் *mattagiri-k-kandirāyan,* பெ.(n.) பழைய நாணய வகை (பணவிடு.137); an ancient coin.

மத்தகீசம் *mattagīšam,* பெ.(n.) யானை (யாழ்.அக.); elephant.

மத்தகுணம் *matta-gunam,* பெ.(n.) 1. மத குணம்; rutted condition. 2. யானை; elephant.

*[உன்மத்தம் → மத்தம் + குணம்.]*

மத்தங்காய்[1] *mattaṅgāy,* பெ.(n.) ஊமத்தங் காய்; fruit of dhatura.

மத்தங்காய்[2] *mattaṅgāy,* பெ.(n.) 1. கடுக்காய் (பாலவா.713); myrobalan. 2. பூசனி, 1 (நாஞ்.); pumkin.

மத்தங்காய்ப்புல் *mattaṅgāy-p-pul,* பெ.(n.) செஞ்சாமை (m.m.); red little millet.

*[மத்தங்காய் + புல்.]*

மத்தங்காயரிசி *mattaṅgāy-ariši,* பெ.(n.) செஞ்சாமை மணி; grain of red little-millet, as minute.

*[மத்தங்காய் + அரிசி.]*

மத்தங்கோரை *mattaṅkōrai,* பெ.(n.) பாய்க் கோரை; a weed with which mat is made.

*[மத்தம் + கோரை.]*

மத்தஞ்சாறு *mattañcāru,* பெ.(n.) 1. சவுட்டுப்பு; a salt extracted from fuller's eath. 2. ஊமத்தஞ்சாறு; juice of dhatura.

மத்தப்புடல் *matta-p-pudal,* பெ.(n.) பன்றிப் புடல்; a variety of snake gourd which is short and stout.

*[மத்தம் + புடல்.]*

மத்தம்[1] *mattam,* பெ.(n.) 1. களிப்பு; intoxication form liquor; passion, lust. *"மத்தக்கரியுரியோன்" (திருக்கோ.388).* 2. மயக்கம்; bewilderment. *"மத்தமாம் பிணிநோய்க்கு" (தேவா.462, 3).* 3. யானை மதம் (திருக்கோ.388, உரை); frenzy, as of a must elephant. 4. பித்தியம்; தெரள்; கோட்டி; கிறுக்கு; madness. *"மத்த மனத்தொடு மாலிவ னென்ன" (திருவாச.5, 3).* 5. செருக்கு (உரி.நி.); pride, haughtiness. 6. கருவூமத்தை; people stramony. *"மத்தநன் மாமலரும் மதியும் வளர்" (தேவா.923, 8).* 7. எருமைக்கடா (யாழ்.அக.); buffalo. 8. குயில் (யாழ்.அக.); cuckoo.

*[முல் (பொருந்தற் கருத்து வேர்) → முள் → மள் → மட்டு → மத்து → மத்தம் (வே.க. 4:67).]*

**மத்தம்**² *mattam,* பெ.(n.) மத்து; chuming stick. *"ஆய்மகள் மத்தம் பிணித்த கயிறுபோல்" (கலித்.110).*

*[மத்து→மத்தம்.]*

**மத்தமா** *mattamā,* பெ.(n.) யானை (நிகண்டு.); must elephant.

*[மத்தம் + மா. மா = விலங்கு.]*

**மத்தயம்** *mattayam,* பெ.(n.) நீர்க் கடம்பு; a tree growing near water (சா.அக.).

**மத்தரி** *mattari,* பெ.(n.) பறை வகை (பரிபா.12, 41); a kind of drum. *"மத்தரி தடாரி தண்ணுமை மகுளி ஒத்தளத்து சீர்தூக்கி யொருவர் பிற்படார்" (பரிபா.12:93–4).*

**மத்தவாரணம்** *matta-vāraṇam,* பெ.(n.) 1. மதயானை; elephant in rut. *"மத்தவாரணம் பிடிகளோடு வாரிதோய் கானியாறும்" (பாரத. அருச்சுனன்றவ.2).* 2. மச்சின் மேலுள்ள தாழ்வாரம் (யாழ்.அக.); verandah of the upper floor. 3. வீட்டின் மேன்மாடத்துறுப்பு; attic turret or small room on the top-floor of a large building. *"தோழியருந் தானு நெடுமத்த வாரணத்தி னின்று" (ஏகாம்.உலா.27).* 4. நந்தவனம் (யாழ்.அக.); flower-garden. 5. திண்டு (வின்.); pillow in the shape of a half-moon. 6. பாக்கு வெற்றிலைத் துவையல் (யாழ்.அக.); betel leaf and nut pounded together.

**மத்தளக்கட்டை** *mattaḷa-k-kaṭṭai,* பெ.(n.) மத்தளத்தில் மரத்தாற் செய்த பகுதி; wooden frame of a drum.

*[மத்தளம் + கட்டை.]*

**மத்தளம்** *mattaḷam,* பெ.(n.) பறை வகை; a kind of drum. *"மத்தளங் கொட்ட" (திவ்.நாய்ச்.6, 6).*



*[முல்→முள்→முள்கு. முள்குதல் = மயங்குதல். முள்→முளி = உடல்மூட்டு, மரக்கணு. முளி→ முழி →மொழி = முழங்கை, முழங்கால் முதலியவற்றின் பொருத்து. மரஞ்செடி கொடிகளின் கணு, கரும்பின் இருகணுவிற் கிடைப்பட்ட பகுதி, கரும்பின் மொழிபோற் சொற்றொடர்க்குறுப்பான சொல். முள்→முழு→முழுவு. முழுவுதல் = பொருந்தித் தொடுதல், முத்தமிடுதல், தழுவுதல். முழுவு→முழவு. முழவுதல் = நெருங்கிப் பழகுதல். முழவு→முழாவு. முழாவுதல் = நெருங்கிப் பழகுதல். முழுத்தல் = திரளுதல், பருத்தல், முழுத்த ஆண் பிள்ளை. முழுஆள்→முழாள் = வளர்ச்சியடைந்த பெரிய ஆள். முழு→முழா = திரண்ட முரசு, குடமுழா. முல்→முது →முத்து. முத்துதல் = சேர்தல், ஒன்றை யொன்று தொடுதல், அன்பிற்கறிகுறியாக இருவர் முகங்கள் அல்லது உதடுகள் பொருந்தித் தொடுதல், திரளுதல். முத்து→முத்தை = திரட்சி, சோற்றுருண்டை. மொலு→மொது. மொது மொது வெனல் = திரளுதற் குறிப்பு. மொதுமொதுவென மக்கள் குவிந்தார்கள் (உ.வ.). மொது→மொத்து. மொத்துதல் = உரக்க அல்லது வலுக்க அடித்தல். நன்றாய் மொத்திவிட்டார்கள் (உ.வ.). மொத்து = வலுத்த அடி. மொத்து→மொத்தி = புடைப்பு.*

மொத்து→மொத்திகை→மத்திகை = குதிரையை அடிக்கும் சமட்டி. மொத்து→மொத்தளம் = கூட்டம், மொத்தம். மொத்தளம்→மத்தளம் = இருந்தடிக்கும் பெரு மதங்கம் அல்லது இருதலை முழா.]

**மத்தளி[1]** *mattaḷi*, பெ.(n.) 1. இசைக்கருவி வகை (திவ்.பெரியாழ்.3, 4, 1); a kind of drum. 2. உடல்; body. *"மத்தளி மண்ணாய் வயங்கிய வாறே" (திருமந்.189).*

**மத்தளி[2]** *mattaḷi*, பெ.(n.) மத்தளிகன் பார்க்க; see *mattaḷigaṉ*. *"பாதாள முஞ்சுதி யடங்கமிகு தொனி செயும் பண்பு பெறுவோன் மத்தளி" (திருவேங்.சத.64).*

**மத்தளிகன்** *mattaḷigaṉ*, பெ.(n.) மத்தளம் வாசிப்போன்; one who plays the *mattaḷam*. *"மத்தளிகள் பின்போனாள்" (பிரபுலிங்.மாயை. கோலா.45).*

*[மத்தளி→மத்தளிகன்.]*

வ. மர்தலிகா.

மர்தலிகா என்னும் வடிவம் மா.வ.சு.வில் இல்லை. செ.அக.வில் மட்டுமே உள்ளது (வ.வ.217).

**மத்தன்** *mattaṉ*, பெ.(n.) 1. பித்துப் பிடித்தவன்; crazy fellow. *"மத்தனேன் பெறு மாமலமாய" (தாயு.பொன்னை.35).* 2. அதியுற்சாகி; wild enthusiast. *"பித்தரின் மயங்கி மத்தரின் மதித்து" (திருவாச.3, 153).* 3. அறிவு மயக்க மடைந்தவன்; bewildered person. *"இறந்தனர் போல வீழ்ந்த மத்தரை" (பாரத.நிரை.102).* 4. செருக்குள்ளவன்; proud fellow. *"மத்தனிராவணன் கொதித்தான்" (இரமநா.உயுத்.44).*

வ. மத்த.

*[முல் (பொருந்தற் கருத்துவேர்). முல்→ முள் →மள்→மட்டு = கள், தேன், இன்சாறு, காமக் குடிப்பு. மட்டு→மத்து→மத்தம்→மத்தன்.]*

**மத்தனம்** *mattaṉam*, பெ.(n.) அழுத்திப் பிடிக்கை; shampooing. *"மருவிய வழிபாடன்றே மத்தன மென்ப" (கந்தபு. இந்திரபுரி.44).*

**மத்தனலிங்கம்** *mattaṉa-liṅgam*, பெ.(n.) மருக்காரை (மூ.அ.); emetic-nut.

**மத்தனும்பழம்** *mattaṉum-paḻam*, பெ.(n.) பொன்னாங்காய்; fruit of soap nut tree (சா.அக.).

**மத்தாகி** *mattāgi*, பெ.(n.) தேன்; honey (சா.அக.).

**மத்தாகிக்கூடு** *mattāgi-k-kūḍu*, பெ.(n.) தேன் மெழுகு; bee's wax (சா.அக.).

**மத்தாகிதம்** *mattāgidam*, பெ.(n.) தேன்; honey (சா.அக.).

**மத்தாடி** *mattāḍi*, பெ.(n.) 1. நீலவூமத்தை (L.); blue thorn apple. 2. கருவூமத்தை (மலை.); purple stramony.

**மத்தாடிப்புகை** *mattāḍi-p-pugai*, பெ.(n.) ஊமத்தம் பூவின் புகை, நெஞ்சக நோய்க்கு மருந்தாகப் பிடிப்பது; smoking the dry flower powder of dhature specially of the black variety for dhatura (சா.அக.).

*[மதம்→மத்தம் = ஊமத்தம். மத்தம்→மத்தாடி + புகை.]*

**மத்தாடு–தல்** *mattāḍu-*, 5 செ.கு.வி.(v.i.) பெண்கள் கைகோத்து ஆடுதல் (இ.வ.); to whirl in play, as girls holding each other by the hand.

*[மத்து + ஆடு–,]*

**மத்தாளமணி** *mattāḷamaṇi,* பெ.(n.) கழுத்தணி வகை (பரதவ.); a necklace.

**மத்தான்** *mattāṉ,* பெ.(n.) கருமத்தை; black variety or blue variety of dhatura (சா.அக.).

**மத்தி[1]-த்தல்** *matti-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. மருந்து கலத்தல் (கொ.வ.); to mix, as medicine. 2. அடித்தல் (இ.வ.); to beat. 3. தேய்த்தல் (யாழ்.அக.); to rub. 4. மத்தினாற் கடைதல்; to churn. *"பாற்சமுத்திரத்தை மத்தித்த திருமால்" (கூர்மபு.).*

*[மத்து→மத்தி-.]*

**மத்தி[2]** *matti,* பெ.(n.) மீன்வகை; a fish. *"மத்தியுஞ் சிறு பொத்தியும்" (குருகூர்ப் பள்ளு).*

**மத்தி[3]** *matti,* பெ.(n.) கழகக் காலத்து வீரன்; a warrior of *saṅgam* age (சி.பெ.அக.).

இவன் கழார் என்னும் ஊரினன். மாமூலனார் (அகநா.211), பரணர் (அகநா.6), ஓரம்போகியார் (ஐங்குறு.571) ஆகியோரால் பாடப்பட்ட தலைவன்.

**மத்திகா** *mattigā,* பெ.(n.) பருத்தி; cotton plant (சா.அக.).

**மத்திகை[1]** *mattigai,* பெ.(n.) நடுவிரல்; middle finger (சா.அக.).

**மத்திகை[2]** *mattigai,* பெ.(n.) 1. குதிரைச் சம்மட்டி; whip, horse whip. *"மத்திகை வளைஇய மறிந்து வீங்கு செறிவுடை" (முல்லைப்.59).* 2. கழி; staff, rod. *"வேயின் மத்திகையர்" (அரிசமய. குலசே. 54).* 3. விளக்குத் தண்டு (சூடா.); lamp-stand. 4. பூமாலை (பிங்.); flower garland.

**மத்திடு-தல்** *mattiḍu-,* 17 செ.குன்றாவி.(v.t.) கடைதல்; to churn. *"மானிலாவிய நோக்கியர் படிறிடை மத்திடுதயிராகி" (திருவாச.5, 40).*

*[மத்து + இடு-.]*

**மத்தியகெந்தம்** *mattiya-kendam,* பெ.(n.) மகிழம்பூ; a very fragrant small flower of a tree (சா.அக.).

**மத்தியபாதம்** *mattiya-pādam,* பெ.(n.) சிறு மூளையின் இருபாகங்களையும் இணைத்துக் கொண்டிருக்கும் நார்க்கட்டுகளாலாகிய கால்களில் ஒன்று; one of fibrous bands by which the cerebellum is attached to the brain stem (சா.அக.).

**மத்தியம்** *mattiyam,* பெ.(n.) 1. கள் அல்லது வெறியம்; toddy or arrack. 2. மயக்கும் பொருள்; any substance that causes giddiness (சா.அக.).

**மத்தியமண்டபம்** *mattiya-maṇḍabam,* பெ.(n.) மது நுரை; the forth of liquor (சா.அக.).

**மத்தியமிகை** *mattiya-migai,* பெ.(n.) கன்னிப் பெண்; middle aged girl, who is chaste (சா.அக.).

**மத்தியாத்திரம்** *mattiyāttiram,* பெ.(n.) சிறுகுடல்களை முதுகுடன் இணைக்கும் ஒரு சவ்வு; mesantery a membrane in the abdominal cavity serving to retain the intestines and their appendages in proper position by uniting them with the vertibral column (சா.அக.).

**மத்தியாமோதம்** *mattiyā-mōdam,* பெ.(n.) மகிழ மரம்; a tree which bears small flowers which one very fragrant but not attractive (சா.அக.).

**மத்திரக்கல்** *mattira-k-kal,* பெ.(n.) கருங்கல்; granite (சா.அக.).

**மத்தின்சாறு** *mattiṉ-šāṟu,* பெ.(n.) ஊமத்தஞ்சாறு; juice of dhatura leaves.

*[மத்து + இன் + சாறு.]*

**மத்தின்வேர்** *mattiṉ-vēr,* பெ.(n.) ஊமத்தையின் வேர்; root of dhatura. *"இட்டமாந் தேற்றாக் கொட்டை மத்தின்வேர் வசம்பு மஞ்சள்" (பரராச சேகரம்).*

*[மத்து + இன் + வேர்.]*

**மத்து**[1] *mattu,* பெ.(n.) 1. தயிர் முதலியன கடையுங்கருவி; churning staff. *"ஆயர் மத்தெறி தயிரி னாயினர்" (சீவக.421).* 2. பருப்பு, கீரை முதலியன கடையுங் கருவி; churning staff.



*[முல் (பொருந்தற்கருத்து வேர்). முல்→முள். முள்→முட்டு→முட்டி→முடி→மடி.முட்டு→மட்டு→மட்டம். மட்டு→மட்டி. முட்டு→முத்து. முத்துதல் (முட்டுதல்) = பொருந்துதல். முத்து (முட்டு)→மத்து (மட்டு) = பொருந்தி கடையும் கருவி. இனி, முத்து→மொத்து = (மொத்தை) மொத்து→மத்து எனினுமாம். கடை கருவி அடியில் மொத்தமா யிருப்பதனால் மத்தெனப்பட்டது (வே.க.4:50).]*

**மத்து**[2] *mattu,* பெ.(n.) ஊமத்தை; thorn apple or purple stramony. *"நன்மதத்தை நாகத் தயல் சூடிய நம்பனே போல்" (கம்பரா. உருக்.கா.81).*

*[முல் (பொருந்தற்கருத்து வேர்). முல்→ முள்→மள்→மர்→மறு. ஒ.நோ. கள்→கர்→கரு. முள்→முட்டு. முட்டு (முத்து)→மட்டு (மத்து). மத்து = கலப்பு, கலக்கம், மயக்கம், மயக்கஞ் செய்யும் பித்தம், மயக்கம் தரும் கள், தீங் கள்ளாகிய தேன், பித்தமுண்டாக்கும் ஊமத்தை (வே.க.4:67).]*

**மத்து**[3] *mattu,* பெ.(n.) 1. மோர்; butter-milk, watery curds. *"அவந்தி மத்துமாற்றப் பளவைப் படிப்பலமாம்" (தைலவ.தைல.59).* 2. தயிர்; curdled mild and cream.

*[முத்து→மத்து. மத்தினால் கடைதற் குரியதும், கடைந்த பின் கிடைப்பதும்.]*

**மத்துவம்** *mattuvam,* பெ.(n.) போதை; intoxicant (சா.அக.).

**மத்துவாசம்** *mattuvāšam,* பெ.(n.) பன்னீர்; rose water(சா.அக.).

**மத்தை**[1] *mattai,* பெ.(n.) கடலலை; tide.

**மத்தை**[2] *mattai,* பெ.(n.) 1. மயக்கந் தருவது; intoxicant. 2. ஊமத்தை; dhatura.

**மத்தையை** *mattaiyai,* பெ.(n.) 1. நாணமும் காமமும் சமமாக வுள்ளவள்; a woman of normal modesty and love. 2. இடுப்பு; waist. 3. நடுவிரல்; middle finger (சா.அக.).

மத[1]-த்தல் *mada-,* 4 செ.கு.வி.(v.i.) 1. மதங் கொள்ளுதல்; to be furious, as by must, fanaticism. *"மிகவு மதத்து மதம் பொழிந்து" (ஞானவா.நிருவா.47).* 2. கொழுத்தல்; to be luxuriant or fruitful; to grow fat. 3. காமமிகுதல்; to be wanton or lascivious. 4. களித்தல்; to be intoxicated. 5. செருக்குதல்; to be arrogant. 6. மயங்குதல் (வின்.); to be bewildered.

*[முல்→முள்→மள்→மட்டு→மத்து→மது. மது →மதர்→மதர்வு =வலிமை. மதர்வு→மதவு→மத (வே.க.4:69).]*

மத[2] *mada,* பெ.(n.) 1. வலிமை; strength. 2. அழகு; beauty. 3. மிகுதி; excess; abundance. 4. மடமை; ignorance. *"மதவே மடனும் வலியும் ஆகும்" (தொல்.சொல்.377).*

*[மது→மதர்→மத.]*

மதக்கம்[1] *madakkam,* பெ.(n.) 1. பேருண்டி, குடி, கஞ்சா முதலியவற்றாலுண்டாம் மயக்கம்; stupor caused by over-eating or drinking or taking narcotics. *'ஆறு மதக்கத்தினாலல்லவா எங்களை விழுங்காமல் விட்டிட்டது' (உ.வ.).* 2. களைப்பு, சோர்வு (யாழ்.அக.); weariness. 3. ஈடுபாடு இன்றி மேம்போக்காகச் செய்யும் செயல்; not fully involvement.

*[மது→மத→மதக்கம்.]*

மதக்கம்[2] *madakkam,* பெ.(n.) வதங்குகை (யாழ்.அக.); dryness.

மதகம்[1] *madagam,* பெ.(n.) காஞ்சிரை; a tree (சா.அக.).

மதகம்[2] *madagam,* பெ.(n.) யானை மத்தகம் (பிங்.); head of an elephant.

மதகம்[3] *madagam,* பெ.(n.) சுக்கு (சங்.அக.); dried ginger.

மதகயம் *madagayam,* பெ.(n.) மதகரி பார்க்க; see *madagari.*

*[மதம் + கயம்.]*

மதகரி *madagari,* பெ.(n.) ஆண்யானை (திவா.); male elephant, as rutting.

*[மதம் + கரி.]*

மதகரிக்கணை *madakari-k-kaṇai,* பெ.(n.) யானைத்திப்பிலி (தைலவ.தைல.); monkey-creeper.

*[மதகரி + காணை.]*

மதகரிக்குளம்பு *madakari-k-kuḷambu,* பெ.(n.) யானைக்குளம்பு; foot of elephant.

*[மதகரி + குளம்பு.]*

மதகரிநீர் *madagari-nīr,* பெ.(n.) யானை மூத்திரம்; urine of elephant.

*[மதகரி + நீர்.]*

மதகரிவேம்பு *madakari-vēmbu,* பெ.(n.) 1. பெருமர வகை; chittagong wood. 2. மரவகை; common bastard cedar. 3. மரவகை; trifoliate red cedar.

மதகு *madagu,* பெ.(n.) குளம் முதலியவற்றில் நீர் பாயும் மடை வகை; covered channel, drain, conduit, sluice to let off water from a tank. *"புனல் மதகில் வாழ்முதலை" (திருவிசை.கருவூர்.9:2).*

மதகுஞ்சரம் *mada-kuñcaram,* பெ.(n.) அத்தி; fig (சா.அக.).

**மதகுத்துவாரம்** *madagu-t-tuvāram,* பெ.(n.) மதகுத்துளை பார்க்க; see *madagu-t-tuḷai.*

*[மதகு + Skt. துவாரம்.]*

**மதகுத்துளை** *madagu-t-tuḷai,* பெ.(n.) மதகின் கண்; vent way.

*[மதகு + துளை.]*

**மதகுமுழுகி** *madagu-muḻugi,* பெ.(n.) நீரில் முழுகி மதகினைச் செப்பனிடுவோன்; one whose business it is to dive and repair a sluice.

*[மதகு + முழுகி.]*

**மதங்கநாதர்** *madaṅga-nādar,* பெ.(n.) தொன்நாதருளொருவர் (யாழ்.அக.); a great siddha.

**மதங்கம்[1]** *madaṅgam,* பெ.(n.) சிறுவாச்சிய வகை; a small drum. *"மதங்கமொடு துந்துபி.... முழங்கவே" (திருவாத.பு.கடவுள்.1).*

மதங்கம் – ம்ருதங்க

மதங்கம் என்பத மத்தளத்தின் சிறுமை. இடக்கண்ணையும் வலக்கண்ணையும் தொடர்ந்து தட்டுவதால் ஏற்படும் ஒலியினின்று இப்பெயர் பெற்றது.

*"மதங்கமொடு துந்துபி... முழங்கவே"* (திருவாத.பு.கடவுள்.1).

ம்ருதங்க என்னும் சொல் பின்வருமாறு இருவகையுள் ஒன்றில் தோன்றியிருக்கலாமென்று மா.வி.அ.கூறும்.

(1) ம்ருதம் + க = அடிக்கும்போது செல்வது ("going about while being beatern")

இப்பொருளில் க(ga) என்பது கம்(gam) என்பதன் கடைக்குறை.

(2) மர்தல் – ம்ருதங்க.

ஆரியர் வருமுன்பே தமிழ் முத்தமிழாய் வழங்கிற்றென்பதும் மதங்கம் ஆட்டிற்கும் பாட்டிற்கும் உரிய இசைத்தமிழ்க் கருவி யென்பதும், அறிக (வ.வ.217).

**மதங்கம்[2]** *madaṅgam,* பெ.(n.) மதங்கியார் பார்க்க (யாழ்.அக.); see *madaṅgiyār.*

**மதங்கம்[3]** *madaṅgam,* பெ.(n.) 1. யானை (யாழ்.அக.); elephant. 2. முகில் (யாழ்.அக.); cloud. 3. ஒரு மலை (யாழ்.அக.); a mountain. 4. ஓராகமம் (சங்.அக.); an *āgama* in sanskrit.

**மதங்கம்புல்** *madaṅgam-pul,* பெ.(n.) மத்தங்காய்ப்புல் பார்க்க; see *mattaṅgāy-p-pul.*

*[மத்தங்காய்ப்புல் → மதங்காய்ப்புல் → மதங்கம்புல்.]*

**மதங்கயம்** *madaṅgayam,* பெ.(n.) யானை; elephant. *"மதிக்கு மதங்கய மனைய வரக்கன்" (சேதுபு.பிரமகத்.7).*

*[மதம் + கயம்.]*

**மதங்கர்** *madaṅgar,* பெ.(n.) இசை, கூத்து இவற்றைத் தொழிலாகக் கொண்ட ஓரினத்தவர்; a communities, whose profession is music and dance (சி.பெ.அக.).

**மதங்கள்** *madaṅgaḷ,* பெ.(n.) மிளகு; pepper (சா.அக.).

**மதங்கன்[1]** *madaṅgaṉ,* பெ.(n.) ஒரு முனிவன்; a saint. *"மதங்கன திருக்கை சேர்ந்தார்" (கம்பரா.கவந்தன்.58).*

மதங்கன்² *madaṅgaṉ*, பெ.(n.) 1. பாணன் (பிங்.); bard. 2. பெரும்பாணன் (சிலப்.5:184, உரை); a class of *pāṉars.*

மதங்கி¹ *madaṅgi*, பெ.(n.) தம் இரண்டு கைகளிலும் வாட்படை ஏந்திச் சுழன்று ஆடும் ஆடல் மகளிர்; dancing girls who dance with swords on her both hands (சி.பெ.அக.).

மதங்கி² *madaṅgi*, பெ.(n.) 16 அகவையுடைய பெண்; girl of 16 years (சா.அக.).

மதங்கி³ *madaṅgi*, பெ.(n.) 1. மலைமகள் (சங்.அக.); *Malaimagaḷ*, the consort of *Šivaṉ*. 2. காளி (வின்.); *Kāḷi*. 3. பாண்மகள் (பிங்.); songstress. 4. ஆடல் பாடல் வல்லவள்; singing danseuse. *"மதங்கியரை யொத்த மயில்" (கம்பரா.கார்கால.29).*

மதங்கியார் *madaṅgiyār*, பெ.(n.) இரண்டு கைகளிலும் வாளெடுத்துச் சுழற்றியாடும் இளம்பெண்ணான மதங்கி மீது ஒருவன் காமுறுவதாகப் பாடும் கலம்பகவுறுப்பு (குமர.பிர.மதுரைக்கலம்.15, தலைப்பு); a characteristic theme in *Kalampagam*, describing the love of a man towards a beautiful young actress who plays with swords in both hands.

மதங்கை¹ *madaṅgai*, பெ.(n.) யானைத் திப்பிலி; long pepper (சா.அக.).

மதங்கை² *madaṅgai*, பெ.(n.) அத்தி (சங்.அக.); fig.

மதங்கொள்-தல் *madaṅ-koḷ-*, 16 செ.கு.வி. (v.i.) மதத்தல்; to grow fatty, lusty.

*[மதம் + கொள்-தல்.]*

மதச்சுவடு *mada-c-cuvaḍu*, பெ.(n.) யானையின் மதநீர் வடித்துண்டான தழும்பு (பிங்.); trace left by the flow of ichorous discharge from the temples of a rutting elephant.

*[மதம் + சுவடு.]*

மதசத்தி *mada-šatti*, பெ.(n.) மதுக்களி (மணிமே.27:265, அடிக்குறிப்பு); power to intoxicate, as of spirits.

மதசருக்கரை *mada-carukkarai*, பெ.(n.) கன்னல் சருக்கரை; cane sugar (சா.அக.).

மதசலம் *mada-calam*, பெ.(n.) யானையின் மதநீர்; must of a rutting elephant.

*[மதம் + சலம்.]*

மதசாரணை *mada-šāraṇai*, பெ.(n.) தண்ணீர்விட்டான் கிழங்கு (சங்.அக.); climbing asparagus.

மதசாரம் *madašāram*, பெ.(n.) இலவமரம்; silk - cotton tree (சா.அக.).

மதசாறம் *mada-šāṟam*, பெ.(n.) அன்னம்; swan (சா.அக.).



மதண்டி *madaṇḍi*, பெ.(n.) வல்லாரை (சங்.அக.); Indian pennyword.

மதணன் *madaṇaṉ*, பெ.(n.) கடல்மீன் வகை; a sea - fish.

மதத்தவள் *madattavaḷ*, பெ.(n.) மதங் கொண்டவள்; a meritricious or a lusty woman; intriguing woman (சா.அக.).

*[மதம்→மதத்தவள்.]*

மதத்தன் *madattaṉ*, பெ.(n.) 1. மதத்திற் பற்றுள்ளவன்; religious person. *"மதத்தரின் மறுத்து" (தணிகைப்பு.அகத்திய. 110).* 2. கருவம் பிடித்தவன் (யாழ்.அக.); proudman, as one intoxicated.

*[மதம்→மதத்தன்.]*

மதத்திரட்டு *mada-t-tiraṭṭu*, பெ.(n.) ஒருசார் கொள்கையைத் திரட்டிச் சொல்லும் நூல்; treatise containing the codified doctrines of any system of thought. *"மயன் மதத் திரட்டையெல்லாம் விரித்தன்ன" (இரகு. தேனுவந்.121).*

*[மதம் + திரட்டு.]*

மதத்து *madattu*, பெ.(n.) வெறியை யுண்டாக்கும் கூட்டு மருந்து வகை (இ.வ.); an intoxicating compound.

மதத்துப்போதல் *madattu-p-pōdal*, பெ.(n.) மத–த்தல் பார்க்க; see *mada-*.

மததயிலம் *mada-tayilam*, பெ.(n.) மதநீர் பார்க்க; see *mada-nīr*. *"பாயுங் களிற்றின் மததயிலம் பாயப்பாய வாரீரே" (கலிங்.493).*

மதநீர் *mada-nīr*, பெ.(n.) 1. யானையின் மதநீர்; must of a rutting elephant. 2. ஒண்ணீர்; semen. *"மதநீர்பாய மெலிந்தனர்" (கந்தபு. ததீசியுத்.40).*

*[மதம் + நீர்.]*

மதப்பாளிப்பூடு *mada-p-pāḷi-p-pūḍu*, பெ.(n.) முடக்கொற்றான்; a creeper.

மதப்பு *madappu*, பெ.(n.) 1. களிப்பு; being intoxicated; exhilaration. 2. சிற்றின்பத் தோய்வு; wantonness or voluptuousness. 3. வெறி கொள்ளுகை; being ferocious as beasts. 4. நில முதலியவற்றின் செழிப்பு; being fertile, as land, being luxuriant, as trees or vegetation.

*[மதம்→மதப்பு.]*

மதப்பூ *madappū*, பெ.(n.) மராட்டிமொக்கு (தைலவ.தைல.135); an aphrodisiac.

மதபன்னி *mada-paṉṉi*, பெ.(n.) மதரபன்னி பார்க்க (சங்.அக.); see *madara-paṉṉi*.

மதபாணி *mada-pāṇi*, பெ.(n.) மதரபன்னி பார்க்க (சங்.அக.); see *madara-paṉṉi*.

மதபேதம் *mada-pēdam*, பெ.(n.) 1. கொள்கை வேறுபாடு; difference of opinion or belief. 2. புறச்சமயம்; heterodox religious system.

*[மதம்[1] + **Skt.**பேதம்.]*

மதபேதி *mada-pēdi*, பெ.(n.) புறச்சமயி (யாழ்.அக.); person belonging to a hetero-dox religious system.

*[மதம் + பேதி.]*

மதம்[1] *madam*, பெ.(n.) 1. மதித்தறிந்து கையாளும் நூல் நெறிமுறை; opinion, belief. *"எழுவகை மதமே" (நன்.11).* 2. அம்மை யிம்மை யும்மை (மறுமை) நிலைகளை மதித்தறிந்து கடைப்பிடிக்குங் கொள்கை; religious tenet, sect, religion. *"தத்த மதங்களே யமைவதாக" (திருவாச.4:52).*

*சிவமதம், மால் மதம் (உ.வ.).* 3. அறிவு (யாழ்.அக.); knowledge. 4. உடன்பாடு, ஒப்பு, இயைபு (யாழ்.அக.); agreement, consent. 5. பெற்றதைப் பெரிதாக மதிப்பது (சி.சி.2, 80, மறைஞா.); esteeming highly any favour received. 6. கற்பித்தல்; கல்வி (யாழ்.அக.); teaching. 7. பல (நாமதீப.772); many. 8. ஆறு; the number '6', as from the six 'madam'.

மதி → மதம் = மதித்தறிந்து கையாளும் நூல் நெறிமுறை, அம்மையிம்மை யும்மை நிலைகளை மதித்தறிந்து கடைபிடிக்குங் கொள்கை.

மதி→மதம் = 1. பெரிதாக மதிப்பது, 2. கருத்து, 3. கொள்கை, 4. நெறிமுறை, 5. சமயம். *"தத்தம் மதங்களே யமைவதாக" (திருவாச.4, 52).* வ. மத (mata).

மத என்னும் சமற்கிருதச் சொல்லை மன் என்னும் மூலத்தினின்று திரிப்பர். மன் என்பதினின்று, மான், மா, மானம் முதலிய சொற்கள் பிறக்குமே யன்றி மதி அல்லது மதம் என்னும் சொல் தோன்றாது.

கடைதலைக் குறிக்கும் மதி என்னும் வினைச் சொல்லும், மத்து என்னும், வடிவினின்றே திரிந்திருக்கிறது. முத்து → மொத்து →மத்து = மொத்தையாக விருக்கும் கடைகருவி.

மத்து → மத்தி, மத்தித்தல் = மத்தினாற் கடைதல். மத்தி → மதி. மதித்தல் = 1. கடைதல். "மந்தரங் கொடு மதித்த நாள்" (சேதுபு.சங்கர.20). 2. கடைதல் போல் விரலா லழுத்தி மசியச் செய்தல். மதி → மசி. மசிதல் = கடைந்ததுபோற் களியாதல். குழந்தைக்குச் சோற்றை மதித்து ஊட்டு என்னும் வழக்கை நோக்குக.

மத்து என்னும் பெயரை மந்த (mantha) என்றும், மத்தித்தல் என்னும் வினையை மத் (math) என்றும், சமற்கிருதத்தில் திரித்திருக்கின்றனர். இவற்றிற்கு வேர் தமிழிலேயே யன்றி வடமொழியிலில்லை.

அளத்தற் பொருள் குறித்த mete என்னும் ஆங்கில வினைச் சொல் கவனிக்கத் தக்கது. E. mete (to measure), OE, OS. metal ON. meta, Goth. mital, OHG. mezzan.

E. meter = person or thing that measures. Metron (measure) என்னும் கிரேக்கச் சொல் மாத்திரை என்பதன் திரிபு. மா → மாத்திரம் → மாத்திரை – வ. மாத்ரா. மாத்தல் என்னும் வினை தமிழில் வழக்கற்றது.

*எழுவகை மதமே உடன்படல் மறுத்தல்*
*பிறர்தம் மதமேற் கொண்டு களைவே*
*தாஅ னாட்டித் தனாது நிறுப்பே*
*இருவர் மாறுகோள் ஒருதலை துணிவே*
*பிறர்நூற் குற்றங் காட்டல் ஏனைப்*
*பிறிதொடு படாஅன் தன்மதங் கொளலே*

என்னும் நன்னூல் நூற்பாவினின்று (11), ஒரு பொருள் அல்லது நெறிமுறை (principle) இன்னவா றிருத்தல் வேண்டுமென்று மதித்துக் கொள்வதே மதம் என்றும், சமயம் மதமென்னும் பெயர் பெற்றது.

தெய்வம் உண்மையின்மை, தெய்வத்தின் தன்மை, தெய்வத்தால் ஏற்படும் நன்மை, தெய்வத்திற்கும் மாந்தனுக்கும் உள்ள உறவு, மறுமை யுண்மையின்மை, மறுமையில் இருக்கும் வாழ்வுநிலை ஆகியவற்றைப் பற்றி இன்னவாறிருக்கு மென்று ஒருவர் மதித்துக் கொள்வதே, பொதுவாக மதமென்று சொல்லப்படுவதாகும்.

தெய்வமும் மறுமையும் புறக்கண்ணாற் காணப்படாத பொருள்களாதலாலும், மக்களின்

மனப்பான்மை வெவ்வேறு வகைப்பட்டிருப்பதனாலும், மதமானது, ஒவ்வொருவரும் தத்தம் அறிவிற்கும் சூழ்நிலைக்கும் ஏற்றவாறு மதித்துக் கொள்வதாகவே யுள்ளது.

தெய்வம் உண்டென்று கொள்வது போன்றே, இல்லையென்று கொள்வதும், மதமாகும். ஆகவே, நம்பு மதம், நம்பா மதம் என மதம் இருவகைப்படும். அவற்றுள் ஒவ்வொன்றும் பல திறப்பட்டுள்ளது. ஆயின், நம்பு மதப் பிரிவுகளே மிகப் பற்பல திறத்தனவா யுள்ளன (த.ம.:வ.வ.).

**மதம்²** *madam,* பெ.(n.) 1. மகிழ்ச்சி; exhilaration, exultation, joy. *"காதலி சொல்லிற் பிறக்கு முயர்மதம்" (நான்மணி.7).* 2. மதசலம் பார்க்க; see *mada-šalam. "மதயானை" (சீவக.2485).* 3. வலிமை; strength. *"படிமதஞ் சாம்ப வொதுங்கி" (பரிபா.4:18).* 4. செருக்கு (பிங்.); pride, arrogance, presumption. *"போரெதிர்ந் தேற்றார் மதுகை மதந்தப" (பரிபா.18:1).* 5. சாறம் (வின்.); animal or vegetable gluten; essence, juice. 6. தேன்; honey. *"மதங்கமழ் கோதை" (சீவக.2584).* 7. வெறி (சங்.அக.); madness; frenzy. 8. காம விகாரத்தின் மிகுதி (திருக்கோ.69, உரை); சிற்றின்பத் தோய்வு; wantonness, lasciviousness, venereal heat. 9. நில வளம் (வின்.); richness of land, fertility. 10. மதுக்களிப்பு (மலைபடு.173, உரை); inebriety, intoxication. 11. மான் மணத்தி; musk. *"மாலையுஞ் சாந்து மதமு மிழைகளும்" (பரிபா.10:92).* 12. கன்மதம் (தைலவ.தைல.125); rock alum. 13. ஒண்ணீர் (யாழ்.அக.); semen. 14. மிகுதி (யாழ்.அக.); abundance. 15. பெருமை (யாழ்.அக.); greatness.

*[முல் (பொருந்தற் கருத்து வேர்)→முள்→மள்→மட்டு→மத்து→மது→மதம் (வே.க. 4:68).]*

**மதமடக்கிநீர்** *madam-adakki-nir,* பெ.(n.) கருந்தேன்; black honey.

**மதமடு** *mada-madu,* பெ.(n.) வெள்ளைப் பூண்டு (மூ.அ.); garlic.

**மதமத்தகம்** *mada-mattagam,* பெ.(n.) கஞ்சங்குல்லை (கஞ்சா) (வின்.); hemp plant.

**மதமத்தம்** *mada-mattam,* பெ.(n.) மதமத்தை பார்க்க; see *mada-mattai. "வன்னி கொன்றை மதமத்தம்" (தேவா. 625:1).*

*[மதமத்தை→மதமத்தம்.]*

**மதமத்தன்** *mada-mattaṉ,* பெ.(n.) மதத்தினால் மயங்கிக்கிடப்பவன் (யாழ்.அக.); one who forgets himself in pride.

*[மதம் + மத்தன். மத்தன் = மதிமயக்க மடைந்தவன்.]*

**மதமத்தன்தாழி** *madamattaṉ-tāḻi,* பெ.(n.) முதுமக்கட்டாழி பார்க்க; see *mudu-makkaṭ-tāḻi.*

**மதமத்திமூலி** *madamatti-mūli,* பெ.(n.) கருமத்தை; black dhatura plant.

**மதமத்தை** *mada-mattai,* பெ.(n.) பொன்னூமத்தை (பிங்.); purple stramony.

**மதமத-த்தல்** *mada-mada-,* 11 செ.கு.வி. (v.i.) மத-த்தல் பார்க்க; see *mada-,*

**மதமதக்கச்சால்** *madamadakka-c-cāl,* பெ.(n.) முதுமக்கட்டாழி; large earthern jar for interring old men in olden times.

மதமதக்கத்தாழி *madamadakka-t-tāḻi,* பெ.(n.) முதுமக்கட்டாழி பார்க்க; see *mudu-makkaṭṭāḻi.*

மதமதப்பு *mada-madappu,* பெ.(n.) 1. உணர்ச்சி யின்மை (வின்.); insensitiveness. 2. திமிர் (வின்.); arrogance. 3. செழிப்பு (திருவிருத்.9, வியா. பக்.71); floorishing condition.

*[மதம்→மதன்→மதர்→மதர்வு→மதவு→மத. மத = மிகுதி, வலிமை, அழகு, மடமை. மதமத→மதமதப்பு (வே.க.4:69).]*

மதமதப்புக்குத்தல் *mada-madappu-k-kuttal,* பெ.(n.) நரம்பு நோய் வகை (M.L.) neuritis, inflammation of the nerves.

*[மதமதப்பு + குத்தல்.]*

மதமதர்-த்தல் *mada-madar-,* 4 செ.கு.வி. (v.i.) களிப்பு மிகுதல்; to be vivacious. *"தேய்த்து மதமதர்த்து" (கொண்டல். விடு.193).*

*[மத + மதர்.]*

மதமதெனல் *mada-madeṉal,* பெ.(n.) 1. மதமுறுதற்குறிப்பு; onom. expr. of being wanton or infauated. 2. உடலுறுப்பு மரத்துப் போதற் குறிப்பு; being paralysed temporarily, as the limbs. 3. நீர் குடிக்கும் போதுண்டாம் ஒலிக்குறிப்பு (யாழ்ப்.); making a noise in drinking. 4. விரைவுக் குறிப்பு; being quick or intense. *"தீ மதமத வென்று பற்றி யெரிகிறது" (உ.வ.).* 5. செழித்து வளர்தற் குறிப்பு (கொ.வ.); growing in luxuriance.

*[மதமத + எனல்.]*

மதமமுகம் *madama-mugam,* பெ.(n.) காரைச் செடி; a shrub.

மதமலை *mada-malai,* பெ.(n.) மதமா பார்க்க; see *madamā. "வாம்பரி மதமலை" (கம்பரா. அகலி.18).*

*[மதமா→மதமலை.]*

மதமா *madamā,* பெ.(n.) யானை (பிங்.); elephant.

*[மதம் + மா.]*

மதமூச்சு *mada-mūccu,* பெ.(n.) மத மூர்ச்சை பார்க்க; see *madamūrccai.*

மதமூர்ச்சை *madamūrccai,* பெ.(n.) ஒரு நோய்; a disease.

மதமெடு-த்தல் *madam-eḍu-,* 4 செ.கு.வி. (v.i.) மதங்கொள்ளல்; to become lusty.

*[மதம் + எடு-.]*

மதமெருதம் *madamerudam,* பெ.(n.) யானை; elephant.

மறுவ. மதமொய்.

மதமேறு-தல் *madam-ēṟu-,* 5 செ.கு.வி.(v.i.) பெண்களுக்கு மதம் மேன்மேலும் கூடுதல்; increasing of lustiness in woman.

*[மதம் + ஏறு-,]*

மதமொய் *mada-moy,* பெ.(n.) மதமா பார்க்க (நிகண்டு.); see *mada-mā.*

*[மதமா→மதமாய்→மதமொய் (கொ.வ.).]*

மதயந்தி *madayanti,* பெ.(n.) 1. மதயந்திகை (யாழ்.அக.) பார்க்க; see *madayandigai.* 2. கஞ்சா (நாமதீப.321); ganja.

மதயந்திகை *madayandigai,* பெ.(n.) மல்லிகை வகை (யாழ்.அக.); a kind of jasmine.

மதயானையுப்பு *mada-yāṉai-uppu,* பெ.(n.) உப்புக்குரு பார்க்க; see *uppu-k-kuru.*

மதர்[1]-த்தல் *madar-,* 11 செ.கு.வி.(v.i.) 1. செழித்தல்; to flourish; to be fertile, rich or luxuriant. 2. மரமுதலியன பயனறும்படி மித மிஞ்சிக் கொழுத்தல் (இ.வ.); to be too luxuriant to be productive, as soil, plants, etc. 3. மதங் கொள்ளுதல்; to be affected with frenzy, as a bull or elephant. *"மதர்விடையிற் சீறி" (பு.வெ.7, 14).* 4. செருக்குதல் (வின்.); to be self-conceited, arrogant. 5. களித்தல் (திவா.); to rejoice, to be full of joy. *"மதுப்பருகிப் பருவாளை நின்று மதர்க்கு மருங்கெலாம்" (கம்பரா.நாட்டுப்.24).* 6. மிகுதல் (திவா.); to increase, abound. *"மதரரி மழைக்கண்" (சீவக.2803).*

*[முல் (பொருந்தற்கருத்துவேர்)→முல்→முள்→மள்→மட்டு→மத்து→மது→மதம்→மதன் = கலக்கம், மடமை, செருக்கு, வலிமை, மிகுதி. மதன்→மதர் (வே.க.4:68).]*

மதர்[2] *madar,* பெ.(n.) 1. செருக்கு; pride, arrogance, self-conceit, wantonness. *"அரிமதர் மழைக்கண்ணீர்" (கலித்.77).* 2. மகிழ்ச்சி (திவா.); joy. 3. மிகுதி (பிங்.); abundance. 4. பாய்ச்சல் (யாழ்.அக.); rush, gust, impulse. 5. வீரம் (அரு.நி.); bravery. 6. மதசலம் பார்க்க (நாமதீப.207); see *mada-šalam.*

*[மதம் →மதர்.]*

மதர்த்தவிழி *madartta-viḻi,* பெ.(n.) காம மிகுப்பினால் உறங்காத கண்கள்; loss of sleep due to love sickness.

*[மதர்த்த + விழி.]*

மதர்ப்பு *madarppu,* பெ.(n.) மதர்வு பார்க்க (அக.நி.); see *madarvu.*

*[மதர்வு→மதர்ப்பு.]*

மதர்வு *madarvu,* பெ.(n.) 1. செழிப்பு; flourishing, being rich, plump or luxuriant. 2. இறுமாப்பு; pride, arrogance. 3. உள்ளக்களிப்பு (பிங்.); joy, delight. 4. ஆசைப் பெருக்கம் (யாழ்.அக.); intense, desire. 5. அழகு (சூடா.); beauty. 6. வலிமை (சூடா.); strength. 7. மிகுதி (திவா.); abundance, fullness, excess. 8. புலவி (அரு.நி.); sulks. 9. இடம் (பிங்.); place. 10. நிலம் (அரு.நி.); earth.

*[மதம்→மதர்→மதர்வு (வே.க.4:69).]*

மதர்வை *madarvai,* பெ.(n.) 1. மதர்வு, 1 பார்க்க; see *madarvu,* 1. *"மதர்வைக் கொம்பு" (சூளா. நகர.25).* 2. செருக்கு; pride, haughtiness. *"மதர்வை நோக்கமும்" (கந்தபு.தெய்வயா.64).* 3. களிப்பு (பிங்.); exhilaration. 4. மயக்கம்; bewilderment. *"மதர்வை வெங்கதிர் பரப்பு கிடந்தென" (சீவக.322).*

*[மதம்→மதர்→மதர்வு→மதர்வை (வே.க.4:69).]*

மதரணி *madaraṇi,* பெ.(n.) ஒளிமிக்க அணிகலன்; bright ornaments. *"நிலஞ்சேர் மதரணிகண்ட குரங்கின்" (புறநா.378, 20).*

*[மதம்→மதர் + அணி.]*

மதரபன்னி *madarapanni,* பெ.(n.) வட்டத் திருப்பி (மலை.); velvet-leaf.

மதரம் *madaram,* பெ.(n.) இஞ்சி; ginger (சா.அக.).

மதராகன் *mada-rāgan,* பெ.(n.) 1. காமக் கடவுள்; god of love. 2. சேவல்; cock.

மதலம் *madalam,* பெ.(n.) வெள்ளுள்ளி; garlic.

மதலிகை *madaligai,* பெ.(n.) 1. அணிகலத் தொங்கல் (பிங்.); pendant of a jewel. 2. அலங்காரத் தொங்கல்; ornamental hangings. *"மதலிகை மலிந்த.......... குடை" (இரகு.அயனெ.106).*

மதலிங்கம் *mada-lingam,* பெ.(n.) 1. அமுக்கிரா (மலை.); winter cherry. 2. சிவனார் வேம்பு; siva's neem.

மதலை[1] *madalai,* பெ.(n.) 1. பற்றுக் கோடு; prop, support. *"மதலையாஞ் சார்பிலார்க்கு" (குறள், 449).* 2. தூண்; post, pillar. *"மதலைகீழ் வைத்ததென் மதலைக் கோதிலேன்" (உபதேசகா.சிவத்து.61).* 3. வேள்வித்தூண்; sacrificial post. *"மதலைநாண் பறப்பை" (கந்தபு. சாலைசெய்.23).* 4. வீட்டின் கொடுங்கை; overhanging border, cornices or projections on the sides or front of a house. *"மதலை மாடமும்" (மணிமே.1:53).* 5. பற்று; desire, attachment. *"மதலை யினெஞ்சொடு" (கலித்.28).* 6. மரக்கலம் (திவா.); ship, boat. *"கொழுநிதிக் குப்பை யெல்லாம்......... மதலையேற்றி" (சீவக.505).* 7. குழந்தை; child, infant. 8. மகன் (பிங்.); son. *"மதலை யிற்றமை கேட்டலும்" (சேதுபு. அக்கினி.82).* 9. பாவை (திவா.); doll. 10. கொன்றை (பிங்.); senna. 11. சரக் கொன்றை (தைலவ.தைல.); indian laburnum.

*[முல் (முன்மைக் கருத்துவேர்)→முது→முதல். முதல் = தொடக்கம், கரணியம், தலைமை வரிசை, அடிப்பாகம், அடிமரம், இடம் (வே.க.4:13). முதல்→மதல். ஒ.நோ. முடி→மடி. முடித்தல் = முற்றுவித்தல். மடித்தல் = அழித்தல் (வே.க.4:65). மதல்→மதலை.]*

மதலை[2] *madalai,* பெ.(n.) மழலைமொழி (வின்.); prattle of children.

*[முல் (இளமைக் கருத்து வேர்)→முள்→மள் →மள்ளன் = இளைஞன், மறவன். மள்→மள→மழ = இளமை, குழந்தை. மழ→மழம்→மழல்→மழலை = இளமை, குழந்தைகளின் இனிய திருந்தாச் சொல். மழலை→மதலை (வே.க.4:7).]*

மதலைக்கிளி *madalai-k-kili,* பெ.(n.) இளங்கிளி; young parrots. *"மதலைக் கிளியின் மழலைப் பாடலும்" (பெருங். உஞ்சைக்.48, 164).*

*[மழ = இளமை. மழ→மழலை→மதலை + கிளி.]*

மதலைத்தூக்கு *madalai-t-tūkku,* பெ.(n.) இருசீருடைய இசைத்தூக்கு (சிலப்.3, 26, உரை, பக்.91); a kind of verse, having two *cīr* to a foot.

*[மதலை + தூக்கு.]*

மதலைநீர் *madalai-nīr,* பெ.(n.) குழந்தையின் சிறுநீர்; urine of a child.

*[மழ→மழலை→மதலை + நீர்.]*

மதலைப்பள்ளி *madalai-p-palli,* பெ.(n.) கொடுங்கையைத் தாங்குதலையுடைய பலகையாகிய கபோதகத்தலை; wooden

support under a cornice or other projection. *"மதலைப்பள்ளி மாறுவன விருப்ப" (நெடுநல்.48).*

*[மதலை + பள்ளி.]*

மதலைமாசகி *madalai-mãšagi,* பெ.(n.) மாதளை; a small tree.

மதலைவாழ்த்து *madalai-vāḻttu,* பெ.(n.) தலைவனது கொலு மண்டபத்துத் தூணைப் புகழ்ந்து கூறும் துறை வகை (மாறன.91, 125); a theme in which the pillar supporting the audience-hall of a hero is extolled.

*[மதலை¹ + வாழ்த்து.]*

மதவடக்கி *mada-v-aḍakki,* பெ.(n.) கள்ளி நீர்; juice of spurge (சா.அக.).

*[மதவு + அடக்கி.]*

மதவலி *mada-vali,* பெ.(n.) 1. மிகுவலி; great strength. *"மைந்துடைமல்லன் மதவலி முருக்கி" (புறநா.80). "பதிற்றுக்கை மதவலி நூற்றுக்கை யாற்றல் ஆயிரம் விரித்தகைம் மாயமள்ள" (பரிபா.3:40-1).* 2. மிக்க வலிமையுடையவன்; person of great strength. *"வலம்புரி பொறித்த வண்கை மதவலி" (சீவக.204).* 3. முருகன்; Lord Murugan. *"சூர்மருங் கறுத்த மொய்ம்பின் மதவலி" (திருமுரு.275).*

*[மல் = மிகுதி. மல்→மள்→மள→மத→மதம் + வலி.]*

மதவலை *mada-valai,* பெ.(n.) நாற் புறத்திலுமுள்ள மீன்களைப் பையினுள் நுழையச் செய்து பிடிக்கும் வலை (இ.வ.); a kind of fishing net in to which fish are driven from all sides.

மதவாசி *mada-vāši,* பெ.(n.) துரியம்; one of the five statums of soul (சா.அக.).

மதவாதி *mada-vādi,* பெ.(n.) சமயத் தருக்கஞ் செய்வோன்; one who is skilled in religious disputation.

*[மதம் + Skt. வாதி.]*

மதவானை *madavāṉai,* பெ.(n.) வட்டக் கிலுகிலுப்பை எனுஞ்செடி; a plant (சா.அக.).

மதவிருந்தம் *mada-virundam,* பெ.(n.) யானை (யாழ்.அக.); elephant.

மதவிழி *mada-viḻi,* பெ.(n.) மதங் கொண்ட கண்; staring look at men by women due to excess of lust or veneral passion (சா.அக.).

*[மதம் + விழி.]*

மதவு¹ *madavu,* பெ.(n.) வலிமை; strength. *"மதவு நடை நல்லான்" (அகநா.14).*

*[மதர்வு→மதவுள (வே.க.4:69).]*

மதவு² *madavu,* பெ.(n.) மதகு (யாழ்.அக.) பார்க்க; see *madagu.*

*[மதகு→மதவு (கொ.வ.).]*

மதவெறி¹ *madaveṟi,* பெ.(n.) 1. அரத்த வெறி; giddiness caused by richness of blood. 2. காமவெறி; venereal passion. 3. குடி வெறி; intoxication (சா.அக.).

*[மதம்² + வெறி.]*

மதவெறி² *madaveṟi,* பெ.(n.) சமயத் திணிப்பு; imposition of religous thoughts.

*[மதம்¹ + வெறி.]*

மதளை *madaḷai,* பெ.(n.) மதலை² பார்க்க (இ.வ.); see *madalai.*

*[மதலை→மதளை.]*

மதளைவையம் *madaḷai-vaiyam,* பெ.(n.) காஞ்சொறி எனும் செடி (யாழ்.அக.); climbing nettle.

மதன் *madaṉ,* பெ.(n.) 1. செருக்கு; arrogance. *"மதனுடை நோன்றாள்" (பட்டினப்.278).* 2. வலிமை; strength. *"மதனுடை முழவுத்தோள்" (புறநா.50).* 3. மனவெழுச்சி; enthusiasm, elation. *"மதனுடைய நோன்றாள்" (புறநா.75, உரை).* 4. அழகு (பிங்.); beauty. 5. மாட்சிமை (பிங்.); greatness, glory. 6. மிகுதி (யாழ்.அக.); abundance, excess. 7. மடமை; ignorance. *"மதனுடை நோன்றாள்" (திருமுரு.7, உரை).* 8. கலக்கம் (யாழ்.அக.); bewilderment.

*[முல் (பொருந்தற் கருத்து வேர்). முல்→ முள்→முள்கு. முள்குதல் = ஒளிகுறைதல், குறைதல். முள்கு → மள்கு → மழுகு → மழுங்குதல் = ஒளி குறைதல், பொலிவழிதல். மழுங்கு → மங்கு. மங்குதல் = ஒளிகுறைதல். மள்கு→மட்கு. மட்குதல் = மயங்குதல், ஒளிமங்குதல். மட்கு →மக்கு = மந்தன், அறிவிலி. மள்கு→மாள்கு→மாழ்கு. மாழ்குதல் = கலத்தல், மயங்குதல், சோம்புதல், மங்குதல். மாள்→மாட்டு (பி.வி.) ஒ.நோ: நீள்→நீட்டு. மாளுதல் = முடிதல். மாட்டுதல் = முடித்தல். மள்→மறு. ஒ.நோ: வெள்→வெறு. வெள்ளிலை→வெற்றிலை. முட்டு→ முட்டி→முடி. முடிதல் = இறுதியாதல், நிறை வேறுதல், செய்ய முடிதல். முடி→மடி→மடிதல் = சாதல், அழிதல். முட்டு→மட்டு=அளவு. மட்டு→மட்டம் = அளவு. மட்டு→மத்து→ மத்தி→மதி. மதித்தல் = அளவிடுதல். மத்து→மட்டு = கள். மத்து→மத்தம் = மயக்கம். மத்து→மத்தன்→மதன் (வே.க.4:68).]*

மதனசலாகை *madaṉa-śalāgai,* பெ.(n.) 1. குயிற்பேடை; female cuckoo. 2. மருந்து வகை; a medicine.

மதனசாத்திரம் *madaṉa-śāttiram,* பெ.(n.) மதனநூல் பார்க்க; see *madaṉa-nūl.*

மதனத்துமதுகம் *madaṉattu-madugam,* பெ.(n.) தேன்மெழுகு; bee's wax (சா.அக.).

மதனநூல் *madaṉa-nūl,* பெ.(n.) அறுபத்து நான்கு கலையுள் ஒன்றாகிய காம நூல்; erotics, one of *aṟupattu-nālukalai* (q.v.).

*[மதனம் + நூல்.]*

மதனம்¹ *madaṉam,* பெ.(n.) 1. காமம் (பிங்.); sexual passion, love. 2. காமன் கணைகளுள் புணர்ச்சி விருப்பத்தைத் தரும் அம்பு (பிங்.); the arrow of *Kāmaṉ* which produces sexual passion. 3. பெருமிதம் (யாழ்.அக.); pride. 4. வசந்தகாலம் (யாழ்.அக.); spring. 5. தேனீ (யாழ்.அக.); bee. 6. தேன்மெழுகு (யாழ்.அக.); bees wax. 7. மருக்காரை (மலை.); emetic-nut. 8. இரண்டடி நீளத்திற்கு மேல் வளர்வதும் சாம்பல் நிறமுள்ளதுமான கடல்மீன் வகை; a sea-fish, salty grey, attaining 2 ft. or more in length-*Diagramma crassis pinum*. 9. 18 அங்குல நீளம் வளர்வதும் வெண்ணிறமுள்ளதுமான கடல் மீன் வகை; a sea-fish, silvery, attaining 18 in. in length-*Chrysophrys datnia.*

*[மதன்→மதனம் (வே.க.4:68).]*

மதனம்² *madaṉam,* பெ.(n.) 1. கடைகை; churning. *"அமுதமதனத்தி லாழிமிசை வரும்" (பாரத.பன்னிரண்.45).* 2. அழிக்கை; destroying, slaying. *"கலிமதனன்" (இறை.23, உரை, பக்.175).* 3. மனக்கலக்கம்; perturbation of mind.

*[மதன்→மதனம்.]*

மதனம்³ *madanam,* பெ.(n.) அமைதி; silence. *"மதனம் மலையைச் சாதிக்கும்" (பழ.).*

*[மத்து→மதனம்.]*

மதனமஞ்சரி *madana-mañjari,* பெ.(n.) கிளிஞ்சில்; bivalve shell.

மதனமஞ்சிகை *madana-mañjigai,* பெ.(n.) சீவக சிந்தாமணி காப்பியத்தில் வரும் கதை மகள்; one of the names of a lady appearing in the epic of *Seevaga chintamani* (சி.பெ.அக.).

மதனரூபி *madana-rūbi,* பெ.(n.) பச்சோந்தி; chameleon.

மதனலிங்கம்¹ *madana-lingam,* பெ.(n.) அமுக்கிறா எனுஞ்செடி; a plant.

மதனலிங்கம்² *madana-lingam,* பெ.(n.) மருக்காரை எனுஞ் செடி (மலை.); emetic-nut.

மதனலீலை *madana-līlai,* பெ.(n.) காம விளையாட்டு; lascivious act, sports in sexual union. *"மதனலீலையிற் பழுதற வழிபடும் பாவை" (பாரத. அருச்சுனன்றீர்.61).*

*[மதனம் + Skt. லீலை.]*

மதனவல்லி *madana-valli,* பெ.(n.) வாலை; Goddess of universal energy (சா.அக.).

மதனவல்லிச்சுண்ணம் *madana-valli-c-cunnam,* பெ.(n.) முப்பூச்சுண்ணம்; a superior kind of white calcined powder used in alchemy and in curing diseases (சா.அக.).

மதனவல்லிநீர் *madana-valli-nīr,* பெ.(n.) தூய நீர்; clear water (சா.அக.).

மதனவல்லிப்பூடு *madana-valli-p-pūdu,* பெ.(n.) காமப்பூ; a plant (சா.அக.).

மதனவேள் *madana-vēl,* பெ.(n.) மதனன், 1 பார்க்க; see *madanan, 1. "மதனவேள் மிகவெய்ய" (சிலப்.6:35, உரை).*

*[மதனம் + வேள்.]*

மதனன்¹ *madanan,* பெ.(n.) சீவக சிந்தாமணி காவியத்தில் வரும் ஒரு கதை மகன்; one of the character of the epic *Śīvaga śintāmani* (சி.பெ.அக.).

ஏமாங்கத நாட்டை வஞ்சனையாகக் கைப்பற்றிய கட்டியங்காரனுடைய அளியன் (மைத்துனன்).

மதனன்² *madanan,* பெ.(n.) 1. காமவேள் (பிங்.); *Kāman,* the god of love. *"மதன னென்றார் தம்மை" (திவ்.பெரியதி.6, 4, 8).* 2. காமுகன்; lover. *"மதனர் மின்னிடைய வர்க்கே" (திவ்.திருவாய். 6, 1, 11).*

*[மதனம்→மதனன்.]*

மதனா *madanā,* பெ.(n.) மீன் வகை; a kind of fish.

மதனாகமம் *madanā-kamam,* பெ.(n.) மதனநூல் பார்க்க; see *madana-nūl. "மதனாகமங்கள் விளம்பு மால்" (கொக்கோ. 3, 28).*

மதனாங்குசம் *madanānguśam,* பெ.(n.) 1. மதனாலயம், 1 பார்க்க; see *madanālayam.* 2. நகம்; finger nail.

*[மதன் + அங்குசம்.]*

மதனாயுதம் *madanāyudam,* பெ.(n.) மதனாலயம், 1 பார்க்க (யாழ்.அக.); see *madanālayam*

*[மதன் + ஆயுதம்.]*

**மதனாலயம்** *madaṉālayam,* பெ.(n.) 1. பெண் குறி; *pudendum muliebra. "புண்டரநுதலி பொற்பாம் புதுமதனாலயம் போய்" (இரகு. மாலையீ.79).* 2. தாமரை (மலை.); lotus.

*[மதன் + ஆலயம்.]*

**மதனாவத்தை** *madaṉāvattai,* பெ.(n.) பிரிவுத்துயர் (யாழ்.அக.); pangs of separation, as of lovers.

*[மதன் + Skt. அவத்தை.]*

**மதனைவென்றோன்** *madaṉai-veṉṟōṉ,* பெ.(n.) அருகக்கடவுள் (சூடா.); Arhat, as the conqueror of *Kāmāṉ.*

*[மதனை + வென்றோன்.]*

**மதனோற்சவம்** *madaṉōṟcavam,* பெ.(n.) வேனில் விழா (யாழ்.அக.); festival celebrating the spring.

*[மதன் + உற்சவம்.]*

**மதனோற்சவை** *madaṉōṟcavai,* பெ.(n.) அரம்பை (யாழ்.அக.); celestial damsel.

*[மதன் + உள்சவை.]*

**மதா** *madā,* பெ.(n.) சிறட்டி; பிரண்டை; a climber (சா.அக.).

**மதாகம்** *madāgam,* பெ.(n.) இலுப்பை மரம்; a tree (சா.அக.).

**மதாசலம்** *madā-šalam,* பெ.(n.) யானை; elephant.

**மதாசாரம்** *madāšāram,* பெ.(n.) சமய வொழுக்கம்; religious, practice, observance of religious rites and rules.

*[மதம் + Skt. ஆசாரம்.]*

**மதாணி** *madāṇi,* பெ.(n.) 1. கழுத்தணியின் தொங்கல்; large pendant suspended from the necklace. *"திண்கதிர் மதாணி" (மதுரைக்.461).* 2. அணிகலன் (ஆபரணம்) (திவா.); jewel.

**மதாத்தியம்** *madāttiyam,* பெ.(n.) 1. கள், வெறியம் அதிகமாகக் குடித்ததினால் அல்லது போதையினால் ஏற்படும் நோய்; a kind of disease arising from intoxication due to liquor. 2. நினைவு மறந்து மரம் போல் சாய்ந்து மூர்ச்சையுற்றவன் போல் உடல் அசைவற்றுக் கிடத்தல்; to lie down senselessly.

**மதாந்தபுத்தி** *madānda-putti,* பெ.(n.) இறுமாப்பினால் ஆழ்ந்து செல்லாத அறிவு (கொ.வ.); superficially or shallowness due to haughtiness.

**மதாபிமானி** *madābimāṉi,* பெ.(n.) மதப் பற்றுள்ளவன்; enthusiast, fanatic.

*[மதம் + Skt. அபிமானி.]*

**மதாமடையம்** *madā-maḍaiyam,* பெ.(n.) கண்ணிமை; eye lid.

**மதார்** *madār,* பெ.(n.) செருக்கு (வின்.); arrogance.

*[மதம்→மதார். மதம் = செருக்கு, கள், தேன், யானை மதம்.]*

**மதார்சிங்கு** *madār-šiṅgu,* பெ.(n.) மருந்துச் சரக்கு வகை (C.G.); litharge, impure oxide of lead.

**மதாரம்** *madāram,* பெ.(n.) 1. மான்மணத்தி; musk. 2. யானை; elephant. 3. பன்றி; pig.

**மதாலம்** *madālam,* பெ.(n.) கொன்றைச் செடி (மலை.); senna.

மதாலாபி *madālābi,* பெ.(n.) குயில்; Indian cuckoo.

மதாவரிசி *madā-v-ariši,* பெ.(n.) ஓமாலிகை முப்பத்திரண்டனுள் ஒன்று (சிலப்.6:27, உரை); a fragrant substance, one of 32 *ōmaligai* (q.v.).

மதாவளம் *madāvaḷam,* பெ.(n.) யானை (பிங்.); elephant.

மதாளி-த்தல் *madāḷi-,* 11 செ.கு.வி.(v.i.) 1. செழித்தல் (வின்.); to thrive, flourish, to be luxuriant, rich and abundant. 2. பயிர் முதலியன பயன்படாதபடி கொழுத்துக் கெடுதல்; to be too luxuriant to be productive, as plants, soil, etc. *"பயிர் மதாளித்துப் போனால் நுனிகளை அறுத்துப் போடுகை" (ஈடு, 9, 5, 7, ஜீ, அரும்.).*

மதானுசாரம் *madāṉu-šāram,* பெ.(n.) மதாசாரம் பார்க்க (வின்.); see *madā-šāram.*

மதானுசாரி *madāṉu-šāri,* பெ.(n.) மத சாரத்தைப் பின்பற்றுவோன் (வின்.); one who follows the rites of his creed.

மதி¹-த்தல் *madi-,* 11 செ.குன்றாவி.(v.t.) 1. அளவிடுதல்; to estimate. *"மண் விழைந்து வாழ்நாண் மதியாமை" (திரிகடு.29).* 2. பொருட்படுத்துதல்; to esteem, regard, respect, reverence. *"மண்ணாள்வான் மதித்துமிரேன்" (திருவாச. 5, 12).* 3. கருதுதல்; to think, to consider. *"ஆடலை மதித்தான்" (கந்தபு. திருவிளை.1).* 4. ஊழ்கம் செய்தல் (தியானித்தல்); to meditate upon. *"நந்தியங் குரவனை மதிப்பாம்" (விநாயகபு. கடவுள்.13).* 5. துணிதல்; to decide; to ascertain; to be assured of. *"தேர்மணிக் குரலெனா விவண் மதிக்குமன்" (கலித்.126, 7).*

*[முல் (பொருந்தற் கருத்து வேர்)→முள் → முட்டு→மட்டு→மட்டி. முத்துதல் (முட்டுதல்) →மத்துதல் (மட்டுதல்) = பொருந்துதல், ஒத்தல். முத்து (முட்டு)→மத்து = அளவு. மத்து→மத்தி. மத்தித்தல் = அளவிடுதல். மத்து→மதி (வே.க. 4:66).]*

மதி² *madi,* பெ.(n.) 1. இயற்கையறிவு; understanding, intellect. *"மதுநுட்ப நூலோடுடை யார்க்கு" (குறள், 636).* 2. பகுத்தறிவு; discrimination, judgement. *"மதியிலி மடநெஞ்சே" (திருவாச.5, 33).* 3. வேதங்களிற் கூறியவற்றைக் கேட்டலும் அதன்படி நடத்தலுமாகிய செய்கடன் (சங்.அக.); duty of listening to exposition of the *vēdas* and acting inaccordance with the precepts thereof. 4. மதிப்பு; esteem, value. *"நீண்மதிக் குலிசம்" (இரகு. யாகப்.92).* 5. காசியபரின் மனைவியான தட்சன் மகள்; a wife of *Kāšyapaṉ* and daughter of Dhaksan. *"மதி யென்பாள்..... பயந்தனளால்" (கம்பரா. சடாயுகாண்.26).* 6. பிண்டி மரம் (சங்.அக.); *asōka* tree.

மதி³ *madi,* பெ.(n.) 1. நிலவு; moon. *"மதிப்பின்னீர பேதையார் நட்பு" (குறள், 782).* 2. மாதம்; month. *"தசமதி தாயொடு தான்படும்" (திருவாச.4, 24).* 3. ஓரை (இராசி.); sign of the zodiac. *"ஆறிரு மதியினும்" (சிலப்.26:25).* 4. செல்வக் கடவுள் (குபேரன்); *Kubēraṉ. "தென்றிசை மதியின் வாளி" (பாரத.நிரைமீட்.100).* 5. இடைகலை; breath passing through the left nostril. *"மதியிலிரு நான் கிரேசித்து" (காசிக.*

*யோக.23).* 6. மதிநாள் பார்க்க (சூடா.); see *madi-nāḷ*. 7. ஒன்று என்னும் எண்ணைக் குறிக்கும் குழூஉக்குறி (E.T.ii.96); the number`one'. 8. கற்கடகராசி (சங்.அக.); cancer of the zodiac, as the moon's house.

*[முல்→முள்→மள்→மட்டு→மத்து. மத்து→மது = கள், தேன், இலுப்பைப்பூ முதலியவற்றினின்று காய்ச்சி யிறக்கும் வெறிநீர், அமுதம், இனிமை. மது→மதி. மதி = மயக்கும் நிலவு. இப்பொருள் வடமொழியிலில்லை. ஒ.நோ: L. luna-moon. L. lunaticus. E. lunatic - insane person. E.lunacy = insanity. பண்டைக்காலத்தில் நிலவொளியாற் கோட்டி யுண்டாவதாக ஒரு கருத்து உலகம் முழுதும் பரவியிருந்தது (வே.க.4:67).]*

மதி⁴ *madi,* பெ.(n.) அதிமதுரம் (சங்.அக.); liquorice plant.

மதி⁵ *madi,* பெ.(n.) 1. ஒரு முன்னிலை யசைச் சொல் (தொல்.சொல்.276); an euphonic suffix of the imperative mood. 2. ஒரு படர்க்கைச் சொல்; expletive of the third person. *"பரிசி னல்கு மதி" (திருமுரு. 295).*

மதி⁶–த்தல் *madi-,* 11 செ.குன்றாவி.(v.t.) கடைதல்; to churn. *"மந்தரங்கொடு மதித்த நாள்" (சேதுபு.சங்கர.20).*

*[மத்து→மதி.]*

மதி⁷–த்தல் *madi-,*11 செ.கு.வி.(v.i.) 1. கொழுத்தல்; to be haughty. *"மதித் தெதிர் தெவ்வர்" (இரகு.மீட்சி.37).* 2. மதங்கொள்ளுதல்; to be furious. *"மதித்த களிற்றினின்" (கம்பரா. பஞ்சசே. 56).* 3. உப்புதல் (இ.வ.); to bloat. *"உடம்பு மதித்து விட்டது" (உ.வ.).*

மதி⁸ *madi,* பெ.(n.) யானை; elephant. *"கோண் மதித்திடர் கிடந்தன" (கம்பரா. நாகபாச.136).*

மதிக்கண்ணியான் *madi-k-kaṇṇiyāṉ,* பெ.(n.) சிவன்; *Šivaṉ,* as wearing the moon an wreath on his head. *"கொன்றை மாலைக் குளிர்மதிக் கண்ணியாற்கு" (சீவக.208).*

*[மதி + கண்ணியான்.]*

மதிக்கணம் *mati-k-kaṇam,* பெ.(n.) நூலின் முதற்செய்யுளின் முதலில் அமையும்படி புளிமாங்காய் என்னும் வாய்ப்பாடு பற்றி வரும் நற்கணச்சீர்வகை; metrical foot consisting of one nirai and two *nēr,* considered auspicious at the commencement of a poem.

*[மதி + கணம்.]*

மதிக்கல் *madi-k-kal,* பெ.(n.) நிலாக் கல்; moon stone.

*[மதி + கல்.]*

மதிக்கலை *madi-k-kalai,* பெ.(n.) 1. வளர்வதும் தேய்வதுமான நிலவுக் கலை; phase of the moon. 2. பதினாறு (தைலவ.தைல.); the number '16'.

*[மதி + கலை.]*

மதிக்கொழுந்து *madi-k-koḻundu,* பெ.(n.) இளம்பிறை; crescent moon, as tender. *"வெண் மதிக்கொழுந் தொன்று" (திருவாச. 6, 4).*

*[மதி + கொழுந்து.]*

மதிகம்¹ *madigam,* பெ.(n.) மோர்; butter milk (சா.அக.).

மதிகம்² *madigam,* பெ.(n.) செடிவகை; matico plant (சா.அக.).

**மதிகயம்** *madikayam,* பெ.(n.) ஒருவகைத் தெள்ளுக் கொடி; a creeper (சா.அக.).

**மதிகாத்தி** *madi-kātti,* பெ.(n.) 1. காசுமீரப் படிக்கல்; a kind of mineral stone found in Kashmere. 2. பளிங்கு; crystal; mirror (சா.அக.).

**மதிகாந்தி** *madi-gāndi,* பெ.(n.) பளிங்கு (சங்.அக.); crystal.

**மதிகாலம்** *mādi-kālam,* பெ.(n.) இரவுக் காலம்; night time.

*[மதி + காலம்.]*

**மதிகூர்மை**[1] *madi-kūrmai,* பெ.(n.) அறிவுக் கூர்மை; keenness, intelligence.

*[மதி + கூர்மை.]*

**மதிகூர்மை**[2] *madi-kūrmai,* பெ.(n.) இந்துப்பு (சங்.அக.); rock salt.

**மதிகெடு-தல்** *madi-kedu-,* 20 செ.கு.வி. (v.i.) மயக்குதல்; to stupefy.

*[மதி + கெடு-தல்.]*

**மதிகேடன்** *madi-kēdan,* பெ.(n.) நல்லறிவில்லாதவன்; fool. *"வஞ்சமணர் தேரர் மதிகேடர்" (தேவா.397, 10).*

*[மதி + கேடன்.]*

**மதிகேடி** *madi-kēdi,* பெ.(n.) அறிவில்லாத பெண்; foolish woman.

*[மதி + கேடி.]*

**மதிகேடு** *madi-kēdu,* பெ.(n.) 1. அறிவு கெடுகை; losing sense. 2. உன்மத்தங் கொள்கை; becoming mad.

*[மதி + கேடு.]*

**மதிச்சடையன்** *madi-c-cadaiyan,* பெ.(n.) (நிலவினைச் சடையிலே தரித்தவன்) சிவன்; *Šivan,* as wearing the moon on his locks.

*[மதி + சடையன்.]*

**மதிச்சாரம்** *madi-c-cāram,* பெ.(n.) சவ்வீரம்; a medicinal compound (சா.அக.).

**மதிச்சுண்ணம்** *madi-c-cunnam,* பெ.(n.) முப்பு; calicined three salts which includes efflorescence.

*[மதி + சுண்ணம்.]*

**மதிசகன்** *madi-šagan,* பெ.(n.) (நிலவினது தோழன்) மன்மதன் (பிங்.); *Kāman,* as the moon's companion.

*[மதி + சகன்.]*

**மதிசாக்கினி** *madi-šākkini,* பெ.(n.) சிறுவாலுளுவையரிசி; a plant (சா.அக.).

**மதிசாரம்** *madi-šāram,* பெ.(n.) ஒன்பான் மணிகளுளொன்று, கெம்பு; one of nine gems (சா.அக.).

**மதிசிக்குரு** *madiši-k-kuru,* பெ.(n.) புனல் முருங்கை; a tree *Indigofera Arcuata* (சா.அக.).

**மதிசூடி** *madi-šūdi,* பெ.(n.) சிவன்; *Šivan,* as wearing the moon. *"மதிசூடி தன்னோடையனை" (திவ்.இயற்.நான்முகன்.66).*

*[மதி + சூடி.]*

**மதிசெயநீர்** *madi-šeya-nīr,* பெ.(n.) 1. 9 அல்லது 10 மாதத்தியக் கருப்பிண்டத்திலிருந்து இறக்கும் செயநீர்; a pungent liquid extracted for 9 or 10 months old foetus by adding some salts. 2. வாலை செயநீர்; pungent liquid (சா.அக.).

மதிஞன் *madiñan*, பெ.(n.) அறிஞன்; learned man. *"மதிஞர் வளமுற்ற வேதத்தை யோதியே" (திருமந்.61).*

*[மதி→மதிஞன்.]*

மதிஞானம் *madi-ñānam*, பெ.(n.) இயற்கை யறிவு; knowledge gained by the mental faculties and the senses. *"மதிஞானத்தான் அறிய வொண்ணாத குணத்தோன்" (சீவக.3097, உரை).*

*[மதி + ஞானம்.]*

மதிதம் *madidam*, பெ.(n.) 1. மோர் (சூடா.); butter-milk. 2. தயிர் (பிங்.); curd.

மதிதறு *madi-taṟu*, பெ.(n.) பொன் மணல்; gold ore (சா.அக.).

மதிதிசை *madi-tišai*, பெ.(n.) செல்வக் கடவுள் இருப்பதாகக் கருதப்படும் வடக்கு (பிங்.); north, as the quarter of *Kubēran*.

மதிதிறாணம் *madi-tiṟāṇam*, பெ.(n.) கரும்பு; sugarcane (சா.அக.).

மதிதேயல் *madi-tēyal*, பெ.(n.) மூச்சை யடக்கி விடுதற்குப் பழகுகை; to lower exhalation (சா.அக.).

மதிநாள் *madi-nāḷ*, பெ.(n.) ஐந்தாவது விண்மீன் (பிங்.); the fifth *naksatra*.

*[மதி + நாள்.]*

மதிநீர் *madi-nīr*, பெ.(n.) செயநீர்; pungent liquid extracted from exposing to the moon (சா.அக.).

மறுவ. மதிசலம்

*[மதி + நீர்.]*

மதிநுட்பம் *madi-nuṭpam*, பெ.(n.) இயற்கை நுண்ணறிவு; shrewdness, keenness of natural intelligence. *"மதிநுட்ப நூலோடுடையார்க்கு" (குறள், 636).*

*[மதி + நுட்பம்.]*

மதிநூல் *madi-nūl*, பெ.(n.) சமண நூல்; scripture. *"எல்லா மதிநூலும் பொதிந்தது..... நான்முக னற்பெயரே" (திருநூற்.21).*

*[மதி + நூல்.]*

மதிநெறி *madi-neṟi*, பெ.(n.) நிலாச்சரவடி; lunar race of kings. *"மதிநெறி மாதை வேட்பான்" (திருவாலவா.4, 24).*

*[மதி + நெறி.]*

மதிப்ப *madippa*, பெ.(n.) ஓர் உவம வாய்பாடு (தொல்.பொருள்.289); a particle of comparison.

*[மதி→ மதிப்ப.]*

மதிப்பகை *madippagai*, பெ.(n.) 1. கருங் கோள்; the ascending node. 2. செங்கோள்; the descending node.

*[மதி + பகை.]*

மதிப்பாகம் *madi-p-pāgam*, பெ.(n.) மதிப்பிள்ளை பார்க்க; see *madi-p-piḷḷai*. *"அவிர்மதிப் பாகக் கன்மேற் காய்ந்தவாள்..... தேய்த்து" (சீவக.2496).*

*[மதி + பாகம்.]*

மதிப்பாகு *madi-p-pāgu*, பெ.(n.) மதிப் பிள்ளை பார்க்க; see *madi-p-piḷḷai*. *"செழுமதிப் பாகென வாருகிர் குறைத்து" (பெருங்.இலாவாண.4, 186).*

*[மதி + பாகு.]*

மதிப்பிராந்தி *madi-p-pirāndi,* பெ.(n.) மதிமயக்கம் பார்க்க (வின்.); see *madi-mayakkam.*

மதிப்பிள்ளை *madi-p-piḷḷai,* பெ.(n.) பிறை நிலவு; crescent moon. *"திருச்சடைமேல் வாகைமா மதிப்பிள்ளை பாடி" (திருவாச.9, 17).*

*[மதி + பிள்ளை.]*

மதிப்பிளவு *madi-p-piḷavu,* பெ.(n.) மதிப் பிள்ளை பார்க்க; see *madi-p-piḷḷai. "வேக நஞ்சறா மதிப்பிளவு" (தகதயாகப்.155).*

*[மதி + பிளவு.]*

மதிப்பு[1] *madippu,* பெ.(n.) 1. அளவிடுகை; estimate, valuation. 2. மேன்மை படுத்துகை, பெருமைபடுத்துகை; esteem, respect, regard. *"உமையைச் சால மதிப்பொழிந்த வல்லமரர் மாண்டார்" (தேவா.1014, 7).* 3. கருத்து; intention, idea, purpose. *"மண்ணுலகாளு மதிப்பை யொழித்தே" (பிரமோத்.8, 99).*

*[முள்→ முட்டு→ முட்டி = முடி. முடித்தல் = முற்றுவித்தல், நிறைவேறுதல். முடி→மடி. மடிதல் = சாதல், அழிதல். முட்டு→மட்டு = அளவு, நில அளவு வகை, எல்லை, குத்துமதிப்பு, ஒன்றோடொன்று முட்டுகிற நிலையிலேயே ஒன்றன் நீள அளவு தெரிதல் காண்க. மட்டு→மட்டம் = அளவு, சமநிலை, அளவுகோல், எல்லை. மட்டு→ மட்டி = தாழ்ந்த மதிநிலையுடைய மூடன், பரும்படி, மட்டிக்காரை, மக்கு. மட்டு→மட்டை = பயனற்ற—வள் —வன்—து. முத்துல்→(முட்டுதல்) = பொருந்துதல், ஒத்தல். முத்து →(முட்டு)→மத்து (மட்டு) = அளவு. மத்து→மத்தி. மத்தித்தல் = அளவிடுதல். மத்தி→மதி (வே.க. 4:66). மதி→ மதிப்பு.]*

மதிப்பு[2] *madippu,* பெ.(n.) கடைகை (சங். அக.); churning, turning.

*[முல் (பொருந்தற் கருத்து வேர்)→ முல் → முது→ முத்து. முத்துதல் = சேர்தல், ஒன்றை யொன்று தொடுதல். முத்து→ முத்தி = முத்தம். முத்து→ முத்தை = திரட்சி, சோற்றுருண்டை. முத்து→மொத்து = வலுத்த அடி. மொத்து→மத்து = பருப்பு, கீரை முதலியவற்றைக் கடையுங் கருவி, தயிர்கடையுங் கருவி. மத்து→மத்தி. மத்தித்தல் = மத்தினாற் கடைதல். மத்தி→மதி (வே.க.4:50) மத்தி→மத்திப்பு→மதிப்பு. ஒநோ.கண்டி→ கண்டிப்பு →கடிப்பு.]*

மதிப்பு[3] *madippu,* பெ.(n.) கொழுத்திருக்கை (வின்.); growing fat, as a person; growing leafy, as a plant.

*[முல்→முது→மொது→மொத்து. மொத்துதல் = உரக்க அல்லது வலுக்க அடித்தல். மொத்து = வலுத்த அடி. மொத்து→மொத்தி = புடைப்பு. மொத்து = தடித்த—வன்—வள்—து. மொத்து→ மொத்தன் = தடித்தவன் (வே.க.4:49). மொத்து→மத்து→மத்தி →மத்திப்பு→மதிப்பு.]*

மதிப்புருடம் *madi-p-puruḍam,* பெ.(n.) தொன்மணியுளொன்று; one of nine gems.

மதிபதி *madi-padi,* பெ.(n.) செந்திணை; red millet (சா.அக.).

மதிபதிச்சம் *madi-padiccam,* பெ.(n.) வாலுளுவை (மலை.); black - oil tree.

மதிபாணி *madi-pāṇi,* பெ.(n.) வட்டத்திருப்பி; a twiner (சா.அக.).

மதிமகன் *madi-magaṉ,* பெ.(n.) (நிலவின் புதல்வன்) அறிவன் (பிங்.); mercury, as the son of the moon-god.

*[மதி + மகன். மதி = நிலவு.]*

**மதிமண்டலம்** *madi-maṇḍalam,* பெ.(n.) 1. புருவநடுவம்; *(yōgā)* centre of the forehead, space between the eye-brows, as the mystic seat of the moon. *"அலர் மதிமண்டலத்தின் முகமார்க்க வமுது" (சி.சி.8, 21, ஞானப்.).* 2. நாபித்தானம் (சி.சி.8, 21, மறைஞா.); *(yōgā)* navel region. 3. பிரமரந்திரத்தின் நுனிப்பகுதி (சி.சி.8, 21, சிவாக்.); *(yōgā)* region at the top of pirama-rantiram.

*[மதி + மண்டலம்.]*

**மதிமணல்** *madi-maṇal,* பெ.(n.) வெள்ளி மணல் (சங்.அக.); white glittering sand, as silvery like the moon.

*[மதி + மணல். மதி = நிலவு. நிலவின் வெண்மை போன்ற வெண்ணிற மணல்.]*

**மதிமந்தம்** *madi-mandam,* பெ.(n.) கண் சிவந்து உறுத்தி, பீளை கட்டி, நீர் வடிந்து, பார்வை குன்றும் ஒருவகைக் கண்ணோய்; an eye disease accompanied with inflammation, pain dimness of sight etc. (சா.அக.).

**மதிமயக்கம்**[1] *madi-mayakkam,* பெ.(n.) 1. பித்தியம்; madness. 2. வெறி; chorea.

*[மதி + மயக்கம்.]*

**மதிமயக்கம்**[2] *madi-mayakkam,* பெ.(n.) அறிவு மாறாட்டம்; bewilderment; confusion; insobriety; dementia.

*[மதி + மயக்கம்.]*

**மதிமயக்கி** *madi-mayakki,* பெ.(n.) 1. கொன்றை (பாலவா.364); senna; cassia. 2. திகைப்பூடு (மூ.அ.); a plant supposed to cause confusion of mind and numbness of body when stepped upon. 3. ஊர்ந்து செல்லும் சிறு நச்சுயிரி வகை (மூ.அ.); a small poisonous reptile.

*[மதி + மயக்கி.]*

**மதிமயங்கி** *madi-mayaṅgi,* பெ.(n.) மதி மயக்கி, 1 பார்க்க (பாலவா. 364, உரை); see *madi-mayakki.*

*[மதி + மயங்கி.]*

**மதிமரசம்** *madi-marasam,* பெ.(n.) நிலவு; moon (சா.அக.).

**மதிமலை** *madi-malai,* பெ.(n.) வெள்ளி மலை; silver mountain.

*[மதி + மலை. மதி = நிலவு. நிலவு போன்ற வெண்ணிற மலை.]*

**மதிமாறாட்டம்** *madi-māṟāṭṭam,* பெ.(n.) அறிவு தடுமாறுகை; perplexity of mind.

*[மதி + மாறாட்டம்.]*

**மதிமான்** *madimāṉ,* பெ.(n.) அறிவாளி (சங்.அக.); wise man.

*[மதி + மான்.]*

**மதிமுகம்** *madimugam,* பெ.(n.) 1. நிலவு போன்ற முகம்; moon-like face. *"மதிமுக மடந்தைய ரேந்தினர் வந்தே" (திவ். திருவாய்.10, 9, 10).* 2. மந்திரவிச்சை வகை; a kind of magic art. *"மதிமுக மறியு நாமே வாடுவ தென்னை" (சீவக.1708).*

*[மதி + முகம். மதி = நிலவு.]*

**மதிமேகக்கல்** *madi-mēga-k-kal,* பெ.(n.) குருவிந்தக் கல் (சங்.அக.); corundum.

**மதிமை** *madimai,* பெ.(n.) அறிவு; knowledge. *"மதிமை சாலா மருட்கை நான்கே" (தொல்.பொருள். 255).*

*[மதி→மதிமை. மதி = அறிவு.]*

**மதிமோசம்** *madi-mōšam,* பெ.(n.) அறிவின்மை lack of sense; stupidity, folly. *"மதிமோசமோ உன்றன் விதிவசமோ... அருவருக்கிறாய்" (இராமநா.உயுத்.2).*

*[மதி + மோசம். மதி = அறிவு.]*

**மதியகந்தம்** *madiya-kandam,* பெ.(n.) மாமரம்; mango tree (சா.அக.).

**மதியங்காண்(ணு)-தல்** *madiyan-kāṉ-,* 16 செ.குன்றாவி.(v.t.) மதிப்பிடுதல் (வின்.); to make a rough estimate.

*[மதி = மதிப்பு. மதியம் + காண்-,]*

**மதியங்கு** *madiyaṅgu,* பெ. (n.) ஒரு வகை நறுமணப் பண்டம்; a kind of fragrant substance. *"அரக்கு மதியங்கு மரும்பெறற் பயினும்" (பெருங்.இலாவாண.18, 46, அரும்.).*

**மதியநிறம்** *madiya-niṟam,* பெ.(n.) நீலஞ் சோதிச் செடி; a plant (சா.அக.).

**மதியப்பூப்பு** *madiya-p-pūppu,* பெ.(n.) நிலவுத் தோற்றம்; moon rise. *"சகோரங் கலை மதியப்பூப்புக் கெதிராது போதுமோ" (திருவாரு.394).*

*[மதியம் + பூப்பு. மதி = நிலவு.]*

**மதியம்[1]** *madiyam,* பெ. (n.) 1. நிலவு (பிங்.); moon. *"கொன்றை மதியமும்... துன்றிய சென்னியர்" (திருவாச.17, 10).* 2. முழு நிலவு; full moon. *"வானூர் மதியம்போல் வைகலுந்தேயுமே தானே சிறியார் தொடர்பு" (நாலடி, 125).* 3. நிறைமதி, முழுமதி; full moon day. 4. மாதம் (பிங்.); month.

**மதியம்[2]** *madiyam,* பெ.(n.) மதிப்பு (வின்.); estimate.

*[மதி→மதியம். மதி = அளவிடு.]*

**மதியாநங்கை** *madiyā-naṅgai,* பெ.(n.) சிறியாணங்கை பார்க்க; see *ciṟiyāṇaṅgai* (சா.அக.).

**மதியாம்பல்** *madi-y-āmbal,* பெ.(n.) சீந்தில் (மலை.); gulancha.

*[மதி + ஆம்பல்.]*

**மதியில்மிக்கான்** *madiyil-mikkāṉ,* பெ. (n.) ஒருவகைச் செய்நஞ்சு; a kind of prepared arsenic (சா.அக.).

**மதியிலி** *madiyili,* பெ. (n.) அறிவற்ற-வன்-வள்-து; fool. *"எம்மதியிலி மடநெஞ்சே" (திருவாச.5, 33).*

*[மதி + இலி. மதி = அறிவு.]*

**மதியின்மை** *madi-y-iṉmai,* பெ.(n.) மதி மோசம் பார்க்க; see *madi-mōšam.*

மறுவ. மதியீனம்.

*[மதி + இன்மை.]*

**மதியுடம்படு-தல்** *madi-y-udampaḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. தலைவி தலைவன் கருத்தோடு இணங்கியவளாதல் (அகப்.); to reciprocate love, as a heroine. *"மிதிலைமூதூ ரெய்திய ஞான்றே மதியுடம் பட்ட மாக்கட்சீதை" (தொல்.பொருள்.54, உரை).* 2. தலைவன் தலைவியரிருவர்க்குங் கூட்ட முண்மையை அவர்தம் கருத்தொற்றுமை பற்றித் தோழி யுணர்தல் (தொல்.பொருள்.128, உரை) (திருக்கோ.71, கொளு.) (அகப்.); to discover, as a maid, the love affair of her mistress.

*[மதி + உடம்படு-,]*

**மதியுடம்பபடுத்தல்** *madi-y-uḍampaḍuttal,* பெ.(n.) 1. (அகப்.) தலைவன் தலைவியிருவர் கருத்தொற்றுமையால் அவர்தம்முட் கூட்டமுண்மையைத் தோழி யுணரும் அகத்துறை (தொல்.பொருள்.127); theme of a maid discovering the love affair of her mistress. 2. (அகப்.) தலைவிமீது தான் கொண்ட காதலைத் தலைவன் தோழிக்கு உணர்த்தி அவளது அறிவை யொரு வழிப்படுத்தும் அகத்துறை (களவியற்.பக்.42); theme of a hero disclosing his love-affair to the maid of his lady - love and securing her help.

*[மதி + உடம்பபடுத்தல்.]*

**மதியுடையான்** *madi-y-uḍaiyāṉ,* பெ.(n.) முப்பூ செயற்பாட்டாளர்கள்; alchemists.

**மதியுப்பு** *madi-y-uppu,* பெ.(n.) 1. வளைய லுப்பு (மூ.அ.); a medicinal salt, impure carbonate of soda. 2. இந்துப்பு; rock salt.

**மதியையழைத்தல்** *madiyai-y-aḻaittal,* பெ.(n.) அம்புலிப்பருவம்; a section of *piḷḷai-t-tamiḻ.*

*[மதியை + அழைத்தல்.]*

**மதிரம்** *madiram,* பெ.(n.) மதிரை பார்க்க; see *madirai.* *"மதுக மதிர முதலா" (பெருங். வத்தவ.11, 87).*

*[மதிரை→மதிரம்.]*

**மதிரவி** *madiravi,* பெ.(n.) சாதிலிங்கத்தி னின்று வடித்த சாறு (சங். அக.); essence of vermilion.

**மதிருணம்** *madiruṇam,* பெ.(n.) கரும்பு; sugarcane (சா.அக.).

**மதிரை** *madirai,* பெ.(n.) கள் (சூடா.); toddy.

**மதில்** *madil,* பெ.(n.) 1. கோட்டைச் சுவர்; wall round a fort; fortification. *"நீர்முற்றி மதில்பொரூஉம் பகையல்லால்" (கலித்.67).* 2. சுவர்; wall. 3. சுவரின் மேற்கட்டு (C.E.M.); coping. 4. இஞ்சி (தைலவ. தைல.); jamaica ginger.

தெ. மதலு; க., ம. மதில்.

**மதிலரண்** *madil-araṇ,* பெ. (n.) நால்வகை அரண்களுள் ஒன்று (பிங்.) (குறள், 742, உரை); fortress, one of four *araṇ,* q.v., of a city.

*[மதில் + அரண்.]*

**மதிலவணம்** *madi-lavaṇam,* பெ.(n.) இந்துப்பு (மூ.அ.); rock salt.

**மதிலுண்மேடை** *madiluṇ-mēḍai,* பெ.(n.) கொத்தளம் (யாழ்.அக.); rampart in fortification.

*[மதில் + உள் + மேடை.]*

**மதிலுறுப்பு** *madil-uṟuppu,* பெ.(n.) 1. கோட்டை யரணைச் சார்ந்த ஒரு பகுதி (வின்.); bastion of a fortified wall. 2. மதிலின் சித்திரங்கள் (யாழ்.அக.); pictures drawn on a fort wall.

*[மதில் + உறுப்பு.]*

**மதிவட்டை** *madi-vaṭṭai,* பெ.(n.) ஒருவகை நோய்; a disease (சா.அக.).

**மதிவல்லி** *madi-valli,* பெ.(n.) கொத்தான் கொடி; a twiggy plant (சா.அக.).

**மதிவல்லோர்** *madi-vallōr,* பெ.(n.) 1. அறிவாளர்; wise men. *"அதனள வுண்டோர் கோண் மதிவல்லோர்க்கே" (அகநா.48).* 2. அமைச்சர் (வின்.); king's ministers, counsellers, statesmen.

*[மதி + வல்லோர். மதி = அறிவு.]*

**மதிவாணனார்** *madivāṇaṉār,* பெ.(n.) கடைச்சங்க காலத்தவனும் நாடகத் தமிழ் நூலியற்றியவனுமான பாண்டியன் (சிலப். உரைச் சிறப்புப்.); a *Pāṇḍya* king of the last *Saṅgam* author of a dramatic work.

**மதிவாணர்** *madivāṇar,* பெ.(n.) மறைந்து போன நாடகத்தமிழ் என்னும் நூலின் ஆசிரியர்; author of *nāḍaga-t-tamiḻ* a lost book (சி.பெ.அக.).

**மதிவாம்பல்** *madi-v-āmbal,* பெ.(n.) சீந்தில்; moon creeper (சா.அக.).

**மதிவாமியம்** *madi-vāmiyam,* பெ.(n.) சீந்திற் கொடி; moon creeper.

**மதிவாயிபம்** *madi-vāyibam,* பெ.(n.) மரவுரி நாதாக்கள் சட்டை; a coat from the fibres of the tree worn by yogis to protect themselves from cold (சா.அக.).

**மதிவாவி** *madi-vāvi,* பெ.(n.) செம்பரத்தை; a shrub (சா.அக.).

**மதிவீடு** *madi-vīḍu,* பெ.(n.) நிலவுக் கலை; vital air passing through left nostril (சா.அக.).

**மதிற்கள்ளி** *madiṟ-kaḷḷi,* பெ.(n.) வேலிக் கள்ளி (சங்.அக.); a kind of spurge.

*[மதில் + கள்ளி. மதில் = சுற்றுச்சுவர், சுற்றுச் சுவரைப் போன்றமைந்த வேலி.]*

**மதிற்சுற்று** *madiṟ-šuṟṟu,* பெ.(n.) 1. சுற்று மதில் (திவா.); surrounding wall. 2. சுற்றாலை (பிரகாரம்) (insc.) arcade surrounding a shrine.

*[மதில் + சுற்று.]*

**மதிற்சூட்டு** *madiṟ-šūṭṭu,* பெ.(n.) கோட்டை மதிலின் தலையீடான உறுப்பு; coping of the wall of a fort.

*[மதில் + சூட்டு.]*

**மதின்மரம்** *madiṉ-maram,* பெ.(n.) கோட்டை மதிலின் கதவிலிடுங் கணைய மரம்; cross - bar on the door of a fortified wall. *"மதின்மர முருக்கி" (பதிற்றுப்.15:3).*

*[மதில் + மரம்.]*

**மது** *madu,* பெ.(n.) 1. தேன்; honey, nectar of flowers. *"மதுவின் குடங்களும்" (சிலப்.25, 38).* 2. கள் (பிங்.); toddy. *"மதுமறைந் துண்டோர் மகிழ்ச்சிபோல" (தொல்.பொருள். 114, பக்.495).* 3. இலுப்பைப் பூ முதலிய வற்றினின்று வடிக்கும் மயக்கம் தரும் எரிநீர் (திராவகம்) (சங்.அக.); intoxicating drink distilled from mahua flowers, etc. 4. பூந்தாது, மலர்த் துகள் (சங்.அக.); pollen of flowers. 5. இனிமை (அக.நி.); sweetness. 6. நீர் (சங்.அக.); water. 7. அமுதம் (சங்.அக.); nectar. 8. பால் (சங்.அக.); milk. 9. இளவேனில் (பிங்.); spring. 10. அசோகு (மலை.); asoka tree. 11. அதிமதுரம் (மலை.); liquorice - plant. 12. திருமாலாற் கொல்லப்பட்ட ஓரசுரன்; an *asura* slain by *Tirumāl.* "மதுகைடவரும் வயிறுருகி மாண்டார்" *(திவ்.இயற்.3, 66).*

*[முள்→ முட்டு→ முடி. முடிதல் = இறுதியாதல், முற்றுப்பெறுதல். முடி→ மடி. மடிதல் = சாதல், அழிதல். முட்டு→ மட்டு = அளவு, எல்லை, குத்துமதிப்பு. மட்டு→ மட்டம் = அளவு, சமநிலை. மட்டு→ மட்டி = தாழ்ந்த மதியுள்ள மூடன், மக்கு. மட்டு→ மட்டை = பயனற்றவன்–வள்–து, மட்டமான நெல், மட்டமான அரிசி. முத்துதல்→ (முட்டுதல்) = பொருந்துதல், ஒத்தல். முத்து (முட்டு)→ மத்து (மட்டு) = அளவு. மத்து→ மத்தி. மத்தித்தல் = அளவிடுதல். மத்தி→ மதி. மதித்தல் = அளவிடுதல், கருதுதல். முத்து→ மத்து = கலப்பு, கலக்கம், மயக்கம், மயக்கஞ் செய்யும் பித்தம், மயக்கம் தரும் கள். மத்து→ மது (வே.க.4:67).]*

**மதுக்கடல்** *madu-k-kaḍal,* பெ.(n.) எழுகடலு ளொன்றான கட்கடல்; sea of spirituous liquor.

*[மது + கடல்.]*

**மதுக்காமம்** *madu-k-kāmam,* பெ.(n.) ஈருள்ளி; onion (சா.அக.).

**மதுக்காரை** *madu-k-kārai,* பெ.(n.) 1. சிறு மரவகை (இலத்.); emetic-nut, s.tr., randia dumetorum. 2. காரை வகை (வின்.); a species of common honey-thorun.

**மதுக்காளித்தைலம்** *madukkāḷi-t-tailam,* பெ.(n.) ஆடாதோடை வேர் எண்ணெய்; oil prepared out of adathoda root (சா.அக.).

**மதுக்கிரமம்** *madu-k-kiramam,* பெ.(n.) தேன்கூடு (யாழ்.அக.); honeycomb.

*[மது + கிரமம். மது = கள், தேன்.]*

**மதுக்கிருது** *madu-k-kirudu,* பெ.(n.) தேனீ (சங்.அக.); bee.

**மதுக்குடி** *madu-k-kuḍi,* பெ.(n.) மதுகுக் குடிகை பார்க்க (மூ.அக.); see *madugu-k-kuḍigai.*

*[மதுகுக்குடிகை→ மதுக்குடி.]*

**மதுக்குடிகை** *madu-k-kuḍigai,* பெ.(n.) மதுகுக்குடிகை (சங்.அக.) பார்க்க; see *madugu-k-kuḍigai.*

*[மதுகுக்குடிகை→ மதுக்குடிகை.]*

**மதுக்கெண்டை** *madu-k-keṇḍai,* பெ.(n.) 1. செந்நீலக்கலப்பான பொன்னிறமுள்ளதும் எட்டங்குல நீளம் வளர்வதுமான கடல் மீன் வகை; gizzard-shad, golden shot with purple, attaining 8 in. in length. 2. சாம்பற் பச்சை நிறங் கொண்ட கடல் மீன் வகை; gizzard - shad, greyish green.

**மதுக்கோட்டம்**[1] *madu-k-kōṭṭam,* பெ.(n.) தேன்கூடு; honey comb.

*[மது + கோட்டம்.]*

**மதுக்கோட்டம்**[2] *madu-k-kōṭṭam,* பெ.(n.) மதுகண்டம் பார்க்க (சங்.அக.); see *madu-k-kaṇḍam.*

**மதுகண்டம்** *madu-kaṇḍam,* பெ.(n.) குயில்; Indian cuckoo.

*[மது + கண்டம். மது = இனிமை. இனிய குரலுடைய குயில்.]*



மதுகந்தம் *madu-kantam,*பெ.(n.) 1. மதுகம், 5 பார்க்க; see *madugam.* 2. மகிழமரம்; pointed leaved ape flower tree.

மதுகம் *madugam,*பெ.(n.) 1. வண்டு (பிங்.); bee. 2. அதிமதுரம்; liquorice plant. 3. தித்திப்பு (அக.நி.); sweetness. 4. தரா (பிங்.); alloy. 5. இருப்பை; South Indian mahwa. 6. மதிரை பார்க்க; see *madirai.* *"மதுக மதிரமுதலா" (பெருங்.வத்தவ.11, 87).* 7. எட்டி மரம் (சூடா.); strychnine - tree. 8. அழகு (பிங்.); beauty.

*[மது→ மதுகம்.]*

மதுகமாவிரம் *maduga-māviram,*பெ.(n.) அதிமதுரம்; liquorice plant.

மதுகரம்[1] *madu-karam,*பெ.(n.) 1. தேனீ; honey bee. *"மதுகர முரலுந் தாரோயை" (திருவாச.5:16).* 2. ஆண் வண்டு (சூடா.); male bee, drone.

*[மது→ மதுகரம்.]*

மதுகரம்[2] *madu-karam,*பெ.(n.) 1. கள் (திவா.); spirituous liquor. 2. நஞ்சுப் பூடுவகை (வச்சநாபி) (தைலவ.தைல.); nepal aconite. 3. மதுகம், 1 பார்க்க (தைலவ. தைல.); see *madugam, 1.*

*[மது→ மதுகரம்.]*

மதுகவடி *maduga-vaḍi,*பெ.(n.) வெட்டிவேர் (சங்.அக.); kuskus.

மதுகாதிதம் *madu-kātitam,*பெ.(n.) புன்னை; a tree (சா.அக.).

மதுகாயனம் *madu-kāyaṉam,*பெ.(n.) மது கண்டம் பார்க்க (சா.அக.); see *madu-kaṇḍam.*

மதுகாரி *madu-kāri,*பெ.(n.) தேனீ (சங்.அக.).; honey bee.

மதுகாரை *madu-kārai,*பெ.(n.) மதுக்காரை பார்கக; see *madu-k-kārai.*

*[மதுக்காரை→ மதுகாரை.]*

மதுகியகெந்தம் *madukiya-kendam,* பெ. (n.) வெள்ளுள்ளி; garlic (சா.அக.).

மதுகிருது *madu-kirudu,*பெ.(n.) மதுக்கிருது பார்க்க (யாழ்.அக.); see *madu-k-kirudu.*

மதுகுக்குடிகை *madugu-k-kuḍigai,* பெ. (n.) எலுமிச்சை (இ.வ.); sour lime.

*[மது + குக்குடிகை. மது = சாறு.]*

மதுகேசடம் *madu-kēšaḍam,* பெ.(n.) மதுகாரி பார்க்க (சங்.அக.); see *madu-kāri.*

மதுகை *madugai,* பெ.(n.) 1. வலிமை; strength. *"அறியுநர் கொல்லோ வனை மதுகையர் கொல்" (குறுந்.290).* 2. அறிவு; knowledge. *"வானுயர் மதுகை வாட்டும்" (சீவக.664).*

*[முல்→ முள்→ முட்டு→ மட்டு = கள், தேன், இன்சாறு, காமக்குடிப்பு, தேனிற்குந் திங்களுக்கும் உரிய நறுமணம். மட்டு→ மத்து→ மத்தம் = மயக்கம், வெறி, களிப்பு, செருக்கு, கோட்டி, கருவூமத்தை. மத்து→ மது = கள், தேன், இனிமை. மத்து→ மத்தம்→ மத்தன் = மதிமயக்க மடைந்தவன், பித்தன், பேருக்க முள்ளவன், கொழுப்புள்ளவன். மத்து→ மத்தி→ மதி = மயக்கஞ் செய்யும் திங்கள். மத்து→ மது = கள், மதுக்களிப்பு, வெறி, தேன், செருக்கு, நிலவளம், வீரியம், பெருமை. மது→ மதுகை (வே.க.4:68).]*

மதுங்கு-தல் *madungu-*, 5 செ.கு.வி.(v.i.) இனிமையாதல்; to be sweet. *"மதுங்கிய வார்கனி" (திருமந்.2914).*

*[மது = இனிமை. மது→மதுங்கு-தல்.]*

மதுச்சாரம் *madu-c-cāram,* பெ.(n.) 1. நவச்சாரம்; chloride of ammonia a metallic cement. 2. ஆயுள் வேதப்படி செய்யும் குடிப்பு, வடிசாறு முதலியன; Aristam and Asavam prepared an ayurveda (சா.அக.).

மதுச்சிட்டம் *madu-c-cittam,* பெ.(n.) மெழுகு (சங்.அக.); wax.

மதுச்சிரம் *madu-c-ciram,* பெ.(n.) சீந்தில் கொடி (சங்.அக.); gulancha.

மதுசகன் *madu-šagan,* பெ.(n.) (வசந்தனின் நண்பன்) மன்மதன் (யாழ்.அக.); *Kāman,* as the companion of the spring.

*[மது + சகன்.]*

மதுசகாயன் *madu-šagāyan,* பெ.(n.) மது சகன் பார்க்க (யாழ்.அக.); see *madu-šagan.*

*[மதுகன்→மதுசகாயன்.]*

மதுசஞ்சம் *madu-šañjam,* பெ.(n.) முந்திரி (சங்.அக.); cashew - nut.

மதுசஞ்சை *madu-šañjai,* பெ.(n.) கொடி முந்திரி; grapes (சா.அக.).

மதுசத்துருமம் *madu-šatturumam,* பெ. (n.) இலுப்பை மரம்; a tree with sweet fragrant flowers (சா.அக.).

*[மது + சத்துருமம். மது = கள், தேன், இலுப்பைப்பூ முதலியவற்றினின்று காய்ச்சி யிறக்கும் வெறிநீர்.]*

மதுசம் *madušam,* பெ.(n.) குங்கிலியம்; a kind of incense, resinous gum (சா.அக.).

மதுசர்க்கரை *madu-šarkkarai,* பெ.(n.) தேனிலிருந்து எடுக்கும் சருக்கரை; sugar obtained from honey.

*[மது + சருக்கரை. சருக்கரை→சர்க்கரை.]*

மதுசரவா *madu-šaravā,* பெ.(n.) பெருங் குரும்பை (சங்.அக.); bow string, hemp.

மதுசாரதி *madu-šāradi,* பெ.(n.) மன்மதன் (யாழ்.அக.); *Kāman.*

*[மது + சாரதி. மது = மயக்கம்.]*

மதுசாவா *madu-šāvā,* பெ.(n.) பெருங் குரும்பை; an hebacious plant (சா.அக.).

மதுசுவரம் *madu-šuvaram,* பெ.(n.) மது கண்டம் பார்க்க (யாழ்.அக.); see *madu-kandam.*

மதுத்தண்டு *madu-t-tandu,* பெ.(n.) கள்ளடைக்கும் மூங்கிற் குழாய்; bamboo tube for holding liquor. *"தழங்கு வெம்மதுத்தண்டும்" (சீவக.863).*

*[மது + தண்டு.]*

மதுத்திருணம் *madu-t-tiruṇam,* பெ.(n.) கரும்பு (மலை.); sugarcane.

*[மது + திருணம். மது = சாறு.]*

மதுத்துருமம் *madu-t-turumam,* பெ.(n.) இலுப்பை மரம்; a tree with fragrant flowers (சா.அக.).

மறுவ. மதுத்தூரு.

*[மது + துருமம்.]*

மதுதிவன் *madu-tivaṉ,* பெ.(n.) காமன் (யாழ்.அக.); *Kāmaṉ,* the god of love.

மதுதூதம்[1] *madu-tūdam,* பெ.(n.) 1. தேன்; honey. 2. கள்; toddy (சா.அக.).

*[மது + தூதம்.]*

மதுதூதம்[2] *madu-tūdam,* பெ.(n.) மாமரம் (மலை.); mango tree.

மதுதூதிகம் *madu-tūdigam,* பெ.(n.) பனங்கள்; palmyra toddy (சா.அக.).

மதுதூலி *madu-tūli,* பெ.(n.) தேன்பாகு (சங்.அக.); molasses.

*[மது + தூலி.]*

மதுநாலிகேரம் *madu-nālikēram,* பெ.(n.) தெங்கு வகை (சங்.அக.); a kind of coconut tree.

*[மது + நாலிகேரம்.]*

மதுநீர் *madu-nīr,* பெ.(n.) வடித்த கள் (இக்.வ.); purified spirits.

*[மது + நீர்.]*

மதுநேதிரு *madu-nēdiru,* பெ.(n.) தேனீ (சங்.அக.); bee.

மதுநோலேகம் *madunōlēgam,* பெ.(n.) மதுநேதிரு பார்க்க (சங்.அக.); see *matunētiru.*

மதுப்பரணி *madu-p-paraṇi,* பெ.(n.) கொம்மட்டி மாதுளை; a kind of citron (சா.அக.).

மதுப்பலி *madu-p-pali,* பெ.(n.) மதுவாகிய பலி; oblation of wine. *"இன்மதுப்பலியும் பூவும்" (சீவக.471).*

மதுப்பிராசனம் *madu-p-pirāšaṉam,* பெ.(n.) பிறந்த குழந்தைக்குத் தேனூட்டுவதாகிய சடங்கு வகை (இ.வ.); the auspicious ceremony of the first feeding of a new born infant with a little honey.

*[மது + **Skt.** பிரசானம்.]*

மதுப்பிரியன் *madu-p-piriyaṉ,* பெ.(n.) 1. கள்ளுக்குடியில் விருப்பமுள்ளவன் (இ.வ.); one addicted to drink. 2. பலராமன்; god *Balarāmaṉ.*

*[மது + **Skt.** பிரியன். மது = கள்.]*

மதுப்பு *maduppu,* பெ.(n.) தேன்; honey (சா.அக.).

*[மது→ மதுப்பு.]*

மதுப்பொங்குதல் *madu-p-poṅgudal,* பெ.(n.) நன்னிமித்தமாகக் (நற்குறியாக) கருதப்படும் கட்குடம் பொங்குகை (இ.வ.); effervescence of toddy in *madu-k-kuḍam,* considered auspicious.

*[மது + பொங்குதல்.]*

மதுபக்கு *madu-pakku,* பெ.(n.) கோவைக் கொடி; a creeper (சா.அக.).

மதுபதி *madu-pati,* பெ. (n.) 1. காளி (சூடா.); *Kāḷi.* 2. மலைமகள் (நாமதீப.20); *Pārvati.*

மதுபம்[1] *madupam,* பெ.(n.) வண்டு; bee, as sucking honey. *"மதுப மூசுந் தேனொடு" (கம்பரா.மீட்சி.310).*

மதுபம்[2] *madupam,* பெ. (n.) மதுவம்[1] பார்க்க (யாழ்.அக.); see *maduvam.*

மதுபர்க்கம் *madu-parkkam,* பெ.(n.) மது பருக்கம் பார்க்க; see *madu-parukkam.* *"குளிர் மதுபருக்க மூட்டி" (திருவிளை. உக்கிர. வேல்வளை.47).*

*[மது + பருக்கம்→பர்க்கம்.]*

மதுபருக்கம் *madu-parukkam,* பெ.(n.) தெய்வத்திற்கேனும், விருந்தினர்க்கேனும், மணவாளப் பிள்ளைக்கேனும் தேன், பால், பழம் முதலியவற்றைச் சேர்த்து அளிக்கும் கூட்டுணவு (சீவக.2463, உரை); offering of honey and milk; mixed with fruits, as to a bridegroom on his arrival at the house of his father-in-law or to a guest or to a deity.

*[மது + பருகு→பருகம்→பருக்கம்.]*

மதுபருணிகை *madu-parunigai,* பெ.(n.) 1. அவுரி (மலை.); Indian indigo. 2. சீந்தில் (தைலவ.தைல.); gulancha.

மதுபலம் *madu-palam,* பெ.(n.) தென்னை வகை (மூ.அ.); a species of coconut.

மதுபலி *madu-pali,* பெ.(n.) 1. மதுப்பலி பார்க்க; see *madu-p-pali.* 2. கொற்றவை (யாழ்.அக.); *Kāḷi.*

மதுபலிதம் *madu-palidam,* பெ. (n.) நீர்ச் சோற்றுத் தண்ணீர்; water in which cooked rice is soaked (சா.அக.).

மதுபவம் *madu-pavam,* பெ.(n.) தேன் கற்கண்டு; sugarcandy formed in honey (சா.அக.).

மதுபன்னி *madu-panni,* பெ.(n.) மது பருணிகை, 2 பார்க்க (சங்.அக.); see *madu-parunigai.*

மதுபாகம்[1] *madu-pāgam,* பெ.(n.) 1. தேன் பாகம், தேன் மேல் வருகிற பாகம்; the scum on the surface of honey. 2. புங்க மரம்; a tree.

*[மது + பாகம். பாகம் = பக்குவம்.]*

மதுபாகம்[2] *madu-pāgam,* பெ.(n.) தேன் போலத் தெளிவும் இனிமையுமுடைய செய்யுள் நடை; simple and hoeny - like sweet style in poetic composition.

*[மது + பாகம்.]*

மதுபாயி *madu-pāyi,* பெ.(n.) வண்டு (சங்.அக.); bee.

*[மது + பாயி.]*

மதுபானம்[1] *madu-pānam,* பெ.(n.) தென்னங் கள்; coconut toddy (சா.அக.).

*[மது + பானம்.]*

மதுபானம்[2] *madu-pānam,* பெ.(n.) 1. கள் குடிக்கை; drinking intoxication liquor. *"விடுக மதுபானாதிக ளென்கை" (வேதா. சூ.116).* 2. கள் (வின்.); intoxicating liquor. *"கள்ளே புனலே புலவியிம் மூன்றினும் ஒள்ளொளி செய்தா வொளிகிளருண் கட்கெண்டை" (பரிபா. 16:39-40).*

*[மது + பானம்.]*

மதுபானி *madu-pāni,* பெ. (n.) கட்குடியன்; drunkard. *"மதுபானிக்குப் பரிகாரம்" (சிவதரு. பரிகார.55, உரை).*

*[மது + பானி.]*

மதுபிந்துகலகம் *madu-pindu-kalagam,* பெ. (n.) ஒரு கடையின் தரையில் விழுந்த தேன்றுளியால் விளைந்த கலகம் போலச் சிறு

நிகழ்ச்சியிலிருந்து விளையும் பெருஞ் சண்டை (ஈடு.); big quarrel arising from an insignificant matter, such as a drop of honey on the floor of a shop.

[மதுபிந்து + கலகம்.]

மதுபீசம் *madu-pišam,* பெ.(n.) மாதுளை (சங்.அக.); pomegranate.

மதுபுரி *madu-puri,* பெ.(n.) மதுரை[1], 2 பார்க்க (யாழ்.அக.); see *madurai.*

மதுமஞ்சம் *madu-mañjam,* பெ.(n.) முந்திரி (சங்.அக.); cashew nut.

மதுமடந்தை *madu-maḍandai,* பெ.(n.) அத்தினிசாதிப் பெண்; one of the four classes of women divided according to thier lust (சா.அக.).

மதுமத்தை *madu-mattai,* பெ.(n.) கரு வூமத்தை (யாழ்.அக.); purple stramony.

[மது + மத்தை.]

மதுமதனன் *madu-madaṉaṉ,* பெ.(n.) திருமால் (யாழ்.அக.); *Tirumāl.*

மதுமயக்கம் *madu-mayakkam,* பெ.(n.) குடிவெறி; intoxication.

[மது + மயக்கம்.]

மதுமரம் *madu-maram,* பெ.(n.) நெய்மரம் பார்க்க; see *ney-maram.*

[மது + மரம்.]

மதுமராடம் *madi-marāḍam,* பெ.(n.) கொக்கு; stork.



மதுமருந்து *madu-marundu,* பெ.(n.) மயக்கந்தரும் மருந்துகள்; names of medicines containing intoxicants (சா.அக.).

மதுமல்லி *madu-malli,* பெ.(n.) 1. இரட்டை மல்லிகை; a kind of jasmine with two whirl of petals. 2. அடுக்கு மல்லிகை; jasmine with multi ring (whore) of petals.

[மது + மல்லி.]

மதுமல்லிகை *madu-malligai,* பெ.(n.) அடுக்கு மல்லிகை (மலை.); double flowered jasmine.

[மது + மல்லிகை.]

மதுமலாகம் *madu-malāgam,* பெ.(n.) பனங் கற்கண்டு; palmyra sugarcandy (சா.அக.).

மதுமா *madu-mā,* பெ.(n.) மாமரம் (தைலவ. தைல.); mango tree.

[மது + மா.]

மதுமாது *madu-mādu,* பெ.(n.) மதுமடந்தை பார்க்க; see *madu-maḍandai.*

[மது + மடந்தை.]

மதுமாமிசம் *madu-māmišam,* பெ.(n.) கள்ளும் இறைச்சியும் (வின்.); liquor and flesh, as offered together.

*[மது + Skt.மாமிசம்.]*

மதுமூத்திரம் *madu-mūttiram,* பெ.(n.) மது மேகமூத்திரம் (m.t.) பார்க்க; see *madu-mēga-mūttiram.*

*[மது + மூத்திரம்.]*

மதுமூலம்[1] *madu-mūlam,* பெ. (n.) சருக்கரை வள்ளிக் கிழங்கு; sweet potato.

*[மது + மூலம்.]*

மதுமூலம்[2] *madu-mūlam,* பெ. (n.) கிழங்கு வகை (யாழ்.அக.); a kind of root.

*[மது + மூலம்.]*

மதுமேகம் *madu-mēgam,* பெ. (n.) மதுமேக மூத்திரம் (இராசவைத்.150) பார்க்க; see *madu-mēga-mūttiram.*

மதுமோகி *madu-mōgi,* பெ.(n.) வண்டு; bee.

*[மது + Skt. மோகி.]*

மதுர்ச்சி *madurcci,* பெ.(n.) பொன்னிமிளை அல்லது மஞ்சள் நிமிளை; gold coloured bismuth (சா.அக.). *"தித்திப்புச் சுவையும் சாரச்சுவையும் கலந்தது".*

மதுரக்கசப்பி *madura-k-kašappi,* பெ. (n.) வேம்பு; neem tree (சா.அக.).

மதுரக்கபம் *madura-k-kabam,* பெ.(n.) ஒருவகை நோய்; a kind of disease (சா.அக.).

மதுரகம் *maduragam,* பெ. (n.) 1. இலுப்பை மரம் ; a sweet fragrant flowering tree. 2. எட்டி மரம்; a tree. 3. அதிமதுரம்; liquorice. 4. குன்றிமணி; jeweller's bead (சா.அக.).

மதுரச்சம்பா *madura-c-cambā,* பெ.(n.) சம்பா நெல்வகை (C.G.); a species of sweet paddy.

மதுரசம் *madurašam,* பெ. (n.) மதுச்சாறம் பார்க்க; see *madu-c-cāṟam.*

*[மது + Skt. ரசம்.]*

மதுரை[1] *madurai,* பெ.(n.) 1. பாண்டியர் தலைநகரம்; *Madurai* the capital of the *Pāṇḍya* kingdom. *"மாட மதுரையுந் தருகுவன்" (புறநா.32).* 2. சத்தபுரிகளுள் ஒன்றானதும் கண்ணன் பிறந்ததுமான வடமதுரை; *Muttra* in Agra, sacred as the birth place of *Krisṇā,* one of *catta-puri,* (q.v.). *"மன்னு மதுரை தொடக்கமாக" (திவ்.நாய்ச்.12, 10).*

மதுரை[2] *madurai,* பெ.(n.) கள் (சூடா.); spirituous liquor.

மதுரை[3] *madurai,* பெ.(n.) இனிமையானது; that which is sweet to the taste.

மதுரைக்கணக்காயனார் *madurai-k-kaṇakkāyaṉār,* பெ.(n.) நக்கீரனார் தந்தையான புலவர் (இறை.1, பக்.8); a poet, father of *Nakkīraṉār.*

*[மதுரை + கணக்காயனார்.]*

மதுரைக்கழகம் *madurai-k-kaḻagam,* பெ. (n.) மதுரையில் இருந்த மூன்றாம் தமிழ்க் கழகம்; the third *Tamil-k-kaḻagam* of Madurai.

**மதுரைக்காஞ்சி** *madurai-k-kāñji,* பெ. (n.) பத்துப் பாட்டினுள் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை மாங்குடிமருதனார் பாடிய பாட்டு; a poem in *pattu-pāṭṭu* on the *Pāṇḍyaṉ* king *Neḍuñ-ceḻiyaṉ* of *Talaiyālaṅkāṉam* fame, by *Māṅkuḍi-marudaṉār.*

**மதுரைக்கூலவாணிகன்சாத்தன்** *madurai-k-kūlavāṇigaṉ-šāttaṉ,* பெ. (n.) மணிமேகலையாசிரியர்; a merchant and poet of Madurai, author of *Maṇi-mēgalai. "மதுரைக் கூல வாணிகன் சாத்தன் கேட்டனன்" (சிலப்.பதி, 89).*

*[மதுரை + கூலவாணிகன்சாத்தன்.]*

**மதுரைச்சங்கம்** *madurai-c-caṅgam,* பெ.(n.) மதுரைக்கழகம் பார்க்க; see *madurai-k-kaḻagam.*

**மதுரைத்தொகை** *madurai-t-togai,* பெ.(n.) மதுரைச்சங்கம் பார்க்க; see *madurai-c-caṅgam. "மதுரைத் தொகை யாக்கினானும்" (தேவா.1179, 11).*

*[மதுரை + தொகை.]*

**மதுரைமாதெய்வம்** *madurai-mā-teyvam,* பெ.(n.) மதுராபதி பார்க்க; see *madurā padi. "மதுரைமா தெய்வம் வந்து தோன்றி" (சிலப்.பதி.43).*

*[மதுரை + மாதெய்வம்.]*

**மதுரைமாதேவி** *maduraimā-dēvi,* பெ. (n.) மீனாட்சியம்மை (யாழ்.அக.); *Mīṉākṣi,* as the Goddess of Madurai.

*[மதுரை + மாதேவி.]*

**மதுரையுப்பூரிகுடிகிழான்** *maduraiyu-p-pūrikuḍi-kiḻāṉ,* பெ.(n.) உருத்திரசன்மனின் தந்தை (இறை.1, பக்.4); father of *ūrut-tira-šaṉmaṉ.*

*[மதுரை + உப்பூரிகுடிகிழான்.]*

**மதுரைவீரன்** *madurai-vīraṉ,* பெ.(n.) ஒரு சிற்றூர்த் தெய்வம் (இ.வ.); a village deity.

*[மதுரை + வீரன்.]*

**மந்தகதி** *manda-kadi,* பெ. (n.) 1. சுணங்கிய நடை; slow pace. 2. மந்தக்குணம் பார்க்க; see *manda-k-kuṇam.*

*[மந்தம் + கதி. கதி = செலவு (பயணம்).]*

**மந்தகாசம்**[1] *manda-kāšam,* பெ.(n.) 1. மந்தாரகாசம் பார்க்க (M.L.); see *mandāra-kāšam.* 2. நோய் வகை; a species of consumption (வின்.).

*[மந்தம் + காசம்.]*

**மந்தகாசம்**[2] *manda-kāšam,* பெ.(n.) புன்சிரிப்பு; gentle laugh, smile (கொ.வ).

**மந்தகுணம்** *manda-guṇam,* பெ.(n.) மந்தக் குணம் பார்க்க; see *manda-k-kuṇam.*

*[மந்தக்குணம் → மந்தகுணம்.]*

**மந்தசீற்காரம்** *manda-šīṟkāram,* பெ.(n.) கலவிக் காலத்தில் மகளிர் வாயினின்றெழும் உறிஞ்சற் சிற்றோசை; the gentle hiss made by women in sexual enjoyment. *"மந்தசீற்காரம் வஞ்சியர் செய்து" (கொக்கோ. 2:12).*

*[மந்தம் + சீற்காரம்.]*

**மந்தசெபம்** *manda-šebam,* பெ.(n.) வாய்க்குள் ஓதும் செபம் (சிவதரு. சிவஞானயோ.81); prayer uttered inaudibly.

*[மந்தம் + செபம்.]*

**மந்தச்சூடு** *manda-c-cūḍu,* பெ.(n.) இயல்பினும் மிகுந்த சூடு; slight heat than normal.

*[மந்தம் + சூடு.]*

**மந்தசம்** *mandašam,* பெ.(n.) வெண்ணெய்; butter (சா.அக.).

**மந்தசானம்[1]** *manda-šāṉam,* பெ.(n.) தூக்கம்; sleep (சா.அக.).

**மந்தசானம்[2]** *manda-šāṉam,* பெ.(n.) தீ (சங்.அக.); fire.

**மந்தரம்** *mandaram,* பெ. (n.) 1. சோம்பல்; dullness. 2. வெண்ணெய்; butter (சா.அக.).

**மந்தநாடி** *manda-nāḍi,* பெ.(n.) மெதுவாய் ஓடும் நாடி நடை; slow pulse.

*[மந்தம் + நாடி.]*

**மந்தப்படு-தல்** *manda-p-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) செரியாதிருத்தல்; causing indigestion.

*[மந்தம் + படு-.]*

**மந்தடைப்பன்** *mandaḍaippaṉ,* பெ.(n.) கால்நடைக்கு வரும் நோய்களுள் ஒன்று (மாட்டுவை.சிந்.); a cattle disease.

*[மந்து→ மந்தை = கால்நடைக் கூட்டம், கால்நடை. மந்து + அடைப்பன்.]*

**மந்தணம்** *mandaṇam,* பெ.(n.) 1. மந்திரம்[1] பார்க்க; see *mandiram.* *"மந்தண முற்றுழீஇ"* *(கம்பரா. விபீடண.36).* 2. கமுக்கம்; secret. *"மந்தண மிகுந்துபுரி மாமடிதன் வேள்வி" (தேவா.324:7).*

**மந்தப்பார்வை** *manda-p-pārvai,* பெ.(n.) 1. குறைந்த பார்வை; short sightness. 2. கம்மலான பார்வை; dullness of vision.

*[மந்தம் + பார்வை.]*

**மந்தம்[1]** *mandam,* பெ.(n.) 1. சுணக்கம்; slowness, tardiness. *"மந்தத்தேகும்....... தேரே" (இரகு.கடிமண.14).* 2. அறிவு மழுக்கம்; dullness, stupidity, ignorance. *"மந்தமற வோதுவிக்க" (திருமுறைகண்.5).* 3. சோம்பல் (சூடா.); indolence, laziness. 4. புன்மை; meanness, worthlessness, smallness. 5. மென்மைத் தன்மை; softness, freshness. *"மந்த மலர்" (தேவா.1009:6).* 6. பாடற் பயன் எட்டனுள் ஒன்றான சமனிகை; medium note, one of eight *pāḍaṟ-payaṉ* (சிலப்.3:16, உரை). 7. படுத்தலிசை; lowness of tone. *"எண் படுத்தல் மந்தம்" (சீவக.735, உரை).* 8. தென்றல்; gentle wind, southern wind. *"மந்தம் வந்துலவுசீர் மழபாடியே" (தேவா.316, 3).* 9. மந்தச்சா பார்க்க; see *mandaccā.* 10. குதிரை நடை வகை; a pace of horse (சுக்கிரநீதி.72). 12. தனக்கு மட்டும் கேட்கும்படி மந்திரஞ் சொல்லுதல்; reciting a mantram in a tone audible to the reciter alone (சைவ.பொது.152). 13. செரியாமை; indigestion. *"குழந்தைக்கு வயிற்றில் மந்தந்தட்டியிருக்கிறது" (உ.வ.).* 14. குடிவெறி (வின்.); drunkenness.

**மந்தம்[2]** *mandam,* பெ.(n.) மத்து (வின்.); churning stick.

**மந்தம்³** *mandam,* பெ.(n.) 1. செறிவு; density, crowdedness. *"மல்லிகை மந்தக் கோவை" (திவ்.திருவாய்.9, 9, 8).* 2. செவ்வி யழியாமை (திவ்.திருவாய்.9, 98, பன்னீ.); freshness.

**மந்தமதி** *manda-madi,* பெ.(n.) குறைவான அறிவு, அறிவுக்குறை; dull sense.

*[மந்தம் + மதி.]*

**மந்தமந்தம்** *manda-mandam,* வி.எ.(adv.) மெல்ல மெல்ல; gently, slowly. *"மந்த மந்த நடந்தது வாடையே" (கம்பரா. கிளைகண்டு. 14).*

*[மந்தம் + மந்தம்.]*

**மந்தமந்திரம்** *manda-mandiram,* பெ.(n.) தனக்கு மட்டும் கேட்கும்படி பலுக்கும் மந்திரம் (தணிகைப்பு.அகத்.179); mandram recited in a tone audible to the reciter alone.

*[மந்தம் + மந்திரம்.]*

**மந்தமா** *manda-mā,* பெ.(n.) யானை (சூடா.); elephant, as slow in gait.

*[மந்தம் + மா. மெதுவாய் நடக்கும் விலங்காதலின் யானை மந்தமா எனப்பட்டது.]*

**மந்தமாருதம்** *manda-mārudam,* பெ.(n.) தென்றல்; the southern breeze, as gentle. *"மந்தமாருத மூர்வதோர் கிரி" (கம்பரா. படைக்காட்சி.14).*

*[மந்தம் + Skt. மாருதம்.]*

**மந்தரவரசன்** *mandaravarašan,* பெ.(n.) பெருங்கதைக் காவியத்தில் வரும் மாந்தன்; a character found in the epic *perungadai* (சி.பெ.அக.).

**மந்தரை** *mandarai,* பெ.(n.) கைகேயியின் தாதியான கூனி; a maid servent of *kaikēyi.* *"மந்தரை பின்னரும் வகைந்து கூறுவாள்" (கம்பரா.மந்தரைசூழ்.60).*

மறுவ. கூனி.

**மந்தல்** *mandal,* பெ.(n.) மந்தம் பார்க்க; see *mandam.* *"மந்தலாய மல்லிகையும் புன்னை வளர்குரவின் பந்தல்" (தேவா.46, 7).*

**மந்தவறிவு** *manda-v-arivu,* பெ.(n.) மழுங்கலான அறிவு; dull intellect. *"மந்தவறி வாகியின்பம் வாயாதிருந் தலைந்தால்" (தாயு.பராபர.199).*

*[மந்தம் + அறிவு.]*

**மந்தவாடை** *manda-vāḍai,* பெ.(n.) இளவாடைக் காற்று; gentle northern breeze. *"மந்த வாடையு மலையத் தென்றலும்" (தெ.க.தொ.5:180).*

*[மந்தம் + வாடை. தெற்கிலிருந்து வீசுவது தென்றல். வடக்கிலிருந்து வீசுவது வாடை.]*

**மந்தவாரம்** *manda-vāram,* பெ.(n.) காரிக் கிழமை; Saturday, as Saturn's day.

*[மந்தம் + வாரம்.]*

**மந்தவிசை** *manda-višai,* பெ.(n.) (இசை.) மந்தரம்², 1 பார்க்க; see *mandaram.*

*[மந்தம் + இசை.]*

**மந்தவாந்தி** *manda-vāndi,* பெ.(n.) செரியாமை யாலுண்டாகும் வாந்தி; vomiting caused by indigestion.

*[மந்தம் + வாந்தி.]*

மந்தவிரோதி *manda-virōdi,* பெ.(n.) சுக்கு (பரி.அக.); dried ginger.

**Skt.** விரோதி > த. பகைவன்.

மந்தவெதுப்பு *manda-veduppu,* பெ.(n.) கால்நடைகளின் நோய் வகை (மாட்டுவை. சிந்.); a kind of cattle-disease.

*[மந்தம் + வெதுப்பு.]*

மந்தவைரி *manda-vairi,* பெ.(n.) மந்த விரோதி பார்க்க; see *manda-virōdi.*

*[மந்தம் + வைரி.]*

மந்தவோசை *manda-vōšai,* பெ.(n.) இசை மந்தரம்², 1 பார்க்க (வின்.); see *mandaram.*

*[மந்தம் + ஓசை.]*

மந்தளிச்சுறா *mandaḷi-c-cuṟā,* பெ.(n.) கடல்மீன் வகை; shark, dull brown, carcharias sorrah.

மந்தன் *mandaṉ,* பெ.(n.) 1. அறிவு மழுங்கியவன் (பிங்.); dull person. 2. சுணக்கமாய் வேலை செய்யும் பணியாளன் (சுக்கிரநீதி.108); servant who is slow in work. 3. கூற்றுவன் (யாழ்.அக.); yaman, God of death. 4. காரி (சனி) (இலக்.வி.883); the planet saturn, as slow.

*[மந்தம் = அறிவுக்குறை. மந்தம்→மந்தன்.]*

மந்தன்கள்ளி *mandaṉ-kaḷḷi,* பெ.(n.) கள்ளி வகை; cement plant, winged square plant.

*[மந்தன் + கள்ளி.]*

மந்தனகாந்தம் *mandaṉa-kāndam,* பெ.(n.) ஊசிக்காந்தம்; a magnet of load stone attracting needle (சா.அக.).

மந்தனம்¹ *mandaṉam,* பெ.(n.) கடைதல்; churning (சா.அக.).

மந்தனம்² *mandaṉam,* பெ.(n.) யானையின் முகபடாம் (வின்.); cloth thrown over the fore head of an elephant.

மந்தனம்³ *mandaṉam,* பெ.(n.) மந்தணம் பார்க்க (யாழ்.அக.); see *mandaṇam.*

மந்தனி *mandaṉi,* பெ.(n.) மந்தினி¹ பார்க்க (வின்.); see *mandiṉi.*

மந்தகாசம் *manda-kāšam,* பெ.(n.) செம்மந்திக் குரங்கு; a kind of red faced monkey (சா.அக.).

மந்தாயுள் *mandāyuḷ,* பெ.(n.) குறைவான வாணாள்; short life (சா.அக.).

மந்தாரக்கணம் *mandāra-k-kaṇam,* பெ. (n.) குழந்தைகளுக்கு மழைக் காலத்தி லுண்டாகும் கண்ணோய்; an eye-diseases in rainy season for children (சா.அக.).

மந்தாரகம் *mandāragam,* பெ.(n.) 1. வெள் ளெருக்கு; white madar. 2. மந்தாரை; a tree (சா.அக.).

மந்தாரகெங்கையோன் *mandāra-gengai-yōṉ,* பெ.(n.) துரிசு; copper sulphate (சா.அக.).

மந்தாரப்புண் *mandāra-p-puṇ,* பெ.(n.) ஆறாப்புண் (சங்.அக.); festering sore.

மந்தாரப்பூ *mandāra-p-pū,* பெ.(n.) மந்தாரை பார்க்க; see *mandārai* (சா.அக.).

**மந்தாரபீதம்** *mandāra-pīdam,* பெ.(n.) பித்தளை மலை; mountain containing brass ore (சா.அக.).

**மந்தாரம்¹** *mandāram,* பெ.(n.) கார்முகில் மூட்டமான நிலை; cloudiness, murkiness. *"மழையும் மந்தாரமும் வந்தன" (தஞ்சைவா. 99). "வானம் மப்பும் மந்தாரமுமாய் இருக்கிறது" (உ.வ.).*

தெ. மந்தாரமு.

*[மந்தம்→மந்தாரம்.]*

**மந்தாரம்²** *mandāram,* பெ.(n.) 1. ஐந்து மரங்களுள் ஒன்று; a tree of heaven, one of fire trees (q.v.). *"மந்தாரத்திற் றாரம்பயின்று மந்தம் முரல் வண்டு....... சடை வானத் தடலரைசே" (திருவாச.6, 36).* 2. முண்முருங்கை; Indian coral-tree (பதார்த்த.617). 3. செம்பரத்தை; shoe flower. *"மந்தாரமலை மலர்வேய்ந்து...... வண்டு முரன்று பாட" (சீவக.1959).*

*[மந்தாரை→மந்தாரம்.]*

**மந்தாரமணிமுடிசருப்பம்** *mandāra-maṇi muḍi-šaruppam,* பெ.(n.) நாக மலை; mountain containing zinc ore (சா.அக.).

**மந்தாரி-த்தல்** *mandāri-,*11 செ.கு.வி.(v.i.) மேகமூட்டமாயிருத்தல் (வின்.); to be over cast, cloudy.

*[மந்தாரம்→மந்தாரி-.]*

**மந்தாரிகம்** *mandārigam,* பெ.(n.) முள் முருங்கை; a tree (சா.அக.).

**மந்தாரை¹** *mandārai,* பெ.(n.) 1. பூஞ்செடி; a flowering plant. 2. மரவகை; a kind of tree (சா.அக.).

வகைகள்: 1. கொக்கிறகு (அல்) வெள்ளை மந்தாரை; 2. மஞ்சள் மந்தாரை; 3. காட்டு மந்தாரை; 4. சிவப்பு மந்தாரை; 5. செம்மந்தாரை; 6. கிளியிறகு மந்தாரை; 7. பெருமந்தாரை அல்லது இலை மந்தாரை; 8. படர் மந்தாரை; 9. கொடி மந்தாரை; 10. அந்தி மந்தாரை; 11. மலை மந்தாரை; 12. கள்ளி மந்தாரை.

**மந்தாரை²** *mandārai,* பெ.(n.) 1. மரவகை; purple mountain ebony, m.tr., *Bauhinia purpurea.* 2. மர வகை; variegated mountian ebony, m.t.r. *Bakkinia variegata* purpurascens.

**மந்தானம்** *mandāṉam,* பெ.(n.) மத்து (வின்.); churning stick.

**மந்தானிலம்** *mandāṉilam,* பெ.(n.) தென்றல்; southern breeze, as gentle. *"மந்தானிலம் வந்தசை பந்தரின்" (பெரியபு.மூர்த்தி.6).*

**மந்தி¹** *mandi,* பெ.(n.) 1. பெண்குரங்கு (தொல்.பொருள்.622, உரை); female monkey. 2. குரங்கு (பிங்.); monkey in general. *"மகமுயங்கு மந்தி வரைவரை பாய" (பரிபா.15:38).* 3. வண்டு (பிங்.); bee.

**மந்தி²-த்தல்** *mandi-,*11 செ.கு.வி.(v.i.) 1. சுணங்குதல்; to be slow, to delay. *"திருமந்தி யாதருளும்" (திருவானைக். கோச்.1).* 2. செரியாமை; to be undigested, as food. 3. மந்தமாதல் (உ.வ.); to become dull.

**மந்தி³** *mandi,* பெ.(n.) ஆடுதின்னாப் பாளை (யாழ்.அக.); worm-killer.

**மந்தி⁴** *mandi,* பெ.(n.) கதிரவன்; sun. *"எயிறுந் துண்டமும்..... மந்தியும் வாணியும்...... இழப்ப" (ஞானா.33, 6) (திருமுரு.42, வேறுரை).*

**மந்திக்கால்** *mandi-k-kāl,* பெ.(n.) மாட்டு குற்றவகை (பெரியமா.); a defect in cattle.

*[மந்தி + கால்.]*

**மந்திட்டி** *manditti,* பெ.(n.) மஞ்சிட்டி[1] பார்க்க; see *mañjitti.*

*[மஞ்சிட்டி → மந்திட்டி.]*

**மந்தித்தவயிறு** *manditta-vayiru,* பெ.(n.) செரியா வயிறு; distempered stomach (சா.அக.).

*[மந்தித்த + வயிறு.]*

**மந்திப்பு** *mandippu,* பெ.(n.) 1. சுறுசுறுப்பின்மை; dulness, sluggishness. 2. செரியாமை; indigestion.

*[மந்தம் → மந்திப்பு.]*

**மந்திபுரளு-தல்** *mandi-puralu-,* பெ.(n.) கோடைப் புயலுக்கு முன்தோன்றும் அறிகுறி (க.ப.அக.); a symbol of storm in summer season.

*[மந்தி + புரளு-.]*

**மந்திமூலைத்தலைவாரை** *mandi-mūlai-t-talaivārai,* பெ.(n.) ஓலையாற் செய்த கவிப்பு வகை (யாழ்.அக.); a kind of *olai* head - cover.

*[மந்திமூலை + தலைவாரை.]*

**மந்திரக்கலப்பை** *mandira-k-kalappai,* பெ.(n.) மந்திரத்திற்குரிய பண்டம்; bag of article used while reciting a mantram. *"மானுரிமடியு மந்திரக் கலப்பையும்" (பெருங்.உஞ்சைக்.36, 226).*

*[மந்திரக்கலம் + பை.]*

**மந்திரக்கலை** *mandira-k-kalai,* பெ.(n.) மந்திரங்களைப் பற்றிய அறிவியல்; science of mandrams.

*[மந்திரம் + கலை.]*

**மந்திரக்காரன்** *mandira-k-kāran,* பெ.(n.) மந்திரத்தினால் செயல் செய்பவர் (வின்.); conjurer, wizard.

*[மந்திரம் + காரன்.]*

**மந்திரக்காவி** *mandira-k-kāvi,* பெ.(n.) செங்காவி தோய்த்த துறவியுடை; cloth dyed with red ochere and worn by ascetics.

*[மந்திரம் + காவி.]*

**மந்திரக்கிழவர்** *mandira-k-kilavar,* பெ.(n.) அறங்கூறு அவையத்தோர்; king's counsellors/ ministers. *"ஆனையாள்..... தான் மந்திரக் கிழவரை வருகென் றேவினான்" (கம்பரா. அயோத்.மந்திர.4).*

*[மந்திரம் + கிழவர்.]*

**மந்திரக்குளியல்** *mandira-k-kuliyal,* பெ.(n.) எழுவகைக் குளியலுள் ஒன்றான மந்திரநீர்க் குளியல் (வின்.); purification by sprinkling a few drops of water on the head with appropriate mandram, one of seven kinds of bath.

*[மந்திரம் + குளியல்.]*

**மந்திரக்கூடம்** *mandira-k-kūdam,* பெ.(n.) கருங்கல்; granite (சா.அக.).

**மந்திரக்கூர்மை** *mandira-k-kūrmai,* பெ.(n.) இந்துப்பு; rock salt (சா.அக.).

**மந்திரக்கூறை** *mandira-k-kūṟai,* பெ.(n.) பூசைப்பட்டு (வின்.); consecrated garment, silk or other ceremonially pure for wearing during *pušai.*

*[மந்திரம் + கூறை.]*

**மந்திரக்கோட்டி** *mandira-k-kōṭṭi,* பெ.(n.) உசாவற்குரிய அவை; council hall. *"மன முணக் கிளந்த மந்திரக் கோட்டியுள்" (பெருங்.உஞ்சைக்.36, 277).*

*[மந்திரம் + கோட்டி. கோடகம்→ கோட்டி. கொளுத்தி→ கோட்டி. கோட்டி பார்க்க; see kōṭṭi.]*

**மந்திரக்கோடி** *mandira-k-kōḍi,* பெ.(n.) மந்திரங்களோடும் வாழ்த்துக்களோடும் மணமகள் பெறும் கூறைப் புடவை; the wedding cloth given to a bride, as consecrated with mantram. *"மந்திரக் கோடி யுடுத்தி" (திவ்.நாய்ச்.6, 5).*

*[மந்திரம் + கோடி. கோடு→ கோடி. விளிம்பில் கரை (கோடு) கட்டிய புத்தாடை.]*

**மந்திரகலை** *mandira-kalai,* பெ.(n.) மந்திரக் கலை பார்க்க; see *mandira-k-kalai.*

*[மந்திரம் + கலை.]*

மந்திரம் என்பதை வட சொல்லென மயங்கியதால் சென்னைப் பல்கலைக் கழகப் பேரகரமுதலியில் வல்லெழுத்து மிகாது வந்துள்ளது. கலை என்பது கலைகளுக்கெல்லாம் பொதுப்பெயர். மந்திரம் என்பது சிறப்புப் பெயர். இஃது இருபெயரொட்டுப் பண்புப் பெயராதலின் வல்லெழுத்து மிகுந்தே வரும். மந்திரம் பார்க்க; see *mandiram.*

**மந்திரகாவி** *mandira-kāvi,* பெ.(n.) மந்திரக் காவி பார்க்க; see *mandira-k-kāvi.*

*[மந்திரக்காவி→ மந்திரகாவி.]*

**மந்திரச்சாலை** *mandira-c-cālai,* பெ.(n.) மந்திரிகளுடன் உசாவல் செய்யும் தனி மண்டபம்; king's delibarative assembly. *"அரசவை விடுத்த வேந்தன்..... மாடக்கோயில் மந்திரசாலை சேர்ந்தான்" (சூளா.குமார.4).*

*[மந்திரம் + சாலை.]*

**மந்திரச்சுற்றம்** *mandira-c-cuṟṟam,* பெ.(n.) மந்திரக்கிழவர் பார்க்க; see *mandira-k-kiḻavar. "மந்திரச் சுற்றமொடு மன்னனும் விரும்பி" ( மணிமே. 28:184).*

*[மந்திரம் + சுற்றம்.]*

**மந்திரசத்திமூலி** *mandiracatti-mūli,* பெ.(n.) கருந்தேக்கு; black teak (சா.அக.).

**மந்திரசாலை** *mandira-cālai,* பெ.(n.) மந்திரச்சாலை பார்க்க; see *mandira-c-cālai.*

*[மந்திரம் + சாலை.]*

**மந்திரசித்தி** *mandira-šitti,* பெ.(n.) மந்திர வுருவேற்றிப் பெற்ற பேறு; super natural power acquired by means of mantram. *"ஐயன் மந்திர சித்தியன்ன சிலைத் தொழில்" (கம்பரா.அதிகா.208).*

**மந்திரசுத்தி** *mandira-šutti,* பெ.(n.) ஐவகைத் தூய்மை யாக்கலுள் மந்திரத்தால் தூய்மை செய்கை (வின்.); ceremonial purification by sprinkling water consecrated by mandram, one of panja sutti.

*[மந்திரம் + வ. சுத்தி.]*

**மந்திரஞ்செபி–த்தல்** *mandirañ-sebi-,* 4 செ.கு.வி.(v.i.) மந்திரத்தை உருவேற்றுதல்; to recite or repeat mandra.

*[மந்திரம் + **Skt.** செபி–.]*

**மந்திரத்துணைவர்** *mandira-t-tuṇaivar,* பெ.(n.) மந்திரக்கிழவர் பார்க்க; see *mandira-k-kiḷavar. "மைத்துன மன்னரு மந்திரத் துணைவரும்" (பெருங்.உஞ்சைக்.38, 132).*

*[மந்திரம் + துணைவர்.]*

**மந்திரத்தூண்** *mandira-t-tūṇ,* பெ.(n.) நஞ்சு முதலியவற்றைத் தீர்க்க மந்திரத்துடன் நாட்டப்பட்ட தூண் (வின்.); post set up with incantations as an antidote for venomous bites or for magical purposes (வின்.).

*[மந்திரம் + தூண்.]*

**மந்திரத்தோழி** *mandira-t-tōḷi,* பெ.(n.) தலைவியின் நெருங்கிய தோழி; confidential maid of a lady. *"யாப்பியாயினியெனு மந்திரத் தோழியொடு" (பெருங்.மகத.9, 54).*

*[மந்திரம் + தோழி.]*

**மந்திரபசு** *mandira-pašu,* பெ.(n.) பூனை; cat (சா.அக.).

**மந்திரபூதரத்துமன்** *mandira-pūtarattu maṉ,* பெ.(n.) கழுலன்; a brahmini kite, king of birds (சா.அக.).

**மந்திரம்¹** *mandiram,* பெ.(n.) 1. திண்ணிய எண்ணம், மனவுறுதி (பிங்.); strong thought. 2. சூழ்வு, கலந்தாய்வு (ஆலோசனை) (பிங்.); delibration, consultation. 3. அரசியல் பற்றிய அரசன் அல்லது அமைச்சன் சூழ்வு; political consultation by king or minister. 4. அமைச்சர் குழு, மந்திரிகள் அவை; royal council of advisers. *"மன்னவன்றனக்கு நாயேன் மந்திரத்துள்ளேன்" (கம்பரா.உருக்காட். 31).* 5. மறைமொழி; a commanding word. *"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழிதானே மந்திரம் என்ப" (தொல். செய்.176).* 6. திருமூலர் எழுதிய திருமந்திரம்; treatise by *Tirumūlar.* 7. சிவபோற்றி (சிவாயநம) என்பது போன்ற திருமொழி; sacred formula of invocation of *Šivā.* 8. வசிய மந்திரம்; mandiram to attract. 9. சாவிப்பு மந்திரம்; mandiram to.

*[முன்→மன் + திரம். முன்னுதல் = கருதுதல், சூழ்தல். மன் + திரம் – மந்திரம்.]*

**மந்திரம்²** *mandiram,* பெ.(n.) 1. வீடு; house. *"மந்திரம் பலகடந்து" (கம்பரா.ஊர்தேடு.138).* 2. அரண்மனை (பிங்.); king's residence. 3. தேவர் கோயில் (பிங்.); temple. *"ஆதி தனது மந்திரத்து" (கந்தபு. காமதகன.67).* 4. மண்டபம்; public hall. 5. உறைவிடம்; dwelling place. *"மான்மதங் கமழ்கொடி மந்திரந்தொறும்" (பாரத. வேத்திர.29).* 6. குகை; den. *"அரிமந்திரம் புகுந்தால்" (நீதிவெண்.2).* 7. அறச்செய்கை பதினான்கனுள் பிறர்க்கு வசிக்க இடமளிக்கும் அறச்செயல் (வின்.); giving a place to dwell in, one of 14 *tayā-virutti,* q.v.

*[முல் (பொருந்தற் கருத்து வேர்)→மல்→மன். மன்னுதல் = பொருந்துதல், மிகுதல், தங்குதல், நிலைபெறுதல், உறுதியாய் நிற்றல். மன்→மன்று = அவை, அம்பலம், அறங்கூறவை, ஆன்கணம், ஆன் தொழு, மரத்தடித் திண்ணைப் பொதுவிடம், மக்கள் கூடும் நாற்சந்தி, மணம்→மன்று→மன்றம்*

= அவையம், அறங்கூறவையம், மரத்தடிப் பொதுவிடம். மன் → மனை = பலர்கூடி அல்லது நிலைத்து வதியும் வீடு, வீடு கட்டுதற்குரிய வெறுநிலம், அல்லும் பகலும் வீட்டில் வதியும் மனைவி, வீட்டில் வதியும் குடும்பம். மன் + திரம் = மன்றிரம் → மந்திரம்.]

மந்திரம் – வ. மந்திர.

மக்கள் உறைவிடத்தையும் அரிமாக் குகையையும் குதிரைக் கூடத்தையும் குறிக்கும் மந்திரம் என்னும் சொல் ஒன்றே. சென்னைப் பல்கலைக் கழக அகரமுதலி, குதிரைச் சாலையைக் குறிக்கும் மந்திரம் என்னும் சொல்லை வேறெ‌ன மயங்கிப் பிரித்துக் கூறியது வழுவாகும். மக்கள் படுக்கை, விலங்கின் படுக்கை, பறவைக்கூடு ஆகிய மூன்றையும், சேக்கை யென்னும் ஒரே சொல் பொதுவாகக் குறித்தல் காண்க.

சூழ்வினையைக் குறிக்கும் மந்திரம் என்னும் சொல் வேறு. அது அமைப்பில் ஒத்திருப்பினும், அதன் முதனிலையான மன் என்னும் சொல் முன் என்பதன் திரிபாகும். முன்னுதல் = கருதுதல், சூழ்தல். மன் + திரம் = மன்றிரம் → மந்திரம் → வ. மந்த்ர. மன் = மந்திரம் (பிங்). இது முதனிலைத் தொழிற் பெயரும் தொழிலாகு பெயருமாகும் (வே.க.4:33).

**மந்திரம்³** *mandiram*, பெ.(n.) 1. குதிரைச் சாலை; stable for horse. 2. குதிரைக் கூட்டம் (சூடா.); herd of horses.

*[மன் + திரம்.]*

**மந்திரம்⁴** *mandiram*, பெ.(n.) கள் (பிங்.); toddy.

**மந்திரம்⁵** *mandiram*, பெ.(n.) யானை வகை (சுக்கிரநீதி.307); a kind of elephant.

**மந்திரம்பண்ணு-தல்** *mandiram-paṇṇu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. மந்திரத்தால் கேடு (பில்லி சூனியம்) வைத்தல்; to practise sorcery. 2. மந்திரஞ்செபி- பார்க்க; see *mandirañ-sebi*.

*[மந்திரம் + பண்ணு.]*

**மந்திரமாக்கள்** *mandira-mākkaḷ*, பெ.(n.) மந்திரக்கிழவர் பார்க்க; see *mandira-k-kiḻavar*. *"மந்திரமாக்கள்.......... தெளிந்து செய்கென" (பெருங்.மகத.19, 108).*

*[மந்திரம் + மாக்கள்.]*

**மந்திரமாடம்** *mandira-māḍam*, பெ.(n.) உசாவல் செய்யும் மண்டபம்; hall where king's counsellors hold their delibration. *"மந்திரமாடத்து மறைந்தன னிருந்து" (பெருங்.இலாவண.9, 35).*

*[மந்திரம் + மாடம்.]*

**மந்திரமாலிகை** *mandira-māligai*, பெ.(n.) மந்திரமாலை பார்க்க; see *mandira-mālai*. *"மந்திரமாலிகை சொல்லு மியமநியமாதியா மார்க்கத்தில்" (தாயு. தேசோ.1).*

*[மந்திரம் + மாலிகை. மாலை → மாலிகா (Skt.) → மாலிகை.]*

**மந்திரமாலை** *mandira-mālai*, பெ.(n.) சிவன், திருமால் இவர்களுக்குரிய ஐந்தெழுத்தும், எட்டெழுத்தும்; mystic formula sacred to *Śivaṉ* and *Tirumāl*. *"நற்றிரு மந்திர மாலை........ எனவெடுத்து" (பெரியபு.திருமூல.26).*

*[மந்திரம் + மாலை.]*

மந்திரமூர்த்தி *mandira-mūrtti,* பெ.(n.) 1. மந்திர வடிவான கடவுள்; god, as embodied in a mantram. *"அதிதேவதை யுமாய் மந்திர மூர்த்தியுமாய் ஓங்காரமாயே நின்று" (திருக்களிற்றுப்.25, உரை).* 2. மந்திர நாயகன் பார்க்க (யாழ்.அக.); see *mandira-nāyagaṉ.* 3. மந்திரவாதி, 1 பார்க்க; see *mandiravāti.*

*[மந்திரம் + **Skt.**மூர்த்தி.]*

மந்திரமைந்து *mandiram-aindu,* பெ.(n.) ஐந்தெழுத்து மந்திரம்; a mantram of five letters. *"மந்திரமைந்துமாதோ....... அதன் செவிச் செப்புகின்றான்" (சீவக.945).*

*[மந்திரம் + ஐந்து.]*

மந்திரயாகம் *mandira-yāgam,* பெ.(n.) மந்திரஞ்சொல்லி; reciting of a mantram considered a form of sacrifice (சிவதரு. ஐவகை.2, உரை).

*[மந்திரம் + **Skt.** யாகம்.]*

மந்திரர் *mandirar,* பெ.(n.) அமைச்சர் (சூடா.); king's ministers.

*[மந்திரம்→மந்திரன்→மந்திரர்.]*

மந்திரவசியம் *mandira-vaśiyam,* பெ.(n.) மயக்கு; spell (சா.அக.).

*[மந்திரம் + **Skt.**வசியம்.]*

மந்திரவாதம் *mandira-vādam,* பெ.(n.) 1. மந்திரஞ்சொல்லுதல்; uttering mantram. 2. மந்திரமே மூலபொருளெனக் கொள்ளும் ஒரு சமயம் (யாழ்.அக.); a religious system that holds mantram to be the supreme deity.

*[மந்திரம் + **Skt.** வாதம்.]*

மந்திரவாதி[1] *mandira-vādi,* பெ.(n.) மந்திரவாளி பார்க்க; see *mandiravāḷi.*

*[மந்திரம் + வாதி.]*

மந்திரவாதி[2] *mandira-vādi,* பெ.(n.) ஈ; fly (சா.அக.).

மந்திரவாள் *mandira-vāḷ,* பெ.(n.) 1. மந்திர ஆற்றல் வாய்ந்த வாள் (வின்.); magical sword. 2. அரசுக்கு அறிகுறியான வாள் (யாழ்.அக.); sword of royalty.

*[மந்திரம் + வாள்.]*

மந்திரவாளி *mandira-v-āḷi,* பெ.(n.) 1. மந்திர வல்லமையால் பேயோட்டுதல் முதலியன செய்பவன்; conjurer, sorcerer, wizard, diviner, juggler, magician, one who practises legerdemain. *"பேயகன்று குடிபோக வருள் செயொரு மந்திர வாதியாகி" (சிவப்.பிர.சிவஞா.பிள். வாரானை.2).* 2. மந்திரவாத சமயத்தோன் (யாழ்.அக.); follower of the *mandiravātam* religion.

*[மந்திரம் + ஆளி. ஆள்→ஆளி.]*

மந்திரவித்தை *mandira-vittai,* பெ.(n.) 1. மந்திரங்களைப் பற்றிய கல்வி; science of mantram. 2. மாயக் கல்வி; conjuration. 3. மந்திரோபாசனை பார்க்க (யாழ்.அக.); see *mandirō-pāśaṉai.*

*[மந்திரம் + **Skt.** வித்தை.]*

மந்திரவிதி *mandira-vidi,* பெ.(n.) மந்திரத்தைப் பயன்படுத்தும் முறை; rules for the use of mantram. *"மந்திர விதியின் மரபுளி வழாஅது" (திருமுரு.95).*

*[மந்திரம் + விதி. **Skt.** விதி > த.நெறி. மந்திரநெறி பார்க்க.]*

**மந்திரவீதி** *mandira-vīdi,* பெ.(n.) மாடவீதி; street, surrounding a temple. *"துறக்க மந்திர வீதியு நான்கெனத் தொடுத்தார்" (உபதேசகா. சிவபுண்.140).*

*[மந்திரம் + வீதி.]*

**மந்திரவுச்சாடணம்** *mandira-uccāḍaṇam,* பெ.(n.) மந்திரஞ் சொல்லுதல்; chantiny mantram.

**மந்திரவோலை** *mandira-v-ōlai,* பெ.(n.) அரசன் திருமுகம்; royal command in writing. *"மந்திரவோலை போக்கிய வண்ணமும்" (பெருங்.மகத.25:39).*

*[மந்திரம் + ஓலை.]*

**மந்திராங்கம்** *mandirāṅgam,* பெ.(n.) சவ்வு; mucus membrane (சா.அக.).

*[மந்திரம் + அங்கம். மந்திரம் = மறைபொருள்.]*

**மந்திராய்** *mandirāy,* பெ.(n.) கச்சந்திராய்; a species of bitter edible plant (சா.அக.).

**மந்திராயுதம்** *mandirāyudam,* பெ.(n.) மந்திரத் தன்மையுள்ள படைக்கலன்; weapon with magical powers.

*[மந்திரம் + **Skt.** ஆயுதம்.]*

**மந்திராலோசனை** *mandirālōšaṉai,* பெ.(n.) அரசன் மந்திரிகளுடன் ஆராய்கை; deliberation of a king with his ministers.

*[மந்திரம் + **Skt.** ஆலோசனை. த. கலந்தாய்வு.]*

**மந்திரி¹-த்தல்** *mandiri-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. மந்திர ஆற்றலால் அடக்குதல்; to keep spell bound, control or enchant by mandram. 2.மந்திரத்தால் வலுவுண்டாகச் செய்தல்;to consecrate with mandram. *நீரை மந்தரித்துக் கொடுத்தான் (உ.வ.).* 3. மந்திரத்தால் ஒருநிலைப்படுதல்; to recite mystic formulas or mandram in worship and to meditate. *"மந்திரிப்பார் மனத்துளானை" (தேவா.590, 4).* 4. உசாவல்; to consult, take counsel. *"மகட்பேசி மந்திரித்து" (திவ். நாய்ச்.6, 3).*

**மந்திரி²-த்தல்** *mandiri-,* 4 செ.கு.வி.(v.i.) 1. மந்திரஞ் சொல்லுதல்; to utter mandram for effecting cure, etc. *"சிரத்தினஞ்சுற்ற பின்னை மீண்டிட மந்திரிப்பார்" (பிரபோத.5, 7).* 2. தீய கருத்துகளைச் சொல்லுதல்; to give evil advice.

*[மந்திரம்¹→மந்திரி.]*

**மந்திரி³** *mandiri,* பெ.(n.) 1. அமைச்சன்; counsellor, minister. *"பழுதெண்ணு மந்திரியின்" (குறள், 639).* 2. வியாழன்; jupiter, as Indra's minister (பிங்.). 3. வெள்ளி; *šukkiran,* as the minister of the Asuras. 4. குபேரன்; kuberan (பிங்.). 5. வருஞ்செயலுரைப்போன் (வின்.); one who foretells future events. *"மந்திரிக்கழகு வரும் பொருளுரைத்தல்" (வெற்றிவேற்கை, 8).* 6. ஆண்டின் நவநாயகர்களுள் ஒருவன் (பஞ்.); one of navanayagar. 7. படைத் தலைவன் (யாழ்.அக.); commander of an army. 8. அறிவன்; planet mercury. 9. பித்தம்; bile. *"மந்திரி நிறமாய் வரப்படுநீர்" (நீர்நிறக்.53).*

*[மந்திரம்¹→மந்திரி. மந்திரம் – அமைச்சர்க் குழு.]*

**மந்திரி⁴** *mandiri,* பெ.(n.) 1. கள்விற்போன்; one who sells toddy. 2. செல்வந்தன் (குபேரன்); rich person (சா.அக.).

*[மந்திரம்³→மந்திரி.]*

மந்திரி[5] *mandiri,* பெ.(n.) திராய் (மலை.); a profusely branching prostrate herb.

மந்திரிகூடம் *mandiri-kūḍam,* பெ.(n.) கருங்கல் (சங்.அக.); black stone.

மந்திரிகை *mandirigai,* பெ.(n.) நூற்றெட்டுச் சிற்றிலக்கியங்களுள் ஒன்று (சங்.அக.); an upanisad, one of 108.

மந்திரினி[1] *mandiriṉi,* பெ.(n.) கருமானம்; black art, witch craft (சா.அக.).

மந்திரினி[2] *mandiriṉi,* பெ.(n.) பெண் அமைச்சர், பெண் மந்திரி; lady minister.

மந்திரோச்சாரணம் *mandirō-c-cāraṇam,* பெ.(n.) மந்திராசரணை பார்க்க; see *mandirā-šaraṇai.*

மந்திரோபதேசம் *mandirōpatēcam,* பெ.(n.) 1. மந்திரத்தைச் சொல்லுகை; instruction in mantram. 2. ஆசிரியன் திருவிலச்சினை செய்த பின் எட்டெழுத்தைப் பலுக்கச் சொல்லித் தருகை (மாலியம்); (vaisṇ) the ceremony of teaching the eight-lettered mandram, after initiation by a guru, one of *pañca-camskāram,* q.v.

*[மந்திரம் + வ. உபதேசம்.]*

மந்திரோபாசனை *mandirōpāšaṉai,* பெ.(n.) ஒரு தெய்வத்தை அதற்குரிய மந்திரத்தால் வழிபடுகை (வின்.); propitiation a deity by means of its appropriate mantram.

*[மந்திரம் + வ. உபாசனை.]*

மந்தில் *mandil,* பெ.(n.) கப்பற்பாய் தாங்கியைத் தூக்குங் கயிறு (Naut.); lift, rope from the masthead to the extremity of the yard below, used for raising or supporting the end of the yard.

மந்தினி[1] *mandiṉi,* பெ.(n.) தயிர்கடை தாழி (பிங்.); churning pot.

*[மத்து →மந்தினி.]*

மந்தினி[2] *mandiṉi,* பெ.(n.) ஆடு தின்னாப் பாளை (சங்.அக.); worm-killer.

மந்து[1] *mandu,* பெ.(n.) 1. ஆன் கணம்; herd of cows. 2. ஆன்தொழு; cow stall. 3. எருமை நிரை; herd of buffaloas. 4. நீலமலைத் துடவர் குடியிருப்பு; dwelling place of Tudavars of the Nilgris.

*[முல்→மல்→மன். மன்னுதல் = பொருந்துதல், மிகுதல், நிலை பெறுதல், உறுதியாய் நிற்றல். மன்→மன்று = அவை, அம்பலம், ஆன்கணம், ஆன்தொழு, மக்கள் கூடும் நாற்சந்தி. மன்று→மந்து (வே.க.4:32). துடவர்க்கு எருமை நிறை யோம்பலே பிழைப்பு வழியாதலால், அவர் குடியிருப்பு மந்து எனப்பட்டது. ஆட்டுப் பட்டிகளும் மாட்டுப் பட்டிகளும் இருந்தவூர்கள் பட்டியென்றே பெயரீறு பெற்றிருத்தலை நோக்குக. ஒரே பெருங்கல் இருந்த மந்து ஒற்றைக்கல் மந்து (ootacamund) எனப்பட்டது. தெலுங்கு நாட்டில் ஒரு பகுதி ஒருகல் நாடு அல்லது ஓராங்கல் (warangal) நாடு எனப் பெயர் பெற்றிருத்தலைக் காண்க.]*

மந்து[2] *mandu,* பெ.(n.) 1. அரசன்; king. 2. மனிதன்; man. 3. குற்றம்; fault.

*[மன்→மந்து.]*

மந்து[3] *mandu,* பெ.(n.) 1. காய்வேளை (வின்.); an annual herb. 2. மந்துகால் பார்க்க; see *mandu-kāl.*

மந்துகால் *mandu-kāl,* பெ.(n.) யானைக் கால் (நாஞ்.); cochin leg; elephantiasis.

மந்துரம் *manduram,* பெ.(n.) மந்துரை, 1, 2 பார்க்க; see *mandurai.*

மந்துரை *mandurai,* பெ.(n.) 1. குதிரை வரிசை; row of horses. *"வாசி மந்துரைக்குத் தலைவராய்" (பாரத. நாடுக.23).* 2. குதிரைச் சாலை; horse-stable. *"மந்துரை தன்னுட் கட்ட" (திரு வாலவா.29,16).* 3. தொழுவம் (யாழ்.அக.); manger. 4. படுக்கை (யாழ். அக.); bed.

மந்தேகர் *mandēgar,* பெ.(n.) கதிரவன் தோன்றும் போதும் மறையும் போதும் அக்கடவுளை நாள்தோறும் தடுத்து எதிர்த்து இறந்திறந்து பிறக்கும் ஒருசார் அரக்கர் (இராக்கதர்); a group of rāksasas who are believed to perish in attacking the sun daily at sunrise and sunset and resurrect immediately. *"வெம்படைகளா லுடன்ற மந்தேகர்" (பாரத.கிருட்டிண.87).*

மந்தை *mandai,* பெ.(n.) 1. கால்நடைக் கூட்டம்; flock, herd. 2. ஊரின் பொது மேய்ச்சலிடம்; common pasture of a village. 3. ஊரிடையிலுள்ள பொது வெளியிடம்; open space in the middle of a village, common to the community. 4. சட்டையின் பின்பக்கத்து ஒட்டுத்துணி (parav.); back piece of a shirt. 5. தோட்டிய சாதியாருள் ஒரு பிரிவினர் (G.Tp.D.I, 123); a sub-caste of *tōṭṭiyaṉs.*

*[முல்→மல்→மன். மன்னுதல் = பொருந்துதல், மிகுதல், நிலைபெறுதல், உறுதியாய் நிற்றல். மன்→மன்று = அவை, அம்பலம், அறங்கூறவை, ஆன்கணம், ஆன்தொழு. மன்று→மந்து→மந்தை (வே.க.4:33)]*

மந்தைக்கரை *mandai-k-karai,* பெ.(n.) மந்தை, 2 பார்க்க (இ.வ.); see *mandai.*

மந்தைக்கல் *mandai-k-kal,* பெ.(n.) ஆவுரிஞ்சு தறி (வின்.), மாடுகள் தம் உடம்பைத் தேய்த்துக் கொள்ள அமைப்பான குத்துக்கல்; rubbing stone for cattle.

*[மந்தை + கல்.]*

மந்தைக்குத்துக்கல் *mandai-k-kuttu-k-kal,* பெ.(n.) மந்தைக்கல் (நெல்லை.); see *mandai-k-kal.*

*[மந்தை + குத்துக்கல்.]*

மந்தைப்பெருச்சாளி *mandai-p-peruccāḷi,* பெ.(n.) தூதுவளை; a thorny creeper plant.

மந்தைமறி-த்தல் *mandai-maṟi-,* 4 செ. குன்றாவி. (v.t.) மந்தையைக் காத்தல் (வின்.); to guard a herd.

*[மந்தை +மறி.]*

மந்தைமுறை *mandai-muṟai,* பெ.(n.) நிலக்கிழார்கள் தங்கள் ஊரிலுள்ள ஆடு மாடுகளைத் தத்தம் வயல்களில் உரத்தின் பொருட்டு முறை வைத்துக் கிடைவைக்கச் செய்யும் உரிமை; customary right of the mirasdars to have the cattle of the village penned on their fields for manure, by turn (R.F.).

*[மந்தை + முறை.]*

மந்தையன் *mandaiyaṉ,* பெ.(n.) மந்தன், 1 பார்க்க; see *mandaṉ.*

*[மந்தன்→மந்தையன்.]*

மந்தைவரிசை *mandai-varišai,* பெ.(n.) மந்தைமுறை பார்க்க (R.F.); see *mandai-murai.*

[*மந்தைமுறை → மந்தைவரிசை. முறை = வரிசை.*]

மந்தைவாசி *mandai-vāši,* பெ.(n.) கருஞ்சிவதை வேர்; black turpeth root (சா.அக.).

மந்தைவெளி *mandai-veli,* பெ.(n.) 1. மேய்ச்சல் திறந்தவெளி; village commons, used as posture ground. 2. கால்நடையை அடைத்து வைக்கும் அடைப்பிடம் (வின்.); pen for cattle.

[*மந்தை + வெளி.*]

மந்தோக்கினி *mandōkkini,* பெ.(n.) முன்னை மரம்; a tree (சா.அக.).

மந்தோச்சம் *mandōccam,* பெ.(n.) கோள் வட்டத்தின் மிகு அருகான அல்லது மிகத் தொலைவான இடம் (வின்.); (Astron.) apsis of a planet's orbit.

மந்தோததி *mandōdadi,* பெ.(n.) பாற்கடல் (யாழ்.அக.); the ocean of milk.

மந்தோற்சாகம் *mandōr-šāgam,* பெ.(n.) இளஞ்சூடு; luke warmness (சா.அக.).

மப்பன் *mappan,* பெ.(n.) மந்தன், 1 பார்க்க (இ.வ.); see *mandan.*

மப்பு *mappu,* பெ.(n.) 1. முகில் மூட்டம்; being overcast or cloudy. 2. செரியாமை; indigestion. 3. மயக்கம்; bewilderment; beclouded state of the intellect, as by intoxication. 4. மட்டித்தனம்; dullness. 5. செருக்கு; arrogance. *"இந்த ஆள்களின் மப்பை எடுக்கவேணும்" (உ.வ.).*

மப்புகட்டியிரு-த்தல் *mappu-katti-iru-,* 3 செ.குன்றாவி.(v.t.) மழை வருவதற்கு முந்தைய நிலையான முகில் திரண்டிருத்தல்; cloudy sky (க.ப.அக.).

[*மப்பு + கட்டியிரு-.*]

மப்புச்சோளம் *mappu-c-cōlam,* பெ.(n.) மந்தத்தை யுண்டாக்குமொரு வகைச் சோளம்; Indian millet which is difficult for digestion (சா.அக.).

[*மப்பு + சோளம்.*]

மப்புண்டாகு-தல் *mappundāgu-,* 7 செ.கு.வி. (v.i.) மப்பு தோன்றுதல்; feeling loss of appetite.

[*மப்பு + உண்டாகு-.*]

மப்புமந்தாரம் *mappu-mandāram,* பெ.(n.) முகில் மூட்டநிலை (கொ.வ.); overcast and clouded state of the sky. *மேகம் மப்பும் மந்தாரமாக இருக்கிறது (பே.வ.).*

[*மப்பு + மந்தாரம்.*]

மம்புதா *mamputā,* பெ.(n.) கோரைக் கிழங்கு; a fragrant root (சா.அக.).

மம்மட்டி[1] *mammatti,* பெ.(n.) மண்வெட்டி (இ.வ.) பார்க்க; see *man-vetti.*

[*மண்வெட்டி → மம்முட்டி → மம்மட்டி (கொ.வ.).*]

மம்மட்டி[2] *mammatti,* பெ.(n.) சிற்றாமுட்டி (மலை.); rose-coloured sticky mallow.

மம்மத்திரி *mammattiri,* பெ.(n.) சிற்றாமுட்டி; a medicinal plant (சா.அக.).

மறுவ. மம்மட்டி.

**மம்மர்** *mammar,* பெ.(n.) 1. வருத்தம் (பிங்.); distress, sorrow, affliction. *"மம்ம ரறுக்கும் மருந்து கண்டாய்" (தேவா.845:8).* 2. மயக்கம்; delusion. *"மம்மர் கொண் மாந்தர்க் கணங்காகும்" (நாலடி, 14).* 3. கல்லாமை; illiteracy. *"காணாக் குருடராச் செய்வது மம்மர்" (நான்மணி.24).* 4. காமம்; lasciviousness lust.

*[முள் → (மள்) → மரு → மருள் = மயக்கம். மருள் → மருட்கை = மயக்கம், வியப்பு. மரு → மருமம் → மம்மம் → மம்மர் (மு.தா.178). முள் → மும் → மய் → மை = கருப்பு, இருள். மைம்மை = கருமை, இருண்மை. மைம்மை → மைம்மைப்பு = கண்ணிருளல், கண் மங்கல், பார்வைக் குறை. மைம்மை → மைமை → மைமல் = மாலைநேரம். மைம்மை → மம்மல் = அந்தி நேரம். மம்மல் → மம்மர் (வே.க. 4:60).]*

**மம்மல்** *mammal,* பெ. (n.) அந்தி நேரம் (இ.வ.); dusk.

*[முள் → மள் → மரு → மருமம் → மம்மர் → மம்மல் (மு.தா.178). மைம்மை → மைமை → மைமல் = மாலை நேரம். மைம்மை → மம்மல் (வே.க.4:60).]*

**மம்முட்டிப்பூண்டு** *mammuṭṭi-p-pūṇḍu,* பெ.(n.) மரவகை; serrata elliptic-leaved holly, l.tr. *Ilex denticulata (A.).*

**மமுத்தை** *mamuttai,* பெ.(n.) ஆதளை (சங். அக.); common physic nut.

**மமைக்குறிஞ்சி**[1] *mamai-k-kuriñji,* பெ.(n.) பெருங்குறிஞ்சி எனும் கொடிவகை (சங்.அக.); a species of conehead.

*[மாமை → மமை + குறிஞ்சி.]*

**மமைக்குறிஞ்சி**[2] *mamai-k-kuriñji,* பெ.(n.) 1. மயக்கம்; giddiness. 2. சோம்பு; withering.

*[மாமை → மமை + குறிஞ்சி.]*

**மய-த்தல்** *maya-,* 3 செ.குன்றாவி.(v.t.) மயங்குதல்; to mistake, misunderstand. *"மயந்துளேனுலக வாழ்க்கையை" (அருட்பா. 4, அபயத்திறன்.14).*

*[முள் → முய → முயங்கு = கூடுதல். முய → மய (மு.தா.177).]*

**மயக்கடி** *maya-k-kaḍi,* பெ.(n.) 1. மயக்கம் (இ.வ.); bewilderment. 2. குடிவெறி; intoxication.

*[மயக்கு + அடி.]*

**மயக்கந்தாதி** *mayakkandādi,* பெ.(n.) எழுத்து, அசை, சீர் இவற்றின் ஈறு தொடங்கிகள் (அந்தாதிகள்) விரவிவரப் பாடும் வகை (யாப்.வி.பக்.184); a *andādi,* in which *acai-y-andādi, cīr-andādi* and *eḻuttandādi* are found mixed.

*[மயக்கு + அந்தாதி.]*

**மயக்கநெறி** *mayakkaneri,* பெ.(n.) தமிழ்ச் சொல்லில் இன்ன மெய்யெழுத்து இன்ன மெய்யெழுத்தோடு சேர்ந்து வருமென்பது பற்றிய நெறிமுறை (நன்.எழுத்து.2297, விருத்.); the rule determining the sequences of consonants in word - formation.

**மயக்கம்** *mayakkam,* பெ.(n.) 1. அறிவின் திரிபு; mental delusion, stupor, bewilderment, aberration of mind, as from ignorance, fascination, etc. 2. அறியாமை; ignorance. *"காமம் வெகுளி மயக்க மிவை மூன்ற னாமங் கெட" (குறள், 360).* 3. பிழைபட வுணர்கை; mistaken knowledge, misunderstanding.

4. பிரிவுத் துன்பம் (அரு.நி.); pining due to separation from one's beloved. 5. உணர்விழப்பு, மூர்ச்சை (கொ.வ.); giddiness, unconsciousness. 6. கலப்பு; mixture. *"வடசொன் மயக்கமும் வருவன புணர்த்தி" (கல்லா.62, 18).* 7. எழுத்துப் புணர்ச்சி (இலக்.); combination of letters, coalescence. *"உடனிலை மயக்கம் வேற்றுநிலை மெய்ம்மயக்கம்". "மெய்ந்நிலை மயக்கம் மானமில்லை" (தொல்.எழுத்து.47).* 8. மரணச் சடங்கினுள் ஒன்று (யாழ்.அக.); a funeral rite. 9. சோம்பேறித்தனம் (யாழ்.அக.); laziness. 10. இருபாற் கலப்பாகிய அலித்தன்மை (வின்.); confusion in nature, as in the blending of sexes among animals and vegetables.

*[முள் → (முய்) → முய → முயங்கு → மயங்கு (மு.தா.166). மயங்கு (த.வி.) →மயக்கு (பி.அ.) →மயக்கு →மயக்கம்.]*

**மயக்கமுறு-தல்** *mayakkam-uṟu-,* 9 செ.குன்றாவி.(v.t.) 1. மயக்கமுண்டாதல்; to be inconscious. 2. இளைப்படைதல்; faintiny.

*[மயக்கம் + உறு.]*

**மயக்கமின்மை** *mayakkam-iṉmai,* பெ.(n.) அறத்துறுப்பினுள் ஒன்றான மனத் தெளிவு (சூடா.); clarity of mental vision, one of *aṟatturuppu.*

*[மயக்கம் + இன்மை.]*

**மயக்கமேறு-தல்** *mayakkam-eṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. மயக்கங் கொள்ளல்; growing giddy. 2. வெறியேறுதல்; to be intoxicated.

*[மயக்கம் + ஏறு-.]*

**மயக்கரவம்** *mayakkaravam,* பெ.(n.) மயக்கரா (யாழ்.அக.) பார்க்க; see *mayakkarā.*

*[மயக்கம் + அரவம்.]*

**மயக்கரா** *mayakkarā,* பெ.(n.) ஒரு வகைப் பாம்பு (நாமதீப.257); a kind of serpent.

*[மயக்கம் + அரவு. அரவு → அரா.]*

**மயக்கவணி** *mayakka-v-aṇi,* பெ.(n.) ஒரு பொருளை வேறொரு பொருளென மயங்குவதாகக் கூறும்அணி (அணியி.6); (Rhet.) a figure of speech in which one object is mistken for another.

*[மயக்கம் + அணி.]*

**மயக்கவிதி** *mayakka-vidi,* பெ.(n.) மயக்கநெறி பார்க்க; see *mayakka-neṟi.*

*[மயக்கம் + விதி. மயக்கம் = கலப்பு, சேர்க்கை. த.நெறி > **Skt.** விதி.]*

**மயக்கவொழிப்பு** *mayakka-v-oḻippu,* பெ.(n.) ஒரு பொருளை மற்றொரு பொருளென மயங்குவதை யொழித்தற்கு வேற்றுமை கூறித் தெரிவிக்கும் அணி (யாழ்.அக.); a figure of speech in which the confusion between two things is removed by pointing out the differences.

*[மயக்கம் + ஒழிப்பு.]*

**மயக்கி** *mayakki,* பெ.(n.) அதிமதுரம் எனுஞ் செடி (சங்.அக.); liquorice plant.

*[மயக்கம் → மயக்கி.]*

**மயக்கிடை** *mayakkiḍai,* பெ.(n.) மயக்கம் (யாழ்.அக.) பார்க்க; see *mayakkam.*

**மயக்கிமாலை** *mayakki-mālai,* பெ.(n.) வஞ்சகி, சூழ்ச்சிக்காரி (நாஞ்.); artful woman.

*[மயக்கி + மாலை.]*

**மயக்கு[1]-தல்** *mayakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. மனங் குழம்பச் செய்தல்; to bewilder, confuse. *"குறளை பேசி மயக்கி விடினும்" (நாலடி,189).* 2. வியக்கச் செய்தல்; to puzzle, mystify, to make one wonder. *"மாயமயக்கு மயக்கானென்னை வஞ்சித்து" (திவ். திருவாய். 8, 7, 4).* 3. உணர்வுறச் செய்தல்; to fascinate, allure, charm. *"மயக்கிய முயக்கந் தன்னால்" (கம்பரா. இராவணன்சோ.51).* 4. கலத்தல்; to mixup. *"பாற்பெய் புன்கந் தோனொடு மயக்கி" (புறநா.34).* 5. சேர்த்தல்; to unite, join, as a wick with the oil in a can. *"உயிரெனுந் திரிமயக்கி" (தேவா.1189, 4).* 6. சிதைத்தல்; to ruin, destroy. *"எருமை கதிரொடு மயக்கும்" (ஐங்குறு.99).* 7. நிலை நெகிழ்த்துதல்; to disturb, unsettle. *"வள்ளை யாய்கொடி மயக்கி" (அகநா.6).* 8. மூர்ச்சையுறச் செய்தல்; to make one swoon. *"மதகரியை யுற்றரி நெரித்தென மயக்கி.... துகைத்தான்" (கம்பரா .மகுட.5).* 9. ஊடலுணர்த்துதல்; to clear one's misunderstatnding as in sulks. *"மயக்கிய வருதி மன்" (கலித்.73).*

*[முள் → முய → முயங்கு → மயங்கு → மயக்கம் (மு.தா.171).]*

**மயக்கு[2]-தல்** *mayakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) பண்படுத்துதல்; refine. *"மயக்கின நந்தாவினம்" (தெ.க.தொ.14, கல்.84-2).*

*[மயக்கம் → மயக்கு.]*

**மயக்கு[3]** *mayakku,* பெ.(n.) 1. மயக்கம் பார்க்க; see *mayakkam. "கனா மயக்குற்றேன்" (மணிமே.11:104).* 2. போர் செய்கை; fighting. *"இரும்புலி மயக்குற்ற" (கலித்.48).*

*[மயக்கம் → மயக்கு.]*

**மயக்கு[4]** *mayakku,* பெ.(n.) வியக்கச் செய்யும் செயல்; act of making one wonder. *"மாயமயக்கு மயக்கே" (திவ்.திருவாய்.8, 7, 3).*

*[மயக்கம் → மயக்கு.]*

**மயக்குறை** *mayakkuṟai,* பெ.(n.) 1. உணர்ச்சியில்லாமற் செய்யுமருந்து; a medicine capable of depriving the feeling such as chloroform. 2. மயக்கத்தைத் தருமருந்து; stupefying drugs or medicines.

*[மயக்கம் → மயக்கு + உறை. உறு → உறை.]*

**மயங்கக்கூறல்** *mayaṅga-k-kūṟal,* பெ.(n.) மயங்கவைத்தல் பார்க்க (தொல். பொருள். 664); see *mayaṅga-vaittal.*

*[மயங்க + கூறல்.]*

**மயங்கவைத்தல்** *mayaṅga-vaittal,* பெ.(n.) நூற்குற்றம் பத்தனுள் பொருள் இன்னது என்று துணியக் கூடாமற் கூறும் குற்றம் (நன்.பொது.12); obscurity, in literary composition one of ten *nūṟ-kuṟṟam.* *"குன்றக் கூறல் மிகைபடக் கூறல் கூறியது கூறல் மாறுகொளக் கூறல் வழூஉச்சொற் புணர்த்தல் மயங்கவைத்தல் வெற்றெனத் தொடுத்தல் மற்றொன்று விரித்தல் சென்றுதேய்ந் திறுத னின்றுபய னின்மை என்றிவை யீரைங் குற்ற நூற்கே" (நன்.பொது.12).*

*[மயங்க + வைத்தல்.]*

**மயங்கிசைக்கொச்சகம்** *mayangicai-k-koccagam,* பெ.(n.) தரவு முதலிய உறுப்புகள் மயங்கியும் மிக்குங் குறைந்தும் வரும் கொச்சகக் கலி (வீரசோ.யாப்.12, உரை); a species of *koccaga-k-kali* verse.

*[மயங்கிசை + கொச்சகம்.]*

**மயங்கியோர்** *mayangiyōr,* பெ.(n.) அறிவு திரிந்தோர்; persons suffering from mental aberration. *"மாலை யென்மனார் மயங்கியோரே" (கலித்.119).*

*[மயங்கு →மயங்கியோர்.]*

**மயங்கு-தல்** *mayangu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. மருளுதல்; to be confused, bewildered. 2. பரவசமாதல்; to be charmed, allured. 3. வெறி கொள்ளுதல்; to be intoxicated. *தாமயங்கி யாக்கத் துட் டூங்கி... வாழ்நாளைப் போக்குவார்" (நாலடி, 327).* 4. மாறுபடுதல்; to be changed, as in one's mind or body. *"மேனியு முள்ளமும் மயங்காத் தேவர்" (கலித்.82:30).* 5. நிலையழிதல்; to be ruined disolated. *"ஆள்பவர் கலக்குற மயங்கிய நன்னாட்டு" (மணிமே.23:104).* 6. வருந்துதல்; to be distressed. *"முயங்கல் விடாஅ விவையென மயங்கி" (அகநா.26).* 7. தாக்கப்படுதல்; to be disturbed, tossed about, as sea. *"காலொடு மயங்கிய கவிழ் கடலென" (பரிபா.8, 31).* 8. ஐயமடைதல்; to be in doubt. 9. தயங்குதல்; to be overwhelmed with anxiety. *'அந்தச் செயலைச் செய்ய மயங்குகிறான்' (உ.வ.).* 10. கலத்தல்; to be mixed up. 11. போலுதல்; to resemble. *"காரிருள் மயங்கு மணி மேனியன்" (பரிபா.15:50).* 12. நெருங்குதல்; to be crowded together. *"முகிழ் மயங்குமுல்லை" (பரிபா.15:39).* 13. கைகலத்தல்; to engage in a fight. *"தமிழ் தலை மயங்கிய தலையாலங் கானத்து" (புறநா.19).* 14. அறிவுகெடுதல்; to lose one's sense. *"புலான் மயங்கான்" (ஏலாதி, 2).* 15. உணர்ச்சி யிழத்தல்; to become unconscious.

*[முள் → (முய்) → முய → முயங்கு → மயங்கு (மு.தா.166) (வே.க.4:56).]*

**மயங்குகால்** *mayangu-kāl,* பெ.(n.) சுழல் காற்று; cyclone. *"மயங்குகா லெடுத்த வங்கம் போல" (மணிமே.4:34).*

*[மயங்கு + கால். கால் = காற்று. குல் (தோன்றற்கருத்துவேர்)→கல்→கால்→(காலுதல்) = ஒழுகுதல், ஓடுதல், வெளிப்படுதல், தோன்றுதல்.]*

**மயங்குதிணைநிலைவரி** *mayangu-tiṇai-nilai-vari,* பெ.(n.) வரிப்பாட்டு வகை (சிலப். கானல்வரி.அரும்.); a kind of lyric song.

*[மயங்குதிணை + நிலைவரி.]*

**மயசுபடில்தண்டவாளம்** *mayaśupaḍil-taṇḍavāḷam,* பெ.(n.) வெள்ளீய மணல்; tinore (சா.அக.).

**மயடம்** *mayaḍam,* பெ.(n.) புல்லால் வேய்ந்த குடிசை (யாழ்.அக.); hut with grass-roof.



*[முள் → மள் → (மய்) → மை = கருமை, முகில், காராடு, கரிய குழம்பு (மு.தா.181). அள் → அடு → அடர். அள்ளுதல் = நெருங்குதல், அடுத்தல் = நெருங்குதல், அடர்தல் = நெருங்குதல், புடைத்தல், தட்டியுருவாக்கல், அடர்-தல் பார்க்க. அடர் → அடம். மய + அடம்.]*

**மயண்டை** *mayaṇḍai,* பெ.(n.) மாலைநேரம் (யாழ்.அக.); evening.

*[மயல் → மயண்டை.]*

**மயப்பு** *mayappu,* பெ.(n.) 1. சாறு; essence. 2. செல்வமுடைமை; being wealthy. 3. வண்ணம்; colour.

*[மயம்[2] → மயப்பு.]*

**மயம்[1]** *mayam,* பெ.(n.) சிற்ப நூல் முப்பத்திரண்டனுள் ஒன்று (இருசமய. உலகவழக்.சிற்பசாத்.20); a treatise on architecture, one of 32 *ciṟpa-nūl.*

**மயம்[2]** *mayam,* பெ.(n.) 1. ஒட்டகம் (யாழ்.அக.); camel. 2. தன்மை; nature, quality, property. *"பெண்மயமோ பெரிதே" (சீவக. 228).* 3. நிறைவு; prevalence, fullness. *"எங்குந் தழன்மயமாய்"* (விநாயகபு.74, 128). 4. பொருள்; substance. *அவனிடத்தில் ஒரு மயமுமில்லை (உ.வ.).*

**மயம்[3]** *mayam,* பெ.(n.) 1. மகிழ்ச்சி; pleasure, satisfaction. *"மயமுறு மனங்கொடு" (இரகு.கடிமண.36).* 2. அழகு (பிங்.); beauty. *"மயமிக்க மாக தத்தால்" (சூடா.9, 1).* 3. செருக்கு; arrogance. *"மூடந்தரித்தெண் மயத்து நின்றார்" (திருநூற்.62).*

**மயம்[4]** *mayam,* பெ.(n.) ஆவின் சிறுநீர் (கோமயம்); cow-urine. *"மயமாதி யாட்டிடுக" (சிவதரு.பரிகார.76).*

**மயர்[1]-தல்** *mayar-,* 4 செ.கு.வி.(v.i.) 1. மயங்குதல்; to be bewildered, confused. 2. உணர்வறுதல்; to lose consciousness. *"விடந்தனை யயின்றன ரெனும்படி மயர்ந்து" (கந்தபு.திருவி.80).* 3. சோர்தல்; to be fatigued, tired. *"மயரு மன்னவன்" (கம்பரா. இரணியன்வதை.13).* 4. திகைத்தல்; to wonder. *"வைது கொன்றனனோவென வானவர் மயர்ந்தார்" (கம்பரா.கும்பக.244).*

*[முள் → முய → மய → மச → மசகு = திகைப்பு, மயக்கம். மச → மசள் → மசண்டை = அந்திப்பொழுது. மச → மசக்கை = கருப்பிணிகள் அடையும் மயக்கம். மய → மயல் = மயக்கம், காதல். மயல் → மையல் = காதல் மயக்கம், மயல் → மயர் (மு.தா.178).]*

**மயர்[2]** *mayar,* பெ.(n.) மயக்கம்; bewilderment, confusion. *"மயரறுக்குங் காமக்கடவுள்" (பரிபா.15: 37).*

*[மயல் → மயர்.]*

**மயர்ப்பு** *mayarppu,* பெ.(n.) மயர்வு பார்க்க; see *mayarvu.*

*[மயல் → மயர் → மயர்வு → மயர்ப்பு.]*

**மயர்வு** *mayarvu,* பெ.(n.) 1. அறிவு மயக்கம் (பிங்.); illusion of the senses, confusion, bewilderment. 2. அறியாமை, இருள், மருள்; ignorance. *"மயர்வற மதிநல மருளினன்" (திவ்.திருவாய்.1, 1, 1).* 3. சோர்வு; weariness.

*[மயல் → மயர் → மயர்வு = மயக்கம் (மு.தா.178).]*

மயரி *mayari,* பெ.(n.) 1. உன்மத்தன்; person whose mind is confused. *"நின்பால் வாங்கா நெஞ்சின் மயரியை" (மணிமே.22:75).* 2. காமுகன்; lascivious person. *"மயரிகள் சொற்பொருட் கொண்டு" (திருநூற்.53).* 3. அறிவிலி; ignorant person. *"மயரிக ளல்லாதார்" (இனி.நாற்.13).*

*[மயர் → மயரி.]*

மயரை *mayarai,* பெ.(n.) ஒருவகை மீன்; a kind of fish.

மயரைப்பூச்சி *mayarai-p-pūcci,* பெ.(n.) 1. நாகப்பூச்சி; a round worm. 2. கீரிப்பூச்சி; thread worm (சா.அக.).

மயல் *mayal,* பெ.(n.) 1. ஐயுறவு; doubt. *"மயலறு சீர்த்தி" (பு.வெ.9, 7).* 2. மயக்கம்; confusion, bewilderment, delusion. *"மயவிலங்குந் துயர்" (தேவா.121, 2). "இயல்பாகும் நோன்பிற்கொன்று இன்மை உடைமை மயலாகும் மற்றும் பெயர்த்து" (குறள், 344).* 3. மந்தம் (யாழ்.அக.); slowness. 4. ஆசை; desire. *"தண்டா மயல்கொடு வண்டு பரந் தரற்ற" (கல்லா.20, 6).* 5. காமவிழைவு; lust, sexsual infatuation. *"மாதர் மயலுறு வார்கண் மருள்கொண்ட சிந்தை" (திருமந்.203).* 6. கோட்டி, பித்து, வெறி (பைத்தியம்); madness. *"மயற்பெருங் காதலென் பேதைக்கு" (திவ். திருவாய்.4, 4, 10).* 7. மாயை; *māyā*. *"மயலாரும் யானுமறியேம்" (கம்பரா. நாகபா.258).* 8. அச்சம் (யாழ்.அக.); fear, dread. 9. பேய் (பிசாசம்) (பிங்.); demon, imp. 10. செத்தை; dried leaves, rubbish. *"வம்புண் கோதையர் மாற்றும் மயலரோ" (சீவக.128).* 11. நெருப்பு (அரு.நி.); fire.

தெ. மயல; க. மயமு; ம. மய்யல்.

*[முள்→முய→மய→மயல் (மு.தா.178).]*

மயவலக்கம் *mayavalakkam,* பெ.(n.) வெள்ளி; silver (சா.அக.).

மயற்கிழங்கு *mayar-kilangu,* பெ.(n.) மரவள்ளிக் கிழங்கு; tapioca (சா.அக.).

மயற்கை *mayarkai,* பெ.(n.) 1. மயக்கம்; confusion, bewilderment delusion. 2. செத்தை (சீவக. 1346); dried leaves.

*[மயல்→மயற்கை (வே.க.4:58).]*

மயற்பகை *mayar-pagai,* பெ.(n.) 1. கோட்டி, பித்து; insanity. *"வஞ்சமுண்டு மயற்பகை யுற்றோர்" (சிலப்.5:122).* 2. பித்துக்குக் கரணியமாகிய மருந்து; drug which causes insanity. *"மயற் பகை யூட்ட.... அயர்ப்பது செய்யா வறி வினளாகி" (மணிமே.23:41).*

மயறி *mayari,* பெ.(n.) மயறை (பதார்த்த.939) பார்க்க; see *mayarai.*

*[மயறை→மயறி.]*

மயறை *mayarai,* பெ.(n.) எட்டு விரல நீளம் வளர்வதும் கரு நிறமுள்ளதுமான கடல் மீன் வகை; a sea-fish, leadenblack, attaining 8 inch in length.

மயன்[1] *mayan,* பெ.(n.) 1. அசுரத் தச்சன்; a daitya, the architect of the asuras. *"மயன் விதித்தன்ன மணிக்கா லமளிமிசை" (சிலப். 2:12).* 2. தச்சன் (சூடா.); carpenter. 3. சிற்பி (வின்.); artificer, architect.

மயன்² *mayaṉ*, பெ.(n.) கின்னரன் (வின்.); Kinneran.

மயனத்தைலம் *mayaṉa-t-tailam*, பெ.(n.) இசிவு, வீக்கம் முதலியவற்றிக்குப் பூசும் நெய்மம்; a medicated oil distilled from bee's wax and other substances and in swelling, paralysis, injury, burns etc. (சா.அக.).

மயனபதம் *mayaṉa-padam*, பெ.(n.) மெழுகு பதம்; of the consistency of wax (சா.அக.).

மயனம் *mayaṉam*, பெ.(n.) மெழுகு, மை; wax (சா.அக.).

மயனமாயாட்டு-தல் *mayaṉam-āy-āṭṭu-*, 5 செ.குன்றாவி.(v.t.) மயன மாயரைத்தல்; பொடியாகும்படி அரைத்தல்; to grind to powder, to grind as finely as wax.

*[மயனமாய் + ஆட்டு-,]*

மயனூல் *mayanūl*, பெ.(n.) மயம்¹ பார்க்க; see *mayam¹*. *"மயனூலின் முறையே" (திரு வாலவா. 53:14).*

மயானக்கொள்ளை *mayāṉa-k-koḷḷai*, பெ. (n.) 1. காளி தேவி குறித்து மயானத்திற்கு நேர்ச்சிப் பொருள்களை மிகுதியாகக் கொண்டு வந்து குவித்துப் பின் மக்கள் அவற்றைக் கொள்ளையிடும்படி விடும் மீனவரின் சடங்கு; ceremony among fishermen of bringing offerings to the burning ground, heaping them and allowing them to be looted and carried off by the people, celebrated in memory of *Kāḷi*. 2. மசானக்கொள்ளை பார்க்க; see *maśāṉa-k-koḷḷai*.

*[மயானம் + கொள்ளை.]*

மயானச்சடங்கு *mayāṉa-c-caḍaṅgu*, பெ. (n.) ஈமச் சடங்கு (வின்.); ceremonies performed in the burning of burial ground.

*[மயானம் + சடங்கு.]*

மயானஞானம் *mayāṉa-ñāṉam*, பெ.(n.) 1. மயானத்தைக் கண்டதும் உடல் நிலையற்ற தென்று இடைக்காலமாகத் தோன்றும் பற்றின்மை; temporary dislike of the world, on realising the evanescence of the body at the sight of a burial-ground one of three *vairākki-yams* (q.v.). 2. இறக்கும் வரை உண்மையாய் நடந்து கொள்வதாய் மணமக்கள் கூறும் உறுதி மொழி (வின்.); pledge of fidelity till death given by a bride or bridegroom.

*[மயானம் + **Skt.** ஞானம்.]*

மயானப்பூடு *mayāṉa-p-pūḍu*, பெ.(n.) எலும்பு; bone.

*[மயானம் + பூடு.]*

மயானம் *mayāṉam*, பெ.(n.) சுடுகாடு; burning or burial ground. *"மயானத்திலிடுவதன் முன்" (தேவா.812, 7).*

*[முள் → மள் → மாள் → மாழ் → மாழ்கு → மாழ்குதல் = மயங்குதல் . முள்→முய → முயங்கு→ மயங்கு. மயங்குதல் = கலத்தல், நிலை மாறுதல், மயங்கு → மய → மயானம். உயிரற்ற மாந்தவுடல் மண்ணோடு மண்ணாக அல்லது சாம்பலாக கலக்குமிடம்.]*

மயானமரம் *mayāṉa-maram*, பெ.(n.) புன்க மரம்; pongamia tree.

*[மயானம் + மரம்.]

**மயானவாசினி** *mayāṉa-vāšiṉi,* பெ.(n.) கொற்றவை (தக்கயாகப்.80, உரை); *Koṟṟavai,* as having his abode in the burning ground.

*[மயானம்+வாசினி. வாழ் → வாழினி → வாசினி.]*

**மயானவயிராக்கியம்** *mayāṉa-vairākkiyam,* பெ.(n.) மயானஞானம் பார்க்க; see *mayāṉa-ñāṉam.*

*[மயானம் + வயிராக்கியம்.]*

**மயிக்கம்** *mayikkam,* பெ.(n.) பிரம்பு; rattan.

**மயிசிக்கி** *mayicikki,* பெ.(n.) ஆடு தின்னாப் பாளை (பரி.அக.); worm-killer.

**மயிசுசி** *mayišuši,* பெ.(n.) பெரும்பாக்கு (சங்.அக.); a species of arecanut.

**மயிடம்[1]** *mayiḍam,* பெ.(n.) எருமை (அக.நி.); buffalo.

*[மை = கருப்பு. மை→மயி→மயிடம் = கருநிற எருமை.]*



**மயிடம்[2]** *mayiḍam,* பெ.(n.) 1. பெருமை (அரு.நி.); greatness. 2. இலவம் பிசின் (சங்.அக.); gum of silk-cotten tree.

**மயிடரோசனை** *mayiḍa-rōšaṉai,* பெ.(n.) எருமையினின்றும் எடுக்கப்படும் கோராசனை (நாமதீப.214); bezoar taken from buffalo.

**மயிடற்செற்றாள்** *mayiḍāṟ-ceṟṟāḷ,* பெ.(n.) கொற்றவை (சூடா.); *Koṟṟavai.*

*[மயிடம் + செற்றாள்.]*

**மயிடன்** *mayiḍaṉ,* பெ.(n.) கொற்றவையால் கொல்லப்பட்ட ஓர் அசுரன் (அபி.சிந்.); an asura killed by *Koṟṟavai.*

**மயிடாரி** *mayiḍāri,* பெ.(n.) மலைமகள்; *Pārvati.*

**மயிடி** *mayiḍi,* பெ.(n.) மயிடம்[1] (சங்.அக.) பார்க்க; see *mayiḍam.*

*[மயிடம் →மயிடி.]*

**மயிடோசனை** *mayiḍōšaṉai,* பெ.(n.) மருந்து வகை (யாழ்.அக.); a compound medicine.

**மயிந்தர்** *mayindar,* பெ.(n.) ஒருசார் மக்கள் வகுப்பினர்; a tribe or clan. *"விராடர் மயிந்தர்" (கலிங்.317).*

**மயிந்தன்[1]** *mayindaṉ,* பெ.(n.) சோழ நாட்டில் ஆலஞ்சேரியில் வாழ்ந்த ஒரு வள்ளல் (சி.பெ.அக.); a philanthoropist of olden days who lived at *Alancheri* in *Chola nāḍu.* *"ஆலஞ்சேரி மயிந்தன்" (தொல். பொருள்.30, உரை).*

பாண்டிய நாடு வற்கடத்தினால் தொல்லை நேரிட்டபோது அங்கு வாழ்ந்த புலவர்கள் உட்பட

மக்கள் சோழ நாட்டிற்கு வந்தபோது அவர்களைப் புரந்த ஆலஞ்சேரிமைந்தனைக் கீழ்காணுமாறு பாராட்டினர்.

*"தாயில்லாதவர்க்குத் தாயே யாகியும்*
*தந்தையில்லாதவர்க்குத் தந்தையே யாகவும்*
*இந்த ஞாலத் திடுக்கண் தீர*
*வந்து தோன்றினன் மாநிதிக் கிழவன்*
*நீலஞ் சேரும் நெடுமால் போல்வன்*
*ஆலஞ்சேரி மயிந்தன் என்பான்*
*ஊருண் கேணி நீரொப்பானே,*
*தன்குறை சொல்லான்*
*பிறர் பழி உரையான்*
*மறந்தும் பொய்யான், வாய்மையுங் குன்றான்*
*இறந்து போகாதெம் மையுங் காத்தான்".*

**மயிந்தன்**[2] *mayindan,* பெ.(n.) மீன் வகை; a kind of fish. *"குறவை வாளை யுளுவை மயந்தன்" (பறாளை.பள்ளு.74).*

**மயிந்தன்**[3] *mayindan,* பெ.(n.) மைந்தன் பார்க்க; see *maindan.*

*[மைந்தன் →மயிந்தன்.]*

**மயிந்து-தல்** *mayindu-,* 5 செ.கு.வி.(v.i.) பதுங்குதல்; to sneak, slink away.

*[மாள் →மாய் →மாயம் = மறைவு, வஞ்சனை. மாய்→மய்→மயிந்து-,]*

**மயிர்** *mayir,*பெ.(n.) 1. முடி; hair of human beings or animals fur, fleece. *"மயிர் நீப்பின் வாழாக் கவரி மா" (குறள், 964).* 2. தூவி; down of birds. 3. சாமரை; tail of the yak. *"மயிரணியப் பொங்கி" (பு.வெ.5, 5).*

*[முள் →மள் →மாள்→ மாய்→மாயோன் = கரிய நிறமுடைய திருமால். மாயோள் = கரிய நிறமுடைய காளி. மாய் →மாயம் = கருமை. மள் →மய்→மை = கருமை, முகில், காராடு, கரிய குழம்பு. மை → மயில் = கரு (நீல) நிறத் தோகையுள்ள பறவை. மயில் →மயிலை = கருமை கலந்த வெள்ளைக் காளை. மை →மயிர் = கரியமுடி (மு.தா.181).]*

**மயிர்க்கட்டு**[1] *mayir-k-kattu,* பெ.(n.) தலைமயிர் K o¢R ;lock of hair, hair bid up in a knot.

*[மயிர் + கட்டு.]*

**மயிர்க்கட்டு**[2] *mayir-k-kattu,*பெ.(n.) தலைப் பாகை (முல்லைப்.53, உரை); turban.

*[மயிர் + கட்டு.]*

**மயிர்க்கடை** *mayir-k-kadai,*பெ.(n.) மயிர்க் கிடை (யாழ்.அக.) பார்க்க; see *mayir-k-kidai.*

*[மயிர் + கடை. கிடை →கடை.]*

**மயிர்க்கண்** *mayir-k-kan,*பெ.(n.) மயிர்க் கால் (வின்.) பார்க்க; see *mayir-k-kāl.*

*[மயிர் + கண். கண் = துளை.]*

**மயிர்க்கண்முரசம்** *mayir-k-kan-murašam,* பெ.(n.) புலியைக் கொன்ற ஆனேறு இறந்துழி அதன் உரிவையை மயிர் சீவாமற் போர்த்த வீர முரசம்; drum made of raw hide of a bull that has killed a tiger. *"மயிர்க்கண் முரசொடு வான் பலி யூட்டி" (சிலப்.5 : 88).*

*[மயிர்க்கண் + முரசம்.]*

**மயிர்க்கத்தி** *mayir-k-katti,* பெ.(n.) முகமழிக்கும் கத்தி (சீவக.2496, உரை); razor.

*[மயிர் + கத்தி.]*



**மயிர்க்கம்பி** *mayir-k-kambi,* பெ.(n.) ஊமத்தங்காய் (சங்.அக.); fruit of thorn-apple.

*[மயிர் + கம்பி.]*

**மயிர்க்கருவி** *mayir-k-karuvi,* பெ.(n.) அழுக்கெடுத்தற்குதவும் மயிர் கோத்த கருவி (வின்.); brush.

*[மயிர் + கருவி.]*

**மயிர்க்கற்றை** *mayir-k-karrai,* பெ.(n.) முகமழிப்பு செய்து கொள்ளுவதற்கு முகத்தில் பூசப் பயன்படும் மயிர்கள் நெருங்கக் கட்டிய தூரிகை; brush.

*[மயிர் + கற்றை. கல் →கள். கள் + ஐ – கற்றை.]*

**மயிர்க்காம்பெறி-தல்** *mayir-k-kāmberi-,* 2 செ.கு.வி.(v.i.) மயிர்க் கூச்செறி-, (வின்.) பார்க்க; see *mayir-k-kūcc-eri-.*

*[மயிர்காம்பு + எறி-.]*

**மயிர்க்கால்** *mayir-k-kāl,* பெ.(n.) முடித்துளை; pore of the skin at the root of hair. *"அமுதம் மயிர்க்காறோறுந் தேக்கிடச் செய்தனன்" (திருவாச.3, 10).*

*[மயிர் + கால்.]*

**மயிர்க்கிடுகு** *mayir-k-kiḍugu,* பெ.(n.) மயிர் செறிந்த தோலால் மூடப்பட்ட கேடக வகை (சீவக.2218); shield covered with raw hairy hide.

*[மயிர் + கிடுகு.]*

**மயிர்க்கிடை** *mayir-k-kiḍai,* பெ.(n.) முடியின் அகல வளவு (வின்.); hair's breath.

*[மயிர் + கிடை.]*

**மயிர்க்கிளர்ச்சி** *mayir-k-kiḷarcci,* பெ.(n.) மயிர்க்கூச்செறி- (வின்.) பார்க்க; see *mayir-kūcceri-*

*[மயிர் + கிளர்ச்சி.]*

**மயிர்க்குச்சு**[1] *mayir-k-kuccu,* பெ(n.) மயிர்க்கூச்செறி- (குருபரம்.103) பார்க்க; see *mayir-k-kūcc-eri-.*

*[மயிர் + குச்சு.]*

**மயிர்க்குச்சு**[2] *mayir-k-kuccu,* பெ.(n.) 1. துகிலிகை; hair pencil for painting. 2. கொண்டையூசி; hair pin. 3. தலையணி வகை; a head ornament with pendants.

*[மயிர் + குச்சு.]*

**மயிர்க்குச்செறி-தல்** *mayir-k-kucceri,* 2 செ.கு.வி. (v.i.) மயிர்க்கூச்செறி-, (வின்.) பார்க்க; see *mayir-k-kūcceri-.*

*[மயிர் + குச்செறி-.]*

**மயிர்க்குட்டம்** *mayir-k-kuṭṭam,* பெ.(n.) மயிர் உதிரச் செய்யும் நோய் வகை (யாழ்.அக); a disease which makes the hair fall off.

*[மயிர் + குட்டம்.]*

**மயிர்க்குட்டி** *mayir-k-kuṭṭi,* பெ.(n.) கம்பளிப் பூச்சி; caterpiller. *"மயிர்க்குட்டி மேய வண்டுருவாய்" (தணிகைபு.நந்தியுப.30).*

*[மயிர் + குட்டி.]*



**மயிர்க்குடி** *mayir-k-kuḍi,* பெ.(n.) மயிர்ச் செறிவு; thick growth of tresses of hair. *"மயிர்க் குடி யழகாலே யாதல்" (ஈடு.அவ.ஜீ).*

*[மயிர் + குடி.]*

**மயிர்க்குந்தம்** *mayir-k-kundam,* பெ.(n.) மருந்து வகை (யாழ்.அக.); a kind of medicine.

*[மயிர் + குந்தம்.]*

**மயிர்க்குரு** *mayir-k-kuru,* பெ.(n.) மயிர்த் துளையில் தோன்றும் புண் (யாழ்.அக.); pimple at the root of hair, boil protruding from the follicles.

*[மயிர் + குரு. குல்→குரு = கட்டி. ஒ.நோ. வியர்க்குரு.]*

**மயிர்க்குழற்சி** *mayir-k-kuḻaṟci,* பெ.(n.) 1. மயிர்க் குழைவு (பிங்.); curling of hair. 2. மயிர்க்கூச்சு (யாழ்.அக.) பார்க்க; see *mayir-k-kūccu.*

*[மயிர் + குழற்சி.]*

**மயிர்க்குறடு** *mayir-k-kuṟaḍu,* பெ.(n.) முடியைக் களைவதற்குப் பயன்படும் குறடு; tweezer for pulling out hairs.

*[மயிர் + குறடு.]*



**மயிர்க்கூச்சு** *mayir-k-kūccu,* பெ.(n.) மயிர் சிலிர்த்தல் (புளகம்); rising of the hairs of the body, horripillation. *"மயிர்க்கூச்சுமறா" (திவ்.பெரியாழ்.5, 35).*

*[மயிர் + கூச்சு.]*

**மயிர்க்கூச்செறி-தல்** *mayir-k-kūccu-eṟi-,* 4 செ.கு.வி.(v.i.) உடல் முடி குத்திட்டு நிற்றல்; புல்லரித்தல்; get goose-flesh.

*[மயிர் + கூச்செறி-,]*

**மயிர்க்கேடகம்** *mayir-k-kēḍagam,* பெ.(n.) மயிர்க்கிடுகு பார்க்க; see *mayir-k-kiḍugu. "போர் மயிர்க் கேடகம் புளகத் தோற்பரம்" (சீவக.2218).*

*[மயிர் + கேடகம்.]*

**மயிர்க்கொடி** *mayir-k-koḍi,* பெ.(n.) தலை மயிரோடு சேர்த்துப் பின்னுதற்கு உரிய (சவரி) இடுமயிர் (tinn.); switch.

*[மயிர் + கொடி.]*

**மயிர்க்கொத்து** *mayir-k-kottu,* பெ.(n.) மயிர்மாணிக்கக் கொத்து; bunch of *mayir maṇikkam.*

*[மயிர் + கொத்து.]*

**மயிர்க்கொழுந்து** *mayir-k-koḻundu,* பெ.(n.) மருக்கொழுந்து (இ.வ.); southern nood.

*[மயிர் + கொழுந்து.]*

**மயிர்க்கொன்றை** *mayir-k-koṉṟai,* பெ.(n.) மயிற்கொன்றை, 1, 2 பார்க்க (L.); see *mayiṟ-koṉṟai.*

*[மயிர் + கொன்றை.]*

**மயிர்க்கோரை** *mayir-k-kōrai,* பெ.(n.) கோரை வகை (யாழ்.அக.); a hairy sedge.

*[மயிர் + கோரை.]*

**மயிர்க்கோள்** *mayir-k-kōḷ,* பெ.(n.) மயிர்க் கூச்சு பார்க்க (ஈடு.); see *mayir-k-kūccu.*

*[மயிர் + கோள்.]*

**மயிர்கழி-த்தல்** *mayir-kaḻi-,* 4 செ.குன்றாவி. (v.t.) மழிப்பு செய்தல் (இ.வ.); to shave.

*[மயிர் + கழி-.]*

**மயிர்களை-தல்** *mayir-kaḷai-,* 2 செ.குன்றாவி. (v.t.) மயிர்கழி-த்தல் பார்க்க; see *mayir-kaḻi-.*

*[மயிர் + களை-.]*

**மயிர்களைவோன்** *mayir-kaḷaivōṉ,* பெ.(n.) முடிதிருத்தாளன் (யாழ்.அக.); barber.

*[மயிர் + களைவோன்.]*

**மயிர்குறைகருவி** *mayir-kuṟai-karuvi,* பெ.(n.) 1. மயிர்க்கத்திரி; hair-shears. *"மயிர்குறை கருவித் துணைகுழை யலைப்ப" (கல்லா.42, 16).* 2. மழிப்பு கத்தி (அக.நி.); razor.

*[மயிர் + குறை + கருவி.]*

**மயிர்ச்சந்தனம்** *mayir-c-candaṉam,* பெ.(n.) மயிர்ச்சாந்து பார்க்க (மதுரைக்.552, உரை); see *mayir-c-cāndu.*

*[மயிர் + சந்தனம்.]*

**மயிர்ச்சாந்தம்** *mayir-c-cāndam,* பெ.(n.) மயிர்ச்சாந்து (பிங்.) பார்க்க; see *mayir-c-cāndu.*

*[மயிர் + சாந்தம்.]*

**மயிர்ச்சாந்து** *mayir-c-cāndu,* பெ.(n.) கூந்தற்கிடும் நறுமணச் சாந்து (சிலப்.14:117, உரை); perfumed unguent for the hair.

*[மயிர் + சாந்து.]*

**மயிர்ச்சாயம்** *mayir-c-cāyam,* பெ.(n.) மயிர்க்கப்பு; hair dye.

*[மயிர் + சாயம்.]*

**மயிர்ச்சிகைப்பூடு** *mayir-c-cigai-p-pūḍu,* பெ.(n.) மயிற்சிகை, 2 (மலை.அக.) பார்க்க; see *mayiṟ-cigai.*

*[மயிற்சிகை →மயிர்ச்சிகை + பூடு.]*

**மயிர்ச்சிகைப்பூண்டு** *mayir-c-cigai-p-pūṇḍu,* பெ.(n.) அரிவாண்முனைப் பூண்டு (மலை. அக.); sickle - leaf.

*[மயிர் + சிகை + பூண்டு.]*

**மயிர்ச்சிலிர்ப்பு** *mayir-c-cilirppu,* பெ.(n.) மயிர்க்கூச்சு பார்க்க; see *mayir-k-kūccu.*

*[மயிர் + சிலிர்ப்பு.]*

**மயிர்ச்சீலை** *mayir-c-cīlai,* பெ.(n.) மயிர்ப் படம் (யாழ்.அக.) பார்க்க; see *mayir-p-paḍam.*

*[மயிர் + சீலை.]*

**மயிர்ச்சுட்டசாம்பல்** *mayir-c-cuṭṭa-šāmbal,* பெ.(n.) முடியை எரித்ததால் கிட்டும் சாம்பல்; ash of burnt hair (சா.அக.).

*[மயிர் + சுட்ட + சாம்பல்.]*

**மயிர்ச்சுருள்** *mayir-c-curuḷ,* பெ.(n.) 1. மயிர்க் குழற்சி, 1 பார்க்க; see *mayir-k-kuḻarci.* 2. மயிரின் சுருள் (வின்.); roll or curl of hair.

*[மயிர் + சுருள்.]*

**மயிர்ச்சூட்டு** *mayir-c-cūṭṭu,* பெ.(n.) மயிர்ச் சுருள், 2 (வின்.) பார்க்க; see *mayir-c-curuḷ.*

*[மயிர் + சூட்டு.]*

**மயிர்ச்சூடு** *mayir-c-cūḍu,* பெ.(n.) முடியினா லுண்டாகும் சூடு; warmth created by hair (சா.அக.).

*[மயிர் + சூடு.]*

**மயிர்ச்சேணம்** *mayir-c-cēṇam,* பெ.(n.) மயிரடைத்துச் செய்த மெத்தை (பிங்.); hair mattress.

*[மயிர் + சேணம்.]*

**மயிர்சிங்கி** *mayir-cingi,* பெ.(n.) ஆடு தின்னாப் பாளை (சங்.அக.); warm-killer.

**மயிர்த்தவிசு** *mayir-t-tavišu,* பெ.(n.) மயிரடைத்துச் செய்த இருக்கை; cushion stuffed with hair, to sit on. *"பொங்கு மயிர்த் தவிசொடு பூமார் புனைஇ" (பெருங். இலாவாண.4:99).*

*[மயிர் + தவிசு.]*

**மயிர்த்தோல்** *mayir-t-tōl,* பெ.(n.) பெண்குறி அல்லது அல்குல்; vagina (சா.அக.).

*[மயிர் + தோல்.]*

**மயிர்த்தோல்விடு—தல்** *mayir-t-tōl-viḍu-,* 18 செ.கு.வி.(v.i.) பெண்ணாசையை நீக்குதல்; to get rid of the desire for woman.

*[மயிர்த்தோல் + விடு—.]*

**மயிர்ப்பட்டு** *mayir-p-paṭṭu,* பெ.(n.) மயிர்ப் படம் (யாழ்.அக.) பார்க்க; see *mayir-p-paḍam.*

*[மயிர் + பட்டு. படம் →பட்டு.]*

**மயிர்ப்படம்** *mayir-p-paḍam,* பெ.(n.) கம்பளி யாடை; woollen cloth. *"எலிப்பூம் போர்வையொடு மயிர்ப்படம் விரித்து" (பெருங்.உஞ்சைக்.47, 179).*

*[மயிர் + படம்.]*

**மயிர்ப்படாம்** *mayir-p-paḍām,* பெ.(n.) மயிர்ப்படம் (பிங்.) பார்க்க; see *mayir-p-paḍam.*

*[மயிர் + படாம்.]*

**மயிர்ப்பாடு** *mayir-p-pāḍu,* பெ.(n.) மயிர் செறிந்து தோன்றுகை (சீவக.1661, உரை); hairiness, dense growth of hair.

*[மயிர் + பாடு.]*

**மயிர்ப்பாலம்** *mayir-p-pālam,* பெ.(n.) நினைவில் தோன்றும் ஒரு காட்சி; an imaginary line forming an illusion described in yogo philosophy in Tamil (சா.அக.).

*[மயிர் + பாலம்.]*

**மயிர்ப்பாம்பு** *mayir-p-pāmbu,* பெ.(n.) மயிர்ப்பிளவு பார்க்க; see *mayir-p-piḷavu.*

**மயிர்ப்பிளவு[1]** *mayir-p-piḷavu,* பெ(n.) மயிரின் நுனியிலுண்டாகும் பிளவு; splitting of the hair.

*[மயிர் + பிளவு.]*

**மயிர்ப்பிளவு[2]** *mayir-p-piḷavu,* பெ(n.) கட்டடங்களின் காரைப் பூச்சில் ஏற்படும் மெல்லிய பிளவு; hair crack.

*[மயிர் + பிளவு.]*

**மயிர்ப்பிளவை[1]** *mayir-p-piḷavai,* பெ.(n.) ஒரு பரு; a carbuncle, a scurf on the hair.

*[மயிர் + பிளவை.]*

**மயிர்ப்பிளவை[2]** *mayir-p-piḷavai,* பெ.(n.) தலைப்பொடுகு (வின்.); scurf, dandruff.

*[மயிர் + பிளவை.]*

**மயிர்ப்புழு** *mayir-p-puḻu,* பெ.(n.) கம்பளிப் பூச்சி; cater-pillar. *"மயிர்ப் புழுவிலிருந்து வண்ணத்துப்பூச்சி பரிணமித் தாலென்ன" (ஈச்சுரநிச்சயம்).*

*[மயிர் + புழு.]*

**மயிர்ப்புழுவெட்டு** *mayir-p-puḻuveṭṭu,* பெ.(n.) கண்ணோய் வகை; an eye disease.

*[மயிர்ப்புழு + வெட்டு.]*

**மயிர்ப்பொத்தி** *mayir-p-potti,* பெ.(n.) மயிரொழுங்கு (யாழ்.அக.); line of hair-growth.

*[மயிர் + பொத்தி.]*

**மயிர்ப்போக்கு** *mayir-p-pōkku,* பெ.(n.) முடியுதிர்தல்; falling of hair.

*[மயிர் + போக்கு.]*

**மயிர்பிடித்துக்கொள்(ளு)-தல்** *mayir-piḍittu-k-koḷ-,* 16 செ.கு.வி.(v.i.) சண்டை போடுதல்; to quarrel, as holding each other's tuft. *அவ்விருவரும் மயிர் பிடித்துக் கொண்டார்கள் (பே.வ.).*

*[மயிர் + பிடித்துக்கொள்-.]*

**மயிர்பிடுங்கி** *mayir-piḍuṅgi,* பெ.(n.) சிமிட்டா; tweezers.

*[மயிர் + பிடுங்கி.]*

**மயிர்பொடி-த்தல்** *mayir-poḍi-,*4 செ.கு.வி. (v.i.) மயிர்க்கூச்செறிதல்; to bristle, as the hairs of the body, to horripillate. *"உடம்பெலா மயிர் பொடிப்ப" (சீகாளத்.பு. கண்ணப்ப. 148).*

*[மயிர் + பொடி-.]*

மயிர்மாட்டல் *mayir-māṭṭal,* பெ.(n.) மகளிர் காதணியிலிருந்து தலை மயிரில் மாட்டும் ஒரணி (இ.வ.); an ornament worn by women connecting the ear ornament with the tresses.

*[மயிர் + மாட்டல்.]*



மயிர்மாட்டி *mayir-māṭṭi,* பெ.(n.) மயிர் மாட்டல் (இ.வ.) பார்க்க; see *mayir-māṭṭal.*

*[மயிர் + மாட்டி.]*

மயிர்மாணிக்கம் *mayir-māṇikkam,* பெ.(n.) 1. அரிவாண்முனைப் பூண்டு (பதார்த்த.301); sickle-leaf. 2. பூடு வகை (m.m.67.); common balah. 3. பூடுவகை (A);serrate obcordate -leaved morning mallow. 4. மரவகை (L.); common snake - wood buck - thorn. 5. கொடி வகை (m.m.362); cypressvine. 6. ஆமணத்தி (கோரோசனை) (சங்.அக.); bezoar, concretion in the stomach of cows. 7. பற்படகம் (சங்.அக.); fever-plant.

*[மயிர் + மாணிக்கம்.]*

மயிர்முகிழ்-த்தல் *mayir-mugiḻ-,*4 செ.கு.வி. (v.i.) மயிர்பொடி-த்தல் பார்க்க; see *mayir-poḍi-. "கான்விலங்கு மயிர் முகிழ்த்து வந்தணைய" (பெரியபு. ஆனாய. 30).*

*[மயிர் + முகிழ்-த்தல்.]*

மயிர்முடி *mayir-muḍi,*பெ.(n.) முடிச்சு விழுந்த மயிர் (சூடா.); knot of hair.

*[மயிர் + முடி.]*

மயிர்முள் *mayir-muḷ,* பெ.(n.) முள்ளம் பன்றியின் மயிர்; bristle of porcupine. *"சூழலுட் சூழ்மயிர் முள்ளுடை..... யேனம்" (யசோதர.3, 16).*

*[மயிர் + முள்.]*

மயிர்முளைச்சான்பூண்டு *mayir-muḷaiccāṉ -pūṇḍu,*பெ.(n.) ஓர் வகை இனிப்புக் கொடி; a variety of sweet creeper having bristles.

மயிர்முனை *mayir-muṉai,* பெ.(n.) மயிர்க் கிடை பார்க்க; see *mayir-k-kiḍai.*

*[மயிர் + முனை.]*

மயிர்வளர்க்குநீர் *mayir-vaḷarkku-nīr,* பெ. (n.) முடியைக் கழுவுகை; hair wash (சா.அக.).

மயிர்வாங்கி *mayir-vāṅgi,*பெ.(n.) சிமிட்டா; tweezers.

*[மயிர் + வாங்கி.]*

மயிர்வாரி *mayir-vāri,* பெ.(n.) சீப்பு (பிங்.); comb.

*[மயிர் + வாரி.]*



மயிர்வினை *mayir-viṉai,* பெ.(n.) 1. மழிப்பு; shaving, hair-dressing. *"சடையுமாற்றி மயிர் வினைமுற்றி" (கம்பரா.திருமுடி.1).* 2. மயிர்களைதல்; ceremony of shaving a child for the first time. *"மயிர்வினை செய்முன்" (கூர்மபு. சூதகா.6).* 3. கத்திரிக் கோல் (அக.நி.); scissors. 4. மழிப்புக் கத்தி (அக.நி.); razor. 5. மயிர்வினைஞன் பார்க்க (அக.நி.); see *mayir-viṉaiñaṉ.*

*[மயிர் + வினை.]*

மயிர்வினைஞன் *mayir-viṉaiñaṉ,* பெ.(n.) முடிதிருத்தாளன் (பிங்.); barber.

*[மயிர் + வினைஞன்.]*

மயிர்வெடிப்பு *mayir-veḍippu,* பெ.(n.) மயிர்ப்பிளவு[1] பார்க்க; see *mayir-p-piḷavu.*

*[மயிர் + வெடிப்பு.]*

மயிரகம் *mayir-agam,* பெ.(n.) 1. மயிர்ப்படம் (சூடா.) பார்க்க; see *mayir-p-paḍam.* 2. நாயுருவி (சங்.அக.); a plant.

மயிரங்காய் *mayiraṅgāy,* பெ.(n.) 1. மரி மாங்காய் பார்க்க; see *mari-māṅgāy.* 2. சிவப்பு காட்டு மாங்காய்; wild mango (சா.அக.).

மயிராகமம் *mayirāgamam,* பெ.(n.) ஊமத்தங்காய் (சங்.அக.); fruit of thorn-apple.

மயிரிடை *mayir-iḍai,* பெ.(n.) மயிரளவு; hair's breath.

*[மயிர் + இடை.]*

மயிரிழவு *mayiriḷavu,* பெ.(n.) இழவு குறியாக மயிர் நீக்குகை (வின்.); shaving the hair completed, in token of mourning.

*[மயிர் + இழவு.]*

மயிருதிர்–தல் *mayir-udir-,* 2 செ.குன்றாவி. (v.t.) முடிகொட்டுதல்; to loss of hair, baldness.

*[மயிர் + உதிர்–.]*

மயிரெறி–தல் *mayir-eṟi,* 2 செ.கு.வி.(v.i.) மயிர்பொடி–த்தல் பார்க்க; see *mayir-poḍi-. "உடம்பு மயிரெறிந்திருந்தது" (ஈ.டு.6, 2, ப்ர, பக்.61).*

*[மயிர் + எறி–.]*

மயிரெறிகருவி *mayir-eṟi-karuvi,* பெ. (n.) மயிர்குறைகருவி பார்க்க; see *mayir-kuṟai-k-karuvi. "மயிரெறிகருவி..... மஞ்சிக னுறை தூங்க" (திருவானைக். அகிலா.38).*

*[மயிரெறி + கருவி.]*

மயிரை *mayirai,* பெ.(n.) 1. அயிரை, ஆரல் மீன்; brownish or greenish sand eel. 2. தக்கோலம்; cubeb.

**மயிரொதுக்கு-தல்** *mayir-otukku-,* 5 செ.கு.வி.(v.i.) 1. மயிரைக்கையாற் கூட்டி யொதுக்குதல்; to adjust and smooth the hair with the hand. 2. மயிரை யொதுக்கி மழிப்புச் செய்தல் (இ.வ.); to shave close to the tuft of hair. 3. முடியின் பக்கத்தில் சிறிது விட்டு வைத்து மழிப்புச் செய்தல் (இ.வ.); to shave leaving a margin along the tuft of hair.

*[மயிர் + ஒதுக்கு-.]*

**மயிரொழுக்கு** *mayir-oḻukku,* பெ.(n.) கொப்பூழிலிருந்து மேற்செல்லும் மயிர்; line of hair growing on the abdomen of a person from the navel upward. *"மயிரொழுக் கென வொன்றுண்டால்" (கம்பரா.நாடவிட்.41).*

*[மயிர் + ஒழுக்கு.]*

**மயிரொழுங்கு** *mayir-oḻuṅgu,* பெ.(n.) 1. மயிரொழுக்கு பார்க்க; see *mayir-oḻukku. "அவ்வயிறணி மயிரொழுங்கே" (நைடத. அன்னத்தைத்தூ.19).* 2. மயிர்க் குழற்சி, 1 (யாழ்.அக.) பார்க்க; see *mayir-k-kuḻaṟci.*

*[மயிர் + ஒழுங்கு.]*

**மயிரோசம்** *mayirōšam,* பெ.(n.) அரிதாரம் (சங்.அக.); red orpiment.

**மயிரோசனை** *mayirōšaṉai,* பெ.(n.) ஆமணத்தி (கோரோசனை) (வின்.); bezoar.

**மயில்** *mayil,* பெ.(n.) 1. பறவை வகை; peacock, peafowl. *"பயில்பூஞ் சோலை மயிலெழுந் தாலவும்" (புறநா.116).* 2. மயிற் கொன்றை, 1 பார்க்க; see *mayiṟ-koṉṟai.* 3. மயிலடிக் குருந்து (மலை.); false peacock's -foot tree. 4. மயூராசனம் பார்க்க; see *mayirāšaṉam. "மலைய வினங்கலங்க மலைய் மயிலகவ மலைமாசு கழியக் கதழுமருவி யிழியும்" (பரிபா.6:45), "மணியுங் கயிறு மயிலுங் குடாரியும்" (பரிபா.8:100).*

*[மயி→(மை) →மயில். கரு (நீல) நிறத் தோகையுடைய பறவை.]*



**மயில்கசப்பு** *mayil-kašappu,* பெ.(n.) மயில் பித்து; bile of peacock (சா.அக.).

**மயில்கண்டம்** *mayil-kaṇḍam,* பெ.(n.) மயிலின் கழுத்து; neck of peacock.

*[மயில் + கண்டம். கண்டு →கண்டம்.]*

**மயில்கழுத்துவண்ணம்** *mayil-kaḻuttu-vaṇṇam,* பெ.(n.) மயில்கழுத்துநிறம் பார்க்க; see *mayil-kaḻuttu-niṟam*(சா. அக.).

*[மயில்கழுத்து + வண்ணம்.]*

**மயில்கழுத்துநிறம்** *mayil-kaḻuttu-niṟam,* பெ.(n.) கருப்பும் சிவப்பும் கலந்த ஊதா நிறம்; the colour of the peacock's neck (சா.அக.).

*[மயில்கழுத்து + நிறம்.]*

**மயில்துத்தம்** *mayil-tuttam,* பெ.(n.) மயிற்றுத்தம் பார்க்க; see *mayirruttam.*

*[மயில் + துத்தம்.]*

**மயில்தோகை** *mayil-tōgai,* பெ.(n.) மயிற்றோகை பார்க்க; see *mayirrōgai.*

*[மயில் + தோகை.]*

**மயில்நீலமாசி** *mayil-nīla-māši,* பெ.(n.) நிலப்பனை; ground palm.

*[மயில் + நீலமாசி.]*

**மயில்நெய்** *mayil-ney,* பெ.(n.) மயிலின் கொழுப்பு; fat of peacock. *"இஃது கந்தகத்தைச் சிவக்கச் செய்யும்".*

*[மயில் + நெய்.]*

**மயில்புடம்** *mayil-pudam,* பெ.(n.) ஒருவகை மருந்துப்புடம்; one of the methods of calcining medicine (சா.அக.).

*[மயில் + புடம்.]*

**மயில்மீன்** *mayil-mīn,* பெ.(n.) 1. ஒன்பது அடி நீளம் வளர்வதும் மங்கின நீல நிற முடையதுமான கடல் மீன் வகை; sailfish, bluish grey, attaining 9 ft. in length. 2. ஏமங்கோலா (m.m.672); peacock-fish (சா.அக.).

*[மயில் + மீன்.]*

**மயில்முட்டைக்கற்பம்** *mayil-muttai-k-karpam,* பெ.(n.) நரை திரையற்று நெடுங்காலமிருக்கச் சாப்பிடும் ஒரு செய் மருந்து; a medicine prepared out of the egg of peacock for rejuvenation.

*[மயில்முட்டை + கற்பம்.]*

**மயில்முனிவன்** *mayil-munivan,* பெ.(n.) அகத்தி மரம் (சங்.அக.); West India pea-tree.

**மயில்வாகனன்** *mayil-vāganan,* பெ.(n.) (மயில் ஏறி ஊர்பவன்) முருகக் கடவுள் (பிங்.); *Murugan*, as riding a peacock.

*[மயில் + வாகனன்.]*

**Skt.** வாகனம் > த. ஊர்தி.

**மயில்விசிறி** *mayil-viširi,* பெ.(n.) மயிற்றோகையால் அமைந்த ஆலவட்டம்; fan of peacock's feathers.

*[மயில் + விசிறி.]*



**மயில்விரோதி** *mayil-virōdi,* பெ.(n.) மயிற்பகை பார்க்க; see *mayir-pagai*

*[மயில் + விரோதி.]*

**Skt.** விரோதி > த. பகை.

**மயில்உப்பு** *mayil-uppu,* பெ.(n.) வெண்ணிறம் குறைந்த மங்கலான உப்பு; haze.

*[மயில் + உப்பு.]*

மயிலடி[1] *mayil-aḍi,* பெ.(n.) 1. காற்பீலி (வின்.); toering. 2. ஐவண்ணவணியுள் காலின் நடுவிரலணி (யாழ்.அக.); ring worn on the middle toe, by women, one of *aivaṇṇam,* q.v.

*[மயில் + அடி.]*

மயிலடி[2] *mayil-aḍi,* பெ.(n.) எருமை (சங்.அக.); buffalo.

*[மயில் + அடி.]*

மயிலடி[3] *mayil-aḍi,* பெ.(n.) 1. காட்டு நொச்சி (L.); tall chaste - tree. 2. மரவகை (L.); downy peacock's foot tree.

மயிலடிக்குருந்து *mayil-aḍi-k-kurundu,* பெ.(n.) ஒரு வகைச் சிறுமரம் (இலத்.); false peacock's foot - tree s.tr.

*[மயிலடி + குருந்து.]*

மயிலடிநொச்சி *mayil-aḍi-nocci,* பெ.(n.) காட்டு நொச்சி (L.); tall chaste - tree.

*[மயிலடி + நொச்சி.]*

மயிலம்[1] *mayilam,* பெ.(n.) 1. மயிலிறகு (யாழ்.அக.); peacock's feather. 2. விழுப்புரம் மாவட்டத்தில் உள்ள ஒரு முருகன் கோயில் தளம்; a shrine sacred to *Murugan* in the *Villuppuram* District.

*[மயி →மயில் →மயிலம்.]*

மயிலம்[2] *mayilam,* பெ.(n.) 1. குப்பைமேனி (மலை.); indian acalypha. 2. பருத்தி வகை (G.Tn.D.i, 1623); a kind of coarse cotton.

மயிலாடுங்குருந்து *mayilāḍuṅ-kurundu,* பெ.(n.) மயிலடிக்குருந்து பார்க்க; see *mayilaḍi-kurundu.*

மயிலாடுதுறை *mayilāḍu-turai,* பெ.(n.) நாகை மாவட்டத்தில் உள்ள காவிரி யாற்று வளம் நிறைந்த ஊர்; a town on the banks of *Cauvery* in *Nagapattinam* Dt. *"வாவிசூழ் திரு மயிலாடுதுறை" (பெரியபு. 34:437).*

*[மயிலாடு + துறை.]*

மயிலாத்தி *mayilātti,* பெ.(n.) வெள்ளைச் சாரணை; a prostate plant.

மயிலாப்பூர் *mayilāppūr,* பெ.(n.) திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரால் பாடப்பெற்றதும், வாயிலார் நாயனார் பிறந்ததும், திருவள்ளுவர் வாழ்ந்த இடமாகக் கருதப்படுவதும், தோமையார் கிறித்துவ மதப் பரப்புதல் செய்த இடமாகக் கருதப்படுவதும், சென்னையின் பகுதியுமாகிய ஒரு ஊர்; Mylapore, a suburb of Chennai containing a *Śivaṉ* shirne sung by *St. Campantar,* reputed to be the place, where *St. Vāyilār* was born and *St. Tiruvaḷḷuvar* lived; also reputed to be the principal scene of the labours of St.Thomas.

மயில் + ஆர்ப்பு + ஊர் – மயிலார்ப்பூர் – மயிலாப்பூர். மயில்கள் ஆர்த்ததாக வழங்கும் செவிவழிச் செய்திகளால் இவ்வூர் இப்பெயர் பெற்றது.

மயிலாப்பூர்வெட்டு *mayilāppūr-veṭṭu,* பெ.(n.) நாணய வகை (பணவிடு.141); an ancient coin.

*[மயிலாப்பூர் + வெட்டு.]*

**மயிலாபுரி** *mayilāpuri,* பெ.(n.) மயிலாப்பூர் பார்க்க (பெரியபு. திருக்குறிப். 40); see *mayilāppūr.*

**மயிலார்** *mayilār,* பெ.(n.) 1. கன்னிப் பெண்கள் நோற்கும் சடங்கு வகை; ceremonial fast observed by maidens with a view to secure suitable husbands. 2. பொங்கல் பண்டிகையின் பின்பு வண்ணார் வணங்கும் கடவுள்; a deity worshipped by washerman after the *pongal* festival.

**மயிலாளி** *mayilāḷi,* பெ.(n.) (மயிலை ஏறி யாள்வோன்) முருகக் கடவுள் (திவா.); *Murugaṉ,* as riding a peacock.

*[மயி → மயில் = கரு (நீல) நிறத் தோகையை யுடைய பறவை.. மயில் + ஆளி. ஒ.நோ. முதல் + ஆளி – முதலாளி.]*

**மயிலி** *mayili,* பெ.(n.) மயில் போன்ற பெண்; woman, as resembling a peafowl. *"கானமலைக் குறவஞ்சிகள் மயிலி" (குற்றா. குற.76, 2).*

*[மயில் →மயிலி.]*

**மயிலிகம்** *mayiligam,* பெ.(n.) மருளூமத்தை பார்க்க (சங்.அக.); see *maruḷūmattai.*

**மயிலியம்**[1] *mayiliyam,* பெ.(n.) செம்பஞ்சு (மலை.); brazil cotton.

**மயிலியம்**[2] *mayiliyam,* பெ.(n.) 1. செம்பருத்தி; red cotton plant. 2. இலாமிச்சை; root of andropogon muricatus. 3. சோதிப்பூடு பார்க்க; see *šōti-p-pūḍu.*

**மயிலியல்** *mayiliyal,* பெ.(n.) மயில் போலுஞ் சாயலுள்ள பெண்; woman having the grace of a peafowl.

*[மயில் + இயல்.]*

**மயிலிறகு** *mayil-iṟagu,* பெ.(n.) மயிற்றோகை இறகு; peacock feather.

*[மயில் + இறகு.]*

**மயிலுச்சிட்டம்** *mayilu-c-ciṭṭam,* பெ.(n.) பாம்பு; snake (சா.அக.).

**மயிலுள்ளான்** *mayil-uḷḷāṉ,* பெ.(n.) சிவந்த மூக்குள்ள உள்ளான் வகை (m.m.611); painted snipe; *Rhynchaea bengalensis.*

*[மயில் + உள்ளான்.]*



**மயிலூர்தி** *mayil-ūrdi,* பெ.(n.) மயிலேறும் பெருமாள், 1 பார்க்க (உரி.நி.); see *mayil-ēṟum-perumāḷ.*

*[மயில் + ஊர்தி.]*

**மயிலூர்தியன்** *mayil-ūrdiyaṉ,* பெ.(n.) மயிலேறும்பெருமாள், 1 பார்க்க (உரி.நி.); see *mayil-ēṟum-perumāḷ.*

*[மயில் + ஊர்தி.]*

**மயிலெண்ணெய்** *mayil-eṇṇey,* பெ.(n.) மயிலின் கொழுப்பிலிருந்து எடுக்கும் மருந்து நெய் வகை (வின்.); medicinal oil from the fat of pea fowl.

*[மயில் + நெய்→எண்ணெய்.]*

மயிலெள் *mayil-eḷ,* பெ.(n.) ஒரு வகை எள் (சங்.அக.); a species of sesame.

*[மயில் + எள். மயி →(மை)→மயில் = கருமை.]*

மயிலேபம் *mayilēpam,* பெ.(n.) தக்கோலம் (சங்அங்.); cubeb.

மயிலேறும்பெருமாள் *mayil-ēṟum-perumāḷ,* பெ.(n.) 1. (மயில் மீது ஏறிச் செல்லும்) முருகக் கடவுள்; Murugan, as riding a peacock. 2. மயிலேறும்பெருமாள் பிள்ளை பார்க்க; see *mayil-ēṟum-perumāḷ-piḷḷai. "மயிலேறும் பெருமாண் மகிபதி" (இலக்.கொத்.பாயி.).*

*[மயிலேறும் + பெருமாள்.]*

மயிலேறும்பெருமாள்பிள்ளை *mayil-ēṟum-perumāḷ-piḷḷai,* பெ.(n.) சுவாமிநாத தேசிகரின் ஆசிரியரும் கல்லாடத்தின் முதன் முப்பத்தேழு பாடல்களுக்கு உரையிட்ட வருமான புலவர்; the teacher of *Šuvāminādа-tēšigar* and commentator of the first 37 stanzas of *Kallāḍam* 17th C.

மயிலை[1] *mayilai,* பெ.(n.) 1. அழுக்கு (வின்.); foulness, dirt. 2. வெண்மை கலந்த கருநிறம்; ash colour, grey, mixed colour of white and black, as of cattle. மயிலைக் காளை.

*[முள் →மள்→மண்→மணி = கரியது, நீலக்கல். மணிவண்ணன், மணிமிடற்றோன் முதலிய பெயர்களை நோக்குக. மள்→மரு→மறு = உடம்பிலுள்ள கரிய புள்ளி. மள்→மல்→மலம் = அழுக்கு. மள்→மல்→மயல். மயல் →மயலை → மயிலை (மு.தா.182).]*

மயிலை[2] *mayilai,* பெ.(n.) சென்னை மாநகரத்தினுள் அமைந்துள்ள கோயில் நகரம்; a temple town inside Chennai. *"ஊர்திரை வேலையுலாவும் உயர் மயிலை" (சம்பந்தர் தேவாரம்). மயிலை திருவல்லிக்கேணிக் கண்டேனே (திவ். பெரியதி.2, 3, 2).*

மறுவ. மயிலாப்பூர், மயிலார்ப்பூர்.

மயில் மிகுதியாக இப்பகுதியில் இருந்து ஆர்ப்பு செய்ததால் மயிலார்ப்பூர், மயிலாப்பூர், மயிலை எனப் பெயர்கள் பெற்றிருக்கும், "வடிவுடை மங்கையும் தாமுமெல்லாம் வருவோரை எய்திக் கண்டோம் மயிலாப்புள்ளே", "மங்குல் மதி தவழும் மாடவீதி மயிலாப்பிலுள்ளார்" என்பன தேவாரக் குறிப்புகள்.

மயிலை[3] *mayilai,* பெ.(n.) 1. மீன் (பிங்.); fish. *"மயிலை தீஞ்சுவை யுப்பிற் சிவணாதாங்கு" (ஞானா.37, 11).* 2. மீன ஓரை (பிங்.); pisces of the zodiac (சா.அக.).

மயிலை[4] *mayilai,* பெ.(n.) 1. இருவாட்சி (சிலப்.5, 181); tuscan jasmine. 2. வெட்சி (தைலவ.தைல.); scarlet ixora. 3. காட்டு நொச்சி (L.); tall chaste tree. 4. மரவகை (L.); peacock's - foot tree.

மயிலைச்சென்னை *mayilai-c-cennai,* பெ.(n.) செந்தினை; red millet (சா.அக.).

மயிலைச்சேபிகம் *mayilai-c-cēbigam,* பெ.(n.) கமலாப் பழம், கிச்சிலி; orange citrus variety (சா.அக.).

மயிலைநந்தி *mayilai-nandi,* பெ.(n.) மருதோன்றி (மலை.); henna.

**மயிலைநாதர்** *mayilai-nādar,* பெ.(n.) நன்னூலுரைக்காரருள் ஒருவரான சைன ஆசிரியர்; a jaina commentator on *nannūl.*

**மயிலைநாதி** *mayilai-nādi,* பெ.(n.) நாய்த் துளசி; a plant.

**மயிலைப்பச்சை** *mayilai-p-paccai,* பெ.(n.) கருமை கலந்த பச்சை (வின்.); green mingled with black.

*[மய் →மயில் = கருமை. மயிலை + பச்சை.]*

**மயிலைப்பணம்** *mayilai-p-paṇam,* பெ.(n.) எண்பது காசு மதிப்புள்ள நாணயம் (Rd.m.74); mailai = 80 kācu.

**மயிலைபாய்—தல்** *mayilai-pāy-,* 2 செ.கு.வி. (v.i.) கண்கூடுகளின் அடிப்புறத்து மயிலை நிறம் படர்ந்திருத்தல்; to be of a greened grey colour in the tower eye-lid.

*[மயிலை + பாய்–.]*

**மயிற்கண்** *mayiṟ-kaṇ,* பெ.(n.) மயிற் றோகையின் கண்; eye of peacock's tail.

*[மயில் + கண்.]*

**மயிற்கண்ணுருமால்** *mayiṟ-kaṇṇurumāl,* பெ.(n.) மயிற்கண்ணுரு அமைந்த ஒருவகைத் தலைப்பாகத் துணி; a kerchief for the head, having designs like the eyes of peacock's tail.

*[மயிற்கள் + உருமால்.]*

**மயிற்கண்தாட்டுப்பத்திரி** *mayiṟ-kaṇ-tāṭṭu--pattiri,* பெ.(n.) மகளிர் சீலை வகை; a kind of women's saree.

*[மயிற்கண் + தாட்டுப்பத்திரி.]*

**மயிற்கண்வலை** *mayiṟ-kaṇ-valai,* பெ.(n.) மீன் பிடிக்கும் வலை வகை (இ.வ.); a kind of fishing net.

*[மயிற்கண் + வலை.]*

**மயிற்கழுத்து** *mayiṟ-kaḻuttu,* பெ.(n.) மயிலின் கழுத்து உருவும் வண்ணமுமமைந்த மாலை வகை; a garland or necklace, perhaps in the form and colour of peacock's neck. *"மயிற்கழுத்து மனவுமணி வடமும் பூண்டு" (பெரியபு. கண்ணப்.47).*

*[மயில் + கழுத்து.]*

**மயிற்கழுத்துச்சீலை** *mayiṟ-kaḻuttu-c-cīlai,* பெ.(n.) மகளிர் சீலை வகை (இ.வ.); a kind of saree.

*[மயிற்கழுத்து + சீலை. சீரை →சீலை→ சேலை.]*

**மயிற்கூத்து** *mayiṟ-kūttu,* பெ.(n.) 1. ஒரு காலை ஊன்றி மற்றொரு காலைத் தூக்கி யாடுங் கூத்து வகை; a dance on one leg. 2. ஒன்றை நாட்டும் வழி மற்றொன்று விட்டுப் போவதைக் காட்டும் ஒருவகை முறைமை; *nyāyam* of peacock's dance, which illustrates the ignoring of one principle in the attempt to establish another (சிவசம.பக்.40).

*[மயில் + கூத்து.]*

**மயிற்கொடி** *mayiṟ-koḍi,* பெ.(n.) 1. கொண்டையங் கோட்டை மறவர் வகையைச் சார்ந்த பெண்டிர் திருமணத்திற் கட்டுந் தாலி (G.Tn. D.I, 136); a kind of marriage -badge worn by *Koṇḍaiyāṅ-kōṭṭai-maṟava* women. 2. முருகக் கடவுட்குரிய மயிலெழுதிய கொடி; flag of Lord Murugan, having the ensign

of a peacock. *"நீலமணி போலும் நிறத்தை யுடைய மயிற்கொடியை" (புறநா.56, உரை).*

*[மயில் + கொடி,]*

**மயிற்கொண்டை** *mayir-kondai,* பெ.(n.) செடிவகை (m.m.361); Indian maiden hair.

*[மயில் + கொண்டை.]*

**மயிற்கொண்டைப்புல்** *mayir-kondai-p-pul,* பெ.(n.) புல்வகை (m.m.916); trail grass.

*[மயிற்கொண்டை + புல்.]*

**மயிற்கொன்றை[1]** *mayir-konrai,* பெ.(n.) ஒரு பூமரம்; a flowering tree.

*[மயிற் + கொன்றை.]*

**மயிற்கொன்றை[2]** *mayir-konrai,* பெ.(n.) 1. செடிவகை; peacock'screst. 2. வாத நாராயண மரம்; flamboyant.

*[மயிற் + கொன்றை.]*

**மயிற்சிக்கி** *mayir-cikki,* பெ.(n.) மயிற்சிகை, 2 பார்க்க; see *mayir-cigai.*

**மயிற்சிகி** *mayir-šigi,* பெ.(n.) மயிற்சிகை பார்க்க (இ.வ.); see *mayir-šigai.*

*[மயிற்சிகை → மயிற்சிகி.]*

**மயிற்சிகை** *mayir-šigai,* பெ.(n.) 1. மயிலின் கொண்டை (பிங்.); the crest of a peacock. 2. ஒரு வகைக் கொடி; peacock fern, a fern.

*[மயில் + **Skt.** சிகை.]*

**மயிற்சூடு** *mayir-šūdu,* பெ.(n.) மயிற் கொண்டை; peacock's crest.

*[மயில் + சூடு.]*

**மயிற்பகை** *mayir-pagai,* பெ.(n.) பச்சோந்திப் பறவை; chameleon.

*[மயில் + பகை.]*

**மயிற்பட்டை** *mayir-pattai,* பெ.(n.) செங் கத்தாரிப்பட்டை பார்க்க; see *cenkattāri-p-pattai*(சா.அக.).

**மயிற்பிச்சம்** *mayir-piccam,* பெ.(n.) 1. மயிற் றோகை விசிறி (வின்.); ornamental fern of peacock feathers. 2. மயிலிறகாற் செய்த குடை (யாழ்.அக.); umbrella, made of peacock feathers.

*[மயில் + பிச்சம்.]*

**மயிற்பீலி** *mayir-pili,* பெ.(n.) 1. மயிலிறகு; peacock feathers. *"அணிமயிற் பீலி சூட்டி" (புறநா.264).* 2. மயிற்பிச்சம், 1 (வின்.) பார்க்க; see *mayir-piccam.*

**மயிற்பீலிக்குடை** *mayir-pili-k-kudai,* பெ.(n.) மயிலிறகாற் செய்த குடை (யாழ்.அக.); umbrella, made of peacock feathers.

*[மயிற்பீலி + குடை.]*

**மயிற்றுத்தம்** *mayirruttam,* பெ.(n.) மருந்து வகை (சங்.அக.); sulphate of copper, blue vitriol, cupri sulphur.

*[மயில் + துத்தம்.]*

**மயிற்றோகை** *mayirrōgai,* பெ.(n.) வாலாக நீண்ட மயிலினிறகு (பிங்.); peacock's tail.

*[மயில் + தோகை.]*

மயின்முனிவன் *mayiṉ-muṉivaṉ,* பெ. (n.) மயில்முனிவன் பார்க்க (மூ.அ.); see *mayil-muṉivaṉ.*

*[மயில்முனிவன் → மயின்முனிவன். ல>ன - போலி.]*

மயினா *mayiṉā,* பெ.(n.) மைனாப் பறவை; myna.



மயுரம் *mayuram,* பெ.(n.) ஊமத்தை (பரி. அக.); thorn apple.

மர்க்கடப்பிப்பிலி *markkaḍa-p-pippili,* பெ.(n.) நாயுருவி; indian bur (சா.அக.).

மர்க்கடமுகம் *markkaḍa-mukam,* பெ.(n.) குரங்கு முகம்; monkey face (சா.அக.).

மர்க்கடிப்புனுகு *markkaḍi-p-puṉugu,* பெ. (n.) பூனைப் புனுகு; civet cat (சா.அக.).

மர்க்கவிகம் *markkavigam,* பெ.(n.) மர்க்கடப்பிப்பிலி பார்க்க; see *markkaḍa-p-pippili* (சா.அக.).

மர-த்தல் *mara-,* 11 செ.கு.வி.(v.i.) 1. கால் முதலியன உணர்ச்சியறுதல்; to be numb or insensible, as legs. *கால் மரத்துப் போயிற்று (உ.வ.).* 2. விறைத்தல் (யாழ்.அக.); to be stiffended. 3. வியத்தல் (யாழ்.அக.); to be wonder - struck.

மரக்கண் *marakkaṇ,* பெ.(n.) 1. மரக்கணு பார்க்க; see *marakkaṇu.* *"மரக்கண்ணோ மண்ணாள்வார் கண்ணென்று" (முத்தொள். 90).* 2. புலனற்ற கண்; eye without the power of vision. *"மரக்கணேனையும் வந்திடப் பணியாய்" (திருவாச.23, 9).* 3. மரப்பாவையின் கண்; eyes of wooden puppet.

*[மரம் + கண்.]*

மரக்கணு *marakkaṇu,* பெ.(n.) மரத்திற் கிளையுண்டாகும் முடிச்சு (வின்.); knot in a tree.

*[மரம் + கணு.]*

மரக்கரி *marakkari,* பெ.(n.) அடுப்புக்குப் பயன்படுங்கரி (இக்.வ.); charcoal.

*[மயிர் + கரி.]*

மரக்கலப்பாய் *marakkala-p-pāy,* பெ.(n.) கப்பற் பாய் (திவா.); sail of a ship.

*[மரக்கலம் + பாய்.]*

மரக்கலம் *marakkalam,* பெ.(n.) கப்பல்; ship, vessel, boat. *"மரக்கலம் பிளக்குங் கடலிடத்து" (பு.வெ.8, 31, உரை).*

*[மரம் + கலம்.]*

மரக்கலன் *marakkalaṉ,* பெ.(n.) மீகாமன் (பிங்.); sailor, master of a ship.

மரக்களங்காய் *mara-k-kaḷaṅgāy,* பெ.(n.) சீனத்துக் காய்; a fruit native of China (சா.அக.).

மரக்களி *marakkaḷi,* பெ.(n.) களிப்பாக்கு; a preparation of areca nut (சா.அக.).

மரக்கற்றாழை[1] *mara-k-karrālai,* பெ.(n.) கருங்கற்றாழை; black variety of aloe (சா.அக.).

*[மரம் + கற்றாழை.]*

மரக்கற்றாழை[2] *mara-k-karrālai,* பெ.(n.) ஆனைக் கற்றாழை (சங்.அக.); american aloe.

*[மரம் + கற்றாழை.]*



மரக்கறி *mara-k-kari,* பெ.(n.) 1. காய்கறி; vegetable for curry. 2. சமைத்த காய்கறி யுணவு; vegetable curry. 3. புல்லுணா; vegetarian food.

*[மரம் + கறி.]*

மரக்கன்று *mara-k-kanru,* பெ.(n.) இளமரம் (பிங்.); young tree, sapling.

*[மரம் + கன்று.]*

மரக்கா *marakkā,* பெ.(n.) 1. பூஞ்சோலை (திவா.); flower garden, groves. *"இளமரக்கா முதலிய செய்தற்கும்" (குறள், 385, உரை).* 2. மரக்கால், 1, 2 பார்க்க; see *mara-k-kāl.*

*[மரம் + கா.]*

மரக்காயர் *marakkāyar,* பெ.(n.) 1. மரக்கல உடைமையாளர்; the owners of the boat. 2. தமிழ்த் துலுக்க வகையினர்; Tamil speaking musalman tribe, usually traders (E.T.V.I). 2. மரக்கல மோட்டுவோர்; boat men.

*[மரக்கலராயர் → மரக்காயர்.]*

மரக்கலத்துக்கு உரிமையுள்ளவர்கள். மரக்கலராயர்கள். இது மரக்காயர் என மாறிற்று.

த. மரக்கலம் >அரபு. மரகாம்.

மரக்காரை *marakkārai,* பெ.(n.) மருக்காரை (பதார்த்த.758); emetic-nut.

*[மருக்காரை →மரக்காரை.]*

மரக்கால்[1] *marakkāl,* பெ.(n.) 1. முகத்தலளவைக் கருவி வகை (பிங்.); a grain measure, varying in different places = 8 padi = 1/12 kalam = 400 cu. in., as originally made of wood. *"அருள்மொழி தேவன் மரக்காலால் நிசதம் நெல்" (தெ.இ.க.III-பாகம் I-II பக்கம்–7).* 2. ஒரு மரக்கால் விரைப்பாடு (இ.வ.); superfical measure = 3362 sq.ft. as requiring a *marakkal* of seed to sow it. 3. ஆண்டு மழையின் அளவு (கணியம்); measure of rain for the year, determined by the ruling planet (Astrol.). *"ஒரு மரக்கால் மழை இவ்வாண்டு" (பஞ்.).* 4. மரத்தாற் செய்த பாதம்; wooden leg. 5. திருமாலின் கூத்து வகை (சூடா.); a dance of *Tirumāl.* 6. கூத்துப் பதினொன்றனுள் வஞ்சத்தால் வெல்லுதல் கருதிப் பாம்பு தேள் முதலியவாய் அவுணர் புகுதலை யுணர்ந்த துர்க்கை அவற்றை யுழக்கிக் களைதற்கு

மரத்தால் செய்த காலைக் கொண்டு ஆடிய ஆட்டம் (சிலப்.3:14, உரை); a dance of *Durgā* on stilts, slaying the Asuras who attacked her assuming the shapes of reptiles one of eleven *"kūttu"*. 7. உப்பளம் (பிங்.); saltpan. 8. ஒன்பதாம் நாண்மீன் (சூடா.) (ஆயில்யம்); 9th naksatra. 9. சோதி நாள் (பிங்.); 15th naksatra.

*[மரம் + கால்.]*

**மரக்கால்²** *marakkāl,* பெ.(n.) தவசங்களை அளக்கும் கருவி; a grain measurement instrument made of wood.

மரத்தால் செய்யப்பட்ட முகந்து அளத்தற் கருவி.



**மரக்கால்துண்டு** *marakkāl-tuṇḍu,* பெ.(n.) ஒருமுறை அளந்த தவசத்தைத் திரும்ப அளக்கும் போது ஏற்படும் குறைபாடு; deficiency of grain on re-measurement.

*[மரக்கால் + துண்டு. துண்டு = குறை, குறைபாடு.]*

**மரக்கால்கூத்து** *mara-k-kālkūttu,* பெ.(n.) கால்களில் மரத்தூண் வைத்துக் கட்டிக் கொண்டு, நடனம் ஆடுதல், பொய்க்கால் குதிரை ஆட்டம் (சி.பெ.அக.); dancing with wooden sticks tied to the legs, dummy horse play.

*[மரக்கால் + கூத்து.]*



**மரக்கால்வைப்பு** *markkāl-vaippu,* பெ.(n.) 1. களத்திலே ஆண்டு முதலில் அறுவடையான நெல்லைக் கூட்டியளவிடுகை; first gathering and measuring of the annual yield on the threshing - floor.

*[மரக்கால் + வைப்பு.]*

**மரக்காலாடல்** *marakkāl-āḍal,* பெ.(n.) மரக்கால், 6 பார்க்க; see *marakkāl.* *"காய்சின வெ... டுந்தொழில் பொறாஅள் ... மரக்காலாடலும்" (சிலப்.6:59).*

*[மரக்கால் + ஆடல்.]*

**மரக்காவிகம்** *mara-k-kāvigam,* பெ.(n.) பாற்சாம்பிராணி; white dammer (சா.அக.).

**மரக்காழ்** *mara-k-kāḻ,* பெ.(n.) மரவயிரம் (திவா.); innercore of a tree.

*[மரம் + காழ்.]*

**மரக்காளான்** *mara-k-kāḷāṉ,* பெ.(n.) மரத்தில் முளைக்கும் காளான் வகை (வின்.); a hard fungus growing on trees.

*[மரம் + காளான்.]*

**மரக்காற்கூட்டு** *markkār-kūṭṭu,* பெ.(n.) விளைவை மட்டும் அளந்து பிரித்து நுகரும் பொது நிலம்; land held in common and enjoyed by its joint-owners dividing the produce.

*[மரக்கால் + கூட்டு.]*

**மரக்காற்கூத்து** *marakkār-kūttu,* பெ.(n.) மரக்கால், 5, 6 பார்க்க; see *marakkāl.* *"மன்றின் மரக்காற் கூத்தாடினான் காணேனடீ" (திவ்.பெரியதி.11, 5, 6).*

*[மரக்கால் + கூத்து.]*

**மரக்காற்பறை** *marakkār-parai,* பெ(n.) மரக்கால் வடிவுள்ள பறை வகை; a cylinderical drum.

*[மரக்கால் + பறை.]*

**மரக்கானாரை** *marakkānārai,* பெ.(n.) நாரை வகை (சிலப்.10, 117, உரை); a kind of heron.

*[மரக்கால் + நாரை.]*



**மரக்குரங்காடல்** *marakkuraṅgāḍal,* பெ.(n.) மரத்திலேறியவர்கள் கீழிறங்கும் போது பிடிக்க முயலும் சிறுவர் விளையாட்டு; boy's game in which all the players get upon a tree except one who tries to catch them when they come down.

*[மரம் + குரங்கு + ஆடல்.]*

**மரக்குரங்கு** *marakkuraṅgu,* பெ.(n.) மரக்குரங்காடல் பார்க்க; see *marak-kuraṅkāḍal.*

*[மரக்குரங்காடல் →மரக்குரங்கு.]*

**மரக்கெட்டு** *mara-k-keṭṭu,* பெ.(n.) மரக் கணு (யாழ்.அக.); knot in a tree.

**மரக்கொல்லர்** *mara-k-kollar,* பெ.(n.) தச்சர்; carpenter, as cutting trees and doing timber work.

*[மரம் + கொல்லர்.]*

**மரக்கோல்** *mara-k-kōl,* பெ.(n.) 1. கூரில்லாத அம்பு; blunt arrow, wooden shaft of an arrow without the arrow - head. 2. தோணியைத் தள்ளும் கழி; boatman's pole.

*[மரம் + கோல்.]*

**மரக்கோலா** *mara-k-kōlā,* பெ.(n.) மீன் வகை; a kind of fish.

**மரக்கோவை** *mara-k-kōvai,* பெ.(n.) கப்பல்; boat, ship. *"முச்சியே மரக்கோணி முயற்சியாற் கைச்சிடாது கடல்செலுங் கல்லனும்" (சிவதரு.பாவ.81).*

**மரகடி** *marakaḍi,* பெ.(n.) ஓட்டை மரம்; a tree (சா.அக.).

# மரங்கொத்தி வகை


புள்ளி மரங்கொத்தி


கருஞ்சிவப்பு மரங்கொத்தி


மஞ்சள் பிடரி மரங்கொத்தி


மஞ்சள் நெற்றி மரங்கொத்தி


மேற்கத்திய மரங்கொத்தி


பொன்முதுகு மரங்கொத்தி


கரும்புள்ளி மரங்கொத்தி


பெரிய மரங்கொத்தி


செதிள் வயிற்று மரங்கொத்தி

**மரங்கொத்தி** *marankotti,* பெ.(n.) பறவை வகை; wood pecker. *"மீன் கொத்திப் புள்ளு மரங்கொத்திப் பட்சியும்" (குற்றா.குற.87, 3).*

*[மரம் + கொத்தி.]*



**மரச்சக்கை** *mara-c-cakkai,* பெ.(n.) மரத்திலிருந்து சீவப்பட்ட சிராய் (ஈடு.5, 10, 11, ஜீ); wooden chip.

*[மரம் + சக்கை.]*

**மரச்சம்பங்கி** *mara-c-campangi,* பெ.(n.) ஒரு வகைச் சம்பங்கி; a tree with fragrant flowers.

**மரச்சாட்டை** *mara-c-cāṭṭai,* பெ.(n.) மரக்கோல்வகை (வின்.); ferule, little wooden pallet.

*[மரம் + சட்டை.]*

**மரச்சாம்பல்** *mara-c-cāmbal,* பெ.(n.) மரத்தைக் கொளுத்தி அதினின்று எடுக்கும் சாம்பல்; wood ashes (சா.அக.).

*[மரம் + சாம்பல்.]*

**மரச்சிலைக்கல்** *mara-c-cilai-k-kal,* பெ.(n.) கண்டகிச் சிலை (யாழ்.அக.), வழிப்படப்படும் கருங்கல்; a fossil ammonite.

*[மரச்சிலை + கல்.]*

**மரச்சீனி** *mara-c-cīṉi,* பெ.(n.) மரவள்ளி பார்க்க (C.E.M.); see *mara-vaḷḷi.*

**மரச்சுண்டெலி** *mara-c-cuṇḍeli,* பெ.(n.) மரத்திலிருக்கும் சுண்டெலி வகை (M.M. 830); tree - mouse.

*[மரம் + சுண்டெலி.]*

**மரச்சுரைக்காய்** *mara-c-curaikkāy,* பெ.(n.) ஒரு வகைச் சுரைக்காய்; a variety of bottle gourd.

*[மரம் + சுரைக்காய்.]*

**மரச்செப்பு** *mara-c-ceppu,* பெ.(n.) 1. பரணி (இ.வ.); small wooden casket. 2. மரவை (யாழ்.அக.) பார்க்க; see *maravai.*

*[மரம் + செப்பு.]*

**மரச்செரிந்தம்** *mara-c-cerindam,* பெ.(n.) 1. சோலை; a grove. 2. கள்; toddy (சா.அக.).

**மரச்செவி** *mara-c-cevi,* பெ.(n.) 1. மரப் பாவையின் செவி; the ear of wooden doll or image. 2. சற்றும் கேளாக் காது; completely deaf ear. *"ஓட்டை மரச்செவியர் கேளார்" (சீவக.1552).*

*[மரம் + செவி.]*

**மரச்செறிவு[1]** *mara-c-ceṟivu,* பெ.(n.) மரப் பொது; tree in common.

*[மரம் + செறிவு.]*

**மரச்செறிவு[2]** *mara-c-ceṟivu,* பெ.(n.) சோலை (பிங்.); dense grove.

*[மரம் + செறிவு.]*

மரச்சோற்றியரிசி *mara-c-cōṟṟi-y-ariši,* பெ.(n.) சவ்வரிசி; sago (சா.அக.).

*[மரச்சோற்று + அரிசி.]*

மரண் *maraṉ,* பெ.(n.) மரணம் பார்க்க; see *maraṇam.* *"மரணாய மன்னுயிர்கட்கு" (திவ். இயற்.1, 60).*

*[மரணம் → மரண்.]*

மரணஅடி *maraṇa-aḍi,* பெ.(n.) சாமாறு விழும் வலுத்த அடி; severe blow that causes death.

*[மரணம் + அடி.]*

மரணஆவணம் *maraṇa-āvaṇam,* பெ.(n.) தனக்குப்பின் தன் சொத்தின் உரிமையைக் குறித்து எழுதி வைக்கும் ஆவணம்; the last will and testament.

*[மரணம் + ஆவணம்.]*

மரணஏதுக்கள் *maraṇa-ēdukkaḷ,* பெ.(n.) இறப்பதற்கு முன் காணுங் குறிகள்;the foreborings of death (சா.அக.).

*[மரணம் + ஏதுக்கள்.]*

மரணக்கண்குறி *maraṇa-k-kaṇkuṟi,* பெ.(n.) இறக்குங் காலத்தில் கண்கள் கறுப்பாகவும் பளபளப்பு இன்மையாயும் மங்கலடைந்து, பார்வை கம்மலாகவும் தோன்றும் அடையாளங்கள்; the eye symptoms of death - the eyes lose the lustre and become dull, sight becomes dim or lost, no eye reflex.

*[மரணம் + கண்குறி.]*

மரணக்களை *maraṇa-k-kaḷai,* பெ.(n.) மரணக்குறி பார்க்க (இ.வ.); see *maraṇa-k-kuṟi.*

*[மரணம் + களை.]*

மரணக்குறி *maraṇa-k-kuṟi,* பெ.(n.) இறக்குந்தறுவாயில் உண்டாகும் அறிகுறி (யாழ்.அக.); sign of impending death.

*[மரணம் + குறி.]*

மரணக்குறிகாட்டு-தல் *maraṇa-k-kuṟi-kāṭṭu-,* 5 செ.குன்றாவி.(v.t.) இறக்குங் குறி காட்டல்; death boding.

*[மரணக்குறி + காட்டு-,]*

மரணக்கெடி *maraṇa-k-keḍi,* பெ.(n.) மரண அச்சம் (வின்.); dread of death.

*[மரணம் + கெடி.]*

மரணகண்டசாத்திரம் *maraṇa-kaṇḍa-cāttiram,* பெ.(n.) மரணகண்டி பார்க்க (இ.வ.); see *maraṇa-kaṇḍi.*

*[மரணகண்டி → மரணகண்டசாத்திரம்.]*

மரணகண்டி *maraṇa-kaṇḍi,* பெ.(n.) பிச்சை பாக்கம் மார்க்கலிங்கக்கணியர் (சோதிடர்) செய்ததும் மரணக்குறிகளைத் தெரிவிப்பதுமான ஒரு நூல் (யாழ்.அக.); a work dealing with signs of death by *Mārkkaliṅga-cōtiḍar* of *Piccaipākkam.*

*[மரணம் + கண்டி.]*

மரணகண்டிகை *maraṇa-kaṇḍigai,* பெ.(n.) 1. மரணகண்டிதம் (வின்.) பார்க்க; see *maraṇa-kaṇḍidam.* 2. மரணகண்டி (யாழ். அக.) பார்க்க; see *maraṇa-kaṇḍi.*

மரணகண்டிதம் *maraṇa-kaṇḍidam,* பெ.(n.) மரணகால அறுதி (யாழ்.அக.); determination of the time of death.

**மரணகாயம்** *maraṇa-kāyam,* பெ.(n.) சாவை விளைவிக்குங் கொடுங்காயம் (இ.வ.); mortal wound.

*[மரணம் + காயம்.]*

**மரணகாலம்** *maraṇa-kālam,* பெ.(n.) சாகும் வேளை (யாழ்.அக.); time of death.

*[மரணம் + காலம்.]*

**மரணங்கிட்டல்** *maraṇaṅ-kiṭṭal,* பெ.(n.) சாவு நெருங்கல்; approaching death.

*[மரணம் + கிட்டல்.]*

**மரணசனி** *maraṇa-šaṉi,* பெ.(n.) மரணத்தைக் குறிப்பதும் வாழ்நாளுள் மூன்றுமுறை வருவதுமான ஏழரையாண்டுச் சனி; the *ēḻarai-y-āṇḍu-c-caṉi* affecting a person for the third time in his life, when it is believed to cause his death.

*[மரணம் + **Skt.** சனி.]*

**மரணசாசனம்** *maraṇa-šāšaṉam,* பெ.(n.) மரணஆவணம் பார்க்க; see *maraṇa-āvaṇam.*

*[மரணம் + **Skt.** சாசனம்.]*

**மரணசாதனம்** *maraṇa-cādaṉam,* பெ.(n.) மரணஆவணம் பார்க்க; see *maraṇa-āvaṇam.*

*[மரணம் + **Skt.** சாதனம்.]*

**மரணசிட்சை** *maraṇa-šiṭcai,* பெ.(n.) மரண தண்டனை பார்க்க; see *maraṇa-daṇḍaṉai.*

*[மரணம் + **Skt.** சிட்சை.]*

**மரணசீவன்** *maraṇa-šīvaṉ,* பெ.(n.) இறக்கக் கூடிய வாழ்வு (வின்.); mortal existence.

*[மரணம் + **Skt.** சீவன்.]*

**மரணதண்டனை** *maraṇa-taṇḍaṉai,* பெ.(n.) கொலை முதலிய கடுங்குற்றம் புரிந்தவரின் உயிரைப் போக்குமாறு முறைமன்றம் வழங்கும் தண்டனை; sentence of death.

*[மரணம் + தண்டனை.]*

**மரணதண்டனைக்குற்றம்** *maraṇa-taṇ ḍaṉai-k-kuṟṟam,* பெ.(n.) மரண தண்டனை விதித்தற்குரிய பெருங்குற்றம் (mod.); offence punishable with death or transportation for life.

*[மரணதண்டனை + குற்றம்.]*

**மரணப்படுக்கை** *maraṇa-p-paḍukkai,* பெ.(n.) சா நெருங்குங்கட்டம், இறக்குந் தறுவாய்; death bed.

*[மரணம் + படுக்கை.]*

**மரணபத்திரம்** *maraṇa-pattiram,* பெ.(n.) மரணஆவணம் பார்க்க; see *maraṇa-āvaṇam.*

*[மரணம் + **Skt.** பத்திரம்.]*

**மரணபயங்கரம்** *maraṇa-payaṅgaram,* பெ.(n.) மரணக்கெடி (வின்.) பார்க்க; see *maraṇa-k-keḍi.*

*[மரணம் + **Skt.** பயங்கரம்.]*

**மரணம்** *maraṇam,* பெ.(n.) 1. சாவு; death, mortality. *"மரணமானால் வைகுந்தங் கொடுக்கும் பிரான்" (திவ்.திருவாய்.9, 10, 5).*

2. ஐவகைத் துன்பநிலைகளுள் மிகு மயக்கமும் அயர்ச்சியும் உண்டாகும் நிலை; sinking in a dead faint, one of *aivagai-t-tunba-nilai*, q.v.

L. mori.

*[மடி → மரி. ஒ.நோ: கடி →கரி. மரி + அணம் (வ.வ.54) (வே.க.4:106).]*

**மரணயாகம்** *marana-yāgam*, பெ.(n.) ஒருவனுடைய மரணத்தைக் குறித்துச் செய்யப்படும் வேள்வி (வின்.); a sacrificial ceremony for causing the death of a particular person.

*[மரணம் + Skt. யாகம்.]*

**மரணயோகம்** *marana-yōgam*, பெ.(n.) கெடுதியைக் குறிக்கும் அழிவு யோக வகை (பஞ்.); an inauspicious yōga indicating one's ruin or failure.

*[மரணம் + Skt. யோகம்.]*

**மரணவாக்குமூலம்** *marana-vākku-mūlam*, பெ.(n.) மரணம் நேர்வதாகக் கருதப்படுங் காலத்தில் கொடுக்கும் உறுதிமொழி (legal); declaration of a dying person, dying declaration.

*[மரணம் + வாக்குமூலம்.]*

**மரணவேதனை** *marana-vēdanai*, பெ.(n.) சாத்துன்பம்; death-throes, pangs of death. *"உறுகின்றயான் மரண வேதனைபோல வுற்றேன்" (சிலப்.19:5–6, உரை).*

*[மரணம் + **Skt.** வேதனை.]*

**மரணசூசம்** *marana-šūšam*, பெ.(n.) மரணாசௌசம் (யாழ்.அக.) பார்க்க; see *maranā-caucam.*

*[மரணம் + **Skt.** சூசம்.]*

**மரணசௌசம்** *maranā-caucam*, பெ.(n.) சாதீட்டு; ceremonial pollution observed on the death of one's relation.

*[மரணம் + **Skt.** சௌசம்.]*

**மரணி-த்தல்** *marani-*, 11 செ.கு.வி.(v.i.) இறத்தல் (யாழ்.அக.); to die.

*[மரணம் → மரணி-,]*

**மரணிப்பு** *maranippu*, பெ.(n.) மரணம், 1 (யாழ்.அக.) பார்க்க; see *maranam.*

*[மரணம் → மரணி →மரணிப்பு.]*

**மரணை**[1] *maranai*, பெ.(n.) சாவு (யாழ்.அக.); death.

*[மரணம் → மரணை.]*

**மரணை**[2] *maranai*, பெ.(n.) 1. நினைவு கூர்தல் (ஞாபகம்) (சங்.அக.); memory. 2. உணர்ச்சி (இ.வ.); sensation.

**மரத்தச்சர்** *mara-t-taccar*, பெ.(n.) தச்சர் (நாமதீப.154, உரை); carpenter.

**மரத்தலையாயக்கட்டு** *mara-t-talai-y-āya-k-kattu*, பெ.(n.) மரந்தலையாயக் கட்டு (வின்.) பார்க்க; see *marantalai-y-āya-k-kattu.*

*[மரந்தலையாயக்கட்டு→ மரத்தலையாயக் கட்டு.]*

**மரத்தார்** *marattār,* பெ.(n.) பகுத்தறி வில்லாதார்; block-heads, wooden - headed persons. *"மரத்தாரிம் மாணாக் குடிப் பிறந்தார்" (நாலடி, 145).*

*[மரம் → மரத்தார்.]*

**மரத்தாலிகட்டியடி–த்தல்** *mara-t-tāli-kaṭṭi-y-aḍi-,* 4 செ.குன்றாவி.(v.t.) மரத்தாற் செய்த தாலியைக் கட்டிக் கொள்ளச் செய்து குடியானவனுடைய மனைவியின் கழுத்தில் இருக்கும் பொற்றாலியை வரிக்காக வாங்குதல் போன்று வலக்காரமாகத் தண்டல் செய்தல் (இ.வ.); to extort, as by compelling a ryot's wife to wear a wooden *tāli* and surrender her golden *tāli.*

*[மரத்தாலி + கட்டியடி–,]*

**மரத்துப்பால்** *marattu-p-pāl,* பெ.(n.) கள் (கொ.வ.); toddy, as the milk of the palm-tree.

*[மரம் + அத்து + பால். அத்து = சாரியை.]*

**மரத்துப்போ–தல்** *marattu-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) மர–, பார்க்க; see *mara-,*

**மரத்துவவாழை** *marattuva-vāḻai,* பெ.(n.) மருத்துவவாழை பார்க்க; see *maruttuva-vāḻai.*

*[மருத்துவவாழை→மரத்துவவாழை (கொ.வ.)]*

**மரத்துவெள்ளை** *marattu-veḷḷai,* பெ.(n.) வெள்ளைக் குங்கிலியம் (மூ.அ.); *konkani* resign i.tr. *Boswellia serrata glabra.*

**மரத்தூள்** *mara-t-tūl,* பெ. (n.) வாளினா லறுக்கும்போது மரத்தினின்று கிட்டும் தூள்; a very fine saw dust used in surgical dressings.

*[மரம் + தூள்.]*

**மரத்தெண்ணெய்** *marattennai,* பெ.(n.) சந்தனக் கட்டையிலிருந்து எடுக்கப்படும் சந்தன நெய் போன்று ஒவ்வொரு மரக்கட்டையிலிருந்து எடுக்கப்படும் மரநெய்; wood oil as in sandal wood oil.

*[மரம் + நெய்→எண்ணெய்.]*

**மரத்தைலம்** *marattailam,* பெ.(n.) மரத்தெண்ணெய் பார்க்க; see *marattennai.*

*[மரம் + Skt. தைலம்.]*

**மரத்தொட்டு** *marattoṭṭu,* பெ.(n.) மரக்கிளைகளில் ஒட்டி வளரும் பூடு வகை, புல்லுருவி (இ.வ.); Parasite plant, honey - suckle mustletoe.

*[மரம் + ஒட்டு.]*

**மரத்தோல்** *mara-t-tōl,* பெ.(n.) 1. மரப்பட்டை; bark of a tree. 2. மரவுரி (பிங்.); bark - garment. 3. இலை; leaf of a tree.

*[மரம் + தோல்.]*

**மரந்தம்** *marandam,* பெ.(n.) பூந்தேன் (யாழ். அக.); honey in flower.

**மரந்தலை** *marandalai,* பெ.(n.) 1. ஊரிலுள்ள மரங்கள்; trees in a village. 2. பட்டனவும் படாது நிற்பனவுமான மரங்கள்; living and dead trees, a term in conveyancing. *மரந்தலை வகையரா உள்பட (உ.வ.).*

**மரந்தலையாயக்கட்டு** *maran-talai-y-āya-k-kattu,* பெ.(n.) ஊரிலுள்ள மரங்களின் விளக்கங் குறிக்கும் பட்டி; account showing the number of trees of various kinds in a village, whether liable to revenue or not.

*[மரந்தலை + ஆயக்கட்டு.]*

**மரந்துளைச்சி** *maran-tulaicci,* பெ.(n.) மரங்கொத்தி பார்க்க; see *maran-kotti.*

*[மரம் + துளைச்சி. மரத்தைத் துளைக்கும் பறவை. துளை→துளைச்சி.]*

**மரநா**[1] *maranā,* பெ.(n.) உணர்ச்சியற்றுப் போன நாக்கு (யாழ்.அக.); stiff, insensate tongue.

*[மரம் + நா. மரம் = மரத்துப் போகை, நா = நாக்கு.]*

**மரநா**[2] *maranā,* பெ.(n.) மரத்தாலாகிய மணியின் நாக்கு (வின்.); wooden clapper of a bell.

*[மரம் + நா. நா = நாக்கு.]*

**மரநாய்** *maranāy,* பெ.(n.) மரத்தில் வாழும் நாய் போன்ற விலங்கு வகை; toddy - cat, policat, fitchew, *paradoxurus musanga.* *"மரநா யகப்பட்ட வைபவ மாச்சுது" (குற்றா.குற. 110, 4).*

ம. மரநாய்

*[மரம் + நாய்.]*

**மரநாரத்தை** *mara-nārattai,* பெ.(n.) நாரத்தை வகை; a kind of tree. *கொடி நாரத்தைக்கு எதிரானது.*

**மரநோய்** *mara-nōy,* பெ.(n.) புல்லுருவி (சங்.அக.); honey - suckle mistletoe.

*[மரம் + நோய்.]*

**மரப்பட்டை** *mara-p-pattai,* பெ.(n.) மரத்தின் மேலுள்ள தோல் (வின்.); bark of a tree.

*[மரம் + பட்டை.]*

மரப்பட்டை வகை : பட்டை புளி வேம்பு முதலியவற்றின் பட்டை; சிறாம்பு தென்னை பனை முதலியவற்றின் பட்டை; மட்டை அல்லது தடை வாழையின் பட்டை (பட்டை என்னும் பெயர் வாழைத் தடைக்கும் வழங்கும்) (சொல்.65).

**மரப்படகு** *mara-p-padagu,* பெ.(n.) படகு வகை; a kind of boat.

*[மரம் + படகு.]*

**மரப்படிகட்டுகள்** *mara-p-padi-kattugal,* பெ.(n.) ஏணி; wooden ladder.

*[மரம் + படிகட்டுகள்.]*



**மரப்பத்தல்** *mara-p-pattal,* பெ.(n.) இறைமரம் (வின்.); wooden baling trough.

*[மரம் + பத்தல்.]*

மரப்பந்தர் *mara-p-pandar,* பெ.(n.) சோலை; grove. *"நன் மரப்பந்த ரிலவந்திகையின்" (மணிமே. 3: 44, அரும்.).*

*[மரம் + பந்தர். பந்தல் →பந்தர். ல > ர போலி.]*

மரப்பாச்சி *mara-p-pācci,* பெ.(n.) சிறுவர் விளையாட்டுக்குரிய மரப் பொம்மை (ஈடு.3, 1, 10, ஜீ); wooden doll.

ம. மரப்பாச்சி

*[மரம் + பாச்சி. பாவை →பாச்சி. மரப்பாவை →மரப்பாய்→மரப்பாய்ச்சி→மரப்பாச்சி.]*



மரப்பாசி *mara-p-pāśi,* பெ.(n.) கற்பாசி; lichens, tree - moss.

*[மரம் + பாசி.]*

மரப்பாஞ்சி *mara-p-pāñji,* பெ.(n.) மரப் பாச்சி பார்க்க; see *mara-p-pācci.*

*[மரப்பாவை→மரப்பாச்சி→மரப்பாஞ்சி.]*

மரப்பாவை *mara-p-pāvai,* பெ.(n.) மரப் பொம்மை; wooden puppet. *"மரப்பாவை நாணா லுயிர்மருட்டி யற்று" (குறள், 1020).*

ம. மரப்பாவ.

*[மரம் + பாவை.]*

மரப்பிசின் *mara-p-piśiṉ,* பெ.(n.) மரத்தி லுண்டாம் பிசின்; gum resin.

*[மரம் + பிசின்.]*

மரப்பிள்ளைசுற்று-தல் *mara-p-piḷḷai-śuṟṟu-,*5 செ.கு.வி.(v.i.) மத்தாடு–, பார்க்க; see *mattāḍu–,*

*[மரப்பிள்ளை + சுற்று–,.]*

மரப்புண் *mara-p-puṇ,* பெ.(n.) ஆறாது மேன்மேல் பெருகும் புண் (யாழ்.அக.); open, restering sore.

*[மரம் + புண்.]*

மரப்புணை *mara-p-puṇai,* பெ.(n.) தெப்பம்; float, raft. *"மாதவத் தாட்டியொடு மரப்புணை போகி" (சிலப்.13:179).*

*[மரம் + புணை.]*

மரப்பெட்டி *mara-p-peṭṭi,* பெ.(n.) மரத்தாலான பெட்டி (யாழ்.அக.); wooden box, chest or case.

*[மரம் + பெட்டி.]*

மரப்பொது *mara-p-podu,* பெ.(n.) சோலை (யாழ்.அக.); grove.

*[மரம் + பொது. பொதும்பர் →பொது.]*

மரப்பொந்து *mara-p-pondu,* பெ.(n.) மரத்தின் பொந்து (யாழ்.அக.); hallow in a tree.

*[மரம் + பொந்து.]*

பொள்ளல் – துளைத்தல். பொள் + து – பொந்து. உள்துளையுண்ட மரத்திலுள்ள பொந்து.



மரப்பொந்துதேன் *mara-p-pondu-tēn,* பெ.(n.) மரப்பொந்தில் ஈக்கள் கட்டும் தேன்; honey secreted from the hallow in the tree.

*[மரம் + பொந்து + தேன்.]*

மரப்போர் *mara-p-pōr,* பெ.(n.) மரப்பொந்து பார்க்க; see *mara-p-pondu.*

*[மரம் + போர். பொள்ளல் = துளைத்தல். பொள் →போள்→போர்.]*

மரபலா *marapalā,* பெ.(n.) வாழை; plantain tree (சா.அக.).

மரபார் *marapār,* பெ.(n.) மரபினோர் பார்க்க; see *marabinōr.*

*[மரபு + ஆர்.]*

மரபியல் *marabiyal,* பெ.(n.) முன்னோர் வழங்கிய சொல் வழக்கைக் கூறும் தொல்காப்பியப் பகுதி; a section of grammer which treats of the idiomatic use of words, as in *Tolkāppiyam.*

*[மரபு + இயல்.]*

மரபிலக்கணம்[1] *marabilakkaṇam,* பெ.(n.) மரபியல் பார்க்க (இலக்.); see *marabiyal.*

*[மரபு + இலக்கணம்.]*

மரபிலக்கணம்[2] *marabilakkaṇam,* பெ.(n.) மருத்துவத்திற்குண்டான சொற்களைத் தக்கபடி பயன்படுத்துதல்; the use of appropriate technical terms in medicine (சா.அக.).

மரபினோர் *marabinōr,* பெ.(n.) 1. வழித் தோன்றியோர்;descendants. 2. மூதாதையர் (வின்.); forefathers. 3. உறவினன் (வின்.); kinsfolk, relations. 4. ஒரு குடியினர்; people of one's own caste.

*[மரபு + ஆர். இன் – சாரியை. மரபினார் → மரபினோர்.]*

மரபு *marabu,* பெ.(n.) 1. முறைமை; rule, law, established usage or order, that which is sanctioned by custom. *"ஈண்டு செலன் மரபிற் றன்னியல் வழாது" (புறநா.25).* 2. (இலக்.) சான்றோரின் சொல் வழக்கு முறை (நன்.388); use of language sanctioned by ancient authors. 3. பழைமை (சூடா.); antiquity. 4. சரவடி; ancestral line. *"சூரியன் மரபுக்குமோர் தொன்மறு" (கம்பரா. வாலிவ. 81).* 5. தொன்றுதொட்ட வழக்கம்; lineage. *"மூலன் மரபில் வரு மௌனகுருவே" (தாயு.மௌன.1).* 6. இயல்பு; nature, property. *"துன்னியார் குற்றமுந் தூற்று மரபினார்" (குறள், 188).* 7. இலக்கணம்; characteristic. *"நடைமிகுந் தேத்திய குடைநிழன் மரபும்" (தொல். பொருள்.91).* 8. நல்லொழுக்கம்; good conduct, character. *"தங்கண் மரபில்லார்" (நாலடி, 336).* 9. பெருமை; name, fame.

"உன் மரபுசொல்ல" (பணவிடு.113). 10. மேம்பாடு; greatness. "இசை மரபாக நட்புக்கந்தாக" (புறநா.217). 11. முறைமை; justice. "மரபுகொ லிது வென்பார்" (சேதுபு. இலக்கும.11). 12. வழிபாடு; reverence, civility. "மரபினா னோக்கு கின்ற" (சீவக.842). 13. பருவம்; age, period of life. "சேய்மரபிற் கல்வி மாண்பில்லாத மாந்தரும்" (திரிகடு.84).

பல தலைமுறையாகத் தொடர்ந்து வரும் குலத்தொடர்ச்சி கொடியும் மரமும் போல் நீண்டும் தொடர்ந்தும் இருத்தலின் அதனைக் கொடி என்றும், கொடிவழி என்றும் மரபு என்றும் கூறுவது வழக்கம்.

வித்தும் வேரும் அடியும் கிளையும் குச்சுங் கொழுந்துமாகத் தொடர்ந்தோங்கும் மரம்போல மேன்மேல் தொடர்ந்து செல்லும் குலத் தொடர்ச்சி மரபு எனப்பட்டது.

தொடர்ந்து வரும் பழக்க வழக்கங்களையும் சொல் வழக்காற்றையும் மரபு என்பதுமுண்டு. தொல்காப்பியத்திலுள்ள மரபியல் என்னும் இயற்பெயர் இப்பொருள் பற்றியதே (சொல்.3).

**மரபுச்சொல்** *marabu-c-col,* பெ.(n.) மரபுப் பெயர் (இலக்.) பார்க்க; see *marabu-p-peyar.*

*[மரபு + சொல்.]*

**மரபுப்பெயர்** *marabu-p-peyar,* பெ(n.) ஒன்றற்குத் தொன்று தொட்டு வழங்கி வரும் பெயர் (நன்.274, உரை); appropriate name of a thing, as sanctioned by use.

*[மரபு + பெயர்.]*

**மரபுமயக்கம்** *marabu-mayakkam,* பெ.(n.) மரபுவழு (இலக்.) பார்க்க; see *marabu-valu.*

*[மரபு + மயக்கம். மயக்கம் = கலக்கம், குற்றம், வழு.]*

**மரபுவழு** *marabu-valu,* பெ.(n.) தொன்று தொட்டு வழங்கி வரும் முறைமைக்கு மாறானது (தொல்.சொல்.1, உரை); deviation from long established literary usage.

*[மரபு + வழு.]*

**மரபுவழுவமைதி** *marabu-valu-v-amaidi,* பெ.(n.) மரபு வழுவை அமைதி யுடைய தென்று சான்றோர் அமைத்துக் கொள்வது (தொல்.சொல்.11, உரை); permissible deviation from literary usage.

*[மரபுவழு + அமைதி.]*

**மரபுளோர்** *marabulōr,* பெ.(n.) மரபினோர் பார்க்க; see *marabinōr.* "சடையன் தங்கள் மரபுளோர் கொடுக்க" (கம்பரா. திருமுடிசூ.38).

**மரம்** *maram,* பெ.(n.) 1. தரைமட்டத்திலிருந்து சற்று தொலைவு இடைவிடாது வளர்ந்து பின் கிளைவிட்டுப் படர்ந்து வளர்ந்து நீண்ட காலம் உயிர் வாழும் பயிரி; perennial plant with a woody self-supporting main stem or trunk and usually unbranched for some distance above the ground , tree. "வற்றன் மரந்தளித் தற்று" (குறள், 78). 2. உள் வயிரமுள்ள பயிரி; endogenous plants "அகக்காழனவே மரமென மொழிப" (தொல்.பொருள்.641). 3. அறுக்கப்பட்ட மரம்; wood, timber. 4. மூலிகை (பிங்.); medicinal shrub or root. 5. மரக்கலம்; ship or boat. "பெருங்கடனீந்திய மரம் வலியுறுக்கும்"

(பதிற்றுப்.76:4). 6. இயமரம்; war-drum. "மரமிரட்டவும்" (கலிங்.331). 7. உழுத கழனியைச் சமன்படுத்தும் பரம்புப் பலகை (இ.வ.); board or roller for smoothing land newly ploughed.

மரம்அணை–த்தல் *maram-aṇai-,* 4 செ.குன்றாவி.(v.t.) கட்டுமரத்தடிகளைச் சேர்த்தணைத்துக் கட்டுதல்; tide the wooden logs to make a boat.

மறுவ. மரம்கட்டல்.

*[மரம் + அணை–,]*

மரம்காவல் *maram-kāval,* பெ.(n.) மரம் காவுதல்; to carry the woods on the shoulder.

*[மரம் + காவல்.]*

கட்டுமரத்தடிகளைத் தோளில் தூக்கிச் செல்லுதல் என்பதன் திரிபு.

மரம்போற்கிட–த்தல் *maram-pōṟ-kiḍa-,* 3 செ.குன்றாவி.(v.t.) ஊதை நோயினால் உடம்பிற்கு ஏற்பட்ட ஒரு நிலை; prostratian of body due to rhematism affecting the joints.

*[மரம்போல் + கிட–.]*

மரம்வழுக்கை *maram-vaḻukkai,* பெ.(n.) 1. மரத்தின் இளங்காய்; tender fruits. 2. இளவழுக்கைச் சாறு; juice of tender fruits as tender coconut tree.

*[மரம் + வழுக்கை.]*

தென்னையின் இளங்காயை வழுக்கை என்றழைக்கும் மரபுண்மையைக் காண்க.

மரமஞ்சள் *mara-mañjaḷ,* பெ.(n.) கொடி வகை (பதார்த்த.413); tree turmeric s.cl. *Coscinium fenestratum.*

*[மரம் + மஞ்சள்.]*

மரமடி[1]–த்தல் *maramaḍi-,* 4 செ.கு.வி.(v.i.) உழவுக்குப் பின்னர் நிலத்தைச் சமப் படுத்துவதற்காகத் தடியாலடித்தல்; leveled the land after plough.

*[மரம் + அடி–. மரத்தால் அடித்தல்.]*

மரமடி[2]–த்தல் *maramaḍi-,* 4 செ.கு.வி.(v.i.) பரம்படித்தல் (நெல்லை.); to harrow a field.

*[மரம் + அடி–. மரத்தைக் கொண்டு சமன்படுத்துதல்.]*

மரமணி *mara-maṇi,* பெ.(n.) ஆடு மாடுகளை அழைப்பதற்கு இடையர் அரையிற் கட்டும் மணி (ஈடு.4, 8, 4, ஜீ); bell tied by herdsman around his waist to call the cattle.

*[மரம் + மணி.]*

மரமதம் *mara-madam,* பெ.(n.) கள்; toddy.

*[மரம் + மதம்.]*

மரமந்தாரை *mara-mandārai,* பெ.(n.) ஒரு பூ மரம்; a flower tree.

*[மரம் + மந்தாரை.]*

மரமரம் *maramaram,* பெ.(n.) மரமராஞ்சம் பார்க்க; see *mara-marāñjam.*

*[மரமராஞ்சம்→மரமரம்.]*

மரமரிவாள் *maram-arivāḷ,* பெ.(n.) ஈர் வாள் (யாழ்.அக.); saw.

*[மரம் + அரிவாள்.]*



மரமல்லி *mara-malli,* பெ.(n.) மரமல்லிகை பார்க்க; see *mara-malligai.*

*[மரமல்லிகை →மரமல்லி.]*

மரமல்லிகை *mara-malligai,* பெ. (n.) காட்டு மல்லி; Indian - cork.

*[மரம் + மல்லிகை.]*

மரமனோரஞ்சிதம் *mara-maṉōrañjidam,* பெ.(n.) சிறு செண்பகம்; cembaga flower tree.

*[மரம் + **Skt.** மனோரஞ்சிதம்.]*

மரமுந்திரி *mara-mundiri,* பெ.(n.) முந்திரி மரம்; cashew-nut tree. *கொடிமுந்திரிக்கு எதிரானது.*

*[மரம் + முந்திரி.]*

முன் + துரி – முந்துரி – முந்திரி. துருத்தல் – முன்தள்ளுதல். முன் தள்ளிக் கொண்டிருக்கும் கொட்டையுள்ள மரம்.

மரமுலை *mara-mulai,* பெ.(n.) ஆண், பெண் வேடங் கொள்ளும் போது கட்டிக் கொள்ளும் மரத்திலான பொய்ம் முலை (திவ்.பெரியதி.8, 1, 1, வ்யா.); false breast, used by male actor when assuming the character of a female.

*[மரம் + முலை.]*

மரமூலம் *mara-mūlam,* பெ.(n.) மரவேர்; the root of a tree.

*[மரம் + மூலம்.]*

மரமேறி *maram-ēṟi,* பெ.(n.) கள் இறக்குவதற்குத் தென்னை பனை முதலிய மரங்களில் மரமேறும் பிரிவினர்; the *cāṉar* caste, especially those who climb palm trees for drawing toddy.

*[மரம் + ஏறி.]*

மரயம் *marayam,* பெ.(n.) புளியம்புறணி, புளியம்பட்டை (பரி.அக.); outer skin of the tamarind tree.

*[மரம் + அயம்.]*

மரயெண்ணெய் *mara-eṉṉey,* பெ.(n.) மரத்தெண்ணெய் பார்க்க; see *mara-t-teṉṉey.*

*[மரத்தெண்ணெய்→மரயெண்ணெய்.]*

மரல்¹ *maral,* பெ.(n.) 1. கடல்; sea. 2. அரலை; a shrub. 3. கற்றாழை; a kind of aloe. 4. மருள் பார்க்க; see *maruḷ.*

மரல்² *maral,* பெ.(n.) பெருங்குரும்பை; bowstring hemp. *"மரையா மரல் கவர" (கலித்.6).*

மரல்மஞ்சி *maral-mañji,* பெ.(n.) மரல்நார் (வின்.); fibre of bostring hemp.

*[மரல் + மஞ்சி.]*

மரலுகம் *maralugam,* பெ.(n.) குங்குமப்பூ (சங்.அக.); saffron flower.

மரவக்கட்டி *marava-k-katti,* பெ.(n.) பரு; tumour.

மரவக்கல்சத்து *maravakkal-cattu,* பெ.(n.) பலகல் சத்து; the essence of several stones.

மரவஞ்சறைப்பெட்டி *mara-v-añjarai-p-petti,* பெ.(n.) கடுகு முதலிய பொருள்கள் வைப்பதற்காக மரத்தாற் செய்த அஞ்சறைப் பெட்டி; small wooden box with partitions and a sliding lid, used for keeping spices and condiments.

*[மரம் + அஞ்சறைப்பெட்டி.]*



மரவசாதி *marava-cādi,* பெ.(n.) பயிரபதி சாதியாகிய ஆண் சாதி நால்வகையி லொன்று; one of the four classes of men (சா.அக.).

மரவட்டணம் *mara-vattanam,* பெ.(n.) 1. மரத்தட்டு (சங்.அக.); wooden tray. 2. நெடும் பரிசை (வின்.); wooden shield.

*[மரம் + வட்டணம்.]*

மரவட்டணை *mara-vattanai,* பெ.(n.) மரவட்டணம் (சங்.அக.) பார்க்க; see *maravattanam.*

*[மரவட்டணம்→மரவட்டணை.]*

மரவட்டம் *maravattam,* பெ.(n.) மரவட்டணம் (சங்.அக.) பார்க்க; see *mara-vattanam.*

*[மரவட்டணம் →மரவட்டம்.]*

மரவட்டு *mara-vattu,* பெ.(n.) 1. மரவட்டணம் (சங்.அக.) பார்க்க; see *mara-vattanam.* 2. மரத்தின் குருத்துள்ள பகுதி (யாழ்.அக.); thepartofa plant in which the tender shoot is found.

*[மரவட்டணம்→மரவட்டு.]*

மரவட்டை *mara-vattai,* பெ.(n.) 1. பூச்சி வகை; millipede, cambala amulta. 2. மரவகை; maroti, l.tr. Hydnocarpus wightiana.

*[மரம் + அட்டை.]*

மரவட்டைக்கடி *maravattai-k-kadi,* பெ.(n.) மரவட்டையின் கடி; bite of millipede.

*[மரவட்டை + கடி.]*

மரவடி *mara-v-adi,* பெ.(n.) மரச் செருப்பு; wooden sandals. *"நின்றால் மரவடியாம்... திருமாற்கரவு" (திவ்.இயற்.1, 53).*

*[மரம் + அடி.]*

மரவடை *mara-vaḍai,* பெ.(n.) 1. மரத்திற்குரிய வரி (S.I.I.ii, 24); tax on trees. 2. மரவிரை, 1 பார்க்க; see *mara-virai.*

*[மரம் + அடை.]*

மரவண்டு *mara-v-vaṇḍu,* பெ.(n.) மரத்தைக் குடையும் வண்டு வகை (வின்.); a kind of tree boring beetle.

*[மரம் + வண்டு.]*

மரவணில் *mara-v-aṇil,* பெ.(n.) 1. பெரிய அணில் வகை (வின்.); a grey flying squirrel, pateromys fimbriatus. 2. வௌவால் (யாழ்.அக.); bat.

*[மரம் + அணில்.]*

மரவத்தி *maravatti,* பெ.(n.) அத்தி வகை; a kind of *atti.*

*[மரம் + அத்தி.]*

மரவதம் *mara-vadam,* பெ.(n.) மரவம், 1 (பச்.மூ) பார்க்க; see *maravam.*

*[மரவம் →மரவதம்.]*

மரவம் *maravam,* பெ.(n.) 1. குங்கும மரம் (சூடா.); saffron. 2. வெண்கடம்பு; seaside Indian oak. *"மரவம் ஒப்ப" (ஐங்குறு. 357).* 3. கடம்பு; common cadamba. 4. செங்கடம்பு; indian oak.

மரவயிரம் *mara-vayiram,* பெ.(n.) மரக்காழ்; the inner core of the tree which has become very hard.

*[மரம் + வயிரம் .]*

மரவள்ளி *mara-vaḷḷi,* பெ.(n.) செடிவகை (சங்.அக.); tapioca I.sh., *Manihot utilissima.*

*[மரம் + வள்ளி.]*



மரவள்ளிக்கிழங்கு *mara-vaḷḷi-k-kiḻaṅgu,* பெ.(n.) ஒருவகைக் கிழங்கு; tapioca.

*[மரவள்ளி + கிழங்கு.]*

மரவாடி *maravāḍi,* பெ.(n.) மரக்கடை; timber yard.

*[மரம் + வாடி. வாடை – பக்கம், வரிசை வரிசையாயமைந்த கடை.]*

மரவாடையெலும்பு *maravāḍai-elumbu,* பெ(n.) கணுக்கால் எலும்பு; ankle bone (சா. அக.).

*[மரவாடை + எலும்பு.]*

மரவாணி *mara-v-āṇi,* பெ.(n.) மரத்தாலாகிய ஆணி (வின்.); wooden pin, plug.

*[மரம் + ஆணி.]*

மரவாரை *mara-v-ārai,* பெ.(n.) 1. உத்தர முதலிய மரக்கட்டை; joist, beam, sleeper. 2. சிலை முதலியவற்றைச் சுமந்து செல்ல உதவும் நீண்ட மரத்துண்டு; staff or pole for carrying idols.

*[மரம் + வாரை.]*

**மரவிடம்** *mara-viḍam,* பெ.(n.) பயிரி நஞ்சு (தைலவ.தைல); vegetable poison.

*[மரம் + விடம். Skt. விஷம் த. விடம் – நஞ்சு.]*

**மரவிடை** *maraviḍai,* பெ.(n.) ஆவண (பத்திர) மெழுதுவோர் விற்பனை நிலத்திலுள்ள மரங்களைக் குறித்தற்கு வழங்குஞ் சொல் (யாழ்.அக.); a term used in conveyancing to include all kinds of trees and plants on the property conveyed (R.F.).

*[மரம் + விடை.]*

**மரவினைஞர்** *mara-viṉaiñar,* பெ.(n.) தச்சர் (வின்.); carpenters.

*[மரம் + வினைஞர்.]*

**மரவினையாளர்** *mara-viṉai-y-āḷar,* பெ.(n.) மரவினைஞர் (பிங்.) பார்க்க; see *mara-viṉaiñar.*

*[மரம் + வினையாளர்.]*

**மரவு** *maravu,* பெ.(n.) மரா பார்க்க; see *mrā.* *"மரவு சேர் கடவூர் மயானத்தார்" (தேவா. 530, 8).*

*[மரா→மரவு.]*

**மரவுப்பு** *mara-v-uppu,* பெ.(n.) உப்பு வகை (வின்.); carbonate of potash-*Potassae carbonas.*

**மரவுப்புக்காரம்** *mara-v-uppu-k-kāram,* பெ.(n.) சோடாவுப்பு வகை; caustic potash, hydrate of pottasium-*Potassa caustica.*

*[மரவுப்பு + காரம்.]*

**மரவுப்புச்சத்து** *mara-v-uppu-c-cattu,* பெ.(n.) சாம்பலுப்புச் சத்து; potash impura.

*[மரவுப்பு + சத்து.]*

**மரவுப்புச்சாயநீர்** *mara-v-uppu-c-cāyanīr,* பெ.(n.) மரவுப்புக் காரங் கலந்த நீர் (இங்.வை.); solution of potash, *liquor potassae.*

*[மரவுப்புச்சாயம் + நீர்.]*

**மரவுரல்** *mara-v-ural,* பெ.(n.) மரத்தாலான உரல்; wooden mortar.

*[மரம் + உரல். உல் – துளைத்தல் கருத்து வேர். உல்→உர்→உரல்.]*



**மரவுரி** *mara-v-uri,* பெ.(n.) 1. முனிவர் முதலியோர் ஆடையாகக் கொள்ளும் மரப் பட்டை வகை; bark of tree used as clothing in ancient times by ascetics, etc. *"மரவுரி யுடையன்" (மணிமே, 17, 4).* 2. மரவகை; bark tree, 1, tr. *Antiaris toxicaria.* 3. சீரகம் (பரி.அக.); cumin.

*[மரம் + உரி.]*

மரத்தினின்று உரித்த பொருள் (பட்டை).

மரவெட்டி *mara-veṭṭi,* பெ.(n.) புல்லுருவி; parasitic plant. 2. நீரடிமுத்து பார்க்க; see *nīraḍi-muttu.*

*[மரம் + வெட்டி.]*

மரவெண்ணெய் *mara-v-eṇṇey,* பெ. (n.) 1. மரத்தினின்றெடுக்கும் எண்ணெய்; wood-oil (mod.). 2. தில்லை மரப் பிசின் (வின்.); gum from the sap of the tillai tree.

*[மரம் + எண்ணெய்.]*

மரவெலி *mara-v-eli,* பெ.(n.) எலி வகை (சங்.அக.); tree rat, mus brunniens.

*[மரம் + எலி.]*

மரவெள்ளை *mara-veḷḷai,* பெ.(n.) வெள்ளைக் குங்கலியம் பார்க்க; see *veḷḷai-k-kuṅgiliyam.*

*[மரம் + வெள்ளை.]*

மரவெறும்பு *mara-v-eṟumbu,* பெ.(n.) எறும்பு வகை (யாழ்.அக.); an ant .

*[மரம் + எறும்பு.]*

மரவேர் *mara-vēr,* பெ.(n.) மரத்தின் தன்மையை ஒத்திருக்கும் வேர்; root taking the characterics of a tree by reason of is long existence such a banyan.

*[மரம் + வேர்.]*

மரவை *maravai,* பெ.(n.) மரத்தாலான ஏனம்; wooden utensil or bowl.

*[மரம் → மரவை.]*

மரவைக்காசு *maravai-k-kašu,* பெ.(n.) பிச்சையெடுத்த பணம் (நாஞ்.); money got by begging.

*[மரவை + காசு.]*

மரவொட்டி *mara-v-oṭṭi,* பெ.(n.) புல்லுருவி; parasitic plant.

*[மரம் + ஒட்டி.]*

மரவொதுக்கு *mara-v-odukku,* பெ.(n.) வெயில் காற்று முதலியவற்றிற்கு ஒதுங்க வுதவும் மரநிழல் (வின்.); shade of a tree, as offering shelter from the sun.

*[மரம் + ஒதுக்கு.]*

மரவொல்லி[1] *mara-volli,* பெ.(n.) கதம்பை யொல்லி; a withered grass (சா.அக.).

மரவொல்லி[2] *mara-v-olli,* பெ. (n.) உள்ளீடற்ற தேங்காய் (யாழ்.அக.); blighted coconut in which the kernel is scanty through the fibrous rind in large.

*[மரம் + ஒல்லி.]*

மரா *marā,* பெ. (n.) 1. மரவம் 2, 3, 4 பார்க்க; see *maravam.* 2. மராமரம் பார்க்க; see *marā-maram.*

மராஅடி *marā-aḍi,* பெ.(n.) 1. மரச்செருப்பு (தொல்.எழுத்து.311, உரை); wooden sandals. 2. மராடி 1 பார்க்க; see *marāḍi.*

*[மரம்→மரா+ அடி.]*

மராஅம் *marāam,* பெ.(n.) மரவம் 2, 3, 4 பார்க்க; see *maravam.* *"இணர் சேர்ந்த மராஅமும்" (கலித்.26) (திருமுரு.110, உரை).*

*[மரவம்→மராஅம்.]*

மராகதம்பம் *marā-kadambam,* பெ.(n.) கடம்ப மரம்; cadamba tree in general (சா.அக.).

மராசகம் *marāšagam,* பெ.(n.) பன்னீர்; rose water (சா.அக.).

மராசகி *marā-šagi,* பெ.(n.) நிலக்கடலை; ground nut (சா.அக.).

மராசிகா *marāšigā,* பெ.(n.) வெண்கடம்பு; a tree (சா.அக.).

மராட்டம்[1] *marāṭṭam,* பெ.(n.) 1. புறமயிர் (திவா.); hair on the body of human beings or animals. 2. பெண் மயிர்; hair on women's head. *"மன்றன் மாதர்தனமு மாராட்டமும்" (இரகு.நகர்.49).*

மராட்டம்[2] *marāṭṭam,* பெ.(n.) 1. மராட்டிய மாநிலம்; the Maharastra state. *"மகத வினைஞரு மராட்டக் கம்மரும்" (மணிமே. 19, 107)* 2. இடம் (பிங்.); place.

*[மராட்டியம்→மராட்டம்.]*

மராட்டிமொக்கு *marāṭṭi-mokku,* பெ.(n.) போதைப் பொருள் வகை (பெரியமா.31); a intoxicating drug.

மராட்டியம் *marāṭṭiyam,* பெ.(n.) இந்தியாவி லுள்ள (30) மாநிலங்களு ளொன்று; one of the (30) states in India.

மராட்டியர் *marāṭṭiyar,* பெ.(n.) மராட்டிய மாநில மக்கள்; people of *Marāṭṭiya* state.

*[மராட்டியம்→மராட்டியர்.]*

மராட்டிரம் *marāṭṭiram,* பெ.(n.) மராட்டியம் பார்க்க; see *marāṭṭiyam.*

மராடம்[1] *marāḍam,* பெ.(n.) 1. ஐம்பத்தாறு தேசத்து ளொன்றான மராட்டியம் (திவா.); the maratiya country, one of 56 tēšams. 2. மராட்டிய மொழி; the language spoken in the marattiya country.

*[மராட்டியம்→மராடம்.]*

மராடம்[2] *marāḍam,* பெ.(n.) மருக்காரை (மலை.) பார்க்க; see *maru-k-kārai.*

மராடர் *marāḍar,* பெ.(n.) மராட்டியர்; the maharattas. *"சோளர் மராடர்" (கம்பரா. உலா.47).*

*[மராட்டியர்→மராடர்.]*

மராடி *marāḍi,* பெ.(n.) 1. மரத்தின் அடிப்பகுதி (நன்.256, மயிலை); root or stump of a tree. 2. மராஅடி[1] பார்க்க; see *marāḍi.*

*[மரவடி→மராடி.]*

மராடிகம் *marāḍigam,* பெ.(n.) நிலக்குமிழ்; a tree.

மராபம் *marābam,* பெ.(n.) மதுக்காரை (பரி.அக.) பார்க்க; see *madu-k-kārai.*

மராம் *marām,* பெ. (n.) மரவம் 2, 3, 4 பார்க்க; see *maravam. "மராமலர்த்தாரின் மாண் வரத் தோன்றி" (பரிபா.15, 20).*

*[மரவம்→மராம்.]*

மராமரம் *marāmaram,* பெ.(n.) 1. ஆச்சா (பிங்.) பார்க்க; see *āccā. "மராமர மேழ்துளை யெய்த" (கம்பரா.சிறப்புப்.5).* 2. அரசு (அக.நி.); pipal.

மராயம்[1] *marāyam,* பெ.(n.) மாதுளை; pomegranate.

மராயம்² *marāyam,* பெ.(n.) பழங்காலத்து வரிவகைகளுள் ஒன்று; a kind of ancient tax.

மராடம் *marāḍam,* பெ.(n.) பண்டகசாலை (யாழ்.அக.); godown, warehouse.

மராலம் *marālam,* பெ.(n.) 1. கண்ணிலிடும் மை; unguent for eyes. 2. குதிரை; horse. 3. தாரா; goose. 4. மாதுளை; pomegranate.

மராளகம் *marāḷagam,* பெ.(n.) நிலவாகை பார்க்க; see *nila-vāgai.*

மராளம்¹ *marāḷam,* பெ.(n.) 1. அன்னம்; swan. 2. பூ நாரை; flamingo. 3. மராலம், 4 (அக.நி.) பார்க்க; see *marālam.*

மராளம்² *marāḷam,* பெ.(n.) பாம்பு; snake.

மரி¹-தல் *mari-,* 4 செ.கு.வி.(v.i.) மரி²-, பார்க்க; see *mari-, "எய்தானம் மான்மரிய வேந்திழைக் காய்" (திவ்.இயற்.3, 52).*

மரி²-த்தல் *mari-,* 11 செ.கு.வி.(v.i.) சாதல்; to die. *"அரயன் உடையான் மரித்தமையில்" (S.I.I.ii, 311).*

*[முல் - வளைதல் கருத்து. முல்→முண்டு→ முடி→முடி-தல்→முடி→மடி→மரி-த்தல். மடிதல், மரி-த்தல் = இறத்தல்.]*

மரி³-த்தல் *mari-,* 11 செ.கு.வி.(v.i.) நினைத்தல் (வின்.); to remember.

*[மடி→மரி-. மீண்டும் திரும்ப நினைத்துப் பார்த்தல்.]*

மரி⁴ *mari,* பெ.(n.) மரிமா பார்க்க; see *marimā.*

*[மரிமா→மரி.]*

மரிக்கன்மா *marikkaṉ-mā,* பெ.(n.) மைதா மா; corn flour.

*[அமெரிக்கன்மா→மரிக்கன்மா.]*

மரிக்கை *marikkai,* பெ.(n.) இறந்துவிடுகை; dying, death.

*[மரி→மரிக்கை.]*

மரிக்கொழுந்து *mari-k-koḻundu,* பெ.(n.) மருக்கொழுந்து பார்க்க; see *maru-k-koḻundu.*

*[மருக்கொழுநது→மரிக்கொழுந்து.]*

மரிகடகம் *mari-kaḍagam,* பெ.(n.) பெருங்குரும்பை (சங்.அக.); bowstring hemp.

மரிகம் *marigam,* பெ.(n.) முருங்கை; drumstic tree.

மரிகிரந்தி *mari-kirandi,* பெ.(n.) ஒருவகைக் கிரந்தி; a kind of ulcer or carbuncle resulting in death (சா.அக.).

மரிகோவை *mari-kōvai,* பெ.(n.) கோவைக் கொடி; a climber yielding red fruits (சா.அக.).

மரிச்சம் *mariccam,* பெ.(n.) மாமரம்; mango tree.

மரிச்சன் *mariccaṉ,* பெ.(n.) மரிச்சம் (பரி.அக.) பார்க்க; see *mariccam.*

*[மரிச்சம்→மரிச்சன்.]*

மரிச்சி *mariccai,* பெ.(n.) வரப்பு; ridge of a field.

*[மறி→மறிச்சி→மரிச்சி.]*

மரிசம் *marišam,* பெ.(n.) மிளகு (மலை.); black peper.

மரிசி *mariši,* பெ.(n.) 1. புதுவரம்பு வழி; newly formed ridge used as a path. 2. செடி (இ.வ.); shrub.

[*மரிச்சி →மரிசி.*]

மரிசு *marišu,* பெ.(n.) 1. வரம்பு; ridge. 2. வரம்பருகு; edge of a ridge.

[*மறி→மறிச்சி→மரிச்சி→மரிசு.*]

மரித்தபிண்டம் *maritta-pindam,* பெ.(n.) வயிற்றிலேயே இறந்த சிசு; dead foetus.

[*மரித்த + பிண்டம்.*]

மரித்தவப்பாசி *marittava-p-pāši,* பெ.(n.) கடற்பாசி பார்க்க; see *kadar-pāši.*

மரித்தான்கெண்டை *marittān-kendai,* பெ. (n.) ஆறு அங்குல நீளம் வளர்வதும் வெண்மையும் நீலமும் கலந்த நிற முள்ளதுமான கடல்மீன் வகை; a sea-fish, silvery shot with purple, attaining 6 inch. in length Barilius bendelisis.

மரிப்பு *marippu,* பெ.(n.) சாவு; death. *"மரிப்பொ டுதிப்பு" (பிரபுலிங்.முத்தாயி.23).*

[*மரி→மரிப்பு. ஒ.நோ.அரி →அரிப்பு.*]

மரிமா *marimā,* பெ.(n.) புளிமா; Hongplum (m.m).

மரிமாங்காய் *mari-māngāy,* பெ.(n.) 1. ஒரு வகை மாங்காய், அம்பாலம்; a variety of small mangoes. 2. காட்டு மாமரம்; wild mango tree. *"சாரப் பருப்பு தரும் மாவினின்றும் வேறுபட்டது" (சா.அக.).*

மரிமாஞ்செடி *mari-māñcedi,* பெ.(n.) மரி மாமரத்தின் செடி; plant of marima tree (சா.அக.).

மரியங்காய்ச்செடி *mariyangāy-c-cedi,* பெ.(n.) மரிமா (வைத்.ரத்.) பார்க்க; see *mari-mā.*

மரியங்கொழுந்து *mariyan-kolundu,* பெ.(n.) மரிமாமரத்தின் கொழுந்து; tender leaves of marimā tree.

மரியவர் *mariyavar,* பெ.(n.) பின்பற்றி யொழுகுபவர்; adherents followers. *"பெரிவன்றிருமொழி.... மரியவர்" (சீவக.1211).*

[*மருவு→மருவியவர் → மரியவர்.*]

மரு[1] *maru,* பெ.(n.) 1. ஒன்றிலிருந்து இன்னொன்றொடு கலக்கும் மணம்; mix the fragrances one to another. 2. நறுமணம்; fragrances. *"மருவா கொன்றை" (தேவா. 530, 1).* 3. நறுமணச் செடிவகை (மலை.); marjoram. 4. மருக்கொழுந்து 1, பார்க்க; see *maru-k-kolundu. "மருவுக்கு வாசனை போல் வந்ததால்" (வெங்கைக்கோ. 112).*

மரு[2] *maru,* பெ.(n.) 1. மணமகனுக்குப் பெண்வீட்டாரிடும் முதல் விருந்து (இ.வ.); first feast to a bridegroom in his father-in-law's house, soon after his marriage. 2. இடம் (பிங்.); place.

[*முல்→ மல் →மர்→மரு (வே.க.4:41). மருவுதல் = கலத்தல்.*]

மரு[3] *maru,* பெ.(n.) 1. மருநிலம் பார்க்க;see *maru-nilam.* 2. மலை; mountain.

மருக்கட்டி *maru-k-katti,* பெ.(n.) மறு[2], 5, 6 பார்க்க (இராசவைத்.16); see *maru.*

மருக்கடம் *maru-k-kaḍam,* பெ.(n.) குரங்கு; ape; monkey.

மருக்கடாசியம் *maru-k-kaḍā-ciyam,* பெ.(n.) செம்பு; copper.

மருக்கணம் *marukkaṇam,* பெ.(n.) மருத்துக்கள்; the host of maruts. *"மருக் கணங்களும் விசுவ தேவரும்" (தக்கயாகப். 253).*

மருக்கம்[1] *marukkam,* பெ.(n.) 1. காற்று; wind. 2. குரங்கு; monkey. 3. உடல்; body.

மருக்கம்[2] *marukkam,* பெ.(n.) 1. மருக் கொழுந்து பார்க்க; see *maru-k-koḻundu.* 2. மிளகு; pepper.

*[மரு → மருக்கம். நறுமணமுடைய மருக்கொழுந்து, மணமுடைய மிளகு.]*

மருக்களம் *mark-kaḷam,* பெ.(n.) மயிர் மாணிக்கம் எனும் கொடி; a creeper.



மருக்கன்காய் *marukkaṉ-kāy,* பெ.(n.) ஆதொண்டைக்காய்; unripe fruit of thorny caper (madr.).

மருக்காதிதம் *maru-k-kādidam,* பெ.(n.) நிலவேம்பு; a plant.

மருக்காரை *marukkārai,* பெ.(n.) மதுக்காரை 1, 2 பார்க்க (m.m.291); see *madu-k-kārai 1, 2.*

மருக்காளங்காய் *maru-k-kāḷaṅgāy,* பெ. (n.) ஒருவகைப் பேதிக்காய்; a fruit that causes motions (சா.அக.).

மருக்காளம் *maru-k-kāḷam,* பெ.(n.) மதுக்காரை 1 (m.m.291)பார்க்க; see *madu-k-kārai.*

மருக்கியாடு *marukki-y-āḍu,* பெ.(n.) மலட்டாடு; barren she-goat.

மருக்கிழங்கு *maru-k-kiḻaṅgu,* பெ.(n.) ஒரு வகைக் கிழங்கு; a variety of tuber.

மருக்கு–தல் *marukku-,* 5 செ.கு.வி. (v.i.) புளி முதலியன சேர்த்து எண்ணெயிலுள்ள கெடுதிகளை நீக்குதல்; to remove dirt. etc. from oil, by adding to it tamarind, etc. and heating it.

மருக்குருப்புல் *maru-k-kuru-p-pul,* பெ.(n.) ஒருவகைப் புல்; a kind of grass.

மருக்குலுபழம் *marukkulu-paḻam,* பெ.(n.) ஒரு வகை பழம்; a kind of fruit.

மருக்குறாப்புல் *maru-k-kuṟā-p-pul,* பெ.(n.) செடி வகை; large purple grass (m.m) panicum stagninum (m.m).

மருக்கூவிகம் *maru-k-kūvigam,* பெ.(n.) நீர்க் கடம்பு; female cadambam.

மருக்கொழுந்து *maru-k-kolundu,* பெ.(n.) 1. நறுமணச் செடிவகை; southern wood, s.sh. Artemisia abrotanum pallens. 2. மரு[1], 2 பார்க்க; see *maru.*

*[மரு → மருக்கொழுந்து.]*

மருக்கொழுந்துச்சக்களத்தி *maru-k-kolundu-c-cakkalatti,* பெ.(n.) நீருமரி; மருக்கொழுந்து போன்றதொரு செடி; Indian saltwort.

*[மருக்கொழுந்து + சக்களத்தி.]*

மருகம்[1] *marugam,* பெ.(n.) மான் வகை (சங்.அக.); a kind of stag.

மருகம்[2] *marugam,* பெ.(n.) ஆதொண்டை (இராசவைத்.142) பார்க்க; see *ātondai.*

மருகம்போகி *marugam-bōgi,* பெ.(n.) கற்றாழை; a plant.

மருகன் *marugan,* பெ.(n.) 1. ஒருவரின் உடன் பிறந்தாளின் மகன் அல்லது ஒருத்தியின் உடன் பிறந்தவரின் மகன்; a man's sister's son or a woman's brother's son. *"வானவரைப் பணி கொண்ட மருகாவோ" (கம்பரா.சூர்ப்பண,111).* 2. மகன் போலப் பொருந்தும் மகளின் கணவன்; son - in - law. *"மலைக்கு மருகனைப் பாடிபாடி" (திருவாச.9, 6).* 3. வழித்தோன்றல்; descendant, scion, member of a clan. *"சேரலர் மருக" (பதிற்றுப்.63, 16).*

*[மருமகன் → மருகன் (வே.க.4:40).]*

மருகாந்தரம் *marugāndaram,* பெ.(n.) மருநிலம் பார்க்க; see *marunilam.*

மருகி *marugi,* பெ.(n.) 1. மருமகள் (யாழ். அக);daughter-in-law. *"மெல்லியலென் மருகியையும்" (திவ். பெருமாள்.98).*

*[மருகன்–மருமகன். மருகன் (ஆ.பா.)→ மருகி (பெ.பா.).]*

மருகு[1] *marugu,* பெ.(n.) மருகன் (யாழ்.அக); son-in-law. *"மருகென்றே வவமதித்த தக்கன்" (கந்தபு.காமத. 110).*

*[மருகன் → மருகு.]*

மருகு[2] *marugu,* பெ.(n.) 1. காட்டு மல்லிகை; wild jasmine. 2. மரு[1], 2 பார்க்க; see *maru.* 2. மகரவாழை (பிங்.); a kind of plantain. *"மருகு பூக்குவ" (இரகு.குசன.74).* 3. தவனம் எனும் நறுமணச் செடி; a fragrant tree called tavanam.

*[மரு → மருகு (வே.க.4:41).]*

மருகை *marugai,* பெ.(n.) பஞ்சு மூட்டை; bale of cotton.

மருங்கு *maruṅgu,* பெ.(n.) 1. பொருந்தும் பக்கம்; side. *"கனையெரியுரறிய மருங்கு நோக்கி" (புறநா.23).* 2. விலாப்பக்கம்; side of the body. *"கயிறு பிணிக் கொண்ட கவிழ்மணி மருங்கின்" (புறநா.3).* 3. இடை (சூடா.); waist. 4. வடிவு; form. *"பொன்னனார் மருங்கு போன்றணி மாக்கவின் கொண்டதே" (சீவக.1195).* 5. எல்லை; limit. *"மருங்கறி வாரா மலையினும் பெரிது" (கலித்.48).* 6. இடம் (பிங்.); land, place. 7. சுவடு; track, trace. *"புல்லறிவாளர்*

*பெருஞ்செல்வம்.... மருங்கறக் கெட்டுவிடும்" (நாலடி, 8).* 8. சுற்றம்; relative. *"அவனின் மருங்குடையார் மாநிலத் தில்" (குறள், 526).* 9. குலம்; race, tribe, family. *"சூர் மருங்கறுத்த மொய்ம்பின் மதவலி" (திருமுரு.275).* 10. செல்வம்; wealth. *"மண்மேன் மருங்குடை யவர்க் கல்லால்" (சீவக.2924).* 11. நூல்; science. *"தொன் மருங்கறிஞர்" (குறிஞ்சிப்.18).* 12. தகுதி (வின்.); order, propriety.

*[முல் → மல் → மர் → மரு → மருங்கு (வே.க.4:39).]*

மருங்குசூலை *maruṅgu-šūlai,* பெ.(n.) பக்க சூலை; a disease marked by shooting pain in the sides chest or abdomen (சா.அக.).

*[மருங்கு + சூலை.]*

மருங்குல் *maruṅgul,* பெ.(n.) 1. இடை; waist, especially of women. *"கொம்பரார் மருங்குன் மங்கை கூற" (திருவாச.5, 67).* 2. மருங்குற்பக்கம் பார்க்க; see *maruṅguṟ-pakkam.* 3. வயிறு; stomach, abdomen. *"பசிபடு மருங்குலை" (புறநா.260).* 4. உடம்பு; body. *"யானை மருங்குலேய்க்கும் வண்டோட்டுத் தெங்கின்" (பெரும்பாண். 352).*

*[மருங்கு → மருங்குல் (வே.க.4:46).]*

மருங்குற்பக்கம் *maruṅguṟ-pakkam,* பெ.(n.) இடுப்பு (பிங்.); hip.

*[மருங்குல் + பக்கம்.]*

மருங்கை *maruṅgai,* பெ.(n.) ஈன்ற ஐந்தாம் நாள்; the fifth day after the delivery of a child.

மருச்சகம் *maruccagam,* பெ.(n.) கொம்மட்டி மாதுளை (மலை.) பார்க்க; see *kommaṭṭi-māduḷai.*

மருட்கற்றாழை *maruṭ-kaṟṟāḻai,* பெ.(n.) காதுவலி நீக்கப் பயன்படும் கற்றாழை வகை; a kind of aloes used as medicine for ear ache (சா.அக.).

மருட்கனி *maruṭ-kaṉi,* பெ.(n.) எட்டிக்கனி, எட்டிக்காய்; nux-vomica fruit (சா.அக.).

மருட்காட்சி *maruṭ-kāṭci,* பெ.(n.) மயக்கவறிவு (நாமதீப.698); confused or bewildered vision, illusion.

*[மருள் + காட்சி.]*

மருட்காய் *maruṭ-kāy,* பெ.(n.) நோய் வகை; a disease with wort like eruptioms over the body (சா.அக.).

மருட்காவரிசி *maruṭkā-v-ariši,* பெ.(n.) கார்போக அரிசி; seeds of psoralea corylifolia (சாஅக.).

மருட்கிழங்கு *maruṭ-kiḻaṅgu,* பெ.(n.) மருளின்வேர்; root of marḷ (சா.அக.).

*[மருள் + கிழங்கு.]*

மருட்கிழங்குக்கற்றாழை *maruṭ-kiḻaṅgu-k-kaṟṟāḻai,* பெ.(n.) ஒருவகைக் கற்றாழையின் வேர்; root of a variety of aloes. *இஃது காது வலி போக்கும் மருந்தாய்ப் பயன்படும் (சா.அக.).*

மருட்கை *maruṭ-kai,* பெ.(n.) 1 மெய்ப்பாடு எட்டனுள் ஒன்றாகிய வியப்பு (தொல். பொருள். 651); astonishment, wonder, one

of eight mey-p-pāḍu, q.v. 2. மயக்கம்; bewilderement. *"ஐயமு மருட்கையுஞ் செல்வதினீக்கி" (தொல். பொருள்.659).*

*[முல் → மல் → மர் → மரு. மருவுதல் = கலந்திருத்தல், தழுவுதல், பயிலுதல், புணர்தல். மரு → மருட்கை (வே.க.4:42).]*

மருட்கையுவமை *marutkai-y-uvamai,* பெ.(n.) (அணியி.) ஒரு பொருட்குக் கூடாதபண்பினைக் கூடுவதாகக் கொண்டு அதனை யுவமையாக்கிக் கூறும் அணி வகை (மாறனலங். 101, உரை); simile in which a thing is taken for comparison on the basis of a non existent quality.

*[முல் → மல் → மர் → மரு → மருட்கை. மருட்கை + உவமை.]*

மருட்சி[1] *marutci,* பெ.(n.) அறிவின்மை; ignorance.

*[மருள் → மருட்சி.]*

மருட்சி[2] *marūtci,* பெ.(n.) 1. பொய்யுணர்வு; false understanding, perversion of the mind. 2. மயக்கம்; bewilderment. *"மருட்சி செய் காமநோயால்" (திருவிளை. மூர்த்திவி. 16).*

*[முல் → மல் → மர் → மரு → மருட்கை → மருட்சி (வேக.4:42).]*

மருட்டம் *maruṭṭam,* பெ.(n.) 1. மயக்கந் தருவது (வின்.); that which intoxicates. 2. கள்; toddy. 3. ஏமாற்று (யாழ்.அக.); cheating.

*[முல் = பொருந்தற் கருத்து வேர். முல் → மல் → மர் → மரு. மரு → மருள் = மயக்கம். மருள் → மருட்டம்.]*

மருட்டி *maruṭṭi,* பெ.(n.) 1. மருட்டம், 1, 2 (சங்.அக.)பார்க்க; see *maruṭṭam.* 2. மயங்கும்படி மினுக்குபவள்; temptress, blandishing woman, fascinating woman. *"ஆசை கொடுத்து மருட்டிகள்" (திருப்பு.353).*

*[முல் → மல் → மர் → மரு. மரு → மருளி = மயக்கம், மதிமயங்கி. மருள் → மிரள். மிரளுதல் = மயங்கி யஞ்சுதல். மருள் → மருட்டு → மருட்டி (வே.க. 4:42).]*

மருட்டிரம் *maruṭṭiram,* பெ.(n.) பெருந் தும்பை பார்க்க; see *perundumbai.*

மருட்டு[1]-தல் *maruṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. மயக்குதல்; to entice, fascinate, infatuate, bewitch. *"வெல்லாம லெவரையு மருட்டிவிட" (தாயு.சித்தர்.10).* 2. அச்ச மூட்டுதல் (வின்.); threaten, menace. 3. மாறுபடச் செய்தல்; to cause to be changed. *"மாணல மருட்டும்" (ஐங்குறு.139).* 4. ஒத்தல் (ஐங்குறு.அரும்.); to resemble. 5. மனங்கவியச் செய்தல்; to allure, coax. *"மெல்லெனச் செல்க என மருட்டிக் கூறியவாறு" (தொல்.பொருள்.506, உரை).* 6. ஏமாற்றுதல் (யாழ்.அக.); to cheat.

*[மருள் → மருட்டு-.]*

மருட்டு[2] *maruṭṭu,* பெ.(n.) 1. அச்சமூட்டுகை; threatening. 2. மயக்குகை; enticing.

*[மருள் → மருட்டு.]*

மருட்டுப்பன்றி *maruṭṭu-p-panṟi,* பெ.(n.) பன்றி வகை (திவா.); a species of pig.

*[மருட்டு + பன்றி.]*

**மருட்டுவித்தை** *maruṭṭu-vittai,* பெ.(n.) மயக்கு வித்தை; art of bewitching, hyprotising mesmerising.

*[மருட்டு + வித்தை.]*

**மருட்பன்றி** *maruṭ-paṉṟi,* பெ.(n.) மருட்டுப் பன்றி பார்க்க ; see *maruṭṭu-p-paṉṟi.*

*[மருட்டுப்பன்றி → மருட்பன்றி.]*

**மருட்பா** *maruṭpā,* பெ.(n.) வெண்பாவும் ஆசிரியப்பாவும் கலந்து வரும் செய்யுள் வகை (இலக்.வி.749); poem in which *veṇpā* and *āśiriyappā* occur alternately. *"மருட்பா ஏனை இருசா ரல்லது" (தொல். பொருள்.396).*

*[முல் → மல் → மர் → மரு = ஒன்றிலிருந்து இன்னொன்றோடு கலக்கும் மணம். மரு → மருள் →மருள்தல்= ஒத்தல், வியத்தல், மயங்குதல். மருள் →மருட்கை = மயக்கம். மருள் →மருட்பா (வே.க.4:42).]*

**மருட்பார்வை** *maruṭ-pārvai,* பெ.(n.) வெருண்ட பார்வை; bewidered look (சா.அக.).

*[மருள் + பார்வை.]*

**மருடணம்** *maruḍaṇam,* பெ.(n.) அகமருடணம்; a kind of ablution. *"மார்ச்சனமு மருடணமு நிறுத்தி" (தத்துவப். 50).*

**மருண்டபார்வை** *maruṇḍa-pārvai,* பெ. (n.) மானைப் போன்ற மிரண்ட பார்வை; shyness vision or look like deer.

*[மருண்ட + பார்வை.]*

**மருண்டை** *maruṇḍai,* பெ.(n.) மருந்துருண்டை; medicinal bolus (சா.அக.).

*[மருந்துருண்டை →மருண்டை (கொ.வ.).]*

**மருண்மா** *maruṇ-mā,* பெ.(n.) மதம்படு யானை (திவா.); elephant.

*[முல் →மல் →மர் →மரு →மருள் = மருட்சி. மருள் + மா – மருண்மா (வே.க.4:42).]*

**மருண்மாலை** *maruṇ-mālai,* பெ.(n.) புன்மாலைப் பொழுது, மயங்கும் மாலைப் பொழுது, மசண்டைப் பொழுது (யாழ்.அக.); evening twilight.

*[மருள் + மாலை.]*

**மருணீக்கியார்** *maru-ṇīkkiyār,* பெ.(n.) திருநாவுக்கரசரின் பிள்ளைத் திருப்பெயர்; name given to Thirunāvukkaracu by his parents. *"மலரு மருணீக்கியார் வந்தவதாரஞ் செய்தார்" (பெரியபு. திருநாவுக்.18).*

*[மருள் + நீக்கியார்.]*

**மருத்தன்[1]** *maruttaṉ,* பெ.(n.) மருத்துவன்; physician.. *"மருந்தொடுங் கூட்டி.... ஒற்றுவித் திருந்தனன் மருத்தன்" (உபதேசகா. சிவத்துரோகி. 320).*

*[மருத்துவர் → மருத்துவன் → மருத்தன் (கொ.வ.).]*

**மருத்தன்[2]** *maruttaṉ,* பெ.(n.) காற்றுக் கடவுள்; the God of wind. *"மருத்தன்றூண்டு... தடந்தேர்" (கந்தபு.ஏமகூ.7).*

**மருத்தன்[3]** *maruttaṉ,* பெ.(n.) ஔவையார் போற்றிப் பாடிய திருக்குடந்தையிலிருந்த வள்ளல் (சி.பெ.அக.); a philonthoropist of Thirukkudanthai, praised by Avvaiyar.

மருத்தாதி *maruttādi*, பெ.(n.) சீந்திற் கொடி; moon creeper.

மருத்தாது *maruttādu*, பெ.(n.) தேன்; honey.

மருத்திபொதி *marutti-podi*, பெ.(n.) நாயுருவி (பச்.மூ.); a plant growing in thickets and hedges.

மருத்தீடு *maruttīḍu*, பெ.(n.) 1. வயப்படுத்தும் மருந்திடுகை; administering a philter. 2. வயப்படுத்தும் மருத்திடுதலால் வரும் நோய்; effect supposed to result from a philter, as serious illness. *"தலைவலி மருத்தீடு காமாலை" (திருப்பு.153).*

*[மருந்து + இடு – மருந்திடு →மருத்தீடு.]*

மருத்தீண்டாமரம் *maruttīṇḍā-maram*, பெ.(n.) மராமரம் பார்க்க; see *marā-maram*(சா.அக.).

மருத்து *maruttu*, பெ.(n.) 1. காற்று; wind. *"விரைத்த மருத்து" (தணிகைப்பு.அகத்திய 20).* 2. மருத்தன்[2] பார்க்க; see *maruttaṉ*. *"மருத்தின் காதலன்" (கம்பரா.வேலேற்ற.40).* 3. ஊதைநோய் (இராசவைத்.113).; disease caused by the humour of the wind. *"நின், வருதலு மொடுக்கமு மருத்தினுள அதனால், இவ்வு முவ்வு மவ்வும் பிறவும் ஏம மார்ந்தநிற் பிரிந்து" (பரிபா.4:32, 3–4).*

*[மரு →மருத்து. மரு = கலக்கும் மணம், காற்று]*

மருத்துகன் *maruttugaṉ*, பெ.(n.) பண்டிதன்; one who is skilled in midwifery (சா.அக.).

மருத்துச்சஞ்சீவி *maruttu-c-cañjīvi*, பெ.(n.) மருந்தாக உதவும் புல்மரம், புதல், பூடு, கொடி முதலியன (பிங்.); medicinal shrubs and plants.

*[மருந்து→மருத்து + Skt. சஞ்சீவி > த. உயிர் மருந்து.]*

மருத்துண்ணி *maruttuṇṇi*, பெ.(n.) பாம்பு; snake.

*[மருத்து = காற்று. மருத்து + உண்ணி = காற்றைப் புசிப்பது.]*

மருத்துநீர் *maruttu-nīr*, பெ.(n.) முழுகுவதற்கான மருந்திட்ட நீர் (யாழ்.அக.); medicated water for bathing.

*[மருந்து→மருத்து + நீர்.]*

மருத்துநூல் *maruttu-nūl*, பெ.(n.) மருத்துவ நூல் பார்க்க; see *maruttuva-nūl*. *"வழுவில் சோதிட மருத்து நூல்" (பிரபோத.31, 37).*

*[மருத்துவநூல் → மருத்துநூல்.]*

மருத்துநெய் *maruttu-ney*, பெ.(n.) மருந்து சரக்குகளைக் காய்ச்சி எடுக்கும் நெய்; medicated ghee (சா.அக.).

*[மருந்து→மருத்து + நெய்.]*

மருத்துப்பதம் *maruttu-p-padam*, பெ.(n.) உண்ணுவதற்கு ஏதுவாகச் செய்யப்படும் மூலிகைகளாலான மருந்துகள்; well to do eat medical herbs.

*[மருந்து→மருத்து + பதம்.]*

மருத்துப்பாரதம் *maruttu-p-pāradam*, பெ.(n.) தேரையாரியற்றிய மருத்துவ நூல்; a book on Tamil medicine written allegorically by Theraiyar.

**மருத்துப்பை[1]** *maruttu-p-pai,* பெ.(n.) மருந்துச் சரக்கு; medicinal drug (சா.அக.).

**மருத்துப்பை[2]** *maruttu-p-pai,* பெ.(n.) 1. மருந்துகள் வைக்கும் பை (நன்.183, மயிலை); medicine chest. 2. வெடி மருந்திடுந் தோற்பை (வின்.); leather case for gunpowder.

*[மருந்து→மருத்து + பை.]*

**மருத்துப்போதி** *maruttu-p-pōdi,* பெ.(n.) நாயுருவி (மலை.); a plant growing in hedges and thickets.

**மருத்துபலம்** *maruttu-palam,* பெ.(n.) ஆலங்கட்டி மழை (சங்.அக.); hail-storm.

**மருத்துமரம்** *maruttu-maram,* பெ.(n.) மருந்துமரம் போல் அருமையானவன்–ள் (யாழ்.அக.); person of good qualities, as precious as medicinal tree.

*[மருந்து→மருத்து + மரம்.]*

**மருத்துமலை** *maruttumalai,* பெ.(n.) கடலூர், திருவகீந்திரபுரத்திற்கு அருகில் உள்ள மருத்துவ குணம் நிறைந்த மலை (சி.பெ.அக.); a hill, with many medicinal qualities situated near Thiruvagindhra puram in Cuddalore nearby.

*[மருந்து→மருத்து + மாலை.]*

**மருத்துமாமலைவாழை** *maruttu-mā-malai-vāḻai,* பெ.(n.) மருத்துவ வாழை பார்க்க; see *maruttuva-vāḻai.*

*[மருத்துவவாழை→ மருத்துமாமலை வாழை.]*

**மருத்துமாவாழை** *maruttu-mā-vāḻai,* பெ.(n.) மருத்துவ வாழை பார்க்க; see *maruttuva-vāḻai.*

*[மருத்துவவாழை → மருத்துமாவாழை.]*

**மருத்துவக்கலைஞன்** *maruttuva-k-kalaiñaṉ,* பெ.(n.) மருத்துவநூலோன் பார்க்க; see *maruttuva-nūlōṉ.*

*[மருத்துவநூலோன்→ மருத்துவக் கலைஞன்.]*

**மருத்துவக்குறி** *maruttuva-k-kuṟi,* பெ.(n.) நோயறிகுறி; clinical symptoms.

*[மருத்துவம் + குறி.]*

**மருத்துவச்சி** *maruttuvacci,* பெ.(n.) 1. மகப்பேறு பார்ப்பவள்; midwife. 2. பெண் மருத்துவர்; lady Doctor.

*[மருந்து →மருத்து. மருத்துவன் (ஆ.பா.), மருத்துவச்சி (பெ.பா.).]*

**மருத்துவசாலை** *maruttuva-šālai,* பெ.(n.) 1. மருத்துவக் கூடம்; medical hall. 2. மருத்துவமனை; hospital.

*[மருத்துவம் + சாலை.]*

**மருத்துவதி** *maruttuvadi,* பெ.(n.) தாமிர வருணியாறு (நாமதீப.325); the river *Tāmiravaruṇi.*

**மருத்துவநாள்** *maruttuva-nāḷ,* பெ.(n.) இரவை நாள் (பிங்.); the first naksatra aswini.

*[மருத்துவம் + நாள்.]*

**மருத்துவநூல்** *maruttuva-nūl,* பெ.(n.) 1. மருத்துவ அறிவியல்; medical science. *"உண்டால் நூறடி உலாவுதல் வேண்டுமென்று மருத்துவ நூல் கூறியதனை" (சீவக.2734, உரை).* 2. பேறு பார்த்தற்குரிய நூல்;treatise an midwifery (mod.).

*[மருத்துவம் + நூல்.]*

**மருத்துவநூலோன்** *maruttuva-nūlōṉ,* பெ.(n.) மருத்துவன் (திவா.); physician.

*[மருத்துவம் + நூலோன்.]*

**மருத்துவப்பதம்** *maruttuva-p-padam,* பெ.(n.) மாற்று செய்யக்கூடியதாகிய நோயின் நிலைமை; condition of being amenable to medical treatment, as an early stage of the disease. *"மருத்துவப்பத நீங்கினா ளென்னும் வார்த்தை படுவதன் முன்" (திவ்.பெரியாழ்.3, 7, 10).*

*[மருத்துவம் + பதம்.]*

**மருத்துவப்பயிற்சி** *maruttuva-p-payiṟci,* பெ.(n.) 1. மகப்பேற்றுக்குப் பயிற்சி; midwifery (சா.அக.). 2. மருத்துவப் படிப்பிற்குப் பிறகு எடுத்துக் கொள்ளும் பயிற்சி; practising as house surgeon.

*[மருத்துவம் + பயிற்சி.]*

**மருத்துவப்பெண்** *maruttuva-p-peṇ,* பெ.(n.) மருத்துவச்சி பார்க்க; see *maruttuvacci.*

*[மருத்துவச்சி → மருத்துவப்பெண்.]*

**மருத்துவப்பேறு** *maruttuva-p-pēṟu,* பெ.(n.) சிற்றூர் மருத்துவனுக்கு இறையிலியாக விடப்பட்ட நிலம் (S.I.I.ii.43); land granted free to the village physician.

*[மருத்துவம் + பேறு.]*

**மருத்துவம்[1]** *maruttuvam,* பெ.(n.) 1. மருத்துவம்; practice of medicine. 2. மருந்து; medicine. 3. மாற்று; remedy. *"எங்கட்பிணி தவிர்த்து வழுவா மருத்துவமாவன..... ஐயாறனடித்தலமே" (தேவா. 292, 5).* 4. பேறுபார்க்குந் தொழில்; midwifery (mod.).

*[மரு →மருந்து→மருத்து →மருத்துவம்.]*

**மருத்துவம்[2]** *maruttuvam,* பெ.(n.) ஒருவகை யாழ்; a kind of lute. *"மருத்துவப் பெயர் பெறும் வானைக் கருவி" (கல்லா.81).*

**மருத்துவமலை** *maruttuva-malai,* பெ.(n.) குமரி மாவட்டத்தில் நாகர்கோயிலிலிருந்து 8 கல் தொலைவில் உள்ள, நாராயண குரு பல காலம் வாழ்ந்த, மருத்துவ குணமுள்ள மலை (சி.பெ.அக.); a hill, with many medicinal herbs, situated 8 km from Nagarkoil, where saint Narayana guru lived for many years.

*[மருத்துவம் + மலை.]*

**மருத்துவமுறைஉணவு** *maruttuvamuṟai-uṇavu,* பெ.(n.) மருந்துக்கிசைந்த உணவு பார்க்க; see *marundu-k-kišainda-uṇavu.*

*[மருந்து → மருத்து → மருத்துவர்.]*

**மருத்துவர்** *maruttuvar,* பெ.(n.) 1. நோய் கண்டறிந்து மருத்துவம் செய்பவர்; medical practitioner. 2. அச்சுவினி தேவர்; the twin physicians of svarga. *"மருத்துவ ரிருவோர்" (திருவிளை. திருமண.85).*

*[மருந்து → மருத்து → மருத்துவர்.]*

**மருத்துவர்நாள்** *maruttuvar-nāḷ,* பெ.(n.) மருத்துவநாள் (நாமதீப.104) பார்க்க; see *maruttuva-nāḷ.*

*[மருத்துவநாள் → மருத்துவர்நாள்.]*

**மருத்துவரை** *maruttu-varai,* பெ.(n.) மருந்துச் செடிகளடங்கிய மலை, சஞ்சீவி மலை; mountains containing valuable medicinal plants (சா.அக.).

*[மருந்து →மருத்து + வரை. வரை = மலை.]*

**மருத்துவவாழை** *maruttuva-vāḻai,* பெ.(n.) வாழை வகை (யாழ்ப்.); a kind of plantain.

**மருத்துவறை** *maruttuvaṟai,* பெ.(n.) மகப் பேற்றறை; labour room.

*[மருத்துவம் + அறை.]*

**மருத்துவன்**[1] *maruttuvaṉ,* பெ.(n.) நோய் தீர்க்க பண்டுவம் செய்பவர்; physician. *"மருத்து வனாய்நின்ற மாமலை வண்ணா" (திவ்.பெரியாழ்.5, 3, 6).*

*[மரு →மருந்து→மருத்து →மருத்துவன்.]*

**மருத்துவன்**[2] *maruttuvaṉ,* பெ.(n.) மருத்துவான் பார்க்க; see *maruttuvāṉ. "மருத்துவன் றனைச் சசியொடு துரந்து" (கந்தபு. அவைபுகு.98).*

**மருத்துவன்றாமோதரனார்** *maruttuvaṉ-ṟāmōdaraṉār,* பெ.(n.) கடைச்சங்கப் புலவருள் ஒருவர் (புறநா.); a poet of the Third *Saṅgam.*

*[மருத்துவன் + தாமோதரனார்.]*

**மருத்துவனாணை** *maruttuvaṉ-āṇai,* பெ.(n.) நோயரிடம் உண்மையாக நடந்து கொள்வதாகவும், தப்பு வழியில் நடந்து கொள்ளாமலிருப்பதாகவும் ஆணை மேற்கொளல்; oath taken by physician promising to treat patients to the best of his knowledge ability and not to hurt them nor behave in wrong ways - Hippocratic oath (சா.அக.).

*[மருத்துவன் + ஆணை.]*

**மருத்துவாகம்** *maruttu-vāgam,* பெ. (n.) 1. நெருப்பு; fire. 2. புகை; smoke (சா.அக.).

**மருத்துவான்** *maruttuvāṉ,* பெ.(n.) இந்திரன்; Indiran. *"மருத்துவா னுருவமாறி வந்தவா றுணர் கிலாதான்" (பாரத. அருச்சுனன்றவ.69).*

**மருத்துவி** *maruttuvi,* பெ.(n.) மருத்துவஞ் செய்பவள்; female physician. *"ஆருயிர் மருத்துவி துன்னிய வென்னோய் துடைப்பா யென்றலும்" (மணிமே.17, 15).*

மறுவ. மருத்துவச்சி

*[மருத்துவன்(ஆ.பா.)→மருத்துவி (பெ.பா.).]*

**மருத்துவிச்சி** *maruttuvicci,* பெ.(n.) மருத்துவச்சி (யாழ்.அக.) பார்க்க; see *maruttuvacci.*

*[மருத்துவச்சி → மருத்துவிச்சி.]*

**மருத்தெண்ணெய்** *maruttenney,* பெ.(n.) மருந்தெண்ணெய் (வீரசோ.தொகை.1, உரை) பார்க்க; see *maruntenney.*

*[மருந்தெண்ணெய் →மருத்தெண்ணெய்.]*

மருதக்கருப்பொருள் *maruda-k-karu-p-poru̲ḷ,* பெ.(n.) மருத நிலத்தில் உற்பத்தியாகும் பொருள்கள்; men, animals and other things of the agricultural tracts.

*[மருதம் + கருப்பொருள்.]*

மருதக்கிழவன் *maruda-k-ki̲ḻavan,* பெ.(n.) 1. மருத நிலத் தலைவன்; chief of an agricultural tract. 2. இந்திரன்; Indiran, as the presiding deity of marutam.

*[மருதம் + கிழவன்.]*

மருதங்கிளி *marudaṅ-kiḷi,* பெ.(n.) கிளி வகை (யாழ்.அக.); a species of parrot.

*[மருதம் + கிளி.]*

மருதணி[1] *marudaṇi,* பெ.(n.) மருதம், 2 (யாழ்.அக.) பார்க்க; see *marudam.*

*[மருதம் → மருதணி.]*

மருதணி[2] *marudaṇi,* பெ.(n.) மருதோன்றி பார்க்க; see *marutōṉṟi.*

*[மருதோன்றி → மருதாணி → மருதணி (இ.வ.).]*

மருதத்திணை *maruda-t-tiṇai,* பெ. (n.) மருதம், 2 பார்க்க (இலக்.வி.391, உரை); see *marudam.*

*[மருதம் + திணை.]*

மருதத்துப்பெருந்துறை *marutattu-p-perunduṟai,* பெ.(n.) வைகையாற்றின் நீராடு துறையாகிய திருமருதமுன்றுறை (ஐங்குறு. 75); a bathing ghat of the vaigai at Madurai.

*[மருதத்து + பெருந்துறை.]*

மருதந்துவர் *marudan-tuvar,* பெ.(n.) புத்தத் துறவிகளின் ஆடைகளைத் தோய்ப்பதற் குரிய ஒரு வகைச் சாயம்; myrtle dye, used in dyeing cloth for use by Buddist monks.

*[மருதம் + துவர்.]*

மருதநாதன் *maruda-nātaṉ,* பெ.(n.) இந்திரன் (நாமதீப.61); Indiran, as lord of the agricultural tract.

*[மருதம் + Skt.நாதன். மருதநிலத்துத் தலைவன்.]*

மருதநிலப்பறை *maruda-nila-p-paṟai,* பெ.(n.) மருத நிலத்திற்குரிய பறை (இறை.1, 18, உரை); drum of the agricultural tract.

*[மருதநிலம் + பறை.]*

மருதநிலம் *maruda-nilam,* பெ.(n.) மருதம்,2 பார்க்க; see *marudam.*

*[மருதம் + நிலம்.]*

மருதநிலவேந்தன் *marudanila-vēndaṉ,* பெ.(n.) மருதநாதன் (சூடா.) பார்க்க; see *maruda-nādaṉ.*

*[மருதநிலம் + வேந்தன்.]*

மருதப்பறை *maruda-p-paṟai,* பெ.(n.) மருத நிலப்பறை பார்க்க; see *maruda-nila-p-paṟai.*

*[மருதநிலப்பறை → மருதப்பறை.]*

மருதபிரான் *marudapirāṉ,* பெ.(n.) பட்டினத்தாரின் மகன் (சி.பெ.அக.); son of Pattinathar.

**மருதம்** *marudam,* பெ.(n.) 1. மருது பார்க்க; see *marudu.* *"கரைசேர் மருதமேறி" (ஐங்குறு.74). "இருள்புனை மருதின் இன்நிழல் வதியும்" (நற்.330:5).* 2. ஐந்திணையு ளொன்றான வயலும் வயல் சார்ந்த இடமும் (தொல். பொருள்.6); agricultural tract one of ai-n-tinai q.v. 3. அகத்திணை ஏழனுளொன் றானதும் ஊடியுங் கூடியும் போகம் நுகர்வதுமான ஒழுக்கம்; love action in agricultural tracts, consisting of sexual union after sulks, one of seven aga-t-tiṉai. *மருதஞ் சான்ற மருதத் தண்பணை" (சிறுபாண்.186).* 4. (இசை) மருத நிலத்துக்குரிய காலைப் பண் வகை; morning melody -type peculiar to agricultural tracts. *"மாலை மருதம் பண்ணி.... வரவெமர் மறந்தனர்" (புறநா.149).* 5. வயல்; paddy field.

**மருதம்பாடியஇளங்கடுங்கோ** *marudam-pāḍiya-iḷaṅkaḍuṅgō,* பெ.(n.) இலக்கியப் புலமை பெற்ற சேர அரசன்; a Chera king who had made poems. *செங்காயபன் உறய் பெருங்கடுங்கோ மகன் ளங்கடுங்கோ ளங்கோ ஆக அறுத்த கல் (புகளூர் கல்வெட்டு) (அகநானூறு.96, 176, நற்றிணை 50 ஆகிய பாடல்களைப் பாடிய சேரவரசர்).*

**மருதமரம்** *maruda-maram,* பெ.(n.) மருது பார்க்க; see *marudu.*

*[மருது →மருதமரம்.]*

**மருதமலை** *maruda-malai,* பெ.(n.) கோயம்புத்தூருக்கு (கோவன்புத்தூர்) வடமேற்கே மேற்கு மலைத் தொடரில் முருகன் கோயில் அமைந்துள்ள மலைத்தலம் (சி.பெ.அக.); a hill station on the western ghats north west of Coimbatore, where there is a temple for Lord Muruga.

**மருதயாழ்** *maruda-yāḻ,* பெ.(n.) 1. மருத நிலத்துக்குரிய யாழ் வகை (இறை.1, பக்.18); a lute peculiar to agricultural tracts. 2. மருதம்[4] (பிங்.) பார்க்க; see *marudam.*

*[மருதம் + யாழ்.]*

**மருதயாழ்த்திறம்** *maruda-yāḻ-t-tiṟam,* பெ.(n.) (இசை.) நவிர், வடுகு, வஞ்சி, செய்திறம் என நால்வகைப்பட்ட மருதப் பண் வகை (பிங்.); secondary melody - types of the marutappan, of four kinds viz., *navir, vaḍugu, vañcicey-tiṟam.*

*[மருதயாழ் + திறம்.]*

**மருதயாறு** *maruda-yāṟu,* பெ.(n.) திருச்சிராப்பள்ளி மாவட்டத்திலுள்ள உடையார்பாளையம் வட்டத்திலோடும் ஒரு சிற்றாறு; an brackish stream in *Uḍaiyār-pāḷaiyam* Taluk in Perambalur (Dt.). *"மருதயாற்றின் தெற்கும்" (தொல். சொல். 398).*

*[மருதம் + யாறு.]*

**மருதர்** *marudar,* பெ.(n.) எழுவகைக் காற்றுகள்; the seven kinds of winds. *"மருதரும் வசுக்களும்" (திவ். திருவாய்.10, 97).*

**மருதவேந்தன்** *maruda-vēndaṉ,* பெ.(n.) மருதநாதன் (யாழ்.அக.) பார்க்க; see *maruda-nādaṉ.*

**மருதவைப்பு** *maruda-vaippu,* பெ.(n.) மருதம், 2 பார்க்க; see *marudam.* *"மரமனார் மருதவைப்பில்.... இடை மருதிடங் கொண்டாரே" (தேவா.543, 1).*

**மருதாணி** *marutāṇi,* பெ.(n.) மருதோன்றி பார்க்க; see *maru-tōṉṟi.*

*[மருதோன்றி→மருதாணி.]*

**மருதாறு** *marutāṟu,* பெ.(n.) அரியலூர் வட்டத்தில் இருந்த ஓர் ஆறு; a river in the Ariyalur taluk. *"தாந் வேண்டும் பயிர் செய்து மருதாற்றில் கரைகொண்ட இடங்களில் கமுகுநின்ற நிலம்" (ஆவணம் 10–ii (3).).*

**மருதி** *marudi,* பெ.(n.) சிலப்பதிகாரத்தில் வரும் கதை மகள் (சி.பெ.அக.); a character in the epic silappadhikaram.

**மருதி** *marudi,* பெ.(n.) மருது பார்க்க; see *marudu.*

**மருது** *marudu,* பெ.(n.) மருத மரம்; maruta tree.

வகைகள் : 1. பிள்ளை மருது அல்லது வெண்மருது; 2.கருமருது அல்லது கருப்பு மருது; 3. செம்மருது; 4. பூ மருது; 5. சூலமருது அல்லது பேய்க் கடுக்காய்; 6. குல மருது; 7. நீர் மருது; 8. வெள்ளை மருது;9. ஆற்று மருது அல்லது மருதை; 10. கலி மருது; 11. வடமருது; 12. புலவை மருது; 13. அட மருது.

**மருதுமேற்புல்லுருவி** *marudumēṟ-pulluruvi,* பெ.(n.) ஒருவகைச் செடி; a parasitic plant growing on marudu.

*[மருதுமேல் + புல்லுருவி.]*

**மருதூணி** *marutūṇi,* பெ.(n.) மருதோன்றி பார்க்க; see *maru-tōṉṟi.*

*[மருதோன்றி→மருதாணி→மருதூணி (கொ.வ.).]*

**மருதை** *marudai,* பெ.(n.) ஆற்று மருது; a kind of marudu tree on bank of the river.

'இதனின்று வடித்தெடுக்கப்படும் நீர்மம் குருதியழுத்த நோய்க்கு மருந்தாய்ப் பயன்படும்'.

**மருதோன்றி** *marutōṉṟi,* பெ.(n.) 1. செடி வகை; henna, 1 sh. Lawsonia alba. *"துறைச் சினறுவிரன் மருதோன்றி".* 2. முள்ளி; nail dye.

*[முல்→மல்→மர்→மரு = கலக்கும் நறுமணம். மரு + தோன்றி.]*

**மருந்தம்** *marundam,* பெ.(n.) நஞ்சு; poison.

*[மருந்து→மருந்தம் = மருந்தாகப் பயன்படும் நஞ்சு (வே.க.4:41)..]*

**மருந்தனபானம்** *marundaṉu-pāṉam,* பெ.(n.) மருந்துடன் பருகுவது; that which is taken along with the medicine, such as honey sugar, ghee, butter etc. (சா.அக.).

**மருந்தாண்டர்** *marundāṇḍar,* பெ.(n.) திருவான்மியூர் இறைவன் பெயர்; God name of *Tiruvāṉmiyūr. "திருவான்மியூருடையார் மருந்தாண்டாற்கு வைத்த திருநந்தா விளக்கு...." (செ.மா.கல்.–1967/137).*

**மருந்திடல்** *maruntiḍal,* பெ.(n.) 1. வயப்படுத்தும் மருந்து கொடுக்கை; administering a philter or love-podian. 2. கருவுற்றுள்ள பெண்ணுக்கு ஐந்தாம் மாதத்தில் ஐந்து பச்சிலைகளின் சாற்றை நாத்தூணார் பிழிந்து கொடுக்கும் சடங்கு; ceremony on an auspicious day in the fifth month of pregnancy, when the sister-in-law of the

pregnant woman extacts juice from the leaves of five plants and gives it to her to drink.

*[மருந்து + இடல்]*

மருந்திடுகள்ளி *maruntiḍu-kaḷḷi,* பெ.(n.) வசிய மருந்திடுபவள் (வின்.); intriguing woman who uses philters.

*[மருந்திடு + கள்ளி.]*

மருந்திடுபித்தம் *maruntiḍu-pittam,* பெ.(n.) இடு மருந்தாலேற்படும் பித்த நோய்; a disease created by iḍu-marundu.

*[மருந்திடு + பித்தம்.]*

மருந்திழை—த்தல் *maruntiḻai-,*4 செ.கு.வி. (v.i.) மருந்து உரைத்தல்; mixing or rubbing pills or medicine with the vehicle.

*[மருந்து + இழை—.]*

மருந்திற்காதி *marundiṟ-kādi,* பெ.(n.) வில்வம்; bale tree.

மருந்தின்வீறு *marundiṉ-vīṟu,* பெ.(n.) மருந்தின் வேகம்; the virulence or severity of medicine.

*[மருத்து + இன் + வீறு.]*

மருந்தின்வேகம் *marundiṉ-vēgam,* பெ.(n.) மருந்தினாலேற்பட்ட அழற்சி; irritation caused by the virulence of medicine.

*[மருந்து + இன் + வேகம்.]*

மருந்தீடு *marundīḍu,* பெ.(n.) மருத்தீடு (யாழ்.அக.) பார்க்க; see *maru-t-tīḍu.*

*[மருத்து + இடு→ ஈடு. மருந்திடு→ மருந்தீடு.]*

மருந்தீடுகள்ளி *maruntīḍu-kaḷḷi,* பெ.(n.) மருந்திடுகள்ளி பார்க்க; see *maruntiḍu-kaḷḷi.*

*[மருந்திடுகள்ளி → மருந்தீடுகள்ளி.]*

மருந்தீடுபித்தம் *maruntīḍu-pittam,* பெ.(n.) மருந்தீட்டினா லுண்டாகும் அடிவயிற்று வலி, தூக்கமின்மை; sleeplessness and pain in the lower abdomen caused by *maruntīḍu.*

மருந்து[1] *marundu,* பெ.(n.) 1. நோய் தீர்க்கும் பொருள் (குறள், அதி.95); medicine. *"ஆசை நோய்க்கு மருந்துமுண்டாங் கொலோ" (கம்பரா. மிதிலைக்.80). "விருந்தின் தீநீர் மருந்தும் ஆகும்" (நற்.53:8).* 2. மாற்று; remedy. *"மருந்தின்று மன்னவன் சீறில்" (கலித்.89).* 3. வயப்படுத்தும் மருந்து; philter, love-potion. 4. அமுதம்; nectar, ambrosia. *"கடல் கலக்கி மருந்து கைக்கொண்டு" (கல்லா.41, 26).* 5. சோறு; boiled rice. *"இருமருந்து விளைக்கு நன்னாட்டுப் பொருநன்" (புறநா.70).* 6. குடிநீர் (புறநா.70); drinking water. 7. இனிமை; sweetness. *"மருந் தோவா நெஞ்சிற்கு" (கலித்.81).* 8. வெடிமருந்து; gun powder. 9. முள்ளுக் கடம்பு; holly leaved berberry. 10. புதற்புல் என்னும் புல்வகை (அக.நி.); a kind of grass.

ம. மருன்னு; தெ. மந்து; க. மர்து.

*[முல்→மல்→மர்→மரு. மருவுதல் = கலந்திருத்தல், தழுவுதல். மரு→மருகு = தவனம் என்னுஞ் செடி. மரு→மருந்து (வே.க. 4:41). மருந்து = நோய் தீர்க்கும் பொருள். மருந்தாகும் வேரும் தழையும் பெரும்பாலும் மணம் மிக்கிருப்பதால் நோய் நீக்கும் பொருள் மருந்தெனப்பட்டது).]*

மருத்துவ வேரும் தழையும் அவற்றால் செய்யப்பட்ட கலவைகளும் பொதுவாகச் சிறப்பான நறுமண முடைமையால் மருந்து எனப்பெயர் பெற்றன. மரு என்பது நன்மணம். மருக்கொழுந்து என்னும் உலக வழக்கையும், "மருவார் கொன்றை" (தேவா. 530:1) என்னும் செய்யுள் வழக்கையும் நோக்குக.

மரு – மருந்து. சிறந்த மருந்துத் தழைகள் எல்லாம் மலைகளில் இருப்பதாலும், மலைகளில் வாழும் சித்தரே அவற்றைப் பற்றிய அறிவில் தேர்ச்சி பெற்றிருந்ததாலும், தமிழக மருத்துவ அகரமுதலி மலையகராதி என்றும் தமிழ மருத்துவம் சித்த மருத்துவம் என்றும் பெயர் பெற்றன (தி.ம.அதி.95).

**மருந்து²** *marundu,* பெ.(n.) உடம்பின் இயக்கத்திற்காக வேண்டிய உதவியைத் தரவும் நோயைக் கண்டித்தும் அல்லது வலுவைக் குறைத்தும் பழைய நிலைக்காவது அல்லது முன்னைவிட வலுவுண்டாகவாவது செய்யும் பொருள்; a substance that helps to alleviate or erradicate the disease, gives strength to the body and normalizes the function of the body.

வகைகள் : 1. அடி மருந்து – சவர்க்காரம்; 2. வடி மருந்து – சாறாயம்; 3. குடி மருந்து – கஞ்சா; 4. இடி மருந்து – வெடியுப்பு.

**மருந்துஏறு-தல்** *marundu-ēṟu-,*5 செ.கு.வி. (v.i.) மருந்தை உடம்பு ஏற்றுக் கொள்ளுதல்; accept the medicine.

*[மருந்து + ஏறு-,.]*

**மருந்துக்கடை** *marundu-k-kaḍai,* பெ.(n.) மருந்து விற்குமிடம்; chemist's shop, shop where medicinal drugs are sold.

*[மருந்து + கடை.]*

**மருந்துக்கலப்பு** *marundu-k-kalappu,* பெ. (n.) பல மருந்து சேர்க்கை; mixture.

*[மருந்து + கலப்பு.]*

**மருந்துக்கள்ளி** *marundu-k-kaḷḷi,* பெ.(n.) ஆடவரை வயப்படுத்துவதற்காக மருந்திடும் பெண்; an intriguing woman using philters for men.

மறுவ. மருந்திடுகள்ளி

*[மருந்து + கள்ளி. கள்ளன் (ஆ.பா.) → கள்ளி (பெ.பா.).]*

**மருந்துக்கிசைந்தஉணவு** *marundu-k-kišainda-uṇavu,* பெ.(n.) மருத்துவ முறை உணவு (பத்திய உணவு); prescribed diet for a patient.

*[மருந்துக்கிசைந்த + உணவு.]*

**மருந்துக்குணம்** *marundu-k-kuṇam,* பெ. (n.) மருந்தின் தன்மை; the therapeutic effect of medicine, quality or effect of medicine.

*[மருந்து + குணம்.]*

**மருந்துக்குக்கூட** *marundukku-k-kūḍa,* வி.எ.(adv.) கொஞ்சமும்; even a little. *"மருந்துக்குக்கூட அவன் உண்மை பேசுவானில்லை" (உ.வ.).*

*[மருந்துக்கு + கூட.]*

மருந்து என்பது மிகக் குறைந்த அளவிலேயே கொடுக்கப்பெற்று பல பெரும் நோய்களைத் தீர்க்கவல்லது. குறைவான அளவு என்பதை 'மருந்துக்குக் கூட' என்ற சொல்லினைக் குறிக்கிறது.

**மருந்துக்கும்** *marundukkum,* பெ.(n.) மருந்துக்குக்கூட பார்க்க; see *marundukku-k-kūḍa.* *"மருந்துக்கு மெய்ம்மொழி புகன்றிடேன்" (தாயு. ஆனந்தமான.9).*

*[மருந்துக்குக்கூட → மருந்துக்கும்.]*

**மருந்துக்கூட்டு** *marundu-k-kūṭṭu,* பெ.(n.) மருந்துச் சரக்குகளின் சேர்க்கை (M.L.); medicinal preparation.

*[மருந்து + கூட்டு.]*

**மருந்துக்கும்கூட** *marundukkum-kūḍa,* வி.எ.(adv.) மிகச்சிறிய அளவிற்கும் கூட (இல்லாத நிலை); even little amount.

**மருந்துகாட்டம்** *marundu-kāṭṭam,* பெ.(n.) மருந்தின் செயற்பாடு; severity of medicine.

*[மருந்து + காட்டம்.]*

**மருந்துகூட்டு-தல்** *marundu-kūṭṭu-,* 5 செ.குன்றாவி.(v.t.) மருந்து கலத்தல்; dispensing.

*[மருந்து + கூட்டு-.]*

**மருந்துகூட்டுவோன்** *marundu-kūṭṭuvōṉ,* பெ.(n.) மருந்து கலப்போன்; compounder - dispensing chemist.

*[மருந்து + கூட்டுவோன்.]*

**மருந்துகொள்(ளு)-தல்** *marundu-koḷ-(ḷu)-,* 13 செ.குன்றாவி.(v.t.) மருந்துண்ணல்; to take medicine.

*[மருந்து + கொள்(ளு)-.]*

**மருந்துகொடு-த்தல்** *marundu-koḍu-,* 4 செ.குன்றாவி.(v.t.) மருந்து செலுத்துதல்; to administer medicine.

*[மருந்து + கொடு-.]*

**மருந்துகொடுப்போன்** *marundu-koḍup pōṉ,* பெ.(n.) மருத்துவன்; medical practitioner.

*[மருந்து + கொடுப்போன்.]*

**மருந்துச்சத்து** *marundu-c-cattu,* பெ.(n.) மருந்தின் சாறம்; essence of medicine the active principle of a drug or medicine.

*[மருந்து + சத்து.]*

**மருந்துச்சரக்கு** *marundu-c-carakku,* பெ.(n.) மருந்து செய்ய உதவும் பண்டம் (வின்.); drug.

*[மருந்து + சரக்கு.]*

**மருந்துச்சாலை** *marundu-c-cālai,* பெ.(n.) 1. மருந்துக்கடை பார்க்க; see *marundu-k-kaḍai.* 2. வெடிமருந்துக் கிடங்கு; gun-powder magazine.

*[மருந்து + சாலை.]*

**மருந்துச்சிலை** *marundu-c-cilai,* பெ.(n.) அஞ்சனக்கல்; sulphuret of antimony.

*[மருந்து + சிலை. சிலை = கல்.]*

**மருந்துச்சீலை** *marundu-c-cīlai,* பெ.(n.) காரச்சீலை; lint.

*[மருந்து + சீலை.]*

**மருந்துச்சூடு** *marundu-c-cūḍu,* பெ.(n.) மருந்தின் வேகத்தினால் உடம்பு அடையும் வெப்பம்; body becoming hot due to virulity of the medicine taken internally.

*[மருந்து + சூடு.]*

**மருந்துசெய்-தல்** *marundu-cey,* 1 செ. குன்றாவி.(v.t.) மருந்து உருவாக்குதல்; preparation of medicine.

*[மருந்து + செய்-.]*

**மருந்துசெய்வோன்** *marundu-ceyvōṉ,* பெ.(n.) மருந்தைக் கலந்து கொடுப்பவன்; compounder.

*[மருந்து + செய்வோன்.]*

**மருந்துசேர்-த்தல்** *marundu-cēr,* 4 செ.குன்றாவி. (v.t.) மருந்துகல-த்தல் பார்க்க; see *marundu-kala-.*

*[மருந்து + சேர்-.]*

**மருந்துசேர்வை** *marundu-cērvai,* பெ.(n.) 1. கலப்பு மருந்து; mixture. 2. சீலை மருந்து; plaster.

*[மருந்து + சேர்வை.]*

**மருந்துண்டவாய்க்கிரை** *marunduṇḍa-vāykkirai,* பெ.(n.) மருந்து சாப்பிட்டவுடன் மருந்தின் சுவையை மாற்றுவதற்காக, மருந்தின் தன்மையைக் கெடுக்காதபடி உட்கொள்ளும் மாற்றுப் பொருள்; substance later taking medicine so that the medicines bad taste may disappear.

*[மருந்துண்டவாய்க்கு + இரை.]*

அவை : கொட்டைப் பாக்குச் சீவல், தேன், திராட்சை, வெற்றிலைக் காம்பு, கிராம்பு, பச்சைக் கருப்பூரத் தூள் முதலியன.

**மருந்துண்பான்** *marunduṇbāṉ,* பெ.(n.) நோயாளன்; patient.

*[மருந்து + உண்பான்.]*

**மருந்துணைச்சாதி** *marunduṇai-c-cādi,* பெ.(n.) மருந்து; medicine.

**மருந்துதக்கு-தல்** *marundu-takku-,* 5 செ.குன்றாவி.(v.t.) கக்கலிக்காமல் மருந்தைச் செரித்துக் கொள்ளுதல்; to contain or retain medicine in the stomach without vomiting.

*[மருந்து + தக்கு-.]*

**மருந்துதாக்கு-தல்** *marundu-tākku-,* 5 செ.குன்றாவி.(v.t.) மருந்தை மேன்மேலும் பயன்படுத்துதல்; to administer too many medicines, to stuff the body with medicine.

*[மருந்து + தாக்கு-.]*

**மருந்துநியமம்** *marundu-niyamam,* பெ.(n.) நோய்க்கேற்ற மருந்தின் குறிப்பு; prescription.

*[மருந்து + நியமம்.]*

**மருந்துநீர்** *marundu-nīr,* பெ.(n.) மருந்து கலந்த நீர்; medicated water, lotion.

*[மருந்து + நீர்.]*

**மருந்துநெடி** *marundu-neḍi,* பெ.(n.) மருந்தின் நாற்றம்; the smell or strong odour of the medicine.

*[மருந்து + நெடி.]*

**மருந்துப்புரை** *marundu-p-purai,* பெ.(n.) மருந்துச்சாலை, 2 (நாஞ்.) பார்க்க; see *marundu-c-cālai.*

*[மருந்து + புரை.]*

மருந்துப்பொடி *marundu-p-podi,* பெ.(n.) மருந்துத்தூள்; medicinal powder.

*[மருந்து + பொடி.]*

மருந்துப்போக்கு *marundu-p-pōkku,* பெ.(n.) மருந்து செயற்படும் வகை; the way of medicine acts.

*[மருந்து + போக்கு.]*

மருந்துப்போதை *marundu-p-pōdai,* பெ.(n.) கஞ்சா, அபினியாலுண்டாகும் மயக்கம்; intoxication through ganja, opium, aristans and asauams.

*[மருந்து + **Skt.** போதை.]*

மருந்துப்போதைப்பழக்கம் *marundu-p-pōdai-p-palakkam,* பெ.(n.) போதை தரும் மருந்துக்கு அடிமையாகுகை; drug adict.

*[மருந்து + **Skt.** போதை + பழக்கம்.]*

மருந்துபாய்ச்சு-தல் *marundu-pāiccu-,* 5 செ.குன்றாவி.(v.t.) மருந்தை உடம்பில் ஊசி மூலம் ஏற்றுதல்; injecting the medicine.

*[மருந்து + பாய்ச்சு-.]*

மருந்துபிடி-த்தல் *marundu-pidi,* 4 செ.குன்றாவி.(v.t.) மருந்தை உடம்பு ஏற்றுக் கொள்ளுதல்; individual susceptibility to the action of a particular drug.

*[மருந்து + பிடி-,]*

மருந்துபூசு-தல் *marundu-pūsu,* 5 செ.குன்றாவி.(v.t.) மருந்தை மேலுக்குப் பூசுதல்; to smear or anoit medicine.

*[மருந்து + பூசு-.]*

மருந்துபொடி-த்தல் *marundu-podi-,* 4 செ.குன்றாவி.(v.t.) மருந்தைத் தூளாக்குதல்; to powder the medicine.

*[மருந்து + பொடி-.]*

மருந்துபோடு-தல் *marundu-pōdu,* 19 செ.குன்றாவி.(v.t.) 1. மருந்துவை- பார்க்க; see *marundu-vai-.* 2. பூச்சு மருந்து தடவுதல்; to apply medicine externally.

*[மருந்து + போடு-,]*

மருந்துரம் *marunduram,* பெ.(n.) மருந்தின் ஊட்டம்; essence or power of the medicine.

*[மருந்து + உரம்.]*

மருந்துருண்டை *marundurundai,* பெ.(n.) 1. கல்பம்; bolus. 2. மாத்திரை; pill.

*[மருந்து + உருண்டை.]*

மருந்துவை-த்தல் *marundu-vai-,* 4 செ.குன்றாவி.(v.t.) வயப்படுத்தும் மருந்திடுதல் (இ.வ.); to administer philter or love - potion

*[மருந்து + வை-,]*

மருந்துறை *marundurai,* பெ.(n.) வெகுட்டல் மருந்துகளை எளிதில் விழுங்குவதற்காகப் பயன்படுத்தும் மூடிய குழாய்போல் செய்த உறை; a soluble case for enclosing certain bitter and nauseous medicines.

*[மருந்து + உறை.]*

**மருந்தெண்ணெய்** *marundeṇṇey,* பெ.(n.) மருந்துச் சரக்குகள் கூட்டிக் காய்ச்சிய நெய்மம்; medicinal oil. *"குழவியீன்றவட் கருமருந் தெண்ணெயுங் கொடுத்து" (செவ்வந்தி. பு. தாயான.37).*

*[மருந்து + எண்ணெய்.]*

**மருந்தெண்ணெய்ப்பதம்** *marundeṇṇey-p-padam,* பெ.(n.) 1. மருந்தெண்ணெய் காய்ச்சும் போது அமையும் குழம்புப் பதம், கடுகுப்பதம், மந்தப் பதம், மெழுகுப் பதம், முறுகுப் பதம் என்ற ஐவகைப் பக்குவநிலை (வின்.); stage in boiling a medicinal oil when it is to be taken off the fire, of five kinds, viz., *kuḻambu-p-padam, kaḍugu-p-padam, manda-padam, meḻugu-p-padam, muṟugu-padam.* 2. நோய் எளிதில் பற்றக் கூடிய பலவீனமான உடல்நிலை; delicate health rendering a person liable to disease at the least exposure. 3. முன்கோபம்; excessive irritability of temper, extreme sensibility.

*[மருந்தெண்ணெய் + பதம்.]*

**மருந்தெரி-த்தல்** *marunderi-,* 4 செ. குன்றாவி.(v.t.) புடமிடல்; calcining.

*[மருந்து + எரி-.]*

**மருந்தெழுது-தல்** *marundeḻudu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கண்ணில் மருந்து தீட்டல்; application of medicine such as collyrium to the eye with a copper, silver or glass rod. 2. அக்கி காணில் செம்மண் பூசுதல்; application of red-ochre in erysepelas.

*[மருந்து + எழுது-.]*

**மருநாதிப்பூடு** *marunādi-p-pūḍu,* பெ.(n.) சிறியாணங்கை; a plant.

**மருநிலம்** *maru-nilam,* பெ.(n.) நீரும் நிழலுமற்ற நிலம்; wilderness, sandy waste, desert. *"மலையு மறிகடலும் வனமும் மருநிலமும்" (கம்பரா.மூலபல.158).*

*[மரு + நிலம். முல் →மல்→ மர்→ மரு. மருவுதல் = கலத்தல்]*

**மருப்பவம்** *maruppavam,* பெ.(n.) ஒட்டொட்டிப் புல்; a kind of grass which sticks to the clothes.

**மருப்பறுகு** *maruppaṟugu,* பெ.(n.) கருப்பறுகு; black variety of dub grass.

**மருப்பு** *maruppu,* பெ.(n.) 1. விலங்கின் கொம்பு; horn of a beast. *"கொல்லேற்றின் மருப்புப் போன்றன" (புறநா.4.).* 2. யானைக் கொம்பு (பிங்.); elephant's tusk. *"அசனிவேக மதன் மருப்பூசியாக...... எழுதுவித்திடுவல்" (சீவக. 1121).* 3. யாழினுறுப்பு வகை; part of a lute. *"நல்லியாழ் மருப்பின்" (புறநா.242).* 4. மரக்கொம்பு (யாழ்.அக.); branch of a tree. 5. பிறை நிலவின் இருகோடு (இ.வ.); horns of crescent moon. 6. இஞ்சி (அரு.நி.); ginger.

**மருப்புத்தாடி** *maruppu-t-tāḍi,* பெ.(n.) யானைத் தந்தத்தால் செய்த விரற்கவசம்; ivory covering for the fingers, ivory gloves. *"புனைகதிர் மருப்புத்தாடி மோதிரஞ் செறித்து" (சீவக.2279).*

*[மருப்பு + தாடி.]

மருப்புத்திரன் *maruppputtiran,* பெ.(n.) மருச்சுதன் (யாழ்.அக.) பார்க்க; see *maru-c-cudan.*

மருபுகா *marupugā,* பெ.(n.) வாழை வகை (மலை.); a kind of plantain.

மருபூருகம் *maru-pūrugam,* பெ.(n.) 1. குழலா தொண்டை; common caper. 2. அலரி (இலக்.அக.); oleander.

மருமக்கட்டாயம் *maruma-k-kaṭṭāyam,* பெ.(n.) ஒருவனுடைய செல்வம் அவனுக்குப் பிறகு அவனுடைய மக்களுக்கு உரிமை யாகாது, மருமக்களுக்கு உரிமையாகும் என்பது மலையாள நாட்டின் வழக்கு (சி.பெ.அக.); a tradition of Kerala, where one's wealth is inherited by his son in law that sisters son, instead of his son.

*[மருமக்கள் + தாயம் – மருமக்கட்டாயம்.]*

மருமக்கள் *marumakkaḷ,* பெ.(n.) 1. தமக்குப் பிறந்தவர்களை மணம் புரிந்தவர்கள்; son in law or daughter in law. 2. ஒருவனுடைய உடன்பிறந்தாளின் மக்கள் அல்லது ஒருத்தியின் உடன் பிறந்தானின் மக்கள்; sister's children of a man or brother's children of a woman. *"மக்களே பெண்டிர் மருமக்கடாய் தந்தை" (அறநெறிச். 207).*

*[முல் →மல் →மர் →மரு = மணமக்கள் பெண் வீட்டில் முதன்முறையாகக் கலந்துண்ணும் விருந்து. மரு + மகன் – மருமகன் (ஒருமை) →மருமக்கள் (பன்மை).]*

மருமகப்பிள்ளை *marumaga-p-piḷḷai,* பெ.(n.) மருமகன் (C.G.)பார்க்க; see *marumagan.*

*[மருமகன் →மருமகப்பிள்ளை.]*

மருமகள் *marumagaḷ,* பெ.(n.) 1. தம் மகனைத் திருமணம் செய்து கொண்டவள்; daughter in law. 2. ஒருவனுடைய உடன் பிறந்தாளின் மகள் அல்லது ஒருத்தியின் உடன் பிறந்தானின் மகள்; a man's sister's daughter or a woman's brother's daughter.

*[மருமகன் (ஆ.பா.) →மருமகள் (பெ.பா.).]*

மருமகன் *marumagan,* பெ.(n.) 1. மகன் போலப் பொருந்தும் மகளின் கணவன்; son-in-law. *"மலைக்கு மருகனைப் பாடி" (திருவாச.9, 6).* 2. ஒருவனுடைய உடன் பிறந்தாள் மகன் அல்லது ஒருத்தியின் உடன் பிறந்தான் மகன்; a man's sister's son or a woman's brother's son. *"வானவரைப் பணி கொண்ட மருகாவோ" (கம்பரா. சூர்ப்பண.111).* 3. வழித் தோன்றல்; descendant, scion, member of a clan. *"சேரலர் மருக" (பதிற்றுப்.63, 16).*

மருமதாரை *maruma-tārai,* பெ.(n.) மருமம், 1, 2 பார்க்க; see *marumam. "மருமதாரையி னெரியுண்ட மகரங்கள்" (கம்பரா. வருணனைவழி.21).*

*[மருமம் →மருமதாரை.]*

மருமம் *marumam,* பெ.(n.) 1. உயிர் நாடியான உறுப்பு, உயிர்நிலை; vital part, as of the body. *"எங்குமருமத் திடைக்குளிப்ப" (பு.வெ.7, 23).* 2. தழுவும் மார்பு; chest. *"மருமத்தி னெறிவேல்" (கம்பரா.கையடை.11).* 3. முலை; breast. 4. விதைப்பை (அண்டகோசம்) (வின்.); testes. 5. மறை பொருள் (இரகசியம்) (சங்.அக.); secret. 6. உடம்பு; body. *"மந்தரவலியின் மருமம்" (ஞானா.59, 20).*

*[முல் →மல் →மர் →மரு →மருமம் (வே.க. 4:39).]*

மருமா *marumā*, பெ.(n.) மகளிர் கொண்டை வகை (வின்.); a mode of doing up women's hair.

மருமாட்டி *marumāṭṭi*, பெ.(n.) 1. வழித் தோன்றியவள்; female descendant. *"கலைமதிமருமாட்டி" (திருவிளை. திருமணப். 62).* 2. மருமகள் (நிகண்டு) பார்க்க see *marumagaḷ*.

*[மருமகன் = வழித்தோன்றல். மருமகன் → மருமாட்டி.]*

மருமாதிக்கொழுந்து *marumādi-k-koḻundu*, பெ.(n.) நிலத்துளசி; a plant.

மருமாப்போடு-தல் *marumā-p-pōḍu-*, 19 செ.குன்றாவி.(v.t.) மருமாக்கொண்டை முடித்தல் (வின்.); to dress the hair in a particular mode.

*[மருமா + போடு-.]*

மருமாதுளை *marumādulai*, பெ.(n.) கொடி மாதுளை; a creeper of cirton variety (சா.அக.).

மருமாலிகை *maru-māligai*, பெ.(n.) மான் மணத்தி (கஸ்தூரி); musk (சா.அக.).

மருமான் *maru-māṉ*, பெ.(n.) மருமகன் பார்க்க; see *marumagaṉ*.

*[மருமகன்→மருமான்.]*

மருமூச்சு *maru-mūccu*, பெ.(n.) திருமணமாகி முதலிரவுக்குப் பின் மணமகள் பிறந்தகத்துக்குப் போகுஞ் சடங்கு (இ.வ.); ceremony of the bride's returning to her parent's house after nuptials (brāh).

*[மரு + மூச்சு.]*

மருவகங்காபாத்திரம் *maruva-gaṅgā-pāttiram*, பெ.(n.) கழுதை புள்ளி செடி; a plant (சா.அக.).

மருவகத்தி *maruvagatti*, பெ.(n.) தோத கத்தி பார்க்க; see *tōda-katti* (சா.அக.).

மருவகம் *maruvagam*, பெ.(n.) 1. மருக் கொழுந்து (யாழ்.அக.) பார்க்க; see *maru-k-koḻundu*. 2. கடாரநாரத்தை (நாமதீப.283); seville orange. 3. மருக்காரை (மலை.) பார்க்க; see *maru-k-kārai*.

*[மரு → மருவகம்.]*

மருவல் *maruval*, பெ.(n.) அணைத்தல்; embracing.

*[மரு = கலத்தல், தழுவுதல். மரு →மருவல்.]*

மருவலர் *maruvalar*, பெ.(n.) மருவார் பார்க்க; see *maruvār*. *"மருவலர் புரமெரியினின் மடிதர" (தேவா.568, 4).*

*[மருவார் →மருவலர்.]*

மருவலார் *maruvalār*, பெ.(n.) மருவார் பார்க்க; see *maruvār*. *"மருவலார் தம் மதிலெய்ததுவும்" (தேவா.366, 3).*

*[மருவார்→மருவலார்.]*

மருவவலி *maruva-vali*, பெ.(n.) மார்பு நோய்; chest disease.

*[மரு →மருமம் = மார்பு. மருமம் →மருவம் (திரிபு). மருவம் + வலி.]*

மருவழை-த்தல் *maruvaḻai-*, 4 செ.குன்றாவி. (v.t.) மணமாகி முதலிரவுக்குப் பின் மணமக்களைப் பெண் வீட்டுக்கழைத்தல்; to

invite the married couple from the bridegroom's house to the bride's, soon after their nuptials.

*[மரு + அழை–. மரு = மணமக்கள் பெண்வீட்டில் முதன் முறையாகக் கலந்துண்ணும் விருந்து.]*

மருவள்ளி *maruvaḷḷi,* பெ.(n.) வெற்றிலை வள்ளிக்கொடி; a creeper.

*[மரு + வள்ளி. மரு = மணம்.]*

மருவளி *maruvaḷi,* பெ.(n.) பாலை மரம்; palai tree (சா.அக.).

மருவார் *maruvār,* பெ.(n.) பகைவர்; enemies as disunited. *"மருவார்.... மூன்றுபுர மெய்தவில்லி" (தேவா.37, 11).*

மருவாரி *maruvāri,* பெ.(n.) பாலை (மலை.); silvery - leaved ape-flower.

மருவாலிகம் *maruvāligam,* பெ.(n.) பிரண்டை; a climber.

மருவாளி *maru-vāḷi,* பெ.(n.) 1. பச்சைக் கருப்பூரம் (மூ.அ.); refined camphor. 2. வைப்புச்சூடன் வகை (இ.வ.); a preparation of camphor.

*[மரு = ஒன்றிலிருந்து இன்னொன்றோடு கலக்கும் மணம். மரு →மருவாளி.]*

மருவிதழ் *maruvidaḻ,* பெ.(n.) பூவிதழ் (அரு.நி.); petal.

*[மரு + இதழ்.]*

மருவியகாந்தி *maruviya-gāndi,* பெ.(n.) பூனைக்கண்மணி (யாழ்.அக.); cat-eye.

மருவீட்டுச்சடங்கு *maru-vīṭṭu-c-caḍaṅgu,* பெ.(n.) திருமணத்திற்குப்பின் மணமக்களைப் பெண்வீடு அல்லது பிள்ளை வீட்டுக்கு அழைத்துச் செல்லும் சடங்கு; ceremony of inviting the married couple to the bridegroom's or bride's house, as the case may be, soon after the marriage.

*[மருவீடு + சடங்கு.]*

மருவீடு *maruvīḍu,* பெ.(n.) மருவீட்டுச் சடங்கு (இ.வ.) பார்க்க; see *maru-vīṭṭu-c-caḍaṅgu.*

*[மரு + வீடு.]*

மருவு¹–தல் *maruvu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. கலந்திருத்தல்; to combine, join together,. to be united together in affection. *"மருவார் சாயல்" (சீவக.725).* 2. வழக்கப்படுதல்; to arise or be evolved, as a custom. *"மரீஇய பண்பே" (தொல்.பொருள்.308).* 3. தோன்றுதல்; to appear. *"இச்சாஞானக் காரியம் காயம் பெற்றான் மருவிடும்" (சி.சி.2, 83).*

*[முல்→ மல்→ மர்→ மரு→ மருவு.]*

மருவு²–தல் *maruvu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கிட்டுதல் (சூடா.); to come near, to approach. 2. தழுவுதல்; to embrace, to adopt, accept, follow. *"மருவுமின் மாண்டா ரறம்" (நாலடி, 36).* 3. பயிலுதல்; to become accustomed to. *"பாத்தூண் மரீஇ யவனை" (குறள், 227).* 4. புணர்தல்; to have sexual inter-course with. *"வெம்புலைமாதர்... மருவும் வேட்கையான்" (பிரமோத்.4, 5).* 5. ஊழ்கித்தல் (தியானித்தல்); to meditate upon. *"கழல்களை மருவாதவர்மேல் மன்னும்*

*பாவமே" (தேவா.501, 1).* 6. பதித்தல்; to encase, set, as a gem. *"கல்லை மருவிவைத்திருக்கிறது" (உ.வ.).*

*[முல்→ மல்→ மர்→மரு→மருவு.]*

மருவு³ *maruvu,*பெ.(n.) 1. மருவுகை; combining, following, embracing. *"மருவினிய மறைப் பொருளை" (தேவா.1072, 6).* 2. மரு¹, 1, 2, 4 (வின்.)பார்க்க; see *maru.* 3. மரு¹, 3 (இ.வ.) பார்க்க; see *maru.*

*[மரு → மருவு.]*

மருவு⁴ *maruvu,*பெ.(n.) கண்ணோய் வகை; an eye disease marked by redness of the eye and watering.

மருவு⁵ *maruvu,*பெ.(n.) பெண்வீட்டில் மணமக்கள் கலந்துண்ணும் முதல் விருந்து; the first feast to a couple in bride's house.

*[மரு → மருவு.]*

மருவுகா *maruvugā-,*பெ.(n.) புடலை; snake gourd.

மருவுண்ணுதல் *maruvuṉṉu-,*பெ.(n.) பெண்வீட்டாரால் மாப்பிள்ளை முதன்முறை விருந்தில் பணிவிடை பெறுகை; dining and receiving presents for the first time after marriage, as a bridegroom in the house of his bride's parents.

*[மரு + உண்ணுதல்.]*

மருவூர்ப்பாக்கம் *maruvūr-p-pākkam,* பெ.(n.) காவிரிப்பூம்பட்டினத்தின் ஒரு பகுதி; a part of *kāviri-p-pūmpaṭṭiṉam.* *"மறுவின்றி விளங்கும் மருவூர்ப்பாக்கமும்" (சிலப்.5:39).*

*[மருவூர் + பாக்கம்.]*

மருவேம்பு *maruvēmbu,*பெ.(n.) கறிவேம்பு; curry leaves tree.

மருள்¹(ளு)–தல் *maruḷ(ḷu)-,*2 செ.கு.வி.(v.i.) 1. மயங்குதல்; to be confused, bewildered, deluded. *"பதிமருண்டு பைதல் உழக்கும் மதிமருண்டு மாலை படர்தரும் போழ்து" (குறள், 1229).* 2. வெருவுதல்; to be afraid, to be timid. *"சிறார் மன்று மருண்டு நோக்கி" (புறநா.46).* 3. வியத்தல்; to wonder. *"இவ்வேழுலகு மருள" (பரிபா.5:35).* 4. ஒப்பாதல்; to be similar. *"அணைமரு ளின்றுயில்" (கலித்.14).*

க. மருள்

*[முல்→மல்→மர்→மரு→மருள்.]*

மருள்² *maruḷ,*பெ.(n.) 1. மயக்கம் (பிங்.); bewilderment of mind, confusion. *"வெருவுறு மருளின்" (சீவக.2290), "இருள் நீங்கி இன்பம் பயக்கும் மருள் நீங்கி மாசறு காட்சி யவர்க்கு" (குறள், 352).* 2. திரிபுணர்ச்சி; ignorance of right and wrong, mistaking one for another, delusion, illusion. *"மருடீர்ந்த மாசறு காட்சியவர்" (குறள், 199).* 3. வியப்பு; wonder. *"மருள்பரந்த வெண்ணிலவு" (திணைமாலை. 96).* 4. உன் மத்தம் (யாழ்.அக.); intoxication, madness. 5. கள் (யாழ்.அக.); toddy. 6. குறிஞ்சியாழ்த் திறம் எட்டனுள் ஒன்று (பிங்.); (Mus.) a secondary melody-type of the *kuriñci* class, one of eight *kuriñci-yāḻ-t-tiram* (q.v.). 7. மருளிந்தளம் பார்க்க; see *maruḷ-intaḷam.* *"மாலின் வரவு சொல்லி மருள் பாடுதல்" (திவ்.நாய்ச்.9, 8).* 8. எச்சம் எட்டனுள் பிறவி முதல் அறிவின்றி

மயங்கியிருக்கும் நிலை; congenital idiocy, one of eight kinds of eccam (q.v.). *"மாவும் மருளும்" (புறநா.28).* 9. பெருங் குரும்பை (மலை.); bowstring hemp. 10. புதர் (பிங்.); bush. 11. பேய் (பிங்.); imp, devil. 12. மருள் உட்புகல் (ஆவேசம்) (இ.வ.); possession, as by a spirit or deity. 13. புல்லுரு (வின்.); scarecrow.

*[மரு →மருள்.]*

மருள *marul̤a,*பெ.(n.) ஓர் உவமவுருவு; a particle of comparison. *"காய்ப்ப மதிப்பத் தகைய மருள" (தொல்.பொருள்.286).*

மருளங்கிழங்கு *marul̤aṅ-kil̤aṅgu,* பெ.(n.) மருட்கிழங்கு; a kind of root.

மருளல் *marul̤al,*பெ.(n.) 1. எழுத்திலா வோசை (திவா.); inarticulate sound. 2. பேசலா லெழுமொலி (வின்.); murmur of voices. 3. அச்சம்; fear. 4. மயக்கம் (வின்.); infatuation.

*[மரு →மருள் →மருளல்.]*

மருளன் *marul̤aṉ,*பெ.(n.) 1. அறிவு மயக்கமுள்ளவன்; bewildered person. *"பட்டப்பகற்பொழுதை யிருளென்ற மருளர்" (தாயு.கருணாகரக்.4).* 2. தெய்வப் புனைவுற்றவன் (இ.வ.); person under possession of a spirit or diety. 3. மதவெறி பிடித்தவன் (வின்.); fanatic.

*[மருள் →மருளன்.]*

மருளாளி *marul̤āl̤i,*பெ.(n.) 1. பேயாகப் புனைவு கொண்டு குறிசொல்லும் பூசாரி (இ.வ.); priest acting as a medium through whom a deity is supposed to foretell. 2. ஒருசார் சிறு தெய்வங்களை வழிபடுவோன் (இ.வ.); worshipper of certain minor gods. 3. சிற்றூர்த் தெய்வங்களின் அருள் ஏறி ஆடுபவர்கள்; to give or a cular responses while possessed by spirit.

*[மருள் → மருளாளி.]*

மருளி *marul̤i,*பெ.(n.) 1. மருள், 1 பார்க்க; see *marul̤. "மருளிகொண் மடநோக்கம்" (கலித்.14).* 2. அறிவு மயக்கமுள்ளவன்; person in bewilderment. *"மருளிதான் மயங்கி" (யசோதர.2, 42).*

*[மருள் → மருளி.]*

மருளிந்தம் *marul̤indam,*பெ.(n.) மருளிந்த ராகம் (வின்.) பார்க்க; see *marul̤inda-rāgam.*

மருளிந்தராகம் *marul̤inda-rāgam,* பெ.(n.) பண்வகை (வின்.); (Mus.) a melody type.

மருளிந்தளம் *marul̤-indal̤am,*பெ.(n.) பண்வகை (திவா.); (Mus.) a melody - type.

மருளூமத்தை *marul̤ūmattai,*பெ.(n.) ஊமத்தை வகை (பதார்த்த.273); burduck datura, xathium strumarium.

*[மருள் + ஊமத்தை.]*

மரூஉ *marūu,*பெ.(n.) 1. (இலக்.) இயல்பு வழக்கு மூன்றனுள் இலக்கணம் சிதைந்து மருவி வழங்குஞ் சொல் முதலியன (நன்.267); word or phrase in a corrupt or contracted form, sanctioned by usage, one of three *iyalpu-val̤akku.* 2. நட்பு; friendship, intimacy. *"மரூஉச்செய் தியார்மாட்டுந் தங்கு மனத்தார்" (நாலடி, 246).*

*[மர் →மரு →மரூஉ (வே.க.4:40).]*

**மரூஉச்சொல்** *marūu-c-col*, பெ.(n.) மரூஉ, 1 (வின்.) பார்க்க; see *marūu.*

**மரூஉத்தொகை** *marūu-t-togai*, பெ.(n.) முன்பின்னாக வந்த ஆறாம் வேற்றுமைத் தொகை (பி.வி.19); transposition of nouns, in a possessive compound, as *muṉ-tāṉai.*

*[மரூஉ + தொகை.]*

**மரூஉமொழி** *marū-u-moḻi*, பெ.(n.) மரூஉ, 1 பார்க்க; see *mariu.*

*[மரூஉ + மொழி.]*

**மரை**[1] *marai*, பெ.(n.) 1. மான்வகை; sambur, Indian elk. *"எருமையு மரையும்" (தொல். பொருள்.571).* 2. கவயம்; bison, wild cow. *"மானாதல் மரையாதலாம்" (ஈடு.4, 1, 10).* 3. தவளை (திவா.); frog. 4. மணிக்குற்றம் (இ.வ.); a flaw in precious stones. 5. திருகுவகை; nut of a screw. 6. விளக்கின் திரியை ஏற்றவு மிறக்கவும் உதவும் திருகுள்ள காய் (Mod.); burner, in a chimney lamp.

*[மல் →மர்→ மரை.]*

**மரை**[2] *marai*, பெ.(n.) தாமரை; lotus. *"மரையிலையின் மாய்ந்தார் பலர்" (நாலடி, 359).*

**மரைக்காயர்** *marai-k-kāyar*, பெ.(n.) கடல் வாணிகத்தில் ஈடுபட்டவர்கள் குறிப்பாக இசுலாமியர்கள்; muslim, trading in the shiper boat especially. *"பெரிய வகுப்பு அருணாசல பிள்ளையவர்கள் பெரிய தனத்தில் கலுத்தா மரைக்காயர் அருணாசல பிள்ளை கொண்டு" (தஞ்.மரா.செப்.50, 28-9).*

*[மரக்கலராயர்→மரக்காயர்→மரைக்காயர்.]*

மரக்கலம் ஏறி வணிகம் செய்தவர் மரக்கலாயர். இச்சொல் மரக்காயர், மரைக்காயர் என மாறியிருக்கலாம்.

**மரைக்கிட்டி** *marai-k-kiṭṭi*, பெ.(n.) வில் முடுக்கி; (C.E.M.) spanner.

*[மரை + கிட்டி.]*

**மரைக்கிட்டித்தகடு** *marai-k-kiṭṭi-t-tagaḍu*, பெ.(n.) மரைக்கிட்டி பார்க்க; (C.E.M.) see *marai-k-kiṭṭi.*

*[மரைக்கிட்டி + தகடு.]*

**மரைக்குளிரி** *marai-k-kuḷiri*, பெ.(n.) நீர்ச் சேம்பு அல்லது குளிரி; a plant - water archer.

**மரைநீகம்** *marai-nīgam*, பெ.(n.) தவளை (வின்.); frog.

**மரைப்புண்** *marai-p-puṇ*, பெ.(n.) தவளைப் புண், தவளைச் சொறி; toad skin.

**மரையா** *maraiyā*, பெ.(n.) கவயம்; wild-cow. *"மரையா மரல்கவர" (கலித்.6).*

*[மரை + ஆ.]*

**மரையாடு** *marai-y-āḍu*, பெ.(n.) ஆட்டு வகை (இ.வ.); a kind of sheep.

*[மரை + ஆடு.]*

**மரையாணி** *marai-y-āṇi*, பெ.(n.) திருகாணி; (mod.) screw nail.



*[முல்– வளைதற் கருத்து. முல்→முர்→முரு→ மரு →மரை = திருகு வகை. மரை + ஆணி.]*

**மரையான்** *marai-y-āṉ,*பெ.(n.) மரையா பார்க்க; see *marai-y-ā. "மலைத்தலை வந்த மரையான்" (மலைபடு.331).*

*[மரையா →மரையான்.]*

**மல்**[1] *mal,*பெ.(n.) 1. வளம்; fertility, richnes. *"மற்றுன்று மாமலரிட்டு" (திருக்கோ.178).* 2. வருவாய் (சூடா.); income.

*[முல் (பொருந்தற் கருத்து வேர்). முல்→மல். பல அணுக்கள் அல்லது உறுப்புகள் அல்லது பொருள்கள் பொருந்துவதால் (ஒன்று சேர்வதால்) திரட்சி அல்லது பருமை உண்டாகும் (ஒ.நோ.) "சேரே திட்சி" (தொல்.உரி.65). மிகுதியால் வளமும் பருமையும் வலிமையும் உண்டாகும்.]*

**மல்**[2] *mal,*பெ.(n.) 1. வலிமை (பிங்.); strength. 2. மற்றொழில்; wrestling, boxing, as bringing into play one's strength. *"மல்லலைத் தெழுந்து வீங்கி" (சீவக.268).* 3. மல்லன், 1 பார்க்க; see *mallaṉ. "மல்லொடு கஞ்சனுந் துஞ்சவென்ற மணிவண்ணன்" (திவ்.பெரியதி. 11, 2, 3).* 4. கூத்துப்பதினொன்றனுள் கண்ணபிரான் மல்லனாய்ப் பாணாசுரனை வென்றாடிய கூத்துவகை (பிங்.); a dance of Krisha after wrestling with and vanquishing *Bāmāsura*, on of 11 *kūttu*, q.v. 5. பருமை; (j.) robustness, stoutness, corpulence. 6. மல்லுச்சட்டம் பார்க்க (இ.வ.); see *mallu-c-caṭṭam*

**மல்**[3] *mal,*பெ.(n.) 1. களிப்பிரண்டை; a variety of vitis quadrangularis. 2. முந்திரிப் பழம்; cashewnut fruit.3. உப்பு; salt.

**மல்கல்** *malkal,*பெ.(n.) பெருகல்; increasing.

**மல்கா–த்தல்** *malkā-,*12 செ.கு.வி.(v.i.) மல்லா–த்தல் (வின்.) பார்க்க; see *mallā-,*

*[மல்லா–த்தல் →மல்காத்தல்.]*

**மல்காத்து–தல்** *mal-kāṭṭu-,*5 செ. குன்றாவி. (v.t.) 1. கொடி முதலியவற்றைப் படரவிடுதல்; to set of lay, as a vine. 2. மல்லாத்து–தல் பார்க்க; see *mallāttu-,*

*[முல் (பொருந்தற் கருத்து வேர்) மல்→மல்கு. மல்குதல் = அதிகரித்தல், மிகுதல், செழித்தல். மல்கு →மல்கா→மல்லா. மல்லாத்தல் = மலர்ந்தாற்போல் முகம் மேனோக்கிக் கிடத்தல். மல்கா→மல்காத்து (வே.க.4:28)..]*

**மல்கு–தல்** *malgu,* 5 செ.கு.வி.(v.i.) 1. அதிகமாதல்; to increase. *"மணிநிரை மல்கிய மன்று" (பு.வெ.1, 13).* 2. நிறைதல் (திவா.); to be filled with, to abound. *"திசையாவு மல்கின்றே" (சீவக.1607).* 3. செழித்தல்; to grow, flourish. *"உயிரனைத்து மல்க மழைமுகி லானாய்" (தணிகைப்பு.இந்திர.21).*

*[மல் →மல்கு (வே.க.4:28).]*

**மல்லகசட்டி** *mallaga-šāṭṭi,* பெ.(n.) மல்ல செட்டி பார்க்க; see *malla-šeṭṭi.*

**மல்லகசாலை** *mallaga-šālai,* பெ.(n.) மற் போர் பயிலுங் கூடம் (வின்.); gymnasium or place for boxing and for other athletic exercises.

*[மல் →மல்லகம் + சாலை.]*

**மல்லகதி** *malla-gadi,* பெ.(n.) குதிரை யோட்டம் ஐந்தனுள் நான்கு காலையுந் தூக்கியோடும் ஓட்ட வகை (திவா.); galloping pace of a horse, one of five *acuva-kadi* (q.v.).

மல்லகம் *mallagam,* பெ.(n.) வாலுளுவை (மலை.); black - oil tree.

மல்லகை *mallagai,* பெ.(n.) மல்லிகை பார்க்க; see *malligai.*

*[மல்லிகை → மல்லகை.]*

மல்லசம் *mallašam,* பெ.(n.) மிளகு (சங்.அக.); pepper.

மல்லசெட்டி *malla-cetti,* பெ.(n.) மற்போர் புரியும் வகுப்பார் (வின்.); professional wrestlers and gymnasts.

மல்லதேவன் *malla-dēvan,* பெ.(n.) வாணர் குல அரசன் (சி.பெ.அக.); a king of the Bana race.

*[மல் →மல்லன் + தேவன்.]*

மல்லம்[1] *mallam,* பெ.(n.) 1. மற்போர் (வின்.); wrestling, boxing. 2. வலிமை (வின்.); strength. 3. மல்லகதி (சூடா.) பார்க்க; see *mallagadi.* 4. கிண்ணம் (வின்.); cup, porringer. 5. அகன்ற தட்டம் (அக.நி.); plate. 6. கதுப்பு (யாழ்.அக.); cheek. 7. யாகசேடம் (யாழ்.அக.); remnant of oblation.

*[மல் →மல்லம் (வே.க.4:29).]*

மல்லம்[2] *mallam,* பெ.(n.) பள்ளியறை; bed-chamber. *"மயன்விதி யன்ன மணிக்காழ் மல்லத்து" (பெருங்.உஞ்சைக்.33, 103).*

மல்லமார்க்கம் *malla-mārkkam,* பெ.(n.) மல்லகதி பார்க்க; see *malla-kadi.* *"மல்லமார்க்க மயில் மார்க்கங் குரங்கு மார்க்கம்....... முயலின் மார்க்கம்" (திருவாலவா.28, 58).*

*[மல்லகதி → மல்லமார்க்கம்.]*

மல்யுத்தக்கை *malyutta-k-kai,* பெ.(n.) மற்போர்க்கை பார்க்க; see *marpōrkkai.*

*[மல் + Skt. யுத்தம் + கை.]*

மல்லயுத்தம் *malla-yuttam,* பெ.(n.) மற்போர் பார்க்க; see *mar-pōr.*

*[மல் + **Skt.** யுத்தம்.]*

மல்லர்[1] *mallar,* பெ.(n.) 1. கழனி வேலை செய்யும் குடியினர்; an working race dependant on agriculture. 2. மற்போர் புரிவோர்; wrestler.

*[முல் (பொருந்தற்கருத்து வேர்) →மல். மல் = பெருமை, வளம், வலிமை. மல்→மல்லர்.]*

மல்லர்[2] *mallar,* பெ.(n.) திருக்குறளுரை யாசிரியருளொருவர்; a commentator of the *kural.* *"மல்லர் பரிப்பெருமாள் காளிங்கர்" (தொண்டைமண்.சத.40, மேற்கோள்.).*

மல்லரங்கம் *malla-rangam,* பெ. (n.) மல்லக சாலை பார்க்க; see *mallaga-šālai.*

*[மல் + அரங்கம்.]*

மல்லரி *mallari,* பெ.(n.) பறை வகை (சங்.அக.); a kind of drum.

*[முல் (பொருந்தற்கருத்து வேர்) →முல் →மல் →மல்கு. மல்குதல் = அதிகரித்தல், நிறைதல், செழித்தல். மல்கு→மல்கா→மல்லா. மல்லாத்தல் = மலர்ந்தாற்போல் முகம் மேனோக்கிக் கிடத்தல். மல்லார்→மல்லாரி = பரந்த பறை வகை, அகன்று பருத்தவள். மல்லாரி→மல்லரி (வே.க.4:28).]*

**மல்லல்¹** *mallal,* பெ.(n.) வலு; power, strength. *"மல்லன் மழவிடை யூர்ந்தாற்கு" (சிலப்.17, கொளு.3).*

*[முல் →மல் = வலிமை, பெருமை. மல் → மல்லல்.]*

**மல்லல்²** *mallal,* பெ.(n.) 1. மிகுதி (சூடா.); abundance. 2. செல்வம்; wealth. *"மல்லற்கேண் மன்னுக" (பரிபா.11, 121).* 3. வளம்; fertility, richness. *"மல்லல் வளனே" (தொல். சொல்.305).* 4. பொலிவு (சூடா.); elegance, brilliance. 5. அழகு; beauty. *"மல்லற்றன் னிறமொன்றில்" (திருக்கோ.58, பேரா.).*

*[மல் →மல்லல் (வே.க.4:28).]*

**மல்லன்** *mallaṉ,* பெ.(n.) 1. மற்போர் செய்வோன்; wrestler, pugilist. *"மறத்தொடு மல்லர் மறங்கடந்த" (பு.வெ.9, 4).* 2. பெருமையிற் சிறந்தோன் (பிங்.); great, famous man.

*[முல் → மல் = பருமை, வளம், வலிமை. பல அணுக்கள் அல்லது உறுப்புகள் அல்லது பொருள்கள் பொருந்துவதால் (ஒன்று சேர்வதால்) திரட்சி அல்லது பருமை உண்டாகும். மிகுதியால் வளமும் பருமையால் வலிமையும் உண்டாகும். இருவர் அல்லது இரு படைகள் பொருந்தி அல்லது கூடிப் பொருவது போர். மல் →மல்லன் (வே.க.4:28).]*

**மல்லா—த்தல்** *mallā-,* 12 செ.குன்றாவி.(v.t.) 1. மேல் முகமாகக் கிடத்தல்; to fall on the back, lie on the face. *"நரகத்தின் மல்லாக்கத் தள்ளி" (திருமந்.199).* 2. தோற்றுப் போதல் (இ.வ.); to fail, to be defeated.

*[முல் (பொருந்தற்கருத்து வேர்) → மல்→ மல்கு→மல்கா→மல்லா = மலர்ந்தாற் போல் முகம் மேனோக்கிக் கிடத்தல் (வே.க.4:28).]*

**மல்லாக்கடி—த்தல்** *mallā-k-kaḍi-,* 4 செ.கு.வி.(v.i.) மல்லா—, பார்க்க; see *mallā-. 'மல்லாக்கடித்துப் படுத்துக் கொண்டான்' (உ.வ.)*

*[மல்லா—→மல்லாக்கடி—,.]*

**மல்லாக்குப்பறி—தல்** *mallākku-p-paṟi,* 4 செ.கு.வி.(v.i.) மல்லா—, (யாழ்.அக.) பார்க்க; see *mallā-,*

*[மல்லா →மல்லாக்குப்பறி—.]*

**மல்லாக்கொட்டை** *mallā-k-koṭṭai,* பெ.(n.) நிலக்கடலை; ground nut.

*[மணிலாக்கொட்டை→மல்லாக்கொட்டை (கொ.வ.).]*

மணிலா தேயத்திலிருந்து கொண்டு வந்து பயிர் செய்யப்பட்டமையால் மணிலாக்கொட்டை என்று பெயர் அமைந்து, பேச்சு வழக்கில் மல்லாக்கொட்டை என வழங்கி வருகிறது எனலாம்.

**மல்லாட்டம்** *mallāṭṭam,* பெ.(n.) சண்டை; wrestling, quarrelling, fighting. *"விம்பு சொன்ன பேர்களுக்கு வந்தது மல்லாட்டம்" (அருட்பா.vi, நாமாவளி, 164).*

*[மல் = போர். மல் + ஆட்டம்.]*

**மல்லாடல்** *mallāḍal,* பெ. (n.) மல்², 4 பார்க்க (சிலப்.6, 49, உரை); see *mal.*

*[மல் + ஆடல்.]*

**மல்லாத்து—தல்** *mallāttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) முதுகு கீழாக முகம்மேலாகக் கிடக்கச் செய்தல்; to make a person or thing to lie on the back (w.).

*[மல் → மல்கு → மல்கா → மல்லா → மல்லாத்து-தல்.]*

**மல்லாந்துபோ-தல்** *mallāndu-pō-*, 8 செ.கு.வி.(v.i.) இறத்தல்; to die.

*[மல்லாந்து + போ-தல்.]*

**மல்லாய்** *mallāy*, பெ.(n.) மல்லை$^{2}$, 1 (வின்.) பார்க்க; see *mallai*.

*[மல்லை → மல்லாய்.]*

**மல்லார்-தல்** *mallār-*, 3 செ.கு.வி.(v.i.) மல்லா-, பார்க்க; see *mallā-*. *"மல்லார்ந்து கிடக்கிறான்" (உ.வ.).*

*[மல்லா →மல்லார்-. (வே.க.4:28).]*

**மல்லாரி[1]** *mallāri*, பெ.(n.) 1. பரந்த பறை வகை; a kind of large drum. 2. சண்டைக்காரி (வின்.); quarrelsome woman. *மானங் கெட்ட மல்லாரி (உ.வ.).*

*[முல் (பொருந்தற்கருத்து வேர்) → மல்→ மல்கு→மல்கா→மல்லா→ மல்லார். மல்லார்தல் = பரத்தல், விரிதல், முகம் மேனோக்கிக்கிடத்தல். மல்லார்→மல்லாரி = பரந்த பறைவகை, அகன்று பருத்தவள் (வே.க.4:28).]*

**மல்லாரி[2]** *mallāri*, பெ.(n.) 1. பண்வகை; a musical mode. 2. மல்லரி பார்க்க; see *mallari*.

*[மல் → மல்லாரி.]*

**மல்லி[1]** *malli*, பெ.(n.) 1. தீர்த்தங்கரர் இருபத்து நால்வருள் ஒருவர் (திருக்கலம், காப்பு, உரை); an Arhat, one of 24 *tirttaṅkarar*. 2. மல்லிகை பார்க்க; see *malligai*. 3. காட்டு மல்லிகை (வின்.); wild jasmine. 4. பேரா மல்லிகை (வின்.); single - flowered *Arabian Jasmine* tree.

**மல்லி[2]** *malli*, பெ.(n.) கொத்தமல்லி (கொ.வ.) பார்க்க; see *kotta-malli*.

*[முல்→மல்→மல்லி = உருண்டு திரண்ட தவச மணியையுடையது.]*

**மல்லி[3]** *malli*, பெ.(n.) பருத்துத் தடித்தவள் (யாழ்ப்.); stout, corpulent woman.

*[முல் →மல்→மல்லி (வே.க.4:29).]*

**மல்லிகம்** *malligam*, பெ.(n.) 1. மல்லிகை, 1 பார்க்க; see *malligai*. 2. பிரம்பு; swichy rattan. 3. மருளூமத்தை (யாழ்.அக.)பார்க்க; see *marul-ūmatta*.

**மல்லிகிழான்காரியாதி** *malli-kiḻāṉ-kāriyādi*, பெ.(n.) ஆவூர் மூலங்கிழாரால் பாடப்பெற்ற வள்ளல் (சி.பெ.அக.); a philontharopist, praised by *Avūr mūlaṉkiḻār*. *"மல்லிகிழான் காரியாதியைப் பாடியது" (புறநா.77).*

*[மல்லி + கிழான் + காரியாதி. மல்லி என்பது திருவில்லிபுத்தூருக்கு அருகிலுள்ள ஊர். காரியாதி என்பது வள்ளலின் பெயர்.]*

**மல்லிகை** *malligai*, பெ.(n.) 1. பூங்கொடி வகை; Himalayan heart leaved smooth jasmine, m.cl. *jasminum anestomosans*. *"மல்லிகை மௌவன் மணங்கமழ் சண்பகம்" (பரிபா.12:77).* 2. மகரந்த மல்லிகை (L.); musk jasmine. 3. குடமல்லிகை (பிங்.); Arabian jasmine. 4. எருமைமுல்லை; white - brectid jasmine. 5. விளக்குத்தண்டு (பிங்.); lamp stand, standard. 6. ஏணம் (வின்.); vessel, cup, goblet. 7. இரப்போர் கலம் (வின்.); mendicant's bowl.



மல்லிகை



மரமஞ்சள்



மந்தாரை



மருக்காரை

*[மல்→மலர்→மலர்தல். மொட்டுவிரிதல். நன்கு விரிந்த மலர் வகை. மல்→மல்லி→மல்லிகை. கை–சிறுமைப்பொருள் பின்னொட்டு.]*

மல்லிகைப்பூவின் வகைகள்: 1. மல்லிகை, 2. காட்டு மல்லிகை (முல்லை), 3. பவள மல்லிகை (பவள்கால் மல்லிகை), 4. மரமல்லிகை, 5. வாடா மல்லிகை, 6. இளஞ்சார மல்லிகை, 7. சீனமல்லிகை, 8. இரங்கூன் மல்லிகை, 9. சீமை மல்லிகை (சிமிக்கிப்பூ), 10. வன மல்லிகை, 11. படர் மல்லிகை, 12. பேரா மல்லிகை, 13. கத்தூரி மல்லிகை, 14. நாக மல்லிகை, 15. சிறுமல்லிகை, 16. குடமல்லிகை, 17. ஊசி மல்லிகை, 18. கரு மல்லிகை, 19. செப்பு மல்லிகை, 20. சாதி மல்லிகை, 21. சிற்றாமல்லிகை, 22. கொடி மல்லிகை, 23. செம்மல்லிகை, 24. கிரி மல்லிகை, 25. பிச்சி (மல்லிகைப்பூ).



**மல்லிகைச்சம்பா** *malligai-c-camba,* பெ.(n.) நெல் வகை (பதார்த்த.807); a kind of paddy.

*[மல்லிகை + சம்பா. மல்லிகைப் பூப்போன்ற வெண்ணிற அரிசியையுடைய நெல்.]*

**மல்லிகைநந்தவனம்** *malligainandavanam,* பெ.(n.) மல்லிகைத்தோட்டம்; jasmine garden. *"சிவபிச்சன் செய்த மல்லிகை நந்தவனத்துக்கு காற் செய்யும்" (தெ.க. தொ.13, கல்.270–12).*

*[மல்லிகை + நந்தவனம்.]*

**மல்லிகைமொட்டு** *malligai-mottu,* பெ.(n.) 1. மலராத மல்லிகைப்பூ; unblossomed jasmine. 2. மகளிர் தலையணி வகை; a gold ornament worn on the head by women. 3. மொட்டம்பு (அக.நா.9, உரை); blunt-edged arrow.

*[மல்லிகை + மொட்டு.]*

**மல்லிகையரிசி** *malligai-y-ariši,* பெ.(n.) உருளரிசி, தனியா; coriander seeds of coriandrum sativum.

*[மல்லிகை + அரிசி.]*

**மல்லிக்கீரை** *malli-k-kīram,* பெ.(n.) கொத்த மல்லிச் செடியின் தழை; corriander leaves.

*[மல்லிகை + கீரை.]*

**மல்லிதாசி** *malli-dāši,* பெ.(n.) பல்லி; lizard.

**மல்லிநாதர்¹** *malli-nādar,* பெ.(n.) சமண சமயத்தின் பத்தொன்பதாவது தீர்த்தங்கரார்; the 19th *theerthangara* of Jainism.

**மல்லிநாதர்²** *malli-nādar,* பெ.(n.) மல்லி¹, 1 பார்க்க; see *malli.*

**மல்லிபத்திரம்** *malli-pattiram,* பெ.(n.) காளான் வகை (மூ.அ.); a mushroom.

**மல்லுக்கட்டு¹–தல்** *mallu-k-kattu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. மற்போர் புரிதல்; to wrestle, to scuffle. 2. பொருதல்; to qurrel. *"எதிர்மல்லுக்கட்டு மரையரைப் பாடவோ" (தனிப்பா.i, 266, 3).*

*[மல் →மல்லு + கட்டு–.]*

**மல்லுக்கட்டு²–தல்** *mallu-k-kattu-,* 5 செ. குன்றாவி. (v.t.) கட்டாயப்படுத்துதல் (கொ.வ.); to force, compel. *நாள்தோறும்*

*அவனைப் பள்ளிக்கு அனுப்புவதற்கு மல்லுக்கட்ட வேண்டியதாகியது.*

*[மல் →மல்லு + கட்டு–.]*

மற்போர் போல் செய்து வலியுறுத்துதல்.

**மல்லுக்குநிற்றல்** *mallukku-niṟṟal,* பெ. (n.) அடமாக வலியுறுத்துதல்; forcing, compelling. *புதுச்சட்டை எடுத்துத் தந்தாலே போயிற்று என்று மல்லுக்கு நிற்கிறான்.*

*[மல் →மல்லு + கட்டு–.]*

**மல்லுச்சட்டம்** *mallu-c-caṭṭam,* பெ.(n.) குறுக்குவிட்டம்; cross-ties, braces (C.E.M.).

*[மல்லு + சட்டம். முல்→ மல் = போர், சண்டை (மு.தா.172). சண்டையிட்டுக் கொள்வோரின் கைகள் குறுக்காயிருப்பது போன்றிருக்கும் சட்டம்.]*

**மல்லுச்செட்டி** *mallu-c-caṭṭi,* பெ.(n.) மற்போர்புரியும் வகுப்பார் (வின்.); professional wrestlers and gymnasts.

*[மல்→ மல்லு + செட்டி.]*

**மல்லுப்பிடி–த்தல்** *mallu-p-piḍi-,* 4 செ. குன்றாவி.(v.t.) மல்லுக்கட்டு–, (வின்.) பார்க்க; see *mallu-k-kaṭṭu-,*

*[மல்லுக்கட்டு–→ மல்லுப்பிடி–.]*

**மல்லூகம்** *mallūgam,* பெ.(n.) புழு (சங்.அக.); worm.

**மல்லை**[1] *mallai,* பெ.(n.) 1. வளம்; richness. *"மல்லைப் பழனத்து" (பதினொ.ஆளுடை. திருவுலா.8).* 2. பெருமை; greatness. *"மல்லைச் செல்வ வடமொழி மறைவாணர்" (திவ்.திருவாய்.8, 9, 8).*

*[மல்→ மல்லை (வே.க.4:29).]*

**மல்லை**[2] *mallai,* பெ.(n.) 1. இரப்போர் கலம் (வின்.) (தைலவ.தைல.); medicant's begging bowl. 2. வட்டம் (பிங்.); circle.

*[முல்→மல்→மல்லி = அகன்று தடித்தவள் (யாழ்ப்.). மல்→மல்லம் = அகன்ற தட்டம். மல்லம் →மல்லை.]*

**மல்லை**[3] *mallai,* பெ.(n.) மாமல்லபுரம் (திருமங்கையாழ்வார் பாசுரம்); *Mamalla puram. "மல்லையங் கானன் முதல்வனுக்கு" (நந்திக்.3).*

*[மாமல்லபுரம்→மாமல்லை→மல்லை. ஒ.நோ. தஞ்சாவூர்→தஞ்சை. கோவன்புத்தூர் (கோயம் புத்தூர்) →கோவை.]*

**மல்லை**[4] *mallai,* பெ.(n.) தீப்பூண்டு பார்க்க; see *tī-p-pūṇḍu* (சா.அக.).

**மல்லைக்கழுவி** *mallai-k-kaḻuvi,* பெ.(n.) வேலைக்காரனுக்குட்பட்டுத் தாழ்ந்த வேலை செய்வோன் (வின்.); menial servant, as a plate washer.

*[மல்லை = இரப்போர் உண்கலம். கல்லை + கழுவி. கழுவு→ கழுவி (தொழிற்பெயர்) இரப்போர் உண்கலம் கழுவித் தருவதைப் போன்ற இழிசெயல்.]*

**மல்வென்றி** *mal-veṉṟi,* பெ.(n.) வாகைத் திணையுள் மற்போரில் வெற்றியைக் கூறும் ஒரு புறத்துறை (பு.வெ.12, 3); theme describing victory in a wrestling match, one of *vāgai-t-tiṇai.*

*[மல் = மற்போர் மல் + வென்றி.]*

**மலக்கட்டு** *mala-k-kaṭṭu,* பெ.(n.) மல வடைப்பு; constipation.

*[மலம் + கட்டு.]*

**மலக்கட்டுஇசிவு** *mala-k-kaṭṭu-iśivu,* பெ. (n.) மலச்சிக்கலாலுண்டாகும் இசிவு (சன்னி) வகை (வின்.); fix of apoplexy caused by constipation.

*[மலக்கட்டு + இசிவு.]*

**மலக்கடி** *mala-k-kaḍi,* பெ.(n.) மனக்கலக்கம் (வின்.); confusion of mind, bewilderment.

*[மயக்கம் → மலக்கம் → மலக்கடி.]*

**மலக்கம்** *malakkam,* பெ.(n.) 1. மலக்கடி பார்க்க; see *mala-k-kaḍi. "மலக்கமற்ற நம்மல்லமன்" (பிரபுலிங்.வசவண்ணர்.5).* 2. துன்பம்; distress, misery. *"உற்ற மலக்க முண்டாகினாக" (கம்பரா.இராவணன் களங். 18).* 3. மாறு; contrast, juxtaposition. *"நவரத்தினங்களாற் கட்டி இடை நிலங்களை... பொற்றகட்டாலே செறிய மலக்கமாகக் கட்டி" (சிலப்.3:117, உரை).*

*[முல் → மல் → மல → மலகு → மலங்கு → மலக்கு → மலக்கம் (வே.க.4:37).]*

**மலக்கரி** *malakari,* பெ.(n.) குறிஞ்சிப்பண் வகை; a melody type of the *kuriñji* class.

**மலக்கழிச்சல்** *mala-k-kaḻiccal,* பெ.(n.) வயிற்றுப் போக்கு (கொ.வ.); diarrhoea purging.

*[மலம் + கழிச்சல்.]*

**மலக்கழிவு**[1] *mala-k-kaḻivu,* பெ.(n.) மலம் இறங்குகை; alvine discharge.

*[மலம் + கழிவு.]*

**மலக்கழிவு**[2] *mala-k-kaḻivu,* பெ.(n.) மலமாகிய கழிவு; faeces.

*[மலம் + கழிவு.]*

**மலக்கனம்** *malakkaṉam,* பெ.(n.) 1. பொன்னம்பர்; amber of a gold colour or yellow colour. 2. ஒரு மூலப் பொருள்; a mineral described in Tamil medical science (சா.அக.).

**மலக்கனல்** *malakkaṉal,* பெ.(n.) மணிவகை (யாழ்.அக.); a kind of precious stone.

**மலக்காப்பழம்** *malakkā-p-paḻam,* பெ.(n.) பொன்னாங்காய்; soap nut (சா.அக.).

**மலக்கிருமி** *mala-k-kirumi,* பெ.(n.) மலப்புழு (வின்.) பார்க்க; see *mala-p-puḻu.*

*[மலப்புழு → மலக்கிருமி. த. புழு > Skt. கிருமி.]*

**மலக்கு**[1]**-தல்** *malakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) கலக்குதல்; to bewilder, as the mind, to disturb, confuse. *"மலக்க நாவுடை யேற்கு" (திவ்.திருவாய்.6, 4, 9).*

*[மலங்கு → மலக்கு (வே.க.4:37).]*

**மலக்கு**[2] *malakku,* பெ.(n.) மயக்கம்; confusion.

*[மயக்கம் → மயக்கு → மலக்கு. ய > ல.]*

**மலக்குடல்** *mala-k-kuḍal,* பெ.(n.) மலம் தங்குமிடம்; that portion of the bowels containing faeces.

*[மலப்பை → மலக்குடல்.]*

**மலக்குண்(ணு)-தல்** *malakkuṇṇu-,* 12 செ.கு.வி.(v.i.) கலக்கப்படுதல்; to be churned, to be troubled, to suffer, affliction. *"கண்ணன் கையான் மலக்குண்டு" (திருவிருத்.57).*

*[மலங்கு → மலக்கு → மலக்குண்(ணு)-.]*

**மலக்கொழுப்பு** *malakkoḻuppu,* பெ.(n.) மலத்துடன் கலந்து வெளிவரும் கொழுப்பு; excretio, stercorin (சா.அக.).

*[மலம் + கொழுப்பு.]*

**மலங்கரை** *malaṅgarai,* பெ.(n.) மலஞ்சரிவு (நாஞ்.) பார்க்க; see *malañ-carivu.*

**மலங்கல்** *malaṅgal,* பெ.(n.) 1. குளம்; tank. 2. மலங்கு பார்க்க; see *malaṅgu.*

*[மலங்கு → மலங்கல்.]*

**மலங்கழி[1]-தல்** *malaṅ-kaḻi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. ஆணவ முதலிய மல நீங்குதல்; to be freed from the effects of *mu-m-malam.* 2. வயிற்றினின்று மலம் வெளியேறுதல்; (C.G.) to pass stools.

*[மலம் + கழி-.]*

**மலங்கழி[2]-த்தல்** *malaṅ-kaḻi-,* 4 செ. குன்றாவி.(v.t.) வயிற்றினின்று மலத்தை வெளியேற்றுதல் (வின்.); to pass excrement.

*[மலம் + கழி-.]*

**மலங்காடு** *malaṅ-kāḍu,* பெ.(n.) மலைப் பாங்கு; mountainous region.

*[மலம் + காடு.]*

**மலங்காரை** *malaṅ-kārai,* பெ.(n.) நஞ்சுண்டம்; cape jasmine.

**மலங்கி** *malaṅgi,* பெ.(n.) நுரை; form, froth (சா.அக.).

**மலங்கு[1]-தல்** *malaṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. நீர் முதலியன குழம்புதல்; to be agitated, to be made turbid, to be perturbed. *"மலங்கி வன்றிரை.... பெயர்ந்து" (தேவா.130, 9).* 2. மனங் கலங்குதல்; to be confused, bewildered, to be distressed. *"ஒன்பது வாயிற் குடிலை மலங்க" (திருவாச.1, 55).* 3. பிறழ்தல்; to shake, move, tremble, as the eyes. *"நெடுங்கண் புருவங்கண் மலங்க" (சீவக.1067).* 4. கெடுதல்; to perish, to be ruined. *"கதிர் வேன் மலங்க" (சிவக.1613).* 5. ததும்புதல்; to be full to the trim, as tears in the eyes. *"கண்ணினீர் மலங்கும் பொலந் தொடி" (தஞ்சைவா.243).*

*[முல் (பொருந்தற் கருத்து வேர்) → மல் → மல → மலகு → மலங்கு (வே.க.4:37).]*

பல பொருள்கள் பொருந்திச் சேர்வதால் குழம்பலும் குழப்பமும் கலக்கமும் மயக்கமும் உண்டாகும். நீரும் மண்ணும் சேரின் கலங்கல் அல்லது கலுழி எனப்படுவதும், நீரும் பிறபொருளும் சேர்ந்து திண்ணமாயின் குழம்பு அல்லது குழம்பல் எனப்படுவதும், பகலும் இரவும் மயங்கும் (கலங்கும்) வேளை மசங்கல் (மயங்கல்) எனப்படுவதும் காண்க.

**மலங்கு[2]** *malaṅgu,* பெ.(n.) விலாங்கு மீன்; true eel. *"மலங்கு மிளிர் செறு" (புறநா.61).*



மலங்குகண் *malaṅgu-kaṇ,* பெ.(n.) கண்ணோய் வகை; a kind of eye disease.

*[மலங்கு + கண்.]*

மலச்சிக்கல் *mala-c-cikkal,* பெ.(n.) மலவடைப்பு; constipation.

*[மலம் + சிக்கல்.]*

மலச்சிக்கு *mala-c-cikku,* பெ.(n.) மலச்சிக்கல் பார்க்க; see *mala-c-cikkal.*

மலசகிதர் *mala-šagidar,* பெ.(n.) மும்மலத்தோடு கூடியவர் (வின்.); person in whom all the three malams are present, opp, to mala-rakitar.

*[மலம் + Skt. சகிதர்.]*

மலசம் *malašam,* பெ.(n.) 1. தமிழும் மலையாளமும் கலந்த மொழி பேசுபவரும் கோயமுத்தூர் மாவட்டக் காடுகளில் வாழ்பவருமான மலைச்சாதியர்; a forest tribes, seeking a mixture of *Tamiḷ* and *Malayāḷam,* in *Coimbatore* District (E.T.iv.374). 2. கரையான் பார்க்க (யாழ்.அக.); see *karaiyāṉ.*

மலசலம் *mala-šalam,* பெ.(n.) மல மூத்திரம்; excrement and urine.

*[மலம் + சலம்.]*

மலசலாதி *mala-šalādi,* பெ.(n.) மலசலம் (வின்.) பார்க்க; see mala-šalam.

*[மலசலம் →மலசலாதி.]*

மலசனாதி *mala-šaṉādi,* பெ.(n.) வெள்ளைப் பூண்டு; garlic (சா.அக.).

மலசுத்தி *mala-šutti,* பெ.(n.) வயிற்றினின்று மலங்கழிகை (வின்.); evacuation of bowels.

*[மலம் + Skt. சுத்தி. சுத்தம்→சுத்தி = வயிற்றில் உள்ள மலத்தை முழுவதும் வெளியேற்றி, சுத்தப்படுத்துதல்.]*

மலஞ்சரிவு *malañ-carivu,* பெ.(n.) மலையின் சரிவு (நாஞ்.); slope of mountains.

*[மலை + சரிவு = மலைச்சரிவு→மலஞ்சரிவு.]*

மலஞ்சாரை *malañ-cārai,* பெ.(n.) மலைச் சாரை பார்க்க (M.M.751); see *malai-c-cārai.*

*[மலைச்சாரை→மலஞ்சாரை.]*

மலட்டா *malaṭṭā,* பெ.(n.) ஈனாப்பசு; sterile cow. *"மலட்டாவைப் பற்றிக் கறவாக்கிடப்பர்" (சடகோபரந்.37).*

*[மலடு →மலட்டு + ஆ.]*

மலட்டாக்குதம்பு *malaṭṭā-k-kudambu,* பெ.(n.) கருஞ்சீரகம் (சா.அக.); black cumin (சா.அக.).

மலட்டாறு *malaṭṭāṟu,* பெ.(n.) காடுகளி லோடுவதும் விரைவில் நீர் வற்றுவதுமான ஆறு (இ.வ.); jungle - stream as drying up for the most part of year.

*[மலடு →மலட்டு + ஆறு.]*

மலட்டுப்புழு *malaṭṭu-p-puḻu,* பெ.(n.) மலடாக்கும் புழு வகை (வின்.); worm said to cause sterility in woman.

*[மலட்டு + புழு.]*

மலட்டுப்பூச்சி *malaṭṭu-p-pūcci*, பெ.(n.) மலட்டுப்புழு (வின்.) பார்க்க; see *malaṭṭu-p-puḻu*.

*[மலட்டுப்புழு →மலட்டுப்பூச்சி.]*

மலடன் *malaḍaṉ*, பெ.(n.) மகப்பெறாதவன்; sterile man. *"மக்கட் பெறாத மலடனல்லையேல் வாகண்டாய்" (திவ். பெரியாழ். 1, 4, 4).*

*[மலடு → மலடன்.]*

மலடி *malaḍi*, பெ.(n.) மகப்பெறாதவள்; sterile woman. *"குழந்தையையுயிர்த்த மலடிக் குவமை கொண்டாள்" (கம்பரா. உருக்காட்.65).*

*[மலடு → மலடி.]*

மலடிமாந்தம் *malaḍi-māndam*, பெ.(n.) எட்டு மாந்தங்களில் ஒன்றாகிய குழந்தை நோய் வகை (வின்.); a disease in children, one of *eṭṭu-māndam*.

*[மலடி + மாந்தம்.]*

மலடு *malaḍu*, பெ.(n.) 1. கருவுருவாமை (மூ.அ.); sterility, barrenness, as a women. 2. ஈனாதவ-ன்-ள்-து; sterile person or animal. *"மலடு கறந் தெய்த்த வாறே" (தேவா.697, 6)*

*[மல் → மலடு.]*

மலத்திரயம் *mala-t-tirayam*, பெ.(n.) மும்மலம்; the three impurities of the soul. *"மலத்திரய பூரிபை" (திருப்பு.1266).*

*[மலம் + Skt. திரயம்.]*

மலத்தீர்வு *mala-t-tīrvu*, பெ.(n.) மும்மலம் நீங்குகை (சி.போ.பா.பக்.2); getting rid *mummalam*.

*[மலம் + தீர்வு.]*

மலத்துவாரம் *mala-t-tuvāram*, பெ.(n.) மலத்துளை பார்க்க; see *mala-t-tuḷai*.

*[மலம் + துவாரம். Skt. துவாரம் த. துளை.]*

மலத்துளை *mala-t-tuḷai*, பெ.(n.) உடலினின்று மலங்கழியும் வழி (C.E.M.); anus.

*[மலம் + துளை.]*

மலத்தூசிதம் *mala-t-tūśidam*, பெ.(n.) அழுக்கு; dirt.

*[மலம் + தூசிதம். தூசி + தம். 'தம்' பின்னொட்டு.]*

மலத்தைத்தள்ளிச்சி *malattai-t-taḷḷicci*, பெ.(n.) கற்றாழை ; aloes (சா.அக.).

மலத்தையறுப்போன் *malattai-y-aṟuppōṉ*, பெ.(n.) கடுக்காய் (சங்.அக.); chebulic myrobalam.

*[மலம் + அத்து + அறுப்போன்.]*

மலதிதம் *malatidam*, பெ.(n.) கஞ்சாங் கோரை; white basil.

மலதிரம் *malatiram*, பெ.(n.) மலதிதம் பார்க்க; see *malatidam*.

மலநாசினி *malanāśiṉi*, பெ.(n.) 1. பிரமிப்பூடு; prostate plant. 2. சாதி பத்திரி; mace (சா.அக.).

*[மலம் + Skt. நாசினி.]*

மலநானம் *malanāṉam*, பெ.(n.) தூய்மையான விடத்தில் எண் விரலுக்குக் கீழாக மண்ணையெடுத்து மந்திரஞ் சொல்லி உடம்பிற்றேய்த்து நீரில் மூழ்குகை (தத்துவப். 45); bathing in water after smearing

one's body with earth taken from a clean spot about six inches below the surface.

மலநீர் *malanīr*, பெ.(n.) மூத்திரம்; urine. *"வெண்ணீர் செந்நீர் மலநீர்" (தாயு. சச்சிதா.2).*

*[மலம் + நீர்.]*

மலப்பருத்தி *mala-p-parutti*, பெ.(n.) நீண்ட மரவகை (இலதி.); coral flowered ordure tree l.tr. structure colorala.

*[மலை + பருத்தி.]*

மலப்பற்றம் *mala-p-parram*, பெ.(n.) 1. மலபந்தம், 1 பார்க்க; see *mala-bandam*. 2. பந்தம், 2 (யாழ்.அக.) பார்க்க; see *bandam*.

*[மலம் + பற்றம். பந்தம் →பற்றம்.]*

மலப்பற்று *mala-p-parru*, பெ.(n.) 1. மலபந்தம், 1 பார்க்க (வின்.); see *mala-bandam*. 2. மலபந்தம், 2 பார்க்க (யாழ். அக.); see *mala-bandam*.

*[மலம் + பற்று.]*

மலப்பாதை[1] *mala-p-pādai*, பெ.(n.) மலத் துளை பார்க்க; see *mala-t-tuḷai*.

*[மலம் + பாதை.]*

மலப்பாதை[2] *mala-p-pādai*, பெ.(n.) மலைப்பாதை பார்க்க; see *malai-p-pādai*.

*[மலைப்பாதை→ மலப்பாதை (கொவ.).]*

மலப்பு *malappu*, பெ.(n.) கடவுள் திருமுன்னர் ஆடும் ஒருவகைக் கூத்து; a kind of dance before a deity. *"எம்பெருமானா ரடியாள் மலப்பு சேவிக்க" (கோயிலொ.80).*

மலப்புழு *mala-p-puḻu*, பெ.(n.) கீரைப்பூச்சி (வின்.); maw-worm, as living in excreta.

*[மலம் + புழு.]*

மலப்பை *malappai*, பெ.(n.) 1. மலம் தங்குமிடம் (சங்அக.); that portion of the bowels containing faeces. 2. மலபாண்டம் பார்க்க; see *mala-pāṇḍam*.

*[மலம் + பை.]*

மலபந்தம் *mala-pandam*, பெ.(n.) 1. மும் மலத்தாற் கட்டுண்கை; bondage of the soul in *mu-m-malam*. 2. மலச்சிக்கல் பார்க்க; see *mala-c-cikkal*.

*[மலம் + Skt.பந்தம்.]*

மலபந்தன் *mala-pandaṉ*, பெ.(n.) பாசக் கட்டுள்ளவன் (யாழ்.அக.); one who is subject to the bondage of mu-m-malam.

*[மலம் + Skt.பந்தன்.]*

மலபந்தனஞ்செய்-தல் *mala-pandaṉañ-cey-*,1 செ.குன்றாவி.(v.t.) மலத்தைக் கட்டுப்படுத்துதல்; to constipate.

மலபரிபாகம் *mala-paripāgam*, பெ.(n.) மலந்தேய்தற்குரிய காரணங்களோடு கூடிய நிலை; stage of a soul when its three malam meet with the causes of their removal. *"மலபரிபாகம் வரவும்" (தாயு. மலைவாள்.6).*

மலபாகம் *mala-pāgam*, பெ.(n.) மலபரி பாகம் (வின்.) பார்க்க; see *mala-paripāgam*.

மலபாண்டம் *mala-pāṇḍam*, பெ.(n.) உடல்; body. *"கிருமி சேர்ந்த மல பாண்டமோ" (தாயு.தேசோ.3).*

*[மலம் + பாண்டம்.]*

மலபாதை *mala-pādai,* பெ.(n.) மலங்கழிக்கு முன் வயிற்றுள் உண்டாகும் தொல்லை (இ.வ.); urgency to ease urenary sensation before evacuation.

*[மலம் + Skt.உபாதை.]*

மலம் *malam,* பெ.(n.) 1. பவ்வீ; encrement, faeces. *"சலமலம் விடுக்கும் போதும்" (காஞ்சிப்பு.ஒழுக்க.7).* 2. வெண்ணீர் மாதவிடாய் மூத்திர முதலிய உடல் மாசு (சூடா.); excretions of the body as semen, menstrual blood, urine, ordue, ear wax, phlegm, sweat. 3. அழுக்கு (பிங்.); dirt, filth. 4. வண்டல் (வின்.); dregs, sediment. 5. துரு (யாழ்.அக.) rust. 6. மும்மலம்; the three impurities of the soul. 7. கரிசு (யாழ்.அக.); sin. 8. மலநானம் பார்க்க; see *mala-naṉam. "நானமோ ரெண் வகையா மலசலம்" (தத்துவப்.45).* 9. கற்பூரம் (யாழ்.அக.); camphor.

மலம்பருத்தி *malam-parutti,* பெ.(n.) மலைப் பருத்தி (வின்.) பார்க்க; see *malam-parutti.*

*[மலைப்பருத்தி →மலப்பருத்தி →மலம்பருத்தி.]*

மலம்பாதை *malam-pādai,* பெ.(n.) மலைவழி (நாஞ்.); path in hilly region.

*[மலைவழி→மலைப்பாதை→மலப்பாதை → மலம்பாதை.]*

மலம்பாம்பு *malam-pambu,* பெ.(n.) மலைப் பாம்பு (வின்.) பார்க்க; see *malai-p-pāmbu.*

மலம்பிஞ்சு *malam-piñju,* பெ.(n.) மலைப் பிஞ்சு (இ.வ.) பார்க்க; see *malai-p-piñju.*

*[மலைப்பிஞ்சு → மலம்பிஞ்சு (கொ.வ.)]*

மலமல—த்தல் *mala-mala-,* 11 செ.கு.வி. (v.i.) மலமலவென்றொலித்தல்; to produce the sound of bubbling of flowing abundantly.

மலமலெனல் *mala-maleṉal,* பெ.(n.) 1. ஓர் ஒலிக்குறிப்பு; onom. expression signifying bubbling, as a boiling water. 2. கண்ணீர் பெருகுதற் குறிப்பு; flowing abundantly as of tears.

மலமாசம் *mala-māšm,* பெ.(n.) அதிகமாதம்; intercalary month.

மலமாதிப்பூடு *mala-mādi-p-pūḍu,* பெ.(n.) 1. கத்திரி; plant brinjal. 2. கண்டங் கத்திரி; a thorny shurb.

மலமூத்திரம் *mala-mūttiram,* பெ.(n.) மலசலம் பார்க்க; see *mala-šalam.*

*[மலம் + மூத்திரம்.]*

மலயக்கால் *malaya-k-kāl,* பெ.(n.) 1. தென்றற் காற்று; the south wind, as blowing from the hills. *"மருங்கலை மலய மாருதமும்" (பாரத. குருகுல.81).* 2. பண்வகை (சங்கீத. பால.); a secondary melody - type. 3. மலய மாருதம் (திவா.) பார்க்க; see *malaya-mārudam.*

*[மலயம் + கால். மலை→ மலயம். கால் = காற்று.]*

மலயக்கோ *malaya-k-kō,* பெ.(n.) பாண்டியன்; *Pāṇḍiya* king. *"நிகரிலா மலயக் கோவே" (திருவாலவா.44, 2).*

*[மல் →மலயம் + கோ.]*

மலயசம் *malayašam,* பெ.(n.) 1. சந்தனம்; sandalwood tree. 2. மலயமாருதம், 1 பார்க்க; see *malaya-mārudam.*

**மலயத்துருமம்** *malaya-t-turumam,* பெ.(n.) சந்தன மரம்; sandal wood tree (சா.அக.).

**மலயத்துவசன்** *malaya-t-tuvašan,* பெ.(n.) தடாதகையின் தந்தையாகிய பாண்டிய அரசன்; a *Pāṇḍiya*king, father of *Taḍātakai.* *"தென்னன் மலயத்துவசன்" (கடம்ப. பு. இலீலா.3).*

**மலயம்**[1] *malayam,* பெ.(n.) பொதியமலை; Mount *Potiyam.* *"ஓங்குயர் மலயத் தருத்தவ துனுரைப்ப" (மணிமே.1, 3).*

*[மலை→மலையம் →மலயம். மலையென்பது பொதியையே குறிக்கும்.]*

**மலயம்**[2] *malayam,* பெ.(n.) சந்தனம் (மலை.); sandal - wood tree.

*[மலை→ மலையம்→ மலயம்.மலையில் விளைவது.]*

**மலயமாருதம்** *malaya-mārudam,* பெ.(n.) மலையக்கால் பார்க்க; see *malaya-k-kāl.*

*[மலயம் + Skt. மாருதம்.]*

**மலயமான்** *malaya-māṉ,* பெ.(n.) திருக் கோவலூர் மன்னர்கள் வெளியிட்ட நாணயம்; a coin issued by the kings of *tiru-k-kōvalūr.*



திருக்கோவலூர் மன்னர்கள் தம் குடிப்பெயரான "மலயமான்" என்று பெயர் பொறித்த நாணயங்களை வெளியிட்டுள்ளனர். இரண்டு நாணயங்கள் கிடைத்துள்ளன. செப்பு; செவ்வகம்; 2 செ.மீ. X 2.3 செ.மீ அளவு; 3.9 நிறை (கிராம்) எடை, செப்பு, சதுரம் 1.5 செ.மீ. X செ.மீ. அளவு; 2 நிறை (கிராம்) எடை. 'மலயமா' தெரிகிறது. இரண்டு நாணயங்களிலும் 'லை' இல்லை. 'ல' மட்டுமே உள்ளது.

**மலயமுனி** *malaya-muṉi,* பெ.(n.) அகத்திய முனிவர்; sage Agattiyar, as living in Mt.Malayam.

*[மலையமுனி →மலயமுனி.]*

**மலயன்** *malayaṉ,* பெ.(n.) திருக்கோவலூர் மன்னர்கள் வெளியிட்ட நாணயம்; a coin issued by the kings of *tiru-k-kōvalūr.*



இரண்டு நாணயங்கள் கிடைத்துள்ளன. செப்பு; 1.9 செ.மீ. X 2 செ.மீ அளவு; 4.3 நிறை (கிராம்) எடை. மலயன் எழுத்துகள் தெரிகின்றன.

செப்பு; 1.6 செ.மீ. X 1.7 செ.மீ. அளவு; 3.5 நிறை (கிராம்) எடை. மலயன் எழுத்துகள் காணப்படுகின்றன.

*[மலையன் →மலயன்.]*

**மலயானிலம்** *malaya-ṉilam,* பெ.(n.) மலயக்கால் பார்க்க; see *malaya-k-kāl.* *"மலயானிலம் வந்து மோதுமுன்னே" (அஷ்டப்.அழகரந்.41).*

*[மலயக்கால் →மலயானிலம்.]*

**மலர்¹-தல்** *malar-,* 2 செ.கு.வி.(v.i.) 1. பூவின் மொட்டவிழ்தல்; to open as a flower; to bloom. *"வரை மேற்காந்தள் மலராக்கால்" (நாலடி, 283).* 2. பரத்தல்; to be expanded, extended or spread. *"வையகமலர்ந்த தொழின்முறை யொழியாது" (பதிற்றுப்.88, 1).* 3. மனமகிழ்தல்; to be cheerful, to beam with joy. *"வரன்கைதீண்ட மலர்குலமாதர் போல்" (பெரியபு.தடுத்தாட்.161).* 4. தோன்றுதல் (திவா.); to appear, to rise to view. 5. எதிர்தல் (சூடா.); to happen, befall. 6. அகலுதல்; to be wide open, as a gate. *"மலரத் திறந்த வாயில்" (குறிஞ்சிப்.203).* 7. மிகுதல்; to abound, become full. *"செழுமல ராவி நீங்கு மெல்லையில்" (சீவக.3079).*

*[முல் → மல் → மல்லார் → மலர்-தல் (வே.க.4:29).]*

**மலர்²-த்தல்** *malar-,*2 செ.குன்றாவி.(v.t.) 1. மலரச் செய்தல்; to cause to flower. 2. வாய்ப்புறம் மேலாக நிமிரச் செய்தல்; to turn the face or mouth upward, as of a pot. *"மண்டை மலர்க்குநர் யாரென" (புறநா.103).*

*[முல் → மல் → மல்லார் → மலர்-த்தல் (வே.க.4:29).]*

**மலர்³** *malar,* பெ.(n.) 1. பூ; full-blown flower, blossom. 2. தாமரை; lotus. *"மலர்மிசை யேகினான்" (குறள், 3).* 3. ஒரு பேரெண் (பதுமம்); a great number. *"ஆயிர மலருடையாழி மாப்படை" (கம்பரா.நிகும்ப.57).* 4. படைக்கலக் கருவியின் மேற்குமிழ்; nut or head, as of a spike, knob, as of a scimitar. *"குற்றுடைவாள் ஆசுங்கண்டமும் மலரும் பொன்கட்டிற்று" (S.I.I.ii, 211).* 5. வெண்பாவின் இறுதிச் சீர் வாய்பாடுகளுள் ஒன்று (காரிகை.செய்.5, உரை); a formula of a foot of one nirai, accurring as the last cīr, in the last line of a veṉpā.

*[முல் → மல் → மலர்.]*

**மலர்⁴** *malar,* பெ.(n.) மலசகிதர் பார்க்க; see *mala-cagitar.* *"இன்றிந்நூன் மும்மை மலர்க்கு" (சி.போ.12, இறுதிச் செய்யுள்), "இருமலர்" (திருமந்.498).*

**மலர்க்கடை** *malar-k-kaḍai,* பெ.(n.) பூ விற்குங் கடை; flower-bazaar. *"மலர்க்கடை திறப்பவும்" (பெருங்.உஞ்சைக்.33, 83).*

*[மலர் + கடை.]*

**மலர்க்கணையோன்** *malar-k-kaṉaiyōṉ,* பெ.(n.) காமன் (பிங்.); *Kāmaṉ,* as having flowers for arrows.

*[மலர் + கணையோன். பூக்களை அம்புகளாக உடையவன்.]*

**மலர்க்கா** *malat-k-kā,* பெ.(n.) பூந்தோட்டம், பூஞ்சோலை (வின்.); flower garden.

*[மலர் + கா.]*

**மலர்க்காம்பு** *malar-k-kāmbu,* பெ.(n.) பூவிதழின் கீழுள்ள பகுதி (வின்.); flower stalk.

*[மலர் + காம்பு.]*

மலர்க்குழைக்கண்ணன் *malar-kuḻai-k-kaṇṇaṉ,* பெ.(n.) சிறுகாடை; quail (சா.அக.).

மலர்க்கொன்றை *malan-k-koṉṟai,* பெ.(n.) பூக்கும் கொன்றை மரம்; cassia tree yeilding flowers.

*[மலர் + கொன்றை.]*

மலர்ச்சயனம் *malar-c-cayaṉam,* பெ.(n.) மலர்ப்பள்ளி (திவா.) பார்க்க; see *malar-p-paḷḷi.*

மலர்ச்சி *malarcci,* பெ.(n.) 1. மலர்கை; blooming. 2. பொலிவு; bloom, freshness. 3. மகிழ்ச்சி (சூடா.); cheerfulness.

*[மலர் →மலர்ச்சி.]*

மலர்ச்சூடல் *malar-c-cūḍal,* பெ.(n.) பூச்சூடிக் கொள்ளுதல்; adoring of flowers.

*[மலர் + சூடல்.]*

நிரைகவர்தல், நிரைமீட்டல், படையெடுத்தல், முற்றுகையிடல், மதில்காத்தல், பொருதல், ஊன்றிப் பொருதல், வெற்றி கொண்டாடல் முதலிய போர்வினைகட்கு ஆக்கந்தருவதாகக் கருதியே முறையே வெட்சி, கரந்தை, வஞ்சி, உழிஞை, நொச்சி, தும்பை, வாகை மலர்களை முன்னைத் தமிழர் சூடியிருத்தல் வேண்டும். சில தழைகளும் பூக்களும் அவற்றில் மருத்துவ ஆற்றல் பற்றியும் அணியப்பட்டிருக்கலாம்.

மலர்த்தாது *malar-t-tādu,* பெ.(n.) பூந்தாது (திவா.); pollen.

*[மலர் + Skt. தாது.]*

மலர்த்தாள் *malar-t-tāḷ,* பெ.(n.) மலர்க் காம்பு பார்க்க (யாழ்.அக.); see *malar-k-kāmbu.*

*[மலர் + தாள்.]*

மலர்த்திரள் *malar-t-tiraḷ,* பெ.(n.) பூங் கொத்து (யாழ்.அக.); bunch of flowers.

*[மலர் + திரள்.]*

மலர்த்து-தல் *malarttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. மலர்[2]- பார்க்க; see *malar-.* 2. மூடிய கை, குடை (இ.வ.); to open out unfold, as a closed hand, or umbrella. *குடையை மலர்த்து (உ.வ.).* 3. மல்லாத்துதல்; to throw one on one's back, as in wrestling.

*[மலர்- → மலர்த்து-.]*

மலர்த்துகள் *malar-t-tugaḷ,* பெ.(n.) பூந்துகள்; pollen.

*[மலர் + துகள்.]*

மலர்த்தூள் *malar-t-tūḷ,* பெ.(n.) மலர்த்துகள் பார்க்க; see *malar-t-tugaḷ.*

*[மலர் + தூள்.]*

மலர்த்தெங்கு *malar-t-teṅgu,* பெ.(n.) தென்னம்பாளையின் பூ; flowers of coconut palm.

*[தெங்குமலர் →மலர்த்தெங்கு.]*

மலர்த்தேவி *malar-t-tēvi,* பெ.(n.) மலர்மகள் பார்க்க; see *malar-magaḷ.* *"மலர்த் தேவி நீங்காள் செம்பொற்றோளிணைகள்" (தண்டி. 112, உரைமேற்).*

*[மலர் + தேவி.]*

மலர்த்தேன் *malar-t-tēṉ,* பெ.(n.) 1. பூவிலுண்டாகுந் தேன் (பிங்.); honey from flowers. 2. பூவில் தாறு தங்கும் இடம் (வின்.); anther of flowers.

*[மலர் + தேன்.]*

**மலர்தாங்கி** *malar-tāṅgi,* பெ.(n.) மருந்துச் செடி வகை (வின்.); a medicinal creeper.

*[மலர் + தாங்கி.]*

**மலர்தொடு-த்தல்** *malar-toḍu-,* 4 செ. குன்றாவி.(v.t.) பூவிணைத்துக் கட்டுதல் (சூடா.); to string flowers together.

*[மலர் + தொடு-.]*

**மலர்ந்தபூ** *malarnda-pū,* பெ.(n.) விரிந்த பூ; full blown flower.

*[மலர்ந்த + பூ.]*

**மலர்ப்பலி** *malar-p-pali,* பெ.(n.) கைநிறையக் கொண்டு வழிபாடாக இடும் பூ; handful of flowers offered in worship. *"மண்விளக்கி மலர்ப்பலி சிந்தினார்" (சீவக.2394).*

*[மலர் + பலி.]*

**மலர்ப்பள்ளி** *malar-p-paḷḷi,* பெ.(n.) மலர்ப் படுக்கை; bed of flowers. *"மலர்ப்பள்ளி.. காமக் கடலாழ்ந்தாள்" (சீவக.2503).*

*[மலர் + பள்ளி.]*

**மலர்ப்பு** *malarppu,* பெ.(n.) 1. மலர்விக்கை; causing to bloossom. 2. வெளிப்படக் காட்டுகை; exposing, as one's chest. *"அகலம், மகளிர்க் கல்லது மலர்ப் பறியலையே" (பதிற்றுப்.63, 5).*

*[மலர் → மலர்ப்பு.]*

**மலர்ப்பொடி** *malar-p-poḍi,* பெ.(n.) பொரி நெல் மா (இ.வ.); flour of fried paddy.

*[மலர் + பொடி.]*

**மலர்மகள்** *malar-magaḷ,* பெ.(n.) திருமகள்; *Tirumagaḷ,* as seated on a lotus. *"மலர்மகள் விரும்புநம் மரும்பெற லடிகள்" (திவ்.திருவாய்.1, 3, 1).*

*[மலர் + மகள்.]*

**மலர்மங்கை** *malar-maṅgai,* பெ.(n.) மலர் மகள் பார்க்க; see *malar-magaḷ. "வண்டார் சூந்தன் மலர் மங்கை" (திவ்.பெரியதி. 8, 6, 1).*

*[மலர் + மங்கை.]*

**மலர்மண்டபம்** *malar-maṇḍabam,* பெ.(n.) பூத்தொடுக்கும் மண்டபம்; hall where flowers are strung into garlands. *"அணிமலர் மண்டபத் தகவயிற் செலீஇ" (மணிமே.2, 13),*

*[மலர் + மண்டபம்.]*

**மலர்மிசைநடந்தோன்** *malar-mišai-naḍandōṉ,* பெ.(n.) மலர்மிசையேகினான் பார்க்க; see *malar-mišai-ēgiṉāṉ. "மலர்மிசை நடந்தோன் மலரடியல்லது" (சிலப்.10:204).*

*[மலர்மிசையேகினான் → மலர்மிசை நடந்தோன்.]*

**மலர்மிசையேகினான்** *malar-mišai-y-ēki-ṉāṉ,* பெ.(n.) 1. பூமிசைநடந்தோன் (குறள், 3, உரை) பார்க்க; see *pūmišai-naḍandōṉ.* 2. பரம்பொருள் (குறள், 3, உரை); Supreme being, as reaching the heart of him who meditates.

*[மலர்மிசை + ஏகினான்.]*

**மலர்மிசையோன்** *malar-mišai-yōṉ,* பெ.(n.) மலரோன் பார்க்க; see *malarōṉ.*

**மலரசுனையாள்** *malara-šuṉai-y-āḷ,* பெ.(n.) கருந்துளசி; black basil (சா.அக.).

**மலரடி** *malaradi,* பெ.(n.) பெரியோர் அல்லது தெய்வத்தின் தாமரை போன்ற திருவடி; foot of a divine or great personage, as lotus-like. *"மலர்மிசை நடந்தோன் மலரடி" (சிலப்.10: 204).*

*[மலர் + அடி.]*

**மலரணை[1]** *malar-anai,* பெ.(n.) மலர்ப்பள்ளி பார்க்க; see *malar-p-palli.*

*[மலர் + அணை.]*

**மலரணை[2]** *malaranai,* பெ.(n.) பேரிரவலான மலரணை (பினாமி); transaction entered into by one person in the name of another.

**மலரந்திரம்** *malarandiram,* பெ.(n.) பெருங் குடல்; colon (சா.அக.).

**மலரமளி** *malar-amali,* பெ.(n.) மலர்ப்பள்ளி பார்க்க; see *malar-p-palli. "தானிருந்த மலரமளிக்கண்ணே" (சிலப்.8, 117, உரை).*

*[மலர்ப்பள்ளி →மலரமளி.]*

**மலரவன்** *malaravan,* பெ.(n.) மலரோன் பார்க்க; see *malarōn. "மலரவனாசைப் படவும்" (திருவாச.20, 10).*

*[மலலோன் →மலரவன்.]*

**மலரவிழி—த்தல்** *malara-vili-,* 4 செ.கு.வி. (v.i.) பரக்க விழித்தல், விரிவாய் விழித்தல்; opening eyes fully, wide opening of the eyes.

*[மலர + விழி.]*

**மலருக்குநாயகம்** *malarukku-nāyagam,* பெ.(n.) கருவண்டு (சங்.அக.); black bee.

*[மலருக்கு + நாயகம்.]*

**மலரேடு** *malarēdu,* பெ.(n.) பூவிதழ்; petal.

*[மலர் + ஏடு.]*

**மலரோகிணி** *malarōgini,* பெ.(n.) கடுகு ரோகிணி; root of picrorhiza kurrooa (சா.அக.).

**மலரோன்** *malarōn,* பெ.(n.) (தாமரையி லிருப்பவன்) நான்முகன்; *Brahmā,* as seated on a lotus. *"மலரோ னெடுமா லறியா மனின்ற வரும் பெருமான்" (திருவாச. 24, 3).*

*[மலர் →மலரோன்.]*

**மலவறட்சி** *malavaratci,* பெ.(n.) வறட்சியினால் மலந் தடைபடல்; costive.

*[மலம் + வறட்சி.]*

**மலவாகி** *malavāgi,* பெ.(n.) மலத்துளையை அடுத்துள்ள குடற்பகுதி; rectum (C.G.).

*[மலம் + வாகி.]*

**மலவாசயம்** *malavāšayam,* பெ.(n.) மலப்பை (யாழ்.அக.) பார்க்க; see *mala-p-pai.*

**மலவாதம்** *mala-vādam,* பெ.(n.) மலச் சிக்கல் (பைஷஜ.) பார்க்க; see *mala-c-cikkal .*

*[மலம் + வாதம்.]*

**மலவாதை** *mala-vādai,* பெ.(n.) மலபாதை பார்க்க; see *mala-pādai.*

*[மலபாதை → மலவாதை.]*

**மலவாய்மாங்காய்** *mala-vāy-māngāy,* பெ.(n.) ஆசனவாயிற் றோன்றும் மாங்காயைப் போன்ற கட்டி; a swelling at the anus (சா.அக.).

*[மலவாய் + மாங்காய்.]*

**மலவாயில்** *mala-vāyil*, பெ.(n.) மலத்துளை பார்க்க; see *mala-t-tuḷai.*

*[மலத்துளை →மலவாயில் – மலம் + வாயில்..]*

**மலவைரி** *mala-vairi*, பெ.(n.) மும்மலங்களின் எதிரியாகிய சிவன் (போற்றிப்பஃ, உரை) பக்.18); *šiva*, as the enemy of *mu-m-malam.*

*[மலம் + Skt. வைரி.]*

**மலற்கு** *malarku*, பெ.(n.) மலையாமணக்கு பார்க்க; see *malai-y-āmaṇakku.*

**மலறவம்** *malaṟavam*, பெ.(n.) பிண்ணாக்கு; oil cake (சா.அக.).

**மலாகை** *malāgai*, பெ.(n.) 1. தூது செல்பவள்; female messenger. 2. காமமிக்கவள்; a morous woman. 3. பெண் யானை; female elephant.

**மலாங்கு** *malāṅgu*, பெ.(n.) விலாங்கு மீன்; true eel.

*[மலங்கு →மலாங்கு (வே.க.4:37).]*

**மலாசயம்** *malāšayam*, பெ.(n.) மலப்பை (ஞான.8, உரை) பார்க்க; see *mala-p-pai.*

**மலாசு** *malāšu*, பெ.(n.) சிறுபூளை (மலை.); a common way-side weed.

**மலாஞ்சி** *malāñji*, பெ.(n.) வெள்ளுள்ளி (சங்அக.); garlic.

**மலாடு[1]** *malāḍu*, பெ.(n.) மலையமான்கள் வாழ்ந்த பகுதி; the area of the Malayamans of *tiru-k-kōvalūr.* *"ராசராசவளனாட்டு மலாட்டுக் குறுக்கைக் கூற்றத்து" (தெ.க. தொ.26, கல்.416–2).*

**மலாடு[2]** *malāḍu*, பெ.(n.) மலையமானாடு பார்க்க; see *malaya-māṉāḍu.*

*[மலையமானாடு →மலாடு.]*

**மலாடு[3]** *malāḍu*, பெ.(n.) கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டனுள் திருக்கோவலூரைச் சூழ்ந்த நாடு (நன்.273, உரை); the region around *tiru-k-koyil-ūr*, where a provincial dialect of Tamil was formerly spoken, one of twelve *koḍum-tamiḻ-nāḍu.*

**மலாந்திரம்** *malāndiram*, பெ.(n.) பெருங் குடலின் கீழ்ப்பகுதி; descending colon, lower portion of the large intestiness (C.G.).

**மலாமட்டி** *malā-maṭṭi*, பெ.(n.) பேரிலுப்பை; a big variety of *iluppai* (சா.அக.).

**மலார்** *malār*, பெ.(n.) இளங்கொம்பு; tender branches, twink, switch.

*[விளார் →மிளார் →மலார் (கொ.வ.).]*

**மலாரடி** *malār-aḍi*, பெ.(n.) கலக்கம் (சங்.அக.); confusion, affliction.

**மலாரம்** *malāram*, பெ.(n.) வளையற் கோவை (வின்.); string or bunch of bracelets.

க. மலார; தெ. மலாரமு.

**மலாரு** *malāru*, பெ.(n.) மலையாமணக்கு (சங்.அக.); see *malai-y-āmaṇakku.*

**மலாவகம்** *malāvagam*, பெ.(n.) பிண்ணாக்கு (சூடா.); punnac, oil-cake.

**மலாறு** *malāṟu*, பெ.(n.) மலையாமணக்கு; the coral tree (சா.அக.).

மலி[1]–தல் *mali-,* 2 செ.கு.வி.(v.i.) 1. மிகுதல்; to abound, to be plentiful. *"கனிப்பொறை மலிந்து நின்ற கற்பகப் பூங்கொம்பு" (சீவக.2541).* 2. நிறைதல்; to be full, to increase, to flow, as tide. *"மலிகடற் றண்சேர்ப்ப" (நாலடி, 98).* 3. நெருங்குதல் (தொல். சொல்.396, உரை); to be crowded. 4. புணர்ச்சியின் மகிழ்தல்; to be happy during coition. *"மலிதலுமூடலும்" (தொல். பொருள்.235).* 5. செருக்குதல்; to be proud. *"மகிழ்ந்தன்று மலிந்தன்று மதனினு மிலனே" (புறநா.77).* 6. விம்முதல்; to become large, swell. *"முலை மலிந்து" (பு.வெ.11, பெண்.2).* 7. பரத்தல்; to spread, expand. *"மலை மலிந்தன்ன மார்பும்" (பு.வெ.11, பெண்.2).* 8. விரைதல்; to move swiftly, to hasten. *"நீ மலிந்து செல்லாய்" (பு.வெ.12, பெண்.4).* 9. விலை நயத்தல் (கொ.வ.); to be cheap in price.

*[முல்→மல் →மலி (வே.க.4:29).]*

மலி[2]–தல் *mali-,* 2 செ.குன்றாவி.(v.t.) சொல்லுதல்; to express, tell. *"உறுபுகழ் மலிந்தன்று" (பு.வெ.10, 4, கொளு.).*

*[முல்→மல் →மலி.]*

மலிக்காரம் *mali-k-kāram,* பெ.(n.) அரிதாரம்; orpiment (சா.அக.).

மலிசம் *mališam,* பெ.(n.) அரசமரம் (சங்.அக.); pipal.

மலிபு *malibu,* பெ.(n.) மிகுதி;; excess, abundance. *"வாடையது மலிபு" (பு.வெ.8, 16).*

*[மலி →மலிபு (வே.க.4:30).]*

மலிர்–தல் *malir-,* 4 செ.கு.வி.(v.i.) 1. பெருகுதல்; to flood. *"ஓத மில்லிறந்து மலிர" (நற்.117).* 2. நீர் முதலியன ஒழுகுதல்; to leak, to drop. *"பின்னு மலிரும் பிசிர்போல" (பரிபா.6, 83).* 3. பயிலுதல்; to come frequently. *"கனியின் மலரின் மலிர்கால்" (பரிபா.8, 54).*

*[முல்→மல்→மலி →மலிர்–, (வே.க.4:30)]*

மலிர்நிறை *malir-nirai,* பெ.(n.) 1. பெரு வெள்ளம்; full flood. *"காவிரி மலர்நிறை" (ஐங்குறு.42).* 2. நீரூற்று; copious flow of water, as in a spring. *"மணலாடு மயிர்நிறை" (ஐங்குறு.15).*

*[மலிர் + நிறை.]*

மலிலாதி *malilādi,* பெ.(n.) பச்சைக் கற்பூரம்; crude camphor (சா.அக.).

மலிவிடி *mali-viḍi,* பெ.(n.) கால்நடைகளின் முழங்காலிற் காணும் நோய்வகை ; swelling of the knee-joints of cattle (M.Cm. D.247).

மலிவு *malivu,* பெ.(n.) 1. மிகுதி; abundance. 2. நிறைவு (பிங்.); fullness. *"மனைவேள்வி மலிவுரைத் தன்று" (பு.வெ.9, 27).* 3. காதலரின் புணர்ச்சியுவகை (அகப்.); happiness of lovers in sexual union. *"மலிவும் புலவியும்" (தொல்.பொருள்.500).* 4. உவகை; cheerfulness. *"மலிவுடை யுள்ளத்தான்" (பரிபா.19, 88).* 5. நயவிலை; cheapness. *"மலிவுகுறைவது விசாரித் திடுவர்" (அறப்.சத.83).* 6. தன்மை; nature, characteristics. *"முயக்கம் வேட்ட மக்கட் பெண்டிர் மலிவுரைத்தன்று" (பு.வெ.9, 46,*

கொளு.). 7. மேன்மை; that which is best. "இம் முப்பாலும், மாமலிவுடனே மற்ற மெலிவோடு சமனுமாமே" (சூடா.12, 10).

[முல் (பொருந்தற் கருத்துவேர்) →மல்→ மலி → மலிவு (வே.க.4:29).]

மலினம் *malinam,* பெ.(n.) 1. மாசு (சூடா.); dirt, filth. "மலினங்கொளும் பழையகந்தை யணிவோரிடத்தும்" (அறப்.சத.21). 2. கறுப்பு (வின்.); blackness. 3. தீக்குணம் (வின்.); depravity, wickedness. 4. கரிசு; sin, guilt. "என்கண் மலினமறுத்து" (திவ்.திருவாய்.5, 1, 4). 5. கெடுதி (வின்.); badness. 6. குறைவு; defect, deficiency. 7. மோர் (யாழ்.அக.); buttermilk. 8. பச்சிலை (பிங்.); mysore gamboge.

மலினமுகன்[1] *malina-mugan,* பெ.(n.) இறந்தோன்; ghost, dead body.

மலினமுகன்[2] *malina-mugan,* பெ.(n.) 1. தீ; the god of fire. 2. தீய ஆவி; ghost, goblin. 3. கருங்குரங்கு; black monkey. 4. கொடியவன்; wicked, vile, cruel man. 5. கருவண்டு; black bee.

மலினவல்லி *malina-valli,* பெ.(n.) பீர்க்கங் காய்; lufa, ridge gourd (சா.அக.).

மலுக்கு *malukku,* பெ.(n.) சுருக்கு முடிச்சு (இ.வ.); slip - knot.

மலை[1]–தல் *malai-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. சூடுதல்; to wear, put on. "மாபெருந் தானையர் மலைந்த பூவும்" (தொல். பொருள். 60). 2. மேற்கொள்ளுதல்; to take upon oneself, to enter into, as war. "பழிமலைந் தெய்திய வாக்கத்தின்" (குறள், 657). 3. ஒத்தல்; to resemble. "கவிகை மாமதிக் கடவுளை மலைய" (கந்தபு.சூரணரசிருக்.9). 4. பறித்தல்; to pluck. "கழுநீர் மலையு வயன்மா தினரே" (கல்லா.). 5. எதிர்த்தல் (சூடா.); to oppose, fight against.

மலை[2]–தல் *malai-,* 2 செ.கு.வி.(v.i.) 1. பகைத்து மாறுபடுதல்; to fight, to become opposed. "இகன் மலைந்தெழுந்த போழ்தில்" (சீவக.747). 2. மயங்குதல்; to be staggered, to be doubtful or confused. "வேறுவேறு எடுத்துக்காட்டுதல் பற்றி மலையற்க" (சி.போ.பா.62, பக்.146). 3. வழக்காடுதல்; to wrangle, dispute. "தத்த மதங்களே யமைவதாக வரற்றி மலைந்தனர்" (திருவாச.4, 5).

[முல் (பொருந்தற்கருத்துவேர்)→மல்→மலை (வே.க.4:28).]

மலை[3]–த்தல் *malai-,* 2 செ.கு.வி.(v.i.) 1. பொருதல்; to fight, go to war. "வேந்தனோடு..... மலைத்தனையென்பது" (புறநா.36). 2. மாறுபடுதல்; to become unfriendly. "மடங்கலிற் சீறி மலைத் தெழுந்து" (பு.வெ.3, 24). 3. மயங்குதல் (கொ.வ.); to be staggered, over weared to be confused, confounded. 4. வியத்தல் (கொ.வ.); to be amazed, thunderstruck.

[முல்→மல் →மலை.]

மலை[4]–த்தல் *malai-,* 11 செ.குன்றாவி. (v.t.) வருத்துதல்; to afflict, distress. "மள்ளர் மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப" (புறநா.10).

[முல்→மல் →மலை.]

மலை[5] *malai-,* பெ.(n.) 1. வளமுள்ள பெரிய இடம்; hill, mountain. "மலையினு மாணப்

*பெரிது" (குறள், 124), "வறப்பினும் வளந்தரும் வண்மையும் மலைக்கே" (நன்.பொதுப்பா.28).* 2. ஈட்டம்; collection, aggregation. *"சொன்மலை" (திருமுரு.263).* 3. மிகுதி (கொ.வ.); abundance, bigness, as a mountain.

*[முல்→மல் →மலை.]*

**மலை**[6] *malai-,* பெ.(n.) போர்த் தொழில்; occupation of war. *"மலைத்தலை வந்த மரையாள் கதழ் விடை" (மலைபடு.331).*

*[மல் →மலை.]*

**மலைஊவை** *malai-ūvai,* பெ.(n.) ஒருவகைப் பழம்; a kind of fruit.

**மலலக்கஞ்சா** *malai-kañjā,* பெ.(n.) ஒரு கொடிய நஞ்சு; a virulent poisonous plant (சா.அக.).

**மலைக்கட்டுக்குளம்** *malai-k-kaṭṭu-k-kuḷam,* பெ.(n.) மலையடிவாரத்தில் அமைக்கப் பெற்ற குளம் (நாஞ்.); tank at the base of a hill.

*[மலைக்கட்டு + குளம்.]*

**மலைக்கடுகு** *malai-k-kaḍugu,* பெ.(n.) கடுகு வகை (வின்.); a kind of mustard.

*[மலை + கடுகு.]*

**மலைக்கரு** *malai-k-karu,* பெ.(n.) மாழை மண் வகை (சங்.அக.); a kind of ore.

*[மலை + கரு.]*

**மலைக்கருணை** *malai-k-karuṇai,* பெ.(n.) அசோகு; asoka tree.

**மலைக்கல்** *malai-k-kal,* பெ.(n.) ஒருவகைத் தாது; a kind of mineral stone.

*[மலை + கல்.]*

**மலைக்கலவாய்** *malai-k-kalavāy,* பெ.(n.) மீன் கொத்திப் புள் வகை (வின்.); a species of kingfisher.

*[மலை + கலவாய்.]*



**மலைக்கள்ளி** *malai-k-kaḷḷi,* பெ.(n.) கள்ளி வகை; (M.M.104) navelwort, *kalanshoe laciniata.*

*[மலை + கள்ளி.]*

**மலைக்களா** *mala k-kaḷā,* பெ.(n.) 1. செடி வகை; w rtle berry, *vaccinium.* 2. நீண்ட கை; hill carondah. l.sh. *vaccinium leschenaultil.*

*[மலை + களா.]*

**மலைக்கற்றாழை** *malai-k-kaṟṟāḻai,* பெ.(n.) கற்றாழைச் செடி வகை (இலத்.); bastard aloe. m.sh. *agave vivipara.*

*[மலை + கற்றாழை.]*

**மலைக்காக்கணத்தி** *malai-k-kākkaṇatti,* பெ.(n.) பெருங்காக்கணங் கொடி; a large variety of twiner (சா.அக.).

*[மலை + காக்கணத்தி.]*

மலைக்காஞ்சிரம் *malai-k-kāñciram,* பெ. (n.) வெள்ளைநாகை பார்க்க; see *veḷḷai-nāgai*(சா.அக.).

மலைக்காட்டுப்பருத்தி *malai-k-kāṭṭu-p-parutti,*பெ.(n.) செடி வகை; felt - leaved hilly rose - mallow l.sh. *Hibiscus Canescens.*

*[மலைக்காடு + பருத்தி.]*

மலைக்காய்ச்சல் *malai-k-kāiccal,* பெ.(n.) மலையிலிருந்து வரும் சுனை நீரைக் குடிப்பதினாலேற்படும் காய்ச்சல்; a kind of fever caused by drinking the mountain spring water.

*[மலை + காய்ச்சல்.]*

மலைக்கால்[1] *malai-k-kāl,* பெ.(n.) முடவாட்டுக் கல்; a kind of mineral stone (சா.அக.).

மலைக்கால்[2] *malai-k-kāl,* பெ.(n.) ஆட்டுக் கல் (யாழ்.அக.); grinding stone, mashing stone.

*[மலை + கால்.]*

மலைக்காவகி *malai-k-kāvagi,* பெ.(n.) பெருங்காக்கோளி; unidentified plant.

மலைக்காளான் *malai-k-kāḷāṉ,* பெ.(n.) பெருங்காளான்; a mushroom which is large.

*[மலை + காளான். மலை = பெரியது.]*

மலைக்கிட்டம் *malai-k-kiṭṭam,* பெ.(n.) எரிமலையினின்று வெளிவரும் உருக்குக் கிட்டம்; lava.

*[மலை + கிட்டம்.]*

மலைக்கிளுவை *malai-k-kiḷuvai,* பெ.(n.) 1. மலைமா; hill balsam tree. 2. மரவகை; downy hill balsam tree m.tr. *Balsamodendron pubescens.*

*[மலை + கிளுவை.]*

மலைக்குகை *malai-k-kugai,* பெ.(n.) மலையிலே தானாகவாவது குடையப் பட்டாவது அமைந்த உள்ளிடம் (வின்.); cave in a hill.

*[மலை + குகை.]*

மலைக்குடவு *malai-k-kuḍavu,*பெ.(n.) இரு மலைகளுக்கிடையே யுள்ள பள்ளம் (வின்.); hallow between two ridges or knolls.

*[மலை + குடவு.]*

மலைக்குடிக்கோல் *malai-k-kudi-k-kōl,* பெ.(n.) நீட்டலளவை முறையில் ஒன்று; a linear measurement. *"சுந்தரபாண்டிய (பு)த்துக் கண்டுழவான நிலத்திலெ ஒருபக்கமடைய மலைக்குடிக்கொலால் பெரும்பூவும் குறுவையும் விளையும் நிலத்து நிலம்" (தெ.க.தொ.4, கல்372/1986).*

மலைக்குடோரி *malai-k-kuḍōri,* பெ.(n.) உருக்கு; steel.

மலைக்குண்டுவேர் *malai-k-kuṇḍu-vēr,* பெ.(n.) அதிமதுரம்; liquorice plant.

மலைக்குரண்டநாயகம் *malai-k-kuraṇḍa-nāyagam,*பெ.(n.) மருதோன்றி வகை; large pink nail dye L.sh, *Barleria tomentosa acuminala.*

மலைக்குரண்டம் *malai-k-kuraṇḍam,* பெ. (n.) நீலச்செம்முள்ளி; shining leaved sepalled blue nail dye.

**மலைக்குரவன்** *malai-k-kuravaṉ,* பெ.(n.) நஞ்சு வகை; a kind of arsenic (சா.அக.).

**மலைக்குருவி** *malai-k-kuruvi,* பெ.(n.) குன்றிமணி; jeweller's bead.

**மலைக்குறட்டை** *malai-k-kuṟaṭṭai,* பெ.(n.) சிறுமர வகை; wavy leaved spindle - tree. s.tr. Erionynous dichotomus.

**மலைக்குறிஞ்சா** *malai-k-kuṟiñjā,* பெ.(n.) 1. செங்குறிஞ்சி; red *curinjy* tree. 2. கல் கிளிஞ்சி; red cedar (சா.அக.).

**மலைக்குறுந்தாளி** *malai-k-kuṟundāḷi,* பெ.(n.) அரிவாண்மணைப்பூண்டு; sickle leaf (சா.அக.).

**மலைக்குறுப்பான்** *malai-k-kuṟuppāṉ,* பெ.(n.) பறவை வகை (வின்.); mountain barbet, *megalocura.*

*[மலை + குறுப்பான்.]*

**மலைக்குறுவி** *malai-k-kuṟuvi,* பெ.(n.) மலைக்கரு பார்க்க; see *malai-k-karu.*

**மலைக்குன்றிவேர்** *malai-k-kuṉṟi-vēr,* பெ.(n.) அதிமதுரம்; liquorice (சா.அக.).

**மலைக்கொடிமன்னன்** *malai-k-koḍi-maṉṉaṉ,* பெ.(n.) மயலத்துவசன் பார்க்க; see *malaya-t-tuvašaṉ. "மன்னு மாதவம் பெருகிய மலைக்கொடி மன்னன்" (திருவாலவா.4, 1)*

**மலைக்கொய்யா** *malai-k-koyyā,* பெ.(n.) கொய்யா வகை; (M.M.) hill guava s.tr. *Rhodomyrtnsi tomntose.*

*[மலை + கொய்யா.]*

**மலைக்கொழிஞ்சி** *malai-k-koḻiñji,* பெ.(n.) வெட்பாலை வகை (இ.வ); wild durian, l.tr. *cullenia excelsa.*

**மலைக்கொன்றை** *malai-k-koṉṟai,* பெ.(n.) 1. மரவகை; shigle tree l.tr. *Acrocarpus fraxinifolius.* 2. கொன்றை வகை; bristle - tipped oblong leaved *eglandular senna, cassia montana.*

*[மலை + கொன்றை.]*

**மலைக்கொன்னை** *malai-k-koṉṉai,* பெ.(n.) மலைக்கொன்றை பார்க்க; see *malai-k-koṉṟai.*

*[மலை + கொன்னை. கொன்றை → கொன்னை (கொ.வ).]*

**மலைக்கோங்கு** *malai-k-kōṅgu,* பெ.(n.) மரவகை; mountain silk cotton tree.

*[மலை + கோங்கு.]*

**மலைக்கோஞ்சில்** *malai-k-kōñjil,* பெ.(n.) மலைக்கொழிஞ்சி பார்க்க; see *malai-k-koḻiñji.*

*[மலை + கொழிஞ்சில். கொழுஞ்சி → கொழுஞ்சில் →கோஞ்சில்.]*

**மலைக்கோரன்** *malai-k-kōraṉ,* பெ.(n.) அசோகு மரம்; a tree *saraca Indica* (சா.அக.).

**மலைக்கோன்** *malai-k-kōṉ,* பெ.(n.) மலைக் கொன்றை (சா.அக.) பார்க்க; see *malai-k-koṉṟai.*

*[மலை + கோன்.]*

**மலைகலக்கி** *malai-k-kalakki,* பெ.(n.) பூடு வகை (வின்.); peacock-tailed adiantum, a maidenhair fern, *adiantum caudatum.*

**மலைகுனியநின்றபிரான்** *malai-kuṉiya-niṉṟa-pirāṉ,* பெ.(n.) மலைகுனிய நின்றான் பார்க்க; see *malai-kuṉiya-niṉṟāṉ. "மலைகுனிய நின்ற பிரான் போந்தானுலா" (திருவேங்கடவுலா.mss.).*

*[மலைகுனியநின்றான் → மலைகுனியநின்ற பிரான்.]*

**மலைகுனியநின்றான்** *malai-kuṉiya-niṉṟāṉ,* பெ.(n.) திருவேங்கடமுடையான் (S.I.I.iv.79); the God *Tirumāl* on the *Tirupati* hills.

*[மலைகுனிய + நின்றான்.]*

**மலைச்சக்கரம்** *malai-c-cakkaram,* பெ.(n.) சாளக்கிராமம் (சங்.அக.); black fossil ammonite.

*[மலை + சக்கரம்.]*

**மலைச்சர்க்கரைவள்ளி** *malai-c-cakkarai-vaḷḷi,* பெ.(n.) மரவள்ளி பார்க்க; see *mara-vaḷḷi.*

*[மலை + சர்க்கரைவள்ளி.]*

**மலைச்சரக்கு** *malai-c-carakku,* பெ.(n.) 1. மலையிலுண்டாம் மூலிகைகளிலிருந்து எடுத்த மருந்துச் சரக்கு (இ.வ.); medicinal drugs prepared from herbs growing on hills. 2. கருப்பூர வகை (சிலப்.14, 112, உரை); a kind of camphor.

*[மலை + சரக்கு.]*

**மலைச்சார்** *malai-c-cār,* பெ.(n.) மலைச் சார்வு (வின்.) பார்க்க; see *malai-c-cārvu.*

*[மலைச்சார்வு → மலைச்சார்.]*

**மலைச்சார்பின்பூநீர்** *malai-c-cārbiṉ-pū-nīr,* பெ.(n.) குறிஞ்சி நிலத்துப் பூநீறு; efflorence of fuller's earth of mountainours region (சா.அக.).

*[மலைச்சார்பின் + நீறு.]*

**மலைச்சார்பு[1]** *malai-c-cārbu,* பெ.(n.) மலைச்சார்வு (திவா.) பார்க்க; see *malai-c-cārvu .*

*[மலை + சார்பு. சார்வு → சார்பு.]*

**மலைச்சார்பு[2]** *malai-c-cārbu,* பெ.(n.) குறிஞ்சி நிலம்; mountainous tract.

*[மலை + சார்பு.]*

**மலைச்சார்வு** *malai-c-cārvu,* பெ.(n.) மலைநாடு (வின்.); mountainous tract, hilly country.

*[மலை + சார்வு.]*

**மலைச்சாரல்** *malai-c-cāral,* பெ.(n.) 1. மலைப்பக்கம் பார்க்க; see *malai-p-pakkam. "பெருமலைச் சாரலெய்தி" (பெருங். இலாவாண.12, 41).* 2. மலையிற் சாரலாகப் பெய்து செல்லும் மேகம் (இ.வ.); rain clouds over the hills. 3. மலையில் விழும் மழை (வின்.); rain falling on the hills. 4. சாரற்காற்று (வின்.); cool wind from the hills.

*[மலை + சாரல்.]*

**மலைச்சாரை** *malai-c-cārai,* பெ.(n.) மலைப் பாம்பு வகை (வின்.); hill rat snake.

*[மலை + சாரை.]*

**மலைச்சி** *malaicci,* பெ.(n.) நச்சுப்புல்; a kind of poisonous grass (சா.அக.).

**மலைச்சிகரம்** *malai-c-cigaram,* பெ.(n.) மலையினுச்சி; summit of a mountain.

*[மலை + சிகரம்.]*

**மலைச்சிமிக்கி** *malai-c-cimikki,* பெ.(n.) சிமிக்கிப் பூ; mountain passion flower.

*[மலை + சிமிக்கி.]*

**மலைச்சிறுகொய்யா** *malai-c-cirukoyyā,* பெ.(n.) மலைக்கொய்யா பார்க்க; see *malaii-k-koyyā.*

*[மலை + கொய்யா.]*

**மலைச்சுண்டை** *malai-c-cundai,* பெ.(n.) சுண்டை வகை; Turkey berry.

*[மலை + சுண்டை.]*

**மலைச்சுரம்** *malai-c-curam,* பெ.(n.) முறைக் காய்ச்சல் வகை (இ.வ.); malaria.

*[மலை + சுரம்.]*

**மலைச்சுருக்காய்** *malai-c-curakkāy,* பெ.(n.) கட்டுக்கொடி பார்க்க; see *kattu-k-kodi*(சா.அக.).

**மலைச்சூலி** *malai-c-cūli,* பெ.(n.) பெருஞ்சூலி மரம்; a tree (சா.அக.).

*[மலை + சூலி.]*

**மலைச்செந்தொட்டி** *mala-c-centotti,* பெ.(n.) பெருஞ்செந்தொட்டி, பேராமுட்டி; pavonia odorate (சா.அக.).

**மலைச்செம்பு** *malai-c-cembu,* பெ.(n.) தாம்பூரச் சிகை; a kind of mineral (சா.அக.).

**மலைச்சேவிகம்** *malai-c-cēvigam,* பெ.(n.) பெருமருந்து; a twiner (சா.அக.).

**மலைச்சோம்பு** *malai-c-cōmbu,* பெ.(n.) சீமைச்சோம்பு பார்க்க; see *cīmai-c-cōmbu* (சா.அக.).

*[மலை + சோம்பு.]*

**மலைசாரி** *malaicāri,* பெ.(n.) கிளிஞ்சல் (சங்.அக.); mussel.

**மலைத்தகரை** *malai-t-tagarai,* பெ.(n.) வண்டு கொல்லிச் செடி (இங்.வை.); ringworm shrub.

*[மலை + தகரை.]*

**மலைத்தணக்கு** *malai-t-tanakku,* பெ.(n.) 1. வெள்ளைக் கடம்பு; bridal - couch plant. 2. நீண்ட மரவகை; obovate - leaved bridal - couch plant l.tr. *Hymenodiciyan obovatum.*

*[மலை + தணக்கு.]*

**மலைத்தளிச்சுயம்பு** *malai-tali-c-cuyambu,* பெ.(n.) பூரம்; subchloride of mercury (சா.அக.).

**மலைத்தாமரை** *malai-t-tāmarai,* பெ.(n.) திருநாமப்பாலை; oval - leaved china root.

*[மலை + தாமரை.]*

**மலைத்தாரம்** *malai-t-tāram,* பெ.(n.) மலைபடுபொருள் பார்க்க; see *malapaḍu-poruḷ.* "*மலைத்தாரமுங் கடற்றரமும்*" *(புறநா.343).*

*[மலை + தாரம்.]*

**மலைத்தாரிகம்** *malai-t-tārigam,* பெ.(n.) பெருஞ்செந்தொட்டி; *pavonia odorata* (சா.அக.).

**மலைத்திருக்கல்** *mala-t-tirukkal,* பெ.(n.) மிளகு; pepper (சா.அக.).

**மலைத்துத்தி** *malai-t-tutti,* பெ.(n.) பெருந்துத்தி மரம்; a kind of tree (சா.அக.).

*[மலை + துத்தி.]*

**மலைத்தும்பை** *malai-t-tumbai,* பெ.(n.) கவிழ்தும்பை (சங்.அக.); a low annual plant.

*[மலை + தும்பை.]*

**மலைத்தும்மட்டி** *malai-t-tummaṭṭi,* பெ.(n.) கக்கரி (M.M.617); kakari-melon

*[மலை + தும்மட்டி.]*

**மலைத்துவரை** *malai-t-tuvarai,* பெ.(n.) துவரை வகை (சங்.அக.); hill dholl, 1.sh. *Cajanus indicus - bicolor.*

*[மலை + துவரை.]*

**மலைத்துவிகம்** *malai-t-tuvigam,* பெ.(n.) பெரு நாங்கில் மரம்; a tree

**மலைத்துளசி** *malai-t-tuḷaši,* பெ.(n.) கற்றுளசி; stone basil.

*[மலை + துளசி. மலை = கல்.]*

**மலைத்தூசி** *malai-t-tūši,* பெ.(n.) மலைச்சக்கரம் பார்க்க; see *malai-c-cakkaram*

*[மலை + தூசி.]*

**மலைத்தேங்காய்** *malai-t-tēṅgāy,* பெ.(n.) பீநாறி; fetid tree.

*[மலை + தேங்காய்.]*

**மலைத்தேவதாரம்** *malai-t-tēvadāram,* பெ.(n.) வெள்ளையகில் பார்க்க; see *veḷḷai-akil.*

**மலைத்தேன்** *malai-t-tēṉ,* பெ.(n.) 1. மலையிலுண்டாகுந்தேன்; pure honey, as from the hills. "*உலப்புறா தினிக்கு முயர்மலைத் தேனே*" *(அருட்பா.vi, அருட்பெருஞ்.1412).* 2. இன்சுவையுள்ள பலாப்பழம் (இ.வ.); delicious jack-fruit.

*[மலை + தேன்.]*

**மலைத்தேனீ** *malai-t-tēṉī,* பெ.(n.) தேனீ வகை (M.M.870); hill bee, *Apis dorsate.*

*[மலை + தேனீ.]*

**மலைத்தொடக்கு** *malai-t-toḍakku,* பெ.(n.) கன்மதம் (சங்.அக.); rock alum.

*[மலை + தொடக்கு.]*

**மலைதல்** *malaidal,* பெ.(n.) 1. போர் (பிங்.); war. 2. (Gram.) மலைவு, 4 (யாழ்.அக.) பார்க்க; see *malaivu.*

*[மல் → மலை → மலைதல்.]*

**மலைதாங்கி[1]** *malai-tāṅgi,* பெ.(n.) 1. ஒரு கொடி; a creeper. 2. பங்கம்பாளை; *aristolochia bractata.* 3. பொன் முசுட்டை; a twiner (சா.அக.).

**மலைதாங்கி**[2] *malai-tāṅgi,* பெ.(n.) 1. அறிவாண் முனைப்பூண்டு (பதார்த்த.292); sickle - leaf. 2. பொன்முசுட்டை; buckler leaved moon seed. 3. வட்டத்திருப்பி (சங்.அக.); kidney - leaved moonseed.

**மலைநாகன்** *malai-nāgaṉ,* பெ.(n.) நாகப் பாம்பு வகை; hill cobra.

*[மலை + நாள். நாகப்பாம்பு→நாகன்.]*

**மலைநாங்கல்** *malai-nāṅgal,* பெ.(n.) மலை நாங்கு பார்க்க; see *malai-nāṅgu.*

*[மலை + நாங்கல். நாங்கு →நாங்கல்.]*

**மலைநாங்கு** *malai-nāṅgu,* பெ.(n.) கரு நாங்கு; long pointed broad leaved ceylon iron wood

*[மலை + நாங்கு.]*

**மலைநாடன்** *malai-nāḍaṉ,* பெ.(n.) 1. மலை வளமுடைய நாட்டுக்கு அரசன்; king of a mountainous region. *"வான்றோய் மலைநாட உய்த்திட்டுந் தேனீக் கரி" (நாலடி, 10).* 2. சேரன் (சங்.அக.); *cēra* king as ruling over a mountainous country.

*[மலை + நாடன்.]*

**மலைநாடு**[1] *malai-nāḍu,* பெ.(n.) வட பொதிகை; North Podigai (சா.அக.).

*[மலை + நாடு.]*

**மலைநாடு**[2] *malai-nāḍu,* பெ.(n.) 1. மலைப் பாங்கான நாடு; hilly country. 2. சேரநாடு; cēra kingdom, as hilly. *"வரையின் வளனுமுடன் பெருகி மல்குநாடு மலைநாடு" (பெரியபு.விறன்மிண்டர்.1).*

*[மலை + நாடு.]*

**மலைநாதம்** *malai-nādam,* பெ.(n.) 1. கன்மதம்; rock alum. 2. மாழைமண் வகை; a kind of ore. 3. மாழை நஞ்சு; a mineral poison.

*[மலை + நாதம்.]*

**மலைநாயக்கன்** *malai-nāyakkaṉ,* பெ.(n.) தமிழ் மலையாளி (E.T.iv.393);Tamil malaiyali, a tribe.

*[மலை + நாய்க்கன்.]*

**மலைநாரத்தை**[1] *malai-nārattai,* பெ.(n.) கிடார நாரத்தை; mountain orange.

*[மலை + நாரத்தை.]*

**மலைநாரத்தை**[2] *malai-nārattai,* பெ.(n.) சிறுமரவகை (இலத்.); trifoliate winged lime, s.tr. *Limonia alata.*

*[மலை + நாரத்தை.]*

**மலைநாவல்** *malai-nāval,* பெ.(n.) சிறு மரவகை (இ.வ.); clove-like black plum, s.tr. *Eugenia caryophyllaca.*

*[மலை + நாவல்.]*

**மலைநெல்** *malai-nel,* பெ.(n.) நெல்வகை (சூடா.); a kind of paddy, as grown on the hills.

*[மலை + நெல்.]*

**மலைநெல்லி** *malai-nelli,* பெ.(n.) பெரு நெல்லி மரம்; a large species of Indian gooseberry tree growing in mountain.

*[மலை + நெல்லி.]*

**மலைநொச்சி** *malai-nocci,* பெ.(n.) மலையில் விளையும் நொச்சி; vitex negundo.

*[மலை + நொச்சி.]*

**மலைநோய்** *malai-nōy,* பெ.(n.) மச்சுக் காற்றின்மையால் மலையுச்சியில் ஏற்படும் நோய்; an abnormal condition due to breathing of an insufficient amount of oxygen or rarefied air found at high elevations on the mountain.

*[மலை + நோய்.]*

**மலைப்பக்கம்** *malai-p-pakam,* பெ.(n.) மலையின் சரிவான பக்கம் (பிங்.); slope of hill.

*[மலை + பக்கம்.]*

**மலைப்பகா** *malai-p-pagā,* பெ.(n.) பெரு முன்னை மரம்; a tree (சா.அக.).

**மலைப்பச்சை**[1] *malai-p-paccai,* பெ.(n.) 1. ஒரு வகை மூலிகை; a kind of wild jasmine yielding red flowers. 2. பச்சிலை மரம்; a tree bearing fruits like orange and white flowers. 3. குளவி; beetle (சா.அக.).

*[மலை + பச்சை.]*

**மலைப்பச்சை**[2] *malai-p-paccai,* பெ.(n.) பச்சிலை; Mysore gamboge.

*[மலை + பச்சை.]*

**மலைப்பண்டம்** *malai-p-paṇḍam,* பெ.(n.) மலைபடுபொருள் பார்க்க; see *malai-paḍu-poruḷ. "மலைப்பண்ட மண்டத் திரையுந்து நாங்கூர்" (திவ்.பெரியதி.3, 8, 3).*

*[மலை + பண்டம்.]*

**மலைப்பண்ணைக்கீரை** *malai-p-paṇṇai-k-kīrai,* பெ.(n.) ஒருவகைக் கீரை; a kind of green (சா.அக.).

*[மலை + பண்ணைக்கீரை.]*

**மலைப்பரிதி** *malai-p-paridi,* பெ.(n.) எருக்கிலை; leaf of *calotropis gigantia* (சா.அக.).

*[மலை + பரிதி.]*

**மலைப்பருத்தி** *malai-p-parutti,* பெ.(n.) கோங்கிலவு; false tragacanth.

*[மலை + பருத்தி.]*

**மலைப்பழம்** *malai-p-paḻam,* பெ.(n.) மலை வாழைப்பழம் (இ.வ.) பார்க்க; see *malai-vāḻai-p-paḻam.*

*[மலை + பழம்.]*

**மலைப்பள்ளி** *malai-p-paḷḷi,* பெ.(n.) அருந்தவர் வாழும் மலையிடம்; hermitage of asectics on the hills. *"இயன் மலைப்பள்ளியு ளருந்தவர்" (பெருங். இலாவாண. 15, 94).*

*[மலை + பள்ளி.]*

**மலைப்பறச்சி** *malai-p-paṟacci,* பெ.(n.) கலைச் செம்பு; a superior kind of copper (சா.அக.).

**மலைப்பாகல்** *malai-p-pāgal,* பெ.(n.) காட்டுப் பாகல்; wild bitter gourd (சா.அக.).

*[மலை + பாகல்.]*

**மலைப்பாசி** *malai-p-pāši,* பெ.(n.) கற்பாசி; stone or rock moss (சா.அக.).

*[மலை + பாசி.]*

**மலைப்பாதம்** *malai-p-pādam,* பெ.(n.) ஒருவகை நஞ்சு; a kind of arsenic (சா.அக.).

**மலைப்பாதை** *malai-p-pādai,* பெ.(n.) மலைமீது ஏறி இறங்க உதவும் வழித் தடம்; path ay of hills.

*[மலை + பாதை.]*

**மலைப்பாம்பு** *malai-p-pāmbu,* பெ.(n.) பாம்பு வகை; rock snake - *python molurus.* *"மலைப் பாம்பாக நகுடன் போய் வீழ்ந்த கதை" (குற்றா.தல.மந்தமா.38).*

*[மலை + பாம்பு.]*



**மலைப்பாம்புவெட்டி** *malai-p-pāmbu-veṭṭi,* பெ.(n.) கனலிப்பூடு; apple bladder nut (சா.அக.).

**மலைப்பாரிசாதம்** *malai-p-pāri-cādam,* பெ.(n.) பவள மல்லிகை அல்லது பவளக் கால் மல்லிகை; coral jasmine (சா.அக.).

**மலைப்பாலை** *malai-p-pālai,* பெ.(n.) பாலை வகை (பதார்த்த.234); a tree; mimusops.

*[மலை + பாலை.]*

**மலைப்பாழி** *malai-p-pāḻi,* பெ.(n.) மலைக் குகை (வின்.) பார்க்க; see *malai-k-kugai.*

*[மலை + பாழி.]*

**மலைப்பிஞ்சு** *malai-p-piñju,* பெ.(n.) சிறுகல் (இ.வ.); small piece of stone.

*[மலை+பிஞ்சு. மல்→மலை. பிள்→பிள→பிஞ்சு.]*

**மலைப்பீலிகா** *malai-p-pīligā,* பெ.(n.) மலையெறும்பு; mountain ant (சா.அக.).

**மலைப்பிரண்டை** *malai-p-piraṇḍai,* பெ.(n.) மணிப்பிரண்டை, சரணைப் பிரண்டை; a kind of vitis (சா.அக.).

*[மலை + பிரண்டை.]*

**மலைப்பிரமி** *malai-p-pirami,* பெ.(n.) பெரும் பிரமி; a plant (சா.அக.).

*[மலை + பிரமி.]*

**மலைப்பிராசிதம்** *malai-p-pirācidam,* பெ.(n.) பிராய் மரம்; paper tree (சா.அக.).

*[மலை + பிராசிதம்.]*

**மலைப்பிளப்பு** *malaip-piḻappu,* பெ.(n.) மலையில் உள்ள விடர் (திவா.); cleft in hills.

*[மலை + பிளப்பு. மல் →மலை. பிள்→பிள →பிளப்பு.]*

**மலைப்பிறங்கம்** *malai-p-piṟaṅgam,* பெ.(n.) மாழை மணல் (சங்.அக.); a kind of metalic ore obtained in mountains, iron - sand.

*[மலை + பிறங்கம்.]*

**மலைப்பு** *malaippu,* பெ.(n.) 1. அறிவு மயக்கம்; confusion of mind. *"மலைப்போ வொருவர் செய்த வஞ்சனையோ" (இராமநா. அயோத்.8).* 2. திகைப்பு (சங்.அக.); astonishment, amazement, wonder. 3. போர்; fighting, war. 4. மாறுபாடு; enmity, opposition. *"மலைப்பொழிய மறங்கடை இயன்று" (பு.வெ.4, 14, கொளு.).* 5. கூத்தின் வகை (பிங்.); a kind of dance. *"புறப்பாடு*

*முதலாக மலைப்பு கேளிக்கை.... முதலானதுகள் ஸேவிக்கிறதும்" (கோயிலொ. 95).* 6. பெருவியப்பு; sumptuousness, as of meal, splendour, pomp. *"மலைப்பான சாப்பாடு" (உ.வ.).*

*[மல் →மலை →மலைப்பு.]*

மலைபுகையிலை *malai-pugai-ilai,* பெ.(n.) காட்டுப் புகையிலை; wild tobacco (சா.அக.).

*[மலை + புகையிலை.]*

மலைப்புங்கு *malai-p-puṅgu,* பெ.(n.) ஒரு வகைப் புங்கு மரம்; a kind of tree (சா.அக.).

*[மலை + புங்கு.]*

மலைப்புரசு *malai-p-purašu,* பெ.(n.) காட்டுப் புரசு; wild butea (சா.அக.).

*[மலை + புரசு.]*

மலைப்புல் *malai-p-puḷ,* பெ.(n.) கதிர்ப்புல்; sacred grass (சா.அக.).

*[மலை + புல்.]*

மலைப்புளி[1] *malai-p-puḷi,* பெ.(n.) மலையில் விளையும் புளி; hill tamarind (சா.அக.).

*[மலை + புளி.]*

மலைப்புளி[2] *malai-p-puḷi,* பெ.(n.) பச்சிலை (M.M.274); Mysore gambage.

*[மலை + புளி.]*

மலைப்புளிச்சை *malai-p-puḷiccai,* பெ.(n.) வெண்டை வகை (m.m.83); hill hemp bendy, m.sh. *hibiscus furcatus.*

*[மலை + புளிச்சை.]*

மலைப்புறம் *malai-p-puṟam,* பெ.(n.) மலைச் சரிவு பார்க்க (C.G.); see *malai-c-carivu.*

*[மலை + புறம்.]*

மலைப்புறா *malai-p-puṟā,* பெ.(n.) மாடப்புறா (சங்.அக.); blue rock pigeon.

*[மலை + புறா.]*

மலைப்புன்கு *malai-puṉgu,* பெ.(n.) நீண்ட மரவகை; wight's indian nettle, l.tr. *celtis wightili* (Nels.).

மறுவ. மலைப்புங்கு.

*[மலை + புன்கு.]*

மலைப்புனம் *malai-p-puṉam,* பெ.(n.) தினை விளை நிலம்; rocky soil in tiṉai fields on the mountains (R.T.).

*[மலை + புனம்.]*

மலைபூசிதம் *malai-pūšidam,* பெ.(n.) மலையாத்தி மரம்; a kind of mountain tree (சா.அக.).

*[மலை + பூசிதம்.]*

மலைப்பூடு[1] *malai-p-pūḍu,* பெ.(n.) மலை மூலிகை; mountain herb (சா.அக.).

*[மலை + பூடு.]*

மலைப்பூடு[2] *malai-p-pūḍu,* பெ.(n.) பூடு வகை (சங்.அக.); a plant.

*[மலை + பூடு.]*

மலைப்பூவரசி *malai-p-pūvarašī,* பெ.(n.) காட்டுப் பூவரசு; a tree wild portia.

*[மலை + பூவரசி.]*

மலைப்பூவிகம் *malai-p-pūvigam,* பெ.(n.) சேங்கொட்டை; a tree - *Semecarpus-Anacardium* (சா.அக.).

*[மலை + பூவிகம்.]*

மலைப்பேரீச்சு *malai-p-pēriccu,* பெ.(n.) ஈச்சமரவகை; cuddapah fern palm, *cycas beddomei.*

*[மலை + பேரீச்சு.]*

மலைபடுகடாம்[1] *malai-paḍu-kaḍām,* பெ.(n.) பத்துப்பாட்டினுள் இறுதிப்பாட்டு; நன்னன் சேய் நன்னனைப்பற்றிப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் பாடியதும் கூத்தராற்றுப்படை என்ற மறுபெயருடையதும் பத்துப்பாட்டில் ஒன்றானதுமான ஆற்றுப்படை நூல்; a poem otherwise known as *kūttararṟu-p-paḍai,* one of the *pattu-p-pāṭṭu,* by *Perungunṟūr-p-peruṅ-kncikaṉār,* with the chief *Naṉṉaṉ* as hero.

*[மலைபடு + கடாம்.]*

மலைபடுதிரவியம் *malai-paḍu-tiravium,* பெ.(n.) மலைபடுபொருள் பார்க்க; see *malai-paḍu-poruḷ.*

*[மலைபடு +* **Skt.** *திரவியம்.]*

மலைபடுபொருள் *malai-paḍu-poruḷ,* பெ.(n.) மலையிலுண்டாகும் அகில், மிளகு, கோட்டம், தக்கோலம் , குங்குமம் என்ற ஐவகை நறுமணப் பொருள் (பிங்.); products of the hills, of five kinds, viz. *akil, miḷagu, kōṭṭam, takkōlam, kuṅkumam.*

*[மலைபடு + பொருள்.]*

மலைபோரகை *malai-pōragai,* பெ.(n.) மலைப்போரவை (இ.வ.) பார்க்க; see *malai-p-pōravai.*

*[மலைபோரவை → மலைபோரகை.]*

மலைபோரவை *malai-pōravai,* பெ.(n.) கழுகு வகை (இ.வ.); black vulture *otogyps calvus.*

*[மலை + போரவை.]*

மலைமகள் *malai-magaḷ,* பெ.(n.) மலைமகள் (பார்வதி); *Malaimagaḷ(Pārvati),* as the daughter of the Himālayās. *"மலைமகளை யொருபாகம் வைத்தலுமே" (திருவாச.12, 7).*

*[மலை + மகள்.]*

மலைமஞ்சரளி *malai-mañjaraḷi,* பெ.(n.) மலையரளி; mountain oleander (சா.அக.).

*[மலை + மஞ்சரளி.]*

மலைமஞ்சி[1] *malai-mañji,* பெ.(n.) மருள் பார்க்க; see *maruḷ* (சா.அக.).

*[மலை + மஞ்சி.]*

மலைமஞ்சி[2] *malai-mañji,* பெ.(n.) பெருங் குரும்பை (m.m.477); bow string hemp.

*[மலை + மஞ்சி.]*

மலைமடந்தை *malai-maḍantai,* பெ.(n.) மலைமகள் பார்க்க; see *malai-magaḷ.*

*[மலை + மடந்தை.]*

மலைமண்சாடி *malai-maṇ-šāḍi,* பெ.(n.) மலைமஞ்சாடி பார்க்க; see *malai-mañcāḍi* (சா.அக.).

*[மலை + மண்சாடி.]*

மலைமண்டலம்[1] *malai-maṇḍalam,* பெ.(n.) திருவாங்கூர், கொச்சி பகுதியையுட் கொண்ட சேர நாடு (பிற்.சோழ.வர. சதாசிவ பண். பக்கம்.473); *cera* country consist of *Tiruvankur* and *Kochi* territary.

*[மலை + மண்டலம்.]*

மலைமண்டலம்[2] *malai-maṇḍalam,* பெ.(n.) மலைநாடு பார்க்க; see *malai-nāḍu.* *"மலை மண்டலத்து..... சிறைராமன் கேரளன்" (S.I.I.i.89).*

*[மலை + மண்டலம்.]*

மலைமதம் *malai-madam,* பெ.(n.) கன்மதம் (சங்.அக.); rock alum.

*[மலை + மதம்.]*

மலைமந்தாரை *malai-mandārai,* பெ.(n.) காட்டு மந்தாரை; wild butea (சா.அக.).

*[மலை + மந்தாரை.]*

மலைமந்திகா *malai-mandigā,* பெ.(n.) சாமந்திப்பூ பார்க்க; see *šāmandi-p-pū* (சா.அக.).

*[மலை + மந்திகா.]*

மலைமல்லிகை *malai-malligai,* பெ.(n.) காட்டுமல்லி; Indian cork. *"கூதாளி கவின்பெற்ற மலை மல்லிகை" (புறநா.168, உரை).*

*[மலை + மல்லிகை.]*

மலைமா *malai-mā,* பெ.(n.) மரவகை (இலத்.); hill balsam tree, m.tr. *Balasamadendron candalum.*

*[மலை + மா.]*

மலைமாணிக்கம் *malai-māṇikkam,* பெ.(n.) காட்டு வெக்கலி; a plant *anacolosa densiflora* (சா.அக.).

*[மலை + மாணிக்கம்.]*

மலைமாது *malai-mādu,* பெ.(n.) மலைமகள் பார்க்க; see *malai-magaḷ.* *"மலைமாதொரு பாகா" (திருவாச.23, 10).*

*[மலை + மாது.]*

மலைமாதுகம் *malai-mādugam,* பெ.(n.) கந்தகம்; sulphur.

*[மலை + மாதுகம்.]*

மலைமான் *malai-māṉ,* பெ.(n.) மலைமகள் (நாமதீப.19) பார்க்க; see *malai-magaḷ.*

*[மலை + மான்.]*

மலைமுசுட்டை *malai-mušuṭṭai,* பெ.(n.) ஒருவகைக் கொடி; a kind of creeper (சா.அக.).

*[மலை + முசுட்டை.]*

மலைமுருங்கை[1] *malai-muruṅgai,* பெ.(n.) கசப்பு முருங்கை; bitter drumstic tree (சா.அக.).

*[மலை + முருங்கை.]*

மலைமுருங்கை[2] *malai-muruṅgai,* பெ.(n.) செடி வகை (மலை.); prickly sesban, m.sh. *sesbonia aculeata.*

*[மலை + முருங்கை.]*

மலைமுல்லை *malai-mullai,* பெ.(n.) மலை மல்லிகை; mountain jasmine (சா.அக.).

*[மலை + முல்லை.]*

**மலைமுலைக்கால்** *malai-mulai-k-kāl,* பெ.(n.) முடவாட்டுக்கால் பார்க்க; see *muḍa-vāṭṭu-k-kāl*(சா.அக.).

**மலைமுழக்கு** *malai-muḻakku,* பெ.(n.) மலைகளினின்று கேட்கும் எதிரொலி; echo, as heard in the hills. *"மஞ்சாடு மலைமுழக்கும்" (பரிபா.8, 110).*

*[மலை + முழக்கு.]*

**மலைமுழை** *malai-muḻai,* பெ.(n.) மலைக் குகை (பிங்.) பார்க்க; see *malai-k-kugai.*

*[மலை + முழை.]*

**மலைமுழைஞ்சு** *malai-muḻaiñju,* பெ.(n.) மலைக்குகை (பிங்.) பார்க்க; see *malai-k-kugai.*

*[மலை + முழைஞ்சு.]*

**மலைமுள்ளங்கி** *malai-muḷḷaṅgi,* பெ.(n.) பூடுவகை (வின்.); a plant, *ornithogal gadense.*

*[மலை + முள்ளங்கி.]*

**மலைமுன்னை** *malai-muṉṉai,* பெ.(n.) பேய் முன்னை மரம்; a tree (சா.அக.).

*[மலை + முன்னை.]*

**மலைமுனி** *malai-muṉi,* பெ.(n.) மகிழமரம்; a tree bearing very fragrant flowers (சா.அக.).

*[மலை + முனி.]*

**மலைமுனிவன்** *malai-muṉivaṉ,* பெ.(n.) அகத்தியர்; Agattiyar (சா.அக.).

*[மலை + முனிவன்.]*

**மலைமூங்கில்** *malai-mūṅgil,* பெ.(n.) பெரு மூங்கில்; stout and large bamboo (சா.அக.).

*[மலை + மூங்கில்.]*

**மலைமூலிகை** *malai-mūligai,* பெ.(n.) மலையில் விளையும் மருந்துப் பூடு; mountain medicinal herb (சா.அக.).

*[மலை + மூலிகை.]*

**மலைமேகசொர்ணக்கல்** *malai-mēga-śorṇakkal,* பெ.(n.) ஒருவகை மணிக் கல்; a kind of gem (சா.அக.).

**மலைமேல்கோல்** *malai-mēl-kōl,* பெ.(n.) நில அளவை; measuring rod. *"பயிரேற்றி விளைஞ்ச நிலத்துக்கு மலை(க்)குடி மலைமெற்கொலால் நி(ல)ம் ஒருமாவுக்கு" (தெ.க.தொ.14, கல்.224–3).*

**மலைய** *malaiya,* பெ.(n.) ஓர் உவம வாய்பாடு (தொல்.பொருள்.286, உரை); a term of comparison.

**மலையகத்தி** *malai-y-agatti,* பெ.(n.) ஒரு வகைக் கசப்பு அகத்தி; a bitter kind sesbania (சா.அக.).

*[மலை + அகத்தி.]*

**மலையகம்** *malai-y-agam,* பெ.(n.) ஒரு சாதி (யாழ்ப்.); a caste.

*[மலை + அகம்.]*

**மலையகராதி** *malai-y-agarāti,* பெ.(n.) மூலிகைகளைப் பற்றிய ஓர் அகரமுதலி நூல்; a dictionary of medicinal plant.

*[மலை + அகராதி.]*

**மலையசம்**[1] *malai-y-ašam,* பெ.(n.) மலையாடு; mountain sheep.

*[மலை + அசம்.]*

**மலையசம்**[2] *malai-y-ašam,* பெ.(n.) மலயசம் (நாமதீப.278) பார்க்க; see *mala-y-ašam.*

*[மலை + அசும்.]*

**மலையடி**[1] *malai-y-aḍi,* பெ.(n.) 1. தாழ்வரை (வின்.); foot of a mountain. 2. கொங்கு வேளாளர் பிரிவினுளொன்று; a subdivision of the *KoṅguVēḷāḷa,* caste (E.T.iv,393).

*[மலை + அடி.]*

**மலையடி**[2] *malai-aḍi,* பெ.(n.) சேவற்கோழி; cock as fighting with its feet. *"மயிற்கழுத்து மலையடியும்" (கல்லா.30, 2).*

*[மலை + அடி.]*

**மலையடிப்படி** *malai-aḍi-p-paḍi,* பெ.(n.) குறிஞ்சி நிலத்தூர் (யாழ்.அக.); a village in *kuṟiñji* region.

*[மலையடி + படி.]*

**மலையடிவாரம்** *mala-y-aḍivāram,* பெ.(n.) மலையடி[1], 1 (வின்.) பார்க்க; see *malai-y-aḍi.*

*[மலை + அடிவாரம்.]*

**மலையணில்** *malai-y-aṇil,* பெ.(n.) அணில் வகை;mountain squirrel, *sciurus indicus.*

*[மலை + அணில்.]*

**மலையத்தி**[1] *malai-y-atti,* பெ.(n.) கல்லத்தி மரம்; a kind of tree ficus artissima (சா.அக.).

*[மலை + அத்தி.]*

**மலையத்தி**[2] *malai-y-atti,* பெ.(n.) நீண்ட கொடிவகை; downy climbing cluster fig. l.cl. *Ficus macrocarpa.*

*[மலை + அத்தி.]*

**மலையப்பொருப்பன்** *malaiya-p-poruppaṉ,* பெ.(n.) பாண்டியன் (பிங்.); *Pāṇḍyaṉ* king, as lord of the mount *potiyam.*

*[மலையன் + பொருப்பன்.]*

**மலையம்** *malaiyam,* பெ.(n.) பொதியமலை; Mount Potiyam near *Kaṉṉiyā-k-kumari* (Cape comorin). *"ஓங்குயர் மலையத் தருந்தவன் உரைப்ப" (மணிமே.1:3).*

*[மலை →மலையம். மலை + அம் = மலையம். 'அம்' பெருமைப் பொருள் பின்னொட்டு.]*

**மலையம்**[2] *malaiyam,* பெ.(n.) 1. மலையினுச்சி (பிங்.); summit of a mountain. 2. குறிஞ்சி யாழ்த் திறத்தொன்று; a secondary melody-type of the *kuṟiñci.*

*[மலை → மலையம்.]*

**மலையமான்** *malaiyamāṉ,* பெ.(n.) 1. சேரவரசன் (திவா.); *cēra* king, as lord of the hill country. 2. மலாடு ஆளும் அரசன்; title of the ruler of the *malāḍu* country. *"மலையமான் திருமுடிக் காரி" (புறநா.121).* 3. உடையார் சாதியின் உட் பிரிவினர் (E.T.vi.206); a sub division of the *uḍayār* caste.

*[மலை →மலையன் →மலையமான்.]*

**மலையமான்சோழியஏனாதிதிருக்கண்ணன்** *malaiyamāṉ-cōḻiya-ēṉādi-tirukkaṇṇaṉ,* பெ.(n.) கழகக் காலப் புலவர் மாறோக்கத்து நப்பசலையார் பாடிய புறநா.174ஆம் பாட்டின் பாட்டுடைத் தலைவன்; hero of the poem of *Puranāṉūṟu*174, by *Māṟōkkattu Nappajalaiyār* a classical poet.

*[மலையமான் + சோழியஏனாதி + திரு முடிக்காரி.]*

**மலையமான்திருமுடிக்காரி** *malaiyamāṉ-tirumuḍi-k-kāri,* பெ.(n.) கடையேழு வள்ளல்களில் ஒருவன்; திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தவன்; one of the last seven philonthoropists, who ruled from *Thirukkovalūr.*

*[மலை + மகன் = மலையமான். திருமுடி + காரி = திருமுடிக்காரி.]*

காரி எனப்பொறித்த செப்பு நாணயங்கள் கிடைத்துள்ளன.

**மலையமானாடு** *malaiya-māṉāḍu,* பெ.(n.) மலாடு (நன்.266, மயிலை) பார்க்க; see *malāḍu.*

*[மலையமான் + நாடு.]*

**மலையமுனி** *malaiya-muṉi,* பெ.(n.) அகத்தியர்; Agattiyar.

*[மலை →மலைய + முனி.]*

**மலையர்** *malaiyar,* பெ.(n.) திருக்கோவலூரைத் தலைமையிடமாகக் கொண்டு ஆட்சி புரிந்த அரச மரபினர்; name of race who ruled with *Thirukkovalūr* as their head quarters.

மறுவ. முள்ளூர்மலையர்

*[மலை →மலையர்.]*

**மலையரசம்** *malai-y-arašam,* பெ.(n.) சந்தனமரம்; sandal wood tree.

*[மலை + அரசம்.]*

**மலையரசர்** *malai-y-arašar,* பெ.(n.) குரங்குதின்னி என்றழைக்கப்படும் மலை வாழ் மக்கள் (M.M.); an aboriginal tribe.

*[மலை + அரசர்.]*

**மலையரசன்** *malai-y-arašaṉ,* பெ.(n.) மலை யரையன் (வின்.) பார்க்க; see *malai-y-araiyaṉ.*

*[மலையரையன் → மலையரசன்.]*

**மலையரசன்நகம்** *malai-y-arašaṉ-nagam,* பெ.(n.) புலிநகம்; claw's of tiger (சா.அக.).

**மலையரசி**[1] *malai-y-araši,* பெ.(n.) கோடை வாழிடங்களில் தலைமையானதாகக் கருதப் படும் நீலமலை; the queen of hill-stations, the Neela malai (Nilgris).

*[மலை + அரசி.]*

**மலையரசி**[2] *malai-y-araši,* பெ.(n.) மலையரம் பார்க்க; see *malai-y-aram*(சா.அக.).

**மலையரசு** *malai-y-arašu,* பெ.(n.) மலை யரசர் பார்க்க; see *malai-y-arašar.*

*[மலையரசர் → மலையரசு.]*

**மலையரண்** *malai-y-araṇ,* பெ.(n.) 1. அரண் நான்கனுள் ஒன்றான மலையாகிய காப்பிடம் (குறள், 742, உரை); mountain, as a natural defence, one of four *araṇ,* q.v. 2. மலைமேற் கோட்டை; mountain fastness.

*[மலை + அரண்.]*

**மலையரணை** *malai-y-araṇai,* பெ.(n.) அரணை வகை; a kind of lizard.

*[மலை + அரணை. மல்→ மலை. அரள் → அரளை→அரணை = அச்சத்தை யுண்டுபண்ணுவது. 'அரணை தீண்டினால் மரணம்' (பழ.). இனி, அரணை ஒரு மருங்கு பாம்பை யொத்திருப்பதனாலும் கொல்லுந் திறனுடையதா யிருந்தும் மக்கள் தங்கும் அல்லது வழங்கும் இடத்தில் அச்சமின்றித் தாராளமாய் வந்து திரிவதனாலும் அர (பாம்பு) + அணை (சார்பு) என்று கருத இடமிருப்பினும், அது அத்துணைக் கொள்ளத்தக்கதன்று. அரணை பார்க்க.]*



**மலையரளி** *malai-y-araḷi,* பெ.(n.) மஞ்சள் அரளி; a tree derider bearing yellow flowers.

*[மலை + அரளி.]*

**மலையரியான்** *malai-y-ariyāṉ,* பெ.(n.) நெல்வகை; a kind of paddy.

*[மலை + அரியான். அரி = நெற்கதிர்.]*

**மலையருவி** *malai-y-aruvi,* பெ.(n.) மலையினின்று வீழும் நீர்வீழ்ச்சி; mountain torrent, water fall.

*[மலை + அருவி.]*

**மலையரையன்[1]** *malai-y-araiyaṉ,* பெ.(n.) 1. மிளகு; pepper. 2. புலி; tiger (சா.அக.).

*[மலை + அரையன்.]*

மலைபடு பொருளில் தலையானது மிளகு, மலைவாழ் உயிரிகளுள் தலையானது புலி. அதனால் இவ்விரண்டும் மலையரையன் எனப்பட்டது. அரையன் = அரசன், தலைமையானவன்.

**மலையரையன்[2]** *malai-y-arayaṉ,* பெ.(n.) 1. இமயவான்; *Himālayas,* as king of mountains. *"மலையரையன் பொற்பாவை" (திருவாச.12, 13).* 2. மலையமான் பார்க்க; see *malaiyamāṉ.* *"மலையரையன் பணிய நின்ற பூங்கோவலூர்" (திவ்.திருநெடுந்.7).*

*[மலை + அரையன். அரையன் = அரசன்.]*

**மலையலரி** *malai-y-alari,* பெ.(n.) மஞ்சளலரி; yellow oleander.

*[மலை + அலரி.]*

**மலையவரை** *malai-y-avarai,* பெ.(n.) மலையில் விளையும் அவரை வகை; a kind of bean cultivated in hill tract.

*[மலை + அவரை. அம்முதல் = அமுங்குதல், பள்ளமாதல், தாழ்தல், தட்டையாதல். அமல்→ அவல் = பள்ளம், தட்டையாக இடித்த அரிசி. அவல் →அவலை→ அவரை = தட்டையான அல்லது சப்பையான காய்வகை. கத்தரி, சுரை, பாகல், பீர்க்கு, புடலை, பூசணி, முருங்கை, வாழை, வெண்டை முதலிய பிற காய்கள் எல்லாவற்றோடும் ஒப்பு நோக்க அவரை யொன்றே தட்டையாயிருத்தல் காண்க.]*

**மலையழுவை** *malai-y-aḻuvai,* பெ.(n.) புலி; tiger (சா.அக.).

**மலையன்** *malaiyaṉ,* பெ.(n.) 1. குறிஞ்சி நிலத் தலைவன் (சூடா.); chief of a hilly tract. 2. சேரவரசன்; *cēra* king. *"சேரன் பொறையன் மலையன்" (சிலப். வாழ்த்துக்கா. ஊசல்.2). "மறப்போர் மலையனும்" (புறநா.158).* 3. தமிழ்நாட்டுப் பணிக்கச் சாதி வகையினர் (E.T.iv.439); a division of the *Paṉikka*caste in theTamil country. 4. கடைவள்ளல்களுள் ஒருவனான மலையமான் திருமுடிக்காரி; a chief famed for liberality, one of seven *kaḍai-vaḷḷalgaḷ.* 5. காடரி; abiboral clies.

*[மலை → மலையன்.]*

**மலையன்சாமை** *malaiyaṉ-šāmi,* பெ.(n.) சாமை வகை (வின்.); a kind of little millet.

*[மலையன் + சாமை.]*

**மலையாசலம்** *malai-y-āšalam,* பெ.(n.) மலையம் பார்க்க; see *malaiyam*(சா.அக.).

**மலையாசலவாசி** *malai-y-āšalavāši,* பெ.(n.) அகத்தியர்; the great siddha named *Agattiyar* (சா.அக.).

**மலையாட்டி** *malai-y-āṭṭi,* பெ.(n.) மலை நாட்டுப் பெண் (நன்.141, உரை); woman of the mountainous region.

*[மலை + ஆட்டி. ஆட்டி = பெண்பாலீறு.]*

**மலையாட்டுயர்** *malai-y-āṭṭuyar,* பெ.(n.) தாமரையிலை; lotus leaf (சா.அக.).

**மலையாடு** *malai-y-āḍu,* பெ.(n.) வரையாடு (வின்.); four horned antelope, *Tetraciros quadricornis.*

*[மலை + ஆடு.]*



**மலையாண்பிராமணர்** *malai-y-āṇ-pirāmaṇar,* பெ.(n.) மலையாளப் பிராமணர் வகையார் (S.I.I.v.166); a class of Brahmins in *Travancore* and *Malabar.*

**மலையாத்தி** *malai-y-ātti,* பெ.(n.) மரவகை; *malabar* mountain ebony, m.tr. *Bauhinia malabarica.*

*[மலை + ஆத்தி.]*

**மலையாமணக்கு** *malai-y-āmaṇakku,* பெ.(n.) செடி வகை (m.m.) coral plant 1.sh. *Jatropha multifida.*

*[மலை + ஆமணக்கு.]*

**மலையாமி** *malai-y-āmi,* பெ.(n.) மலையாள மொழி (வின்.); the malayalam language.

*[மலையாளம் → மலையாம் → மலையாமி (கொச்சை).]*

**மலையாமை¹** *malai-y-āmai,* பெ.(n.) மலையிற் காணப்படும் ஆமை வகை (நாஞ்.); mountain - tortoise.

*[மலை + ஆமை.]*

**மலையாமை²** *malai-y-āmai,* பெ.(n.) மலை யாழ்மை பார்க்க; see *malai-y-āḻmai.*

*[மலையாழ்மை → மலையாமை.]*

**மலையாரம்** *malai-y-āram,* பெ.(n.) மலைச் சந்தனம்; sandal wood. *"கோவா மலையாரம்" (சிலப்.17, உள்வரிவாழ்த்து, 1).*

*[மலை + ஆரம். ஆர்தல் = பொருந்துதல், நிறைதல், பரவுதல், மணம் வீசுதல். ஆர்→ ஆரம் = மணம் வீசும் பொருள், சந்தனம்.]*

**மலையாவிகம்** *malai-y-āvigam,* பெ.(n.) மிளகு; pepper (சா.அக.).

**மலையாவிரை** *malai-y-āvirai,* பெ.(n.) 1. காட்டாவிரை; small, stipaled downy *rachis glandular* senne. 2. ஆவிரை வகை; purple flowered chinese pagoda-tree. m.sh.*sophora glaunca.*

*[மலை + ஆவிரை.]*

**மலையாழ்மை** *malai-y-āḻmai,* பெ.(n.) வட்டெழுத்து வகை (நாஞ்.); an old script, a variety of *vaṭṭeḻuttu.*

**மலையாழம்** *malaiyāḷam,* பெ.(n.) மலையாளம் (வின்.) பார்க்க; see *malai-y-āḷam.*

*[மலையாளம்→மலையாழம் (கொ.வ.)]*

**மலையாள்** *malaiyāḷ,* பெ.(n.) மலைமகள்; *Pārvati,* daughter of the *Himālayas.* *"மலையாண் மணவாளா" (திருவாச.6, 40).*

*[மலை + ஆள். 'ஆள்' = பெண்பாலீறு. இஃது இருபாற் பொதுமையின் நீங்கிப் பெண்பாற் குறித்த பெயர். 'ஆள்' என்னும் பெண்பாற் பெயர்ச் சொல்லாகி, நாளடைவில் பெண்பாற் குறித்த வினையீறும் பெயரீறும் ஆயிற்று.]*

**மலையாளக்கருவாப்பட்டை** *malaiyāḷa-k-karuva-p-paṭṭai,* பெ.(n.) இலவங்கப் பட்டை; bark of cinnamon (சா.அக.).

*[மலையாளம் + கருவாப்பட்டை.]*

**மலையாளச்சேப்பங்கிழங்கு** *malaiyāḷa-c-cēppaṅ-kiḻaṅgu,* பெ.(n.) 4 அடி நீளமும் ஒரு அடி அகலமுமுள்ளதாய் மலையாளத்தில் விளையும் சேப்பங்கிழங்கு; a variety of very long and stout colocasia is grown in Malabar-malabar colocasia.

*[மலையாளம் + சேப்பங்கிழங்கு.]*

**மலையாளச்சேனைக்கிழங்கு** *malaiyāḷa-c-cēṉai-k-kiḻaṅgu,* பெ.(n.) மலையாளத்தில் விளையும் ஒருவகைக் கருணைக் கிழங்கு; Malabar yam (சா.அக.).

*[மலையாளம் + சேனைக்கிழங்கு.]*

**மலையாளத்தாறு** *malaiyāḷa-t-tāṟu,* பெ.(n.) மலையாளத்தில் விளையும் அறுவகைச் சரக்குகள்; six articles manufactured or grown in Malabar.

*[மலையாளம் + அத்து + ஆறு.]*

அவை : 1. கொச்சி வீரம், 2. மிளகு, 3. திப்பிலி, 4. ஏலம், 5. இலவங்கம், 6 சிற்றரத்தை.

**மலையாளபகவதி** *malaiyāḷa-pagavati,* பெ.(n.) 1. மந்திரங்களுக்கு மூலத் தெய்வமாகக் கருதப்படும் கொற்றவை (வின்.); *Koṟṟavai,* as the patron deity of sorcery and magic. 2. பெரு மோசக்காரன் (கொ.வ.); one who deceives by his ostentations.

*[மலையாளம் + பகவதி.]*

**மலையாளம்[1]** *malaiyāḷam,* பெ.(n.) கேரள நாட்டில் பேசப்படுவதும் திராவிட மொழிக் குடும்பத்துள் ஒன்றுமான ஒரு மொழி (சி.பெ.அக.); one of the Dravidian languages, now spoken in Kerala.

*[மலை + ஞாலம் → மலையாளம்.]*

அம்மொழியில் 'மலையாளம்' என்றே எழுதப்படுகிறது.

மலையாளப் பெயர் :

கேரளம், மலையாளம் என்பன தற்போது மலையாள நாட்டையும், அங்கு வழங்கும் மொழியையும் குறிக்கும் பெயர்களாம்.

கழக (சங்க)க் காலத்தில் முத்தமிழ் நாடுகளில் ஒன்றாயிருந்த சேரநாட்டின் மேல்பாகமே இப்போது மலையாள நாடாயிருக்கின்றது. கீழ்ப்பாகம் கொங்குநாடும் (கோயம்புத்தூர், சேலம், கோட்டகப் பகுதிகள்), கங்கநாடும் (சேலம் எருமையூர் (மைசூர்)ச் சீமைப் பகுதிகள்) ஆகும். மறன், திறன் முதலிய பெயர்கள் முறையே மறல், திறல் என்று திரிந்தாற் போல, சேரன் என்னும் பெயரும் சேரல் எனப் போலியாகிப் பின்பு 'அன்' ஈறுபெற்றுச் சேரலன் என வழங்கிற்று.

எ—டு: சேரன் செங்குட்டுவன்; களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல், தகடூர் எறிந்த பெருஞ்சேரல், குடக்கோ இளஞ்சேரல்.

*தென்னவன் சேரலன் சோழன் (திருவாசகம்)*

*செறுமா வுகைக்கும் சேரலன் காண்க*

*(திருமுகப்பாசுரம்)*

சேரலன் என்னும் பெயர் முறையே கேரலன், கேரளன் என மருவிற்று, இம் மரூஉ வடிவங்கள் பழந்தமிழ் நூல்களில் ஓரிடத்துங் காணப்படவில்லை; பிந்திய நூல்களில்தாம் காணப்படுகின்றன. இதனால் இவை பிற்காலத்தன என்பது தெளிவு.

ச—க, போலி 'ஒ.நோ: சீர்த்தி—கீர்த்தி, செம்பு—கெம்பு (க.) ல—ள, போலி, ஒ.நோ:செதில்—செதிள், வேலை—வேளை.

பாண்டியன் என்னும் பெயர் பாண்டியம் என ஈறு திரிந்து பாண்டியன் செய்திகளைக் குறித்தாற்போல, கேரலன் கேரளன் என்னும் பெயர்களும், கேரலம் கேரளம் என ஈறு திரிந்து சேர நாட்டையும், அந் நாட்டு மொழியையுங் குறிக்கும்.

மலையாள நாட்டெல்லை:

மேற்குத் தொடர்ச்சி (குட) மலைக்கு மேற்கே, வடக்கில் மங்களூரி (மங்களபுரம்)லிருந்து தெற்கில் திருவனந்தபுரம் வரைக்கும், தென்கன்னடம் மலபார் கொச்சி திருவிதங்கோடு (திருவாங்கூர்) என்னும் நான்கு சீமைகளில் தாய்மொழியாகப் பேசப்படுவது மலையாளம்.

தென்னை மரத்தின் வடமொழிப் பெயராகிய நாளிகேரம் என்பது, கேரம் என முதற்குறையாய்ப் பின்பு கேரளம் என விரிந்து அம் மரம் மிகுதியாய் வளரும் மலையாள நாட்டைக் குறித்ததென்பது பொருந்தக் கூறும் பொய்ம்மைக் கூற்றாகும். வடமொழிக்கும் வடமொழியாளர்க்கும் உயர்வும் அதனால் தமிழுக்கும் தமிழர்க்கும் இழிவும் கற்பிக்கப்பட்ட புராணக் காலத்தில், வடமொழித் தொடர்பை உயர்வென மயங்கிய மலையாள நாட்டார், கேரளம் என்னும் பெயர்க்கு வடமொழி மூலத்தையும், கேரள நாட்டிற்குப் பரசுராமக்ஷேத்திரம் என்னும் புதுப்பெயரையும் மகிழ்ச்சியாய் ஏற்றுக்கொண்டனர். பரசுராமர்க்கு முந்தியே வழங்கிய பெயர் சேரநாடு என்பதும், அவர் இறுதிக் காலத்தில் தவஞ் செய்த இடமாகக் கூறியிருப்பது சேரநாட்டிற்கு வடக்கிலுள்ள கடற்கரைப் பகுதியென்பதும் அறிதல் வேண்டும். (பண்டைச் சேரநாடு கூர்ச்சரம் (குஜரத்) வரையில் தொடர்ந்திருந்ததாலும், வடநாட்டு ஆரியர் தென்னாட்டிலும் வந்து குடி புகுந்ததாலும், பரசுராமர் தவஞ்செய்த இடத்திற்கு ஏற்பட்ட 'பரசுராம க்ஷேத்திரம்' என்னும் பெயர் அவ்விடத்தோடு தொடர்ந்த தென்பாகத்தையும் பிற்காலத்தில்

தழுவலாயிற்று. இந்து (சிந்து) என்னும் வடநாட்டுப் பகுதியின் பெயர் தென்னாட்டையும் தழுவினாற்போல.

பதினெட்டாம் நூற்றாண்டில் ஒரு நம்பூதிரிப் பார்ப்பனரால் இயற்றப்பட்டதாகத் தெரிகின்ற கேரளோத்பத்தி என்னும் புராணத்தில், பிராமணர் பஞ்சாபினின்று பரசுராமரால் தென் கன்னடத்திலுள்ள கோகர்ணத்தில் முதல் முதல் குடியேற்றப்பட்டனர் என்னும் செய்தி கூறப்பட்டுள்ளது. இதை எசு.சீனிவாச ஐயங்கார் தமது தமிழாராய்ச்சி (Tamil Studies) என்னும் நூலில் (ப.348) மறுத்து, பிராமணரைக் கோகர்ணத்தில் குடியேற்றியவன் கடம்ப மரபினரில் முதல்வனான மயூரவர்மன் என்றும், அவன் காலம் கி.பி.6ஆம் நூற்றாண்டின் முற்பகுதி யென்றுங் கூறியுள்ளாார்.

மலையாளம் என்னும் பெயர் அண்மையில் தோன்றியதாகும். சேரநாடு மலைநாடாதலால் சேரநாட்டான் மலையாளி யெனப்பட்டான். மலை + ஆளி = மலையாளி. ஆளி = ஆள். முதலாளி. தொழிலாளி, வங்காளி, பங்காளி முதலிய பெயர்களை நோக்குக. மலையாளியின் நாடும் மொழியும் மலையாளம் எனப்பட்டன.

ஒ.நோ: வங்காளி → வங்காளம்.

சேரநாடு கி.பி.10ஆம் நூற்றாண்டு வரை செந்தமிழரசரும் செந்தமிழ்ப் புலவரும் திகழ்ந்த செந்தமிழ் நாடாயிருந்தது. (நன்னூற் சிறப்புப்பாயிரத்தில் "குணகடல் குடகம் குமரி வேங்கடம், எனும் நான்கெல்லையினிருந்தமிழ்க் கடலுள்" என்று கூறியிருத்தலால் 12ஆம் நூற்றாண்டில் சேரநாடு கொடுந்தமிழ் நாடாயிருந்தமை பெறப்படும்). ஐங்குறுநூறும் பதிற்றுப் பத்தும் ஆகிய கழக நூல்களும், சிலப்பதிகாரம் ஆகிய கழக மருவிய நூலும், புறப்பொருள் வெண்பாமாலையும், சேரமான் பெருமான் நாயனாரின் ஆதியுலாவும், குலசேகர ஆழ்வாரின் பெருமாள் திருமொழியும் மலையாள நாடெனப்படும் சேரநாட்டில் எழுந்த செந்தமிழ் நூல்களே.

பதினாலாம் நூற்றாண்டில் (கி.பி.1320) வீரராகவ சக்கரவர்த்தியால் பொறிக்கப்பட்ட கோட்டயம் செப்பேட்டு மொழி 'வாதில்' (வாயில்) 'ஒண்டாயில்' (உண்டாகில்), 'எழுந்நள்ளி' (எழுந்தருளி)' முதலிய சில மலையாளத் திரிபுகளுடன் கூடிய தமிழே. அதே நூற்றாண்டில் (கி.பி.1350) இயற்றப்பட்ட கண்ணச்சப் பணிக்கர் இராமயண மொழியும் இத்தகையதே.

எ–டு:

*"கொண்டலிந் நேரிருண்டு சுருண்டு நீண்டொளி
வார்ந்து*

*திங்ஙும், குந்தள பாரமோடு முகில் குலத்திட மின்னல்*

*போலே, புண்டரீகேக்ஷணந் நரிகெப் பொலிந்தவள
சீதசொந்நாள்"*

இதில், குந்தளபாரம் புண்டரீகேக்ஷணன் என்னும் இரண்டே வடசொற்கள். ,இவற்றுள்ளும் குந்தளம் என்பது கூந்தல் – என்னும் தென்சொல் திரிபு; வார்ந்து – வார்ந்நு, திணுங்கும் – திங்ஙும் இடை – இட, அருகே – அரிகெ.

போர்த்துக்கீசிய விடைத் தொண்டர் (Missionaries) முதன்முதல் மலையாளக் கரையில் வந்திறங்கினர் என்றும், மலையாள நாட்டு மொழியைத் தமக்கு முந்திய அரபியர்போல மலபார் என்றழைத்தனர் என்றும், கீழ்க்கரையிலும் இலங்கைக் கரையிலும் வழங்கிய மொழி (தமிழ்) அதை யொத்திருக்கக் கண்டு அதையும் அப்பெயரால் அழைத்தனர் என்றும் அவர்கள் மலையாளக் கரையிலுள்ள அம்பலக்காட்டில் 1577அல்லது 9இல் முதன் முதல் தமிழெழுத்தில்

அச்சிட்ட புத்தக மொழியை 'மலவார் அல்லது தமிழ்' (Malabar or Tamil) என்று குறித்தனர் என்றும் கால்டுவெல் கண்காணியார் கூறுகின்றார் (முன்னுரை பக்.10–13).

இதனால், 16ஆம் நூற்றாண்டு வரை மலையாள நாட்டு மொழி கொடுந்தமிழாயிருந்த தென்றும், அதன் பின்னரே வடமொழிக் கலப்பால் மலையாளமாகத் திரியத் தொடங்கிற்றென்றும் அறியலாம். மலையாளம் மிகத் தெளிவாய்ப் பிரிந்து போனது 17ஆம் நூற்றாண்டில் (கி.பி.1650) ஆரியவெழுத்தை வகுத்தும், பெரு வாரியாய் ஆரியச் சொற்களையும் விகுதிகளையும் புகுத்தியும், சேரநாட்டு மொழியைச் சிதைத்தது துஞ்சத்து எழுத்தச்சனாலேயே.

1860ஆம் ஆண்டில்தான் முதல் மலையாள இலக்கணமும் எழுந்தது. 19ஆம் நூற்றாண்டு வரை மலையாளியர் தமிழையும் கற்றுவந்தன ரென்றும் அதன் பின்புதான் அவ் வழக்கம் அடியோடு விடப்பட்டதென்றும் முதியோர் கூறுகின்றனர்.

மலையாள நாட்டில் பார்ப்பனரொழிந்த மற்றக் குலத்தாரெல்லாம் தமிழர் அல்லது திரவிடரே. குயவர், பணிக்கர், பாணர், ஆயர், ஈழவர், கவுடர் (கவுண்டர்) முதலிய பல குலத்தினர் தமிழ் நாட்டிலும் உள்ளனர். நாயர், நாயாடி, வாரியர், செறுமன் முதலிய குலத்தினர் மலையாளத்திற்குச் சிறப்பாயிருந்த தாலும், அவர் குடிப்பெயரெல்லாம் தனித் தமிழே. தாழ்ந்தது உயர்ந்தது என்று முறையே பொருள் தரும் கிழக்கு மேற்கு என்னும் திசைப்பெயர்கள் குடமலைக் கீழ்நாட்டிற்கே ஏற்றவை. இவை மலையாளத்திலும் வழங்குவது மலையாளநாடு தமிழ்நாட்டுப் பகுதியே யென்பதையும் மலையாளியர் தமிழ் மரபினரே என்பதையும் உணர்த்தும். பிற்காலத்தில் மேற்குத் திசைக்குப் படு ஞாயிறு என ஒரு பெயரை அவர்கள் புனைந்து கொண்டாலும், அதுவும் தனித்தமிழே என்பதை அறிதல் வேண்டும்.

மலையாள நாட்டு அல்லது சேரநாட்டுத் துறைமுகங்கள் பழந்தமிழ் நூல்களில் பெருங்கடல் வாணிக நிலையங்களாகக் கூறப்பட்டுள்ளன.

*செங்கோற், குட்டுவன் தொண்டி (ஐங்.178)*

*.................. சேரலர்*
*சுள்ளியம் பேரியாற்று வெண்ணுரை கலங்க*
*யவனர் தந்த வினைமாண் நன்கலம்*
*பொன்னொடு வந்து கறியொடு பெயரும்*
*வளங்கெழு முசிரி யார்ப்பென (அகம்.148)*

*கலந்தந்த பொற்பரிசம்*
*கழித்தோணியாற் கரைசேர்க்குந்து*
*மலைத்தாரமும் கடற்றாரமும்*
*தலைப்பெய்து வருநர்க்கீயும்*
*புனலங் கள்ளின் பொலந்தார்க் குட்டுவன்*
*முழங்குகடல் முழவின் முசிரி யன்ன*
*(புறம்.343)*

*இயற்றேர்க் குட்டுவன் வருபுனல் வாயில்*
*வஞ்சி (பத்.3)*

மலையாள நாட்டிலுள்ள பல சிவநகரங்களும் விண்ணகரங்களும் நாயன்மாராலும் ஆழ்வாராலும் பாடப்பட்டுள்ளன. கோகர்ணம் திருச்செங்குன்றூர் (கொல்லத்திற் கருகிலுள்ளது) என்பன அப்பராலும் சம்பந்தராலும் 7ஆம் நூற்றாண்டிலும், திருவஞ்சைக்களம் சுந்தரரால் 9ஆம் நூற்றாண்டிலும், நேரிற் பாடப்பட்டுள்ளன. திருமுழிக்களம், திருநாவாய், திருவல்லவாழ் என்பன திருமங்கையாழ்வார் 8ஆம் நூற்றாண்டில் நேரிற் சென்று கண்டவை. இவற்றுடன் திருவனந்தபுரம், திருவண்பரிகாரம், திருக்காட்கரை, திருப்புலியூர், திருச்செங் குன்றூர், திருவண்வண்டூர், திருவத்தரு, திருக்கடித் தானம், திருவாறன் விளை என்பன நம்மாழ்வாரால் (கி.பி.920) குறிக்கப்படுகின்றன. வித்துவக்கோடு குலசேகராழ்வாரால் 8ஆம் நூற்றாண்டிற்

பாடப்பட்டது (தமிழாராய்ச்சி, ப.347) மேற்கூறிய திருநகரங்கள் 10ஆம் நூற்றாண்டுவரை செந்தமிழ் நிலையங்களா யிருந்திரா விட்டால் பாடல் பெற்ற நகரங்களாயிரா என்பது திண்ணம்.

மலையாளத்திலுள்ள பழைமையான ஊர்ப் பெயர்களெல்லாம் இன்றும் தனித்தமிழாயே யிருக்கின்றன. கோடு (கோழிக்கோடு – calicut), சேரி (தலைச்சேரி), குளம் (எர்ணாக்குளம்), புரம் (அங்காடிபுரம்), நாடு (வலையநாடு), ஊர் (கண்ணனூர்), குன்றம் (பூங்குன்றம்), கா (கன்னங்காவு), காடு (பாலைக்காடு – Palghat), குடி (சாக்குடி), வாசல் (பள்ளிவாசல்), அங்காடி (பரப்பனங்காடி), தோட்டம், பாடி, துறை (திருப்புனித்துறை), குறிச்சி, ஏரி, கரை (கொட்டாரக் கரை), களம் (திருவஞ்சைக் களம்), இருப்பு முதலியன தனித்தமிழ் ஊர்ப் பெயரீறுகளாம். கோடு = மலை. கா = சோலை.

பழஞ்சேரநாட்டின் கீழ்ப்பகுதியின் தென்பாகம் (கொங்குநாடு) இன்றும் தமிழ்நாடா யிருக்கின்றது; வடபாகத்திற் கன்னடம் புகுந்துள்ளது.

13ஆம் நூற்றாண்டில் கொடுந்தமிழ் நாடுகளாகக் குறிக்கப்பட்ட வேணாடு, பூமி நாடு, குட்ட நாடு, குட நாடு, மலை நாடு என்பன இற்றை மலையாள நாட்டுப் பகுதிகளாயுள்ளன.

*பூமியன் உதியன் கொங்கன் பொறையன்*
*வானவன் கட்டுவன் வான வரம்பன்*
*வில்லவன் குடநாடன் வஞ்சி வேந்தன்*
*கொல்லிச் சிலம்பன் கோதை கேரளன்*
*போந்தின் கண்ணிக்கோன் பொருநைத்*
*துறைவன்*
*சேரன் மலையமான் கோச் சேரன் பெயரே*

என்பது திவாகரம்.

இவற்றுடன் கொங்கன், கொல்லிச் சிலம்பன், பொருநை (ஆன் பொருநை)த் துறைவன் என்னும் பெயர்கள், கோயம்புத்தூர் சேலம் ஆகிய இரு கோட்டகங்களும் சேரநாட்டைச் சேர்ந்தன என்பதை விளக்கும். கொங்கன் = கொங்கு நாட்டரசன், கொங்கு நாடு கோயம்புத்தூர்க் கோட்டகப் பகுதி. ஒரு கிளையினரான அதிகமான் மரபினர் சேலத்தைச் சேர்ந்த தகடூரை (தர்மபுரியை)த் தலைநகராகக் கொண்டு ஆண்டனர்.

குற்றியலுகரத்தைப் புள்ளியிட்டுக் காட்டல், திதியைப் பக்கமென்றல் முதலிய பழந்தமிழ் வழக்கங்கள் இன்றும் மலையாள நாட்டில் தானுள்ளன.

தொன்றுதொட்டுச் சேரநாட்டு மெலித்தல் திரிபுச் சொற்கள் சில சோழ பாண்டி நாடுகளிலும் இருவகை வழக்கிலும் வழங்கி வருகின்றன.

எ–டு : 'திரிநவும்' (தொல்.83) பழனி, (புறம் 113) பழுனிய (மணிமே.328) 'அறியுனன்' (புறம் 134) (திரிகின்ற திரிகுன்ன – திரியுன்ன – திரியுனி–திரிந) 'பழுத்து – பழுன்னு–பழுன்னு' – பழுநி – பழுதி, மகிழ்கின்றான் – மகிழுன்னான் – மகிழுநன் – மகிழ்நன். வாழ்கின்றான் – வாழுன்னான் – வாழுநன் – வாழ்நன் – வாணன். இனி, திரியும் – திரியுன் + அ = திரியுன – திரின – திரிந என்றுமாம். இங்ஙனமே பிறவும், னகரத்தினும் நகரம் முந்தினதெனக் கொள்ளவும் இடமுண்டு. ஆங்கனம் – அங்கனம் – அங்ஙனம் – அன்னணம்.

*ஆஓ வாகும் பெயருமா ருளவே*
*ஆயிடன் அறிதல் செய்யு ளுள்ளே*

*(தொல்.680)*

என்று கூறியதும் சேரநாட்டிற்கே சிறப்பாய் ஏற்கும். இவற்றால், பண்டை முத்தமிழ் நாட்டுத் தொடர்பையும், சேரநாட்டு வினைமுற்றுகள் பாலீறு பெற்றதையும், அறியலாம்.

*....... வண்டமி ழிகழ்ந்த*
*காய்வேற் றடக்கைக் கனகனும் விசையனும்*
*செங்குட்டு வன்றன் சினவலைப் படுதலும்*

என்று சிலப்பதிகாரத்திலும்,

*வடதிசை யெல்லை யிமய மாகத்*
*தென்னங் குமரியொ டாயிடை யரசர்*
*முரசுடைப் பெருஞ்சமந் ததைய வார்ப்பெழச்*
*சொல்பல நாட்டைத் தொல்கவி னழித்த*
*போரடு தானைப் பொலந்தார்க் குட்டுவ*

*(பதிற்.43)*

என்று பதிற்றுப்பத்திலும் பாடப்பட்டுள்ள சேர நாட்டுச் சீரிய மறம் இன்று ஆரிய அடிமைப்பட்டு அணுவளவுத் தமிழுணர்ச்சியின்றிக் கிடப்பது நினைக்குந்தோறும் நெஞ்சைப் புண்படுத்துவதா யிருக்கின்றது.

*மலையாளம் திரிந்ததற்குக் காரணங்கள் :*

1. சேரநாடு பெரும்பாலும் மலைத்தொடரால் தடுக்கப்பட்டுப் பிற தமிழ்நாடுகளுடன் பெருந் தொடர்பு கொள்ளாதிருந்தமை.

2. 12ஆம் நூற்றாண்டோடு பாண்டிய மரபும் 13ஆம் நூற்றாண்டோடு சோழ மரபும் சேர மரபுடன் மணவுறவு நிறுத்தியமை.

3. வடமொழிக்கும் வடமொழியாளர்க்கும் தெய்வ உயர்வு கற்பிக்கப்பட்டமையும் வரம்பிறந்த வடசொற் கலப்பும்.

4. மிகு மழையால் மலையாளியர்க்கு மூக்கொலி சிறந்தமை.

5. மலையாளியர் முன்னோரின் செந்தமிழ் நூல்களைக் கல்லாமை.

6. மலையாளியரின் ஒலிமுறைச் சோம்பல்.

*மலையாளம் திரிந்த முறைகள் :*

1. முற்றுவினைகள் பால் காட்டும் ஈறிழத்தல். எ–டு: வந்தான் – வந்து.

2. மெலித்தல் திரிவு. எ–டு: எழுந்து – எழுந்நு, அங்கு – அங்ஙு, கழுகு – கழுங்ஙு. குஞ்சி – குஞ்ஞி, வீழ்ந்து – வீணு.

3. நிகழ்கால வினைமுற்றின் கின்றது என்னும் இடைநிலை உன்னு எனத் திரிதல். எ–டு: செய்கின்ற – செய்குன்னு – செய்யுன்னு.

4. வேற்றுமை யுருபுத் திரிவு. எ–டு : அதினுக்கு – (அதின்கு) – அதின்னு, உடைய – உடே– டே – றே.

5. போலித் திரிவு. எ–டு : நரம்பு – ஞரம்பு, செய்ம்மின் – செய்வின்.

6. கொச்சைத் திரிவும் தொகுத்தலும், எ–டு: உள்ள – ஒள்ள, மலை – மல, அகற்றுக – அகத்துக இரு – இரி, புறா–, ப்ராவு, கனா – கினாவு, வேண்டும் – வேணம், செய்யவேண்டும் – செய்யேண்டு, போக வேண்டும் – போகேணம்.

7. றகர ரகர வேறுபாடின்மை. எ–டு: உறவு – உரவு.

8. நிகழ்கால வினையெச்சத்திற்குப் பதிலாக 'வான்' 'பான்' ஈற்று வினையெச்சங்களும் அவற்றின் திரிபுகளும் வழங்கல். எ–டு: குடிப்பான் = குடிக்க, நடப்பான் – நடக்கான் = நடக்க, வருவான் = வர.

9. சிறப்புச் சொற்கள் பொதுப் பொருளில் வழங்கல். எ–டு : வெள்ளம் (புதுப் பெருக்கு நீர்), = நீர். மூரி (கிழஎருது) – எருது, நோக்கு (கூர்ந்து பார்) = பார்.

10. சொற்களை ஒருமருங்கு பற்றிய பொருளில் வழங்கல். எ–டு: அதே = ஆம், வளரே = மிக, மதி = போதும்; வலிய = பெரிய.

11. ஒருபொருட் பல சொற்களில் தமிழில் வழங்காத ஒன்றை வழங்கல். எ–டு: சொல்(த.) – பறை (ம.) கூப்பிடு (த.) விளி (ம.).

12. ஆய் என்னும் வினையெச்ச வீறு ஆயிட்டு என வழங்கல். எ-டு: சிவப்பாய் - சிவப்பாயிட்டு.

13. நெடுஞ்சுட்டு வழக்கு வீழாமை. எ-டு: ஆயாள் (அவ் ஆள்), ஈமூரி (இம்மூரி).

14. ஏவல் வினைகள் பெரும்பாலும் வியங்கோள் வடிவில் வழங்கல். எ-டு: தா-தரிக, தர.

15. துணை வினை வேறுபாடு. எ-டு: பறையுவான் கழியும் (சொல்ல முடியும்). பறையுவான் கழியுன்னில்ல (சொல்லமுடியாது).

16. செய்யும் என்னும் முற்று மூவிடத்தும் வழங்கல். எ-டு: ஞான், நீ, அவன் - போகும்.

17. றன்னகரம் தந்நகரமாக எழுதப்படல்.

18. வழக்கற்ற சொல் வழங்கல். எ-டு : கைநீட்டக் காசு, தம்பிராட்டி.

19. புதுச்சொற்கள். எ-டு: மேடி = வாங்கு, வெடிப்பி = துப்புரவாக்கு.

20. வினைமரபு வேறுபாடு எ-டு : முட்ட புழுங்ஙுக (அவிக்க), விளக்கு கெடுக்க (அணைக்க), முட்டுக் குத்துக (கொடுக்க), காலுற முறிக்க (வெட்டுக), மடங்ஙி (திரும்பி) வருக.

குறிப்பு : சேரநாட்டுக் கொடுந்தமிழாகிய மலையாளத்திலுள்ள இருவகைத் தமிழ்ச் சொற்களையும் வழக்கு வீழ்த்தற்கும் மலையாளத்தார் தமிழ்ச் சொற்களைக் கடன்கொண்டு அதனால் அவர்க்கும் தமிழர்க்கும் தொடர்பு ஏற்படாதபடியும், ஆரியர் வடசொற்களை மிகுதியாய்க் கலந்து மலையாளத்தைக் கெடுத்துத் தமிழுக்கு மிக அயன்மைப்படுத்திவிட்டனர்.

**மலையாளம்[2]** *malaiyāḷam*, பெ.(n.) மலையாளத்து மிளகு; pepper grown in Malabar (சா.அக.).

**மலையாளம்[3]** *malaiyāḷam*, பெ.(n.) ஐம்பத்தாறு நாட்டினுள் ஒன்று; Malabar, one of 56 *tēcam*(q.v.).

**மலையாளர்** *malaiyāḷar*, பெ.(n.) மலை நாட்டார்; inhabitants of mountainous tracts as Travancore Cochin etc. *"அந்தணர்களான மலையாளர்" (தேவா.325).*

*[மலையாளம்→மலையாளர்.]*

**மலையாளர்வளைப்பு** *malaiyāḷar-vaḷaippu*, பெ.(n.) மலையாளியை போல ஒருவன் பக்கலில் ஒன்றை வாங்க நினைத்தால் வாங்கியல்லது போகாத் தன்மை; stubborn entreaty in order to gain one's end, as characteristic of the ancient *Malayāḷis*. *"நாழிகை முப்பது சென்றாலும் மலையாளர் வளைப்புப் போல ஓரடி பேராதாய்த்து" (ஈடு.10, 3, 30).*

*[மலையாளர் + வளைப்பு.]*

**மலையாளரூட்டு** *malaiyāḷar-ūṭṭu*, பெ.(n.) மலையாளிகளைப் போலப் பல நாளுண்ணவும் பலநாள் பட்டினி கிடக்கவும் வல்லராந் தன்மை; habit of feasting or fasting for days at a time as characteristic of ancient *Malayāḷis*. *"மலையாளரூட்டுப் போலே அனுபவிக்கவும் வல்லர்களாய்" (திவ். திருநெடுந்.1, 5).*

*[மலையாளர் + ஊட்டு.]*

**மலையாளி** *malai-y-āḷi*, பெ.(n.) 1. மலையில் வாழ்பவன்; native of mountainous regions. 2. மலையாள நாட்டான்; native of *Malabar*. 3. முகமதியர் தென்னாடு வந்த போது காஞ்சீபுரத்தி னின்றும் ஓடிச் சேர்வராய மலையிற் குடியேறிய வேளாள

வகுப்பினர்; Tamil - speaking caste on the Shevaroy hills, said to have been originally *Vēḷaḷa* cultivators who emigrated from *Canjeevaran.* when Muhammadans first invaded South India (E.T.iv.406). 4. மிளகு (தைலவ.தைல); black pepper.

*[மலையாளம் → மலையாளி.]*

**மலையாறு** *malai-y-āṟu,* பெ.(n.) தாம்பிர புட்பகம்; a kind of plant (சா.அக.).

**மலையான்** *malaiyāṉ,* பெ.(n.) மலையாளி பார்க்க; see *malaiyāḷi.*

*[மலையாளி → மலையான்.]*

**மலையானிகம்** *malaiyāṉigam,* பெ.(n.) மலைக்காளான்; mountain mushroom (சா.அக.).

**மலையானிலம்** *malaiyāṉilam,* பெ.(n.) தென்றல்; balmy southern breeze, as from the *Malayam* hills. *"நிலவும் விரையார் மலையா னிலமு மெரியாய் வருமால்" (பெரியபு.தடுத்தாள்.175).*

**மலையானை** *malaiyāṉai,* பெ.(n.) மலையில் உலாவும் யானை (திவா.); mountain elephant.

*[மலை + யானை.]*

**மலையிச்சி**[1] *malaiyicci,* பெ.(n.) கல்லிச்சி; shining leaved fig (சா.அக.).

**மலையிச்சி**[2] *malaiyicci,* பெ.(n.) மரவகை (இலத்.); oval leaved fig. l.tr. Ficus retusa.

*[மலை + இச்சி.]*

**மலையிசம்** *malaiyicam,* பெ.(n.) சந்தனமரம்; sandal wood tree.

**மலையிஞ்சி** *malai-y-iñci,* பெ.(n.) இஞ்சி வகை (நாஞ்.); a kind of ginger.

*[மலை + இஞ்சி.]*

**மலையிடறு** *malai-y-iḍaṟu,* பெ.(n.) பெருந் தடை (பி.வி.19, உரை); great obstacle.

*[மலை + இடறு.]*

**மலையிருகுணத்தோன்** *malai-y-iru-kuṇattōṉ,* பெ.(n.) காய்ச்சற் நஞ்சு; a kind of prepared poison (சா.அக.).

**மலையிரும்பு** *malai-y-irumbu,* பெ.(n.) மாழை மணல் (யாழ்.அக.); iron - sand.

*[மலை + இரும்பு.]*

**மலையிருவேலி** *malai-y-iruvēli,* பெ.(n.) ஒரு வகை மலைப்புல் (வின்.); a mountain grass.

*[மலை + இருவேலி.]*

**மலையிலக்கு** *malai-y-ilakku,* பெ.(n.) வெளிப்படையானது; that which is conspicious as a mountain. *"வார்த்தையினை மலையிலக் கென நம்பினேன்" (தாயு.மௌன.10).*

*[மலை + இலக்கு.]*

**மலையிலுப்பை** *malai-y-iluppai,* பெ.(n.) காட்டிலுப்பை மரம்; wild mowah.

*[மலை + இலுப்பை.]*



**மலையிற்றிரண்டதீ** *malayirriranda-ti,* பெ.(n.) கடனுரை (யாழ்.அக.); shell of cuttle fish.

*[மலையில் + திரண்ட + தீ.]*

**மலையிறக்கம்** *malai-y-irakkam,* பெ.(n.) மலையின் இறங்கு சரிவு (C.G.); declivity or descent of a mountain.

*[மலை + இறக்கம்.]*

**மலையின்முனிமரம்** *malai-yin-munimaram,* பெ.(n.) அகத்தி மரம்; a tree (சா.அக.).

**மலையின்முனிவன்** *malaiyin-munivan,* பெ.(n.) 1. அகத்தி மரம் (மலை.); west-indian pea tree. 2. மிளகு (மலை.); black pepper. 3. அத்தி வகை; cluster fig. l.tr. ficus glomerata.

*[மலையின் + முனிவன்.]*

**மலையினுச்சி**[1] *malaiyin-ucci,* பெ.(n.) மலைமுகடு; peak of a mountain.

*[மலை + இன் + உச்சி.]*

**மலையினுச்சி**[2] *malaiyin-ucci,* பெ.(n.) மாங்கிசபேதி (மலை.) பார்க்க; see *māṅkica-pēti.*

*[மலையின் + உச்சி.]*

**மலையீஞ்சு** *malai-y-īñcu,* பெ.(n.) மலையீந்து (வின்.) பார்க்க; see *malai-y-īndu.*

*[மலையீந்து →மலையீஞ்சு.]*

**மலையீந்து** *malai-īndu,* பெ.(n.) ஈச்சம்பனை (வின்.); wild date-palm.

*[மலை + ஈந்து. ஈச்சம் →ஈச்சு →ஈந்து.]*

**மலையீருள்ளி** *malai-y-īrulli,* பெ.(n.) பெரு வெங்காயம்; big onion.

*[மலை + ஈருள்ளி.]*

**மலையுதி** *malai-y-udi,* பெ.(n.) 1. கருவேம்பு; black neem tree. 2. பாதிரி மரம்; white flowered trumpet flower tree.

**மலையுதியம்** *malai-yudiyam,* பெ.(n.) கதிர் வேம்பு; a tree (சா.அக.).

**மலையுருக்கன்** *malai-y-urukkan,* பெ.(n.) வெற்றிலை வகை (சங்.அக.); a kind of betel.

*[மலை + உருக்கன்.]*

**மலையெருக்கலை** *malai-y-erukkalai,* பெ. (n.) மரவகை; a kind of tree, s.tr. *felicium decipiens* (Nels.).

*[மலை + எருக்கலை.]*

**மலையெருக்கு** *malai-y-erukku,* பெ.(n.) செடிவகை (மலை.); mountain madar. *calotropis.*

*[மலை + எருக்கு.]*

**மலையெலி** *malai-y-eli,* பெ.(n.) ஒருவகை எலி; a kind of rat.

**மலையெலுமிச்சை** *malai-y-elumiccai,* பெ.(n.) பெரு எலுமிச்சை; a big variety of lime grown on the hills.

மறுவ. கொளுஞ்சி நாரத்தை, கொடி நாரத்தை, துரிஞ்சி.

*[மலை + எலுமிச்சை. மலை - பெரியது.]*

**மலையேந்தி** *malai-y-ēndi,* பெ.(n.) மலை தாங்கி பார்க்க; see *malai-tāṅgi* (சா.அக.).

*[மலை + ஏந்தி.]*

**மலையேலம்** *malai-y-ēlam,* பெ.(n.) பேரேலம் (பதார்த்த.1029); cardamom.

*[மலை + ஏலம். மலை = பெரியது.]*

**மலையேற்றம்** *malai-y-ēṟṟam,* பெ.(n.) மலையின் ஏற்றமான பகுதி (C.G.); acclivity or ascent of a mountain.

*[மலை + ஏற்றம்.]*

**மலையேறு-தல்** *malai-y-ēṟu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. தெய்வம் இடத்தினின்று நீங்குகை; to leave, abandon, as a deity from a place or person. 2. முடிவடைதல் (இ.வ.); to cease to exist, to come to an end. 3. மாவிளக்கு நெய்யற்று அணைந்து போதல் (இ.வ.); to be extinguished when the oil is consumed, as *māviḷakku.* 4. மலை மீது ஏறுதல்; claimbing the hills or mountain.

*[மலை + ஏறு-.]*

**மலைவசம்பு**[1] *malai-vašambu,* பெ.(n.) யானை வசம்பு; mountain sweet flag (சா.அக.).

*[மலை + வசம்பு. மலை = பெரியது.]*

**மலைவசம்பு**[2] *malai-vašambu,* பெ.(n.) 1. செடி வகை; a kind of medicinal plant, cortus speciosus (A.). 2. மிளகு (சங்.அக.); black pepper.

*[மலை + வசம்பு.]*

**மலைவட்டை** *malai-vaṭṭai,* பெ.(n.) ஆற்றுச் சஞ்சலை என்னும் நெய்ம மரம்; mountain Tamana oil tree-*Hydrocaspus alpina* (சா.அக.).

**மலைவமைதி** *malaivamaidi,* பெ.(n.) இடம், காலம், கலை முதலிய அறுவகை மலைவும் சில காரணங் கருதிப் பொருத்தமுடையனவாக அமைத்துக் கொள்ளப்படுவது (தண்டி.123, உரை); (Rhet.) error or impropriety of ideas considered proper in the context.

*[மலைவு + அமைதி.]*

**மலைவள்ளி** *malai-vaḷḷi,* பெ.(n.) மலையில் விளையும் வள்ளிச் செடி; mountain sweet potato (சா.அக.).

*[மலை + வள்ளி.]*

**மலைவளம்** *malai-vaḷam,* பெ.(n.) 1. மலை நிலத்தின் செழிப்பு; fertility of the mountainous region. *"அந்த மலைவள மெனக்குச் சொல்" (குற்றா.குற.51).* 2. மலைபடுபொருள் (பரிபா.18, 15, உரை) பார்க்க; see *malai-paḍu-poruḷ.*

*[மலை + வளம்.]*

**மலைவளர்காதலி** *malai-vaḷar-kādali,* பெ.(n.) மலைமகள்; *Pārvati,* as worshipped in *Ramēšvaram.* *"மலை வளர் காதலி மலர்த்தாள்" (சேதுபு.கடவு.3).*

*[மலைவளர் + காதலி.]*

**மலைவன்வாசி** *malaivaṉ-vāši,* பெ.(n.) உடும்பு; guana.

**மலைவன்னி** *malai-vaṉṉi,* பெ.(n.) நச்சு மரம்; a poisonous tree (சா.அக.).

*[மலை + வன்னி. வன்னி = வன்னிமரம்.]*

**மலைவாகை** *malai-vāgai,* பெ.(n.) மரவகை; a species of unarmed curl-brush-bean, 1.tr., *pithecdobium corlaceum (L.).*

*[மலை + வாகை.]*

**மலைவாசம்**[1] *malai-vāšam,* பெ.(n.) மிளகு (சங்.அக.); pepper.

**மலைவாசம்**[2] *malai-vāšam,* பெ.(n.) உடல் நலத்திற்காக மலையின் சென்று வாழ்தல்; residing in hills for recouping health.

*[மலை + **Skt.** வாசம்.]*

**மலைவாசி**[1] *malai-vāši,* பெ.(n.) மலையில் வாழ்பவன்–வள்–து (வின்.); inhabitant of the hills.

*[மலை + வாசி. வதி→வசி →வாசி.]*

**மலைவாசி**[2] *malai-vāši,* பெ.(n.) 1. பன்றி; pig. 2. முள்ளம் பன்றி; procupine. 3. வசுவாசி; a tree (சா.அக.).

*[மலை + வாசி.]*

**மலைவாசிக்கொம்பு** *malai-vāši-k-kombu,* பெ.(n.) பன்றிக் கொம்பு (யாழ்.அக.); tooth of the pig.

*[மலைவாசி[1] + கொம்பு.]*

**மலைவாணர்** *malai-vāṇar,* பெ.(n.) மலைப் பகுதியில் வாழ்வோர் (வின்.); hill folk, hill men.

*[மலை + வாணர். வாழ்நர்→வாணர்.]*

**மலைவாழை** *malai-vāḻai,* பெ.(n.) தானாகவோ அல்லது பயிரிடப்பட்டோ மலையில் வளரும் வாழை வகை; a plantain tree growing on mountains.

*[மலை + வாழை.]*

**மலைவாழைப்பழம்** *malai-vāḻai-p-paḻam,* பெ.(n.) மதுரை மாவட்டத்தின் சிறுமலை முதலியவற்றில் உண்டாகும் சிறு வாழைக் கனி வகை (கொ.வ.); a kind of plantain fruit, as from *ciṟumalai,* in Madurai District.

*[மலைவாழை + பழம்.]*

**மலைவிராலி** *malai-virāli,* பெ.(n.) மரவகை; ochre flowered fish - poison cedar, L.tr. *walsura piscidia.*

*[மலை + விராலி.]*

**மலைவீரியம்** *malai-viriyam,* பெ.(n.) அன்ன பேதி (மலை.); green vitriol.

**மலைவு** *malaivu,* பெ.(n.) 1. மயக்கம்; delusion, confusion of mind. 2. வியப்பு; amazement, fright. 3. உரை செயல்களில் முன்னுக்குப் பின் பகை; inconsistency, as in expression. *"வருமுன் பின்மலை வென்றார்" (சேதுபு.பிரமகத்.2).* 4. இடம், காலம், கலை, உலகம், நயம், ஆகமம் என்பவற்றைப் பொருத்தமின்றிக் கூறுகை யாகிய குற்றம்; (Gram.) error or impropriety in ideas of six kinds viz., *iḍam, kālam, kalai, ulagam, niyāyam, āgamam.* 5. உவமச் சொல் (சூடா.); word of comparison. 6. போர் (வின்.); opposition contention.

**மலைவெக்கை** *malai-vekkai,* பெ.(n.) மலையருகிலுள்ள வெப்பம் (நாஞ்.); heat radiated near hills.

*[மலை + வெக்கை.]*

**மலைவெட்பு** *malai-veṭpu,* பெ.(n.) மலை வேட்பு (சங்.அக.) பார்க்க; see *malai-vēṭpu.*

*[மலை + வெப்பு.]*

**மலைவெட்புசம்** *malai-veṭpušam,* பெ.(n.) சந்தனக் களபம்; mixture of sandal wood paste (சா.அக.).

**மலைவெண்டை** *malai-veṇḍai,* பெ.(n.) செடி வகை (வின்.); hill bendy s.tr. *hibiscus collinus.*

*[மலை + வெண்டை.]*

**மலைவெருகு** *malai-verugu,* பெ.(n.) காட்டுப் பூனை; calamomilam (சா.அக.).

*[மலை + வெருகு. வெருகு = பூனை.]*



**மலைவெற்றிலை** *malai-veṟṟilai,* பெ.(n.) காட்டு வெற்றிலை; wild betel.

மறுவ. மலையுருக்கன்

*[மலை + வெற்றிலை.]*

**மலைவேங்கை** *malai-vēṅgai,* பெ.(n.) மர வகை; spinous kino tree, l.tr. *Bridelia retusa.*

*[மலை + வேங்கை. வேங்கை = மலையில் வளரும் வேங்கை மரம்.]*

**மலைவேசிகம்** *malai-vēšigam,* பெ.(n.) மலைப்பச்சை பார்க்க; see *malai-p-paccai* (சா.அக.).

**மலைவேட்பு** *malai-vēṭpu,* பெ.(n.) சந்தனம் (மலை.); sandal wood.

*[மலை + வேட்பு.]*

**மலைவேம்பு** *malai-vēmbu,* பெ.(n.) 1. மர வகை; presian lilac, l.tr. *melia azedarach.* 2. வேப்ப மரவகை (பதார்த்த.229); mountain neem l.tr. *melia compasita.* 3. மதகரி வேம்பு; chittagong wood.

*[மலை + வேம்பு.]*

**மலைவேர்க்காலி** *malai-vēr-k-kāli,* பெ.(n.) வெள்ளாடு; goat (சா.அக.).

**மவ்வம்** *mavvam,* பெ.(n.) அழகு; beauty. *"மவ்வந்தோய் பொழில்" (தேவா.556, 8).*

*[அம் = அழகு. அம்→அவ்→அவ்வம்→மவ்வம்.]*

**மவ்வல்** *mavval,* பெ.(n.) மௌவல் (நன்.124, உரை) பார்க்க; see *mouvval.*

**மவுணம்** *mavuṇam,* பெ.(n.) கணவன்; husband. *"கயிரவ மலர்த்து மவுணனை" (சிலப்.6, 37, உரை, மேற்கோள்.), "நீடு மவுணர் வரவெண்ணி வாடலை" (குலோத். சோ.505).*

**மவுரியர்** *mavuriyar,* பெ.(n.) மௌரியர்; mauriya dynasty.

**மழ** *maḻa,* பெ.(n.) 1. இளமை (தொல். சொல்.311); youth, infancy, tender age. 2. குழந்தை; infant, youth child. *"அழுமழப் போலும்" (திருக்கோ.147).* 3. மனமயக்கம்; confusion of mind. *"மழகுழக்காகின்றே" (கலித்.108).*

*[முள் →மள் →மள்ளன் = இளைஞன், வீரன். மள்→மழ = இளமை, குழவி. மழவுங்குழவுமிளமைப் பொருள (தொல்.உரி.14).]*

மழநாடு *maḻa-nāḍu,* பெ.(n.) திருச்சிராப்பள்ளிக்கு மேற்பால் காவேரியாற்றுக்கு வடபுறத்திலுள்ள பகுதி; region north of the cauvery on the western side of Tricirappalli. *"மங்கல மென்பதோர் ஊருண்டு போலும் மழநாட்டுள்" (தொல். சொல்.273, இளம்பூ.) "வடகரை மழநாட்டு கிலாரக் கூற்றத்து அன்பில் தென்கரை இடையாற்று நாட்டுத் திருக்கடைமுடி" (தெ.க.தொ.7, கல்.504-5).*

*[மழவர் + நாடு. முள் →மள்→மள→மழ→மழவு. மழவு→மழவன் = இளைஞன், வீரன்.]*

மழபாடி *maḻa-pāḍi,* பெ.(n.) தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள தேவாரப் பாடல் பெற்ற ஊர்; a place in Thanjavur District having *Devaram* hymns. *"மழபாடியுள் மாணிக்கமே" (தேவாரம்), "மழபாடி ஆண்டானை ஆரமுதை அன்றயன்மால் காணாமை நீண்டானை நெஞ்சே நினை" (சேத்திரக்கோவை.18).*

*[மழவர்பாடி →மழபாடி.]*

மழபுலம் *maḻa-pulam,* பெ.(n.) மழநாடு (அகநா.61, உரை) பார்க்க; see *maḻa-nāḍu.*

*[மழ + புலம். புலம் = நாடு.]*

மழபுலவஞ்சி *maḻapula-vañji,* பெ.(n.) பகைவர் புலம் பாழ்படக் கொள்ளையூட்டுதலைக் கூறும் புறத்துறை (புறநா.7); (*Puṟap.*) theme describing the plunder and destruction of an enemy's country.

*[மழபுலம் + வஞ்சி.]*

மழபுலவர் *maḻa-pulavar,* பெ.(n.) பள்ளியிற் படிக்கும் சிறுவர்; youth pupils, as budding scholars. *"மையாடலாடன் மழபுலவர் மாறெழுந்து" (பரிபா.11, 88).*

*[மழ + புலவர்.]*

மழமழ-த்தல் *maḻa-maḻa-,* 11 செ.கு.வி. (v.i.) வழவழப்பாதல்; to be soft or smooth.

*[முழு → மொழு → மொழுக்கை = மழுக்கை. மொழு→மழு→மழ→மழமழ (மு.தா.105).]*

மழமழப்பு *maḻamaḻappu,* பெ.(n.) 1. மெதுத்தன்மை; tenderness, softness, smooth ness. 2. உறுதியின்மை; indefiniteness in speech or action. *"செயலை மழமழப்பாய் விட்டுவிட்டான்" (உ.வ.).*

*[மழமழ→மழமழப்பு.]*

மழமழெனல் *maḻamaḻeṉal,* பெ.(n.) மெத்தெனற் குறிப்பு; expr. signifying softness, smoothness or glossy.

*[மழமழ + எனல்.]*

மழலை *maḻalai,* பெ.(n.) 1. குழந்தைகளின் திருந்தாச் சொல்; prattling, babbling lisping of children. *"தம்மக்கள் மழலைச்சொற் கேளாதவர்" (குறள், 66).* 2. மென்மொழி; gentle speech, as of woman. *"மழலைவாயின் முறுவற் றையலாள்" (சீவக.181).* 3. இளமை; childhood, tenderness in age. *"பெருமழலை வெளேற்றினர்" (தேவா.579, 5).* 4. மெல்லோசை; gentle sound, as humming of bees, as tinkling of anklets. *"மழலைத் தும்பி" (சிலப்.4, 16).*

*[முள்→மள்→மள்ளன் = இளைஞன், வீரன். மள் →மழ = இளமை, குழவி. மழ→மழலை (மு.தா.42).]*

மழலைத்தேன் *maḻalai-t-tēṉ,* பெ.(n.) புதுத்தேன் (ஈடு.6, 2, 5); fresh honey.

*[மழலை + தேன். மழலை = இளமை, புதுமை, புதிய.]*

**மழலைப்பேச்சு** *malalai-p-pēccu,* பெ.(n.) குதலைப்பேச்சு; prattling of children.

*[மழலை + பேச்சு.]*

**மழவராயன்** *malavarāyan,* பெ.(n.) கள்ளர் முதலிய ஒரு சார் சாதியினரின் பட்டப் பெயர் (இ.வ.); caste little of *kallar* and certain other castes.

*[மழ→மழவு→மழவன் = வீரன், இளைஞன். மழவன் + ராயன். அரசன்→அரையன்→ராயன்.]*

**மழவன்** *malavan,* பெ.(n.) 1. இளைஞன் (பிங்.); youth man. *"மழவர் தமனையன மணவொலி" (கம்பரா.நாட்டுப்.50).* 2. வீரன்; warrior. *"மழவர் பெரும" (புறநா.90).* 3. மழநாட்டான் (அக.நா.61, உரை); inhabitant of *malanādu.*

*[மழ→மழவு→மழவன் (வே.க.4:5).]*

**மழவு** *malavu,* பெ.(n.) மகன்; son.

*[மழ→மழவு (வே.க.4:5).]*

**மழறு-தல்** *malaru-,* 5 செ.கு.வி.(v.i.) 1. மென்மையாதல்; to be soft and gentle. *"மழறுதேன் மொழியாளர்கள்" (திவ். திருவாய். 6, 25).* 2. தெளிவில்லாதிருத்தல் (ஈடு.6, 2, 5, அரும்.); to be indistinct as speech.

*[மழ = இளமை, மென்மை. மழவுறுதல் = மென்மையுறுதல், மென்மையாதல். மழவுறுதல்→ மழறு-.]*

**மழி-த்தல்** *mali-,* 4 செ.குன்றாவி.(v.t.) தலையை மொட்டையடித்தல்; to shave, especially the head. *"மழித்தலும் நீட்டலும் வேண்டா" (குறள், 280).*

*[வழி→மழி-.]*

**மழித்தலை** *malittalai,* பெ.(n.) மொட்டைத் தலை; bald or shaven head. *"கொய்ம் மழித் தலையொடு கைம்மையுற" (புறநா.261).*

*[மழி + தலை.]*

**மழு[1]** *malu,* பெ.(n.) 1. பழுக்கக் காய்ச்சிய இரும்பு; red hot iron, used in ordeals. *"மழுவேந்திக் கொடுத்துக் காரியஞ் செய்யுபவன்" (ஈடு.2, 6, 9).* 2. கடல் (தக்கயாகப். 457); sea.

*[முள்→(மள்) →மழு (மு.தா.98).]*

**மழு[2]** *malu,* பெ.(n.) கோடரி (சூடா.); axe.

*[முள்→(மள்) →மழு.]*



**மழு[3]** *malu,* பெ.(n.) 1. மழுங்கிய; blent, bald, bare. மழுமட்டை. 2. அதிகமான (வின்.); intense, excessive.

**மழுக்கம்** *malukkam,* பெ.(n.) 1. கூரின்மை; bluntness, want of edge. 2. நிலைமைத் தாழ்வு; reduced circumstances. 3. ஒளி மழுங்குகை; dimness-cloudiness, obscurity, as of the son in an eclipse, fading as of colour. 4. அறிவுக் குறைவு; dullness of intellect, as from age or disease. 5. மொட்டை (இ.வ.); baldness.

*[முள் → (மள்) → மழு → மழுகு → மழுங்கு → மழுக்கு → மழுக்கம் (மு.தா.98).]*

மழுக்கல் *maḻukkal,* பெ.(n.) நெல்லை ஒரு முறை குத்தி யெடுத்த தவிடு நீங்காத அரிசி (இ.வ.); husked rice with bran not removed.

*[மழு → மழுக்கு மழுக்கம் = மொட்டை. ஒரு பொருளை மழுக்க அதன் தலையிலடிப்பர். அடித்தலாவது தட்டுதல், இடித்தல், குத்துத லெனவும்படும். நெல்லை உரலிலிட்டு உலக்கையினாற் குத்துவதை மழுக்கல் என்றனர்.]*

மழுக்கலரிசி *maḻukkal-ariši,* பெ.(n.) மழுக்கல் (இ.வ.) பார்க்க; see *maḻukkal*

*[மழுக்கல் + அரிசி.]*

மழுக்கிவிடு-தல் *maḻukki-viḍu-,* 18 செ.கு.வி. (v.i.) தேய்த்துவிடுதல்; to blunt.

*[மழுக்கி + விடு-.]*

மழுக்கு-தல் *maḻukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. கூர் மழுங்கச் செய்தல்; to blunt, dull the edge or point. 2. ஒளி குறையச் செய்தல்; to obscure, as lustre as glory. 3. அறிவைக் குறைத்தல்; to deprive the intellect of its keenness. 4. அடித்தல் (வின்.); to beat, pound. 5. நெற்குத்துதல்; to hull by pounding, as paddy.

*[முள் → (மள்) → மழு → மழுகு → மழுக்கு (மு.தா.98).]*

மழுக்குறுக்கு-தல் *maḻu-k-kuṟukku-,* 5 செ.கு.வி. (v.i.) மழுவெடு-, (யாழ்.அக.) பார்க்க; see *maḻu-v-eḍu.*

மழுகு-தல் *maḻugu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. மழுங்குதல்; to become blunt. *"நுதிமுக மழுகிய.... வெண்கோட்டு" (அகநா.24).* 2. ஒளி குறைதல்; to be dim or obscure. *"முத்துத் தொடை கவிழ்பு மழுக" (பரிபா.6, 16).*

*[முள் → (மள்) → மழு → மழுகு- (மு.தா.98).]*

மழுகூழை *maḻu-kūḻai,* பெ.(n.) 1. வாலிழந்த விலங்கு; animal deprived of its tail, bobtail. 2. மூடன்; block head.

*[மழு + கூழை.]*

மழுங்கல் *maḻuṅgal,* பெ.(n.) 1. மழுங்கினது (வின்.); that which is blunt, dim or unpolished. 2. மூடன் (வின்.); loggerhead, block head. 3. நாணிலி (வின்.); shameless person. 4. மட்டமான பொன் வகை (யாழ்.அக.); a kind of inferior gold.

*[மழு → மழுங்கல்.]*

மழுங்கன் *maḻuṅgaṉ,* பெ.(n.) வேலைப்பாடில்லாத அணி (வின்.); plain ornament without any delicate workmanship.

*[மழுங்கல் → மழுங்கன்.]*

மழுங்கி *maḻuṅgi,* பெ.(n.) நாணமிழந்தவள்; shameless women. *"கொங்கையின் மூடுசீலை திறந்த மழுங்கிகள்" (திருப்பு.67).*

*[மழுங்கல் → மழுங்கி.]*

மழுங்கு-தல் *maḻuṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. கூர் நீங்குதல்; to be blunt or dull, as an edge or point. *"நுதி மழுங்கிய" (புறநா.4).* 2. பொலிவழிதல் (திவ்.); to be obscured, deprived of lustre, of glory; to fade, as a colour, as the lustre of a jewel or the glory of a state. 3. கெடுதல்; to disappear, to be lost. *"உரவுத்தகை மழுங்கி" (கலித்.*

*120).* 4. அறிவுக் கூர்மை குறைதல்; to become dull in feeling, to lose keenness of intellect. *"உதிக்கின்ற புத்திய மழுங்கிடும்" (திருவேங்.சத.15).* 5. ஒளி குறைதல்; to be dim, obscure, as the sun or moon in an eclipse or behind a cloud. *"கதிர்கண் மழுங்கி மதியு மதிர்வது போல்" (கலித்.146).* 6. கவனிப்பின்றி மறைந்து போதல் (வின்.); to pass by without strict examination inquiry or notice.

*[முள் → (மள்) → மழு → மழுகு → மழுங்கு (மு.தா.98).]*

மழுங்குணி *maḷuṅguṇi,* பெ.(n.) அறிவற்றவன் (வின்.); dunce, good - for -nothing fellow.

*[மழுங்கு →மழுங்குணி.]*

மழுங்குணிமாங்காய் *maḷuṅguṇi-māṅgāy,* பெ.(n.) மழுங்குணி (வின்.) பார்க்க; see *maḷuṅguṇi.*

*[மழுங்குணி = அறிவற்றவன், மூடன். மழுங்குணி + மாங்காய்.]*

மழுங்குணிமாங்கொட்டை *maḷuṅguṇi-māṅ-koṭṭai,* பெ.(n.) மழுங்குணி (வின்.) பார்க்க; see *maḷuṅguṇi.*

*[மழுங்குணி + மாங்கொட்டை.]*

மழுப்பன் *maḷuppaṉ,* பெ.(n.) 1. செயலை மழுப்பி விடுவோன் (இ.வ.); one who is slipshod or ineffective in work. 2. சுணங்குவோன் (வின்.); delayer. 3. இழிவழக்கு பேசுவோன் (யாழ்.அக.); sophist, controversialist.

*[மழு→மழுப்பு→மழுப்பன்.அன்= ஆண்பாலீறு.]*

மழுப்பு-தல் *maḷuppu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. நெகிழவிடுதல்; to slur or slip over. 2. செயலைப் பயனற்றதாக நெகிழ்த்துதல்; to bring to naught, make ineffective. 3. சுணக்கப்படுத்துதல் (வின்.); to put of, protract, delay, as in coming to a decision. 4. ஏமாற்றுதல்; to deceive. *"யாரையு மழுப்ப வல்லான்" (திருவாலவா.30, 24).*

*[மழு→மழுப்பு.]*

மழுமட்டை *maḷu-maṭṭai,* பெ.(n.) 1. மழு மொட்டை, 1 பார்க்க; see *maḷu-moṭṭai. "மழு மட்டையான கோடு" (அகநா. 24, உரை).* 2. முழுமூடத்தனம் (யாழ்ப்.); gross stupidity.

*[மழு+ மட்டை. மழுவெனினும் மட்டையெனினு மொக்கும். மழுமட்டையென்றது இருபெயரொட்டு.]*

மழுமாறி *maḷu-māṟi,* பெ.(n.) புரட்டன் (இ.வ.) (வின்.); artful rogue.

*[மழு + மாறி.]*

மழுமாறு-தல் *maḷu-māṟu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. அரைமனதாதல்; to be half-minded, undecided. 2. தந்திரம் பண்ணுதல்; to be artful, tricky.

*[மழு→மழுமாறு-,]*

மழுமொட்டை *maḷu-moṭṭai,* பெ.(n.) 1. கூர் மழுங்கியது; anything blunt edged. 2. முழு மொட்டையான தலை; abosolutely bald or clean - shaved head.

*[மழு + மொட்டை. மழுவெனினும் மொட்டையெனினும் ஒக்கும். மழுமொட்டை யென்றது இருபெயரொட்டு.]*

மழுவலான் *maluvalān*, பெ.(n.) 1. மழுவாளி, 1 பார்க்க; see *malu-vāli*. *"மழுவலான் திருநாம மகிழ்ந்துரைத்து" (தேவா.16:69).*

*[மழு→மழுவலான்→மழுவாழி.]*

மழுவன் *maluvan*, பெ.(n.) 1. அஞ்சாதாவன்; fearless man. 2. விடாப்பிடியாளன்; obstinate person. 3. ஊர் காப்போன்; village watchman.

*[மழு = கூரிய படைக்கருவி. அஞ்சாதவன் கையிற் படைகருவியிருத்தலே சிறப்பு. எனவே, படைக்கருவியுடையோன் அஞ்சாதவனாயும், ஊர்காப்போனாயும், பிடிவாதக் குணமுள்ளோனாயு மிருப்பர்.]*

மழுவாள் *maluvāl*, பெ.(n.) கூரிய வாள் கருவி; sharp sword. *"மான் மறியும் மழுவாளும் விடாது" (திருக்கோ.170).*

*[மழு→மழுவாள்.]*

மழுவாளி *malu-v-āli*, பெ.(n.) 1. மழுவை ஆயுதமாகக் கொண்டவன்; one who is armed with battle-axel. 2. சிவன்; *Śivan*. *"மழுவாளி யுன்னாகத்தான்" (திவ்.திருவாய். 9, 3, 10).* 3. பரசுராமன்; *Parašurāman*. *"முன்னொரு நாள் மழுவாளி சிலைவாங்கி" (திவ்.பெருமாள்தி.9, 9).*

*[மழு + ஆளி. மழுவாகிய படைக்கருவியை ஆள்பவன்.]*

மழுவி *maluvi*, பெ.(n.) மழுங்கி பார்க்க; see *maluvi*. *"நழுவிகள் மழுவிகள்" (திருப்பு.243).*

*[மழுங்கி →மழுவி.]*

மழுவெடு-த்தல் *malu-v-edu-*, 4 செ.கு.வி. (v.i.) கை, நா முதலியவற்றில் மழுவை யேந்திச் சூளுரைச் செய்தல்; to undergo the ordeal of holding red-hot iron by the hand, tongue etc. *"நாவினான் மழுவெடுத்த ஞானப் பிரகாசர்".*

*[மழு + எடு-.]*

மழுவெண்ணெய் *malu-v-enney*, பெ.(n.) பழுக்கக் காய்ந்த பொருளைக் கைக்குக் குளிர்விக்கு மெண்ணெய் (யாழ்.அக.); a kind of medicinal oil, said to make hot things cool to the toch.

*[மழு + எண்ணெய்.]*

மழுவேந்தி *malu-v-ēndi*, பெ.(n.) 1. மழுவாளி (வின்.) பார்க்க; see *malu-v-āli*. 2. பொய்யன் (யாழ்.அக.); liar.

*[மழு + ஏந்தி.]*

மழுவேந்திக்கொடு-த்தல் *malu-v-ēndi-k-kodu-*, 4 செ.கு.வி.(v.i.) மழுவெடு-, பார்க்க; see *malu-v-edu-*. *"மழுவேந்திக் கொடுத்துக் காரியஞ் செய்யுமவன்" (ஈடு.2, 6, 9).*

*[மழு + ஏந்திக்கொடு-.]*

மழுவேந்துங்கோபன் *malu-v-ēnduṅ-kōban*, பெ.(n.) சிவனார் வேம்பு; sivan's neem (சா.அக.).

மழுவோன் *maluvōn*, பெ.(n.) மழுவாளி, 1 பார்க்க; see *malu-v-āli*. *"வன்றாண் மழுவோனும் யாரும் வணங்கினரால்" (கம்பரா.இரணிய.161).*

*[மழுவாளி → மழுவோன்.]*

மழை[1]-த்தல் *malai-*, 11 செ.கு.வி.(v.i.) 1. மழை நிறைந்திருத்தல்; to be charged with rain. *"மழைத்த வானமே" (கம்பரா.*

*கார்கால.2).* 2. கருநிறமாதல்; to darken, become dark, as a cloud. *"மழைத்திடு மெய்யுடை மாற்றலர்" (கந்தபு.சூரன்வதை. 132).* 3. குளிர்தல்; to be cool. *"மழைத்த மந்த மாருதத்தினால்" (பெரியபு.திருஞான. 150).*

*[மால்→மழை (வே.க.4:43).]*

**மழை²** *malai,* பெ.(n.) 1. முகிலினின்றும் பொழியும் நீர்; rain. *"கொழுநற் றொழுதெழுவாள் பெய்யெனப் பெய்யும் மழை" (குறள், 55). "மழை பெய்தே நிறையாத குடல் பனி பெய்தா நிறையப் போகின்றது?" (பழ.).*2. நீருண்ட மேகம்; cloud. *"மழை திளைக்கு மாடமாய்" (நாலடி, 361).* 3. மழைக்கால் பார்க்க; see *malai-k-kāl. "மழை வீழ்ந்தன்ன மாத்தாட் கழுகு" (பெரும்பாண். 363).* 4. நீர் (பிங்.); water. 5. கருமை; blackness, darkness. *"மழைதரு கண்டன்" (திருவாச.6, 46).* 6. குளிர்ச்சி (பிங்.); coolness. *"பெரு மழைக்கண்" (குறள், 1239).* 7. மிகுதி (வின்.); plenty.

*[மல்→மால்→மழை (வே.க.4:43).]*

**மழைக்கண்ணி¹** *malai-k-kanni,* பெ.(n.) ஓயாது கண்ணினின்று நீர் வடியும் நோயை யுடையவர்; a women with always water in the eyes (சா.அக.).

*[மழை + கண்ணி. கண்ணிலிருந்து இடையறாது நீர் வடிவதை மழையென்றும், அத்தகையக் கண்ணையுடையவரை மழைக் கண்ணி என்றும் குறித்தனர்.]*

**மழைக்கண்ணி²** *malai-k-kanni,* பெ.(n.) பறவை வகை (யாழ்ப்.); a kind of bird.

**மழைக்கரு** *malai-k-karu,* பெ.(n.) கார்முகில்; cloud. *"மழைக் கருவுயிர்க்கும்.... அட்டில்" (சிலப்.10:143, அரும்.).*

*[மழை + கரு.]*

**மழைக்காயிருட்டு** *malai-k-kāyiruttu,* பெ.(n.) மழைக்காலிருட்டு (நெல்லை.) பார்க்க; see *malai-k-kāl-iruttu.*

*[மழைக்காலிருட்டு →மழைக்காயிருட்டு.]*

**மழைக்கால்** *malai-k-kāl,* பெ.(n.) பெய்யும் நிலையில் கரு நிறத்துடன் இறங்கும் மேகக் கால்; dark clouds descending in columns and indicating rain.

*[மழை + கால்.]*

**மழைக்காலம்** *malai-k-kālam,* பெ.(n.) மாரிக்காலம்; rainy season.

*[மழை + காலம்.]*

**மழைக்காலிருட்டு** *malai-k-kāl-iruttu,* பெ.(n.) மழைபெய்யுங் காலத்து இரவி லுண்டாம் செறிந்த இருள்; dense darkness of a rainy night. *"மழைக் காலிருட்டிலும் மந்தி கொம்பு விட்டுக் கொம்பு பாயும்" (பழ.).*

*[மழைக்கால் + இருட்டு.]*

**மழைக்காலிருள்** *malai-k-kal-irul,* பெ.(n.) மழைக்காலிருட்டு பார்க்க; see *malai-k-kāl-iruttu. "மழைக் காலிருளின் எதிர்ப்பட லருமையான்" (திருக்கோ.260, துறைவிளக்.).*

*[மழைக்காலிருட்டு →மழைக்காலிருள்.]*

**மழைக்காற்று** *malai-k-kārru,* பெ.(n.) சீந்தல் காற்று, குளிர்ந்த காற்று; moist and cold weather.

*[மழை + காற்று.]*

**மழைக்கிளி** *malai-k-kili,* பெ.(n.) 1. மழை பெய்து விட்டவுடன் காணப்படும் வெட்டுக் கிளி வகை (வின்.); a kind of grasshopper, as appearing after the rains. 2. கிளி வகை; large Indian parakeet, *palacornis.*

*[மழை + கிளி.]*



**மழைக்குணம்** *malai-k-kunam,* பெ.(n.) மழைத்தோற்றம் (வின்.) பார்க்க; see *malai-t-tōrram.*

*[மழை + குணம்.]*

**மழைக்குயில்** *malai-k-kuyil,* பெ.(n.) தலையிலாக் குருவி (பிங்.); swallow, as visitant in rainy season.

*[மழை + குயில்.]*

**மழைக்குறி** *malai-k-kuri,* பெ.(n.) மழைத் தோற்றம் (வின்.) பார்க்க; see *malai-t-tōrram.*

*[மழை + குறி.]*

**மழைக்கோலம்** *malai-k-kōlam,* பெ.(n.) மழைத்தோற்றம் (வின்.) பார்க்க; see *malai-t-tōrram.*

*[மழை + கோலம்.]*

**மழைக்கோள்** *malai-k-kōl,* பெ.(n.) வெள்ளி (சுக்கிரன்) கோள்; Venus, as the rain indicating planet. *"மழைக்கோல் பொலியு நற்றினம்" (அரிசமய.பராங்.22).*

*[மழை + கோல்.]*

**மழைக்கோளாறு** *malai-k-kōlāru,* பெ.(n.) 1. மழைத்தோற்றம் பார்க்க; see *malai-t-tōrram.* 2. புயலெடுக்கை; changeable stormy weather, unfavourable to navigation.

*[மழை + கோளாறு.]*

**மழைச்சாடை** *malai-c-cādai,* பெ.(n.) மழைத் தோற்றம் (இ.வ.) பார்க்க; see *malai-t-tōrram.*

*[மழை + சாடை.]*

**மழைச்சிலை** *malai-c-cilai,* பெ.(n.) வானவில்; rainbow. *"மழைச் சிலையால் வழி தோரண மிட்டனன் வாசவனே" (தக்கயாகப். 182).*

*[மழை + சிலை. சிலை = வில்.]*

**மழைத்தண்ணீர்** *malai-t-tannir,* பெ.(n.) மழைநீர் பார்க்க; see *malai-nīr.*

*[மழை + தண்ணீர். நீர்→தண்ணீர்.]*

**மழைத்தாரை** *malai-t-tārai,* பெ.(n.) விடாது பெய்யும் மழைநீர் (யாழ்.அக.); continuous shower of rain.

*[மழை + தாரை.]*

**மழைத்துளி** *malai-t-tuli,* பெ.(n.) மழை நீர்ச் சொட்டு (வின்.); rain drop.

*[மழை + துளி.]*

மழைத்தூவல் *malai-t-tūval*, பெ.(n.) மழைத் தூறல் (வின்.) பார்க்க; see *malai-t-tūral.*

*[மழை + தூவல்.]*

மழைத்தூற்றல் *malai-t-tūrral*, பெ.(n.) மழைத்தூறல் (வின்.) பார்க்க; see *malai-t-tūral.*

*[மழை + தூற்றல்.]*

மழைத்தூறல் *malai-t-tūral*, பெ.(n.) சிறு திவலையாகத் தூற்றும் மழை; drizzling rain.

*[மழை + தூறல்.]*

மழைத்தோற்றம் *malai-t-tōrram*, பெ.(n.) மழை வருவதற்குரியதான மந்தாரம், முகில் மூட்டம் (வின்.); clouded sky, as indicating rain.

*[மழை + தோற்றம்.]*

மழைதாங்கி *malai-tāṅgi*, பெ.(n.) கொங்காணி (இ.வ.); rain-cap, covering against rain made of palm leaf.

*[மழை + தாங்கி.]*



மழைதுமித்தல் *malai-tumittal*, பெ.(n.) மழைத்தூறல் (வின்.)பார்க்க; see *malai-t-tūral.*

*[மழை + துமி-த்தல்.]*

மழைநீர் *malai-nīr*, பெ.(n.) மழையினின்று கிடைத்த நீர்; rain water.

*[மழை + நீர்.]*

மழைப்பாட்டம் *malai-p-pāttam*, பெ.(n.) ஒருமுறை கனமாக மழை பெய்கை (வின்.); a shower of rain.

*[மழை + பாட்டம்.]*

மழைப்புகார் *malai-p-pugār*, பெ.(n.) மழைத்தோற்றம் பார்க்க; see *malai-t-tōrram.*

*[மழை + புகார்.]*

மழைப்பூங்காரம் *malai-p-pūṅgāram*, பெ.(n.) மழைத்தோற்றம் (யாழ்.அக.) பார்க்க; see *malai-t-tōrram.*

*[மழை + பூங்காரம்.]*

மழைபெய்-தல் *malai-pey-*, 1 செ.கு.வி. (v.i.) வானின்று நீர் விழுதல்; to rain. *"வான் மழை பெய்கிறது" (உ.வ.).*

*[மழை + பெய்.]*

மழைமரக்கால் *malai-marakkāl*, பெ.(n.) ஓராண்டில் பெய்யும் மழையை அளக்கும் அளவு வகை (வின்.); a kind of rain gauge, unit for computing rainfull during a year.

*[மழை + மரக்கால்.]*

மழைமரம் *malai-maram*, பெ.(n.) ஆப்பிரிக்காவிற்கு மேற்கேயுள்ள ஒரு தீவிலுள்ள அதிசய மரம்; region north side a miracle tree on a island to africa.

*[மழை + மரம்.]*

இது 40 முதல் 48 அடி உயர முள்ளதாயும் இரவில் இம்மரத்தைச் சுற்றி முகில்கள் கவிந்து கொண்டு ஈரம் வேரினின்று கிளைகளுக்கேறி இலைகளில் வழியாய் ஓர் இரவிற்கு 20,000 கல்லெடை (டன்.) நீர் வடிவதாகச் சொல்லப்படுகிறது.

**மழைமாரிச்சண்டை** *malai-māri-c-candai,* பெ.(n.) கடுஞ்சண்டை (இ.வ.); violent quarrel, like a rain storm.

*[மழைமாரி + சண்டை.]*

**மழைமுகங்காணுதல்** *malai-mugaṅ-kāṇudal,* பெ.(n.) மழை பெய்து தளிர்க்கை (வின்.); being enlivened by rain.

*[மழைமுகம் + காணுதல்.]*

**மழையடை** *malai-y-aḍai,* பெ.(n.) விடாது பெய்யும் மழை; incessant rain. *"மழை யடையிலே வரும் விருந்தாளி சத்துரு" (உ.வ.).*

*[மழை + அடை. இல்முன் முன்றில் ஆனது போல அடைமழை மழையடையானது.]*

**மழையலர்** *malai-y-alar,* பெ.(n.) நீர் (சூடா.); water.

*[மழை + அலர்.]*

**மழையான்** *malaiyāṉ,* பெ.(n.) திருமால்; *Tirumāl. "மழை யானுந் திகழ்கின்ற மலரோனென் றிவர்கள்" (தேவா.1064, 9).*

*[மழை →மழையான்.]*

**மழையேறு** *malai-y-ēru,* பெ.(n.) இடி; thunder. *"நெடுந்தேரினன் மழையேறென வார்த்தான்" (கம்பரா.அதிகா.166).*

*[மழை + ஏறு.]*

**மழையொறுத்தகாலம்** *malai-y-oṟutta-kālam,* பெ.(n.) வறண்ட காலம் (வின்.); drought.

*[மழை + ஒறுத்தகாலம்.]*

**மழைவண்ணக்குறிஞ்சி** *malai-vaṇṇa-k-kuriñji,* பெ.(n.) முகில் வண்ணப் பூவுள்ள மருதோன்றி (பிங்.); western ghats blue nail dye.

*[மழைவண்ணம் + குறிஞ்சி.]*

**மழைவண்ணன்** *malai-vaṇṇaṉ,* பெ.(n.) மழையான் (வின்.) பார்க்க; see *malaiyāṉ.*

*[மழை + வண்ணன்.]*

**மழைவறங்கூர்-தல்** *malai-vaṟaṅ-kūr-,* 2 செ.கு.வி. (v.i.) மழை பெய்யாதொழிதல்; to become rainless. *"பாண்டியனாடு மழைவறங் கூர்ந்து வறுமையெய்தி" (சிலப். உரை பெறு கட்டுரை, பக்.30).*

*[மழை + வறங்கூர்.]*

**மழைவீற்றிருத்தல்** *malai-vīṟṟiruttal,* பெ.(n.) பருவமழை பெய்கை (சிலப். உரைபெறு கட்டுரை, பக்.30); raining in season.

*[மழை + வீற்றிருத்தல்.]*

**மள்கு-தல்** *malgu-,* 5 செ.கு.வி. (v.i.) குறைதல்; to be deficient, defective. *"மல்கலில் பெருங் கொடை" (கம்பரா. கார்கால.104).*

*[முள் →மள் →மள்கு- (வே.க.4:59).]*

**மள்ளம்** *maḷḷam,* பெ.(n.) மள்ளல் (பிங்.) பார்க்க; see *maḷḷal.*

*[மள்ளல் →மள்ளம்.]*

**மள்ளல்** *mallal,* பெ.(n.) வலிமை (திவா.); strength, power, robustness.

[மள் → மள்ளல்.]

**மள்ளர்** *mallar,* பெ.(n.) மள்ளன் பார்க்க; see *mallan.*

[மள் →மள்ளர்.]

**மள்ளன்** *mallan,* பெ.(n.) 1. திண்ணியோன் (பிங்.); strong, powerful person. 2. படைவீரன்; warrior. *"களம்புகு மள்ளர்" (கலித்.106).* 3. படைத்தலைவன் (சூடா.); commander, millitary chief. 4. இளைஞன்; youth. *"பொருவிறல் மள்ள" (திருமுரு.262).* 5. மருத நிலத்தில் வாழ்வோன் (திவா.); inhabitant of agricultural tracts. *"மள்ளருழுபக டுரப்புவார்" (கம்பரா.நாட்.18).* 6. குறிஞ்சி நிலத்தில் வாழ்வோன் (சூடா.); inhabitant of hilly tracts.

[முள்→மள் →மள்ளன் (வே.க.4:5).]

**மள்ளான்** *mallān,* பெ.(n.) குதிரை வகை (அசுவசா.152); a species of horse.

**மள்ளு** *mallu,* பெ.(n.) கைம்மரம் (வின்.); rafter.

**மளமள-த்தல்** *mala-mala-,* 4 செ.கு.வி. (v.i.) மரக்கொம்பு முதலியன முறியும்போது ஒலியெலுப்புதல்; to crash, rattle, sound loudly, as branches in snaping.

**மளமளப்பு** *mala-malappu,* பெ.(n.) முறிதற் குறிப்புள்ள ஒலி; snapping noise.

[மளமள →மளமளப்பு.]

**மளமளெனல்** *mala-malenal,* பெ.(n.) 1. ஓர் ஒலிக்குறிப்பு; onom. expr. signifying rattling, crashing. 2. விரைவுக் குறிப்பு quickness. *"மளமளென நொறுக்கி" (இராமநா.சுந்.20).*

[மளமள + எனல்.]

**மளாரட்டியெனல்** *malāratti-y-enal,* பெ.(n.) மளாரெனல் (யாழ்.அக.) பார்க்க; see *malār-enal.*

[மளாரெனல் →மளாரட்டியெனல்.]

**மளாரெனல்** *malār-enal,* பெ.(n.) ஓர் ஒலிக்குறிப்பு; onom. expr. signifying crashing, cracking. *"மளாரென முறிந்தது" (உ.வ.).*

[மளார் + எனல்.]

**மளிக்காரம்** *mali-k-kāram,* பெ.(n.) அரிதாரம்; yellow orpiment (சா.அக.).

**மளிகாரம்** *maligāram,* பெ.(n.) வெண்காரம் (சங்.அக.); borax.

**மளிகை** *maligai,* பெ.(n.) பலசரக்கு; grocery.

தெ. மளிகா

[வணிகம்→ வணிகை→மளிகை.]

**மளிகைக்கடை** *maligai-k-kadai,* பெ.(n.) பலசரக்குக் கடை (இக்.வ.); grocery shop.

[மளிகை + கடை.]

**மளிகைச்செட்டி** *maligai-c-cetti,* பெ.(n.) 1. பலசரக்கு வணிகர்; grocer. 2. செட்டிச் சாதி வகை; a *Chetti* caste.

[மளிகை + செட்டி.]

**மளுக்கெனல்** *malukkenal,* பெ.(n.) மளாரெனல் பார்க்க; see *malār-enal.* *"மரக்கிளை மளுக்கென முறிந்தது" (உ.வ.).*

[மளுக்கு + எனல்.]

மளுங்கு *maḷuṅgu,* பெ.(n.) ஓர் உயிரி; a creature (சா.அக.).

மளை *maḷai,* பெ.(n.) கற்றாழை; aloe (சா.அக.).

மற்கடம் *maṟkaḍam,* பெ.(n.) மர்க்கடம் பார்க்க; see *mar-k-kaḍam.* *"வாதமாமகன் மற்கடம் விலங்கு" (திவ்.பெரியதி.5, 8, 2).*

மற்கடி *maṟkaḍi,* பெ.(n.) பூனைக் காஞ்சொறி; a plant, cowhage (சா.அக.).

மற்கரை *maṟkarai,* பெ.(n.) 1. குகை; cave. 2. மலடி; barren woman.

மற்கலி *maṟkali,* பெ.(n.) ஆசீவக மதத்தார் வணங்கும் இறைவன்; Lord of the *Ajīvakas.* *"என்றது மற்கலிதானே யிறை" (நீலகேசி, ஆசிவக.3).*

மற்கலிநூல் *maṟkaḷa-nūl,* பெ.(n.) ஆசீவகமத நூல்; the scriptures of the *Ajīvakas* by *makkhalidēva.* *"மற்கள நூலின் வகையாது வென்ன" (மணிமே. 27:165).*

மற்கு *maṟku,* பெ.(n.) சினம் (அக.நி.); wrath, anger.

மற்குணம்[1] *maṟkuṇam,* பெ.(n.) முகட்டுப் பூச்சி; bug. *"மற்குணத் தொகுதிபோற் பிசைந்து" (பாரத.வாரண.9).*

மற்குணம்[2] *maṟkuṇam,* பெ.(n.) போர்க் குணம்; war attitude.

*[மல் + குணம்.]*

மற்கூத்து *maṟ-kūttu,* பெ.(n.) மல்[2], 4 (சிலப். 3:14, உரை) பார்க்க; see *mal.*

*[மல் + கூத்து.]*

மற்கோல் *maṟkōl,* பெ.(n.) பகை (அக.நி.); hatred, enmity.

மற்சரம் *maṟcaram,* பெ.(n.) 1. பொறாமை (சங்.அக.); envy. 2. போட்டி (இ.வ.); rivalry.

*[மாச்சரியம்→மற்சரம் (கொச்சை).]*

மற்சரி–த்தல் *maṟcari-,* 4 செ.கு.வி.(v.i.) போட்டியிடுதல் (இ.வ.); to compete.

மற்சாதனம் *maṟ-šādaṉam,* பெ.(n.) ஒரு காலை வயிற்றில் அழுத்தி மடித்தும் மற்றைக் காலைத் தொடையருகே யூன்றியும் கைமாறிப் புறங்காலைக் கட்டியிருக்கும் ஆசன வகை (தத்துவப்.107, உரை); a posture which consists in sitting with one foot pressed against the abdomen and with the other foot pressed close to the thigh against the ground, the hands passing behind the clasping the feet crosswise.

மற்பயிலிடம் *maṟ-payiliḍam,* பெ.(n.) மற் போர் கற்குங் கூடம் (பிங்.); ground where athletic exereise are practised wrestling.

*[மல் + பயிலிடம்.]*

மற்புறு *maṟ-puṟu,* பெ.(n.) கார்போகவரிசி; babehi seeds (சாஅக.).

மற்ற *maṟṟa,* வி.அ.(adj.) மற்றை (கொ.வ.) பார்க்க; see *maṟṟai.*

*[மற்றை→மற்ற.]*

மற்றஞ்செரிச்சான் *maṟṟañcericcāṉ,* பெ.(n.) உப்பு; salt (சா.அக.).

மற்றது *maṟṟadu,* பெ.(n.) ஏனையது; the other.

*[மற்று →மற்றது.]*

மற்றநாள் *marra-nāḷ,* பெ.(n.) 1. மற்றாநாள்,1 பார்க்க; see *marrā-nāḷ.* 2. நாளை நின்று மறுநாள் (நாஞ்.); day after tomorrow.

*[மற்று → மற்ற + நாள்.]*

மற்றப்படி *marra-p-paḍi,* பெ.(n.) வேறு வகையில் (இக்.வ.); else, otherwise. *"மற்றப்படி வேறு எதுவும் இல்லை" (உ.வ.).*

*[மற்று →மற்ற + படி.]*

மற்றம் *marram,* பெ.(n.) ஆற்றோரத்தில் சரிந்து தாழ்ந்துள்ள நிலம் (செந்.xiii.172); low-lying land sloping towards a river.

*[மற்று → மற்றம்.]*

மற்றமாகாள் *marra-māgāḷ,* பெ.(n.) மருளுமத்தை; a kind of dhatura (சா.அக.).

மற்றவன் *marravaṉ,* பெ.(n.) ஏனையவன்; the other one.

*[மற்று → மற்றவன்.]*

மற்றாநாள் *marrā-nāḷ,* பெ.(n.) 1. மறுநாள்; next day, morrow. 2. பிற்றை நாளின் மறுநாள் (இ.வ.); day after the next.

*[மறு→மற்றா + நாள்.]*

மற்று[1] *marru,* பெ.(n.) 1. ஓர் அசைநிலை (தொல்.சொல்.264); an expletive. 2. வினை மாற்றுக் குறிப்பு (நன்.433). 3. பிறிதுப் பொருட் குறிப்பு (நன்.433); a term meaning other, another.

*[மறு→மற்று (வே.க.4:77).]*

மற்று[2] *marru,* பெ.(n.) 1. மறுமையும் (வின்.); again. 2. பின்; subsequently, afterwards. 3. மற்றப்படி பார்க்க; see *marra-p-paḍi.*

மற்றும் *marrum,* பெ.(n.) 1. மேலும்; besides. 2. மீண்டும்; again. *"உடைமை மயலாகு மற்றும் பெயர்த்து" (குறள், 344).*

*[மற்று→மற்றும்.]*

மற்றும்படி *marrum-paḍi,* வி.எ.(adv.) மற்றப்படி பார்க்க; see *marra-p-paḍi.*

*[மற்றபடி →மற்றும்படி.]*

மற்றை *marrai,* வி.அ.(adj.) பிற (நன்.434); other.

*[மற்று →மற்றை.]*

மற்றைப்படி *marrai-p-paḍi,* பெ.(n.) மற்றப்படி பார்க்க; see *marra-p-paḍi.*

*[மற்றப்படி →மற்றைப்படி.]*

மற்றொழில் *marroḻil,* பெ.(n.) மற்போர்; art of wrestling. *"மற்றொழிலுந் தேர்த் தொழிலும்" (சீவக.1795).*

*[மல் + தொழில்.]*

மற்றொன்று *marroṉru,* பெ.(n.) பிரிதொன்று; another thing or matter. *"மற்றொன்று சூழினும்" (குறள், 380).*

*[மற்று + ஒன்று.]*

மற்றொன்றுவிரித்தல் *marroṉru-virittal,* பெ.(n.) நூற்குற்றம் பத்தனுள் எடுத்துக் கொண்ட பொருளை விடுவித்துப் பிறிதொன்று கூறுதலாகிய குற்றம் (நன்.12); digression, introducing extraneous matter, one of ten *nūr-kurram*(q.v.).

*[மற்றொன்று + விரித்தல்.]*

**மற்றோ** *maṟṟō,* (int.) வியப்பு, இரக்கங்களைக் குறிக்குஞ் சொல் (யாழ்.அக.); a word indicative of surprise or pity.

*[மற்று →மற்றோ.]*

**மற்றோதயமூலி** *maṟṟōdaya-mūli,* பெ.(n.) நிலப்பனை; ground palm (சா.அக.).

**மற–த்தல்** *maṟa-,* 3 செ.குன்றாவி.(v.t.) 1. அயர்த்தல்; to forget. *"மறவற்க மாசற்றார் கேண்மை" (குறள், 106).* 2. அசட்டை செய்தல்; to neglect, disregard. 3. ஒழித்தல்; to put an end to, to give up. *"மறத்தல் வெகுளியை யார்மாட்டும்" (குறள், 303).*

*[முல்→மல்→மல. மலத்தல் = மயங்குதல். மல →மலங்கு→மலக்கு→மலக்கம். மலக்கம் = மயக்கம், கலப்பு. மலங்கு = பாம்புடம்பும் மீன்வாலுங் கலந்த நீருயிரி. மலங்கு→மதங்கு→மதக்கம் = மயக்கம். மதங்கு→மறங்கு, மறங்குதல் = மயங்குதல். மல்→ மலை→மலைவு. மலைத்தல்→மயக்குதல். மலம்→ மதம்→மறம் = மயக்கம். மறம்→மற (மு.தா.177). முள்→மள்→மரு→மறு = குற்றம். மறுத்தல் = இல்லையென்று சொல்லாமல் மறைத்தல். மறு→மற. மறத்தல் = மனத்தில் மறையப் பெறுதல்.]*

**மறக்கருணை** *maṟa-k-karuṇai,* பெ.(n.) அருட்கருணை; divine grace that chastise. *"சூரனை மறக்கருணை யீந்து பணிகொண்டில யெனில்" (அருட்பா. V, தெய்வமணி.21).*

*[மறம் +* **Skt.** *கருணை.]*

**மறக்களம்** *maṟa-k-kaḷam,* பெ.(n.) போர்க் களம்; battle field. *"மறக்கள மருங்கின்... உயிர்த் தொகை யுண்ட" (சிலப். 27:11).*

*[மறம் + களம்.]*

**மறக்களவழி** *maṟa-k-kaḷa-vaḻi,* பெ.(n.) போரிற் பகையழிக்கும் அரசனை உழும் வேளாளனாக மிகுத்துக் கூறும் புறத்துறை (புறநா.373); theme describing a kings as ploughing the field of battle.

*[மறக்களம் + வழி.]*

**மறக்களவேள்வி** *maṟa-k-kaḷa-vēḷvi,* பெ.(n.) களவேள்வி (புறநா.372); theme praising a warrior killing his enemies, opp. to *aṟa-k-kaḷa-vēḷvi. "யாங்கணு மறக்கள வேள்வி செய்வோ யாயினை" (சிலப். 28:131).*

*[மறக்களம் + வேள்வி.]*

**மறக்கற்பு** *maṟa-k-kaṟpu,* பெ.(n.) தன் சீற்றத்தாற் கடுஞ்செயல் தோற்றுவிக்குங் கற்பு; militant chastity, which impels a woman to do terrible deeds, opp. to aṟa-k-kaṟpu. *"வீரபத்தினி மறக் கற்புடையாள்" (சிலப்.பதிக. 42, உரை).*

*[மறம் + கற்பு.]*

**மறக்காஞ்சி** *maṟa-k-kāñji,* பெ.(n.) போரில் விழுப்புண் பெற்ற வீரன் தன் வாழ்க்கை வேண்டாது அப்புண்ணைக் கிழித்துக் கொண்டு இறத்தலைக் கூறும் புறத் துறை (தொல்.பொருள். 79, உரை); (Purap.) theme describing a warrior who had received a wound on his breast in battled tearing open that wound and dying in utter disdain of life.

*[மறம் + காஞ்சி.]*

**மறக்குடி** *maṟa-k-kuḍi,* பெ.(n.) 1. வீரகுலம்; warrior tribe. *"பழைய மறக்குடியிற் பேதையானவள்" (பு.வெ.21, உரை).*

2. மறப்பண்பு நிறைந்த தமிழர்கள்; warrior of Tamilar race.

*[மறம் + குடி.]*

**மறங்கு-தல்** *marangu-,* 5 செ.கு.வி.(v.i.) கலங்குதல்; to be bewildered. *"கீழ்தான்.... மறங்குமா மற்றொன் றுரைத்து (நாலடி, 342).*

*[முல் → மல் →மல. மலத்தல் = மயங்குதல். மல → மலங்கு →மலக்கு →மலக்கம். மலக்கம் = மயக்கம். மலங்கு = பாம்புடம்பும் மீன்வாலுங் கலந்து நீருயிரி. மலங்கு → மதங்கு → மதக்கம் = மயக்கம். மதங்கு →மறங்கு (மு.தா.177).]*

**மறச்செவி** *mara-c-cevi,* பெ.(n.) கரிசு (பாவம்) பயக்கும் மொழிகளைக் கேட்குங் காது; ear that listens, to sinful things. *"அறச்செவி திறந்து மறச்செவி யடைத்து" (மணிமே.9:60).*

*[மறம் + செவி.]*

**மறத்தி** *maratti,* பெ.(n.) 1. வீரப்பெண்; woman of courage. 2. மறக்குடிப் பெண்; a woman one of Tamilar race. 3. பாலை நிலப் பெண் (திவா.); woman of desert tracts. *"கரியகண்ணை யுடைய மறத்தி" (புறநா.181, உரை).* 4. குறிஞ்சி நிலப் பெண் (பிங்.); woman of hilly tracts.

*[மறம் → மறத்தி]*

**மறத்துப்போ[1]-தல்** *marattu-p-pō-,* 8 செ.கு.வி.(v.i.) மறுத்துப்போ-, (வின்.) பார்க்க; see *maruttu-p-pō.*

*[மறுத்துப்போ- →மறத்துப்போ-.]*

**மறத்துப்போ[2]-தல்** *marattu-p-pō-,* 8 செ.கு.வி.(v.i.) உணர்வு குன்றுதல்; insensation.

**மறத்துறை** *mara-t-turai,* பெ.(n.) 1. கரிசு (பாவ) நெறி; sinful way. *"மறத்துறை கடிந்தவேன் மன்னர் மன்னனே" (பாகவத.1, பரீட்சித்துச் சாப.40).* 2. வீரச்செயல்கள்; heroic exploits. *"மறத்துறை விளங்கிய மன்னவன் கோயிலும்" (சிலப்.14:12).*

*[மறம் + துறை.]*

**மறதி** *maradi,* பெ.(n.) நினைவின்மை; forgetfulness.

*[மற→ மறதி.]*

**மறதிக்காரன்** *maradi-k-kāran,* பெ.(n.) நினைவாற்றல் குறைந்தவன் (வின்.); forgetful person.

*[மறதி + காரன்.]*

**மறந்துதூங்கு-தல்** *marandu-tūngu-,* 8 செ.கு.வி.(v.i.) நினைவற்றுத் தூங்குதல்; deep sleep due to exhaution.

*[மறந்து + தூங்கு.]*

**மறநிலை** *mara-nilai,* பெ.(n.) வீரத்தின் படிநிலை; stages of bravery.

மறநிலைகள் : மறம் = வீரம்; துணிவு = வினை முயற்சிக் கேற்ற வீரம்; துணிச்சல் = நிலைமைக்கு மிஞ்சிய வீரம்; உரன் அல்லது திடம் அல்லது திண்மை = மனவுறுதி; திடாரிக்கம் = தைரியம்; திண்ணக்கம் = நெஞ்சமுழுத்தம்; தறுகண்மை = இறப்பிற்கஞ்சாத வீரம் (சொல்.58).

**மறநிலைப்பொருள்** *mara-nilai-p-poruḷ,* பெ.(n.) வெற்றி, திறை, தண்டம் முதலியவற்றால் அரசன் தேடிய பொருள் (பிங்.); wealth of a king obtained by victory, tribute, penality, fine etc.

*[மறநிலை + பொருள்.]*

**மறநிலையறம்** *mara-nilai-y-aram,* பெ.(n.) அரசன் பகையறுத்து நாட்டினைக் காவல் புரியும் அறச்செயல் (பிங்.); kingly virtue of vanquishing enemies in the interests of his country.

*[மறநிலை + அறம்.]*

**மறநிலையின்பம்** *mara-nilai-y-inbam,* பெ.(n.) வீரச்செயல், ஏறுதழுவல், இலக்க மெய்தல், வலிதிற்கோடல் முதலியவற்றால் விரும்பிய பெண்ணை அரசன் அடையும் இன்பம் (பிங்.); happiness of a king who wins his bride by feat of arms, as bull-baiting, archery, etc.

*[மறநிலை + இன்பம்.]*

**மறப்பிலி** *marappili,* பெ.(n.) கடவுள் (யாழ். அக.); god.

*[மறப்பு + இலி.]*

**மறப்பு¹** *marappu,* பெ.(n.) மறதி பார்க்க; see *maradi.* *"மறப்பறியே னொள்ளமர்க் கண்ணாங் குணம்" (குறள், 1125).*

*[மற→ மறப்பு.]*

**மறப்பு²** *marappu,* பெ.(n.) மறுப்பு பார்க்க; see *maruppu.*

*[மறுப்பு→ மறப்பு (கொ.வ.).]*

**மறப்புகழ்** *marappugal,* பெ.(n.) வீரச் செயலால் வரும் புகழ்; renown got by valourous deeds. *"மறப்புகழ் நிறைந்த மைந்தினோன்" (புறநா.290).*

*[மறம் +புகழ்.]*

**மறப்புலி** *mara-p-puli,* பெ.(n.) 1. கொடிய புலி; ferocious tiger. *"மேற்சென்று பாய்தல் மறப்புலி தனக்கு மாமோ" (சீவக.752).* 2. அரிமா; lion.

*[மறம் + புலி.]*

**மறம்¹** *maram,* பெ.(n.) 1. வீரம்; valour, bravery. *"மறவா ளேந்திய நிலந்தரு திருவி னெடியோன்" (சிலப்.28:2).* 2. சினம் (பிங்.); anger, wrath. *"மேவார் மறத்தொடு...... கடந்த காளை" (புவெ.9:4).* 3. பகை; enmity, hatred. *"செங்களத்து மறங்கருதி" (பு.வெ.:1, கொளு).* 4. வலி (பிங்.); power, strength. *"மறங்கெழு மதிலே" (கல்லா.73:29).* 5. வெற்றி; victory. *"மற வைத்தனித் திகிரி" (தக்கயாகப்.462).* 6. போர் (பிங்.); war. 7. கொலைத் தொழில்; killing, murder. *"மறந்திருந்தார்" (கலித்.38).* 8. கூற்றுவன் (பிங்.); *yaman.* 9. கெடுதி (வின்.); injury. 10. கரிசு (பாவம்) (பிங்.); vice, evil, sin. *"மறக்குறும்பறுப்ப" (ஞானா.25:8).* 11. தம் குலத்துப் பெண்ணை விரும்பிய அரசற்கு மறவர் உடம்படாது மறுத்துக் கூறுவதாகப் பாடுங் கலம்பகவுறுப்பு (இலக்.வி.812); a limb of kalambagam describing the refusal by *maravars* to give a girl of their clan to a king, in marriage. 12. மறக்குடி, 2 பார்க்க; see *mara-k-kudi.*

*[மல்→ மர்→மறம்..]*

**மறம்²** *maram,* பெ.(n.) 1. மயக்கம் (பிங்.); bewilderment. 2. பிணக்கு; disagreement.

*[முல்→மல்→மல. மலத்தல் = மயங்குதல். மல →மலங்கு→மலக்கு→மலக்கம் = மயக்கம். மலங்கு = பாம்புடம்பும் மீன்வாலுங் கலந்த நீருயிரி. மலங்கு →மதங்கு→மதக்கம் = மயக்கம். மதங்கு→மறங்கு. மறங்குதல் = மயங்குதல். மல→மலை→மலைவு. மலைத்தல் = மயங்குதல். மலம்→மதம்→மறம் = மயக்கம் (மு.தா.177).]*

மறம்³ *maram,* பெ.(n.) கலம்பக வுறுப்பு; part of kalambagam literature.

மறம் என்னுங் கலம்பகவுறுப்பு, அரசன் பெண் கேட்டு விடுத்த திருமுகத்தைக் கொணர்ந்த தூதனை நோக்கி, மறவர் எச்சரித்தும் அச்சுறுத்தியும் விடுப்பதாகக் கூறும் (த.தி.11).

மறமலி *maramali,* பெ.(n.) யானை (திவா.); elephant.

*[மறம் + மலி.]*

மறமறெனல் *mara-marenal,* பெ.(n.) ஓர் ஒலிக்குறிப்பு (யாழ்.அக.); onom. expr. of crashing.

*[மற + மற + எனல்.]*

மறமுல்லை *mara-mullai,* பெ.(n.) வேந்தன் வேண்டியது கொடுப்பவும் கொள்ளாத வீரனது பயன் கருதாநிலையைக் கூறும் புறத்துறை (பு.வெ.8, 27); theme describing the wrath of a warrior resenting the act of his king in trying to reward his selfless heroic deeds in a battle.

*[மறம் + முல்லை.]*

மறல்¹ *maral,* பெ.(n.) 1. பகை (சூடா.); hate, enmity. 2. பிணக்கு (சூடா.); disagreement. 3. போர்; fight, war. 4. கூற்றுவன் (சூடா.); yama. 5. சாவு (சங்.அக.); death. 6. எழுச்சி (பிங்.); height, elevation. 7. கூத்துவகை (வின்.); a dance.

*[மறம் →மறல்.]*

மறல்² *maral,* பெ.(n.) 1. மறதி; forgetfulness. 2. மயக்கம்; delusion.

*[மற → மறல்.]*

மறல்³ *maral,* பெ.(n.) 1. மறுக்கை; refusal, declining. *"மறலிணை மாற்று" (பரிபா.20, 84).* 2. வறுமை (பிங்.); poverty. 3. குற்றம் (வின்.); fault.

*[மறு →மறல்.]*

மறலி¹ *marali,* பெ.(n.) 1. மறல்², 1 (பிங்.) பார்க்க; see *maral.* 2. மறல்², 2 (சூடா.) பார்க்க; see *maral.*

*[மறல் → மறலி.]*

மறலி² *marali,* பெ.(n.) 1. கூற்றுவன் (திவா.); *yaman.* *"மறலி யன்ன களிற்று மிசையோனே" (புறநா.13).* 2. பொறாமை (பிங்.); envy, jealousy.

மறலு¹-தல் *maralu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. மாறுபடுதல்; to oppose. *"மன்னரோ டினையவர் மறலி" (சீவக.791).* 2. போர் செய்தல்; to give fight. *"தெம்முனையுள்.... மறலுங்கால்" (பு.வெ.10, 5).*

*[மற →மறல்→ மறலு-தல்.]*

மறலு²-தல் *maralu,* 5 செ.குன்றாவி.(v.t.) கொல்லுதல்; to kill. *"வேதியனை மறலப்புகுந் தாருன்னுழையோர்" (உபதேசகா. சிவநாம. 24).*

*[மற→மறல்→மறலு-தல்.]*

மறலை *maralai,* பெ.(n.) புல்லறிவாளன்; person of mean understanding. *"பொய்யே..... பயனிலசொ னான்கும் மறலையின் வாயினவாம்" (ஏலா.28).*

*[மற→மறல்→மறலை.]*

மறவணம் *maravanam,* பெ.(n.) கரிசு (பாவ) குணம்; sinful trait. *"மறவண நீத்த மாசறுகேள்வி அறவணவடிகள்" (மணிமே.2: 60).*

மறவன் *maṟavaṉ,* பெ.(n.) 1. பாலை நிலத்தான்; inhabitant of the desert tract. 2. மலை வேடன்; inhabitant of the hilly tract, hunter, one belonging to the caste of hunters. *"நம்முடைய குலமறவர் சுற்றத்தாரை" (பெரியபு.கண்ணப்ப.55).* 3. மறக்குடியான்; person of *Maṟava* caste. 4. வீரன்; warrior, hero. *"உறினுயி ரஞ்சா மறவர்" (குறள், 778).*5. படைத் தலைவன் (சூடா.); commander, military, chief. 6. கொடியோன்; cruel, wicked person. *"மறவர் மறவ" (பெரும்பாண்.455).*

*[மறம்→மறவன்.]*

மறவாணர் *maṟavāṇar,* பெ.(n.) மலைவேடர்; inhabitants of the hilly tract. *"வெற்படியின் மேவுகற்றை மறவாணர் கொடிகோவே" (திருப்பு.357).*

*[மறம் + வாணர்.]*

மறவி[1] *maṟavi,* பெ.(n.) 1. மறதி; forgetfull ness. *"பெருமறவியையோ" (நற்.70).* 2. கள் (சூடா.); intoxication liquor. 3. தேன்; honey. *"மறவி பாய் வருக்கை" (அரிச்.பு.நாட்.39).* 4. பதநீர் (சங்.அக.); sweet toddy. 5. மறதியுள்ளவன்; forgetful person. *"மடிவஞ்சனையின் மறவி" (சைவச. ஆசாரிய.18).*

*[மற→மறவி.]*

மறவி[2] *maṟavi,* பெ.(n.) 1. இழிவு (சூடா.); meanness. 2. குற்றம் (பிங்.); fault.

*[மற→மறவி.]*

மறவி[3] *maṟavi,* பெ.(n.) அழுக்காறு (பிங்.); envy.

*[மற→மறவி.]*

மறவுரை *maṟa-v-urai,* பெ.(n.) தீய அறிவுரை மொழி; unrighteous precept. *"மறவுரை நீத்த மாசறு கேள்வியர்" (சிலப்.10: 56).*

*[மறம் + உரை.]*

மறவை *maṟavai,* பெ.(n.) வன்கண்மை யுடையது; anything cruel by nature. *"மறவையா யென்னுயிர்மேல் வந்தவிம் மருள் மாலை" (சிலப்.7:42).*

*[மறம்→மற→மறவை.]*

மறவோன் *maṟavōṉ,* பெ.(n.) 1. வீரன்; warrior. *"மறவோன் சேனை" (பெருங். உஞ்சைக்.33, 78).* 2. பத்துக்கு மேற் பதினான்கிற்குட்பட்ட வயதுள்ள ஆண்மகன் (பன்னிருபா.229); boy between the ages of ten and fourteen.

*[மறம்→மறவோன்.]*

மறனுடைப்பாசி *maṟaṉuḍai-p-pāśi,* பெ.(n.) எயில் காத்த சின மன்னர் வீர (சொர்க்க) த் துறக்கமடைந்ததைக் கூறும் புறத்துறை (பு.வெ.5, 2, கொளு.); theme describing the attaining of *vira-svarga* by valourous kings who die defending their forts.

*[மறனுடை + பாசி.]*

மறாங்கெண்டை *maṟāṅkeṇḍai,* பெ.(n.) பசிய நீலநிறமுடையதும் 22 1/2 விரலம் வரை வளரக் கூடியதுமான கடல் மீன் வகை; a sea - fish, bluish green, attaining 22 1/2 in. in length, *megalops cypriroides.*

மறாட்டியர் *maṟāṭṭiyar,* பெ.(n.) மராட்டியர் (வின்.); the *mahaṟāṭṭās.*

*[மராட்டியர்→மறாட்டியர் (இ.வ.).]*

**மறாதிக்காய்** *marādi-k-kāy,* பெ.(n.) சிறு தும்மட்டிக்காய்; a creeper (சா.அக.).

**மறி[1]-தல்** *mari-,* 4 செ.கு.வி.(v.i.) 1. கீழ் மேலாதல்; to be turned upside down. *"மலைபுரை யானை மறிந்து" (பு.வெ.7:9).* 2. மீளுதல் (திவா.); to return, recede. *"மறிதிரை" (கலித்.121).* 3. முதுகிடுதல்; to turn back, retreat. *"மைந்தர் மறிய மறங்கடந்து" (பு.வெ.6:14).* 4. விழுதல்; to fall down. *"நிழன்மணிப் பன்றி யற்று மறியுமோ" (சீவக.2201).* 5. சாய்தல்; to bend. *"எரி மறிந்தன்ன நாவின்" (சிறுபாண்.196).* 6. கிளர்தல்; to rise up, as a wave. *"மறிகடல் போன்று" (திவ்.இயற். திருவிருத். 57).* 7. முறுக்குண்ணுதல்; to be twisted. *"திரிந்து மறிந்துவீழ் தாடி" (கலித்.15).* 8. பலகாலுந் திரிதல்; to go about often, to walk to and fro. *"நயனாடி நட்பாக்கும் வினைவர்போன் மறிதரும்" (கலித்.46).* 9. தடைப்படுதல்; to be checked, arrested. 10. நிலைகுலைதல்; to be ruined in circumstances. *"ஆம்பன் முகவரக்கன் கிளையொடு மறிய" (கல்லா.கணபதி.வாழ்.).* 11. அறுபடுதல்; to be torn, injured. *"உன்காது மறியும்" (திவ்.பெரியாழ்.2, 3, 6, அரும்.).* 12. மரிதல், சாதல்; to die. *"மறிந்த மகன் றனைச்சுட" (அரிச்.பு.மயான.38).* 13. துள்ளுதல் (கொ.வ.); to frisk about, gambol.

*[மல்→மறி-தல்.]*

**மறி[2]-த்தல்** *mari-,* 11 செ.குன்றாவி.(v.t.) 1. தடுத்தல்; to stop, detain, arrest, check. *"மறுபிறப்போட மறித்திடுமே" (திருவாச.36, 2).* 2. திருப்புதல்; to turn about, to return. 3. மேல்கீழாக்குதல் (வின்.); turn upside down, upset. 4. அழித்தல்; to destroy. *"மாகமார் புரங்களை மறித்த மாண்பினர்" (தேவா.97, 4).* 5. தடுத்தற் குறியாகக் கையசைத்தல்; to wave the hand, as an indication of disapproval. *"மாற்றருங் கரதல மறிக்குமாது" (கம்பரா. உண்டாட்.21).* 6. திரும்பச் செய்தல் (இ.வ.); to repeat.

*[மல்→மறி-த்தல்.]*

**மறி[3]** *mari,* பெ.(n.) 1. ஆடு, மான், குதிரை முதலியவற்றின் இளமை (தொல்.பொருள். 568); young of sheep, deer, horse, etc. 2. ஆடு, குதிரை, மான் முதலியவற்றின் பெட்டை (யாழ்.அக.); female of sheep, horse, deer, etc. 3. ஆடு; sheep. *"மறியுடையாயர் மாதர்" (கம்பரா.ஆற்று.15).* 4. மேழ ஓரை (சூடா.); aries of the zodiac. 5. அழுங்கு (பிங்.); pangolin. 6. அழுங்கின் குட்டி (பிங்.); young of pangolin. *"மறிகொள் கையன்" (தேவா.980:10).*

**மறி[4]** *mari,* பெ.(n.) மறியல், 1 பார்க்க; see *mariyal.*

**மறிக்கல்** *marikkal,* பெ.(n.) சுக்கான்கல் (யாழ்.அக.); lime kunkar.

**மறிக்குளம்பு** *mari-k-kuḷambu,* பெ.(n.) மான்குளம்பு; loof of deer.

*[மறி + குளம்பு.]*

**மறிகாணுதல்** *mari-kāṇudal,* பெ.(n.) குதிரை, மான் முதலியன குட்டிபோடுகை (வின்.); foaling, as of a mare, deer, etc.

*[மறி + காணுதல்.]*

**மறிகால்** *mari-kāl,* பெ.(n.) மறுகால்[1] (இ.வ.) பார்க்க; see *maru-kāl.*

*[மறுகால்→மறிகால்.]*

மறிசல் *marišal,* பெ.(n.) அணை (இ.வ.); dam, weir.

*[மறி = தடு. மறி → மறியல் → மறிசல் = தடுத்துக்கட்டும் அணை.]*

மறிஞ்சிப்பாரை *mariñci-p-pārai,* பெ.(n.) மீன் வகை; a kind of fish, *caranx diedaba.*



மறித்து *marittu,* வி.எ.(adv.) மறித்தும் பார்க்க; see *marittum.* *"மறித்தாங் கிழிந்து" (மணிமே.10:88).*

*[மறித்தும் → மறித்து.]*

மறித்தும் *marittum,* வி.எ.(adv.) மீட்டும்; again, besides. *"வேலானை மறித்துங் காண்க" (சீவக.1225).*

*[மறு → மறி → மறித்தும்.]*

மறிதரல் *mari-daral,* பெ.(n.) மீளுகை (பிங்.); returning, coming back.

*[மறு → மறி → மறிதரல்.]*

மறிந்து *marindu,* பெ.எ. (adv.) மறித்தும் பார்க்க; see *marittum.* *"மறிந்து வந்தனரே மாற்றோர்" (பெருங்.மகத.19, 80).*

*[மறித்தும் → மறித்து → மறிந்து.]*

மறிப்பு *marippu,* பெ.(n.) மறியல் (இ.வ.); strike.

*[மறு → மறி → மறிப்பு.]*

மறிபடு-தல் *mari-padu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. தடுக்கப்படுதல்; to be stopped, as the water of a river. 2. இடையூறுபடுதல் (கோயிலொ.13); to be hindered, as a business.

*[மறு → மறி + படு-.]*

மறிமலம் *mari-malam,* பெ.(n.) மறிபட்ட மலம்; constiputed bowels.

*[மறி + மலம்.]*

மறிமாங்காய் *mari-māṅgāy,* பெ.(n.) ஒருவகை மாங்காய்; a kind of mango.

*[மறுமாங்காய் → மறிமாங்காய் (கொ.வ.) பருவமல்லாக் காலத்துப் பூத்துக் காய்க்கும் மாவை மறுமாங்காய் என்பர்.]*

மறியல் *mariyal,* பெ.(n.) 1. நிறுத்துகை; stopping, detaining, checking, confining. 2. தடை (வின்.); detention. 3. வழக்கிற் செய்யும் தடையுத்தரவு; injunction. 4. காவற்கூடம்; prison, jail. 5. செயல்பாடு நடக்கவொட்டாதபடி தடுத்து நிறுத்துகை (கொ.வ.); picketting (colloq.). 6. வேலை நிறுத்தம்; strick. *ஆலைப் பணியாளர்கள் வாயிலை அடைத்து மறியல் செய்தனர்.* 7. போராட்ட வகை, பணியாளர்கள் வேலைக்குச் செல்லாமல் தடுத்து நிறுத்தும் போராட்டம்; a kind of agitation.

*[மறு → மறி → மறியல்.]*

மறியற்கடுதாசி *mariyar-kadudāši,* பெ.(n.) சிறையிலடைக்கக் கொடுக்கும் உத்தரவு (சப்.); warrant of commitment, order for imprisonment.

*[மறியல் + கடுதாசி.]*

மறிவு *marivu,* பெ.(n.) 1. திரும்புகை; return. *"மறிவிலாச் சிவகதி" (அருட்பா.V, செவியறி. 6).* 2. கேடு (ஐங்குறு.அரும்.); ruin.

*[மறு→மறி→மறிவு.]*

மறு¹-த்தல் *maru-,* 11 செ.குன்றாவி.(v.t.) 1. இல்லை யென்னுதல்; to refuse, deny, disown. *"அவர் மறுத்தகறல் காணா" (கம்பரா.மிதிலைக்.125).* 2. தடுத்தல்; to object, check, contradict. *"மறுத்து மறுத்து மைந்தர் சார" (கலித்.104).* 3. எதிர்ப்பு எழுப்புதல்; to confute, refute the opinion or argument of another. *"உடன்படன்மறுத்தல்" (நன்.11).* 4. நீக்குதல்; to put away, reject. *"கொல்லான் புலாலை மறுத்தானை" (குறள், 260).* 5. மறி²-2, 6 பார்க்க; see *mari²-2,6.*

மறு²-த்தல் *maru-,* 3 செ.கு.வி.(v.i.) 1. வெட்குதல் (சூடா.); to be ashamed. 2. இல்லாமற்போதல்; to cease to be. *"இப்பேறுதான் ஒரு நாளுண்டாய் மற்றை நாள் மறுக்கையின் றிக்கே" (ஈடு.2, 7, 7).*

மறு³ *maru,* பெ.(n.) 1. குற்றம் (பிங்.); stigma, blemish, fault. *"மனுவில் செய்தி" (தொல்.பொருள்.75).* 2. களங்கம்; stain, blot, spot, especially on the moon. *"மதிமறுச் செய்யோள்" (பரிபா.2, 30).* 3. தீமை; harm, injury. *"நடுக் கடற் போனாலும் மறுப்படாமல் வரக் கடவீர்" (பழ.).* 4. அடையாளம்; sign, symbol. 5. மச்சம்; mole, freekle. *"மறுவாயிரத்தெட் டணிந்து" (சீவக.2).* 6. பாலுண்ணி (வின்.); wart.

மறு⁴ *maru,* வி.அ.(adj.) மற்ற; another, other, next, beyond. *"மறுபிறப்போட" (திருவாசக. 36, 2).*

க. மரு.

மறுக்க *marukka,* (adv.) திரும்ப (இ.வ.); again. *"மறுக்க நீ வரக்கூடாது" (உ.வ.).*

*[மறுகால் →மறுக்கா→மறுக்க (வே.க.4:70)]*

மறுக்கடி *marukkadi,* பெ.(n.) 1. மறுக்கம், 2 (நாஞ்.) பார்க்க; see *marukkam,* 2. 2. துன்பம்; whirling.

*[மறுக்கம் → மறுக்கடி. ஒ.நோ.நெருக்கம் →நெருக்கடி.]*

மறுக்கம் *marukkam,* பெ.(n.) 1. சுழற்சி; whirling, unsteadiness. 2. துன்பம்; distress. *"திறைகொடா மன்னவரை மறுக்கஞ்செய்யும் பெருமையார்" (தேவா.17, 4).* 3. மனக்கலக்கம்; perplexity. *"மன்பதை மறுக்கத் துன்பங் களைவோன்" (பரிபா.15, 52).*

*[முள்→மள்→மரு→மருள் = மயக்கம். மருள் →மருட்கை = மயக்கம், வியப்பு. மரு→மருமம்→மம்மம் →மம்மர் = மயக்கம். மம்மம்→மம்மல் = அந்திநேரம், மயக்கம், காமம், கல்லாமை. மரு→மறு→மறுகு→ மறுக்கம் = மயக்கம் (மு.தா.178).]*

மறுக்களி¹-த்தல் *marukkali-,* 4 செ.கு.வி. (v.i.) மறுத்தல்; to deny.

*[மறு→மறுக்களி-.ஒ.நோ.ஒரு→ஒருக்களி-.]*

மறுக்களி²-த்தல் *marukkali-*, 11 செ.கு.வி. (v.i.) நோய் முதலியன திரும்புதல்; to return, relapse, as disease.

*[மறு→மறுக்களி-;]*

மறுக்களித்துப்பேசு-தல் *marukkalittu-p-pēšu-*, 5 செ.குன்றாவி.(v.t.) தான் சொன்னதை மறுத்துப் பேசுதல் (இ.வ.); to go back upon one's words, to retract, to contradict.

*[மறுக்களித்து + பேசு-.]*

மறுக்காரங்காய் *maru-k-kāraṅgāy,* பெ. (n.) ஒருவகைக் காய்; a kind of fruit (சா.அக.).

மறுக்காரை *maru-k-kārai,* பெ.(n.) மருக்காரை (வின்.) பார்க்க; see *marukkārai.*

*[மருக்காரை→மறுக்காரை (கொ.வ.).]*

மறுக்கு¹-தல் *marukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) மறுக்கம் பார்க்க; see *marukkam.* *"மறுக்கினோ டிரியல் போயுற" (கம்பரா. பள்ளிபடை.108).*

*[மறுக்கம்→மறுக்கு-.]*

மறுக்கு²-தல் *marukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. மனத்தைக் கலக்குதல் (திவ். திருவாய்.4, 9, 6); to perplex. 2. மருக்கு-, பார்க்க; see *marukku-.*

*[முறுகு→மறுகு→மருக்கு- (வே.க.4:73).]*

மறுக்கு³-தல் *marukku-,* 5 செ.கு.வி.(v.i.) எண்ணெய் முதலியவற்றால் தொண்டை கரகரத்தல் (இ.வ.); to be irritated in the throat.

*[மறுக்கம்→மறுக்கு-.]*

மறுக்குத்து *marukkuttu,* பெ.(n.) செடிவகை (சங்.அக.); a shrub, *chlrongia globra.*

மறுக்கை *marukkai,* பெ.(n.) மரிக்கனிரும்பு (இ.வ.) பார்க்க; see *marikkan-irumbu.*

மறுக்கொள்ளி *marukkolli,* பெ.(n.) தீயான் (இ.வ.); dishonest person.

*[மறு + கொள்ளி. கொள்ளி = கொண்டவன். மறு = குற்றம். ஒ.நோ. அச்சங்கொள்ளி.]*

மறுக *maruga,* வி.எ.(adv.) மறுக்க (இ.வ.) பார்க்க; see *marukka.*

*[மறுக்க→மறுக.]*

மறுகரை *maru-karai,* பெ.(n.) எதிர்க்கரை; opposite shore, shore beyond. *"குலைகட்டி மறுகரையை யதனாலேறி" (திவ்.பெருமாள்.10, 7).*

*[மறு + கரை.]*

மறுகல் *marugal,* பெ.(n.) 1. சுழற்சி; whirling, unsteadiness. 2. கலங்குகை (திவ். திருவாய்.9, 4, 4); perplexity. 3. நோய் திரும்புகை (வின்.); relapse of disease.

*[மறுகு→மறுகல் (வே.க.4:73).]*

மறுகலி-த்தல் *marugali-,* 4 செ.கு.வி. (v.i.) நோய் முதலியன திரும்புதல் (யாழ்.அக.); to return, relapse, as disease.

*[மறுகு→மறுகல்→மறுகலி-, (வே.க.4:73).]*

மறுகறி *marukari,* பெ.(n.) விருந்தில் பரிமாறப்படும் இரண்டாவது கறி (வின்.); a second served in the feast curry of vegetables.

*[மறு + கறி.]*

**மறுகாய்ச்சல்** *maṟu-kāyccal,* பெ.(n.) 1. திரும்பிவருங் காய்ச்சல்; relapse of fever. 2. மா, புழுக்கிய நெல் முதலியவற்றை இரண்டாமுறை காயப்போடுகை; second drying, as of parboiled paddy. 3. இரும்பின் இரண்டாமுறைக் காய்வு; second heating iron.

*[மறு + காய்ச்சல்.]*

**மறுகால்**[1] *maṟukāl,* பெ.(n.) 1. அதிக நீரை வெளியேற்றும் வாய்க்கால்; surplus channel. 2. மதகு (I.M.P.cd.186); sluice.

*[மறு + கால்.]*

**மறுகால்**[2] *maṟukāl,* வி.எ.(adv.) 1. மறுபடி; again, a second time. 2. மாறாக (வின்.); on the other hand.

*[மறு→மறுகால்.]*

**மறுகால்**[3] *maṟu-kāl,* பெ.(n.) இரண்டாமுறை சாகுபடி செய்த பயிர்; crop raised a second time. *"சிறுதினை மறுகால்....... அவரை பூக்கும்" (குறுந்.82).*

*[மறு→மறுகால்.]*

**மறுகால்வெற்றிலை** *maṟukāl-veṟṟilai,* பெ.(n.) இரண்டாமுறை கொய்தெடுக்கும் வெற்றிலை (வின்.); betel leaves of the second crop, consolidated more tender than those of the first.

*[மறுகால் + வெற்றிலை.]*

**மறுகு**[1]**-தல்** *maṟugu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. சுழலுதல்; to whirl. *"மறுகக் கடல் கடைந்தான்" (திவ்.இயற்.2, 68).* 2. பலகாலுந் திரிதல்; to go about often, to wander. *"மலிவன மறுகி" (குறிஞ்சிப்.97).* 3. மனங் கலங்குதல்; to be bewildered, confused, to be unsteady, unsettled. *"நெஞ்சின் மறுகல் நீ" (சீவக.946).* 4. வருந்துதல்; to be distressed. *"கிடந்துயிர் மறுகுவதாயினும்" (அகநா.29).* 5. சிதைதல்; to be shattered, torn up. *"குடன் மறுகிட" (கம்பரா. இந்திரசித்.19).* 6. அரைபடுதல்; to be ground into paste, as sandlewood. *"நறுஞ்சாந்து மறுக" (மதுரைக்.553).*

*[முல்→முள்→மள்→மரு→மருள் = மயக்கம். மருள் →மருட்கை = மயக்கம், வியப்பு, வியப்புச் செயல். மரு →மருமம்→மம்மம்→மம்மர் = மயக்கம். மம்மம்→மம்மல் = அந்திநேரம், மயக்கம், காமம், கல்லாமை. மரு→மறு→ மறுகு→மறுக்கம் = மயக்கம். மறுகுதல் = கலத்தல், மயங்குதல் (மு.தா.178).]*

**மறுகு**[2]**-தல்** *maṟugu-,* 5 செ.குன்றாவி.(v.t.) கொண்டுபோதல்; to carry. *"அவல் வகுத்தோர்.... மது மறுகவும்" (பொருந.27).*

**மறுகு**[3] *maṟugu,* பெ.(n.) 1.தெரு; street, road. *"என்காம மறுகின் மறுகு மருண்டு" (குறள், 1139).* 2. குறுந்தெரு (சூடா.); narrow street, lane. 3. தெரு ஓரம்; side of the street or road.

*[முள்→மள்→மரு→மறு→மறுகு = கலத்தல், மயங்குதல். மறுகு = பல தெருக்களும் மக்களும் கூடும் பெருந்தெரு (மு.தா.178).]*

**மறுகு**[4] *maṟugu,* பெ.(n.) அறுத்த தாளினின்று உண்டாம் இரண்டாம் விளைச்சல் (யாழ்ப்.); second crop of grain from the stubble.

*[மறு→மறுகு.]*

மறுகுசிறை *maṟugu-ciṟai,* பெ.(n.) வீதியின் இருபுறத்துமுள்ள வீட்டு வரிசை; row of houses on either side of a street. *"பண்ணமைத் தெழீஇ..... மறுகுசிறை பாடும்" (பதிற்றுப்.20).*

*[மறு→மறுகு + சிறை.]*

மறுகுருப்பாய்-தல் *maṟuguru-p-pāy-,* 2 செ.கு.வி.(v.i.) மறுமுள்பாய்-தல் (இ.வ.) பார்க்க; see *maṟu-muḷ-pāy-.*

*[மறு→மறுகுரு + பாய்-.]*

மறுகூர்பாய்-தல் *maṟu-kūr-pāy-,* 5 செ.கு.வி.(v.i.) மறுமுள்பாய்-, (இ.வ.) பார்க்க; see *maṟu-muḷ-pāy-.*

*[மறு + கூர்.]*

மறுகை[1] *maṟugai,* பெ.(n.) மறுகு[2], 1 பார்க்க; see *maṟugu*[2], *1. "மாட நிரைத்த மறுகை" (பெருங்.உஞ்சைக்.50, 43).*

*[மறு→மறுகு→மறுகை.]*

மறுகை[2] *maṟugai,* பெ.(n.) 1. மாட்டின் பொதிச் சுமையிற் பாதியளவு; half of a bullock-load. 2. நுங்கு; kernel of palmyra fruit.

மறுசன்மம் *maṟu-caṉmam,* பெ.(n.) மறு பிறப்பு பார்க்க; see *maṟu-piṟappu.*

*[மறு + Skt. ஜன்மம்→சன்மம்.]*

மறுசனனம் *maṟu-caṉaṉam,* பெ.(n.) மறுபிறப்பு பார்க்க; see *maṟu-piṟappu.*

*[மறு + Skt. ஜனனம்→சனனம்.]*

மறுசாமத்தியம் *maṟu-cāmattiyam,* பெ.(n.) பூப்பிற்குப் பின் வரும் முதற் பூப்பு (நாஞ்.); first menstruation after puberty.

*[சமைதல்→ சாமத்தியம். மறு = சாமத்தியம்.]*

மறுசுற்றாணி *maṟu-šuṟṟāṇi,* பெ.(n.) ஆணி வகை (இக்.வ.); bolt and nut, screw (mod.).

*[மறு + சுற்று + ஆணி.]*

மறுசுற்று[1] *maṟu-šuṟṟu,* பெ.(n.) இரண்டாம் முறை செயல்பாடு; the second turn. *மறுசுற்று வாக்கு எண்ணிக்கையில் வெற்றி பெற்றான் (உ.வ.)..*

*[மறு + சுற்று.]*

மறுசுற்று[2] *maṟu-šuṟṟu,* பெ.(n.) மறை; screw.

மறுசெய்தி *maṟu-šeydi,* பெ.(n.) மறுசொல் (இ.வ.) பார்க்க; see *maṟu-šol.*

*[மறு + செய்தி.]*

மறுசொல் *maṟu-šol,* பெ.(n.) மறுமொழி, விடை; reply, answer. *"மறுசொ லெத்திறத்தினாற் சொல்லுதும்" (சீகாளத். பு.கண்ணப்ப.120).*

*[மறு + சொல்.]*

மறுத்தரவு *maṟu-t-taravu,* பெ.(n.) திருப்புகை, மீட்கை; bringing back. *"யாதொன்று மென்கண் மறுத்தர வில்லாயின்" (கலித்.81).*

*[மறு + தரவு (வே.க.4:76).]*

மறுத்தா-தல் (மருத்தருதல்) *maṟu-t-tā-,* 15 செ.குன்றாவி.(v.t.) மீட்டல்; to restore, recover, bringing back. *"மையற்ற படிவத்தான் மறுத்தர லொல் வதோ" (கலித்.15).*

மறுத்து *maruttu,* வி.எ.(adv.) 1. மீள; in return. *"மறுத்தின்னா செய்யாமை" (குறள், 312).* 2. மறுபடியும்; again. *"மறுத்துக் கேள்வி கொள்ள வேண்டாதபடி" (ஈடு.1, 3, 3).* 3. மேலும்; morever. *"மறுத்து மின்னு மொன் றுரைத்திடக்கேள்" (அரிச்.பு.சூழ்வி.128).*

*[மறு→மறுத்து (வே.க.4:76).]*

மறுத்துப்போ-தல் *maruttu-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) 1. ஆவு கறவை நின்று போதல், பலன் கொடுக்காமற் போதல் (வின்.); to cease giving milk, as a cow, to stop bearing as a tree. 2. எதிர்ப்பு தெரிவித்துப் போதல்; to oppose.

*[மறு→மறுத்து + போ-.]*

மறுத்துமொழிநிலை *maruttu-moḻi-nilai,* பெ.(n.) ஓர் அணிவகை (பிங்.); a figure of speech.

*[மறுத்துமொழி + நிலை.]*

மறுத்துரை-த்தல் *maruttur̤ai-,* 4 செ.குன்றாவி. (v.t.) தடை கூறல், எதிர்த்துரைத்தல்; to contradict. *"மறுத்துரைப்பதுபோ னெஞ்சொடு புணர்த்தும்" (தொல். பொருள். 196).*

*[மறுத்து + உரை-.]*

மறுதண்டமூலி *maru-taṇḍa-mūli,* பெ.(n.) கருஞ்செம்பை; a shrub bearing blue papilionaceous flowers (சா.அக.).

மறுதரவு *maru-taravu,* பெ.(n.) மறுத்தரவு பார்க்க; see *maru-t-taravu.* *"மறுதர வில்லாளை யேத்திநாம் பாட" (சிலப்.24, பாட்டுமடை, இறுதி).*

*[மறுத்தரவு→மறுதரவு (வே.க.4:76).]*

மறுதலி[1]-த்தல் *marutali-,* 4 செ.கு.வி. (v.i.) 1. வேறுபடுதல்; to vary, deviate. 2. மாறுபடுதல்; to contradict. *"இவை யொன்றிற் கொன்று தம்மின் மறுதலித்தமையான்" (வீரசோ.அலங்.14, உரை).* 3. மறுக்களி[2]-, பார்க்க; see *maru-k-kaḷi[2]-.* 4. (கிறித்.) மார்க்கத்தைவிட்டு நீங்குதல்; to apostatize.

*[மறு→மறுதலி.]*

மறுதலி[2]-த்தல் *marutali-,* 4 செ. குன்றாவி. (v.t.) மறுத்தல்; to deny, disavow.

மறுதலிப்பு *maru-talippu,* பெ.(n.) 1. மறுக்கை; denial, refusal. 2. வேறுபடுகை; deviation from the original.

*[மறு→மறுதலிப்பு.]*

மறுதலை[1] *maru-talai,* பெ.(n.) 1. எதிர்க் கட்சி; opposite side. *"தன்னை மறுதலை பழித்த காலையும்" (நன்.53).* 2. மாறுபடு பொருள்; sense of contrariety. *"இன்மையன்மை மறுதலை யென்னும் முப்பொருள்" (சி.போ.சிற்.2, 1, பக்.34).* 3. பகை; enemy, antagonist. *"மறுதலை சுற்ற மதித்தோம்பு வானேல்" (ஏலாதி.16).* 4. நிகர்; equal. *"அரிமாவிற்கு மறுதலை போல்வா ரொருவர்" (திருக்கோ.225, உரை).* 5. இரண்டாம் முறை; second time. *"மறுதலை இங்கு வராதே" (உ.வ.).* 6. எதிரியின் தருக்கம்; opponent's point of view or argument. *"மறுதலைக் கடாஅ" (தொல். பொருள்.659).*

*[மறு + தலை.]*

மறுதலை வகை : 1. எதிர் - Opposite, 2. திரித்தல் - Alteration, 3. பகை - Enmity, 4. மறுதலிப்பு - Denial, 5. மாற்றுமை அல்லது

மறுதலை – Contrariety, 6. மறுப்பு – Refuation, 7. மறை – Negation, 8. எதிர்மறை – Strong negation, 9. மாற்றம் – Transference, 10. மாற்று – Antidote, 11. மாறு – Exchange, 12. முரண் – Contradiction, 13. விலக்கு – Prohibition, 14. வேற்றுமை – Difference, 15. வேறுபாடு – Change (சொல்.41).

**மறுதலை²–த்தல்** *maṟu-talai-,*4 செ.கு.வி. (v.i.) எதிரிட்டுத் தோன்றுதல்; to appear on the opposite side, to balance. *"நாணமுத னான்கு மண்டியொருசார் மறுதலைப்ப" (திருவிளை.வளையல்.23).*

**மறுதலை³–த்தல்** *maṟu-talai-,* 4 செ. குன்றாவி. (v.t.) மறுத்தல்; to deny, disavow. *"மறுதலைத் துறைக்கு மெல்லை" (அரிச்.பு.நகர்நீ.146).*

*[மறு→மறுதலை–, (வே.க.4:76).]*

**மறுதலைக்காய்** *maṟu-talai-k-kāy,* பெ.(n.) பருவ விளைச்சலுக்குப் பின் காய்க்கும் காய்கறி முதலியன (இ.வ.); second yield or crop of vegetables etc. after the seasonal yield.

*[மறுதலை + காய்.]*

**மறுதலைப்பெண்** *maṟu-talai-p-peṇ,* பெ.(n.) மறுமனைவி; second wife. *"அரவ மறுதலைப் பெண் கூட்டுவிக்கும்" (சினேந். 267).*

*[மறுதலை + பெண்.]*

**மறுதலையாக** *maṟu-talaiyāga,* பெ.(n.) மாற்றாக; alternative. *"புலியனுக்கு விற்ற நால் கோலுக்கும் மறுதலைஆக" (தெ.க. தொ.6, கல்.290–6).*

*[மறு→மறுதலை→மறுதலையாக.]*

**மறுதா–தல் (மறுதருதல்)** *maṟu-tā-,* 15 செ.குன்றாவி.(v.t.) 1. மறுத்தா–, பார்க்க; see *maṟu-t-tā.* 2. மறு–, பார்க்க; see *maṟu-. "மறுதரற் கரிய" (நற்.32).*

*[மறு→மறுத்தா–→மறுதா–.]*

**மறுதாக்கல்** *maṟu-tākkal,* பெ.(n.) 1. எதிருரை; rejoinder. 2. விடை; reply.

*[மறு + தாக்கல்.]*

**மறுதாய்** *maṟu-tāy,* பெ.(n.) மாற்றாந்தாய் (இ.வ.); step-mother.

*[மறு + தாய்.]*

**மறுதாரம்** *maṟu-tāram,* பெ.(n.) இரண்டாம் மனைவி (இ.வ.); second wife.

*[மறு + தாரம்.]*

**மறுதுடை** *maṟu-tuḍai,* பெ.(n.) மறுமாங்காய் பார்க்க; see *maṟu-māṅgāy(சா.அக.).*

**மறுதேசம்** *maṟu-tēšam,* பெ.(n.) மறுதேயம் பார்க்க; see *maṟu-tēyam.*

*[மறு + தேசம்.]*

**மறுதேயம்** *maṟu-tēyam,* பெ.(n.) வெளிநாடு; foreign country.

*[மறு + தேசம்.]*

**மறுதொழில்** *maṟu-toḻil,* பெ.(n.) 1. கரிசு; sin. *"மறுதொழிலும் புரியும்...... நிருதர்" (சேதுபு. சங்கர.86).* 2. செய்து கொண்டிருக்கும் தொழிலின் பிறிதொரு தொழில்; additional profession.

*[மறு + தொழில். அறத்திற்கும் முறைமைக்கும், நேர்மைக்கும் மாறானது.]*

**மறுநனை–தல்** *maru-nanai-,* 2 செ.கு.வி. (v.i.) மறுபாடுருவ நனைதல்; to be drenched, to be completely wet. *"நான் மறுநனைந்து ப்ரீதிப்ரேரிதனாய்" (ஈடு.2, 6, 4).*

*[மறு + நனை–.]*

**மறுநாள்** *maru-nāḷ,* பெ.(n.) அடுத்த நாள்; next day, morrow.

*[மறு + நாள்.]*

**மறுநோய்** *maru-nōy,* பெ.(n.) 1. மறுக்களித்த நோய்; disease in the relapsed stage. *"மறுநோய் மக்களி னாழந்த மனத்தன்" (பெருங்.மகத.19, 48).* 2. முற்பிறவிப் பயன்; sub-conscious impression due to past karma. *"பின்னும் மறுநோய் செறுவான் வலி" (திவ்.இயற்.2, 67).*

*[மறு + நோய்.]*

**மறுப்ப** *maruppa,* இடை.(part.) ஓர் உவம வாய்பாடு (தொல்.பொருள்.291); a term of comparison.

*[மறு→மறுப்ப (வே.க.4:76).]*

**மறுப்படு–தல்** *maru-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. வசையுறுதல்; to be blamed. 2. சிதைவுறுதல்; to be injured, spoiled. 3. புள்ளியுடைத்தாதல்; to be spotted. 4. துன்பப்படுதல் (யாழ்.அக.); to suffer.

*[மறு→மறுப்பு→மறுப்படு–.]*

**மறுப்பு** *maruppu,* பெ.(n.) 1. மறுக்கை; refusal, denial. 2. எதிர்க்கை; objection, opposition. 3. கண்டனம் (சப்.); refutation. 4. மறுவுழவு; re-ploughing. 5. முன்னுழுத சாலுக்குக் குறுக்காக உழுகை; ploughing cross wise to the first ploughing *Nāñ.*

*[மறு→மறுப்பு (வே.க.4:76).]*

*மறுப்பு வகை:* மறுப்பு – பிறர் கொள்கையை அல்லது கூற்றை மறுத்தல் (Refutation). கண்டனம் – பிறர் கொள்கையையாவது கூற்றையாவது கண்டித்தல் (Censure): அங்கதம்–பிறர் கொள்கையையேனும் கூற்றையேனும் பழித்தல் (Staire) (சொல்:60).

**மறுபடி**[1] *maru-paḍi,* பெ.(n.) 1. விடை (நாஞ்.); answer, reply. 2. மற்றொருபடி; another copy.

*[மறு→மறுபடி.]*

**மறுபடி**[2] *maru-paḍi,* வி.எ.(adv.) மறுபடியும் பார்க்க; see *maru-paḍiyum.*

**மறுபடியும்** *maru-paḍiyum,* வி.எ.(adv.) மீளவும்; again.

**மறுபத்தியம்** *maru-pattiyam,* பெ.(n.) மருந்துண்டலை விட்டபின் உணவுக் கட்டுப்பாட்டையும் விட்டு, சில நாள் வரை அளவாக உட்கொள்ளும் உணவு (பைஷஜ.); light diet or regimen after a course of medicine.

*[மறு + பத்தியம்.]*

**மறுபாடு** *maru-pāḍu,* பெ.(n.) பின்பக்கம்; back the other side. *"மறுபாடுருவத் தைத்து" (ஈடு.5, 6, 7).*

*[மறு + பாடு.]*

**மறுபாடுருவ** *maru-pāḍuruva,* வி.எ.(adv.) நன்றாக; completely, well. *"மறுபாடுருவ வேத்தி" (ஈடு.2, 6, 3).*

*[மறுபாடு→மறுபாடுருவ.]*

**மறுபாடுருவு-தல்** *maru-pāḍuruvu-,* 7 செ.கு.வி.(v.i.) ஊடுருவிப் போதல்; to penetrate to the other side. *"மராமரங்களேழும் மறுபா டுருவும் படியாக" (ஈடு.2, 6, 9).*

*[மறுபாடு→மறுபாடுருவு.]*

**மறுபாவி** *maru-pāvi,* பெ.(n.) பகைவன் (வின்.); enemy.

*[மறு + பாவி.]*

**மறுபிழைப்பு** *maru-pilaippu,* பெ.(n.) கடுநோய் முதலிய இடர்ப்பாட்டினின்று தப்பிப் பிழைக்கை (வின்.); narrow escape from series accident, recovery from serious illness, as re-birth.

*[மறு + பிழைப்பு.]*

**மறுபிறப்பு** *maru-pirappu,* பெ.(n.) 1. இனி யுண்டாகப் போகும் பிறப்பு; future birth. *"மதுரையர் மன்னர் மறுபிறப்போட மறித்திடுமே" (திருவாச.36, 2).* 2. பழம் பிறப்பு; past birth. *"மன்னா நின்றன் மறபிறப் புணர்த்தி" (மணிமே.25, 223).*

*[மறு + பிறப்பு.]*

**மறுபிறவி** *maru-piravi,* பெ.(n.) 1. மறுபிறப்பு, 1 பார்க்க; see *maru-pirappu, 1.* 2. புதுப் பிறப்பு (கிறித்.); new birth, regeneration.

*[மறு + பிறவி.]*

**மறுபுலம்** *maru-pulam,* பெ.(n.) பாலை நிலம் (பிங்.); desert tract.

*[மறு + புலம்.]*

**மறுபுலிபாய்தல்** *maru-puli-pāydal,* தொ.பெ. (vbl.n.) பகலில் புலியினின்றும் தப்பிய கால்நடை அன்றிரவே புலி பாய்வதாக எண்ணங் கொண்டு அந்த அச்சத்தால் இறக்கை (நாஞ்.); death of cattle due to terror in thinking that it was caught by the tiger from which it escaped during the day.

*[மறு + புலி + பாய்தல்.]*

**மறுபுறமுகம்** *maru-pura-mugam,* பெ.(n.) குரங்கு; monkey (சா.அக.).

**மறுபேச்சு** *maru-pēccu,* பெ.(n.) 1. மாற்றிக் கூறும் சொல் (வின்.); countermand; word that annuals or cancels. 2. தடுத்துரைக்கை; gainsaying. *மன்னன் பேச்சுக்கு மறு பேச்சில்லை (பழ.).* 3. மறுசொல் பார்க்க; see *maru-col. "நான் சொன்னதற்கு அவன் மறுபேச்சுப் பேசவில்லை" (உ.வ.).*

*[மறு + பேச்சு.]*

**மறுபொருளுவமை** *maru-porul-uvamai,* பெ.(n.) ஓர் அணி வகை (தண்டி.30, உரை); a fiare of speech.

*[மறுபொருள் + உவமை.]*

**மறுபோகம்** *maru-pōgam,* பெ.(n.) ஆண்டின் இரண்டாமுறை விளைச்சல் (வின்.); second crop in the year.

*[மறு + போகம்.]*

**மறுமணம்** *maru-maṇam,* பெ.(n.) கணவன் இறந்தபின் மனைவியோ,, மனைவி இறந்த பின் கணவனோ மீண்டுஞ் செய்து கொள்ளும் திருமணம் (இக்.வ.); remarriage, as of a widow or widower.

*[மறு + மணம்.]*

மறுமணிப்பிள்ளை *maru-maṇi-p-piḷḷai,* பெ.(n.) கீரிப்பிள்ளை; mungoose (சா.அக.).



மறுமனசுபடு-தல் *maru-manašu-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) முன்னிருந்த எண்ணம் மாறுதல்; to change mind, to abandon one's decision. *"அவன் மறுமனபடுவதற்கு முன்னே எல்லை நடந்துகொண்டானாய்த்து" (திவ்.பெரியதி.6, 8, 1, உரை).*

*[மறு + மனசு + படு-.]*

மறுமாடி *maru-māḍi,* பெ.(n.) 1. வீட்டின் உத்தரமட்டத்துக்கு மேலுள்ள அடைப்புச் சுவர் (வின்.); gable of a house. 2. மாடிக்கு மேல் மாடி; second storey. *"வீட்டிற்கு மறுமாடி வைத்துக் கட்டியிருக்கிறான்" (உ.வ.).* 3. வரம்பு; ridge. 4. மலைப்பிளவு (யாழ்.அக.); cleft in a mountain.

*[மறு + மாடி.]*

மறுமாலைசூடுதல் *maru-mālai-šūḍudal,* பெ.(n.) அறுபதாமாண்டு நிறைவில் நடக்கும் மணவிழாச் சடங்கு (இ.வ.); marriage ceremony repeated on the sixtiath marriage day function.

*[மறு + மாலை + சூடுதல்.]*

மறுமாற்றம் *maru-mārram,* பெ.(n.) 1. மறு சொல் பார்க்க; see *maru-šol. "மறுமாற்ற மற்றொருவர் கொடுப்பாரின்றி" (பெரியபு. திருஞான.474).* 2. கறிவகை (வின்.); curry.

தெ. மருமாட; க. மருமாடு.

*[மறு + மாற்றம்.]*

மறுமுகம் *maru-mugam,* பெ.(n.) 1. வேறு பக்கம் (வின்.); different direction. 2. புதிய (அந்நியன்) முகம்; face of a stranger. *"மறுமுகம் பார்த்தறியாதவன்" (உ.வ.).*

*[மறு + முகம்.]*

மறுமுட்டுப்பெறு-தல் *maru-muṭṭu-p-peru-,* 20 செ.கு.வி.(v.t.) வேறோரிடத்துப் பயன் பெறுதல்; to have a hold or advantage elsewhere. *"மறுமுட்டுப் பெறாதபடி உடைந்தோடும்" (ஈடு.1, 7, 11).*

*[மறு + முட்டு + பெறு-,]*

மறுமுள் *marumuḷ,* பெ.(n.) 1. பாலுண்ணி; wart (M.L.). 2. அம்மை முத்தின் மேல் உண்டாம் மறுமுத்து (வின்.); excrescence formed on pocks left by small pox, Lichen pilanis.

*[மறு + முள்.]*

மறுமுள்பாய்-தல் *maru-muḷ-pāy-,* 2 செ.கு.வி.(v.i.) அம்மையில் மறுமுள் உண்டாதல்; to form *maru-muḷ. "அவனுக்கு வந்த அம்மை மறுமுள் பாய்ந்திருக்கிறது" (உ.வ.).*

*[மறுமுள் + பாய்-,]*

**மறுமுறை** *maru-murai,* பெ.(n.) 1. மறுதடவை; next turn. 2. மறுபிறப்பு; next birth. *"நங்கேண்மை மறுமுறையானு மியைக" (பரிபா.பக்.173).*

*[மறு + முறை.]*

**மறுமை** *marumai,* பெ.(n.) 1. மறுபிறவி; the next birth opp. to immai. *"மன நலத்தினாகு மறுமை" (குறள், 459).* 2. மறுவுலகம் (சூடா.); the next world, svarga. *"இம்மையே மறுமைதானும் நல்கினை" (கம்பரா. உருக்காட்டு.71).*

*[மறு→மறுமை.]*

**மறுமொழி** *maru-moli,* பெ.(n.) 1. மறுசொல் பார்க்க; see *maru-šol. "மறுமொழி பெயர்த்தலாற்றாள்" (நற்.106).* 2. அனுப்புஞ் செய்தி (யாழ்ப்.); message.

*[மறு + மொழி. மொழி = சொல்.]*

**மறுமொழிபேசாதாள்** *maru-moli-pēšādāl,* பெ.(n.) சாயா மரம்; a tree which does not cast it shadow (சா.அக.).

**மறுவல்[1]** *maruval,* பெ.(n.) மறுவி, 1 (திவா.) பார்க்க; see *maruvi.*

*[மறு→மறுபிறவி→மறுவி →மறுவல்.]*

**மறுவல்[2]** *maruval,* வி.எ.(adv.) திரும்ப; again.

*[மறு→மறுவல்.]*

**மறுவலிடு-தல்** *maruval-idu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. திரும்புதல்; to return, come back. 2. சிறிது எஞ்சி நிற்றல்; to leave a trace. *"மல்லிகை... கமழ்தென்றல் மறுவ விடுகை யாலே" (ஈடு.10, 3, 5).*

*[மறுவல் +இடு-,]*

**மறுவலும்** *maruvalum,* வி.எ.(adv.) திரும்பவும், மீட்டும்; again, once more. *"மறுவலும் புல்லிக் கொண்டு" (சீவக.1052).*

*[மறு→மறுவலும்.]*

**மறுவலை** *maruvalai,* பெ.(n.) வலை வகை; a kind of fishing net.

மறுவ. இழுப்பு வலை.

*[மறு + வலை.]*

இஃது நண்டு பிடிக்கப் பயன்படும். தடச்சி என்னும் நூலாலானது. கண் 2 அங்குல அளவினது. வலையின் வாய்ப்பகுதியில் இரு பெரிய தடிகள் இணைக்கப்பட்டிருக்கும். வலை இறக்கிய பின்பு ஒரு மணி நேரம் கழித்து வலை கிளப்புவர் (க.ப.சொ.).

**மறுவா-தல் (மறுவருதல்)** *maruvā-,* 18 செ.கு.வி.(v.i.) மனஞ்சுழலுதல்; to be distressed, confused. *"அறியான் மறுவரற் பொழுதில்" (அகநா.22).*

*[மறு + வா-.]*

**மறுவி** *maruvi,* பெ.(n.) 1. மான்மணத்தி (தைலவ.தைல.); musk.

*[மறு→மறுவி. முள்→(மள்)→மறு = மணம், வாசனை.]*

**மறுவிசை** *maru-višai,* பெ.(n.) மறுபடியும் (வின்.) பார்க்க; see *maru-padiyum.*

*[மறு + விசை.]*

**மறுவிவாகம்** *maru-vivāgam,* பெ.(n.) மறுமணம் (இக்.வ.) பார்க்க; see *maru-manam.*

*[மறு + Skt. விவாகம்.]*

மறுவீடு *maṟu-vīḍu,* பெ.(n.) மரு, 4 பார்க்க; see *maṟu.*

*[மறு + வீடு.]*

மறுவு *maṟuvu,* பெ.(n.) மரு[1], 2 பார்க்க; see maṟu[1], 2.

*[மரு→மறு→மறுவு.]*

மறுவுத்தரம் *maṟuvu-t-taram,* பெ.(n.) மறுமொழி (வின்.) பார்க்க; see *maṟu-moḻi.*

*[மறு + உத்தரம்.]*

மறுவுலைபாய்ச்சு-தல் *maṟu-v-ulai-pāyccu-,* 5 செ.குன்றாவி.(v.t.) வெந்த சோற்றைப் பத்திய வுணவுக்காக மறுமுறை கொதிக்க வைத்தல் (இ.வ.); to boil the rice over again, as for a patient.

*[மறு + உலை + பாய்ச்சி.]*

மறுவொத்தி *maṟu-v-otti,* பெ.(n.) மறு வொற்றி (கொ.வ.) பார்க்க; see *maṟu-v-oṟṟi.*

*[மறு + ஒத்தி. ஒற்றி→ஒத்தி.]*

மறுவொற்றி *maṟu-v-oṟṟi,* பெ.(n.) ஒருமுறை அடைமானம் வைத்து மீட்காத பொருளை இரண்டாமுறையும்அடைமானம் வைத்தல் (இ.வ.); second mortgage.

*[மறு + ஒற்றி.]*

மறுவோலை *maṟu-v-ōlai,* பெ.(n.) விடை மடல் (வின்.); reply in writing.

*[மறு + ஓலை.]*

மறை[1]-தல் *maṟai-,* 2 செ.கு.வி.(v.i.) 1. ஒளிந்து கொள்ளுதல்; to be hidden, shrouded. *"புதன் மறைந்து வேட்டுவன் புட்சிமிழ்த்தன்று" (குறள், 274).* 2. தோன்றா தொழிதல்; to disappear, vanish, to become invisible, to recede, as from sight. *"ஞாயிறு குடமலை மறைய" (நற்.239).*

*[முள்→மள்→மரு→மறு = குற்றம். மறுத்தல் = இல்லையென்று சொல்லால் மறைத்தல். மறு→மற. மறத்தல் = மனத்தில் மறையப் பெறுதல். மற→மறை (மு.தா.182).]*

மறை[2]-தல் *maṟai-,* 2 செ.குன்றாவி.(v.t.) 1. ஒளித்தல்; to hide, conceal, keep back. *"மறைப்பேன்மற் காமத்தை யானோ" (குறள், 1253).* 2. மூடுதல்; to cover, to shroud, to shelter. *"அற்ற மறைத்தலோ புல்லறிவு" (குறள், 846).* 3. தீது வாராமற் காத்தல்; to protect, as from harm or danger. *"குடும்பத்தைக் குற்றமறைப்பான்" (குறள், 1029).*

*[மறு→மறை-, (வே.க.4:63)]*

மறை[3] *maṟai,* பெ.(n.) 1. மறைக்கை; concealment. *"வெயின் மறைக் கொண்ட" (புறநா.60).* 2. மந்தணம்; secret. *"புறப் படுத்தானாகு மறை" (குறள், 590).* 3. அவையாய்வு; consultation in council, as by kings. *"இராம னருமறைக்கு" (அகநா.70).* 4. மறைநூல்; the *vēdās* as secret. *"அளபிற் கோட லந்தணர் மறைத்தே" (தொல்.எழுத்து.102).* 5. சிற்றிலக்கியம்; the upanisads. *"வேதத்து மறை நீ" (பரிபா.3, 66).* 6. ஆகமம்; the Agamās, as sacred. *"மறைமுறை யுணர்ந்த வறிவின் கிழவரும்" (ஞானா.35).* 7. மந்திரம் (உரி.நி.); *mantram.* *"மதியொடு புணர்ந்த மறையினோர்க்கே" (ஞானா.37, 4).* 8. உபதேச பொருள்; esoteric teaching. *"அருமறை சோரு மறிவிலான்" (குறள், 847).*

9. களவுப் புணர்ச்சி (அகப்.); clandestine union of lovers. *"மறையலராகி மன்றத் தஃதே" (குறுந்.97).* 10. பெண்குறி; pudendum muliebre. *"அடியிலிருந்த மறை மாண்பை" (அருட்பா.i, இங்கித.90).* 11. உருக்கரந்த புனைவு; disguise. 12. புகலிடம் (பிங்.); refuge, shelter. *"வாசவன்... மறை புகாது" (குற்றா.தல. தக்கன். வேள்வி.44).* 13. சிறைக்கூடம்; prison, jail. *"மறையிடை வந்து" (கந்தபு. வீரவாகுசயந். 22).* 14. மறைவிடம் (சங்.அக.); place of concealment. 15. வஞ்சனை; fraud, enticing. *"மறையிற்றன் யாழ்கேட்ட மானை யருளாது" (கலித்.143).* 16. கேடகம் (அக.நி.); shield.

*[முள்→மள்→மரு→மறு = உடம்பிலுள்ள கரிய புள்ளி. மள்→மரு→மறு = குற்றம். மறு→மற. மறத்தல்= மனத்தில் மறையப் பெறுதல். மறை = பொதுமக்களுக்கு மறைந்திருக்கும் செய்தி களையும், உண்மைகளையும் கொண்ட நூல் (மு.தா.182).]*

மறை[4] *marai,* பெ.(n.) 1. எதிர்மறை; negative. *"தொழாநிர் என்பது மறையின்றித் தொழுது என்று பொருள் தருமேனும்" (மலைபடு. 231, உரை).* 2. விலக்குகை; abstinence, relinquishment. *"பொய்ம்மை புலாற்கண் மறையுடைமை" (ஏலாதி, 6).* 3. இரண்டாம் உழவு (யாழ்ப்.); second ploughing.

*[மரு→மறு→மற→மறை (வே.க.76).]*

மறை[5] *marai,* பெ.(n.) 1. புள்ளி; freckle, mole, spot. *"மறையேற்றின்" (கலித்.103).* 2. சிவப்புப் புள்ளிகளை யுடைய மாடு, ஆடு முதலியன (கொ.வ.); cattle or other animal with red spots. *மறையாடு (பே.வ.).*

*[முள→மள்→மரு→மறு →மறை.]*

மறை[6] *marai,* பெ.(n.) 1. மரை[1], 5, 6 பார்க்க; see *marai.* 2. சங்கின் முறுக்கு (யாழ்.அக.); spiral of conch.

தெ. மர.

*[மறு→மறை.]*

மறைக்காடு *marai-k-kādu,* பெ.(n.) இன்று வேதாரண்யம் என்ற பெயரில் உள்ள ஊரின் முன்னைப் பெயர்; the previous name of the present *Vēdāranyam. "முத்தம் கொழிக்கும் மறைக்காடு" (பெரியபு. திருநா.264). "மறைக் காட் டுறையு மணாளன் றானே" (தேவா.843, 1).*

*[மறை + காடு.]*

மரை எனில் மான். மறை எனில் சிவப்புப் புள்ளிகளையுடைய மாடு. மான், மாடுகளின் மிகுதியால் மரைக்காடு அல்லது மறைக்காடு என்றழைக்கப்பட்டிருந்தது. ஊர்பெயர்கள் வடமொழியாக்கத்தால் பொருளும் திரிபுற்று வேதத்துடன் தவறாகத் தொடர்புபடுத்தப் பட்டுள்ளது.

மறைக்காடு *marai-k-kādu,* பெ.(n.) மரைக்காடு பார்க்க; see Marai-k-kādu.

மறைக்கிட்டி *marai-k-kitti,* பெ.(n.) மறை முடுக்கி (இ.க்.வ.) பார்க்க; se *marai-mudukki.*

*[மறை + கிட்டி.]*

மறைக்கிழவன் *marai-k-kilavan,* பெ.(n.) மறைக்கோ (கூர்மபு.பிரகிருதி.18) பார்க்க; see *marai-k-kō.*

*[மறை + கிழவன்.]*

**மறைக்கொடியோன்** *marai-k-koḍiyōṉ,* பெ.(n.) 1. அயன்; *Brahmāṉ.* 2. பார்ப்பனன்; brahmin. 3. துரோணர் (சூடா.); *Drōṇācarya.*

*[மறை + கொடியோன்.]*

**மறைக்கோ** *marai-k-kō,* பெ.(n.) அயன்; *Brahmāṉ. "புத்தேளு மறைக்கோவும்" (காஞ்சிப்பு.கடவு.1).*

*[மறை + கோ.]*

**மறைச்சி**[1] *maraicci,* பெ.(n.) புள்ளியுள்ள பெண் விலங்கு (யாழ்ப்.); female of any spotted animal, as cow, bitch etc.

*[மரு →மறு →மறை →மறைச்சி.]*

**மறைச்சி**[2] *maraicci,* பெ.(n.) 1. பிராமணப் பெண்; brahmin woman. 2. துரும்பப் பெண்; woman of the lowest caste, washer woman of the Parayas.

*[மறை →மறைச்சி.]*

**மறைச்சிரம்** *maraicciram,* பெ.(n.) சிற்றிலக்கியம்; the upanisads. *"அருமறைச் சிரத்தின் மேலாம்" (பெரியபு.தில்லைவாழ்.2).*

*[மறை →மறைச்சிரம்.]*

**மறைசை** *maraišai,* பெ.(n.) மரைக்காடு பார்க்க; see *marai-k-kāḍu.*

*[மறை →மறைசை.]*

**மறைசையந்தாதி** *maraicai-y-andādi,* பெ.(n.) 18ஆம் நூற்றாண்டில் யாழ்ப் பாணத்துச் சின்னத்தம்பிப் புலவர் மறைசையிற் கோயில் கொண்ட சிவபெருமான் மீது இயற்றிய அந்தாதி நூல்; an *antāti,* poem on *Šivaṉ* at maraicai by *Cinna-tambi-p-pulavar* of Jaffna, 18th c.

*[மறைசை + அந்தாதி.]*

**மறைசொல்** *marai-col,* பெ.(n.) மறைமொழி (உரி.நி.) பார்க்க; see *marai-moli.*

*[மறை + சொல்.]*

**மறைஞானசம்பந்தசிவாசாரியார்** *marai-ñāṉa-šambanda-šivā-cāriyār,* பெ.(n.) 13ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவரும் அருணந்தி சிவாசாரியாரின் சீடரும் உமாபதி சிவாசாரியரின் குருவுமான ஒரு சந்தான குரவர்; a *Šaiva ācārya* disciple of *Aruṇanti-šivācāriyar* and guru of *Umāpati-šivācāriyar* of 13th C. one of *Šantāṉa-muravar*(q.v).

**மறைஞானசம்பந்தர்** *maraiñāṉa-šambandar,* பெ.(n.) 16ஆம் நூற்றாண்டினரும் சைவ சமயநெறி சிவதருமோத்தரம் கமலாலய புராணம் முதலிய நூல்களி யற்றியவருமான ஆசிரியர்; author of *Šaiva-Šamayaneri, Šivataru-mōttaram, Kamalālaya-purāṇam* and other works of 16th C.

**மறைத்தலைவி** *marai-t-talaivi,* பெ.(n.) திருமகள் (பிங்.); Laxmi.

*[மறை + தலைவி.]*

**மறைத்துமொழிகிளவி** *maraittu-moli-kiḷavi,* பெ.(n.) இடக்கரடக்கல் (திவா.); euphemism.

*[மறைத்துமொழி + கிளவி.]*

**மறைநீலி** *marai-nili,* பெ.(n.) கொத்து மல்லி; seed of coraiander (சா.அக.).

**மறைப்பில்லை** *marai-p-pillai,* பெ.(n.) மறையாணியின் சுரை (இக்.வ.); nut of a screw.

**மறைப்பு** *maraippu,* பெ.(n.) 1. ஒளிப்பு; concealment/ obscuration. 2. நிரைச்சல்; screen, temporary enclosure.

*[மறை→மறைப்பு.]*

**மறைப்புச்சுவர்** *maraippu-c-cuvar,* பெ.(n.) வீட்டுக்குள் கட்டப்படும் தடுப்புச் சுவர் (இக்.வ.); curtain wall.

*[மறைப்பு + சுவர்.]*

**மறைபுகல்** *marai-pugal,* பெ.(n.) அடைக்கலம் புகல் (பிங்.); taking refuge.

*[மறை + புகல்.]*

**மறைபொருள்** *marai-porul,* பெ.(n.) 1. ஒளிக்கத் தக்கது (சுக்கிரநீதி, 163); secret. 2. உட்கருத்து (வின்.); inner meaning. 3. அறியவியலாத மந்தணம் (வின்.); mystery. *"நாவ லந்தண ரருமறைப் பொருளே" (பரிபா.1, 13).*

*[மறை + பொருள்.]*

**மறைமலையடிகள்** *marai-malai-y-adigal,* பெ.(n.) தனித்தமிழ் இயக்கத்தின் முன்னோடியாகத் திகழ்ந்த தமிழ் அறிஞர்; pioneer of puritan Tamil Scholar.

மறைமலையடிகளாரைப் பற்றி மொழி ஞாயிறு குறிப்பிட்ட குறிப்புகள் :

"தேனும் பாலும் போன்ற தூய தீந்தமிழ்ச் சொற்களால் உரைநடையுஞ் செய்யுளுமாகிய இருவடிவிலும் பல்துறை தழுவி ஐம்பதிற்கு மேற்பட்ட அருநூலியற்றி முதலிரு கழக நிலைக்குத் தமிழைப் புதுக்கி அதற்குப் புத்துயிரளித்தவர், மாநிலத்தில் மக்களுள்ளவரை மறையாப் புகழ்பெற்ற மறைமலையடிகளே" (வ.வ.முன். பக்.53).

உலக மொழிகள் (ஏறத்தாழ) மூவாயிரத்துள், ஒருபோதும் வழங்கா இலக்கியப் பெருமொழி யென்னும் வகையிற் சமற்கிருதமும், என்றுமுள்ள உலக முதல் உயர் தனிச் செம்மொழி யென்னும் வகையில் தமிழும், உலகப் பொதுக் கலவைப் பெருமொழி யென்னும் வகையில் ஆங்கிலமும், தலைசிறந்த மொழிகளாகும். இம் மூன்றும் ஒருங்கே, கைவந்தார் பலர் இருந்தாரேனும், அவரனைவருள்ளும், எவரெத்து (Everest) என்னும் வெள்ளி மலை போலுயர்ந்தும், அமேசான் (Amazon) என்னும் அமெரிக்க ஆறு போலகன்றும், அமைதி வாரியின் (Pacific Ocean) தென்னகழி போலாழ்ந்தும், பிறங்கித் தோன்றிய பெரும் புலமை வாய்ந்தவர் மறைமலையடிகளே யென்பது, மிகையாகாது.

சொல்வன்மை, உரைநடை வன்மையும், செய்யுள் வன்மையும் என இரு திறத்தது. அவ்விரு திறனும் உடையாரான அடிகள், நாவலரும், பாவலருமாகவும், நூலாசிரியர், நுவலாசிரியர், உரையாசிரியர், இதழாசிரியர், பதிப்பாசிரியர், தொகுப்பாசிரியர், பெயர்ப்பாசிரியர் முதலிய பல்வகை யாசிரியராகவுமிருந்ததொடு தலைசிறந்த ஆராய்ச்சியாளராகவும் விளங்கினமை நாடறிந்தது, உலகறிந்தது.

அடிகளார் ஆங்கிலப் புலமையும் பேச்சாற்றலும் பெற்றவர். தமிழர் மதம், மக்கள் நூறாண்டு உயிர் வாழ்க்கை, சைவ சித்தாந்த ஞான போதம், வேளாளர் நாகரிகம், சாதி வேற்றுமையும் போலிச் சைவரும், கடவுள் நிலைக்கு மாறான கொள்கைகள் சைவம் ஆகா. பழந்தமிழ்க்

கொள்கையே சைவ சமயம், முல்லைப்பாட்டு ஆராய்ச்சியுரை முதலிய பல நூல்களில் ஆங்கில முகவுரை வரைந்ததோடு, 133 பக்கங் கொண்ட "The Saiva Siddhanta as a Philosophy of Practical Knowledge" என்னும் ஆங்கில நூலையும் வெளியிட்டுப் போந்தார். "Ancient and modern Tamil poets can Hindi be the lingua Franca of India" என்பனவும் அவரியற்றிய ஆங்கில நூல்களாகும்.

ஆங்கிலத்தினும் மிக மிகக் கடினமானது சமற்கிருதம். எழுத்துப் பெருக்கம் (51) ஒலிக் கடுமை, மூவெண், இலக்கணப்பால், பிரியா வேற்றுமையுருபு, புணர்ச்சி நெறிகளின் பல்வேறு விலக்கு, பெயர்களின் வேற்றுமைப்பாடும், வினைகளின் புடைபெயர்ச்சியும் பல்வேறு முறைப்படல், பேச்சு வழக்கின்மை, பன்மொழிச் சொற்கலப்பு, வேர் தெரியாச் சொற்சிதைவு முதலியன பொதுவாக மொழி வெறியரும் கடுவுழைப் பாராய்ச்சியாளருமன்றிப் பிறர் கற்க முடியாதவாறு சமற்கிருதத்தைக் கடினமாக்குங் கூறுகளாம். ஆயினும் அடிகள் அம்மொழியையும் அதன் இலக்கியத்தையும் அமைவுறக் கற்றுத் தேர்ந்தது வியக்கத் தக்கதே. அடிகளின் சமற்கிருதப் புலமை, காளிதாசனின் சாகுந்தல நாடகத் தெள்ளிய தமிழ் மொழி பெயர்ப்பு நூலாலும்; ஆரிய வேத நூற்கல்வி, சிவநெறி தமிழரதே என்று நிலைநாட்டும் வண்ணம் தம் மதம் பற்றிய நூல்களிலெல்லாம் வேத பிரமான உபநிடத இதிகாசப் புராணங்களினின்று எடுத்துக்காட்டும் சான்றுகளாலும், "தென்புலத்தார் யார்? என்பது போன்ற ஆராய்ச்சிக் கட்டுரைகளாலும் தெற்றெனத் தெரியலாகும். இதுகாறும் எவரும் அவற்றைப் பற்றிக் குறை கூறாமையும் இதனை உறுதிப்படுத்தும். பாவாணருக்கு வழிகாட்டியாக விளங்கி வேர்ச்சொல் ஆய்விற்கு வித்திட்டவர் மறைமலையடிகளே என்பதை பாவாணர் தம் நூல்களில் பலவிடங்களில் போற்றுகிறார்" (மறைமலையடிகள் நூற்றாண்டு விழா மலர் – 1977).

தமிழர் தொன்மையை உலகிற்கு அறிவித்தவர் கால்டுவெல் பெருமகனார்; தனித்தமிழுக்கு வித்திட்டவர் பரிதிமாற் கலைஞர்; செடியாகத் தழைக்கச் செய்தவர் நிறைதமிழ் மலையாம் மறைமலையடிகள்; நானே மரமாக வளர்த்து வருகிறேன் (பாவாணர்.). – (மறைமலையடிகள் நூற்றாண்டு விழா மலர் 1973).

**மறைமுடிக்கி** *maṟai-muḍikki,* பெ.(n.) மறை முடுக்கி பார்க்க; see *maṟai-muḍukki.*

*[மறை + முடிக்கி. முடுக்கி→முடிக்கி (திரிபு.).]*

**மறைமுடுக்கி** *maṟai-muḍukki,* பெ.(n.) வில்முடுக்கி; spanner, wrench.

*[மறை + முடுக்கி.]*

**மறைமுடிவு** *maṟai-muḍivu,* பெ.(n.) 1. வேதாந்தம்; *vēdānta,* as the conclusion of the *Vēdās.* 2. கடவுள் (யாழ்.அக.); God.

*[மறை + முடிவு.]*

**மறைமுதல்** *maṟai-mudal,* பெ.(n.) 1. கடவுள் (வின்.); God, as lord of the *Vēdās.* 2. சிவன் (திவா.); God *Śivāṉ.* 3. பிரணவம்; the mystic incantation 'om'. *"மறை முதற் கொரு வடிவமாகி" (கந்தபு. கடவுள் வாழ்த்து.4).*

*[மறை + முதல்.]*

**மறைமுதல்வன்** *maṟai-mudalvaṉ,* பெ.(n.) 1. மறைமுதல், 1 பார்க்க; see *maṟai-mudal.* 2. வேதம் ஓத வல்ல பிராமணன்; brahmin, as well versed in the Vēdās. *"மாமறை முதல்வ" (சிலப்.11: 58).*

*[மறை + முதல்வன்.]*

**மறைமுதலி** *maṟai-mudali,* பெ.(n.) 1. மறைமுதல், 1 (வின்.) பார்க்க; see *maṟai-mudal.* 2. மறைமுதல், 2 (சூடா.) பார்க்க; see *maṟai-mudal.*

*[மறை + முதலி.]*

**மறைமூலம்** *maṟai-mūlam,* பெ.(n.) குழந்தையின் உச்சிமென் படலம்; fontanelle. *"மறை மூலந் திறப்ப" (பெரியபு. பெருமிழலை. 10).*

*[மறை + மூலம்.]*

**மறைமொழி** *maṟai-moḻi,* பெ.(n.) 1. மந்திரம்; *Mandiram*, as secret word. *"மறைமொழி தானே மந்திரமென்ப" (தொல்.பொருள்.491).* 2. மறைத்துமொழி கிளவி (பிங்.) பார்க்க; see *maṟaittu-moḻi-kiḷavi.*

*[மறை + மொழி.]*

**மறையவன்** *maṟaiyavaṉ,* பெ.(n.) 1. மறையோன் பார்க்க; see *maṟaiyōṉ.* 2. முனிவன் (வின்.); sage. 3. துரும்பன் (யாழ்.அக.); man of lowest caste.

*[மறை மறையவன்.]*

**மறையன்** *maṟaiyaṉ,* பெ.(n.) மறை[5] (வின்.) பார்க்க; see *maṟai.*

*[மறை →மறையன்.]*

**மறையாணி** *maṟai-y-āṇi,* பெ.(n.) திருகாணி (இ.வ.); screw.

*[மறை + ஆணி.]*

**மறையாதிக்குழைச்சாறு** *maṟai-ādi-k-kuḻai-c-cāṟu,* பெ.(n.) பசளைச் சாறு; juice of pacalai (சா.அக.).

**மறையான்** *maṟaiyāṉ,* பெ.(n.) 1. அயன்; *Brahmaṉ.* *"செய்ய மறையானின் னுந்தியான்" (திவ்.இயற்.1, 28).* 2. மறைபதி பார்க்க; see *maṟai-padi.* *"தன்மறையானோடு வைகுமோ" (யசோதர. 3, 4, 1).*

*[மறை →மறையன்→மறையான்.]*

**மறையிருகுளத்தோன்** *maṟai-y-iru-kuḷattōṉ,* பெ.(n.) காய்ச்சிய நஞ்சு; a kind of prepared arsenic (சா.அக.).

**மறையிலார்** *maṟai-y-ilār,* பெ.(n.) இழிந்தோர் (வின்.); mean persons.

*[மறை + இலார்.]*

**மறையிறை** *maṟai-y-iṟai,* பெ.(n.) மறைவிடை (நன்.386) பார்க்க; see *maṟai-viḍai.*

*[மறை + இறை. இறு→இறை. இறு = சொல்.]*

**மறையீறு** *maṟai-y-īṟu,* பெ.(n.) மறைச்சிரம் பார்க்க; see *maṟai-c-ciram.* *"மறையீறி றறியா மறையோனே" (திருவாச.5, 85).*

*[மறை + ஈறு.]*

**மறையோர்விந்து** *maṟai-yōr-vindu,* பெ.(n.) வாலைச் சாறு; quick silver extracted from cinnabar by a special process (சா.அக.).

**மறையோன்** *maṟaiyōṉ,* பெ.(n.) 1. பிரம்மன் (அயன்) (திவா.); *Brahmaṉ.* 2. வியாழன் (திவா.); Jupiter, as the preceptor of the celestials. 3. பிராமணன்; *Brāhmiṉ.* *"மறையோ ராறே" (தொல்.பொ. 499).*

*[மறை →மறையோன்.]*

**மறைவாணர்** *maṟai-vāṇar,* பெ.(n.) பிராமணன்; brahmins. *"மறை வாணர் பலர் நின்று பெறவே" (கலிங்.268).*

*[மறை + வாணர்.]*

**மறைவிடம்** *marai-vidam,* பெ.(n.) 1. ஒளிப்பிடம்; hiding or lurking place. 2. வெளியிலிருந்து காணவியலாத இடம்; place hidden from view. 3. கழிப்பறை (இ.வ.); privy.

*[மறைவு + இடம்.]*

**மறைவிடை** *marai-vidai,* பெ.(n.) மறுத்துக் கூறும் விடை (நன்.386, உரை); negative answer.

*[மறை + விடை. மறு →மறை.]*

**மறைவு** *maraivu,* பெ.(n.) 1. மறைகை; vanishing, disappearance. 2. ஒளிப்பிடம்; covert, hidding place, den. 3. மந்தணம்; secret. 4. நிரைச்சல்; shelter, screen. 5. கோள்கள் ஒன்றாலொன்று மறைகை (வின்.); occultation.

*[மறை → மறைவு.]*

**மன்[1]** *man,* இடை.(part.) 1. ஓர் அசை நிலை; an expletive. *"ஆயிருதிணையி னிசைக்குமன்" (தொல்.சொல்.1).* 2. எதிர் காலங்காட்டும் இடைநிலை (தொல்.சொல்.1, சேனா. கீழ்க். குறிப்பு.) (சி.போ.பா.1, உரை); affix indicative of (a) future tense. 3. ஒழியிசைக் குறிப்பு; ellipsis. *"கூரியதோர் வாண்மன்" (தொல். சொல்.252, உரை).* 4. மிகுதிக் குறிப்பு; greatness, abundance. *"சிறியோன் பெறினது சிறந்தன்று மன்னே" (புறநா.75).* 5. பிறிதொன்றாகைக் குறிப்பு; change or transformation. *"பண்டு காடுமனின்று கயல்பிறழும் வயலாயிற்று" (தொல்.சொல். 252, உரை).* 6. ஆக்கக் குறிப்பு; prosperity. *"திருநிலைஇய பெருமன்னெயில்" (பட்டினப். 291).* 7. கழிவுக் குறிப்பு; what is past and gone. *"சிறியகட் பெறினே யெமக்கியு மன்னே" (புறநா.235).* 8. நிலைபேற்றுக் குறிப்பு; permanence. *"மன்னே.... நிலையே றாகும்" (நன்.432).* 9. ஒரு பெயர் விகுதி; a personal suffix, as in *vatamaṉ.*

**OE.** manig; **OHG.** manag; **Goth.** manags; **E.** many.

*[முன் →மன் (வே.க.4:34).]*

**மன்[2]** *man,* பெ.(n.) 1. அரசன்; king. *"மன்னுடை வேலினாய்" (சீவக.1200).* 2. அரச குலத்தார் (சத்திரியன்); *ksattriya,* warrior. *"மன்னாகி மறையவனாய்" (சேதுபு.சேதுபல.69).* 3. தலைவன், பெரியோன்; lord, chief. *"மன்னுயிர் நீத்தவேலின்" (பு.வெ.4, 23, கொளு.).* 4. கணவன்; husband. *"மன்னொடுங் கூடி.... வானகம் பெற்றனர்" (சிலப்.25:59).* 5. உத்திரட்டாதி (பிங்.); the 26th naksatra. 6. பெருமை (யாழ்.அக.); greatness. 7. இழிவு (சூடா.); meanness, inferiority.

*[முன் → மன் = கருதும் ஆறாம் அறிவுள்ள மாந்தன் (வே.க.4:34).]*

**மன்[3]** *man,* பெ.(n.) மந்திரம் (பிங்.); mantra.

**மன்[4]** *man,* பெ.(n.) எட்டு விசை கொண்ட நிறை; மணங்கு (நாஞ்.); maund.

**மன்பது** *manbadu,* பெ.(n.) மன்பதை, 1 பார்க்க; see *manbadai. "மன்பது மறுக்கத் துன்பங் களைவோன்" (பரிபா.15:52).*

*[மன்பதை →மன்பது. முன்→மன் = கருதும் ஆறாம் அறிவுள்ள மாந்தன். மன்பது = மக்களினம்.]*

**மன்பதை** *manbadai,* பெ.(n.) 1. மக்கட் பரப்பு (சூடா.); humanity. *"மன்பதை காக்கு நின்புரைமை" (புறநா.210). "மன்பதை*

*காக்குந் தென்புலங் காவல்" (சிலப். வழக்குரை.73-77).* 2. படை; army. *"மன்பதை பெயர" (பதிற்றுப்.73, 3).*

*[முன்→மன் = கருதும் ஆறாம் அறிவுள்ள மாந்தன்.]*

**மன்மகளிர்** *maṉ-magaḷir,* பெ.(n.) அரசனால் தலைக்கோல் பெற்ற ஆடல் மகளிர்; dancing girls distinguished by a royal grant of *talai-k-kōl. "மன்மகளிர் சென்னியராடல்" (பரிபா.7, 80).*

*[மன் + மகளிர்.]*

**மன்ற**[1] *maṉṟa,* வி.எ.(adv.) 1. தெளிவாக (தொல்.சொல்.267); clearly. 2. உறுதியாக; certainly. *"சென்று நின்றோர்க்குந் தோன்று மன்ற" (புறநா.114).* 3. மிக; abundantly, plentifully. *"மன்றவவுணர் வருத்திட" (கந்தபு.தேவ.போற்.6).*

**மன்ற**[2] *maṉṟa,* இடை.(part.) ஓர் அசைச் சொல் (யாழ்.அக.); an expletive.

**மன்றகம்** *maṉṟagam,* பெ.(n.) அவை; assembly. *"மன்றகத்தே நம்பி மாடமெடுத்தது" (திருமந்.148).*

*[மன்று + அகம்.]*

**மன்றப்பொதியில்** *maṉṟa-p-podiyil,* பெ.(n.) மன்றமாகிய பொதுவிடம்; public place. *"கொன்றையஞ் சடைமுடி மன்றப் பொதியில்" (சிலப்.பதிக.41).*

*[மன்றம் + பொதியல்.]*

**மன்றம்** *maṉṟam,* பெ.(n.) 1. அவை (பிங்.); hall, assembly. 2. முறைமன்றம்; court. *"அறனவின் மன்றத்துள்ளோர்" (திருவிளை. மாமனாக.35).* 3. ஊருக்கு நடுவாயுள்ள மரத்தடிப் பொதுவிடம்; meeting place under a tree, in a village. *"மன்றமும் பொதியிலும்" (திருமுரு.226).* 4. குதிரைகளைப் பயிற்றும் செண்டுவெளி; open place used for riding horses. *"பேரிசை மூதூர் மன்றங் கண்டே" (புறநா.220, உரை).* 5. மக்கள் கூடும் வெளியிடம் (பிங்.); plain, open space. *"மன்றம்போழு மணிவுடை நெடுந்தேர்" (குறுந்.301).* 6. போர்க்களப் பரப்பின் நடுவிடம்; central place in a battlefield. *"செஞ்சுடர் கொண்ட குருதி மன்றத்து" (பதிற்றுப்.35, 8).* 7. பொன்னம்பலமுள்ள தில்லை; Chidambaram. 8. வீடு; house. *"வதியுஞ்சில மன்றமே" (இரகு.நகரப்.71).* 9. மாட்டுத்தொழு; cow shed. *"மன்றலை மன்றம்"(குறுந்.64).* 10. நெடுந் தெரு (சூடா.); long street. 11. மெய்ம்மை (பிங்.); truthfulness, honesty. 12. பேய்கள் கூடுமிடம்; assembly of devils. *"காய்பசிக்கடும்பேய் கணங்கொண் மீண்டு மாலமர் பெருஞ்சினை வாகை மன்றமும்" (மணிமே. 6:82-3).* 13. பறவைகள் கூடுமிடம்; place of birds assembling.

*[முல் - பொருந்தற் கருத்துவேர். முல்→மல் = மிகுதல். மல்→மன் = மிகுதல், கூடுதல். மன்→மன்று = அம்பலம், கூடுமிடம். மன்று→மன்றம். பெருமைப் பொருள் பின்னொட்டு.மன்→மன்று→மன்றம்.]*

**மன்றல்** *maṉṟal,* பெ.(n.) 1. நறுமணம் (பிங்.); scent, perfume. 2. திருமணம்; marriage. *"அந்தண ரருமறை மன்ற லெட்டினுள்" (இறை.1). "மறையோர் தேயத்து மன்றல் எட்டனுள்" (தொல்.பொருள்.92).* 3. புணர்ச்சி; copulation. *"மன்றன் மாமயில்" (சீவக.2171).* 4. நெடுந்தெரு; long street. *"மன்றல்*

வருஞ்சேனை" (குற்றா.குற.73, 2). 5. பாலைப் பண் வகை (பிங்.); melody type of the desert tract.

[மன்→மன்று→மன்றல்.]

**மன்றவாணன்** *manra-vāṇaṉ,* பெ.(n.) தில்லை யிலுள்ள சிவன்; *Śivaṉ* as the lord of Chidambaram. *"மன்றவாணன் மலர் திருவருளால்" (தனிப்பா.).*

[மன்றம் + வாணன்.]

**மன்றன்** *maṉṟaṉ,* பெ.(n.) சிவன்; *Śivaṉ. "மன்றனு மாங்கே மலர்திரு வருளால்" (திருமந்.2277).*

[மன்று→மன்றன்.]

**மன்றாட்டம்** *maṉṟāṭṭam,* பெ.(n.) 1. வேண்டு கோள் (வின்.); petition, request, entreaty, prayer. 2. தொல்லை (இ.வ.); trouble, brother.

தெ. மன்டாடமு.

[மன்று→மன்றாடு→மன்றாட்டம்.]

**மன்றாட்டு** *maṉṟāṭṭu,* பெ.(n.) மன்றாட்டம், 1 (வின்.) பார்க்க; see *maṉṟāṭṭam.*

[மன்றாட்டம்→மன்றாட்டு.]

**மன்றாட்டுவேண்டுதல்** *maṉṟāṭṭu-vēṇḍudal,* தொ.பெ.(vbl.n.) குறையிரந்து வேண்டுகை; supplication and prayer R.C.

[மன்றாட்டு + வேண்டுதல்.]

**மன்றாடி[1]** *maṉṟāḍi,* பெ.(n.) 1. சிவன்; *Śivaṉ* as dancing in the open. *"என்று மன்றாடி சொல்ல" (திருவாலவா.52, 6) (உரி.நி.).* 2. பிறருக்காக வழக்கெடுத்துரைப்போன்; intermediary, one who pleads the cause of another. *"வானகத்து மன்றாடிகள் தாமே" (திவ்.பெரியாழ்.4, 5, 7).* 3. அவையில் வழக்காடுபவன்; one who brings a dispute before a court for adjudication. *"பழைய மன்டறாடி போலுமிவன்" (பெரியபு. தடுத்தாட்.48).* 4. சில சாதியார் பட்டப் பெயர்; tittle of certain castes of *Paḷḷas, mūttāṉs.* 5. ஆட்டிடையன் IS.I.I.iii.157ĭ 7); shepherd.

[மன்று + ஆடி.]

**மன்றாடி[2]** *maṉṟāḍi,* பெ.(n.) இடையன்; shepherd. *"இவ்வூர் மன்றடி தெவடி திருவியலூரும் கொற்றன்" (S.I.I.Vol.XIX, No.7).*

**மன்றாடு-தல்** *maṉṟāḍu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. குறையிரந்து வேண்டுதல்; to pray, entreat, implore, petition, supplicate. *"வஞ்சியை யாவி வெளவலை யென்றான் மன்றாடா" (சேதுபு.சோழ.39).* 2. வழக்காடுதல் (பெரியபு. தடுத்தாட்.48); to carry on litigation. 3. பிறருக்காக வழக்கெடுத் துரைத்தல்;to intercede, plead the cause of another. *"நித்யசூரிகள் காலி பத்துக்கும்...... மன்றாடுவர்களிறே" (திவ். பெரியாழ்.4, 5, 7, வியா.).*

[மன்று→மன்றாடு-.]

**மன்றில்** *maṉṟil,* பெ.(n.) வாயில்முற்றம்; courtyard of a house. *"செடிச்சிகள் மன்றிவிடைப் பலிதேர" (தேவா.991, 7).*

[மன்று→மன்றில்.]

**மன்று[1]** *maṉṟu,* பெ.(n.) 1. அவை; hall of assembly. 2. தில்லையிலுள்ள பொன்னவை; golden hall of Chidambaram.

*"தென்றில்லை மன்றினு ளாடினை போற்று" (திருவாச.4, 92).* 3. முறைமன்றம்; court of justice, arbitration court. *"நெடுமன்றில் வளனுண்டு" (கம்பரா. மூலபல.145).* 4. மாட்டுத்தொழு; cow-stall. *"ஆன்கணம்... மன்று நிறை புகுதர" (குறிஞ்சிப்.218).* 5. மாட்டுமந்தை; herd of cows. *"மன்றாடி சொல்ல" (திருவாலவா.52, 5, கீழ்க்குறிப்பு).* 6. மரத்தடியுள்ள திண்ணைப் பொதுவிடம்; raised platform under a tree for village meeting. *"மன்றும் பொதியினும்" (தஞ்சைவா.31).* 7. தோட்டத்தின் நடு; centre of a garden. *"மன்றிற் பையு டீரும்" (ஐங்குறு.246).* 8. நாற்சந்தி; junction of four roads or streets. *"மன்றிலே தன்னுடைய வடிவழகை முற்றூட்டாக அனுபவிப்பிக்கு மவனை" (ஈடு.3, 6, 3).* 9. நறுமணம்; fragrance. *"மன்றலர் செழுந்துதுளவு" (கம்பரா. திருவை.24).*

*[மள்→மன்று (வே.க.4:31).]*

**மன்று²–தல்** *manṟu-,*5 செ.குன்றாவி.(v.t.) தண்டஞ் செய்தல்; to fine, punish. *"அடிகெட மன்றிவிடல்" (பழ.288). "முட்டில் ஐங்கழஞ்சு பொன்மன்ற ஒட்டிக் கொடுத்தோம்"*(S.I.I.iii, 99).

*[மன்→மன்று–,]*

**மன்றுபடு–தல்** *manṟu-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) வெளிப்படுதல்; to become public. *"காம மறையிறந்து மன்றுபடும்" (குறள், 1138).*

*[மன்றம் = வெளி. மன்று + படு–,]*

**மன்றுபாடு** *manṟu-pāḍu,* பெ.(n.) அறப் பலகையின் முன் இறுக்கும் தண்டப் பொருள்; fine, penalty imposed by a court. *"இம் மன்றுபாடு இறுத்தும்...... முட்டாமை செலுத்தினோம்"* (S.I.I.iii, 95, 35).

*[மன்று + பாடு.]*

**மன்றுளாடி** *manṟuḻ-āḍi,* பெ.(n.) சிவன் (யாழ்.அக.); *Šivan.*

*[மன்று = அவை, அம்பலம், வெளி. மன்று →மன்றுள் + ஆடி.]*

**மன்னகுமரன்** *manna-kumaran,* பெ.(n.) அரசமகன்; kings's son, prince. *"மன்ன குமரனை வஞ்சம் புணர்த்த" (மணிமே.24, 1).*

*[மன்னன் + குமரன்.]*

**மன்னர்பின்னர்** *mannar-pinnar,* பெ.(n.) மன்னர்பின்னோர் (சூடா.) பார்க்க; see *mannar-pinnōr.*

*[மன்னர் + பின்னர். பின்னோர் →பின்னர்.]*

**மன்னர்பின்னோர்** *mannar-pinnōr,* பெ.(n.) வணிகர்; the *vaisya* caste, as being next to the *ksattriya. "மன்னர்பின்னோர்க் கென்னிலை யுணர்த்தி" (சிலப்.14 : 21).*

*[மன்னர் + பின்னோர்.]*

**மன்னர்மன்னவன்** *mannar-mannavan,* பெ.(n.) 1. பேரரசன்; emperor, as king of kings. 2. துரியோதனன் (பிங்.); *Duryōdhanan.*

*[மன்னர் + மன்னவன்.]*

**மன்னர்மன்னன்** *mannar-mannan,* பெ.(n.) மன்னர்மன்னவன் (வின்.) பார்க்க; see *mannar-mannavan.*

*[மன்னர் + மன்னன்.]*

**மன்னர்விழைச்சி** *mannar-vilaicci,* பெ.(n.) அரசன் நுகர்ச்சிக்குரியது (சிலப்.2 : 2, உரை); that which is fit for king's enjoyment.

*[மன்னர் + விழைச்சி.]*

**மன்னல்** *mannal,* பெ.(n.) 1. நிலைபேறு (பிங்.) (நாமதீப.607); permanence, stability, steadiness. 2. வலிமை; strength. 3. பெருமை; greatness. 4. உயர்ச்சி (நாமதீப.771); height. 5. விடாமுயற்சி; perseverance.

*[மன் = நிலைபேறு. மன்→மன்னல்.]*

**மன்னவமுனிவன்** *mannava-munivan,* பெ.(n.) அரச முனிவன்; royal sage. *"தேவி யொடு மாதவம் புரிந்த மன்னவமுனிவன்" (பெருங்.இலாவாண.15, 51).*

*[மன்னவன் + முனிவன்.]*

**மன்னவன்** *mannavan,* பெ.(n.) 1. மன்னன் பார்க்க; see *mannan. "முறை செய்து காப்பாற்று மன்னவன்" (குறள், 388).* 2. இந்திரன்; Indiran. *"மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்" (சிலப்.5 : 1, 73).*

*[மன்→மன்னன்→மன்னவன் (வே.க.4:34).]*

**மன்னறம்** *mannaram,* பெ.(n.) அரச அறம்; duties of sovereignty. *"மன்னறஞ் சிறிது நோக்கலை" (கம்பரா.பிணிவீ.92).*

*[மன்னன் + அறம்.]*

**மன்னன்** *mannan,* பெ.(n.) 1. அரசன்; king. *"மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்" (புறநா.186).* 2. எப்பொருட்கு மிறைவன் (பிங்.); the universal lord. 3. தலைவன்; chief. *"சேனை மன்னர்கள்" (கந்தபு. சூர. இரண்டநாள்யுத்.47).* 4. கணவன்; husband. *"மங்கை யுன்றன் மன்னனுய்ந்து வந்தது" (பிரமோத்.111).* 5. ஆடவன் (வின்.); man in his prime, between the ages of 32 and 48. 6. 26வது விண்மீன் (பிங்.); the 26th naksatra.

*[மன்→மன்னன் (வே.க.4:34).]*

**மன்னனார்** *mannanār,* பெ.(n.) திருமால் *(S.I.I.iii.87);* Tirumāḷ.

**மன்னாகுடிச்செட்டி** *mannā-kuḍi-c-ceṭṭi,* பெ.(n.) வணிகக்குடி (E.T.ii.92); a merchant caste.

**மன்னாசாதிமரம்** *mannā-cādi-maram,* பெ.(n.) ஒதுக்கப்பட்ட காட்டிலுள்ள மரம்; tree in a reserved forest (C.G.).

**மன்னாட்டு** *mannāṭṭu,* பெ.(n.) மன்றாட்டு (வின்.) பார்க்க; see *manrāṭṭu.*

*[மன்றாட்டு→மன்னாட்டு.]*

**மன்னாடி** *mannāḍi,* பெ.(n.) 1. மலைநாட்டு சிற்றூர்த் தலைவன்; headman of a hill village. 2. பழனிப் பகுதியிலுள்ள ஒரு மலைச்சாதி; the kuvvava caste of the Palani hills. 3. மன்றாடி[4] பார்க்க; see *manrāḍi.*

*[மன்→மன்றாடி.]*

**மன்னாடு-தல்** *mannāḍu-,*5 செ.கு.வி.(v.i.) மன்றாடு–, (இ.வ.) பார்க்க; see *manrāḍu.*

*[மன்றாடு→மன்னாடு.]*

**மன்னாப்புக்குற்றவாளி** *mannāppu-k-kurravāḷi,* பெ.(n.) அரசால் மன்னிப்புப் பெற்றுச் சாட்சி கூறும் குற்றவாளி; approver, accused who has been tendered a pardon.

*[மன்னாப்பு + குற்றவாளி. மன்னிப்பு → மன்னாப்பு (கொ.வ.).]*

**மன்னார்** *mannār,* பெ.(n.) பகைவர் (சூடா.); enemies, foes.

*[முன் → மன். மன்னுதல் = பொருந்துதல். மன் → மன்னார் = பகைவர்.]*

**மன்னார்சாமி** *mannār-šāmi,* பெ.(n.) 1. சிற்றூர்த் தெய்வம் (இ.வ.); a village deity. 2. அரசனுருக் கொண்ட சிவ வடிவம் (இ.வ.); *Šivān*in the form of a king.

*[மன்னார் + சாமி.]*

**மன்னாவுலகம்** *mannā-v-ulagam,* பெ.(n.) துறக்கம்; svarga. *"மன்னாவுலக மறுத்தோய் நீ" (சீவக.1243).*

*[முன் → மன் = பொருந்துதல்., நிலைபெறுதல். மன் → மன்னா. 'ஆ' எதிர்மறை இடைநிலை. மன்னா + உலகம்.]*

**மன்னான்** *mannān,* பெ.(n.) திருவிதாங்கூர்ச் சீமையில் தமிழ் பேசும் ஒரு மலைச்சாதி (E.T.iv.452); a Tamil - speaking hill tribe fo Travancore.

**மன்னி–த்தல்** *manni,* 4 செ.குன்றாவி.(v.t.) குற்றத்தைப் பொறுத்தல்; to forgive, pardon. *"கொடியேன் குற்றமெலா மன்னித்தருளி" (அருட்பா.)*

**மன்னிப்பு** *mannippu,* பெ.(n.) குற்றத்தைப் பொறுக்கை (இ.வ.); pardon, forgiveness.

**மன்னியர்** *manniyar,* பெ.(n.) மதிக்கத் தக்கவர்; exteemed, worthy person. *"பல மன்னியர் மண்டலிகர்" (உத்தரரா. திருவோலக்.11).*

*[முள் → மள். மன்னுதல் = பொருந்துதல். மன் → மன்னியர்.]*

**மன்னியை** *manniyai,* பெ.(n.) 1. பிடர் நரம்பு; nerve in the nape of the neck. 2. விசை நரம்பு; vital nerve.

**மன்னிறைதருதல்** *mannirai-tarudal,* பெ.(n.) வேளாண் மாந்தரியல்புகளு ளொன்றான அரசனுக்குரிய வரிப் பொருளைத் தருகை (திவா.); paying taxes due to the king, a characteristic of the *Vēlālas.*

*[மன் + இறை + தருதல்.]*

**மன்னினை** *manninai,* பெ.(n.) வரித் தள்ளுபடி; remission of tax. *"வரி மன்னினைக் குடி".*

**மன்னு¹–தல்** *mannu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. நிலை பெறுதல்; to be permanent, to endure. *"மன்னர்க்கு மன்னுதல் செங்கோண்மை" (குறள், 556).* 2. தங்குதல்; to remain long, to stay. *"உத்திரை வயிற்றின் மன்னிய குழவி" (பாகவத.1, பரிட்சத்துவின்றோ.1).* 3. பொருந்துதல்; to agree. *"மன்ன சொகினம்" (பு.வெ.10, 11).* 4. விடாது முயலுதல் (வின்.); to persevere. 5. உறுதியாய் நிற்றல் (வின்.); to be steady. 6. மிகுதல்; to abound. *"மன்னிய வேதந்தரும்" (ஆசாரக்.96).*

L. manere = stay. L. remanere; E. remain.

*[முல் → மல் → மன் → மன்னு–, (வே.க.4:31).]*

**மன்னு²–தல்** *mannu,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. அடுத்தல்; to go near, approach. 2. ஆடையை தூக்கிப் பிடித்துக் கொள்ளுதல் (இ.வ.); to pull or tuck up one's clothes, as in crossing a river. *சீலையை மன்னிக்கொள் (உ.வ.).*

மன்னும்[1] *mannum,* வி.எ.(adv.) பெரும்பான்மையையும் (திருக்கோ.131, உரை); probably, exceedingly.

*[மன் →மன்னும்.]*

மன்னும்[2] *mannum,* இடை.(part.) ஓரிடைச்சொல்; an expletive. *"காதலார் பெயர் மன்னும்" (சிலப்.மங்கலவா.29).*

மன்னுமான் *mannu-mān,* பெ.(n.) கடவுள் (வின்.); god, as the eternal being.

*[மன்னு + மான்.]*

மன்னுயிர் *mannuyir,* பெ.(n.) 1. மாந்தவினம்; humanity. *"நின்னளந் தறிதன் மன்னுயிர்க் கருமையின்" (திருமுரு.278).* 2. விலங்கினம் (வின்.); animal life. 3. ஆதன் (வின்.);soul.

*[மன் + உயிர்.]*

மன்னுயிர்முதல்வன் *mannuyir-mudalvan,* பெ.(n.) கடவுள்; god.

*[மன்னுயிர் + முதல்வன்.]*

மன்னுலகம் *mannulagam,* பெ.(n.) மன்னுலகு பார்க்க (வின்.); see *mannulagu.*

*[மன் + உலகம்.]*

மன்னுலகு *mannulagu,* பெ.(n.) (பிங்.) துறக்கம்; svarga.

*[மன் + உலகு.]*

மன்னுறுதொழில் *mannuṟu-toḻil,* பெ.(n.) வீரன் அரசன் கட்டளை பெற்றுப் பகைவரின் ஆநிரை கவர்தலைக் கூறும் புறத்துறை (பு.வெ.1, 1); theme describing the capture of enemies cows by kings soldiers under his orders, dist. fr. *tan-n-uṟu-toḻil.*

*[மன்னுறு + தொழில்.]*

மன்னெச்சி *mannecci,* பெ.(n.) 1. சினக்குறிப்பு; gruff, surly, pouting countenance. 2. மனத்தொல்லை (யாழ். அக.); mental trouble.

மன்னை[1] *mannai,* பெ.(n.) மன்னைக் காஞ்சி (தொல்.பொருள்.79) பார்க்க; see *mannai-k-kāñji.*

*[மன்னைக்காஞ்சி→மன்னை (குறுக்கம்).]*

மன்னை[2] *mannai,* பெ.(n.) 1. தொண்டை; throat. *துவர்ப்புச் சுவை மன்னையைப் பிடிக்கிறது (பே.வ.).* 2. கதுப்பு (யாழ்.அக.); cheek.

மன்னை[3] *mannai,* பெ.(n.) சினம் (யாழ்ப்.); displeasure.

மன்னைக்கட்டி *mannai-k-kaṭṭi,* பெ.(n.) பொன்னுக்கு வீங்கி என்னும் நோய்; mumps.

*[மன்னை + கட்டி.]*

மன்னைக்காஞ்சி *mannai-k-kāñji,* பெ.(n.) இறந்தவனைப் பற்றிச் சிறப்பித்து ஏனையோர் இரங்கிக் கூறும் புறத்துறை (தொல். பொருள்.79, உரை); theme describing the excellence of the qualities of a deceased person and mourning his loss.

*[மன்னை + காஞ்சி.]*

மன்னைப்பிடி[1] *mannai-p-piḍi,* பெ.(n.) தொண்டையை இறுகப் பிடிக்கை; seizing by the throat. *"மண்டிப்பொரு விசயன் மன்னைப் பிடி பிடிக்க" (தேவை.80).*

*[மன்னை + பிடி.]*

**மன்னைப்பிடி²–த்தல்** *mannai-p-piḍi-,* 4 செ.கு.வி.(v.t.) 1. தொண்டையைப் பிடித்தல்; to seize one by the throat. 2. ஒருவனைத் தாங்கிக் கேட்டுக் கொள்ளுதல் (இ.வ.); to beseech a person, as by holding him by his cheek.

*[மன்னை + பிடி–,]*

**மன¹** *mana,* வி.எ.(adv.) மிகவும்; exceedingly. *"அஃதவல் மன்று மன" (கலித்.108).*

**மன²** *mana,* இடை.(part.) வினைமுற்று வினையெச்சங்கட்கு இறுதியாக வரும் இடைச்சொல் (தொல்.எழுத்து.210); affix to a participle or finite verb.

**மனக்கசப்பு** *mana-k-kacappu,* பெ.(n.) வெறுப்பு (கொ.வ.); rancour, hatred, bitterness of mind.

*[மனம் + கசப்பு.]*

**மனக்கசிவு** *mana-k-kacivu,* பெ.(n.) மனவுருக்கம் (இ.வ.) பார்க்க; see *mana-v-urukkam.*

*[மனம் + கசிவு.]*

**மனக்கடினம்** *mana-k-kaḍinam,* பெ.(n.) நெஞ்சழுத்தம் (வின்.); strenness, handness of heart.

*[மனம் + கடினம்.]*

**மனக்கடுப்பு** *mana-k-kaḍuppu,* பெ.(n.) உட்சினம்; indignation, resentment. *"சீற்றவெந் தீயினான் மனக் கடுப்பினன்" (கம்பரா.சினைகண்டு.3).*

*[மனம் + கடுப்பு.]*

**மனக்கண்** *mana-k-kaṇ,* பெ.(n.) மனமாகிய கண் (வின்.); mind's eye, mental vision.

*[மனம் + கண்.]*

**மனக்கயக்கம்** *mana-k-kayakkam,* பெ.(n.) மனத்துயர் (யாழ்.அக.) பார்க்க; see *mana-t-tuyar.*

*[மனம் + கயக்கம். கய–த்தல் → கயக்கும்.]*

**மனக்கயம்** *mana-k-kayam,* பெ.(n.) முசுறுப் புல்; a kind of grass (சா.அக.).

**மனக்கரு** *mana-k-karu,* பெ.(n.) மனத்தின் மூலம்; the origin of mind (சா.அக.).

**மனக்கருவி** *mana-k-karuvi,* பெ.(n.) மனத்தின் வலு; intellectual faculty (சா.அக.).

*[மனம் + கருவி.]*

**மனக்கலக்கம்** *mana-k-kalakkam,* பெ.(n.) மனந்தடுமாறுகை (வின்.); perturbation, agitation of mind.

*[மனம் + கலக்கம்.]*

**மனக்கவலை** *mana-k-kavalai,* பெ.(n.) ஒன்றைப் பற்றி மனத்திலுண்டாம் கவலை; anxiety, care. *"மனக்கவலை மாற்றலரிது" (குறள், 7).*

*[மனம் + கவலை.]*

**மனக்கவற்சி** *mana-k-kavaṟci,* பெ.(n.) மனக்கவலை பார்க்க; see *mana-k-kavalai. "மனக் கவற்சியை யுடைய பெண்டிர்" (மதுரைக்.166, உரை).*

*[மனம் + கவற்சி. முன் → மன் → மனம். கவல் = பிளவு, வருத்தம். கவல் + சி = கவற்சி. 'சி' பண்புப் பெயரீறு.]*

**மனக்களிப்பு** *maṉa-k-kaḷippu,* பெ.(n.) அகமகிழ்ச்சி (வின்.); elation of spirits, heart - felt joy.

*[மனம் + களிப்பு. முன் →மன்→மனம். களி = மகிழ்ச்சி. களி + பு = களிப்பு.]*

**மனக்கறுப்பு** *maṉa-k-kaṟuppu,* பெ.(n.) பகை (வின்.); hatred, enmity.

*[மனம் + கறுப்பு. முன்→மன்→மனம். கல்→கர் →கரு→கறு. கறு→கறுப்பு = கருமை, சினம், குற்றம்.]*

**மனக்கனிவு** *maṉa-k-kaṉivu,* பெ.(n.) மனவுருக்கம் பார்க்க; see *maṉa-v-urukkam.*

*[மனம் + கனிவு. முன்→மன்→மனம்.கனி →கனிவு.]*

**மனக்காட்சி** *maṉa-k-kāṭci,* பெ.(n.) மனத்தால் உன்னும் காட்சி; mind perception. *"மனாதிகளினாற் காண்டன் மனக்காட்சி" (தத்துவப்.2).*

*[மனம் + காட்சி.]*

**மனக்காய்ச்சல்** *maṉa-k-kāyccal,* பெ.(n.) மனவெரிச்சல் (யாழ்.அக.) பார்க்க; see *maṉa-v-ericcal.*

*[மனம் + காய்ச்சல்.]*

**மனக்காவல்** *maṉa-k-kāval,* பெ.(n.) கற்பினைக் காக்கும் மனநிறை; strength of mind, as the guard of chastity. *"கற்புக்கு மதிட் காவலா, மனக்காவலா" (பழ.).*

*[மனம் + காவல்.]*

**மனக்கிடக்கை** *maṉa-k-kiḍakkai,* பெ.(n.) உள்ளக் கருத்து (வின்.); idea, inclination, thought.

*[மனம் + கிடக்கை.]*

**மனக்கிடை** *maṉa-k-kiḍai,* பெ.(n.) மனக் கிடக்கை (வின்.) பார்க்க; see *maṉa-k-kiḍakkai.*

*[மனம் + கிடை.]*

**மனக்கிளர்ச்சி** *maṉa-k-kiḷarcci,* பெ.(n.) உள்ளக் கிளர்ச்சி; mental emotion.

*[மனம் + கிளர்ச்சி.]*

**மனக்குத்து** *maṉa-k-kuttu,* பெ.(n.) மனத் துயர் (யாழ்.அக.); பார்க்க; see *maṉa-t-tuyar.*

*[மனம் + குத்து.]*

**மனக்குரங்கு** *maṉa-k-kuraṅgu,* பெ.(n.) மனம்போன போக்கின்படி செய்யத்தூண்டும் தன்மை; a state of mind which is not firm but goes in many diverse ways.

*[மனம் + குரங்கு.]*

**மனக்குருடு** *maṉa-k-kuruḍu,* பெ.(n.) அறிவின்மை (வின்.); mental blindness.

*[மனம் + குருடு.]*

**மனக்குலைவு** *maṉa-k-kulaivu,* பெ.(n.) மனத்தடுமாற்றம்; perturbation of mind.

*[மனம் + குலைவு.]*

**மனக்குவிவு** *maṉa-k-kuvivu,* பெ.(n.) 1. மனம் ஒருப்படல்; unity of mind. 2. மனதின் ஒருமை; concentration or oneness of mind.

*[மனம் + குவிவு.]*

மனக்குழப்பம்[1] *mana-k-kulappam,* பெ.(n.) 1. மனத் தெளிவின்மை; confusion of mind. 2. ஒருமிப்பின்மை; diversion of mind.

*[மனம் + குழப்பம்.]*

மனக்குழப்பம்[2] *mana-k-kulappam,* பெ.(n.) மனக்கலக்கம் (கொ.வ.) பார்க்க; see *mana-k-kalakkam.*

*[மனம் + குழப்பம்.]*

மனக்குள்ளம் *mana-k-kullam,* பெ.(n.) 1. தந்திரம்; trick. 2. வஞ்சகம்; deceit.

*[மனம் + குள்ளம்.]*

மனக்குறிப்பு *mana-k-kurippu,* பெ.(n.) 1. உட்கருத்து; idea, intention. *"நின் மனக்குறிப்பை நின் முகந்தானே காட்டிக் கொடாநிற்கும்" (களா.95, உரை).* 2. மனத் திட்டம், 1 பார்க்க; see *mana-t-tittam.*

*[மனம் + குறிப்பு.]*

மனக்குறை *mana-k-kurai,* பெ.(n.) 1. வருத்தம்; grief. *"மனக்குறையைச் சகியே சொன்னேன்" (தனிப்பா.1, 326, 24).* 2. பொந்திகையின்மை (வின்.); dissatisfac tion, discontent, unbrage.

*[மனம் + குறை.]*

மனக்கூர்மை *mana-k-kūrmai,* பெ.(n.) கூர்த்த அறிவு (யாழ்.அக.); sagacity, acumen.

*[மனம் + கூர்மை.]*

மனக்கொதி *mana-k-kodi,* பெ.(n.) மன வெரிச்சல் (யாழ்.அக.) பார்க்க; see *mana-v-ericcal.*

*[மனம் + கொதி.]*

மனக்கொதிப்பு *mana-k-kodippu,* பெ.(n.) சினம்; anger.

*[மனம் + கொதிப்பு.]*

மனக்கொள்(ளு)-தல் *mana-k-kol-,* 16 செ.கு.வி.(v.i.) நன்கறிதல்; to understand, to realise. *"இதனை மனக் கொணீ" (கம்பரா.சூளை.29).*

*[மனம் + கொள்–.]*

மனக்கோட்டம் *mana-k-kōttam,* பெ.(n.) 1. அறிவின் கோணல்; crookednes of mind. *"மாந்தர் மனக்கோட்டந் தீர்க்குநூன் மாண்பு " (நன்.25).* 2. அழுக்காறு (பிங்.); envy, jealousy.

*[மனம் + கோட்டம்.]*

மனக்கோட்டரவு *mana-k-kōttaravu,* பெ.(n.) துணிவுக் குறைவு (வின்.); lowness of spirits.

*[மனக்கோட்டம் + அரவு.]*

மனக்கோட்டை[1] *mana-k-kōttai,* பெ.(n.) புலவி நீட்டம்; long sulks. *"அழிந்த மனக் கோட்டையர்" (பரிபா.10, 57).*

*[மனம் + கோட்டை.]*

மனக்கோட்டை[2] *mana-k-kōttai,* பெ.(n.) வீணெண்ணம் (கொ.வ.); building castles in the air, vain imaginings. *"அருப்ப மழிப்ப வழிந்த மனக் கோட்டையர்" (பரிபா.10:57).*

*[மனம் + கோட்டை.]*

மனக்கோண் *mana-k-kōn,* பெ.(n.) அழுக்காறு (நாமதீப.615); envy.

*[மனம் + கோண். மன் → மனம். கோணல் → கோண்.]*

**மனக்கோழை** *mana-k-kōḻai,* பெ.(n.) துணிவற்றவ-ன்-ள்; coward. *"எதிரி வரினோடிப் பதுங்கிடு மனக்கோழை" (அறப்.சத.12).*

*[மனம் + கோழை.]*

**மனக்கோள்** *mana-k-kōḷ,* பெ.(n.) மனக்குறிப்பு பார்க்க; see *mana-k-kuṟippu. "மனக் கோணினக்கென வடிவு வேறிலையே" (பரிபா.4, 56).*

*[மனம் + கோள்.]*

**மனக்கோளாறு** *mana-k-kōḷāṟu,* பெ.(n.) மனக்கேடு; mental disorder.

*[மனம் + கோளாறு.]*

**மனங்கசி-தல்** *manaṅ-kaši-,* 2 செ.கு.வி. (v.i.) மனமிறங்குதல்; to melt, as the heart, to be tender.

*[மனம் + கசி-,]*

**மனங்கருகு-தல்** *manaṅ-karugu-,* 5 செ.கு.வி. (v.i.) வெறுப்படைதல் (வின்.); to be displeased.

*[மனம் + கருகு-,]*

**மனங்கரைதல்** *manaṅ-karai-,* பெ.(n.) 1. நெஞ்சிளகுகை; to melt, as the heart. 2. பின்னிரங்குகை (வின்.); to relent. 3. துயரப்படுகை (யாழ்.அக.); to be sorry.

*[மனம் + கரை.]*

**மனங்கனி-தல்** *manaṅ-kaṉi-,* 2 செ.குன்றாவி. (v.t.) 1. அறிவு முதிர்ச்சி; maturity of mind. 2. சினந்தணிதல்; changing from angry. 3. இரக்கங் கொள்ளுதல்; to have sympathy.

*[மனம் + கனி-,]*

**மனங்கு** *manaṅgu,* பெ.(n.) தோட்பட்டை (யாழ்.அக.); shoulder blade.

**மனங்குத்துதல்** *manaṅ-kuttudal,* பெ.(n.) தன் குற்றம் பற்றி மனத்தில் தோன்றும் கழிவிரக்கம் (வின்.), குற்றவுணர்வு; remorse, compunction of mind, prick of conscience, guilty.

*[மனம் + குத்துதல்.]*

**மனங்குவி-தல்** *manaṅ-kuvi-,* 2 செ.கு.வி. (v.i.) 1. மனவமைதி கொள்ளுதல் (யாழ்.அக.); to attain peace of mind or tranquillity. 2. மனமொடுங்குதல்; to be depressed in spirits. *"நின்னைக் கண்டு மனங்குவிந்த என்னுடைய" (கலித்.118, உரை).*

*[மனம் + குவி-,]*

**மனங்குழை-தல்** *manaṅ-kuḻai-,* 2 செ. குன்றாவி. (v.t.) மனமிளகுதல்; to melt, as the heart.

*[மனம் + குழை-,]*

**மனங்குறாவு-தல்** *manaṅ-kuṟāvu-,* 5 செ.கு.வி. (v.i.) வெறுப்படைதல் (வின்.); to be piqued or dissatisfied, to take umbrage.

*[மனம் + குறாவு-,]*

**மனங்குன்று-தல்** *manaṅ-kuṉṟu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. மனம் ஒடுங்குதல்; converging of mind. 2. மனத் தளர்ச்சி; dejection of mind.

*[மனம் + குன்று-,]*

**மனங்கூசு-தல்** *manaṅ-kūšu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. மனம் பின்னடைதல்; to be shy,

diffident. 2. ஒரு செயலைச் செய்ய தயக்கம் காட்டுதல்; repugnance of action.

*[மனம் + கூசு-,]*

**மனங்கூம்பு-தல்** *manaṅ-kūmbu-*,5 செ.கு.வி. (v.i.) 1. ஊக்கங் குன்றுதல்; to be weary or dejected. 2. மனங்குவி-, 1 (யாழ்.அக.) பார்க்க; see *manaṅ-kuvi.*

*[மனம் + கூம்பு-,]*

**மனங்கொதி-த்தல்** *manaṅ-kodi-*, 4 செ.கு.வி.(v.i.) 1. சினங் கொள்ளுதல்; to fret with anger. 2. துயருறுதல்; to grieve. 3. பேராவல் கொள்ளுதல்; to yearn.

*[மனம் + கொதி-,]*

**மனங்கொள்(ளு)-தல்** *manaṅ-koḷ-*, 7 செ.குன்றாவி.(v.t.) 1. மனத்திற் கொள்ளுதல்; to will. 2. விரும்புதல்; to desire.

*[மனம் + கொள்-,]*

**மனங்கோணு-தல்** *manaṅ-kōṇu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. மனம் மாறுதல்; to be changed in mind. *"மற்றவர் மனங்கோணாதவாறு நடந்து கொள்ள வேண்டும்" (உ.வ.).* 2. வெறுப்படைதல்; to be offended, to be discontented, to be cross or vexed. 3. சினங் கொள்ளுதல் (இ.வ.); to be angry.

*[மனம் + கோணு-தல்,]*

**மனச்சஞ்சலம்** *mana-c-cañcalam*, பெ.(n.) மனக்குழப்பம் (வின்.); mental worry, wavering of mind.

*[மனம் + Skt. சஞ்சலம்.]*

**மனச்சலனம்** *mana-c-calanam*, பெ.(n.) மன அமைதியின்மை; unrest of mind.

*[மனம் + Skt. சலனம்.]*

**மனச்சலிப்பு** *mana-c-calippu*, பெ.(n.) 1. வெறுப்பு; vexation, annoyance, displeasure. 2. துயரம் (வின்.); grief.

*[மனம் + சலிப்பு.]*

**மனச்சாட்சி** *mana-c-cāṭci*, பெ.(n.) மனச்சான்று பார்க்க; see *mana-c-cāṉṟu.*

*[மனம் + Skt. சாட்சி.]*

**மனச்சாய்ப்பு** *mana-c-cāyppu*, பெ.(n.) மனச்சாய்வு பார்க்க; see *mana-c-cāyvu.*

*[மனம் + சாய்ப்பு.]*

**மனச்சாய்வு** *mana-c-cāyvu*, பெ.(n.) 1. மனப்போக்கு பார்க்க; see *mana-p-pōkku.* 2. ஒரு தலைச்சார்பு; partiality, prejudice.

*[மனம் + சாய்வு.]*

**மனச்சார்பு** *mana-c-cārbu*, பெ.(n.) 1. மனப்பற்று; attachment. 2. மனச்சாய்வு,1 (வின்.) பார்க்க; see *mana-c-cāyvu.*

*[மனம் + சார்பு.]*

**மனச்சான்று** *mana-c-cāṉṟu*, பெ.(n.) சரியா, தவறா என்று முடிவு கொள்ளும் உள் மனம்; conscience.

*[மனம் + சான்று.]*

**மனச்சிலை** *mana-c-cilai*, பெ.(n.) காரமும் கசப்பும் கலந்த சுவை; mixture of pungent and bitter taste (சா.அக.).

*[மனம் + சிலை.]*

**மனச்செருக்கு** *mana-c-cerukku,* பெ.(n.) 1. திமிர்; haughtiness. 2. மனக்களிப்பு பார்க்க; see *mana-k-kalippu.* *"மனச் செருக்கினை யுடைய குதிரை" (கலித்.75, உரை).*

*[மனம் + செருக்கு.]*

**மனச்சோர்வு[1]** *mana-c-cōrvu,* பெ.(n.) மனத்தளர்ச்சி; mental langour.

*[மனம் + சோர்வு.]*

**மனச்சோர்வு[2]** *mana-c-cōrvu,* பெ.(n.) ஊக்கக் குறைவு; disheartenment, weariness of mind, flagging of interest.

*[மனம் + சோர்வு.]*

**மனசிரங்குதல்** *manacirangu,* பெ.(n.) மனமிறங்கு—தல் பார்க்க; see *manam-irangu.*

*[மனமிறங்கு→மனசிறங்கு.]*

**மனஞ்சலிக்கவுண்(ணு)—தல்** *manañ-calikka-un-,* 16 செ.குன்றாவி.(v.t.) தன் ஆசைக்கேற்ப வுண்ணுதல்; eat to on's own desire.

*[மனம்சலிக்க + உண்–,]*

**மனத்தழுக்கம்** *mana-t-talukkam,* பெ.(n.) மனத்தழுக்கு (வின்.) பார்க்க; see *mana-t-talukku.*

*[மனது +அழுக்கம்.]*

**மனத்தழுக்கு** *mana-t-talukku,* பெ.(n.) பொறாமை (பிங்.); envy, jealous.

*[மனம் + அத்து + அழுக்கு.]*

**மனத்தளர்ச்சி** *mana-t-talarcci,* பெ.(n.) மனச்சோர்வு (யாழ்.அக.) பார்க்க; see *mana-c-cōrvu.*

*[மனம் + தளர்ச்சி.]*

**மனத்தாங்கல்** *mana-t-tāngal,* பெ.(n.) மனவருத்தம்; displeasure.

*[மனம் + தாங்கல்.]*

**மனத்தாராளம்** *mana-t-tāralam,* பெ.(n.) 1. பெருந்தன்மை; generosity. 2. மனத்தில் களங்கமின்மை; frankness open heartedness.

*[மனம் + தாராளம்.]*

**மனத்தாழ்மை** *mana-t-tālmai,* பெ.(n.) 1. பணிவான எண்ணத்துடனிருக்கை (வின்.); humility. 2. தன்னைத் தாழ்வாக மதித்துக் கொள்ளும் மனப்பான்மை; inferiority complex.

*[மனம் + தாழ்மை.]*

**மனத்திட்டம்** *mana-t-tittam,* பெ.(n.) 1. மதிப்பு; mental estimate, as of a person's abilities. 2. மனநேர்மை; sincerity.

*[மனம் + திட்டம்.]*

**மனத்திட்பம்** *mana-t-titpam,* பெ.(n.) மனத்திடம் பார்க்க; see *mana-t-tidam.*

*[மனம் + திட்பம்.]*

**மனத்திடம்** *mana-t-tidam,* பெ.(n.) மனவுறுதி; firmnes of mind, resoluteness.

*[மனம் + திடம்.]*

**மனத்திரிபு** *mana-t-tiribu,* பெ.(n.) மனத்திரிவு பார்க்க; see *mana-t-tirivu.*

**மனத்திரிவு** *mana-t-tirivu,* பெ.(n.) 1. மன மாற்றம்; change of mind. 2. திரிபான எண்ணங்கள்; oblique thinking.

*[மனம் + திரிவு.]*

**மனத்திருத்தி** *mana-t-tirutti,* பெ.(n.) மனப் பொருந்திகை பார்க்க; see *mana-p-pondigai.*

*[மனம் + திருத்தி.]*

**மனத்துக்கம்** *mana-t-tukkam,* பெ.(n.) மனத்துயர் பார்க்க; see *mana-t-tuyar.*

*[மனம் + துக்கம்.]*

**மனத்துடிப்பு** *mana-t-tuḍippu,* பெ.(n.) 1. மிகுந்த ஆசை; desire, fretting. 2. விரைவு (இ.வ.); hurry.

*[மனம் + துடிப்பு.]*

**மனத்துப்புரவு** *mana-t-tuppuravu,* பெ.(n.) மனத்தூய்மை (யாழ்.அக.) பார்க்க; see *mana-t-tūymai.*

*[மனம் + துப்புரவு.]*

**மனத்துயர்** *mana-t-tuyar,* பெ.(n.) துயரம்; grief or sorrow. *"மனத்துயரை மாய்க்கும் வகை" (திவ்.இயற்.பெரியதி.43).*

*[மனம் + துயர்.]*

**மனத்துன்பம்** *mana-t-tunbam,* பெ.(n.) துயரம்; distress of mind.

*[மனம் + துன்பம்.]*

**மனத்தூய்மை** *mana-t-tūymai,* பெ.(n.) 1. எண்ணத் தூய்மை; purity of mind. 2. மனத்தின் நேர்மை; sincerity.

*[மனம் + தூய்மை.]*

**மனத்தெளிவு** *mana-t-teḷivu,* பெ.(n.) மனத்தேற்றம் பார்க்க; see *mana-t-tēṟṟam.*

*[மனம் + தெளிவு.]*

**மனத்தேற்றம்** *mana-t-tēṟṟam,* பெ.(n.) 1. மனம் கலங்குதலின்மை (வின்.); clearness of mind. 2. உறுதியான எண்ணம்; firmness of mind.

*[மனம் + தேற்றம்.]*

**மனதுருக்கம்** *manaturukkam,* பெ.(n.) மனவுருக்கம் பார்க்க; see *mana-v-urukkam.*

*[மனம் →மனது + உருக்கம்.]*

**மனந்தளம்பு-தல்** *manan-taḷambu-,* 5 செ.கு.வி.(v.i) 1. மனம் நிலை தடுமாறுதல்; to vacillate, to be unstablein mind. 2. கவலையால் உள்ளம் வருந்துதல்; to be distressed with cases.

*[மனம் + தளம்பு-,]*

**மனந்தளர்-தல்** *manan-taḷar-,* 2 செ.கு.வி. (v.i.) 1. ஊக்கங் குறைதல்; to grow discouraged or dispirited. *"பித்தன் மனந்தளர்ந்தான்" (கம்பரா.நிகும்பலை.127).*

*[மனம் + தளர்-,]*

**மனந்திருந்து-தல்** *manan-tirundu-,* 5 செ.கு.வி.(v.i.) மன நேர்மைப்படுதல்; to change one's mind for the better, to reform in character.

*[மனம் + திருந்து-,]*

**மனந்திரும்பு-தல்** *manan-tirumbu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. மனம் மாறுதல் (வின்.); to

change in mind, to be converted. 2. (கிறித்.) செய்த குற்றத்திற்காக வருத்தப்படுதல்; to repent.

*[மனம் + திரும்பு-,]*

**மனந்தீய்-தல்** *manan-tiy-*, 2 செ.கு.வி. (v.i.) 1. ஏங்குதல்; to pine, languish. 2. மனம் புழுங்குதல்; to be distressed.

*[மனம் + தீய்-.]*

**மனநசிவு** *mana-naśivu,* பெ.(n.) மனக்குறை, 2 பார்க்க; see *mana-k-kurai*, 2.

*[மனம் + குறை.]*

**மனநடுக்கம்** *mana-nadukkam,* பெ.(n.) அச்சம்; fear.

*[மனம் + நடுக்கம்.]*

**மனநிதானம்** *mana-nidānam,* பெ.(n.) 1. மனத்திட்டம் பார்க்க; see *mana-t-tittam.* 2. மனத்திடம் பார்க்க; see *mana-t-tidam.*

*[மனம் + Skt.நிதானம்.]*

**மனநியாயம்** *mana-niyāyam,* பெ.(n.) மனச்சான்றுக்குரிய நயமை (யாழ்.அக.); dictates of conscience.

*[மனம் + **Skt.** நியாயம்.]*

**மனநிலை** *mana-nilai,* பெ.(n.) 1. உளப்பாங்கு; state of mind. *"தோன் குன்றி னுமுயர்ந்த தென்றான் மனநிலை கூறலாமோ" (கம்பரா. அங்கதன்றூ.10).* 2. மனம் ஒரு நிலையில் நிற்கை (வின்.); steadiness of mind, firmness of will.

*[மனம் + நிலை.]*

**மனநிறை** *mana-nirai,* பெ.(n.) 1. மனநிலை, 2 (யாழ்.அக.) பார்க்க; see *mana-nilai.* 2. மனங் கோடாமை (வின்.); imparitiality. 3. மனவடக்கம்; restraint of mind.

*[மனம் + நிறை.]*

**மனநெகிழ்ச்சி** *mana-negilcci,* பெ.(n.) பிறர் துயரம் அச்சம் முதலியவற்றின் உண்டாம் மன வேறுபாடு; emotion.

*[மனம் + நெகிழ்ச்சி.]*

**மனநெரிடு** *mana-neridu,* பெ.(n.) வஞ்சகம் (யாழ்.அக.); deceit, cunning.

*[மனம் + நெரிடு.]*

**மனநெரிவு** *mana-nerivu,* பெ.(n.) மனக்குறை, 2 (யாழ்.அக.) பார்க்க; see *mana-k-kurai.*

*[மனம் + நெரிவு.]*

**மனநெருடு** *mana-nerudu,* பெ.(n.) துயரத்தில் மனமகிழ்ச்சி இழக்கை (வின்.); crabbedness moroseness, sullenness.

*[மனம் + நெருடு.]*

**மனநேர்மை** *mana-nērmai,* பெ.(n.) மனத்தின் வஞ்சகமற்ற நிலை; sincerity, truthfulness.

*[மனம் + நேர்மை.]*

**மனநோ-தல்** *mana-nō-,* 17 செ.கு.வி.(v.i.) வருந்துதல் (வின்.); to regret, to feel remove.

*[மனம் + நோ-.]*

**மனநோக்கம்** *mana-nōkkam,* பெ.(n.) மனக்குறிக்கோள்; mental impression.

*[மனம் + நோக்கம்.]*

**மனநோய்** *maṉa-nōy*, பெ.(n.) 1. மன நலங்குன்றுதல்; mental disorder. 2. புறச்சிக்கல்களால் ஏற்படும் மன அழுத்தம்; depression of mind. 3. மன வருத்தம்; regret remorse distress of mind.

*[மனம் + நோய்.]*

**மனநோவு** *maṉa-nōvu*, பெ.(n.) மனநோய் பார்க்க; see *maṉa-nōy*.

*[மனம் + நோவு. நோய் →நோவு (கொ.வ.)]*

**மனப்படுத்து-தல்** *maṉa-p-paḍuttu-*, 5 செ.குன்றாவி.(v.t.) 1. இணக்குதல்; to cause to agree, to persuade. 2. மனப்பாடஞ் செய்தல் (இக்.வ.); to get by heart.

*[மனம் + படுத்து-.]*

**மனப்பதற்றம்** *maṉa-p-padaṟṟam*, பெ.(n.) மனநடுக்கம் (யாழ்.அக.) பார்க்க; see *maṉa-naḍukkam*.

*[மனம் + பதற்றம்.]*

**மனப்பதிப்பு** *maṉa-p-padippu*, பெ.(n.) மனவிருப்பம் (இ.வ.) பார்க்க; see *maṉa-viruppam*.

*[மனம் + பதிப்பு.]*

**மனப்பதைப்பு** *maṉa-p-padaippu*, பெ.(n.) 1. மனக்கவலை; anguishї intense anxiety. 2. மனவிருப்பம், 2 பார்க்க; ee *maṉa-viruppam*.

*[மனம் + பதைப்பு.]*

**மனப்பரிப்பு** *maṉa-p-parippu*, பெ.(n.) மனத்துயர் பார்க்க; see *maṉa-t-tuyar*. *"பகலிராப் பரவப் பெற்றேனினி யென்ன மலைப்பரிப்பே" (திவ்.திருவாய்.6, 4, 6).*

*[மனம் + பரிப்பு.]*

**மனப்பற்று** *maṉa-p-paṟṟu*, பெ.(n.) 1. விருப்பு; desire. 2. மனம் அழுந்தியிருக்கை; attachment of mind.

*[மனம் + பற்று.]*

**மனப்பாங்கு** *maṉa-p-pāṅgu*, பெ.(n.) மனநிலை (வின்.) பார்க்க; see *maṉa-nilai*.

*[மனம் + பாங்கு.]*

**மனப்பாடம்** *maṉa-p-pāḍam*, பெ.(n.) கற்றதை மறதியின்றிச் சொல்லும்படி நினைவில் பதிவு செய்து கொள்ளும் பாடம்; lesson learned and retained in the memory.

*[மனம் + பாடம்.]*

**மனப்பால்குடி-த்தல்** *maṉa-p-pāl-kuḍi-*, 4 செ.கு.வி.(v.i.) 1. கை கூடாதவற்றைப் பற்றி நெடுக எண்ணி அகமகிழ்தல்; to live in a fool's paradise. 2. பால் சுரத்தல் போன்று மனத்திற் சுரக்கும் எண்ணங்களைச் சுவைத்தல்; lit., to drink the milk of mind.

*[மனப்பால் + குடி-.]*

**மனப்பான்மை** *maṉa-p-pāṉmai*, பெ.(n.) எண்ணப்போக்கு; cast of mind, attitude.

*[மனம் + பான்மை.]*

**மனப்பிடிப்பு** *maṉa-p-piḍippu*, பெ.(n.) மனப் பற்று (இ.வ.) பார்க்க; see *maṉa-p-paṟṟu*.

*[மனம் + பிடிப்பு.]*

**மனப்பிரமை** *maṉa-p-piramai*, பெ.(n.) மனமயக்கம் பார்க்க; see *maṉa-mayakkam*.

*[மனம் + Skt. பிரமை.]*

மனப்பிராந்தி *maṉa-p-pirāndi,* பெ.(n.) மனமயக்கம் பார்க்க; see *maṉa-mayakkam.*

*[மனம் + **Skt.** பிராந்தி.]*

மனப்பிரிப்பு *maṉa-p-pirippu,* பெ.(n.) மனக்கலக்கம் பார்க்க; see *maṉa-k-kalakkam. "மயக்கிவிடினும் மனப்பிரிப் பொன்றின்றித் துளக்க மிலாதவர்" (நாலடி, 189).*

*[மனம் + பிரிப்பு.]*

மனப்பிணி *maṉa-p-piṇi,* பெ.(n.) மனநோய் ; mental aborration.

*[மனம் + பிணி.]*

மனப்பித்து *maṉa-p-pittu,* பெ.(n.) மனக் குழப்பம், அறிவுப் பிறழ்ச்சி; a mental disease characterised by systenatised delusion - *paranoia* (சா.அக.).

*[மனம் + **Skt.** பித்து.]*

மனப்பூர்வமாய் *maṉa-p-pūrvamāy,* வி.எ. (adv.) மனமார பார்க்க; see *maṉamāra.*

மனப்பூரணம் *maṉa-p-pūraṇam,* பெ.(n.) 1. முழுமனம்; whole - heartedness. 2. மனத்திருத்தி; contentment. 3. மிகு களிப்பு (வின்.); exquisite joy, hilarity. 4. மன நேர்மை (வின்.); ingenousness.

*[மனம் + **Skt.** பூரணம்.]*

மனப்பேய் *maṉa-p-pēy,* பெ.(n.) அறிவு மயக்கம் (யாழ்.அக.); delusion.

*[மனம் + பேய்.]*

மனப்பைத்தியம் *maṉa-p-paittiyam,* பெ.(n.) நினைவு தடுமாற்றம்; mental aberration.

*[மனம் + **Skt.** பைத்தியம்.]*

மனப்பொருத்தம் *maṉa-p-poruttam,* பெ. (n.) தன் மனத்துக்கு ஏற்றதாகை (வின்.); being in accordance with one's mind.

*[மனம் + பொருத்தம்.]*

மனப்பொறுப்பு *maṉa-p-poṟuppu,* பெ.(n.) பொறுத்துக் கொள்ளும் மனப்பான்மை (வின்.); forbearance.

*[மனம் + பொறுப்பு.]*

மனப்போக்கு *maṉa-p-pōkku,* பெ.(n.) மனம்போகும் வழி; inclination, prospensity.

*[மனம் + போக்கு.]*

மனம் *maṉam,* பெ.(n.) 1. நெஞ்சம்; mind, will, the reasoning faculty. *"மனத்தொடு வாய்மை மொழியின்" (குறள், 295).* 2. எண்ணம்; purpose, intention, sentiment. *"போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து" (பழ.).* 3. நினைவு கூர்கை (வின்.); memory. 4. விருப்பம்; desire. 5. இந்துப்பு (யாழ்.அக.); rock salt.

*[முள் → முல் → முன் → முன்னுதல் = பொருந்துதல், கருதுதல். முன் → முன்னம் = கருத்து, குறிப்பு. முள் → மள். மன்னுதல் = பொருந்துதல், கருதுதல். மன் → மனம் = கருதும் அகக்கரணம் (மு.தா.185).]*

மனம்பேதி-த்தல் *maṉam-pēdi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. கருத்து வேறுபடுதல்; to be at variance, to disagree in opinion. 2. மனங்கலங்குதல்; to be distracted in mind.

*[மனம் + பேதி-.]*

**மனம்பொங்கு-தல்** *manam-pongu-,* 7 செ.கு.வி.(v.i.) 1. மனம் அலைவுறுதல்; to be excited in mind, as from joy or sorrow. 2. சினங் கொள்ளுதல்; to be enraged. 3. உணர்ச்சி மேலிடுதல்; to feel more.

*[மனம் + பொங்கு-,]*

**மனம்பொருந்து-தல்** *manam-porundu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. ஒத்துக்கொள்ளுதல்; to consent. 2. ஏற்பிசைவுசெய்தல்; to approve, to accept. 3. மனமொற்றுமை யாதல்; to be in accordance with one's mind.

*[மனம் + பொருந்து-.]*

**மனம்போனபோக்கு** *manam-pōna-pōkku,* பெ.(n.) சிந்தை சென்ற வழியே செல்லுகை; attitude of go-as-you-please. *"மனம் போன போக்கெல்லாம் போக வேண்டாம்" (உலகநீதி.).*

*[மனம்போன + போக்கு.]*

**மனமகிழ்ச்சி** *mana-magilcci,* பெ.(n.) அகக்களிப்பு; cheerfulness, joy, hilarity.

*[மனம் + மகிழ்ச்சி.]*

**மனமடிவு** *mana-madivu,* பெ.(n.) 1. மனச் சோர்வு பார்க்க; see *mana-c-cōrvu.* 2. மனம் அழிகை; pain of mind, mortification, disgust.

*[மனம் + மடிவு.]*

**மனமலர்ச்சி** *mana-malarcci,* பெ.(n.) மனமகிழ்ச்சி (வின்.) பார்க்க; see *mana-magilcci.*

*[மனம் + மலர்ச்சி.]*

**மனமறிய** *manamariya,* பெ.(n.) 1. நெஞ்சறிய, நினைவு தெறிந்த நிலையில்; knowingly, wilfully. *"மனசறியக் குற்றஞ் செய்ய மாட்டான்".* 2. மனச்சான்றுபடி; conscientiously. *"மனசறியத் தெரிந்ததை ஒளிக்கக் கூடாது".*

*[மனம் → மனசு + அறிய.]*

**மனமறுக்கம்** *mana-marukkam,* பெ.(n.) மனத்துயர் பார்க்க; see *mana-t-tuyar.*

*[மனம் + மறுக்கம்.]*

**மனமாசு** *mana-māšu,* பெ.(n.) மனக்குற்றம்; impurity of mind. *"சினமா சொழித்து மனமாசு தீர்த்தாங்கு" (மணிமே.9:59).*

*[மனம் + மாசு.]*

**மனமாதகி** *mana-mādagi,* பெ.(n.) மலை; mountain (சா.அக.).

**மனமாயிரு-த்தல்** *manamā-y-iru,* 4 செ.கு.வி.(v.i.) 1. எண்ணங் கொள்ளுதல் (வின்.); to be willing. 2. ஒப்புதல்; to agree. 3. பொந்திகையாதல்; to get satisfied.

*[மனம் →மனசு (கொ.வ.)→மனசாயிரு-.]*

**மனமிடுக்கு** *mana-midukku,* பெ.(n.) மனத்திடம் (யாழ்.அக.) பார்க்க; see *mana-t-tidam.*

*[மனம் + மிடுக்கு.]*

**மனமிளகு-தல்** *manam-ilagu-,* 7 செ.கு.வி. (v.i.) மனமிறங்கு பார்க்க; see *mana-mirangu.*

*[மனம் +இளகு-.]*

**மனமிறங்கு-தல்** *manam-irangu-,*5 செ.கு.வி. (v.i.) இரக்கத்தின் கரணியமாகவோ நற்செயல்கரணியமாகவோ ஒருவர் மேல் கொண்ட விடாப்பிடியான சினத்தைத் தவிர்த்தல்; to melt or to become soft as of mind.

*[மனம் + இறங்கு-,]*

**மனமிறுகு-தல்** *manam-irugu,*5 செ.கு.வி. (v.i.) 1. மனம் கடினமாதல்; to be hardened in mind. 2. கருமி குணங் கொள்ளுதல்; to be miserly or ungenerous. *"மனமிறுகியாசை யானராய்" (திருப்பு.790).*

*[மனம் + இறுகு-,]*

**மனமுடை-தல்** *manam-udai-,* 2 செ.கு.வி. (v.i.) மனமுறி-, பார்க்க; see *mana-muri.*

*[மனம் + உடை-,]*

**மனமுளை-தல்** *manam-ulai-,*2 செ.கு.வி. (v.i.) மனம் வருந்துதல்; to be pained in mind.

*[மனம் + உளை-,]*

**மனமுறி-தல்** *manam-muri-,*2 செ.கு.வி. (v.i.) துன்பத்தால் மனமகிழ்வு குன்றுதல்; to be broken hearted, dispirited or discouraged. *"பொருட்சேத நேரவே அவன் மனமுறிந்தான்" (உ.வ.).*

*[மனம் + முறி-.]*

**மனமுறிவு** *manam-murivu,* பெ.(n.) ஊக்கமிழக்கை (யாழ்.அக.); discouragement, broken-heartedness.

*[மனம் + முறிவு.]*

**மனமுறுத்து-தல்** *manam-uruttu-,*5 செ. குன்றாவி.(v.t.) பிறர் மனத்தைப் புண்படுத்துதல் (வின்.); to wound one's feelings.

*[மனம் + உறுத்து-,]*

**மனமேட்டிமை** *manamēṭṭimai,* பெ.(n.) மனச்செருக்கு; haughtiness.

*[மனம் + மேட்டிமை.]*

**மனவஞ்சனை** *manavañjanai,* பெ.(n.) ஓரம் (யாழ்.அக.); partiality.

*[மனம் + அஞ்சனை.]*

**மனவலி** *manavali,* பெ.(n.) மனத்திடம் பார்க்க; see *mana-t-tiḍam. "மனவலி யிளைத்தும்" (பிரமோத்.4, 11).*

*[மனம் + வலி.]*

**மனவிருப்பம்** *mana-viruppam,* பெ.(n.) 1. ஆசை; heart's desire. 2. மனத்திற்கு உகந்தது (வின்.); choice learning.

*[மனம் + விருப்பம்.]*

**மனவிழி** *mana-vili,* பெ.(n.) இசைப்பாட்டு வகை (சது.); a kind of song.

*[மனம் + விழி.]*

**மனவு** *manavu,* பெ.(n.) 1. மணி; gem. *"மனவிரி யல்குலார்தம்" (சீவக.466).* 2. அக்கமணி; mock pearl, chank bead. *"மனவுச்சூலு டும்பின்வறை" (பெரும்பாண். 132).* 3. சங்கு (சூடா.); conch. 4. அறையிற்கட்டும் பட்டிகை; girdle for the waist. *"மனவேயக லல்குல் வல்லியன்னாள்" (தஞ்சைவா.373).* 5. புடவை (சங்.அக.); woman's saree.

மனவுருக்கம் *maṉa-v-urukkam,* பெ.(n.) மனமிளகுகை; tenderness of mind.

*[மனம் + உருக்கம்.]*

மனவுறுதி *maṉa-v-uṟudi,* பெ.(n.) உறுதியான எண்ணம்; firmness of mind, resoluteness.

மனவூக்கம் *maṉa-v-ūkkam,* பெ.(n.) மனத்திடம் (வின்.) பார்க்க; see *maṉa-t-tiḍam.*

*[மனம் + ஊக்கம்.]*

மனவெரிச்சல் *maṉa-v-ericcal,* பெ.(n.) பொறாமை (வின்.); jealousy, heart-burning.

*[மனம் + எரிச்சல்.]*

மனவெழுச்சி *maṉa-v-eḻucci,* பெ.(n.) பெருமகிழ்ச்சி; excitement, exultation. *"தலைவன் இன்ப நுகர்கின்ற மன வெழுச்சியை" (கலித்.41, உரை).*

*[மனம் + எழுச்சி.]*

மனவெளி *maṉa-veḷi,* பெ.(n.) மன ஆளுமைக்குரிய இடம்; the mustic region of the mind. *"என் மன வெளியிற் கலந்து" (தாயு.பொருள்வணக்.10).*

*[மனம் + வெளி.]*

மனவேகம் *maṉa-vēgam,* பெ.(n.) 1. மனத்தின் விரைவு; swiftness, as of the mind. 2. சினம் (யாழ்.அக.); anger.

*[மனம் + வேகம்.]*

மனவொடுக்கம் *maṉa-v-oḍukkam,* பெ.(n.) 1. மனவொன்றிப்பு,1 பார்க்க; see *maṉa-v-oṉṟippu.* 2. அடக்கம்; modesty. 3. அமைதி; tranquillity.

*[மனம் + ஒடுக்கம்.]*

மனவொருக்கம் *maṉa-v-orukkam,* பெ.(n.) 1. ஐம்புலனடக்கம்; (yoga) withdrawal of the senses from external objects. 2. மனவொன்றிப்பு பார்க்க; see *maṉa-v-oṉṟippu.*

*[மனம் + ஒருக்கம்.]*

மனவொருமிப்பு *maṉa-v-orumippu,* பெ.(n.) மனவொன்றிப்பு (வின்.) பார்க்க; see *maṉa-v-oṉṟippu.*

*[மனம் + ஒருமிப்பு.]*

மனவொன்றிப்பு *maṉa-v-oṉṟippu,* பெ.(n.) 1. மனத்தை யொருமுகப்படுத்துகை; concentration. 2. மனவொற்றுமை (வின்.); union, harmony, concord.

*[மனம் + ஒன்றிப்பு.]*

மனனம்[1] *maṉaṉam,* பெ.(n.) 1. சிந்திக்கை; consideration, contemplation. *"மேன் மனனம்" (காசிக.இல்லொழு.7).* 2. நினைவில் வைக்கை; memorising. *"சிரவண மனனாதிகள் வேண்டாவோ" (கைவல்.சந். 3, 28).* 3. எல்லாமறிகை (அஷ்டப்பிரக. தத்துவ. பக்.121); omniscience.

*[மனம்→மனனம்.]*

மனா *maṉā,* பெ.(n.) 1. மனவு பார்க்க; see *maṉavu. "மங்கை மனாவனைய மென்சூன் மடவுடும்பு" (சீவக.2781).* 2. மனவு, 4 பார்க்க; see *maṉavu, 4.*

*[மனவு→மனா.]*

மனாவு *maṉāvu,* பெ.(n.) மனவு, 4 (யாழ். அக.) பார்க்க; see *maṉāvu.*

*[மனவு→மனாவு.]*

**மனிச்சடி-த்தல்** *maṉi-c-caḍi-*,4 செ.கு.வி. (v.i.) பெருமை பேசுதல்; to speak proudly or in a manly way. *"மனிச்சடித்துச் சொல்லாதே" (திருவிருத்.30, வியா.பக்.189).*

**மனிதன்** *maṉidaṉ*,பெ.(n.) 1. ஆண்மகன்; man. 2. மாந்தன் பார்க்க; see *māndaṉ.*

**மனிலாக்கொட்டை** *maṉilā-k-koṭṭai*, பெ. (n.) மணிலாக்கொட்டை (வின்.) பார்க்க; see *maṉilā-k-koṭṭai.*

*[மணிலாக்கொட்டை →மனிலாக்கொட்டை.]*

**மனிலாப்பயறு** *maṉilā-p-payaṟu*,பெ.(n.) மணிலாக்கொட்டை (வின்.) பார்க்க; see *maṉilā-k-koṭṭai.*

*[மணிலாக்கொட்டை → மணிலாப்பயறு →மனிலாப்பயறு.]*

**மனெப்படப்பு** *maṉe-p-paḍappu*, பெ.(n.) 1. வீட்டை சுற்றியுள்ள தோட்டம்; the house garden. 2. மனைப்படப்பை பார்க்க; see *maṉai-p-paḍaippai. "இ(வ)ன் பெறும (செ)னயும் மனெப்படப்பும் இரண்டு பட்டி நிலனும்" (தெ.க.தொ.2, பக்.353, (37).*

க. மனெப்படப்பு

*[மனைப்படப்பை→ மனைப்படப்பு →மனெப்படப்பு.]*

**மனை[1]-தல்** *maṉai-*,2 செ.குன்றாவி.(v.t.) உருவாக்கல்; to make, create, form, fashion, shape. *"ஒருவன் மனைந்து கொண்டு வர ஒருவன் அழித்துக் கொண்டு வரும்படி" (ஈடு.6, 9, 1).*

ம. மன; க. மனெ.

**E.** manor; **ME., AF.** maner; **OF.** manoir; **E.** manse; **ME.** med; **L.** mansus = house; **E.** mansion = large residence.

*[மன்→மனை (வே.க.4:33).]*

**மனை[2]** *maṉai*, பெ.(n.) 1. பலர் கூடி அல்லது நிலைத்து வதியும் வீடு; house, dwelling, mansion. *"சீர்கெழு வள்மனை திளைத்து" (சீவக.828).* 2. வீடு கட்டுதற்குரிய வெற்றிடம்; house site. 3. நிலவளவு வகை; ground, a land measure = 40'x60' = 2400 sq.ft. = 1/12 kāṇi. *"நூறு மனைக்கீழ் நால்கூறாக அடைப்பதாகவும்" (S.I.I.i.64).* 4. அல்லும் பகலும் வீட்டில் வதியும் மனைவி; wife. *"பிறர்மனை நோக்காத பேராண்மை" (குறள், 148).* 5. வீட்டில் வதியும் குடும்பம்; family, houselhold. 6. துறவுக்கு எதிரான இல்வாழ்க்கை; domestic life. *"மனைத்தக்க மாண்புடையாளாகி" (குறள், 51).* 7. சூதாட்டிற்கு அல்லது கணியத்திற்கு வரையும் அறை (வின்.); square, as of a chess, board. 8. நற்றாய்; mother. *"கவர் மனை மருட்சி" (இலக்.வி.537).*

**மனைக்கட்டு** *maṉai-k-kaṭṭu*, பெ.(n.) வீடு கட்டற்குரிய இடம்; house - site, building site.

*[மனை + கட்டு.]*

**மனைக்கட்டுநிவேசனம்** *maṉai-k-kaṭṭu-nivēšaṉam*,பெ.(n.) வீடு கட்டப்பட்ட இடம் (வின்.); ground on which a house stands.

*[மனைக்கட்டு + **Skt.** நிவேசனம் > த. மனையகம்.]*

**மனைக்கடையான்** *maṉai-k-kaḍaiyāṉ*, பெ.(n.) வீட்டிற் கடை வைத்து வணிகஞ் செய்வோன்; shop - keeper one who opens a shop in his place of residence (M.E.R.1915, p.108).

*[மனை + கடையான்.]*

**மனைக்கிழத்தி** *manai-k-kilatti,* பெ.(n.) மனைவி; wife, as mistress of the house. *"தொல்குடியின் மக்கட் பெறலின் மனைக்கிழத்தி" (திரிகடு.64).*

*[மனை + கிழத்தி.]*

**மனைக்கிழவன்** *manai-k-kilavan,* பெ.(n.) கணவன்; husband, as master of the house.

*[மனை + கிழவன்.]*

**மனைக்குழி** *manai-k-kuli,* பெ.(n.) குடியிருப்பு நிலம்; housing-ground. *"காணிமனைக்குழி பதினெட்டும் தெந் கிழக்கும் நாந் (ஸ்த்ரீத) நம் பெற்ற மனை" (த.க.தொ.2, தொ.எண்.210).*

**மனைக்கோள்** *manai-k-kōl,* பெ.(n.) பல்லி (வின்.); lizard (சா.அக.).

*[மனை + கோள்.]*

**மனைகட்டு-தல்** *manai-kattu-,* 5 செ.கு.வி. (v.i.) சொக்கட்டானில் ஓர் ஆட்டம் வெல்லுதல்; to win a game, as in dice-play. *"முற்பட இடுகின்ற தாயம் முன்னே மனை கட்டலாம்படி" (கலித்.136, உரை).*

*[மனை + கட்டு-.]*

**மனைகோலு-தல்** *manai-kōlu-,* 5 செ.கு.வி. (v.i.) வீடு கட்டுதல்; to build a house.

*[மனை + கோலு-.]*

**மனைச்சீட்டு** *manai-c-cittu,* பெ.(n.) மனை விற்பனை ஆவணம்; title deed of a house - site.

*[மனை + சீட்டு.]*

**மனைத்தாயம்** *manai-t-tāyam,* பெ.(n.) இல்லறவொழுக்கம் (யாழ்ப்.); domestic life.

*[மனை + தாயம்.]*

**மனைத்தீர்வை** *mana-t-tirvai,* பெ.(n.) நிலத்துக்கு மட்டும் கொடுக்கப்படும் வாடகை (இ.வ.); ground - rent.

*[மனை + தீர்வை.]*

**மனைப்படப்பு** *mana-p-padappu,* பெ.(n.) மனைபடைப்பை பார்க்க; see *manai-padaippai. "வழிபாடு செய்வார்க்கு மனையும் மனைப்படப்பும் நீக்கி" (S.I.I.i.151).*

*[மனை + படப்பு. படப்பை →படப்பு.]*

**மனைப்படப்பை** *manai-p-padappai,* பெ.(n.) வீட்டுக் கொல்லை; house garden (S.I.I.i, 86).

*[மனை + படப்பை.]*

**மனைப்பணம்** *manai-p-panam,* பெ.(n.) வீட்டு வரி (S.I.I.viii, 139); house - tax.

*[மனை + பணம்.]*

**மனைப்பலி** *manai-p-pali,* பெ.(n.) மனையுறை தெய்வங்கட்கிடும் பலி; sacrifice to household gods. *"மனைப் பலியூட்டினமை கண்டுண்க வூண்" (ஆசாரக்.40).*

*[மனை + Skt.பலி.]*

**மனைப்பாம்பு** *manai-p-pāmbu,* பெ.(n.) 1. பாம்பு வகை; common brown snake. 2. அகவை மிகுதியால் குள்ளமாய் வீடுகளில் வாழும் பாம்பு; cobra which has grown short with age and lives in houses.

*[மனை + பாம்பு.]*

**மனைபுழக்கடை** *manai-p-pula-k-kadai,* பெ.(n.) வீட்டின் பின்புறம்; backyard of a house.

*[மழை + புழக்கடை.]*

**மனைமரம்** *manai-maram,* பெ.(n.) தேற்றா மரம் (பரிபா.11, 19, உரை); clearing -nut tree.

*[மனை + மரம்.]*

**மனைமுதல்** *manai-mudal,* பெ.(n.) மனைக் கிழத்தி பார்க்க; see *manai-k-kilatti.* *"நாளு மனைமுதல் வினையொடு முவப்ப" (அகநா.51).*

*[மனை + முதல்.]*

**மனைமுறி** *manai-muri,* பெ.(n.) மனைச் சீட்டு (வின்.) பார்க்க; see *mana-c-cittu.*

*[மனை + முறி.]*

**மனையடிசாத்திரம்** *mana-y-adi-cāttiram,* பெ.(n.) வீடு கட்டும் முறைகளை யுணர்த்தும் நூல்; treatise on house building.

*[மனையடி + **Skt.** சாத்திரம்.]*

**மனையறம்** *mana-y-aram,* பெ.(n.) இல்லறம்; domestic or married life. *"வான்றரு கற்பின் மனையறம் பட்டேன்" (மணிமே.22:53).*

*[மனை + அறம்.]*

**மனையறம்படுத்தகாதை** *mana-y-aram-padutta-kādai,* பெ.(n.) சிலப்பதிகாரத்தின் இரண்டாம் காதை; chapter of cilappatikāram.

*[மனையறம்படுத்த + காதை.]*

**மனையாட்டி** *mana-y-ātti,* பெ.(n.) மனையாள் (சூடா.) பார்க்க; see *manaiyāl.*

*[மனை + ஆட்டி.ஆளன் – ஆண்பால். ஆட்டி – பெண்பால்.]*

**மனையாள்** *manayāl,* பெ.(n.) மனைவி; wife. *"மனையாளை யஞ்சு மறுமையிலாளன்" (குறள், 904). "காதல் மனையாளும் காதலனும் மாறின்றித் தீதில் ஒருகருமம்" (நன்னெறி, 6).*

*[மனை + ஆள்.]*

**மனையிறை** *manai-y-irai,* பெ.(n.) வீட்டு வரி; house tax. *"மனையிறை காலே யரைக்கால் பழங்காசு" (Pd.Insc.288).*

*[மனை + இறை.]*

**மனையுறைமகள்** *manai-y-urai-magal-,* பெ.(n.) மணமான பெண்; married woman. *"வான்தரு கற்பின் மனையுறை மகளிரில்" (மணிமே.15, 77).*

*[மனை + உறைமகள்.]*

**மனையோள்** *manaiyōl,* பெ.(n.) மனையாள் பார்க்க; see *manaiyāl. "மனையோள் விரும்பி" (புறநா.333).*

*[மனை →மனையோள்.]*

**மனைவரி**[1] *manai-vari,* பெ.(n.) வீட்டுவரி (வின்.); house tax, quit-rent.

*[மனை + வரி. மனை = வீடு.]*

**மனைவரி**[2] *manai-vari,* பெ.(n.) வீடு கட்டாமல் வெறுமையாக இருக்கும் இடத்திற்குத் தண்டப்படும் வரி (தெ.கல்.தொ.26, எண்.656); tax for empty plot.

**மனைவழி** *manai-vali,* பெ.(n.) வீட்டுக்குரிய இடம்; house - site. *"மனைவழி கூறிடாது நகரப் பொதுவாய்க் கிடந்த" (S.I.I.iii.25).*

*[மனை + வழி.]*

**மனைவாழ்க்கை** *manai-vālkkai,* பெ.(n.) இல்வாழ்க்கை; house holder's life.

"ஊரன்றன் மனைவாழ்க்கை பொலிக" (ஐங்குறு.3).

க. மனெவாழ்டெ

[மனை + வாழ்க்கை.]

**மனைவானீளம்** *manai-vānīlam*, பெ.(n.) மனையைச் சேர்ந்த வால்வீச்சு; longitudinal piece of land at the back of a house. *"மடைவாளகத்து மனை வானீளத்துக்குக் கிழக்கும்" (S.I.I.iii.214).*

**மனைவி** *manaivi*, பெ.(n.) 1. மனையி லுறையும் வாழ்க்கைத் துணைவி; இல்லாள்; wife. *"இன்ப மருந்தினாள் மனைவி யொத்தும்" (சீவக.1895).* 2. முல்லை மருத நிலங்களின் தலைவி (திவா.); heroine of a pastoral or agricultural tract. 3. மனையை யுடையவள்; female, owner or resident of a house. *"பூமுளரி மனைவி" (உபதேசகா. சிவவிரத. 245).*

[மனை → மனைவி.]

**மனைவீடு** *manai-vīdu*, பெ.(n.) 1. மனையும் வீடும்; house and grounds. 2. சிற்றூர் நத்தம் (இ.வ.); land reserved as house sites.

[மனை + வீடு.]

**மனைவேலி** *manai-vēli*, பெ.(n.) வீட்டின் எல்லைச் சுவர்; boundary wall of a house.

[மனை + வேலி.]

**மனைவேள்வி** *manai-velvi*, பெ.(n.) இல்லறம்; domestic life. *"மனை வேள்வி மலிவுரைத் தன்று" (பு.வெ.9, 27, கொளு.).*

[மனை + வேள்வி.]

# மா

**மா[1]** *mā*, பெ.(n.) மகரமெய்யும் ஆகார உயிரும் சேர்ந்த உயிர்மெய் நெட்டெழுத்து; the compound of m and ā.

[ம் + ஆ – மா.]

**மா[2]** *mā*, பெ.(n.) இயற்சீர் இறுதியிலுள்ள நேரசையைக் குறிக்கும் சொல்; symbolic expression for nēr, ending an *iyar-cīr*. *மாமுன் நிரையும் விளமுன் நேரும்.*

**மா[3]** *mā*, பெ.(n.) 1. பெருமை; greatness. *"அங்கண் மாஞாலம்" (நாலடி, 148).* 2. வலி (பிங்.); strength.

**மா[4]** *mā*, கு.பெ.எ.(adj.) 1. ஒருவரின் அல்லது ஒன்றின் நல்ல, கெட்ட குணங்களை மிகுதிப்படுத்தும் பெயரடை; an adjective indicating the highest degree of anything good or bad. 2. பெரிய; extensive. 3. மிகவும்; very.

**மா[5]** *mā*, பெ.(n.) மாமரம் (பிங்.); mango tree.

**மா[6]** *mā*, பெ.(n.) அழைக்கை (பிங்.); calling, call.

**மா[7]–த்தல்** *mā-*, பெ.(n.) அளத்தல்; to measure.

மான் – மா. மாத்தல் = அளத்தல். இவ் வினை இன்று வழக்கற்றது. ஆயின், மா என்னும் முதனிலைத் தொழிலாகுபெயர் 1/20 என்னும் கீழ்வாயிலக்கத்தைக் குறித்து வழங்குகின்றது. அதனால், நிலவளவையில் ஒரு வேலியின் 1/20 பாகம் மா எனப்படுகின்றது. "மாநிறை வில்லதும் பன்னாட்காகும்" (புறம்.184) என்பது, இதன் தொன்றுதொட்ட வழக்கை யுணர்த்தும்.

மா[8] *mā,* பெ.(n.) 1. விலங்கு; animal, beast. *"மாவும் மாக்களுமையறி வினவே" (தொல். பொருள்.587).* 2. குதிரை; horse. *"அமரகத் தாற்றறுக்குங் கல்லாமா" (குறள், 814).* 3. யானை (அக.நி.); elephant. 4. குதிரை, பன்றி, யானைகளின் ஆண் (சூடா.); male of horse, pig, elephant. 5. மடங்கலோரை (சூடா.); leo of the zodiac. 6. வண்டு; bee. *"மாவுடைத் தார்" (பு.வெ.6–7. கொளு).* 7. அன்னம்; swan. *"மடநடை மாயினம்" (கலித்.92:17).* 8. விலங்கு வடிவமாய்ப் பிறக்கும் மானுடம்; human being born with the shape of an animal. *"மாவு மருளு முளப்பட வாழ்நர்க் கெண் பேரெச்சம்" (புறநா.28).*

மா[9] *mā,* பெ.(n.) 1. சீலை, துணி (அக.நி.); cloth. 2. ஆணி (அக.நி.); nail.

மா[10] *mā,* பெ.(n.) துன்பம் பொறுக்கை (அரு.நி.); bearing with patience.

மா[11] *mā,* பெ.(n.) வெறுப்பு (சூடா.); dislike, disquest.

மா[12] *mā,* இடை.(part.) ஓர் அசைச் சொல்; an expletive. *"விளிந்தன்று மாதவ" (நற்.178).*

மா[13] *mā,* பெ.(n.) 1. திருமகள்; Tirumagaḷ. *"மாமறுத்த மலர்மார்பின்" (புறநா.7).* 2. செல்வம் (யாழ்.அக.); treasure. 3. கலைமகள் (சங்.அக.); Saraswathi.

மா[14] *mā,* பெ.(n.) ஒரு முகத்தல் அளவுக்கலம்; name of a measuring vessel. *"மாத்தால் அறுகலமும்" (தெ.க.தெ.8.211–6).*

மா[15] *mā,* பெ.(n.) 1. மாற்று; degree of fineness of gold assayed by a touch - store. *"ஓட்டறும் செம்பொன் னொக்க வொருமாவுங் குறையாமல்" (பெரிபு. ஏயர் கோன்.137).* 2. ஒரு நிறை (தொல்.எழுத்து.170, உரை); a measure of weight. 3. கீழ்வாயிலக்கத்துளொன்று (பிங்.); the fraction 1/20.

மா[16] *mā,* பெ.(n.) 1. வயல் (பிங்.); field. 2. நிலம்; land, tract of land. *"மருதமாவின் தலையன" (இரகு.நாட்டுப்.56).* 3. இருபதில் ஒரு பகுதி கொண்ட நிலவளவை; a superficial measure 1/20 veli = 100 kuḷi. *"மாநிறை வில்லதும் பன்னாட் காகும்" (புறநா.184).*

மா[17] *mā,* பெ.(n.) கானல் (அரு.நி.); mirage.

மா[18] *mā,* பெ.(n.) 1. அழகு; beauty. *"மாவீழ் பள்ளி" (ஞானா.10:6).* 2. கருமை; blackness. *"மாயிரும் பீலி" (சிலப்.2:53).* 3. வண்ணம்; colour. *"காமரு குவளைக் கழுநீர் மாமலர்" (சிலப்.4:40).* 4. மாமைநிறம்; paleness caused by love-sickness. *"அம்மா வரிவை" (புறநா.147).*

மா[19] *mā,* பெ.(n.) 1. அரிசி முதலியவற்றின் மாவு; flour, meal, dough, powder. *"காயங் கொண்டன மாவிருந்து" (மலைபடு.126).* 2. துகள்; dust.

*[மாவு→மா.]*

மா[20] *mā,* பெ.(n.) நஞ்சுக்கொடி (வின்.); after - birth.

தெ. மாவீ.

மா[21] *mā,* பெ.(n.) உறுதிமொழி; source of perception, authority. *"தெளிந்ததெல்லாம் மாவென்று கொண்டு" (நீலகேசி.5).*

**மாக்கசங்கு** *mākka-šaṅgu,* பெ.(n.) இந்துப்பு (சங்.அக.); sodium chloride.

*[மா + கசங்கு.]*

**மாக்கட்டு** *mā-k-kaṭṭu,* பெ.(n.) மாவைக் கொண்டு கட்டுங் கட்டு; a soft pasty application made of flour.

*[மாவு →மா + கட்டு.]*



**மாக்கடற்பிறந்தகோதை** *mā-k-kaḍar-piṟanda-kōdai,* பெ.(n.) திருமகள்; Goddess *Tirumagaḷ* (Lakshmi) as born out of the ocean.

*[மா + கடல் + பிறந்த + கோதை.]*

**மாக்கடு** *mākkaḍu,* பெ.(n.) மாக்கடுக்காய் பார்க்க; see *mā-k-kaḍukkāy.*

*[மா + கடு. கடுக்காய் →கடு.]*

**மாக்கடுக்காய்** *mā-k-kaḍukkāy,* பெ.(n.) சூரத்துக் கடுக்காய் (தைலவ.தைல.); a kind of myrobalan from Surat (சா.அக.).

*[மா + கடுக்காய்.]*

**மாக்கருவி** *mā-k-karuvi,* பெ.(n.) குதிரைச் சேணம் (சது.); saddle.

*[மா + கருவி. மா = விலங்கு, குதிரை.]*



**மாக்கல்** *mā-k-kal,* பெ.(n.) 1. எழுத்துக்குச்சி முதலிய செய்தற்குரிய கல் (கொ.வ.); potstone, greyish blue soft stone used for making pots, slate - pencils, etc. 2. சவுக்காரக் கல் (வின்.); soap stone.

*[மாவு →மா + கல்.]*

**மாக்கள்** *mākkaḷ,* பெ.(n.) 1. மாந்தர்; men, people, mankind. *"தவத்துறை மாக்கள்" (மணிமே.6, 97). "கொலை வினையராகிய மாக்கள்" (குறள், 329). "ஆற்றா மாக்கள் அரும்பசி களைவோர் மேற்றே உலகின் மெய்ந்நெறி வாழ்க்கை" (மணிமே.).* 2. பகுத்தறிவிலார்; persons wanting in discrimination. *"மாவு மாக்களு மையறிவினவே" (தொல்.பொருள்.587). "செவியின் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள் அவியினும் வாழினும் என்" (குறள், 420).* 3. குழந்தைகள்; children. *"தத்தமாக்களைத் தம்படையாற் சிலர் தடிந்தார்" (கம்பரா. கிங்கர.42).*

**மாக்கள்பத்தோன்** *mākkaḷ-pattōṉ,* பெ.(n.) வெள்ளிகோள் (நாமதீப.101); the planet Venus.

**மாக்களிக்கட்டு** *mā-k-kaḷi-k-kaṭṭu,* பெ.(n.) மாவைக் களியாகச் செய்து புண், கட்டி இவற்றின் மீது வைத்துக் கட்டுகை; a soft pasty external application made by boiling any flour as basis with water.

*[மா + களி + கட்டு.]*

**மாக்கனுடையாள்மூலி** *mā-k-kaṉuḍaiyāḷ-mūli,* பெ.(n.) சதுரக்கள்ளி; a species of euphorbia (சா.அக.).



**மாக்கா** *mākkā,* பெ.(n.) குதிரைப் பற்களின் நிறவேறுபாடுகளிலொன்று (அசுவசா.6); a colour of horse's teeth.

**மாக்காப்பு** *mākkāppu,* பெ.(n.) தெய்வத் திருமேனிக்குச் சாத்தும் அரிசிமாச் சாத்துப்படி; rice flour mixed with water, used in the ceremonial bath of an idol.

*[மாவு→மா + காப்பு.]*

**மாக்குசம்** *mākkušam,* பெ.(n.) தேன்; honey (சா.அக.).

**மாக்குமாக்கெனல்** *mākku-mākkeṉal,* பெ.(n.) 1. கதறும் ஒலிக்குறிப்பு; sobbing violently. *"மாக்கு மாக்கென்று கதறும்" (மாட்டுவா.49).* 2. வலிமையோடு செய்தற் குறிப்பு; doing anything violently. *"மாக்குமாக்கென்று இடித்தான்" (உ.வ.).*

*[மாக்கு + மாக்கு + எனல் (மாக்கு = ஒலிக்குறிப்புச் சொல்).]*

**மாக்குளித்தல்** *mā-k-kaūlittal,* பெ.(n.) மகளிர் விளையாட்டு வகை (வின்.); a kind of girl's play.

**மாக்கூடம்** *mākkūḍam,* பெ.(n.) பல்; tooth.

**மாக்கொடி** *mā-k-koḍi,* பெ.(n.) பெரிய கொடி; large climber.

*[மா = பெரிய. மா + கொடி.]*

**மாக்கோதை¹** *mākkōdai,* பெ.(n.) கரூர் அமராவதி ஆற்றுப்படுகையில் கிடைத்த வெள்ளிக் காசில் உள்ள பெயர்; name found on the silver coin collected from *Amarāvati* river bed.

*[மா + கோதை – மாக்கோதை.]*

கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை (புறநா.245)யின் நாணயமாக இருக்கலாம். சேரமான் கோக்கோதை மார்பன் (அகநா.346) சேரமான் குட்டுவன்கோ (புறநா.54) போன்ற பல மன்னர்கள் கோதை என்ற பொதுப்பெயர் பெற்றுள்ளனர் (அளக்குடி.தமிழகத் தொல்லியல் சான்றுகள்).

**மாக்கோதை²** *mākkōdai,* பெ.(n.) ஒரு சேர அரசன் பெயருடன் வெளியிட்ட நாணயங்கள்; coins of a *Cērā* king, with name engraved. *"கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை" (புறநா.245).*

மாக்கோதை என்று பெயர் பொறித்த ஏழு நாணயங்களும் 3 முத்திரைகளும் கிடைத்துள்ளன. நாயணங்களில் எழுத்துகள் நேர் வடிவிலும்,

முத்திரைகளில் இடவலமாறியும் உள்ளன. அரசனின் தலை பொறிக்கப்பட்டுள்ளது. வெள்ளி நாணயங்கள், வட்ட வடிவம். சுமார் 1.9 செ.மீ. விட்டம், எடை 2.1 கிராம். மெல்லிய தகட்டில் அழுத்திய முறையில் செய்யப்பட்டது. கி.மு.100 முதல் கி.பி.100 வரை ஆன காலமாக இருக்கலாம்.



**மாக்கோலம்** *mā-k-kōlam*, பெ.(n.) நீர் சேர்த்த அரிசிமாவால் தரையிலிடும் கோலங்கள்; decorative drawings on the floor with rice flour mixed with water.

*[மாவு →மா + கோலம்.]*

**மாகக்கல்** *māga-k-kal*, பெ.(n.) கானகக்கல் (யாழ்.அக.); a kind of metallic ore.

**மாகட்டகம்** *māgaṭṭagam*, பெ.(n.) செந்நாயுருவி (சங்.அக.); a kind of dog-prick.

**மாகடம்பு** *mā-kaḍambu*, பெ.(n.) நீண்ட செடி வகை (L.); Indian lantana.

*[மா = பெரிய, நீண்ட. மா + கடம்பு.]*

**மாகண்டம்** *mā-kaṇḍam*, பெ.(n.) அதிகண்டம் (யாழ்.அக.); a division of time.

**மாகத்தார்** *mā-kattār*, பெ.(n.) 1. மாகர் பார்க்க; see *māgar*. *"மாகத்தார் தேவிமாரும்" (கம்பரா.திருவடிதொழுத.66).* 2. ஒரு குழுவினர் (தொல்.சொல்.167, உரை); persons belonging to a particular class.

**மாகத்தி**¹ *māgatti*, பெ.(n.) தில்லை மரம்; a tree (சா.அக.).

*[மா + கத்தி.]*

**மாகத்தி**² *mā-katti*, பெ.(n.) மாகந்தி, 1 பார்க்க; see *mākandi*.

**மாகதம்**¹ *māgadam*, பெ.(n.) 1. செங்குளவி; a red-beetle. 2. சீரகம்; cumin (சா.அக.).

*[மா + கதம்.]*

**மாகதம்**² *māgadam*, பெ.(n.) 1. மகதநாடு தொடர்பானது; that which pertains to Magadha or South Bihar. 2. மகதம்; naḍunāḍu. *"மாகதக் கொங்கர் கோமான்" (பாரத. பதினாறாம்.90).*

**மாகதமுருகி** *māgada-murugi*, பெ.(n.) மனமுருகி; a plant (சா.அக.).

*[மாகதம் + உருகி.]*

**மாகந்தி** *māgandi*, பெ.(n.) 1. நெல்லி (மூ.அ.); emblic murobalan. 2. அமுக்கிரா (சங்.அக.); Indian winter cherry.

**மாகந்திகம்** *māgandigam*, பெ.(n.) நெல்லி; a tree *emblica officinalis* (சா.அக.).

*[மா + கந்திகம்.]*

**மாகம்**¹ *māgam*, பெ.(n.) எருக்கு; a milky shrub - *calotropis gigantea* (சா.அக.).

**மாகம்**² *māgam*, பெ.(n.) 1. மேலிடம்; upper space. *"மாக மாடத்து" (கம்பரா. மிதிலைக். 83).* 2. விண்; sky, air, atmosphere. *"மாக

விசும்பின்" (புறநா.35). 3. திக்கு; point of the compass. "மாகநீள் விசும்பிடை" (சீவக. 569). 4. முகில் (சீவக.569, உரை); cloud.

மாகயம் māgayam, பெ.(n.) செய்நஞ்சு (மூ.அ.); a prepared arsenic.

மாகர் māgar, பெ.(n.) தேவர்; celestials. "மாகரந்தணர் மற்றுள மானுடர்" (உபதேசகா. சிவபுண்.15).

மாகரணி māgaraṇi, பெ.(n.) கருங்குன்றி; black jewellers bead black variety of abrus-precatories (சா.அக.).

[மா + கரணி.]

மாகரி mā-kari, பெ.(n.) ஆண்யானை (யாழ். அக.); male elephant.

[மா + கரி.]

மாகலூர்க்கிழான் māgalūr-k-kiḻāṉ, பெ. (n.) புறப்பொருள்வெண்பாமாலைக்கு உரை எழுதியவர்; commentator for puṟa-p-poruḷveṇbāmālai.

மறுவ. சாமுண்டிதேவ நாயனார்.

[மாகலூர் + கிழான்.]

மாகறல் māgaṟal, பெ.(n.) செங்கல்பட்டு மாவட்டத்தில் சேயாற்றின் கரையில் உள்ள ஊர்; a town on the banks of cēyāṟu in the Cheṅgalpaṭṭu Dt. "மஞ்சுமலி பூம் பொழிலின் மயில்கண்ட மாடமலி மாகறலுளான" (பெரியபு.330, 5, சம்பந்தர்) (இல.ஊ.பெ.).

[மா + அறல் → மாஅறல் → மாகறல். அறல் = மணல்.]

மாகாணம் māgāṇam, பெ.(n.) மாநிலம் பார்க்க; see mānilam.

[மா + காணம். காணம் = கண்காணிக்கப் படுவது.]

மாகாணி[1] māgāṇi, பெ.(n.) பட்டணம்படி என்ற பெயரில் வழங்கிய முகத்தல் அளவை; madras capacity measure. "மாகாணி அரிசி" (உ.வ.).

மாகாணி[3] māgāṇi, பெ.(n.) பதினாறில் ஒன்றான கீழ்வாயிலக்கவெண்; the fraction 1/16, as a sum of māand kāṇi.

மாகாதிமெழுகு māgāti-meḻugu, பெ.(n.) அண்டமுடியினால் செய்யும் ஒரு மெழுகு; a wax like preparation prepared out of skull bone (சா.அக.).

[மாகாதி + மெழுகு.]

மாகாலன் māgālaṉ, பெ.(n.) சிவன்; Śivaṉ.

மாகாளி[1] māgāḷi, பெ.(n.) 1. கொற்றவை (பிங்.); Durgā. 2. எழுவகைப் பெண்டிரு லொருத்தி; one of catta-mātar q.v. 3. களா வகை (தைலவ.தைல.); a species of bengal currant.

[மா = பெரிய. மா + காளி.]

மாகாளி[2] mākāḷi, பெ.(n.) மாகாளிக் கிழங்கு பார்க்க; see mākāḷi-k-kiḻaṅgu.

மாகாளிக்கிழங்கு mākāḷi-k-kiḻaṅgu, பெ.(n.) மலையில் விளையும் நன்னாரி வகை; a kind of sarsaparilla with tubers, growing in hilly tracts.

[மாகாளி[2] + கிழங்கு.]

மாகீர்த்தி *mā-kirtti,* பெ.(n.) பாண்டியர்களின் சிறப்புப் பெயர்; name speciality of *Pāṇḍiyaṉ* king. *"போர்த் திருவினையுடைய பாண்டியன் மாகீர்த்தி அவையின் கண்ணே" (தொல்.பாயி.உரை.).*

*[மா + கீர்த்தி.]*

மாகு *māgu,* பெ.(n.) 1. வலை; net. *"மாகு சூழவுந் தப்பிய வரிநிறமா" (பாரத.நிரை.69).* 2. வலையிற் கோத்தமணி; sinker attached to a net. *"மாகுசேர் வலை" (பெரியபு. அதிபத்த.12).*

மாகுக்கி *māgukki,* பெ.(n.) பெருவயிறு; a big stomach (சா.அக.).

*[மா = பெரிய. மா + குக்கி.]*

மாகுஞ்சம் *mā-kuñjam,* பெ.(n.) தேவதாரு; a kind of fragrant tree, eagle wood (சா.அக.).

*[மா + குஞ்சம்.]*

மாகுட்டம் *mā-kuṭṭam,* பெ.(n.) பெருங் குட்டம்; leprosy (சா.அக.).

*[மா + குட்டம்.]*

மாகுடி *māguḍi,* பெ.(n.) திருநாவுக்கரசர் தம் திருத்தாண்டகப் பதிகத்தில் சுட்டும் சிவன் கோயில் உள்ள ஊர் (திருத்தாண்டகப் பதிகம்.285); a town with Siva shrined, mentioned by *Tirunāvukkarašu* in his *Tiruttāṇḍaga-p-padigam.* *"புற்குடி மாகுடி தேவன்குடி நிலக்குடி" (தேவா. திருத்.285).*

மாகுணத்தி *māguṇatti,* பெ.(n.) புளி கறணைக் கொடி; a creeper.

மாகுத்தம் *māguttam,* பெ.(n.) பூனைக்காலி எனும் செடிவகை; cowhage (சா.அக.).

மறுவ. மாகுதி.

பூனைக்காலை யொத்ததாய் இருக்கும் ஒரு கொடி.

மாகுலர் *māgular,* பெ.(n.) வேடர் (நாமதீப. 156); hunters, savages.

மாகுலவர் *māgulavar,* பெ.(n.) மாகுலர் (சூடா.) பார்க்க; see *māgular.*

*[மாகுலர் →மாகுலவர்.]*

மாகுலி *māguli,* பெ.(n.) உயர் குடியிற் பிறந்தவள்; lady of noble birth. *"மாகுலி மந்திர சண்டிகை" (திருமந்.1216).*

மாகேசம் *māgēšam,* பெ.(n.) வரிக்கூத்து வகை (சிலப்.3:13, உரை); a masquerade dance.

மாகோசரி *māgōšari,* பெ.(n.) பேராமல்லி; a species of jasmine (சா.அக.).

*[மா + கோசரி.]*

மாங்கரியான் *māṅgariyāṉ,* பெ.(n.) குப்பைமேனி; rubbish plant (சா.அக.).

மாங்கன்[1] *māṅgaṉ,* பெ.(n.) படகின் முற்பாகம் போன்ற வடிவுள்ள மீன் வகை (யாழ்ப்.); a fish that resemble the prow of a boat.

மாங்கன்[2] *māṅgaṉ,* பெ.(n.) மாங்காய் பார்க்க; see *māṅgāy.*

மாங்கன்று *māṅgaṉṟu,* பெ.(n.) மாஞ்செடி (வின்.); young mango plant.

*[மா + கன்று.]*

**மாங்காய்** *māṅgāy*, பெ.(n.) 1. மாவின் காய்; unripe mango fruit. *"மாங்காய் நறுங்கடி கூட்டுவேம்" (கலித்.109, 23).* 2. நடுவில் வைரமும் சுற்றிப் பதினொரு சிவப்புக் கல்லும் பதித்துச் செய்த கழுத்தணி யுறுப்பு வகை; a mango - shaped ornamental piece in a necklace, consisiting of a central diamond surrounded by eleven rubies. 3. விலங்குகளின் விரைக்காய் (இ.வ.); testicle of quadrupeds. 4. விலங்குகளின் சிறுநீரகம்; kidney of quadrupeds.

*[மா + காய்.]*

**மாங்காய்நாண்** *māṅgāy-nāṉ*, பெ.(n.) மாங்காய்மாலை பார்க்க (S.I.I.ii, 93, 28); see *māṅgāy-mālai.*

*[மா→மாங்காய் + நாண். மாவினது காய் வடிவில் செய்யப்பட்ட அணி.]*

**மாங்காய்ப்பட்டடை** *māṅgāy-p-paṭṭaḍai*, பெ.(n.) காலணி வகை (mod.); a kind of ankle ornament.

*[மா→மாங்காய் + பட்டடை.]*

**மாங்காய்ப்பால்**[1] *māṅgāy-p-pāl*, பெ.(n.) பாலோடு முப்பழமும் சர்க்கரையுஞ் சேர்த்துக் காய்ச்சிய சாறு; boiled mixture of milk, three kind of fruits and sugar.

*[மா→மாங்காய் + பால்.]*

**மாங்காய்ப்பால்**[2] *māṅgāy-p-pāl*, பெ.(n.) மாங்காய்ப்பிசின் பார்க்க; see *māṅgāy-p-piśiṉ.*

**மாங்காய்ப்பிசின்** *māṅgāy-p-piśiṉ*, பெ.(n.) மாமரத்தின் பிசின்; a gum of mango tree (சா.அக.).

*[மா→மாங்காய் + பிசின்.]*

**மாங்காய்ப்பிஞ்சு** *māṅgāy-p-piñju*, பெ.(n.) மாவடு பார்க்க; see *māvaḍu*(சா.அக.).

*[மா→மாங்காய் + பிஞ்சு.]*

**மாங்காய்ப்பூட்டு** *māṅgāy-p-pūṭṭu*, பெ.(n.) பூட்டு வகை; a kind of padlock (C.E.M.).

*[மா→மாங்காய் + பூட்டு.]*

**மாங்காய்மாலை** *māṅgāy-mālai*, பெ.(n.) மாங்காய் வடிவமான உருக்கள் சேர்த்த கழுத்தணி; necklace containing mango shaped pieces.

*[மா→மாங்காய் + மாலை.]*



**மாங்காய்வற்றல்** *māṅgāy-vaṟṟal*, பெ.(n.) உப்பில் ஊறவைத்து உலர வைத்த மாவடு; dried pieces of salt pickled mango.

*[மா→மாங்காய் + வற்றல்.]*

**மாங்காயிஞ்சி** *māṅgā-y-iñji*, பெ.(n.) மாங்காய் போன்று மணமுள்ள இஞ்சி; ginger smelling like mango fruit.

*[மா→மாங்காய் + இஞ்சி.]*

**மாங்காயீரல்** *māṅgāy-īral*, பெ.(n.) சிறுநீரகம்; (C.G.) kidney.

*[மாங்காய் + ஈரல்.]*

ஈரல் போன்று மென்மையாயும் மா போன்று வடிவுடையதாயுமிருப்பதால் இவ்வாறழைக்கப்பட்டு இருக்கலாம்.

மாங்கிளுவை *māṅgiḷuvai,* பெ.(n.) மாம்பூ; mango balsam (சா.அக.).

மாங்கிசக்கல் *māṅgiša-k-kal,* பெ.(n.) மருந்து வகையில் ஒன்று; one of the mineral stones (சா.அக.).

மாங்கு[1] *māṅgu,* பெ.(n.) பாத்திகளில் படியும் தூள் உப்பு; a dry salt spread over the land part.

மாங்கு[2] *māṅgu,* பெ.(n.) மீன் வகை; a kind of fish.

மாங்கு[3] *māṅgu,* பெ.(n.) பிறந்த குழந்தையின் மேற் பற்றியிருக்கும் ஒரு வகைப் பசை (நாஞ்.); the sticky coating over the body of a new born baby.

மாங்குடிமருதனார் *māṅguḍi-marudaṉār,* பெ.(n.) தலையாலங்கானத்துச் செறுவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் காலத்தில் புலவர் குழுவின் தலைவராக இருந்த பெரும்புலவர்; a great poet and chairman of the poets forum during period of *Talayālaṅgānattucceṟuveṉṟa Pāṇḍiyaṉ Neḍuñceḻiyaṉ.*

*[மாங்குடி + மருதனார்.]*

பத்துப் பாட்டில் ஆறாம் பாடல், அகநானூற்றில் 1, குறுந்தொகையில் 3, நற்றிணையில் 2, புறநானூற்றில் 6 ஆகிய பாடல்களின் ஆசிரியர்.

மாங்கொட்டை *māṅgoṭṭai,* பெ.(n.) மாம்பழத்தின் விதை; mango seed.

*[மா + கொட்டை.]*

மாங்கொட்டைப்பார் *māṅgoḍai-p-pār,* பெ.(n.) வெண் சிவப்பு நிறமுடைய கல் வகைகளுள் மிக்க வலுவுடைய ஒன்றாகும்; kind of stone formed under the ground in pale red colour (சா.அக.).

*[மாங்கொட்டை + பார்.]*

மாச்சக்காய் *mācca-k-kāy,* பெ.(n.) மாசக்காய், 1 பார்க்க; see *māša-k-kāy.*

*[மாசக்காய்→மாச்சக்காய்.]*

மாச்சத்து *mā-c-cattu,* பெ.(n.) புரதச் சத்து; starch.

*[மா + சத்து. **Skt.** சத்து. த. ஊட்டம்.]*

மாச்சரேகம் *mācca-rēgam,* பெ.(n.) மிளகாய் நங்கைச் செடி; a plant.

மாச்சல் *māccal,* பெ.(n.) 1. சாவுகை (வின்.); dying, mortality. 2. மிக்க வருத்தம் (சங்.அக.); great suffering. 3. சோம்பல்; laziness, sloth. *"இந்த வேலை செய்ய இத்தனை மாச்சலா" (நெல்லை வழக்கு).*

*[மாய்ச்சல்→மாச்சல். ஒ.நோ. பாய்ச்சல் → பாச்சல். ஓய்ச்சல்→ஓச்சல்.]*

மாச்சாதம் *mā-c-cādam,* பெ.(n.) கூழ்; paste, gruel.

*[மா + சாதம். **Skt.** சாதம்.]*

மாச்சி[1] *mācci,* பெ.(n.) பாம்புக் கொல்லி; a plant which cures snake bites.

மாச்சி[2] *mācci,* பெ.(n.) கை விலங்கு; fetters (யாழ்ப்.).

**மாச்சிலை** *māccilai,* பெ.(n.) மாக்கல்; pot stone.

*[மா + சிலை. சிலை = ஒலி, கல், மலை. சில் = ஒலிக்குறிப்பு. சில்→சிலை.]*

**மாச்சீர்** *mā-c-cīr,* பெ.(n.) நேரசையால் இறும் இயற்சீர்; metrical foot of two *aśai* ending in *nēr.*

*[மா + சீர்.]*

**மாச்சீனி** *mā-c-cīṉi,* பெ.(n.) குழந்தைக்குரிய மருந்துகளில் ஒன்று; a kind of childish medicine (சா.அக.).

*[மா + சீனி.]*

**மாச்சு**[1] *māccu,* பெ.(n.) விலங்கு (வின்.); fetters.

**மாச்சு**[2] *māccu,* பெ.(n.) குற்றம்; fault. *"மாச்சற்ற சோதி" (திருமந்.1160).*

*[மாசு →மாச்சு.]*

**மாச்சுக்கு** *mā-c-cukku,* பெ.(n.) மாவைப் போல் நொருங்கும் வெண்மையான சுக்கு; dired ginger without fibre.

*[மா + சுக்கு.]*

**மாச்சுமாச்சுத்தம்பலம்** *māccu-māccu-t-tambalam,* பெ.(n.) பிள்ளை விளையாட்டு வகை (யாழ்ப்.); a kind of child's play.

மறுவ. கிச்சுகிச்சுதம்பலம்.

**மாசக்கடன்** *māša-k-kaḍaṉ,* பெ.(n.) மாதக் கடன் பார்க்க; see *māda-k-kaḍaṉ.*

*[மாதக்கடன்→மாசக்கடன்.]*

**மாசக்காய்** *māša-k-kāy,* பெ.(n.) 1. மருந்துச் சரக்கு வகை; galls. 2. செடி வகை; dyers oak. 3. நீண்ட மரவகை; british oak (சா.அக.).

**மாசக்காயுப்பு** *māšakkāy-uppu,* பெ.(n.) உப்பு வகை (C.E.M.); tannic acid (சா.அக.).

**மாசகணி** *māša-kaṇi,* பெ.(n.) ஊதாப்பூ; cuspidate leaved jungle geranium (சா.அக.).

**மாசகதாசகம்** *māšaga-dācagam,* பெ.(n.) பசப்புகை (இ.வ.), குழைத்து செயல்படுத்திக் கொள்ளுதல்; coaxing. *"மாசகதாசகம் பண்ணித் தன்கையிற் போட்டுக் கொண்டான்" (உ.வ.).*

தெ. மாசிகதாசிக.

**மாசகந்தாயம்** *māša-kandāyam,* பெ.(n.) மாதகந்தாயம் பார்க்க; see *māda-kandāyam.*

*[மாதக்கந்தாயம்→மாசக்கந்தாயம்.]*

**மாசங்கம்** *māšaṅgam,* பெ.(n.) மாதவிடாய் (வின்.); menses.

**மாசச்சந்துக்கட்டு** *māša-c-candu-k-kaṭṭu,* பெ.(n.) மாதச்சந்துக்கட்டு பார்க்க; see *mada-c-candu-k-kaṭṭu.*

**மாசச்சித்திரம்** *māša-c-cittiram,* பெ.(n.) வரகு; a millet (சா.அக.).

**மாசசிவராத்திரி** *māša-šiva-rāttiri,* பெ.(n.) மாதசிவனிரா பார்க்க; see *māda-šivaṉirā.*

**மாசடி** *māšaḍi,* பெ.(n.) வால் மிளகு; cubebs (சா.அக.).

மாசடையான் *māšaḍai-y-āṉ,* பெ.(n.) 1. வன்னி மரம்; suma tree - prosopis spicigera. 2. கஞ்சா; narcotic leaves of a plant (சா.அக.).

மாசத்தி *māšatti,* பெ.(n.) 1. கரு நொச்சி; a dark green ever green plant found in gardens in hedge row. 2. பூநாகம்; a small snake in flowers specially of fragrant screw pine (சா.அக.).

மாசத்துவம் *māšattuvam,* பெ.(n.) மொச்சை; field bean.

மாசதிசை *māša-tišai,* பெ.(n.) மாததிசை பார்க்க; see *māda-tišai.*

*[மாததிசை→மாசதிசை.]*

மாசதிர் *māšadir,* பெ.(n.) பெரிய வியப்பு; great wonder. *"மாசதிரிது பெற்று" (திவ். திருவாய்.2, 7, 10).*

*[மா + சதிர்.]*

மாசந்தினி *māšandiṉi,* பெ.(n.) சாம்பல் நிறச் செடிவகை; a ash coloured plant (சா.அக.).

மாசப்பிசகு *māša-p-pišagu,* பெ.(n.) மாதப்பிசகு பார்க்க; see *māda-p-pišagu.*

*[மாதப்பிசகு→மாசப்பிசகு.]*

மாசப்பிரவேசம் *māša-p-piravēšam,* பெ.(n.) மாதவிடாய் பார்க்க; see *māda-viḍāi.*

மாசப்பிறப்பு *māša-p-piṟappu,* பெ.(n.) மாதப்பிறப்பு பார்க்க; see *māda-p-piṟappu.*

*[மாதப்பிறப்பு→மாசப்பிறப்பு.]*

மாசம் *māšam,* பெ.(n.) மாதம் பார்க்க; see *mādam.*

*[மாதம்→மாசம் (இ.வ.).]*

மாசமாசம் *māša-māšam,* பெ.(n.) மாதாமாதம் பார்க்க; see *mādā-mādam.*

*[மாதாமாதம்→மாசாமாசம்→மாசமாசம்.]*

மாசயணி *māšayaṇi,* பெ.(n.) உடம்பிலே சிதைந்த அணுக்களை பிரித்து அரத்தத்திலே செலுத்துங் குழல்; lymphatics - lymphatic vessels (சா.அக.).

மாசரம் *māšaram,* பெ.(n.) கஞ்சிமேற் படரும் மேல் ஏடு; the thin creame like coaling on the surface of the rice water (சா.அக.).

மாசலன் *māšalaṉ,* பெ.(n.) கள்வன் (சங். அக.); thief.

மாசவிடாய் *māša-viḍāy,* பெ.(n.) மாதவிடாய் பார்க்க; see *māda-viḍāi.*

*[மாதம்→மாசம் + விடாய்.]*

மாசற்ற *māšaṟṟa,* பெ.(n.) 1. அழுக்கில்லாத; without impurities. 2. புடமிட்ட; calcined.

*[மாசு + அற்ற.]*

மாசற்றகதலம் *māšaṟṟa-kadalam,* பெ.(n.) இரும்பு; iron (சா.அக.).

மாசற்றசோதி *māšaṟṟa-šōdi,* பெ.(n.) சூடம், கற்பூரம்; camphor.

*[மாசற்ற + **Skt.** சோதி.]*

**Skt.** ஜோதி >த. சோதி.

மாசற்றநீர் *māšarra-nīr,* பெ.(n.) பனிக் குடத்து நீர்; liquor amni a discharge in woman just before delivery.

*[மாசற்ற + நீர்.]*

மாசற்றமலை *māšarra-malai,* பெ.(n.) நாக மலை; mountain containing zinc ore.

*[மாசற்ற + மலை.]*

மாசற்றரூபி *māšarra-rūbi,* பெ.(n.) கற்பூரம்; camphor (சா.அக.).

*[மாசற்ற + உரூபி.]*

மாசற்றலிங்கம் *māšarra-lingam,* பெ.(n.) கொண்டகச் சீலை; a kind of pure black stone without impurities used for making idols as lingam (சா.அக.).

*[மாசற்ற + இலிங்கம்.]*

மாசற்றவண்ணம் *māšarra-vannam,* பெ.(n.) அன்னபேதி; green vitriol - sulphate of iron (சா.அக.).

*[மாசற்ற + வண்ணம்.]*

மாசற்றவண்ணத்தூள் *māšarra-vanna-t-tūl,* பெ.(n.) ஏமமணல்; gold ore (சா.அக.).

*[மாசற்ற + வண்ணத்தூள்.]*

மாசற்றவாளம் *māšarra-vālam,* பெ.(n.) தூய்மை செய்த நேர்வாளம்; purified cotton seed (சா.அக.).

*[மாசற்ற + வாளம்.]*

மாசறு-தல் *māšaru-,* 15 செ.கு.வி.(v.i.) குற்றம் நீங்குதல்; to be blameless or spotless. *"மாசற்றார் கோள்" (குறள், 311). "மாசறு பொன்னே வலம்புரி முத்தே" (சிலப். 2:73).*

*[மாசு = குற்றம். மாசு + அறு-தல் =நீங்கு-தல்.]*

மாசனம்[1] *māšanam,* பெ.(n.) கஞ்சாவைக் கொண்டு செய்யும் ஒரு வகை மயக்கப் பொருள்; intoxicant prepared from Indian hemp.

மாசனம்[2] *māšanam,* பெ.(n.) 1. மக்கள் தொகுதி; multitude of people. *"மாசனங் கார்கெழு கடலெனக் கலந்த" (சீவக.828).* 2. மந்திரி, போற்றாளி முதலியோர்; royal conunsellors including ministers and priests. *"சிங்காசன மாசனஞ் சாதுரங்கம்" (திருநூற்.44).*

*[மா + சனம்.]*

மாசாத்தன் *māšāttan,* பெ.(n.) ஐயனார் (சிலப்.9, 12, அரும்.); *aiyanār.*

*[மா + சாத்தன்.]*

மாசாத்தனார் *māšāttanār,* பெ.(n.) சிற்றூர்களில் உள்ள சிலை வடிவான அய்யனார் படிவங்களின் மூலவர்; the original source of Ayyanar in the form of terracotta or sudhai forms in the villages.

மாசாத்துவன் *māšāttuvan,* பெ.(n.) வணிகருள் ஒரு குடியினர் (சிலப்.1:33, உரை); a trading family.

மாசாத்துவான் *māšāttuvān,* பெ.(n.) சிலப்பதிகாரக் கதைத் தலைவன் கோவலனின் தந்தையார்; father of *Kovalan,* the hero of silappathikaram. *"வருநிதி பிறர்கர்ந்தும் மாசாத்துவான் என்பான் இருநிதிக் கிழவன்" (சிலப்.1:33, உரை).*

மாசாதம் *māšādam,* பெ.(n.) கூழ்; poridge semi liquid food.

*[மா + சாதம்.]*

மாசாதி *māšādi,* பெ.(n.) ஆண் சாதி நான்கு வகையில் ஒன்று; one of four division of men.

*[மா + சாதி.]*

மாசாந்தம்[1] *māšandam,* பெ.(n.) பெரும் பொறுமை (வின்.); great patience.

*[மா + சாந்தம். மா = பெரிய.]*

மாசாந்தம்[2] *māšandam,* பெ.(n.) மாதாந்தம் பார்க்க; see *mādāndam.*

*[மாதாந்தம் →மாசாந்தம் (கொ.வ.).]*

மாசாந்தரம் *māšandaram,* வி.எ.(adv.) மாதந்தோறும் (கொ.வ.); monthly, every month, per mensem.

*[மாதந்தோறும்→ மாசந்தோறும்→ மாசாந்தரம்.]*

மாசாமாசம் *māšā-māšam,* பெ.(n.) மாதா மாதம் (கொ.வ.) பார்க்க; see *mādā-mādam.*

*[மாதாமாதம் →மாசாமாசம்.]*

மாசாலம் *māšālam,* பெ.(n.) ஓர் மாயக் காட்சி; a kind of magic.

மாசி[1] *māši,* பெ.(n.) 1. முகில்; mist, cloud. *"ஆதி சோவுடைமாசி யவனென" (பிரபுலிங். முனிவர.19).* 2. புது வரம்பு; new ridge of paddy field. 3. கடல் மீன் வகை (இ.வ.); a sea fish.

*[மாய்→மாயை→மயக்கம் – பொய்த்தோற்றம். மாயை→ மாசி – மயக்கத் தோற்றம், மங்கிய தோற்றம், காட்சியை மங்கலாக்கும் முகில்.]*

மாசி[2] *māši,* பெ.(n.) 1. பதினோராம் மாதம்; the 11th solar month - February - March. *"மாசிநின்ற மாகூர் திங்கள்" (பதிற்றுப்.59, 2).* 2. மகம்[2] (சிலப்.3, 123, உரை) பார்க்க; see *magam.* *முகில்கள் அடர்ந்து காட்சியை மங்கலாக மயங்கத் தெரியும் மாதம்.*

மாசி[3] *māši,* பெ.(n.) ஒரு வகை மீனைக் காய வைத்து இடித்துத் தயாரிக்கும் பொடி; powdered dry fish.

மாசிக்கடா[1] *māši-k-kadā,* பெ.(n.) மாசி மாதத்தில் மிகுதியாகக் கிடைக்கும் வைக்கோலைத் தின்று கொழுத்த காளை (இ.வ.); fat bull, as fed on straw available in plenty in the month of māši. *"மாசிக் கடாவும் மார்கழி நம்பியானும் (உ.வ.)".*

*[மாசி + கடா.]*

மாசிக்கடா[2] *māši-k-kadā,* பெ.(n.) சிற்றூர் தெய்வங்களுக்கு மாசி மாதத்தில் நேர்த்திக் கடனுக்காக வெட்டப்படும் ஆட்டுக்கிடா; ram to be solained during māšimonth to village deities to fulfil vow.

*[மாசி + கடா.]*

மாசிக்காய்[1] *māši-k-kāy,* பெ.(n.) ஒரு வகை மருத்துவ குணம் கொண்ட மரம்; a kind of herb tree, useful for medicine.

*[மாசி + காய்.]*

மாசிக்காய்[2] *māši-k-kāy,* பெ.(n.) மாசக்காய் (பதார்த்த.1015) பார்க்க; see *māša-k-kāy.*

*[மாசக்காய் →மாசிக்காய்.]*

மாசிக்காய்களிம்பு *māši-k-kāy-kaḷimbu,* பெ.(n.) ஓக் மரத்திலிருந்து உருவாக்கப்படும் ஒரு வகைக் களிம்பு; an ointment prepared from oak gall.

*[மாசிக்காய் + களிம்பு.]*

மாசிக்காயுப்பு *māši-k-kā-y-uppu,* பெ.(n.) மாசிக்காயிலிருந்து திரட்டும் உப்பு; tannic acid.

*[மாசிக்காய் + உப்பு.]*

மாசிக்கார் *māši-k-kār,* பெ.(n.) கார் நெல் வகை (இ.வ.); a kind of *kār* paddy.

*[மாசி + கார்.]*

மாசிக்கால்வார்-த்தல் *māši-k-kāl-vār-,* 4 செ.கு.வி.(v.i.) வெற்றிலைக் கொடி படர்தற்காக அகத்தி மரம் உண்டாக மாசி மாதத்தில் அகத்தி விதையைப் பதித்தல் (இ.வ.); to sow agatti seeds in the month of February - Marchfor raising agatti plants to serve as supports for betel - vines.

*[மாசிக்கால் + வார்-,]*

மாசிக்கோடை *māši-k-kōḍai,* பெ.(n.) 1. மாசி மாதத்து நெல்விளைவு; summer crop of paddy as harvested in February - March. 2. வெயிற் காலப் பகுதியான மாசிமாதம்; the month of *māci,* as part of the summer season.

*[மாசி + கோடை.]*

மாசிகம்[1] *māšigam,* பெ.(n.) ஒரு மருந்து; a medicine.

மாசிகம்[2] *māšigam,* பெ.(n.) இறந்தோர் பொருட்டு இறந்த ஆண்டில் திங்கள்தோறும் செய்யும் சடங்கு (வின்.); monthly ceremony for a deceased person, performed during the first year after death.

மாசிகை *māšigai,* பெ.(n.) பறவை (சங்.அக.); bird.

மாசிங்கம் *māšiṅgam,* பெ.(n.) கலைமான் கொம்பு (சங்.அக.); horn of a stag.



மாசித்தகன்னி *māšitta-kaṉṉi,* பெ.(n.) நாறு கரந்தை, கொட்டைக் கரந்தை; indian globe thistle (சா.அக.).

மாசித்தண்ணீர் *māši-t-taṇṇīr,* பெ.(n.) 1. மாசி மாதத்துப் பனித் தண்ணீர்; dew water collected in the month of māši (Feb. and March). 2. பனி கலந்த தண்ணீர்; water mixed with dew water.

*[மாசி + தண்ணீர்.]*

மாசித்தர்மோசம் *māšittar-mōšam,* பெ.(n.) 1. பேரோசனை; a kind of peculiar stone used by siddhars while flying in the aerial regions to afford stability. 2. ஒரு வகைத் துணைச் சரக்கு; a kind of

mineral stone described in Tamil medicinal science (சா.அக.).

மாசித்திக்கல் *māšitti-k-kal,* பெ.(n.) கருங்கல்; black granite stone (சா.அக.).

மாசிதறிருக்கை *māšitarirukkai,* பெ.(n.) பகைவரிடத்துக் கவர்ந்த யானை, ஆ முதலிய விலங்குகளை இரப்போர்க்கு அளவிறந்து கொடுக்கும் பாசறை; camp for the bibaral distribution of animals captured from one's enemy. *"இரப்போர்க் கீதறண்டா மாசிதறிருக்கை" (பதிற்றுப்.76, 8).*

*[மா + சிதறு + இருக்கை.]*

மாசிப்பச்சை *māši-p-paccai,* பெ.(n.) பூச்செடி வகை (இ.வ.); a plant (சா.அக.).

*[மாசி + பச்சை.]*

மாசிப்பச்சோபிதம் *māši-p-paccōbidam,* பெ.(n.) மரமல்லிகை; jasmine tree (சா.அக.).

மாசிபத்திரி *māši-pattiri,* பெ.(n.) 1. வாசனைப் பூடு வகை (பதார்த்த.322); Indian absinth. 2. பூடு வகை; worm wood, aromatic herb. 3. கொட்டைக் கரந்தை வகை ((M.M.4); madras absinth (சா.அக.).

*[மாசி + பத்திரி.]*

மாசிமகம் *māši-magam,* பெ.(n.) மாசி வெள்ளுவாவும், மக நாண் மீனும் கூடிய நன்னாள் (வின்.); the full-moon day in māši, when the .moon is generally in magam.

*[மாசி + மகம்.]*

மாசிமழை *māši-malai,* பெ.(n.) 1. மாசித் திங்களில் உதிரும் மாம்பூக்கள்; mango flowers, as falling in māši. *"மாசி மழை யுருட்டு".* 2. மாசி மாதத்தில் பெய்யும் மழை; rain of māši month.

*[மாசி + மழை.]*

மாசியம்[1] *māšiyam,* பெ.(n.) மாசிகம் (வின்.) பார்க்க; see *māšigam.*

மாசியம்[2] *māšiyam,* பெ.(n.) மாசனம் (இ.வ.) பார்க்க; see *māšanam.*

மாசிலம் *māšilam,* பெ.(n.) மனோசிலை; red orpiment impure bisphurate of arsenic (சா.அக.).

மாசிலாமணி *māšilā-mani,* பெ.(n.) 1. மறுவற்ற மணி; spotless gem. 2. கடவுள்; god of *Šivan.*

*[மாசு = குற்றம். மாசு + இலா + மணி.]*

மாசினி *māšini,* பெ.(n.) மீன் வகை; a kind of fish. *"மாசினி செங்கண்ணன்" (பறாளைப். பள்ளு.74).*

மாசு *māšu,* பெ.(n.) 1. மறு; spot. *"உள்ள மாசறக் களைவோர்" (ஞானா.39, 14).* 2. அழுக்கு; stain, taint, tarnish. *"மாசி றாவுடை" (திருமுரு.138).* 3. குற்றம்; defect, fault, flaw. *"மாசறு காட்சியவர்க்கு" (குறள், 352).* 4. கெடுநேர்ச்சி (விபரீதம்) (சி.சி. அளவை.2); perversity. 5. கருமை (யாழ். அக.); blackness. 6. இருள்; darkness. *"மடியென்னு மாசூர" (குறள், 601).* 7. மேகம் (பிங்.); cloud. 8. கரிசு; sin. 9. தீமை; evil. *"மாசெனக் கெய்தவும்" (கம்பரா. சிறப்புப்.6).* 10. தூளி; dust. *"நெரிந்தன மாசுண நெற்றியே" (தக்கயாகப்.24).* 11. பால் வீதி

மண்டலம்; the milky way. 12. சிறுமை, இழிவு (சூடா.); trifle. 13. மெய்ம்மலம் (பிங்.); ordure. 14. நஞ்சுக் கொடி; after birth. 15. பித்தநீர் (பிங்.977); bile. 16. கோழை (அக.நி.); phlegm. 17. கண்ணின் காசபடலம்; film in the eye. *"மாசு மிகுதியாற் கண்ணொளி யிழந்தார்" (சி.போ.பா.8, 4, பக்.186, சுவாமிநா.).* 18. வலைவடம் (நாமதீப.448); cord of a net.

தெ. மாசி; க., ம. மாசு; து. மாயெ.

*[மாய்–தல் = மறைதல், மாய்→மாயம் = திடுமறைவு, மயக்கம், நிலையின்மை. மாய்→மாயை = பொய்த்தோற்றம், பிழைத்தோற்றம். மாயை→மாசி = மயக்கத் தோற்றம். மாசி→மாசு = மறு, இருள், தீமை.]*

மாசுகம் *māšugam,* பெ.(n.) பீர்க்கு; ribbed gound.

மாசுகி *māšugi,* பெ.(n.) மிளகாய்; chilly (சா.அக.).

மாசுணம் *māšuṇam,* பெ.(n.) 1. பெரும் பாம்பு; rock - snake. *"துஞ்சு மரங் கடுக்கு மாசுணம் விலங்கி" (மலைபடு.261).* 2. பாம்பு; snake. *"மாசுண மகிழ்ச்சி மன்றல்" (சீவக.189). "ஐந்தலைய மாசுணங் கொண்டு" (தேவா.257, 3).*

மாசுணி *māšuṇi,* பெ.(n.) நாய்ப் பாகல்; a creeper (சா.அக.).

மாசுதீர்ப்பான் *māšu-tīrppāṉ,* பெ.(n.) மயிர் வினைஞன் (சது.); barber.

*[மாசு + தீர்ப்பான்.]*

மாசுபடர்தல் *māšu-paḍar,* பெ.(n.) கண்ணில் படருமோர் நோய்; an eye disease marked by growth of film (சா.அக.).

*[மாசு + படர்தல்.]*

மாசுமறு *māšu-maṟu,* பெ.(n.) குற்றம் (பதார்த்த.870); spot, fault.

*[மாசு + மறு.]*

மாசுமறுவற்ற *māšu-maṟuvaṟṟa,* கு.பெ.எ. (adj.) 1. எந்த வகை அழுக்கும் இல்லாத, தூய்மையான; pure. 2. எந்த வகைக் களங்கமும் இல்லாத; blemishless.

*[மாறு + மறு + அற்ற.]*

மாசுரசுரம் *māšura-šuram,* பெ.(n.) அம்மைச் சுரம்; pox fever (சா.அக.).

மாசுவாங்கி *māšu-vāṅgi,* பெ.(n.) மையொற்றுந் தாள் (பாண்டி.); blotting paper.

*[மாசு + வாங்கி.]*

மாசூரசுரம் *māšūra-šuram,* பெ.(n.) ஒரு வகைக் காய்ச்சல் (பைஷஜ.); cruptive fever.

மாசெடி *māšeḍi,* பெ.(n.) வால்மிளகு; cubebs (சா.அக.).

மாசேனன் *māšēṉaṉ,* பெ.(n.) 1. கடவுள் (யாழ்.அக.); god. 2. அருகன் (சூடா.); Arhat. 3. குமரக் கடவுள் (யாழ்.அக.); Lord *Murugaṉ.* 4. திருமால் (யாழ்.அக.); *Tirumāl.*

மாசேனை *māšēṉai,* பெ.(n.) மிகுதி; surplus, mickle much.

*[மா + சேனை.]*

மாசை *māšai,* பெ.(n.) 1. பொன்; gold. *"மாசை மாக்கடல்" (சீவக.911).* 2. உழுந்து நிறையளவுள்ள பழைய நாணய வகை; an ancient coin of the weight of a grain of

*māsa* or blackgram. *"மாசையொடு தக்கணை யுதவி" (பெருங். உஞ்சைக்.39, 11).*

மாஞ்சாதம் *māñjādam,* பெ.(n.) அளறு வகை (சி.போ.பா.2, 3, பக்.204); a hell.

மாஞ்சி[1] *māñji,* பெ.(n.) சடாமாஞ்சி; spikenard herb. *"துத்தமாஞ்சி" (பெருங். மகத.17, 147).* 2. மணமுள்ளப் பண்ட வகை (திவா.); a fragrant substance.

மாஞ்சி[2] *māñji,* பெ.(n.) 1. சணல்; sunn-hemp. 2. ஓர் இசை வகை (சங்கீத.காய.21); (mus.) a specific melody type.

மாஞ்சிரோகணி *māñji-rōgaṇi,* பெ.(n.) கண்புகைச்சலை நீக்கும் ஓர் பூண்டு; a herb useful for eye diseases (சா.அக.).

மாஞ்சில் *māñjil,* பெ.(n.) மாஞ்சி, 1 (யாழ்.அக.) பார்க்க; see *māñji.*

மாஞ்சோறு *māñjōṟu,* பெ.(n.) கடலடிச் சேறு (செங்கை.மீன.); under sea marsh.

மாஞாலம்[1] *māñālam,* பெ.(n.) பெரிய நிலம்; earth.

*[மா + ஞாலம்.]*

மாஞாலம்[2] *māñālam,* பெ.(n.) 1. மாசாலம்; a kind of magical art. 2. பேரூமத்தை; a big variety of dhatura (சா.அக.).

*[மா + ஞாலம்.]*

மாட்சி *māṭci,* பெ.(n.) 1. உயர் தன்மை; glory, greatness. *"எனை மாட்சித் தாகியக் கண்ணும்" (குறள், 750).* 2. விளக்கம்; clearness, clarity. *"மூலவோலை மாட்சியிற் காட்ட வைத்தேன்" (பெரியபு.தடுத்தாட்.56).* 3. அழகு; beauty. *"நூலோர் புகழ்ந்த மாட்சிய.... புரவி" (பெரும்பாண்.487).* 4. இயல்பு; nature. *"மரபுநிலை தெரியா மாட்சியவர்" (தொல்.மரபி.648).*

*[முல் (பொருந்தற் கருத்துவேர்) → மல் → மால். மால் = பெருமை, பெருமையுடையவன், மலை, வளமை. மால் → மாள் → மாளிகை = மாடமுள்ளவீடு, பெருவீடு, அரண்மனை, கோயில். மாள் → மாண் → மாணுதல் = மிகுதல், பருத்தல், நிறைதல், நன்றாதல், சிறத்தல். மாண் → மாட்சி (வே.க.4:30).]*

மாட்சிகம் *māṭcigam,* பெ.(n.) ஓர் வகைத் தேன்; a kind of honey secreted by tawny bee's and considered best (சா.அக.).

*[மாட்சி → மாட்சிகம்.]*

மாட்சிகற்பம் *māṭci-kaṟpam,* பெ.(n.) நிமிளை பற்பம்; calcined pyrite (சா.அக.).

மாட்சிமை *māṭcimai,* பெ.(n.) மாட்சி, 1 பார்க்க; see *māṭci. "மாட்சிமை யுடையோர் கொடுக்கு மரபு போல" (சிலப்.16 : 23, உரை).*

*[மாட்சி → மாட்சிமை (வே.க.4:30).]*

மாட்டடி[1] *māṭṭaḍi,* பெ.(n.) மாட்டின் அடி வைப்பு (வின்.); step or tract of cattle.

*[மாடு → மாட்டு + அடி. மாட்டின் அடி.]*

மாட்டடி[2] *māṭṭaḍi,* பெ.(n.) கடுமையான அடி (வின்.); severe blow, as in beating an ox.

*[மாடு → மாட்டு + அடி. மாட்டை அடிப்பதைப் போன்று கடுமையான அடி.]*

மாட்டம் *māṭṭam,* பெ.(n.) சீரகம்; cumin seed (சா.அக.).

மாட்டல்[1] *māṭṭal,* பெ.(n.) 1. மூட்டல் (சூ.நிக. 9–29); joint. 2. வருத்தல் (ஐங்குறு.); sympathise.

*[மாட்டு → மாட்டல்.]*

மாட்டல்² *māṭṭal*, பெ.(n.) பெண்கள் அணியும் அணி (இ.வ.); a woman's ornament.

*[முல் → முள் → மூள் → மூட்டு → மாட்டு → மாட்டல்.]*



மாட்டறி-தல் *māṭṭaṟi-*, 2 செ.கு.வி.(v.i.) சான்றுக் கையெழுத்திடுதல்; to sign as witness. *"சேனை யோக நாச்சண்ணனும் மாட்டறிந்தது" (S.I.I.iv, 134).*

*[முல் → முள் → மூள் → மூட்டு → மாட்டு + அறி-.]*

மாட்டறை-தல் *māṭṭaṟai-*, 2 செ.கு.வி. (v.i.) ஆவண முதலியவற்றின் பின்பக்கத்திற் குறிப்பெழுதுதல் (யாழ்ப்.); to endorse, as on the back of a note.

*[மாட்டு + அறை-.]*

மாட்டாங்காரப்பயல் *māṭṭāṅgāra-p-payal*, பெ.(n.) மாட்டுக்காரப்பயல் (வின்.) பார்க்க; see *māṭṭu-k-kāra-p-payal.*

*[மாட்டுக்காரப்பயல் → மாட்டாங்காரப்பயல் (கொ.வ.)]*

மாட்டாங்கோல் *māṭṭāṅgōl*, பெ.(n.) 1. மாட்டை யோட்டுங் கழி (வின்.); goad, or stick used in driving cattle. 2. மாட்டுக்கோல் பார்க்க; see *māṭṭu-k-kōl.*

*[மாட்டு + கோல் = மாட்டுக்கோல் → மாட்டாங்கோல் (கொ.வ.).]*

மாட்டாதார்¹ *māṭṭādār*, பெ.(n.) வன்மை யில்லாதவர் (திவா.); incapable, incompetent persons.

*[மாட்டுதல் = இயலுதல். மாட்டு → மாட்டாதார்.]*

மாட்டாதார்² *māṭṭādār*, பெ.(n.) அகப்படாதோர், சிக்கிக்கொள்ளாதோர்; those who entangled.

*[மாட்டுதல் = சிக்குதல். மாட்டு → மாட்டாதார்.]*

மாட்டாமை¹ *māṭṭāmai*, பெ.(n.) இயலாமை (தண்டி.பொ அணி.69, சூ.உரை); incapable.

*[முல் → முள் → மூள் → மாள் → மாட்டு. ஒ.நோ. நீள் → நீட்டு. மாளுதல் = முடிதல், செய்யமுடிதல். மாட்டுதல் = முடித்தல், செய்து முடித்தல். மாட்டு → மாட்டாமை. 'ஆ' எதிர்மறை இடைநிலை.]*

மாட்டாமை² *māṭṭāmai*, பெ.(n.) மாட்டிக் கொள்ளாமை; not tangled, not catch.

மாட்டார் *māṭṭār*, பெ.(n.) மாட்டாதார் பார்க்க; see *māṭṭādār. "வல்லார்க்கும் மாட்டார்க்கும் வரமளிக்கும் வரமே" (அருட்பா. vi. அருள் விளக்க.39).*

*[மாட்டுதல் = இயலுதல். மாட்டு = இயலுதல். மாட்டு → மாட்டார். 'ஆ' எதிர்மறை இடைநிலை. ஆர் = பலர்பாலீறு.]*

மாட்டி *māṭṭi*, பெ.(n.) 1. அழித்து (முல்லை.); destroy. 2. எரித்து (சிறுபா.); burn up. 3. பொருத்தி (வழ.); joining.

மாட்டிக்கொடு-த்தல் *māṭṭi-k-koḍu-*, 4 செ.குன்றாவி.(v.t.) மாட்டிவிடு¹- பார்க்க; see *māṭṭi-viḍu-.*

**மாட்டிக்கொள்(ளு)-தல்** *mātti-k-kol-*, 16 செ.கு.வி.(v.i.) சிக்கிக் கொள்ளுதல்; to be entangled, ensnared or involved.

*[முள்→மூள்→மூட்டு.மூட்டுதல் =பொருந்துதல். மூட்டு→மாட்டு. மாட்டுதல் = கொளுவுதல், தீப்பற்ற வைத்தல். மாட்டு→மாட்டி (மு.தா.194). மாட்டி + கொள்(ளு)-,]*

**மாட்டிடையன்** *māttidaiyan,* பெ.(n.) மாடு மேய்க்கும் இடையன்; cowherd.

*[மாடு→மாட்டு + இடையன்.]*

**மாட்டிலையான்** *māttilaiyān,* பெ.(n.) பெரிய ஈ (வழக்குச் சொல்); fly big in size.

*[மாடு = விலங்கு. மாடு→மாட்டு + இலையான்.]*

**மாட்டீ** *mātti,* பெ.(n.) பெரிய ஈ; big size fly.

*[மாடு = விலங்கு. மாடு→மாட்டு+ ஈ.]*

**மாட்டிவிடு[1]-தல்** *mātti-vidu-,* 18 செ.குன்றாவி. (v.t.) 1. தொழுக்கட்டை முதலியவற்றில் சேரவிணைத்தல்; to put in stocks, to shackle. 2. அகப்படுத்துதல்; to involve one in, to subject one to.

*[முள்→மூள்→மூட்டு.மூட்டுதல்= பொருந்துதல். மூட்டு→மாட்டு→மாட்டி (மு.தா.194). மாட்டி + விடு.]*

**மாட்டிவிடு[2]-தல்** *mātti-vidu-,* 18 செ.குன்றாவி. (v.t.) போக்குதல்; to remove. *"மாட்டிவிடு நம்மனத்துமை" (திருவாய் மொழி.நூற்.83).*

*[முள்→மூள்→மூட்டு→மாட்டு. மாட்டுதல் = கொளுவுதல், தீப்பற்ற வைத்தல். மாட்டு→மாட்டி + விடு (மு.தா.194). மாட்டும் பொருள் மாட்டப்பட்டதன் வழி போகும் இயல்புடையது.]*

**மாட்டிவை-த்தல்** *mātti-vai-,* 4 செ.குன்றாவி. (v.t.) மாட்டிவிடு[1]- (வின்.) பார்க்க; see *mātti-vidu-.*

*[மாட்டுவிடு→மாட்டிவை-.]*

**மாட்டிறக்கம்** *māttirakkam,* பெ.(n.) மாடு முதலியவை ஆற்றைக் கடந்து செல்லுதற்குரிய இறங்கு துறை (வின்.); ford across a river for cattle to cross.

*[மாடு + இறக்கம்.]*

**மாட்டிறைச்சி** *māttiraicci,* பெ.(n.) மாட்டுக் கறி; beef.

*[மாடு + இறைச்சி.]*

**மாட்டு[1]-தல்** *māttu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. இணைத்தல் (சூடா.); to fasten on, button, tackle, hook. *"சிறுபொறி மாட்டிய பெருங் கல்லடாஅர்" (நற்.19).* 2. தொடுத்தல்; to fix, attach. *"அம்பினை மாட்டியென்னே" (கம்பரா. நிகும்பலை.96).* 3. செருகுதல்; to put in, thrust, as fuel. *"அடுப்பினின் மாட்டு மிலங்ககில்" (காஞ்சிப்பு.நகர்.73).* 4. பயன்படுத்துதல்; to use, bring into play. *"வள்ளறான் வல்லவெல்லா மாட்டினன்" (சீவக.1274).* 5. மனத்திற் கொள்ளுதல்; to grasp, comprehend. *"சொன்மாலை யீரைந்து மாட்டிய சிந்தை" (திருவிசை. கருவூ.8, 10).* 6. கற்றுவல்லனாதல்; to be proficient in. *"கல்வியை மாட்டாராயினும்" (புறநா.57, உரை).* 7. அடித்தல்; to beat violently. *"வின்முறிய மாட்டானோ" (தனிப்பா.i, 41, 80).* நன்றாய் மாட்டுமாட்டென்று மாட்டிவிட்டான் (உ.வ.). 8. விளக்கு முதலியன கொளுத்துதல்; to kindle as a fire, to light, as a lamp. *"நெய் பெய்து மாட்டிய சுடர்" (குறுந்.398).* 9. தீப்பற்றவைத்தல்; to burn. *"விறகிற்... செந்தீ மாட்டி" (சிறுபாண்.156).*

**மாட்டு²–தல்** *māṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. கூடியதாதல்; to be able. *"தேவரு நண்ணவு மாட்டா விழுப்பொருளை" (திருவாச.20, 9).* 2. வலிபெறுதல்; to be competent, to have necessary strength. *"மாட்டா மனிதன்றன்" (கம்பரா.அதிகா.270).*

*[முள் (பொருந்தற் கருத்து வேர்) → மூள் → மூட்டு. மூட்டுதல் = பொருந்துதல். மூட்டு → மாட்டு (மு.தா.194). மாள் → மாட்டு (பி.வி. ஒ.நோ. நீள் → நீட்டு. மாளுதல் = முடிதல், செய்ய முடிதல். மாட்டுதல் = முடித்தல், செய்து முடித்தல் (வே.க.4:62)]*

**மாட்டு³–தல்** *māṭṭu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. மாளச் செய்தல்; to kill. *"மாட்டிய பிள்ளை மறவர் நிறந் திறந்து" (பு.வெ.2, 9).* 2. அழித்தல்; to destroy. *"வேட்டுப் புழையருப்ப மாட்டி" (முல்லைப்.26).* 3. போக்குதல்; to remove, to cause, to disappear. *"மாயை யவுயவ மாட்டி" (ஞானா. 58, 12).*

*[முள் → மூள் → மூட்டு → மாட்டு–தல்.]*

**மாட்டு⁴** *māṭṭu,* பெ.(n.) 1. அகன்று கிடப்பினும் அணுகிய நிலையிற் கிடப்பினும் பொருள் முடியுமாற்றாற் கொண்டு கூட்டிச் சொல் முடிபு கொள்ளும் முறை; a mode of construction in verse, which consists in taking together words connected in sense, whether far removed from each other or in close proximity. *"அகன்று பொருள் கிடப்பினும்..... அணுகிய நிலையினும் இயன்று பொருள் முடியத் தந்தன ருணர்த்தல் மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின்" (தொல். பொருள்.522).* 2. அடி (இ.வ.); blow, stroke.

*[முள் → மூள் → மூட்டு → மாட்டு.]*

**மாட்டு⁵** *māṭṭu,* பெ.(n.) சொல்; word. *"எனதென்ற மாட்டின்" (சி.போ.3:2).*

*[முள் → மூள் → மூட்டு → மாட்டு.]*

**மாட்டுஅயிரை** *māṭṭu-ayirai,* பெ.(n.) பெரிய அயிரை மீன் (மீன.பொ.வ.); a kind of small fish.

*[மாடு + அயிரை. மாடு = பெரிய.]*



**மாட்டுக்கட்டை** *māṭṭu-k-kaṭṭai,* பெ.(n.) மாடு கட்டுந் தறி (இ.வ.); stake for tying cattle.

*[மாடு + கட்டை.]*

**மாட்டுக்கறை** *māṭṭu-k-kaṟai,* பெ.(n.) வரி வகை (S.I.I.v, 499); a tax.

**மாட்டுக்காரப்பையன்** *māṭṭukkāra-p-paiyaṉ,* பெ.(n.) 1. மாடு மேய்ப்பவன் (இ.வ.); neat - herd, cow-boy. 2. பயனற்றவன (வின்.); worthless fellow.

*[மாட்டுக்காரன் + பையன்.]*

**மாட்டுக்காரன்** *māṭṭu-k-kāraṉ,* பெ.(n.) 1. மாட்டிற்குரியவன்; owner of cattle. 2. மாடு மேய்ப்பவன் (கொ.வ.); one who tends cattle.

*[மாடு + காரன். காரன் = உடைமையீறு.]

**மாட்டுக்காலிற்போடு-தல்** *māṭṭu-k-kāliṟ-pōḍu-*,19 செ.குன்றாவி.(v.t.) களத்திற் சூடடித்தல் (நாஞ்.); to tread sheaves on the threshing - floor, by using cattle.

*[மாட்டுக்காலில் + போடு-.]*

**மாட்டுக்கிடை** *māṭṭu-k-kiḍai,* பெ.(n.)
1. மாட்டுமந்தை (இக்.வ.); herd of cattle.
2. மாட்டுக்கொட்டில் (வின்.) பார்க்க; see *māṭṭu-k-koṭṭil.*

*[மாடு + கிடை.]*

**மாட்டுக்கிடைபோடு-தல்** *māṭṭu-k-kiḍai-pōḍu-,* பெ.(n.) உரத்திற்காக மாட்டு மந்தையை நிலத்தில் நிறுத்தி வைத்தல்; herd of cattle to be waive due to manure.

*[மாடு→மாட்டு + கிடை + போடு-,]*

**மாட்டுக்குளம்பு**[1] *māṭṭu-k-kuḷambu,* பெ.(n.) மாட்டின் பாதநுனி; toa of bulls.

*[மாடு→மாட்டு + குளம்பு.]*



**மாட்டுக்குளம்பு**[2] *māṭṭu-k-kuḷambu,* பெ.(n.) பச்சிலைக் கொடி; cow's hoof (சா.அக.).

*[மாடு + குளம்பு. மாட்டின் குளம்பு போன்ற வடிவுடையது.]*

**மாட்டுக்கொட்டகை** *māṭṭu-k-koṭṭagai,* பெ.(n.) மாட்டுக்கொட்டில் (வின்.) பார்க்க; see *māṭṭu-k-koṭṭil.*

*[மாட்டுக்கொட்டில்→மாட்டுக்கொட்டகை.]*

**மாட்டுக்கொட்டில்** *māṭṭu-k-koṭṭil,* பெ.(n.) மாடு கட்டுமிடம் (வின்.); cow-shed, cattle shed.

*[மாடு + கொட்டில்.]*

**மாட்டுக்கொம்பு** *māṭṭu-k-kombu,* பெ.(n.)
1. மாட்டின் கொம்பு; horn of cattle.
2. கடல்படு பயிரிற் சிறியது. அணிகலனாய்க் கோத்து அணிதற்குரியது (முகவை. மீன்.); sea-small plant which is used on ornament.

*[மாடு + கொம்பு.]*

**மாட்டுக்கொம்பு**[2] *māṭṭu-k-kombu,* பெ.(n.) ஓர் மருந்துச் சரக்கு; horns of cattle, a kind of natural body.

**மாட்டுக்கொழுப்பு** *māṭṭu-k-koḻuppu,* பெ.(n.) மாட்டின் நிணம்; tallow.

*[மாடு + கொழுப்பு.]*

**மாட்டுக்கோல்** *māṭṭu-k-kōl,* பெ.(n.) மாடோட்டுஞ் சாட்டைக் கழி; goad or stick used in driving cattle.

*[மாடு→மாட்டு +கோல்.]*

**மாட்டுச்சாபிகம்** *māṭṭu-c-cābigam,* பெ.(n.) கோரோசினை; bezor orientale (சா.அக.).

**மாட்டுச்சிணி** *māṭṭu-c-ciṇi,* பெ.(n.) மாட்டு நாற்றம் (வின்.); the smell of cattle.

**மாட்டுச்செறையா** *māṭṭu-c-ceṟaiyā*, பெ.(n.) மிகப்பெரிய செறையா மீன் (முகவை.மீன.); a big size of *ceṟaiya* fish.

**மாட்டுச்சோளி** *māṭṭu-c-cōḷi*, பெ.(n.) மாட்டின் நெற்றிப் பட்டையில் கோத்துக் கட்டுதற்குரிய சோளி (தஞ்சை.மீன.); forehead ornament arround the cattle made up of oyster.

*[மாடு → மாட்டு + சோளி]*



**மாட்டுண்ணி** *māṭṭuṇṇi*, பெ.(n.) பெரிய அளவிலான உண்ணி; acarus, tick on dogs, sheep and cattle which is big in size.

*[மாடு + உண்ணி.]*

**மாட்டுணி** *māṭṭuṇi*, பெ.(n.) மாட்டுண்ணி பார்க்க; see *māṭṭuṇṇi*.

*[மாட்டுண்ணி→மாட்டுணி.]*

**மாட்டுத்தனம்** *māṭṭu-t-taṉam*, பெ.(n.) விலங்கின் தன்மை (வின்.); bruitishness.

*[மாடு + தனம். மாடு = விலங்கு. தனம் = தன்மையைக் குறிக்கும் பெயரீறு.]*

**மாட்டுத்தாவணி** *māṭṭu-t-tāvaṇi*, பெ.(n.) மாடுகளை வாங்கவும், விற்கவும் உரிய இடம்; cattle fair.

*[மாடு + தாவணி. தாழ்வு →தாவு = வாழிடம், தங்குமிடம். தாவு →தாவணி.]*

கோயில் நகரமாம் மதுரை மாநகரில் வெளியூர் பேருந்துகள் நிற்குமிடத்திற்கு மாட்டுத் தாவணி என்று அழைக்கப்படுகிறது. ஒரு காலத்தில் மாடுகள் வாங்கவும், விற்கவும் உரிய இடமாக இருந்தமையால் இப்பெயர் பெற்றுள்ளது எனலாம்.

**மாட்டுத்தாள்** *māṭṭu-t-tāḷ*, பெ.(n.) கரட்டுத் தாள்; coarse paper of மட்டித்தாள்.

*[மட்டித்தாள்→மாட்டுத்தாள்.]*

**மாட்டுத்தும்பு** *māṭṭu-t-tumbu*, பெ.(n.) மாடு கட்டுவதற்கான கவையுள்ள புரிக்கயிறு; tether for cattle.

*[மாடு + தும்பு.]*

**மாட்டுநீறு** *māṭṭu-nīṟu*, பெ.(n.) ஒரு பொதிமாடு சுமக்கக் கூடிய நான்கு கலங்கொண்ட சுண்ணாம்பு நீறு (G.Tj. D.I.134); four kalam of quick -lime, as one bullock - load.

*[மாடு + நீறு. நூறு→நூள். நூறு→நீறு.]*

**மாட்டுப்பட்டி** *māṭṭu-p-paṭṭi*, பெ.(n.) மாடடைக்குங் கொண்டித் தொழு; cattle pond. *"மாட்டுப்பட்டிக் கோரைந்து பணமென்று" (சரவண.பணவிடு.110).*

*[மாடு + பட்டி.]*

**மாட்டுப்பல்** *māṭṭu-p-pal*, பெ.(n.) அகன்று பெரியதான பல்; large teeth.

*[மாடு + பல்.]*

மாட்டுப்பறங்கிக்காய் *māṭṭu-p-paṟaṅgi-k-kāy*, பெ.(n.) சாம்பற் பூசணி; ash gourd. *"மாட்டுப் பறங்கிக்காய்..... தினங் கறியாய்க் கூட்டிக் கொண்டு" (விறலிவிடு.246).*

*[மாடு + பறங்கிக்காய்.]*



மாட்டுப்பிலாச்சை *māṭṭu-p-pilāccai*, பெ.(n.) பெரிய பிலாச்சை மீன்; a large size of *pilāccai* fish (சா.அக.).

*[மாடு + பிலாச்சை.]*

மாட்டுப்புத்தி *māṭṭu-p-putti*, பெ.(n.) மாட்டறிவு பார்க்க; see *māṭṭaṟivu.*

*[மாடு + புத்தி.* **Skt.** *புத்தி. த. அறிவு.]*

மாட்டுப்பூசணி[1] *māṭṭu-p-pūšaṇi*, பெ.(n.) நஞ்சு நீங்குவதற்காகக் கொடுக்கும் ஒருவகைப் பழம்; a kind of fruit given as antidote against poison.

*[மாட்டு + பூசினி.]*

மாட்டுப்பூசணி[2] *māṭṭu-p-pūšaṇi*, பெ.(n.) சாம்பற்பூசணி பார்க்க; see *šāmbar-pūšaṇi.*

*[மாடு + பூசணி.]*

மாட்டுப்பெண் *māṭṭu-p-peṇ*, பெ.(n.) மருமகள்; daughter-in-law.

*[மணாட்டுப் பெண்→மாட்டுப் பெண்.]*

மாட்டுப்பொங்கல் *māṭṭu-p-poṅgal*, பெ.(n.) சுறவத்திங்கள் முதல்நாள் வரும் பொங்கல் நாளையடுத்து வருவதும் கால்நடைகளின் நன்மையைக் கருதிப் பொங்கலிடப் படுவதுமான திருநாள்; festival of ceremonial boiling of rice performed on the second day of the month of *Šuṟavam* in order to ensure prosperity of cattle.

*[மாடு + பொங்கல்.]*

மாட்டுமழு *māṭṭu-maḻu*, பெ.(n.) சூடுபோடுகை; branding.

*[மாட்டு + மழு.]*

சிற்றூர்த் தெய்வங்களுக்கு நேர்ச்சிக்கடனாக விடப்படும் மாடுகளுக்கு அடையாளமாக காய்ச்சிய இரும்பினால் மாட்டின் மீது சூடு போடுவதும், மந்தை மாடுகளில் தங்களுடையது என அடையாளம் காணுவதற்காக சூடுபோடுவதும், சிற்றூர் மக்களிடையே காணப்படும் பழக்கமாகும்.

மாட்டுமீன் *māṭṭu-mīṉ*, பெ.(n.) மாடு போன்று தலையில் கொம்புடைய ஒரு வகைக் கடல் மீன்; coffer fish with two horn like growths on the head, it is a sea fish.

*[மாடு→மாட்டு + மீன்.]*

மாட்டுமுலைக்காளான் *māṭṭu-mulai-k-kāḷāṉ*, பெ.(n.) பசுவின் மடிபோன்றிருக்கும் காளான் வகை (வின்.); a kind of fungus, as resembling the teat of a cow's udder.

*[மாட்டுமுலை + காளான்.]*

மாட்டுவண்டி *māṭṭu-vaṇḍi,* பெ.(n.) ஒரு மாடு அல்லது இரு மாடுகள் இழுத்துச் செல்லும் மரத்தால் செய்த வண்டி; bullock cart.

*[மாடு + வண்டி.]*



மாட்டுவலை *māṭṭu-valai,* பெ.(n.) வலை வகை, பெருவலையின் ஒரு உறுப்பாகப் பிணைக்கப்பட்டிருக்கும் வலை; a kind of net, a part of net in large net.

*[மாட்டு + வலை.]*

மாட்டுவாகடம் *māṭṭu-vāgaḍam,* பெ.(n.) மாட்டின் நோய்களைப் பற்றிக் கூறும் மருத்துவ நூல்; indigenous veterinery science.

மாட்டுவாரம் *māṭṭu-vāram,* பெ.(n.) குடியானவன் உதவும் உழுவு மாட்டுக்குத் தக்கபடி மேல்வாரக்காரன் அவனுக்குக் கொடுக்கும் விளைச்சலின் பங்கு (இ.வ.); system of sharing nañja produce in which the tenent's portion is determined by the number of yoke of oxen that he furnishes.

*[மாட்டு + வாரம்.]*

மாட்டுவி-த்தல் *māṭṭuvi-,* 4 செ.குன்றாவி. (v.t.) அழியச் செய்தல்; to cause to be ruined. *"மதுவனந் தன்னை யின்னே மாட்டுவித்தனை நீ யென்னா" (கம்பரா. திருவடி.23).*

*[மாட்டு→மாட்டுவி-.]*

மாட்டெறி[1]-தல் *māṭṭeṟi-,* 2 செ.கு.வி. (v.i.) ஏறிட்டுக் கூறுதல்; to ascribe, attribute, to apply. *"பரத்வத்தை அவன் தலையிலே மாட்டெறிந்தார்" (ஈடு.2, 2, 4).*

மாட்டெ[2]-றிதல் *māṭṭeṟi-,* பெ.(n.) 1. மாட்டு[3], 1 பார்க்க; see *māṭṭu.* 2. மாட்டெறிந் தொழுகல் பார்க்க; see *māṭṭeṟin-doḻugal.* 3. ஆவணத்தில் மேற்புறத்தே விவரக் குறிப்பு எழுதுகை (வின்.); docketing on a deed.

*[மாட்டு + எறிதல்.]*

மாட்டெறிந்தொழுகல் *māṭṭeṟin-doḻugal,* பெ.(n.) முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்றானதும், ஒரு நூற்பாவிற் கூறிய நெறியை அதனை யொத்த நூற்பாவிதரும் இணைத்துக் கொள்வதுமான உத்தி (நன்.14); (Gram.) application of the principle of one *sūtra*, to another when their subjects are similar, one of 32 utti, (q.v.).

*[மாட்டெறிந்து + ஒழுகல்.]*

மாட்டேற்று *māṭṭēṟṟu,* பெ.(n.) 1. மாட்டெறிந் தொழுகல் பார்க்க; see *māṭṭeṟindoḻugal.* 2. மாட்டெறிதல் பார்க்க; see *māṭṭeṟidal.* 3. குறிப்பாகக் கூறுகை (வின்.); allusion, reference.

மாட்டேறு *māṭṭēṟu,* பெ.(n.) மாட்டெறிதல், 1, 2 (நன்.164, உரை) பார்க்க; see *māṭṭeṟidal.*

மாடக்கனி *māḍa-k-kaṉi,* பெ.(n.) தேவாங்கு; sloth.

மாடக்கனிவாய் *māḍa-k-kaṉivāy,* பெ.(n.) கருங்குளவி; a black beetle.

மாடக்குழி *māḍa-k-kuḻi,* பெ.(n.) வீடுகளில் விளக்கு வைப்பதற்கு அமைக்கப்படும் இடம் (இக்.வ.); a small niche in the wall of a house to keep an oil lamp.

*[மாடம் + குழி.]*



மாடக்கோயில் *māḍa-k-kōyil,* பெ.(n.) மேட்டிடத்தில் குறுகிய வழியுள்ளதாகக் கோச் செங்கணான் கட்டிய சிவக்கோயில் (தேவா.467, 10); *Śivaṉ* temple with narrow passage built on mounds by *kōcceṅgaṇaṉ.*

*[மாடம் + கோயில்.]*

மாடகம்[1] *māḍagam,* பெ.(n.) பாலிகை வடிவான வாசிக்குங் கருவி (நச்.சீவ.1697); pot shaped musical instrument.

*[மாடம் + அகம்.]*

மாடகம்[2] *māḍagam,* பெ.(n.) யாழின் முறுக்காணி; screw-pin of a lute. *"இடக்கை நால்விரல் மாடகந் தழீஇ" (சிலப்.8, 78).*

மாடகூடம் *māḍa-kūḍam,* பெ.(n.) மாடிவீடு; storied house. *"இம்மாட கூடம்...... அளகையினுமிலது" (பாரத.இராசசூ.12).*

*[மாடம் + கூடம்.]*

மாடச்சிவிகை *māḍa-c-civigai,* பெ.(n.) சிவிகை வகை; a kind of Palanquin.

*[மாடம் + சிவிகை.]*

மாடநிலை *māḍa-nilai,* பெ.(n.) உப்பரிகை; terrace. *"மாடநிலை தெற்றியினிருந்தவர்" (பாரத.வாராணா.57).*

*[மாடம் + நிலை.]*

மாடப்புரை *māḍa-p-purai,* பெ.(n.) மாடக்குழி (இ.வ.) பார்க்க; see *māḍa-k-kuḻi.*

*[மாடம் + புரை.]*

மாடப்புறா *māḍa-p-puṟā,* பெ.(n.) புறா வகை (தக்கயாகப்.607, உரை); blue rock - pigeon, species of columba.



மாடப்புறாக்கண்ணிறம் *māḍa-p-puṟā-k-kaṇṇiṟam,* பெ.(n.) அமுக்கிரா என்னும் மருந்துச் செடி; a medicinal plant called amukkira, Indian winter cherry, s.sh. *withania somnifera.*

[மாடப்புறா + கண் + நிறம்.]

மாடபூபதி *māḍa-pūbadi,* பெ.(n.) கொச்சி யரசர்க்குரிய பட்டப் பெயர் (நாஞ்.); a title of the *Rājā* of Cochin.

மாடம்[1] *māḍam,* பெ.(n.) 1. மாடி வீடு; storied house. *"மாட மாளிகைகோபுரங் கூடங்கள்" (தேவா.797, 7).* 2. வீடு (பிங்.); house, mansion, hall. *"மஞ்சுதோய் மாடமணி உத்தரகோச மங்கை" (திருவாச.16, 4).* 3. மாடக்கோயில் பார்க்க; see *māḍa-k-kōyil. "எண்டோளீசற் கெழின் மாட மெழுபது செய்து" (திவ்.பெரியதி.6, 6, 8).* 4. குடிசை (நாஞ்.); hut. *"தோட்டக் காவலுக்காக ஒலை மாடம் மடக்கினான்" (நாஞ்.).* 5. மாடக்குழி பார்க்க; see *māḍa-k-kuḻi.*

*[முல் (பொருந்தற் கருத்து வேர்) →மல்→மால் = பெருமை, பெருமையுடையவன், வளமை, மலை. மால் →மாள்→மாளிகை = மாடமுள்ள பெருவீடு, அரண்மனை, கோயில். மாள்→மாண். மாணுதல் = மிகுதல், பருத்தல், நிறைதல், நன்றாதல், சிறத்தல், மாட்சிமைப்படுதல். மாண்→மாணம் = மாட்சிமை, மாணம்→மாடம் (வே.க.4:30).]*

மாடம்[2] *māḍam,* பெ.(n.) 1. சுவரிலுள்ளடங்கிய புரை; niche. 2. சுவரிற் பொத்தகம் முதலியன வைக்க உதவும் புரை அல்லது புரைவரிசை; shelf.

*[மடு→மடம்→மாடம் (வே.க.4:92).]*

மாடம்[3] *māḍam,* பெ.(n.) 1. உளுந்து (பிங்.); black gram. 2. குன்றி பத்துக் கொண்ட ஒரு நிறை (சுக்கிரநீதி, 105); a measure of weight of 10 *kunri.*

மாடம்[4] *māḍam,* பெ.(n.) சரக்கறை (சிலப். 6:122); store room, godown.

மாடமாளிகை *māḍa-māḷigai,* பெ.(n.) மாடகூடம் (கொ.வ.) பார்க்க; see *māḍa-kūḍam.*

*[மாடம் + மாளிகை.]*

மாடமுட்டை *māḍa-muṭṭai,* பெ.(n.) கண்பீளை; discharge from the eye.

*[மாடம் + முட்டை. மாடம் = புரை. கண்குழி சுவற்றுப் புரை போன்றிருப்பதாகக் கொண்டு, அதன் மருங்கு ஒதுங்கும் அழுக்கு முட்டை வடிவினதாயிருப்பதாய்க் கருதி மாடமுட்டை என்றொரு சொல்லை யமைத்தனர் போலும்.]*

மாடலன்[1] *maḍalan,* பெ.(n.) சிலப்பதிகாரத்தில் வரும் கதைமாந்தருள் ஒருவன்; one of the character of *Silappadigāram. "மாமறை முதல்வன் மாடல னென்போன்" (சிலப்.15, 13).*

மாடவாழை *māḍa-vāḻai,* பெ.(n.) பேயன் வாழை (இ.வ.); Manilla hemp.

மாடவீதி *māḍa-vīdi,* பெ.(n.) கோயிலைச் சுற்றியுள்ள தெரு; main street surrounding a temple. *"விண்ணுயர் மாளிகை மாட வீதி" (தேவா.418, 1).*

*[மாடம் + வீதி.]*

மாடன்[1] *māḍan,* பெ.(n.) 1. சிற்றூர்த் தெய்வம்; a village deity. 2. மூடன்; ignorant, stupid man.

*[மாடம்→மாடன். மாடம் =கோயில்.]*

நெல்லை மாவட்டத்தில் ஏராளமான சுடலை மாடன் என்ற பெயரில் சிற்றூர்த் தெய்வங்கள் காணப்படுகிறது.

மாடன்[2] *māḍan,* பெ.(n.) துருசு; blue vitriol - sulphate of copper (சா.அக.).

**மாடன்விற்கொடிச்சி** *māḍaṉ-viṟ-koḍicci,* பெ.(n.) கற்பூரம்; camphor (சா.அக.).

**மாடனம்** *māḍaṉam,* பெ.(n.) முட்டைக்கோசு; cabbage (சா.அக.).

**மாடாக்குழி** *māḍā-k-kuḻi,* பெ.(n.) மாடக் குழி (வின்.) பார்க்க; see *māḍa-k-kuḻi.*

*[மாடக்குழி→மாடாக்குழி.]*

**மாடி**¹ *māḍi,* பெ.(n.) 1. கட்டடத்தின் மேல் தளம்; terrace. 2. மேனிலையுள்ள வீடு; storied house.

*[முல்→மல்→மால் = பெருமை, வளமை, மலை. மால்→மாள்→மாளிகை = மாடமுள்ள பெரு வீடு, கோயில், அரண்மனை. மாள்→மாண்→மாணுதல் = மிகுதல், பருத்தல், நிறைதல். மாண்→மாணம் = மாட்சிமை. மாணம்→மாடம்→மாடி (வே.க.4:31).]*

**மாடி**² *māḍi,* பெ.(n.) 1. இக்கட்டு; distress. 2. சினம்; anger, passion. 3. புடவையின் விளிம்பு; hem or border of a garment.

**மாடி**³ *māḍi,* பெ.(n.) சிற்றூர்த் தேவதை (நாஞ்.); a village goddess.

*[மாடன் (ஆ.பா.) → மாடி (பெ.பா.).]*

**மாடிகை** *māḍigai,* பெ.(n.) மெய்யுறை (பிங்.); armour.

**மாடிப்படி** *māḍi-p-paḍi,* பெ.(n.) மேல்மாடிக் கட்டடத்திற்கு செல்வதற்கான படிக்கட்டு; flight of stairs and the supporting structure, stair-case.

*[மாடி + படி.]*



**மாடிமுற்றம்** *māḍi-muṟṟam,* பெ.(n.) மாடியில் அமைந்த முகப்புத் தட்டு; balustraded platform on the outside o a building with access from an upper floor, balcony. *"மேல்மாடி முற்றத்திலே" (உ.வ.).*

*[மாடி + முற்றம்.]*

**மாடியம்** *māḍiyam,* பெ.(n.) மாடிகை பார்க்க; see *māḍigai. "மாடியந் தானை மன்னர்" (சீவக.537).*

**மாடிவீடு** *māḍi-vīḍu,* பெ.(n.) மேல்தளமுள்ள வீடு; mansion with upper terrace, terraced or storied house.

*[மாடி + வீடு.]*

**மாடு**¹ *māḍu,* பெ.(n.) எருது; ox. *"பகட்டின மாடுகள்" (கம்பரா.பள்ளி.14). "அடியாத மாடு படியாது" (பழ.). "துள்ளுகிற மாடு பொதி சுமக்குமா?" (பழ.).*

**மாடு**² *māḍu,* பெ.(n.) 1. இடம்; place. *"மாட்டு மாட்டோடி மகளிர்த் தரத்தர" (கலித்.98).* 2. பக்கம் (சூடா.); side. *"மா டெல்லாங் கருங்குவளை வயலெல்லா நெருங்குவளை" (பெரியபு.திருநாட்.17).*

மாடு³ *māḍu,*இடை.(part.) (இலக்.) ஓர் ஏழனுருபு; a ending of the oblative of place. *"மெய் பிரிந் தன்னவர் மாட்டு" (கலித்.87).*

மாடு⁴ *māḍu,* பெ.(n.) 1. செல்வம்; treasure, wealth. மாடல்ல மற்றை யவை (குறள், 400). 2. பொன் (சூடா.); gold. 3. சீர் வரிசை; dowry. 4. அகன்மணி (அக.நி.); large gem.

முற்காலத்தில் ஆவும் காளையும் எருமையும் ஆகிய மாடுகளே செல்வமாகக் கருதப்பட்டதனால், மாடு என்னும் பெயர் செல்வப் பெயராயிற்று. மேலை நாடுகளிலும் இங்ஙனமே மாடு செல்வமாகக் கொள்ளப் பெற்றது.

L. pecu = cattle, pecunia = money. E. Pecuniary (consisting) of money.

மாடுசாய்—த்தல் *māḍu-šāy-,*4 செ.கு.வி. (v.i.) மாடுகளை ஒரு சேர ஒட்டிச் செலுத்துதல் (வின்.); to drive cattle in herds.

*[மாடு¹ + சாய்—த்தல்.]*

மாடுசாய்தல் *māḍu-šāydal,*பெ.(n.) மாடுகள் மாலையில் ஒருசேர வீடு நோக்கி வருகை; return home of cattle - herds at dusk.

*[மாடு¹ + சாய்தல்.]*

மாடுசாயும்வேளை *māḍu-šāyum-vēḷai,* பெ.(n.) மாடுவரும்வேளை பார்க்க; see *māḍu-varum-vēḷai.*

*[மாடு + சாயும்வேளை.]*

மாடுதின்னி *māḍu-tiṉṉi,*பெ.(n.) ஆத்தின்னி; pulaiya.

*[மாடு + தின்னி.]*

மாடுபிடுங்கி *māḍu-piḍuṅgi,* பெ.(n.) கழுகு வகை (m.m.); common brown vulture.

*[மாடு + பிடுங்கி.]*

மாடுபெயர்—த்தல் *māḍu-peyar-,* 4 செ.கு.வி. (v.i.) மாடுசாய்—, (வின்.) பார்க்க; see *māḍu-šāy.*

*[மாடு¹ + பெயர்.]*

மாடுமீன் *māḍu-miṉ,*பெ.(n.) மாட்டுமீன் பார்க்க; see *māṭṭu-miṉ.*

*[மாடு¹ + மீன்.]*

மாடுவரும்வேளை *māḍu-varum-vēḷai,* பெ.(n.) மாலை வேளை; evening, as the time when cattle return home after grazing.

*[மாடு + வரும்வேளை.]*

மேய்ச்சலான பின் மாடுகள் திரும்பி வரும் காலம்.

மாடுன்னிப்பாசம் *māḍu-p-paṉṉi-p-pāšam,* பெ.(n.) அணிப்பிள்ளை; squirrel (சா.அக.).

*[மாடு + உன்னி + பாசம்.]*

மாடை¹ *māḍai,*பெ.(n.) 1. அரை வராகன் (வின்.); an ancient coin = 1/2 pagoda. 2. பழைய நாணய வகை; an ancient gold coin. *வந்த மாடை நெல்லாக்கி (S.I.I.iii, 137).* 3. பத்துக் குன்றி எடையுள்ள நாணய வகை (சுக்கிரநீதி, 25); a gold coin weighing ten *kuṉṟi.*

*[மாழை →மாடை.]*

**மாடை**[2] *māḍai,* பெ.(n.) 1. மாட்டுக் கொம்பு முதலியவற்றின் கீழ்நோக்கிய வளைவு; being bent downwards as horns of cattle. 2. சாய்வு; slop.

*[உல்→குள்→முள்→முட→முடங்கு→முடங்கி = மூலை. மூலைமுடங்கி என்பது வழக்கு. மாள்→மாடு →மாடை. சாடைமாடை என்பது வழக்கு. நேராகப் பழிக்காமல் சாய்வு போன்ற நேரல் முறையில் பழித்தல் சாடை மாடையாய்த் திட்டுதல் எனப்படும் (மு.தா.226).]*

**மாடைக்குமாறி** *māḍaikku-māṟi,* பெ.(n.) மாடை என்னும் பொற்காசுக்கு ஒத்த மதிப்பீடு கொண்ட மாற்றமுடைய பொன்; a gold like thing carrying equal value to that of a gold coin.

*[மாடைக்கு + மாறி.]*

**மாடைக்கூலி** *māḍai-k-kūli,* பெ.(n.) வரி வகை (S.I.I.iii, 16, 1); a kind of tax.

*[மாடை + கூலி.]*

**மாடைக்கொம்பன்** *māḍai-k-kombaṉ,* பெ.(n.) கீழ்நோக்கி வளைந்த கொம்புள்ள மாடு (வின்.); bullock with horns bent downwards.

*[மாடை = வளைந்தது. மாடைக் கொம்பு = வளைந்த கொம்பு. மாடைக் கொம்பு→மாடைக் கொம்பன்.]*

**மாடொதுக்கு-தல்** *māḍodukku-,* 5 செ.கு.வி. (v.i.) மாடுசாய்–, (வின்.) பார்க்க; see *māḍu-šāy.*

*[மாடு[1] + ஒதுக்கு–.]*

**மாடோட்டும்வேளை** *māḍōṭṭum-vēḷai,* பெ.(n.) மாடுகளை மேய்ச்சலுக்கு விடும் காலை வேளை; (C.G.) early morning as the time when cattle are turned out for pasture.

*[மாடு[1] + ஓட்டும்வேளை.]*

**மாண்**[1]**(ணு)–தல்** *māṇ-,* 12 செ.கு.வி.(v.i.) 1. மாட்சிமைப்படுதல்; to become excellent, glorious. *"மாண்டார் வினைத் திட்பம்" (குறள், 665).* 2. நன்றாதல்; to be good, worthy. *"மாண்டற் கரிதாம் பயன்" (குறள், 177).* 3. நிறைதல்; to be full, abundant. *"மாணாப் பிறப்பு" (குறள், 1002).* 4. மிகுதல்; to be great. *"மாணப் பெரிது" (குறள், 124).*

*[மால்→மாண்(ணு)–. மால் = பெருமைப் பொருள்.]*

**மாண்**[2] *māṇ,* பெ.(n.) மாட்சிமை; greatness, glory, splendour, excellence, dignity. *"மாணெழில்...... தோளாய்" (கலித்.20, 15).*

*[மா = பெருமை. மால்→மாள்→மாண் (பு).]*

**மாண்**[3] *māṇ,* பெ.(n.) 1. பள்ளிச் சிறுவன்; school boy. *"மாணாகி வைய மளந்ததுவும்" (திவ்.பெரியதி.8, 10, 8).* 2. குறள்வடிவம், குறளன்; dwarf. *"குறுமாணுருவன் தற் குறியாகக் கொண்டாடும்" (தேவா.164, 5).*

*[மண் →மாண் (வே.க.44:7).]*

**மாண்**[4] *māṇ,* பெ.(n.) மடங்கு; turn, time. *"பன்மாண்" (பரிபா.13, 62).*

*[முள்→மூள்→(மாள்)→மாண் (மு.தா.235).]*

**மாண்டது** *māṇḍadu,* பெ.(n.) சிறப்பிக்கப்பட்டது; that which is glory.

*[மாண்→மாண்டது.]*

**மாண்டல்[1]** *māṇḍal,* பெ.(n.) மாட்சியாகை (சூடா.); being great, being worthy.

*[மால்→மாண்→ மாண்டல்.]*

**மாண்டல்** *māṇḍal,* பெ.(n.) இறத்தல் (பிங்.); dying.

*[மாள்→மாண்டல்.]*

**மாண்டவர்** *māṇḍavar,* பெ.(n.) மாண்டார்[1] பார்க்க; see *māṇḍār.*

*[மாண்டார்→மாண்டவர்.]*

**மாண்டவர்குழி** *māṇḍavar-kuḻi,* பெ.(n.) முதுமக்கட்டாழி புதைக்கும் குழி (இ.வ.); kistvaens containing earthen jars with fragments of human bones.

*[மாண்டவர் + குழி.]*

**மாண்டார்[1]** *māṇḍār,* பெ.(n.) மாட்சிமை யுள்ளவர்; the illustrious, the great. *"வீறெய்தி மாண்டார்" (குறள், 665).*

*[மா = பெரிய. மா→மால்→மாண்→மாண்டார்..]*

**மாண்டார்[2]** *māṇḍār,* பெ.(n.) இறந்தவர்; the dead. *"மாண்டார் வருவரோ மாநிலத்தீர்" (நல்வழி, 10).*

*[மாள்→மாண்டார்.]*

**மாண்டுக்கியம்** *māṇḍūkkiyam,* பெ.(n.) நூற்றெட்டுச் சிற்றிலக்கியங்களுளொன்று; an upanisad, one of 108.

**மாண்டுகம்** *māṇḍūgam,* பெ.(n.) மாண்டுக்கியம் (யாழ்.அக.) பார்க்க; see *māṇḍūkkiyam.*

**மாண்பு** *māṇbu,* பெ.(n.) 1. மாட்சிமை; honour, dignity. *"இல்லவண் மாண்பானால்" (குறள், 53).* 2. அழகு; beauty. *"அரன் மிடற்றின் மாண்பதென்றே" (திருக்கோ.323).* 3. பெருமை (யாழ்.அக.); greatness, excellence. 4. நன்மை (அரு.நி.); goodness.

*[குள் = பெருமை கருத்துவேர். அறிவாற்ற லதிகார செல்வங்களின் பருமையே பெருமை. குள் → முள் → மள் → மண் → மாண் → மாண்பு (மு.தா.217).]*

**மாண்புமிகு** *māṇbu-migu,* கு.பெ.எ.(adj.) அமைச்சர் முதலியோரை அழைக்கும்போது அல்லது குறிப்பிடும் போது பயன்படுத்தும் மதிப்புத் தொடர்; a form of address for a minister. *"மாண்புமிகு முதலமைச்சர்" (உ.வ.).*

*[மா = பெருமை. மால்→மாள்→மாண்பு + மிகு.]*

**மாண்மகன்** *māṇ-magaṉ,* பெ.(n.) பள்ளிச் சிறுவன்; school boy. *"பண்டு மாண் மகன்றன் செயல் பார்த்தவோ" (தக்கயாகப். 672).*

**மாணம்** *māṇam,* பெ.(n.) மாட்சிமை (அக.நி.); greatmess, excellence.

*[குள்→முள்→மள்→மண் = மாண்பு. மண் = மாட்சிமை. மண்→மாண்→மாணம் (மு.தா.217).]*

**மாணல்[1]** *māṇal,* பெ.(n.) மாட்சிமை (பிங்கல. 1792); splendour, greatness.

*[மல்→மால்→மாண்→மாணல் (வே.க.4:30).]*

**மாணல்[2]** *māṇal,* பெ.(n.) 1. சாய்வு; slope. 2. வளைவு; curved, angular.

*[முள்→(மூள்)→(மாள்)→மாண்→மாணல். கோணல் மாணல் என்பது வழக்கு (மு.தா.225)..]*

**மாணவ்வியம்[1]** *māṇav-viyam,* பெ.(n.) சிறுவர் கூட்டம்; croud of childrens.

**மாணவ்வியம்**[2] *mānavviyam,* பெ.(n.) 1. பிள்ளைத் தன்மை (யாழ்.அக.); childhood, boyhood. 2. மாணவர்குழு (இலக்.அக.); company of students.

*[மண் → மாண் → மாணி = இளமை. மாண் → மாணவன் = பள்ளிச் சிறுவன்.]*

**மாணவகம்**[1] *mānavagam,* பெ.(n.) கல்வி (சிந்தாமணி நிகண்டு); learning.

**மாணவகம்**[2] *mānavagam,* பெ.(n.) பதினாறு கோவையுள்ள முத்தாரம் (சங்.அக.); a pearl necklace of sixteen strings.

*[மாண் → மாணவன் → மாணவகம் (மு.தா.131).]*

**மாணவகன்** *mānavagan,* பெ.(n.) 1. மணமாகாதவன்; celibate, student. *"பொச்ச மொழுகு மாணவகன்" (பெரியபு. சண்டேசுர.40).* 2. பயிலும் மாணவன்; pupil, scholar, roligious student. *"ஆசான் முன்னே துயில் மாணவகரை" (திருமந்.2163).* 3. 8 முதல் 16 ஆண்டிற்குட்பட்ட சிறுவன் (யாழ்.அக.); lad more than eight less than sixteen years of age. 4. அறிவிலி (யாழ்.அக.); fool, inexperienced person.

*[மாண் → மாணவன் → மாணவகன் (வே.க.4:7).]*

**மாணவர்மன்** *mānavarman,* பெ.(n.) நரசிம்மவர்மப் பல்லவனிடம் அதிகாரியாகப் பணியாற்றிய ஈழவேந்தன் (சி.பெ.அக.); prince of ceylon, who worked with Pallava Narasimhavarmar.

**மாணவன்** *mānavan,* பெ.(n.) 1. கல்வி நிறுவனத்தில் பயிலும் சிறுவன் அல்லது இளைஞன்; student. 2. மாணவகன், 1 பார்க்க; see *mānavagan. "மஞ்சனைக் குறுகி யொரு மாணவப் படிவ மொடு" (உத்தரரா.அனுமப்.6).*

*[மாண் → மாணவகன். மாணவனைக் குறிக்கும் வேறு சில பெயர்களும் சிறுவன் சிறுமியைக் குறிப்பனவாகவேயுள்ளன. ஒ.நோ. பிள்ளை = மாணவன், மாணவி, பள்ளிப்பிள்ளை என்னும் வழக்கைக் காண்க.]*

E. pupil, from L. Pubillus, Pupilla, dims of pulas, a boy, pupa - a girl. E. Pedant from Gr. Pais, Paidos a child.

மாணாக்கன் மாணாக்கி என்னும் வடிவங்களும் மாணவன் என்னும் சொல்லுக்கு நேர் மூலமான மாண் என்னும் வடிவமும் அதன் திரிபான மாணி என்பதும் இவற்றுக்கு அடிவழியான கொடி வழிச் சொற்களும் வடமொழியிலில்லை (மு.தா.131).

**மாணவி** *mānavi,* பெ.(n.) மாணாக்கி பார்க்க; see *mānākki.*

*[மாணவன் (ஆ.பா.) → மாணவி (பெ.பா.).]*

**மாணவை** *mānavai,* பெ.(n.) கற்கும் பெண் (நீலகேசி, 531, உரை). ; female disciple, lady pupil.

*[மாண் → மாணவி → மாணவை.]*

**மாணாக்கன்** *mānākkan,* பெ.(n.) மாணவகன், 2 பார்க்க; see *mānākkan. "இவனோ ரிளமாணாக்கன்" (குறுந்.33).*

*[மாணவகன் → மாணாக்கன்.]*

**மாணாக்கி** *mānākki,* பெ.(n.) கற்கும் பெண்; female disciple. *"நும்மகன் மாணாக்கி வணங்கும்" (பெருங்.உஞ்சைக்.37, 110).*

*[மாணவன் → மாணாக்கன். மாணாக்கன் (ஆ.பா.), மாணாக்கி (பெ.பா.).]*

மாணாமை[1] *māṇāmai,* பெ.(n.) மாட்சிமைப் படாமை; that which is not honour.

*[மாண் →மாணாமை.]*

மாணாமை[2] *māṇāmai,* பெ.(n.) ஒரு நிலையில் நில்லாமை (பரிமே.திருக்.1297); unstable in one condition.

மாணார் *māṇār,* பெ.(n.) பகைவர்; enemies, as those who are without excellence. *"மாணார்ச் சுட்டிய வாண்மங்கலமும்" (தொல்.பொருள்.91).*

*[மாண் →மாணார்.]*

மாணி[1] *māṇi,* பெ.(n.) 1. மணமாகாதவன்; student, bachelor. *"கருமாணியா யிரந்த கள்வனே" (திவ்.இயற்.2, 61).* 2. குறள் வடிவம் (திவ்.பெரியாழ்.1, 4, 1, ஸ்வா.); dwarf. 3. அழகு; beauty. *"மாணிக் குறளுருவாய மாயன்" (திவ்.பெரியாழ்.5, 2, 5, அரும்).* 4. ஆண்குறி (யாழ்.அக.); penis.

க. மாணி.

*[முள் →(மள்) →மண் →மணி = சிறியது. மண் → மாண் = குறள், குறளன், சிவன், இளைஞன், மணமிலி. மாண் →மாணி (மு.தா.131.).]*

மாணி[2] *māṇi,* பெ.(n.) மாணவகன்; disciple. *"புத்தனார் முதன் மாணி...... மொக்கலனெனச் சொன்னான்" (நீலகேசி, 266).*

*[மாணவகன் →மாணி.]*

மாணிக்கச்சம்பா *māṇikka-c-cambā,* பெ.(n.) சம்பா நெல் வகை (குருகூர்ப்.58); a kind of *cambā* paddy.

*[மாணிக்கம் + சம்பா.]*

மாணிக்கத்தாள் *māṇikka-t-tāḷ,* பெ.(n.) தாசி (M.M.354) dancing girl.

*[மாண் →மாணி →மாணிக்கத்தாள்.]*

மாணிக்கப்பட்டி *māṇikka-p-paṭṭi,* பெ.(n.) சிவப்புப் பட்டிப் பூ; pink trumpet flower. *"மாணிக்கப்பட்டிப் பூவை மாதேவர்க்கு" (புட்பபலன்.96).*

*[மாணிக்கம் + பட்டி.]*

மாணிக்கப்பட்டை *māṇikka-p-paṭṭai,* பெ.(n.) கோயிலின் திருமதில் முதலியவற்றில் அடிக்கும் சிவப்பு வண்ணப் பட்டை (இ.வ.); red stripes painted on a temple wall or front wall of a house.

*[மாணிக்கம் + பட்டை.]*



மாணிக்கப்படி *māṇikka-p-paḍi,* பெ.(n.) மணிகள் கோத்த மேலாடை (இரத்தினங்கி), மணியாடை; jewelled garment. *"தனக்காக ஒரு மாணிக்கப்பட்டி சாத்தி" (ஈடு.4, 4, 3).*

*[மாணிக்கம் + படி.]*

மாணிக்கப்பீடம் *māṇikka-p-pīḍam,* பெ.(n.) மணி வைத்திழைத்த மோதிர வகை (சிலப்.6 : 96, உரை); a kind of ring set with rubies.

*[மாணிக்கம் + பீடம்.]*

மாணிக்கப்பூடு *māṇikka-p-pūḍu,* பெ.(n.) பிண்டம்; foetus (சா.அக.).

மாணிக்கம் *māṇikkam,* பெ.(n.) தொன் மணியிலொன்றும் நான்கு பகுப்பினை யுடையதுமான செந்நிறமணி (திருவிளை. மாணி.38); ruby, carbuncle of which there are four kinds viz. *cāturaṅgam, guruvindam, caukantigam, kōvaṅgam* of *navamaṇi* (q.v.). *"குப்பையிலே கிடந்தாலும் மாணிக்கம் மாணிக்கம்தான்" (பழ.).*

மாணிக்கமாலை *māṇikka-mālai,* பெ.(n.) வெள்ளை, சிவப்பு வளையங்கள் மாறி மாறி வரத் தொடுத்த பூமாலை வகை (இ.வ.); a garland with rings of white and red flowers alternating.

*[மாணிக்கம் + மாலை.]*

மாணிக்கமின்சேய் *māṇikka-miṉ-cēy,* பெ.(n.) முருகக் கடவுளது படைவீரருள் ஒருவரான வீரவாகு (நாமதீப.37); *vīravāgu* a hero in the retinue of *Murugaṉ.*

*[மாணிக்கம் + மின்சேய்.]*

மாணிக்கவாசகர் *māṇikka-vāšagar,* பெ.(n.) ஒன்பதாம் நூற்றாண்டினராகக் கருதப்படுபவரும் திருவாசகம், திருக் கோவையார் என்பவற்றின் ஆசிரியரும் சைவசமயக்குரவர் நால்வருளொருவருமான பெரியவர்; a famous Saiva saint, author of *Tiru-vācagam*, and *Tirukkōvaiyār*, one of four *camayakkuravar*, probably of the ninth century.

மாணிக்கவாளி *māṇikkā-vāḷi,* பெ.(n.) காதணி வகை; an ear ornament.

*[மாணிக்கம் + வாளி.]*

மாணிக்காத்தாள் *māṇikkāttāḷ,* பெ.(n.) நடன மங்கையருள் ஒரு சாரார் (E.T.ii.162); a class of dancing girls.

*[மாணிக்கம்→மாணிக்காத்தாள்.]*

மாணிக்குறி *māṇikkuṟi,* பெ.(n.) ஆண்குறி; penis, male organ.

*[மாணி + குறி.]*

மாணிகை *māṇigai,* பெ.(n.) எட்டுப் பலம் கொண்ட நிறை; a weight of 8 *palams.*

*[மாணி + வகை.]*

மாணிச்சாறு *māṇi-c-cāṟu,* பெ.(n.) இலைப் பிழிவு; juice of leaf.

*[மாணி + சாறு.]*

மாணிப்புண் *māṇi-p-puṇ,* பெ.(n.) ஆண் குறியிலுண்டாகும் புண் (M.L.); venereal sore in the penis, chancre.

*[மாணி + புண்.]*

மாணிபந்தம் *māṇi-bandam,* பெ.(n.) உப்பு; salt (சா.அக.).

*[மாணி + பந்தம்.]*

மாணிமலைப்படை *māṇimalai-p-paḍai,* பெ.(n.) காட்டுக் காடை; a bird - glide (சா.அக.).

மாணியரி-தல் *māṇi-ari-,* 2 செ. குன்றாவி. (v.t.) 1. இனப்பெருக்க அழிவு செய்தல்; to circumcise. 2. விதையெடுத்து ஆண் பிள்ளையைப் பேடியாக்குதல் (வின்.); to castrate a man.

*[மாணி + அரி-.]*

**மாணீர்ச்சாறு** *māṉīr-c-cāṟu,* பெ.(n.) இலைச்சாறு; juice from the leaf.

**மாணு-தல்** *māṉu-,* 12 செ.கு.வி.(v.i.) மாண்- பார்க்க; see *māṉ-.*

**மாணை** *māṉai,* பெ.(n.) ஒருவகைக் கொடி; a climber. *"துறுக லயலது மாணை மாக்கொடி" (குறுந்.36).*

**மாத்தகை** *māttagai,* பெ.(n.) பெருந்தகுதி யுள்ளவன் (யாழ்.அக.); person of great worth.

*[மா = பெரிய. தகை→தகைவு. மா + தகை. ஒ.நோ.பெருந்தகை, ஆண்டகை.]*

**மாத்தம்** *māttam,* பெ.(n.) அலரி; oleander.

**மாத்தல்** *māttal,* பெ.(n.) மா ஒன்றுக்கு இவ்வளவு என்று நெல் அளக்கை; measure the paddy as for mā. *"நிலம் யாண்டு பதினாறாவது முதல் கைக்கொண்டு உழுது அச்சுவற்கம் இறுத்தும் மாத்தல் பதினறு கலனே தூணியாக வந்த பாட்டம் அளக்கவும்" (தெ.க.தொ.5, கல்.243). "இந்நிலத்தால் மாத்தல் இருபத்து இருகலமாகவுந் நெல் குடுப்போமானோம்" (தெ.க.தொ.5, கல்.244).*

*[மான்→மா→மாத்தல். இவ்வினை இன்று வழக்கற்றது. ஆயின், மா என்னும் முதனிலைத் தொழிலாகுபெயர் 1/20 என்னும் கீழ் வாயிலக்கத்தைக் குறித்து வழங்குகின்றது. அதனால் நிலவளவையில் ஒருவேலியின் 1/20 பாகம் மா எனப்படுகிறது. "மாநிறைவில்லதும் பன்னாட்காகும்" (புறநா.184) என்பது இதன் தொன்று தொட்ட வழக்கை யுணர்த்தும் (வே.க.4:35).]*

**மாத்தான்** *māttāṉ,* பெ.(n.) பெரியோன்; great person. *"மால் பிரம னறியாத மத்தானை" (தேவா.818, 4).*

*[மா= பெரிய. மா→மாத்தான்.]*

**மாத்திக்கு** *māttikku,* பெ.(n.) முத்திநெறி; path of salvation as the great path. *"மாத்திக்கே செல்லும் வழியது" (திருமந். 1841).*

**மாத்தியாகி** *māttiyāgi,* பெ.(n.) துறவிற் பெரியராகிய ஞானி வகையார் (யாழ்.அக.); a class of sages, as great in renouncing.

*[மா + தியாகி.]*

**மாத்திரத்தில்** *māttirattil,* வி.எ.(adv.) உடனே; instantaneously. *"அவன் கேட்ட மாத்திரத்திற் கொடுத்தான்" (உ.வ.).*

*[மாத்தரம்→மாத்திரத்தில் (வே.க.4:36).]*

**மாத்திரம்[1]** *māttiram,* பெ.(n.) தனிமை (சங்.அக.); loneliness.

**மாத்திரம்[2]** *māttiram,* வி.எ.(adv.) மட்டும்; only, solely, exclusively, merely, alone. *அதை மாத்திரம் எடு (உ.வ.).*

*[மட்டு = அளவு. மட்டும் = மாத்திரம் (வே.க.4:36).]*

**மாத்திரம்[3]** *māttiram,* பெ.(n.) அளவு; limit, extent. *"வெளவினன் முயங்கு மாத்திரம்" (கலித்.47, 22).*

**மாத்திரம்[4]** *māttiram,* பெ.(n.) தும்பி (சங்.அக.); wasp.

**மாத்திரி[1]** *māttiri,* பெ.(n.) வசம்பு; a plant - sweet flag acorus calamus, it has under ground stem used in mediane.

மாத்திரி[2] *māttiri,* பெ.(n.) நீட்டலளவு; linear measurement, meter.

*[மா = அளவு. மா→மாத்திரி (இக்.வழ.).]*

மாத்திரை[1] *māttirai,* பெ.(n.) 1. நொடிப்பொழுது; moment, measure of time 2/5 of a second = 1/60 nāḻigai. *"சகமூன்றுமொர் மாத்திரை பார்க்குமெங்கள் கண்ணவனார்" (திருநூற்.25).* 2. கண்ணிமைத்தல் அல்லது கை நொடித்தலளவான நேரம் (தொல். எழுத்து.6); the time of winking one's eyes or of snapping one's fingers. *"கண்ணிமை நொடியென வவ்வே மாத்திரை" (தொல். எழுத்து.6).* 3. செய்யுளில் வரும் எழுத்தொலியினளவு; (Pros.) mora or prosodial unit of sound. *"மாத்திரை எழுத்தியல்" (தொல். பொருள். 313).* 4. குற்றெழுத்து (யாழ்.அக.); short vowel. 5. குருவிற் பாதி (அரு.நி.); a syllabic instant, half of kuru. 6. காலவிரைவு (பிங்.); swiftness of time. 7. அளவு; measure, limit, as of time. *"மாத்திரையின்றி நடக்குமேல்" (நாலடி, 242).* 8. மிகச் சுருக்கமான இடம்; minute portion of space. *"அரை மாத்திரையிலடங்குமடி" (தேவா.970, 7).* 9. குளிகை (அரு.நி.); medicinal pill. 10. துறவியின் தண்டக மண்டல முதலியன; staff, water bowl and other articles of ascetics. *"சந்யாசிகள்... மாத்திரை தொடக்கமானவற்றைக் கையிலே கூடக்கொண்டு திரிவார்களாயிற்று" (ஈடு.4, 8, 4).* 11. நல்வாய்ப்பு (யாழ்.அக.); luck, fortune.

*[மா=அளவு.மா→மாத்திரை (வே.க.4:36).]*

மாத்திரை[2] *māttirai,* பெ.(n.) இரண்டரை நாழிகையை எட்டுக் கூறிட்ட அளவு; the time measure of 2 1/2 *nāḻigai* is divided by eight, i.e. 7 1/2 minutes. *"இரண்டரை நாழிகையை எட்டுக் கூறிட்டு ஒரு கூறென்றறிக" (சிலப்.3:26).*

மாத்திரை[3] *māttirai,* பெ.(n.) 1. காதணி வகை; an ear ornament. *"செம்பொன் மாத்திரை செரீஇய காதினர்" (பெருங்.மகத.17, 157).* 2. இசைச்சுரப் பகுதி (திவா.); interval in the musical scale, quartertone.

மாத்திரை[4] *māttirai,* பெ.(n.) சிறிய வில்லை வடிவ மருந்து; tablet, pill.

மறுவ. குளிகை.

*[மா=அளவு.மா→மாத்திரை. ஒரே அளவினது.]*

மாத்திரைக்கோல் *māttirai-k-kōl,* பெ.(n.) இறும்பர் (சித்தர்) முதலியோர் கையிற் கொள்ளும் வரையிட்ட மந்திரக் கோல்; magic staff carried by cittar, etc. *"விளங்கு செங்கையின் மாத்திரைக் கோலும்" (திருவாலவா.13, 4).* 2. மந்திரவாதியின் கைக்கோல் (வின்.); conjuror's wand. 3. அளவுகோல்; measuring rod. *"மாத்திரைக் கோலொக்குமே" (நல்வழி).*

*[மாத்திரை + கோல் (வே.க.4:36).]*

மாத்திரைச்சுதகம் *māttirai-c-cudagam,* பெ.(n.) மாத்திரைச்சுருக்கம் பார்க்க; see *māttirai-c-curukkam.*

*[மாத்திரை + சுதகம்.]*

மாத்திரைச்சுருக்கம் *māttirai-c-curukkam,* பெ.(n.) ஒரு பொருள் தந்து நிற்கும் ஒரு சொல் ஒரு மாத்திரை குறையுமிடத்து வேறொரு பொருள் தந்து நிற்குஞ்

சொல்லணி (தண்டி.95, உரை); (Rhet.) a literary device in which a word becomes a different word by shortening its sound - value by a *mātrā*.

மாத்திரைதிரட்டல் *māttirai-tiraṭṭal,* பெ.(n.) அளவுப்படி உருண்டை உருட்டுகை; making pills with fingers.

*[மா = அளவு. மா→மாத்திரை = ஒரே அளவுடையது. மாத்திரை + திரட்டல்.]*

மாத்திரைவருத்தனம் *māttiraik-varuttaṉam,* பெ.(n.) ஒரு பொருள் தந்து நிற்கும் ஒரு சொல் ஒரு மாத்திரை கூடுமிடத்து வேறொரு பொருள் தந்து நிற்குஞ் சொல்லணி (தண்டி.95, உரை); (Rhet.) a literary device in which a word becomes a different word by lengthening its sound value by a *mātrā*.

*[மாத்திரை + வருத்தனம்.]*

மாத்து[1] *māttu,* பெ.(n.) 1. செருக்கு; arrogance. *"மாமாத்தாகிய மாலயன்" (தேவா.1019, 1).* 2. அடித்தல் அல்லது உதைத்தல் (இக்.வ.); beating or kicking. *அவனை அவன் தந்தை ஒரு மாத்து மாத்திவிட்டார்.*

மாத்து[2] *māttu,* பெ.(n.) பெருமை; greatness. *"பெறுமாத் தொடும்" (திருக்கோ.373).*

*[மா = பெருமை. மா→மாத்து.]*

மாத்து[3] *māttu,* பெ.(n.) சதுரங்க ஆட்டத்தில் அரசனை யசைய வொண்ணாது தடுத்து நிறுத்துகை (இ.வ.); mate with pawns.

மாத்து[4] *māttu,* பெ.(n.) தங்கம்; refined gold.

மாத்துப்பொதி *māttu-p-podi,* பெ.(n.) நெருஞ்சி; a prostate plant with thorny fruits-small caltrops (சா.அக.).

மாத்துருகம் *mātturugam,* பெ.(n.) பசுவை போன்ற ஓர் வகை மான்; a species of deer resembling cow (சா.அக.).

மாத்துவம் *māttuvam,* பெ.(n.) பெருமை; greatness. *"மாத்துவத் தான் மறைந்தார் மற்று" (சிலப்.21, இறுதி வெண்பா).*

*[மா→மாத்து→மாத்துவம்.]*

மாத்துவிகம் *māttuvigam,* பெ.(n.) இலுப்பைப் பூவிலிருந்து எடுக்கப்படும் வெறியம் (சாறாயம்) (சங்.அக.); arrack extracted from mahua flowers.

மாதங்கம்[1] *mādaṅgam,* பெ.(n.) 1. யானை (சூடா.); elephant. *"வாம்பரி தேர் மாதங்கத் தானை" (அஷ்டப்.திருவரங்கத்தந்.11).* 2. அரச மரம் (யாழ்.அக.); pipal tree.

மாதங்கம்[2] *mādaṅgam,* பெ.(n.) 1. இளமை (அக.நி.); youth. 2. உருவம் (அக.நி.); shape, figure. 3. கடல் (அக.நி.); sea. 4. உத்தி[1] (யாழ்.அக.); a head ornament.

மாதங்கன் *mādaṅgaṉ,* பெ.(n.) 1. அரசகுலப் பெண்ணுக்கும் வேடனுக்கும் பிறந்தோன்; person of mixed caste, the mother being of the ksattiriya caste and the father of the hunter tribe. 2. சாதியற்றவர் (சண்டாளன்); out caste. 3. கீழ்மகன்; base, mean man. 4. வேடன்; hunter, fowler.

மாதங்காரி *mādaṅgāri,* பெ.(n.) சிவன்; *Śivaṉ,* as the destroyer of elephant.

மாதங்கி *mādaṅgi,* பெ.(n.) 1. காளி (சூடா.); *Kāḷi.* 2. மலைமகள் (நாமதீப.22); *malai magaḷ.* 3. யாழ்த் தெய்வம் (சிலப்.7, 1, உரை); the Goddess of *yāḻ.* 4. மதங்கி; singing danseuse. *"கதிர்வேல் பாடு மாதங்கி" (காரிகை, செய்.9, உரை).*

மாதச்சுரம் *māda-c-curam,* பெ.(n.) மாதத்திற்கொருமுறை வரும் சுரம் (சீவரட்); intermittend fever, with monthly intervals.

*[மாதம் + சுரம்.]*

மாதசுரூபி *māda-šurūbi,* பெ.(n.) கருவண்டு; black beetle (சா.அக.).

மாதசுரூபிதம் *māda-šurūbidam,* பெ.(n.) எலி; rat.

மாதண்டம் *mādaṇḍam,* பெ.(n.) அரசவீதி (வின்.); principal road, king's high - way.

மாதத்தகை *māda-t-tagai,* பெ.(n.) மிகு சிறப்பு, மிகுதகை; the great.

மாதத்தீட்டு *māda-t-tīṭṭu,* பெ.(n.) மாதவிடாய் பார்க்க; see *māda-viḍāi.*

மறுவ. மாதவிலக்கு.

*[மாதவிடாய்→மாதத்தீட்டு.]*

மாததூரம் *māda-dūram,* பெ.(n.) மாதவிடாய் பார்க்க; see *māda-viḍāi.*

*[மாதவிடாய்→மாததூரம்.]*

மாதநம் *māda-nam,* பெ.(n.) இலவங்கம்; clove (சா.அக.).

மாதநாலி *māda-nāli,* பெ.(n.) ஏலவரிசி; cardamon seed (சா.அக.).

மாதப்படி[1] *māda-p-paḍi,* பெ.(n.) வரிவகை; a kind of tax (S.I.I.vii, 403).

*[மாதம் + படி.]*

மாதப்படி[2] *māda-p-paḍi,* பெ.(n.) கோயில் முதலியவற்றுக்கு உதவும் மாதப்படிக் கட்டளை; monthly allowances as to a temple (Insc.).

மாதப்பலன் *māda-p-palan,* பெ.(n.) பிறந்த மாதம், விண்மீன் கொண்டு இன்ப துன்பம் அறிவது; find out luck and unluck the birth of month.

*[மாதம் + பலன்.]*

மாதப்பிறப்பு *māda-p-pirappu,* பெ.(n.) 1. திங்களின் முதனாள்; the first day of a month. 2. கதிரவன் ஓர் ஓரை (இராசி) யிலிருந்து அடுத்த ஓரை (இராசி)யில் செல்லுவதான மாதத் தொடக்கத்தின் சமயம் (பஞ்.); beginning of a month, being the moment when the sun passes from one *rāši* to the next.

*[மாதம் + பிறப்பு.]*

மாதப்புறா *māda-p-purā,* பெ.(n.) மாரி காலத்தில் நாட்டில் வாழும் நீர்ப்பறவை வகை (வின்.); a great black - headed gull, as remaining in the coutry during the rainy season.

*[மாதம் + புறா.]*

மாதம் *mādam,* பெ.(n.) 1. முப்பது நாள் கொண்ட காலப் பகுதி; month. 2. ஆண்டின் பன்னிரண்டிலொரு பகுதி; a twelth part of a year.

*[மதித்தல் = அளவிடுதல். மதி = அளவு, அளவிடப் பெற்ற பொருள். ஏற்றுமதி, இறக்குமதி என்னும் சொற்களை நோக்குக. பக்கம், மாதம் முதலிய அளவிற்குத் துணையான நிலா, நிலாவினாற் கணிக்கப் பெறும் கால அளவு, ஓரை. மதி →மாதம். ஒ.நோ.மானம் = அளவு.]*

**As.** mono; **E.** moon; **Gk.** men, mere. **L.**mensis, mena. **Ger.** mano, mane, mond. **Goth**.mena. **Lith.** menu, menesis, slav.meseci.

இனி, மத்து→மத்தி→மதி = மயக்கஞ் செய்யும் நிலா என்றுமாம். ஒ.நோ. L.luna = moon. lunatic = insane, lunacy = insanity. வடவர் மா[3] (அள) என்னுஞ் சொல்லை மூலமாகக் காட்டுவர். அதன் பொருந்தாமையையும், ஒருகாற் பொருந்துவதாகக் கருதினும் அதுவும் தென்சொல்லே யாதலையும் காண்க. சென்னைப் பல்கலைக்கழகப் பேரகரமுதலி. மாஸ → மாதம் என்று தலைகீழாகக் காட்டும். மதி என்னும் மூலத்தினின்று மாதம் என்னும் தகரச் சொல்லன்றி மாஸ என்னும் ஸகரச் சொல் எங்ஙனம் தோன்றும் (வ.வ.60).

மாதர்[1] *mādar,* பெ.(n.) 1. பெண்; woman. *"மறுவுண்டோ மாதர் முகத்து" (குறள், 1117).* 2. அழகு (பிங்.); beauty. *"மாதர்கொண் மாதரெல்லாம்" (திருவாத.பு.திருவம்பல.40).* 3. பொன் (அக.நி.); gold. 4. காதல் (தொல். சொல்.328); love.

*[மா = அழகு. மா→மாது = அழகு, அழகுள்ள பெண், பெரும்பாலும் அழகினால் ஏற்படும் காதல். மாது→மாதர்.]*

பெண்கள் பெரும்பாலும் தாய்மாராதலாலும், தெய்வப் பெண்டிர் தாய்போற் கருதப் பெறுவதாலும், பெண்ணின் பெயர் தாய்க்கருத்தையுங் கொள்ளும். எ-டு. மலைமகள், மலை மடந்தை, மலைமாது. இம்முறையிலேயே, மாதர் என்னும் சொல்லும் தாய்ப் பொருளைப் பெற்றது.

**GK.** mater, **L.**marer, **E.**mother, **G.**.muotar, mutter, ther, Litemote, slav.mati.

வடவர் காட்டும் மூலம் மா[3]=அள. derivation from 3 *mā* very doubtful என்று மானியர் வில்லியம்சு சமற்கிருத அகரமுதலி குறித்திருத்தல் காண்க (வ.வ.60).

மாதர்[2] *mādar,* பெ.(n.) ஓரிடைச் சொல் (சூடா.); an expletive.

மாதர்காய் *mādar-kāy,* பெ.(n.) தேங்காய்; cocoanut.

மாதர்காய்ச்சல் *mādar-kāyccal,* பெ.(n.) காமக் காய்ச்சல்; fever due to passion.

*[மாதர் + காய்ச்சல்.]*

மாதர்குணச்சலம் *mādarguṇa-c-calam,* பெ.(n.) கந்தகம்; sulphur.

மாதர்குலம் *mādarkulam,* பெ.(n.) மகளிர் பிரிவு; class of women.

*[மாதர் + குலம்.]*

மாதர்பால் *mādar-pāl,* பெ.(n.) முலைப்பால்; human breast milk.

*[மாதர் + பால்.]*

மாதர்பிணி *mādar-piṇi,* பெ.(n.) பெண் நோய்; venereal disease.

*[மாதர் + பிணி.]*

மாதர்லிங்கம் *mādar-liṅgam,* பெ.(n.) பெண் குறியின் நடுவிலிருக்கும் ஓர் நரம்புப் பகுதி; clitoris (சா.அக.).

*[மாதர் + லிங்கம்.]*

மாதரம் *mādaram,* பெ.(n.) எலுமிச்சம் பழம்; lime fruit (சா.அக.).

மாதரழகி *mādaraḻagi,* பெ.(n.) பெருந்துளசி; large ocimum somotum (சா.அக.).

*[மாதர் + அழகி.]*

மாதராள் *mādarāḷ,* பெ.(n.) மாதர்[1], 1 பார்க்க; see *mādar. "மடமொழி மாதராள்" (நாலடி, 384).*

*[மாதர்→மாதராள்.]*

மாதரி[1] *mādari,* பெ.(n.) சிலப்பதிகாரத்தில் மதுரையில் கண்ணகிக்கு அடைக்கலம் கொடுத்த ஆயர் முதுமகள் (சி.பெ.அக.); a shepherd old lady who took care of Kannagi at Madurai as per Silappathikaram.

மாதரி[2] *mādari,* பெ.(n.) காளி (பிங்.); *kāḷi.*

மாதரிச்சை *mādariccai,* பெ.(n.) பெண்கள் மேல் உண்டாகும் இச்சை; sexual desire in female.

*[மாதர் + இச்சை.]*

மாதருதரக்கட்டி *mādaru-tara-k-kaṭṭi,* பெ.(n.) கருப்பாயாசக்கட்டி; abscess in the ulerus (சா.அக.).

மாதவக்கோன் *mādava-k-kōṉ,* பெ.(n.) காட்டில் ஆநிரைகளை மேய்க்கும் இடைச் சாதியர்; idaiyar caste.

மாதவசுந்தரி *mādava-śundari,* பெ.(n.) நிலம்; earth.

மாதவசுரன் *mādava-śuraṉ,* பெ.(n.) தொன் மணியுளொன்று; one of the nine gems - *Topaz.*

மாதவசூரி *mādavaśūri,* பெ.(n.) மாலிய வரலாறு (அபி.சிந்.); a biography of *Tirumāl.*

மாதவதாசர் *mādava-tāšar,* பெ.(n.) திருமால் பத்தர்; a devotee of Tirumal.

மாதவம்[1] *mātavam,* பெ.(n.) 1. இளவேனில் (பிங்.); spring. 2. விடை (வைகாசி) (விதான. குணாகுண.28, உரை); vaikāši, the Tamil month. 3. இனிமை (யாழ்.அக.); sweetness. 4. மது (பிங்.); spirituous or fermented liquor.

மாதவம்[2] *mātavam,* பெ.(n.) பெருந்தவம்; great penance. *"என்ன மாதஞ் செய்ததிச் சிறுகுடில்" (பாரத.கிருட்.80).*

*[மா + தவம். மா = பெரிய.]*

மாதவம்பரிவாள் *mādavam-parivāḷ,* பெ.(n.) காட்டு முருங்கை; a tree - wild moringa (சா.அக.).

மாதவம்புரிவாள் *mādavam-purivāḷ,* பெ.(n.) தாமரையிலை; a leaf of lotus (சா.அக.).

*[மாதவம் + புரிவாள்.]*

மாதவமனோகரி *mādava-maṉōgari,* பெ.(n.) இராக வகை (பரத.ராக.பக்.103); a specific - melody type (சா.அக.).

மாதவர் *mādavar,* பெ.(n.) முனிவர்; asceties risi, as performing austere penance. *"மாதவர் நோன்பு மடவார் கற்பும்" (மணிமே.22, 208).*

*[மாதவம்→மாதவர்.]*

மாதவர்பள்ளி *mā-davar-paḻḻi,* பெ.(n.) முனிவரின் பாழி (ஆசிரமம்) இருப்பிடம்; hermitage. *"மாதவி மாதவர் பள்ளியு ளடைந்தது" (மணிமே.18, 8).*

*[மாதவர் + பள்ளி.]*

மாதவரொட்டி *mādava-roṭṭi,* பெ.(n.) கருந்துளசி; black species of holy basil (சா.அக.).

மாதவல்லி *māda-valli,* பெ.(n.) சித்தினி சாதிப் பெண்; one of the four classes of women divided according to their lust (சா.அக.).

மாதவழகி *māda-vaḻagi,* பெ.(n.) வட்டக் கிலுகிலுப்பை; round rattle wort, one of varities of crolalaria laburnifollia (சா.அக.).

மாதவழிச்செலவு *māda-vaḻi-c-celavu,* பெ.(n.) மாதச் செலவு; monthly expenses. *"மாதவழிச் செலவுக் கன்று சொன்ன நூறு பொன்னும்" (தெய்வச்.விறலி.380).*

*[மாதம் + வழிச்செலவு.]*

மாதவறுதி *māda-v-aṟudi,* பெ.(n.) திங்கள் முடிவு (யாழ்.அக.); end of a month.

*[மாதம் + அறுதி.]*

மாதவன் *mādavaṉ,* பெ.(n.) 1. திருமால்; Tirumāl. *"மாதவற்கு நான்முகற்கும் வரதன் கண்டாய்" (தேவா.247, 7).* 2. வசந்தன் (யாழ்.அக.); god of spring.

*[மா + தவன். மா = பெரிய.]*

மாதவாக்கியம் *māda-vākkiyam,* பெ.(n.) ஆண்டுத் தொடக்கத்திலிருந்து ஒவ்வொரு மாதத்தின் இறுதிவரையுள்ள காலத்தை நாளாகவும் நாழிகையாகவும் கணக்கிட்டுக் காட்டும் வாய்பாடு; (Astron) table giving the duration of a period beginning with the commencement of a year and ending with each month, expressed in days and nāḻikai.

*[மாதம் + வாக்கியம். **Skt.** வாக்கியம். த. சொற்றொடர்.]*

மாதவி[1] *mādavi,* பெ.(n.) சிலப்பதிகாரக் காவியத்தில் வரும் கோவலனின் காதல் மனைவி (சி.பெ.அக.); concupine of Kovalan as per Silappathikaram.

மாதவி[2] *mādavi,* பெ.(n.) 1. கிருட்டிணன் தங்கையான சுபத்திரை; *Subhadrai,* sister of Krishna. *"மாதவி தான்பெற்ற மதகயம்" (பாரதவெண்.782).* 2. கண்ணன் மனைவி (யாழ்.அக.); Krishna's wife. 3. துளசி (சங்.அக.); sac`red basil. 4. கொற்றவை, (யாழ்.அக.); Durga.

மாதவி[3] *mādavi,* பெ.(n.) 1. பனைவெல்லம்; jaggery, treacle from sweet toddy. 2. சருக்கரை (சீனி) (யாழ்.அக.); sugar. 3. கூட்டிக் கொடுப்பவள் (வின்.); procuress. 4. குருக்கத்தி செடி; common delight of the woods. *"கோதை மாதவி கொழுங் கொடி யெடுப்ப" (சிலப்.14:113).* 5. கள்ளி; spurge.

மாதவி[4] *mādavi,* பெ.(n.) வசந்த மல்லிகை; jasmine.

மாதவிக்கொடி *mādavi-k-koḍi,* பெ.(n.) ஒரு வகைக் கொடி; a tall climber.

மாதவிகை *mādavigai,* பெ.(n.) வசந்தமல்லிக் கொடி; the jasmine grown in the spring season.

மாதவிகொழுநன் *mādavi-koḷunaṉ,* பெ.(n.) அருச்சுனன் (பிங்.); Arjunan.

*[மாதவி + கொழுநன்.]*

மாதவிடாய் *māda-viḍāy,* பெ.(n.) மகளிர் மாதப்பூப்பு; menses. *"மானேர் விழியணங்கு மாதவிடாயானக்கால்" (விறலிவிடு.836).*

*[மாதம் + விடாய்.]*

மாதவிடாய்சன்னி *mādaviḍāy-caṉṉi,* பெ.(n.) மாதவிடாய் காலத்தில் ஏற்படும் ஒரு வகைக் காய்ச்சல்; fever with attends during menses (சா.அக.).

*[மாதவிடாய் + சன்னி.]*

மாதவிடாய்ச்சூலை *mādaviḍāy-c-cūlai,* பெ.(n.) மாதவிடாய் காலத்தில் உண்டாகும் நோய்; pain in the abdomen during the periods (சா.அக.).

*[மாதவிடாய் + சூலை.]*

மாதவிடை *māda-viḍāy,* பெ.(n.) மாதவிடாய் (யாழ்.அக.) பார்க்க; see *māda-viḍāy.*

*[மாதவிடாய்→மாதவிடை (கொ.வ.)]*

மாதவிப்பந்தல் *mādavi-p-pandal,* பெ.(n.) குருக்கத்திக் கொடிகளாலான பந்தல்; arbour formed by *mādavi* creepers. *"மாதவிப் பந்தல் மேல் பல்காற் குயிலினங்கள் கூவின காண்" (திவ்.திருப்பா.18).*

*[மாதவி + பந்தல்.]*

மாதவியசங்கிதை *mādaviya-saṅgidai,* பெ.(n.) கால உறுதி; determination of period (சா.அக.).

மாதளை *mādaḷai,* பெ.(n.) மாதுளை, 1 பார்க்க; see *māduḷai.*

*[மாதுளை→மாதளை.]*

மாதளைச்சிலை *mādaḷai-c-cilai,* பெ.(n.) மாந்தளிர்க்கல் (யாழ்.அக.) பார்க்க; see *māndaḷir-k-kal.*

*[மாதளை + சிலை. சிலை = கல்.]*

மாதறி *mādaṟi,* பெ.(n.) விட்டம், உத்தரம் முதலியவற்றிற்கு உதவும் பெரிய மரத்துண்டு (வின்.); large timber, beam.

*[மா + தறி. மா = பெரிய. தறி = மரம், மரத்துண்டு.]*

மாதனம் *mādaṉam,* பெ.(n.) கிராம்பு (யாழ்.அக.); clove.

மாதாந்தசஞ்சீவி *mādānda-cañjīvi,* பெ.(n.) 1. மாதவிடாய்; menstruation. 2. நாதநீர்; menstrual fluid (சா.அக.).

மாதாந்தம்¹ *mādāndam,* பெ.(n.) 1. மாத முடிவு (வின்.); the end of a month. 2. (அமாவாசை) காருவா (யாழ்.அக.); new moon. 3. மாதவிறுதியில் வரும் கிழமை யொன்றில் கோவிலிற் செய்யும் வழிபாடு (வின்.); worship performed at a shrine on a particular day of the week, as Friday, occuring last in a month.

*[மாதம் + அந்தம்.]*

மாதாந்தம்² *mādāndam,* பெ.(n.) மாதந் தோறும் கோயிலுக்குச் சென்று வழிபடுகை

(இ.வ.); pilgrimage to a temple for worship once in every month. *"மாதாந்தம் போய் வந்தார்கள்" (சா.அக.).*

**மாதாந்தரம்** *mādāndaram,* பெ.(n.) மாதந் தோறும் (கொ.வ.); month by month.

**மாதாந்தவெள்ளம்** *mādānda-veḷḷam,* பெ.(n.) மகளிர் பூப்புநீர்; the menstrual discharge of woman.

*[மாதாந்தம் + வெள்ளம்.]*

**மாதானுபங்கி** *mādāṉubaṅgi,* பெ.(n.) திருவள்ளுவர்; Tiruvalluvar. *"மாதானு பங்கி மறுவில் புலச் செந்நாப் போதார்" (வள்ளுவமா.21).*

**மாதி[1]** *mādi,* பெ.(n.) 1. வட்டமாயோடல் (சூடா.); circular motion. *"மாதி வட்ட மோடினார்" (கம்பரா.பிரமாத்திர.135).* . 2. கோள் சுற்று (வின்.); (Astron.) revolution of a planet.

**மாதி[2]** *mādi,* பெ.(n.) மாமரம்; mango tree. *"மாதி மணங்கமழும் பொழில்" (திருவிசை. சேந்த.2, 2).*

**மாதிகம்** *mādigam,* பெ.(n.) குதிரை மார்க்கம்; race course.

**மாதிகா** *mādigā,* பெ.(n.) முட்பலா; jack tree (சா.அக.).

**மாதிசை[1]** *mādicai,* பெ.(n.) நான்கு திக்குகள்; the four cardinal points of the campas.

*[மா + திசை.]*

**மாதிசை[2]** *mādicai,* பெ.(n.) ஒருவனுக்கு, பிறப்பியத்தில் ஒருகோளின் நடப்புக் காலம் (மகாதிசை); period of influence of a planet with reference to the natal house in a horoscope.

**மாதிபம்** *mādibam,* பெ.(n.) நெருஞ்சில்; small caltrops (சா.அக.).

**மாதிபோதி** *mādi-pōdi,* பெ.(n.) நெருஞ்சில் வகை (மலை.); a species of cowthorn (சா.அக.).

**மாதிமி** *mādimi,* பெ.(n.) மாமரம்; mango tree.

**மாதிமை** *mādimai,* பெ.(n.) 1. தகுதி; fitness, propreity, appropriateness. *"பிச்சை கொண்டுண்பது மாதிமையோ" (தேவா.672, 7).* 2. காதல்; love. *"வேதியின் மாதிமையால் விரும்புமிடம்" (தேவா.798, 1).*

**மாதியாடையான்** *mādiyāḍaiyāṉ,* பெ.(n.) சிவபெருமான்; *śivaṉ.*

**மாதிரசித்தி** *mādir-citti,* பெ.(n.) நஞ்சு; poison (சா.அக.).

**மாதிரம்[1]** *mādiram,* பெ.(n.) 1. திக்கு; point of the compass. *"மாதிரத் தீண்டிய விருளு முண்டோ" (புறநா.90).* 2. யானை (பிங்.); elephant. 3. மலை; mountain. *"மழை தொழிலுதவ மாதி..ங் கொழுக்க" (மதுரைக். 10, உரை).*

**மாதிரம்[2]** *mādiram,* பெ.(n.) விண்வெளி; atmosphere, air. *"வாலமாதிரத்தான் வளி கொட்ப" (மதுரைக்.5).*

**மாதிரம்[3]** *mādiram,* பெ.(n.) நிலம் (சூடா.); earth, ground.

**மாதிரம்[4]** *mādiram,* பெ.(n.) மண்டிலம் (அக.நி.); circle, sphere.

**மாதிரவாடையான்** *mādira-vāḍaiyāṉ,* பெ. (n.) சிவன்; *Śivaṉ.*

*[மாதிரம் + ஆடையான்.]*

மாதிரி[1] *mādiri,*பெ.(n.) 1. உண்மைக்கு ஒத்த நிலையில் இருப்பது; pattern, sample, specimen, model. 2. முறை; manner, way. 3. தன்மை; kind.

*[மா = அளவு. மா→மாதிரி. ஒரே அளவுடையது, ஒன்று போலிருப்பது.]*

மாதிரி[2] *mādiri,*பெ.(n.) அதிவிடை (தைலவ. தைல.) பார்க்க; see *adi-viḍai.*

மாதிரிகை *mādirigai,* பெ.(n.) 1. மாதிரி[1] பார்க்க; see *mādiri,*[1]. *"மாதிரிகை யாகவுனும் வாய்ப்பினாள்" (வெங்கையு.232).* 2. மூலப்படி (இ.வ.); the original, as distinguished from a copy.

மாதிலகம் *mādilagam,* பெ.(n.) பொன்னூமத்தை; dhalura bearing yellow or gold coloured flowers (சா.அக.).

மாதினி *mādiṉi,*பெ.(n.) சிறுவழுதலை; brinjal plant (சா.அக.).

மாதீர்த்தன் *mādīrttaṉ,* பெ.(n.) குறுந்தொகைப் பாடல் (113) இயற்றிய புலவர் (சி.பெ.அக.); a poet who had contributed to kurunthogai.

மாது[1] *mādu,*பெ.(n.) பெருமை; greatness. *"மாதுபடு நோக்கினவர்" (சீவக.499).*

மாது[2] *mādu,* பெ.(n.) குற்றம் (அருநி.); fault, defect.

மாது[3] *mādu,*பெ.(n.) 1. கன்னி ஓரை; virgo, a zodiacal sign. 2. ஓர் அசைச்சொல் (தொல்.சொல்.281); an expletive.

மாதுக்களெழுவர் *mādukkaḷ-eḻuvar,* பெ.(n.) எழுவகைப் பெண்டிர் (சங்.அக.); the seven divine mothers.

மாதுகாமம் *mādukāmam,* பெ.(n.) பவளம்; coral (சா.அக.).

மாதுகுத்துதல் *mādu-kuttudal,* பெ.(n.) பிள்ளை விளையாட்டு வகை (இ.வ.); a children's game.

மாதுங்கம் *māduṅgam,*பெ.(n.) மாதுளை, 2 (மூ.அ.) பார்க்க; see *māduḷai.*

மாதுங்கராகம் *māduṅga-rāgam,*பெ.(n.) மருதப்பண் வகை (பிங்.); a melody type of the agricultural tract.

மாதுநாதம் *mādu-nādam,*பெ.(n.) பெண்கள் மாதவிலக்கின் போது காணும் அரத்தம்; menstrual blood.

*[மாது + நாதம்.]*

மாதுநீர் *mādu-nīr,*பெ.(n.) மகப்பேறு முன் பனிக்குடம் உடைந்து பிறப்புறுப்பு வழியாக வெளிப்படும் நீர்; liquor amni.

*[மாது + நீர்.]*

மாதுபாகம் *mādubāgam,* பெ.(n.) பெண் பக்கம்; woman's side.

*[மாது + பாகம்.]*

மாதுபாதியன் *mādu-pādiyaṉ,* பெ.(n.) உடலின் ஒரு பகுதி பெண்ணாகவுள்ள சிவன் (சி.பெ.அக.); Siva, as having Parvathi as one part of his body.

*[மாது + பாதியன்.]*

மாதுமை *mādumai,*பெ.(n.) 1. பெண் தன்மை; womanliness. *"மாதுமைக் குணங்களான சௌந்தர்யாதிகள்" (திவ்.திருவாய். 4, 2, 7, பன்னீ.).* 2. அறிவின்மை; ignorance. *"ஞால மாதுமை யுடைத்து" (கம்பரா.பிணிவீ.88).*

மாதுலங்காதிக்கிருதம் *mādulaṅgādi-k-kirudam,* பெ.(n.) மாதுலங்காய்ச் சாறால் செய்த ஓர் மருந்து நெய்; a medicated ghee prepared with the juice of the citron fruit as chief ingredient (சா.அக.).

மாதுலநாதம் *mādula-nādam,* பெ.(n.) கருந்துளசி; black variety of holy basil (சா.அக.).

மாதுலம் *mādulam,* பெ.(n.) அடுக்கு ஊமத்தை; dhatura bearing multi coralled petals (சா.அக.).

மாதுலர் *mādular,* பெ.(n.) மாமன்மார்; uncles.

மாதுவசை *mādu-vašai,* பெ.(n.) பெண் வசம்பு (தைலவ.தைல.); a kind of sweet flag.

மாதுவம் *māduvam,* பெ.(n.) மாதுலர் பார்க்க; see *mādular.*

மாதுளை *māduḷai,* பெ.(n.) 1. மரவகை (திவா.); pomegranate. 2. பேரெலுமிச்சை; ciron lemon.

மாதுளைரசம் *māduḷai-rašam,* பெ.(n.) மாதுளம் பழத்தின் சாறு; juice of pomegranate ruit, extremely pleasant to taste and refreshing.

*[மாதுளை + ரசம். **Skt.** ரசம். த. சாறு.]*

மாதுளைவித்து *māduḷai-vittu,* பெ.(n.) மாதுளைவிதை; seeds of pomegranate fruit.

மாதுறுப்பு *māduṟuppu,* பெ.(n.) மகளிரணியும் உத்தி யென்னும் தலையணி (யாழ்.அக.); a head ornament of women.

*[மாது + உறுப்பு.]*

மாதூகம் *mādūgam,* பெ.(n.) இலுப்பை மரம்; mowah tree (சா.அக.).

மாதூர்காரகன் *mādūrkāragaṉ,* பெ.(n.) நிலவு; the moon (சா.அக.).

மாதேசி *mādēši,* பெ.(n.) எலுமிச்சை; lime (சா.அக.).

மாதேவன் *mādēvaṉ,* பெ.(n.) 1. சிவன்; *Šivaṉ.* *"மாதேவன் வார் கழல்கள்" (திருவாச. 7, 1).* 2. ஏகாதசருத்திரருள் ஒருவர் (திவா.); a rudran, one of *ēkātaca-ruttirar.*

*[மா + தேவன்.]*

மாதேவி *mādēvi,* பெ.(n.) 1. மலைமகள் (கூர்மபு.திரு.20); pārvati. 2. அரசி; queen. *"புரவலன் துயில மாடே..... மாதேவி யிருப்ப" (பெரியபு.மெய்ப்பொரு.10).* 3. செங்கழுநீர் (மலை.); purple Indian water lily.

*[மா + தேவி.]*

மாதை *mādai,* பெ.(n.) திருவாமத்தூர் என்னும் சிவத்தலம்; a *Šivaṉ* shrine. *"மாந்தமுமாகி நின்றார் மாதை நாதர்" (தமிழ்நா.111).*

மாதொருபாகனார் *mādoru-bāgaṉār,* பெ.(n.) சிவன்; *Šivaṉ.* *"மாதொரு பாகனார் தாம் வருவர்" (சி.சி.2, 25).*

மாதோ *mādō,* பெ.(n.) அசைச் சொல்; expletive article.

மாதோசம்நீக்கி *mātōšam-nīkki,* பெ.(n.) புளியாரை; sour sorrel.

மாந்தக்கட்டி *mānda-k-kaṭṭi,* பெ.(n.) குழந்தைகளுக்கு வரும் கட்டி வகை (சாரங்க. 236); a kind of tumour, in children.

*[மாந்தம் + கட்டி.]*

**மாந்தக்கொதி** *mānda-k-kodi,* பெ.(n.) குழந்தைநோய் வகை (யாழ்.அக.); fever from indigestion, chiefly in children.

*[மாந்தம் + கொதி.]*

**மாந்தகணம்** *mānda-kaṇam,* பெ.(n.) குழந்தைகளுக்கு வரும் கணை நோய் வகை (பைஷஜ.); a wasting disease, in children, Table mesenterica.

*[மாந்தம் + கணம்.]*

**மாந்தசன்னி** *mānda-šaṉṉi,* பெ.(n.) மாந்த இசிவு பார்க்க; see *mānda-išivu.*

*[மாந்தம் +சன்னி.]*

**மாந்தஇசிவு** *mānda-išivu,* பெ.(n.) மாந்தத்தால் குழந்தைகளுக்கு வரும் இசிவு நோய்; infantile convulsions with delirium due to indigestion.

*[மாந்தம் + இசிவு.]*

**மாந்தத்தையறுக்கி** *māndattaiyaṟukki,* பெ (n.) பாவட்டை; a tree - *pavattai Indica.*

**மாந்தப்புல்** *mānda-p-pul,* பெ.(n.) காவட்டம் புல் (பதார்த்த.375); citronella grass.

*[மாந்தம் + புல்.]*

**மாந்தபத்திரம்** *mānda-pattiram,* பெ.(n.) வில்வயிலை; bael leaf, aegle marmeleps.

**மாந்தம்** *māndam,* பெ.(n.) 1. குழந்தை நோய் வகை; infantile diarrhoea. 2. மந்தத்தால் குழந்தைகட்கு வரும் கணைநோய் (வின்.); infantile convulsion due to indigestion. 3. மாந்தப்புல் பார்க்க; see *mānda-p-pul.* 4. செரியாமை (யாழ்.அக.); indigestion.

*[மொத்து = தடித்த – வன் – வள் – து, சுறுசுறுப்பில்லாத– வன் – வள் –து. மொத்து→ மத்து →மந்து→மந்தம்=செரிமான உறுப்பின் சுறுசுறுப்பின்மை, செரியாமை. மந்தம்→மாந்தம் = செரியமையாற் குழந்தைகட்குண்டாகும் நோய். வடவர் காட்டும் மூலமும் இதுவே (வ.வ.61).]*

**மாந்தமாத்திரை** *mānda-māttirai,* பெ.(n.) செரியாமை, பசியின்மை, முதலிய மாந்த நோய்களுக்குக் கொடுக்கும் மாத்திரை; pill given for diseases caused by *māndam.*

*[மாந்தம் + மாத்திரை.]*

**மாந்தர்** *māndar,* பெ.(n.) 1. மக்கள்; human beings. *"மாந்தர் மக்களென்னும் பெயரும்" (தொல்.சொல்.163).* 2. ஆடவர்; male persons. *"தோள் சேர்ந்த மாந்தர் துயர்கூர" (கலித்.145, 13).* 3. ஊர்க்காவலர்; watchman. *"நல்லிருள் மாந்தர் கடிகொண்ட கங்குல்" (கலித்.142, 33).*

**மாந்தர்போகம்** *māndar-pōgam,* பெ.(n.) மாதர் போகம்; intercourse with woman.

*[மாதர் + **Skt.** போகம்.]*

**மாந்தரஞ்சேலிரும்பொறை** *māndarañ-cēral-irumpoṟai,* பெ.(n.) சேர மன்னன் (புறநா.53, 125); a *Cēra* king.

**மாந்தரன்** *māndaraṉ,* பெ.(n.) பழைய சேரவரசன் (பதிற்றுப்.90); an ancient *Cēra* king.

**மாந்தரோகம்** *mānda-rōgam,* பெ.(n.) மாந்த நோய்; a disease in children caused by the fermentation of acids in the stomach due to fermentation.

*[மாந்தம் + **Skt.** ரோகம் > த. நோய்.]*

**மாந்தல்** *māndal,* பெ.(n.) 1. குடித்தல்; drinking. 2. உண்ணுதல்; eating. 3. ஊழ்வினைப் பயனை நுகர்தல்; experiencing the sorrows and pleasures being the result or outcome of what he had done (bad or good) in the previous birth.

*[மாந்து→மாந்தல்.]*

**மாந்தலை** *māndalai,* பெ.(n.) கன்னமுது (பாயச) முதலியவற்றில் சுவை பெருக இடுவதற்காக காய வைத்த மாம்பழச் சாறு (நாஞ்.); a jelly like preparation of dried mango-juice.

**மாந்தவலி** *māndavali,* பெ.(n.) மாந்தத்தினால் குழந்தைகளுக்குக் காணும் இசிவு; trismus noscentium.

*[மாந்தம் + வலி.]*

**மாந்தவிரைப்பு** *mānda-viraippu,* பெ.(n.) குழந்தைகளுக்கு வரும் இரைப்பு நோய் (இங்.வை.); infantile laryngitis, child - crowing.

*[மாந்தம் + இரைப்பு.]*

**மாந்தவிழுப்பு** *mānda-v-iḻuppu,* பெ.(n.) மாந்தஇசிவு பார்க்க; see *mānda-iśivu.*

*[மாந்தம் + இழுப்பு.]*

**மாந்தளிர்** *māndaḷir,* பெ.(n.) துவர்ப்புச் சுவைப் பத்தனுள் ஒன்றாகிய மாமரத்துளிர் (யாழ்.அக.); tender leaf of mango, one of ten tuvar taste (q.v.).

*[மா + தளிர்.]*

**மாந்தளிர்க்கல்** *māndaḷir-k-kal,* பெ.(n.) ஒருவகை மணிக்கல் (இ.வ.); a kind of precious stone.

*[மாந்தளிர் + கல்.]*

**மாந்தளிர்ச்சிலை** *māndaḷir-c-cilai,* பெ.(n.) காவிக்கல் (யாழ்.அக.); red ochre.

*[மாந்தளிர் + சிலை.]*

**மாந்தளிர்நாணான்** *māndaḷir-nāṉāṉ,* பெ.(n.) மன்மதன் (நாமதீப.59); god of love.

*[மாந்தளிர் + நாணான்.]*

**மாந்தளிர்ப்பச்சை** *māndaḷir-p-paccai,* பெ.(n.) சிலமான் கல் (சங்.அக.); agate.

*[மாந்தளிர் + பச்சை.]*

**மாந்தன்**[1] *māndaṉ,* பெ.(n.) நமரை வாழை; green banana.

**மாந்தன்**[2] *māndaṉ,* பெ.(n.) ஆண்மகன்; male person. *"அறைக்கண் மாந்தனுக் கதிதியந் தொழிலினி லமைந்தார்" (சூளா.தூது.40).*

**மாந்தனாதி** *māndaṉādi,* பெ.(n.) சூடாலைக் கல்; a kind of load stone.

**மாந்தா** *māndā,* பெ.(n.) மாந்தாதா பார்க்க; see *māndādā. "மாந்தா முதன் மன்னவர்" (கம்பரா.அயோமுகி.73).*

**மாந்தாதா** *māndādā,* பெ.(n.) சூரிய குலத்திற் புகழ்பெற்ற ஓர் அரசன்; a famous king of solar race. *"மாந்தாதா வென்பான் வழி பட்டான்" (காஞ்சிப்பு.அந்தர்வே.46).*

**மாந்தாளி** *māndāḷi,* பெ.(n.) பண் வகை (பரத. ராக.பக்.104); a specific melody type.

**மாந்தாளிப்பச்சை** *māndāḷi-p-paccai,* பெ.(n.) பச்சைக்கல் வகை (இ.வ.); a variety of green stone.

*[மாந்தாளி + பச்சை.]*

மாந்தி[1] *māndi,* பெ.(n.) 1. மாமரம் (சூடா.); mango. 2. திருமணச் சடங்கினுளொன்று (வின்.); a marriage ceremony.

மாந்தி[2] *māndi,* பெ.(n.) குளிகன் (அக.நி.); a invisible planet.

மாந்தித்தை *māndittai,* பெ.(n.) மாவிலிங்கம்; a tree - crataeva roxurghil.

மாந்தியம் *māndiyam,* பெ.(n.) மந்தமாயிருக்கை (யாழ்.அக.); becoming dull.

*[மந்தம்→மாந்தம்→மாந்தியம்.]*

மாந்திரவஞ்சி *māndira-vañji,* பெ.(n.) சாப்பிரவிரை; monkey turmeric - *Bixa orellana* (சா.அக.).

மாந்திரை *māndirai,* பெ.(n.) மாந்தலை பார்க்க; see *māndalai.*

*[மாந்தலை→மந்தரை→மாந்திரை.]*

மாந்திவிழுப்பு *māndi-viḻuppu,* பெ.(n.) குழந்தைகளுக்கு உண்டாகும் இழுப்பு நோய்; fits in children.

*[மாந்தம்→மாந்தி + இழுப்பு.]*

மாந்து[1]-தல் *māndu-,* 16 செ.குன்றாவி.(v.t.) 1. உண்ணுதல்; to eat, feed. *"மடமந்தி..... வாழைத் தீங்கனி மாந்தும்" (தேவா.909, 5).* 2. குடித்தல்; to drink. *"தேம்பிழி நறவ மாந்தி" (கம்பரா.நாட்டுப்.8).* 3. நுகர்தல்; to experience as pleasure and pain, to enjoy. *"கன்னியின் நல மாந்தினள்" (பாகவத.).*

மாந்து[2]-தல் *māndu-,* 16 செ.கு.வி.(v.i.) 1. வருந்துதல்; to be distressed. *"மணி பிரியரவின் மாந்தி" (கம்பரா.தைல.63).* 2. இறத்தல்; to be ruined, to perish, die. *"மயிர்பட மாந்தும் படியிறே இவள்படி" (ஈடு.7, 3, 2).* 3. அவிந்தடங்குதல்; to be extinct. 4. ஊக்கமழிதல் (யாழ்.அக.); to become dispirited.

மாந்துளிர் *mānduḷir,* பெ.(n.) மாமரத்தின் இளந்தளிர்; the tender leaves of the mango tree which are red in colour.

*[மா + துளிர்.]*

மாந்தை[1] *māndai,* பெ.(n.) 1. நோய் வகை (யாழ்.அக.); a disease. 2. சேரனுக்குரிய ஒரு நகரம் (அகநா.127); an ancient town of the *cēra*kingdom.

மாந்தை[2] *māndai,* பெ.(n.) இலங்கையில் இன்று மாதோட்டம் என வழங்கும் ஊரின் பண்டைப் பெயர்; old name of the present *Mādhōṭṭam* in Sri Lanka. *இராவணனின் மனைவி மண்டோதரி பிறந்த ஊர். அவளுடைய தந்தையான மயனின் தலைநகரம்.*

மாந்தை[3] *māndai,* பெ.(n.) பெண்கள் அணியும் பல வண்ணங்களால் அமைந்த மேலாடை; a colourful dress of women.

மாந்தோட்டுப்பச்சை *māndōṭṭu-p-paccai,* பெ.(n.) மரகத வகை; a kind of emerald (S.I.I.vii, 22).

மாந்தோட்டுப்பொத்தி *māndōṭṭu-p-potti,* பெ.(n.) மாந்தோட்டுப்பச்சை பார்க்க; see *māndōṭṭu-p-paccai.*

மாந்தோப்பு *mantōppu,* பெ.(n.) மாமரங்களின் தொகுப்பு; crowd of mango tree.

*[மா + தோப்பு. மா = மாமரம். தொகுப்பு → தோப்பு.]*

**மாநகரம்** *mānagaram*, பெ.(n.) பத்து இலக்கத்திற்கு மேற்பட்ட மக்கள் தொகை கொண்ட பெரிய நகரம்; city.

*[மா + நகரம்.]*

**மாநகரத்தந்தை** *mānagara-t-tandai*, பெ.(n.) மாநகராட்சியின் ஆளுகைக் குழுத்தலைவர்; Mayar.

*[மாநகரம் + தந்தை.]*

**மாநகராட்சி** *mānagarāṭci*, பெ.(n.) மாநகரத்தை ஆளும் உள்ளாட்சி அமைப்பு; corporation of a city.

*[மா + நகராட்சி.]*

**மாநடன்** *mānaḍaṉ*, பெ.(n.) சிவன் (சங்.அக.); *Śivaṉ*.

*[மா + நடன்.]*

**மாநரகம்** *mānaragam*, பெ.(n.) மாந்தப் பிறப்பில் பெருங்கேடு புரிந்தோர் இறப்பிற்குப் பின் சென்று சேர்வதாகக் கருதப்படுவது, அளறு; the great hell.

*[மா + நரகம். மா = பெரிய.]*

**மாநாகம்** *mānāgam*, பெ.(n.) பாம்பு வகை (நாமதீப.261); a kind of snake.

*[மா + நாகம்.]*

**மாநாட்டுப்பந்தல்** *mānāṭṭu-p-pandal*, பெ.(n.) திரளான மக்கள் அமர்வதற்கேற்ற வகையில் அமைக்கப்படும் மிகப் பெரிய பந்தல்; temporary shelter for the conference.

*[மாநாடு + பந்தல்.]*

**மாநாடு** *mānāḍu*, பெ.(n.) 1. பேரளவிலான மக்கள் கலந்து கொள்ளும் கூட்டம்; conference. 2. ஒரு பொருண்மை குறித்து கலந்துரையாடும் கூட்டம்; a place where consult in a meaning.

*[மா + நாடு.]*

**மாநாதன்** *mānādaṉ*, பெ.(n.) திருமால்; Tirumāl.

மறுவ. மாமணாளன்

*[மா + நாதன்.]*

**மாநிலங்களவை** *mānilaṅgaḷavai*, பெ.(n.) சட்டமன்ற உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப் பட்டவர்களோடு குடியரசுத் தலைவரால் அமர்த்தப்பட்டவர்களையும் உறுப்பினர்களாகக் கொண்ட இந்தியப் நாடாளுமன்றத்தின் அவை; upper house of the Indian parliament.

*[மாநிலங்கள் + அவை.]*

**மாநிலங்களவைஉறுப்பினர்** *mānilaṅgaḷ-avai-uṟuppiṉar*, பெ.(n.) இந்திய நாடாளு மன்றத்தின் மேலவை உறுப்பினர்; member of parliament (Rajyashabha) in India.

**மாநிலம்** *mānilam*, பெ.(n.) 1. இந்தியாவின் அரசியலமைப்பிற்காகப் பிரிக்கப்பட்ட பகுதி; state. 2. நிலம்; earth. *"மாநிலஞ் சேவடியாக" (நற்.கடவுள்).*

*[மா + நிலம்.]*

**மாநிறக்கல்** *māniṟa-k-kal*, பெ.(n.) நீலக்கல்; a gem of blue colour.

*[மாநிறம் + கல்.]*

மாநிறம் *māniṟam,* பெ.(n.) பொது நிறம்; (C.G.) brown colour, tan colour.

*[மா + நிறம்.]*

மாநீர்[1] *mānīr,* பெ.(n.) கடல் (மணிமே.14:73); sea.

*[மா + நீர். மா = பெரிய.]*

மாநீர்[2] *mānīr,* பெ.(n.) தண்ணீர்; water.

*[மா + நீர்.]*

மாநோன்பு *mānōṉbu,* பெ.(n.) 1. காருவா (அமாவாசை) நாளன்று நோற்கப்படும் நோன்பு; the feast on the new moon day. 2. மகாநோன்பு (கொ.வ.); the festival of *nava-rāttiri.*

*[மா + நோன்பு.]*

மாப்பட்டாடை *māppaṭṭāḍai,* பெ.(n.) வரி வகை; a tax (S.I.I.vii, 404).

*[மா + பட்டாடை.]*

மாப்பண்டம் *māppaṇḍam,* பெ.(n.) மாவினால் செய்த பலகாரம்; cakes prepared with rice flour.

*[மா + பண்டம். மா = மாவு.]*

மாப்பணம்[1] *mā-p-paṇam,* பெ.(n.) பண்டைக்கால காசு வகைகளுள் ஒன்று; a kind of coin. *"நெய்விலைக்கு எருதுக்கு ரண்டு மாப்பணமும் எண்வகைப் பலரையும்" (திருமலை. செப்.2/1646, பக்.89).*

மாப்பணம்[2] *mā-p-paṇam,* பெ.(n.) 1. நாணய வகை; a coin (S.I.I.v.224). 2. வரி வகை; a tax (S.I.I.VIII, 139).

*[மா + பணம்.]*

மாப்பதக்கு *mā-p-padakku,* பெ.(n.) வரி வகை; a tax (S.I.I.vii.30).

*[மா + பதக்கு.]*

மாப்பலகை *mā-p-palagai,* பெ.(n.) மாக்கல் (யாழ்.அக.); pot-stone, pumice stone.

*[மா + பலகை. மா = மாவு. பலகை = பலகை வடிவானகல்.]*

மாபிசை-தல் *mā-pišai-,* 2 செ.குன்றாவி. (v.t.) பிசறுதல்; mixing.

*[மா + பிசை-,]*

மாப்பிடி *mā-p-piḍi,* பெ.(n.) மாவினாற் பிடிக்கப்பட்ட பண்ணியாரம் (யாழ்.அக.); cake made of flour.

*[மா + பிடி. மா = மாவு.]*

மாப்பிலாச்சை *mā-p-pilāccai,* பெ.(n.) நீல நிறமுடையதும் நான்கடி வளரத் தக்கதுமான கடல் மீன் வகை; sea - fish, bluish attaining 4 ft. in length.

*[மா + பிலாச்சை. மா = பெரிய.]*



மாப்பிள்ளை[1] *mā-p-piḷḷai,* பெ.(n.) 1. மண மகன்; bridegroom. *"உனக்கு நல்ல மாப்பிள்ளை வருவானம்மே" (குற்றாலக்.*

*குற.63).* 2. மகளின் கணவன்; daughter's husband. 3. அளியன் (நாமதீப.198); brother-in-law. 4. மாமன் மகன் (நாமதீப. 198); maternal uncle's son. 5. அத்தை மகன் (நாமதீப.198); paternal aunt's son. 6. தங்கையின் கணவன்; younger sister's husband.

*[மணாட்டுப்பிள்ளை → (மாட்டுப்பிள்ளை) → மாப்பிள்ளை. ஒ.நோ. மணாட்டுப்பெண் → மாட்டுப்பெண்.]*

**மாப்பிள்ளை²** *mā-p-piḷḷai,* பெ.(n.) 1. கேரள நாட்டிலுள்ள கிறித்தவருக்கும், அரபியருக்கும் வழங்கும் பட்டப் பெயர்; honourary title given to colonists in the west coast, as syrian Christians or Arabs (G.s.D.I.190). 2. மலையாள முதலிய மேலைக்கடற்கரையில் வாழும் ஒருசார் மகமதிய வகுப்பார்; moppḷlah, a class of muhammadans on the west coast (G.s.D.I.26).

**மாப்பிள்ளை³** *mā-p-piḷḷai,* பெ.(n.) மந்திரங்களுக்காக மாவினாற் செய்து வைக்கும் பொம்மையுருவம் (இ.வ.); a small figure of rice flour, used in magic rites. *"மாப்பிள்ளை மஞ்சட்பிள்ளை".*

*[மா + பிள்ளை. மா = மாவு. பிள்ளை வடிவத்தை மாவில் வடித்துவைத்தல்.]*

**மாப்பிள்ளைஅழைப்பு** *mā-p-piḷḷai-aḻaippu,* பெ.(n.) திருமணம் நடக்கும் இடத்துக்கு மாப்பிள்ளையை உரிய மதிப்புடன் ஊர்வலமாக அழைத்து வரும் நிகழ்வு; the ceremony of receiving and taking the bridegroom in a procesion to the wedding.

*[மாப்பிள்ளை + அழைப்பு.]*

**மாப்பிள்ளைஆணி** *mā-p-piḷḷai-āṇi,* பெ.(n.) மாப்பிள்ளையாணி பார்க்க; see *māppiḷḷai-y-āṇi.*

**மாப்பிள்ளைக்கடா** *mā-p-piḷḷai-k-kaḍā,* பெ.(n.) பொலியெருது (கொ.வ.); covering bull.

*[மாப்பிள்ளை¹ + கடா.]*



**மாப்பிள்ளைச்சம்பா** *mā-p-piḷḷai-c-cambā,* பெ.(n.) உயர்ந்த சம்பா நெல் வகை (இ.வ.); a superior kind of paddy.

*[மாப்பிள்ளை + சம்பா.]*

**மாப்பிள்ளைமுறுக்கு** *mā-p-piḷḷai-muṟukku,* பெ.(n.) மணமகனிடத்துக் காணப்படுவது போன்ற போலி மிடுக்கான நடத்தை (இ.வ.); stiffness of manners, as of a bridegroom.

*[மாப்பிள்ளை¹ + முறுக்கு.]*

**மாப்பிள்ளையாணி** *mā-p-piḷḷai-y-āṇi,* பெ.(n.) 1. மாட்டு வண்டியின் நடுப்பகுதியில் இருந்து மாடுகள் பூட்டுவதற்குரிய இடத்தில் வைக்கும் ஆணி; nail in bullock cart. 2. கலப்பைக் குற்றியோடு மேழியைச் சேர்க்கும் ஆணி; a nail joining the plough share to the plough.

*[மாப்பிள்ளை + ஆணி.]*

மாப்பிள்ளைவீரன் *mā-p-piḷḷai-vīraṉ,* பெ. (n.) ஒரு சிற்றூர் தேவதை (இ.வ.); a village demon.

*[மாப்பிள்ளை + வீரன்.]*

மாப்பு *māppu,* பெ.(n.) 1. மிகுதி; abundance. 2. மீன்றிரள்; shoal of fish. 3. மன்னிப்பு; excuse. *இந்தத் தடவை மட்டும் உனக்கு மாப்பு விடுகிறேன் (பே.வ.).*

*[மா→மாப்பு.]*

மாப்புக்காரன் *māppu-k-kāraṉ,* பெ.(n.) (குழூஉக்குறிச்சொல்) பறக்கோலா மீன்; a kind of fish.

மாப்புநெத்திலி *māppu-nettili,* பெ.(n.) கடற்பரப்பில் கூட்டமாய் மேயும் நெத்திலி மீன்; a group of nettili fish go surface of the sea.

*[மாப்பு + நெத்திலி.]*

மாப்புமீன் *māppu-mīṉ,* பெ.(n.) கூட்டமாய்க் கடற்பரப்பின் மேல் மேயும் மீன்கள் (செங்கை. மீனவ.); a group of fish roming their foods on the surface of the sea.

*[மாப்பு + மீன். மாப்பு = திரள்.]*

மாப்புவலை *māppu-valai,* பெ.(n.) மீன் திரளைப் பிடிக்கும் வலை (இ.வ.); net for catching fish in shoals.

*[மாப்பு + வலை.]*

மாப்புவிடு-தல் *māppu-viḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) மன்னித்தல் (முகவை. மீன.); to excuse, pardon.

*[மாப்பு + விடு-தல்.]*

மாப்பூச்சி *māppūcci,* பெ.(n.) பேன் வகை (அபி.சிந்.); a kind of louse.

*[மா + பூச்சி.]*

மாப்பெடுக்காதமீன் *māppeḍukkāda-mīṉ,* பெ.(n.) தனியொன்றாய் மேயும் மீன் (செங்கை.மீன.); a single fish catching the foods in lonely.

மாப்பெருத்தல் *mapperuttal,* பெ.(n.) மீன் கூட்டம் சேர்த்தல் அல்லது சேர்தல் (செங்கை. மீன.); a unity of fishes.

மாபகம் *mābagam,* பெ.(n.) தண்ணீர்; water.

மாபத்தியன் *mābattiyaṉ,* பெ.(n.) 1. காமன்; *Kāmaṉ.* 2. மாமகன்[1] (யாழ்.அக.) பார்க்க; see *māmagaṉ.*

*[மா + பத்தியன்.]*

மாபதுமம் *mā-padumam,* பெ.(n.) எண் வகை நிரய (நரக)த் தொன்று (சி.போ.பா. பக்.203); a hell one of eight *naragam* (q.v.).

மாபலம் *mā-balam,* பெ.(n.) 1. மிக்க வலு; immense strength. 2. மாம்பழம்; mango ripe fruit.

*[மா + **Skt.** பலம். த. வலு.]*

மாபலன் *mā-palaṉ,* பெ.(n.) காற்று (பிங்.); a wind.

*[மா + பலன்.]*

மாபலி *mā-bali,* பெ.(n.) மாவலிவாணன் பார்க்க; see *māvali-vāṇaṉ.*

**மாபலிவாணன்** *mā-balivāṇaṉ,* பெ.(n.) மாவலிவாணன் பார்க்க; see *māvali-vāṇaṉ.*

**மாபனம்** *mā-baṉam,* பெ.(n.) 1. அளவு; measure. 2. எடைக்கல்; balance unit.

**மாபாதகம்** *mā-pādagam,* பெ.(n.) பெருங்கரிசு; the five great sins. *"மாபாதகத்தைத் தவிர்த்தா னன்றே" (கடம்ப.பு.இலீலா.344).*

*[மா + Skt. பாதகம்.]*

**மாபாரதம்** *mā-bāradam,* பெ.(n.) 1. பெரும் பாரதம்; the great epic. 2. கௌரவ பாண்டவர்க்குள் நிகழ்ந்த பெரும்போர்; the great war between the *Pāṇḍavās* and the Kouravas. *"தேவாசுர ராமாயண மாபாரத முளவென்று" (கலிங். 459).*

*[மா + பாரதம். மா = பெரிய.]*

**மாபாவி** *mā-pāvi,* பெ.(n.) தீயோன் (பெரும்பாவி) (திவ்.திருவாய்.5, 1, 7); great sinner.

*[மா + பாவி.]*

**மாபுராணம்** *mā-purāṇam,* பெ.(n.) இடைச் சங்கத்து வழங்கிய இலக்கண நூல் (இறை.1, பக்.5); a grammer of the middle sangam.

**மாபுலி** *mā-puli,* பெ.(n.) அரிமா (யாழ்.அக.); lion.

**மாபுறயாகம்** *mā-puṟa-yāgam,* பெ.(n.) வெளிப்பூசை (யாழ்.அக.); external worship.

*[மா + புறயாகம்.]*

**மாபூதி** *mā-pūdi,* பெ.(n.) நிரயங்களில் ஒன்று; a hell.

*[மா + பூதி.]*

**மாம்** *mām,* பெ.(n.) மாமரம்; mango tree.

*[மாமரம் →மாம்.]*

**மாம்படை** *mām-paḍai,* பெ.(n.) வாழை; plantain tree.

**மாம்பம்** *māmbam,* பெ.(n.) நெல்லிப் பருப்பு; the kernel of the fruit of indian goose berry (சா.அக.).

**மாம்பருப்பு** *mām-paruppu,* பெ.(n.) மாங் கொட்டையினுள்ளிருக்கும் பருப்பு; the seed or kernel inside the mango nut.

*[மா + பருப்பு.]*

**மாம்பழக்கட்டு** *māmbaḻa-k-kaṭṭu,* பெ.(n.) புடவை உடுக்கும் வகையிலொன்று; a mode of wearing saree.



**மாம்பழக்கெளிறு** *māmbaḻa-k-keḷiṟu,* பெ.(n.) மீன் வகை; a kind of fish. *"சாலு மாம்பழக் கெளிறு" (பறாளை. பள்ளு.16).*

*[மாம்பழம் + கெளிறு.]*

**மாம்பழக்கொடுக்கு** *māmbaḻa-k-koḍukku,* பெ.(n.) மாம்பழக்கட்டு பார்க்க; see *māmbaḻa-k-koḍukku.*

*[மாம்பழம் + கொடுக்கு.]*

**மாம்பழக்கொன்றை** *māmbaḻa-k-koṉṟai,* பெ.(n.) மஞ்சட்கொன்றை; siamese tree.

*[மாம்பழம் + கொன்றை.]*

**மாம்பழச்சிட்டு** *māmbaḻa-c-ciṭṭu,* பெ.(n.) ஒருவகை சிறு பறவை (வின்.); a kind of little bird.

*[மாம்பழம் + சிட்டு.]*



**மாம்பழம்[1]** *māmbaḻam,* பெ.(n.) மாங்கனி; mango fruit.

**மாம்பழம்[2]** *māmbaḻam,* பெ.(n.) புடவை யுடுத்தும் போது செருகும் முடிப்பு (இ.வ.); a kind of knot made when wearing a saree.

**மாம்பழவண்டு** *māmbaḻa-vaṇḍu,* பெ.(n.) சிலவகை மாம்பழங்களுள் வாழும் வண்டு வகை (அபி.சிந்.); an insect inside some species of mango fruits.

*[மாம்பழம் + வண்டு.]*

**மாம்பழவுண்ணி** *māmbaḻa-v-uṇṇi,* பெ.(n.) பெரிய உண்ணி வகை; a species of big cattle-tick. *"மாம்பழத்தின் கந்தமும் அறியாதவற்றை மாம்பழவுண்ணி யென்று சொல்லுமா போல" (ஈடு.9, 9, 6).*

*[மாம்பழம் + உண்ணி.]*

**மாம்பால்[1]** *mā-m-pāl,* பெ.(n.) மாங்காய்க் காம்பிலிருந்து கசியும் பால்; milky exudence in the stalk of unripe mangoes.

*[மா + பால். மா = மாங்காய்.]*

**மாம்பால்[2]** *mā-m-pāl,* பெ.(n.) சருக்கரை, அரிசிமா, மாம்பழம் முதலியவற்றாற் செய்த கூழ்; a jelly of mangoes with sugar, rice-flour, etc. nāñ.

*[மா + பால். மா = மாவு.]*

**மாம்பாலிருள்** *mām-bāliruḷ,* பெ.(n.) இரும்பகம் எனும் மரவகை; a kind of tree.

**மாம்பிசின்** *māmpišiṉ,* பெ.(n.) மாமரத்துப் பால்; gum of mango - tree.

*[மா + பிசின். மா = மாமரம்.]*

**மாம்பிஞ்சு** *mām-piñju,* பெ. (n.) 1. மாவடு; tender mango. 2. மாவடு போன்ற வடிவிற் செய்த கழுத்தணி யுரு; a pendant in a necklace, shaped like tender mango fruit.

*[மா + பிஞ்சு. மா = மாமரம்.]*

**மாம்பிரம்** *māmbiram,* பெ.(n.) சிறுதேக்கு (சங்.அக.); beetle - killer.

**மாம்புளி** *mām-puḷi,* பெ.(n.) புளிமா; indian hog plum.

மாம்புளிச்சி *mām-pulicci,* பெ.(n.) மாம்புளி பார்க்க; see *mām-puli.*

*[மா + புளிச்சி.]*

மாம்பூ *māmbū,* பெ.(n.) மாமரத்தின் பூ; flower of the mango tree.

*[மா + பூ.]*

மாம்பூச்சி *mā-m-pūcci,* பெ.(n.) சருக்கரை முதலியவற்றில் விழும் வெண்ணிறமுள்ள சிறுபூச்சி வகை (இ.வ.); a small white insect infesting sugar etc.

*[மா + பூச்சி.]*

மாம்போழ் *mā-m-pōḻ,* பெ.(n.) மாவடுவின் பிளவு; section of a tender mango, cut lengthwise. *"மாம்போழு மெழுதிற்று" (திருக்கோ.79).*

*[மா + போழ்.]*

மாமகம்[1] *māmagam,* பெ.(n.) காசாய வகை; an ancient tax in cash (S.I.I.I.82).

*[மா + மகம்.]*

மாமகம்[2] *mā-magam,* பெ.(n.) மகாமகம்; a great luni-solar festival. *"கங்கை மாமகந் தோறும் வந்து" (திருவிளை.அருச்சனை.25).*

*[மா + மகம்.]*

மாமகன்[1] *mā-magaṉ,* பெ.(n.) மன்மதன் (யாழ்.அக.); god of love, as son of Laksmi.

*[மா + மகன்.]*

மாமகன்[2] *mā-magaṉ,* பெ.(n.) 1. அம்மான்; maternal uncle. 2. இவறன் மரலையன், ஈயாமாரி, பேராசையுடையவன்; miser.

*[மா + மகன்.]*

மாமடி *mā-maḍi,* பெ.(n.) 1. மாமன், 1 பார்க்க; see *māmaṉ. "மாமடி ஸ்ரீவல்லப தேவர்" (T.A.S.i, 257).* 2. மாமனார் பார்க்க; see *māmaṉār. "மந்தண மிருந்துபுரி மாமடிதன் வேள்வி" (தேவா.324, 7).*

மாமடிகள் *māmaḍigaḷ,* பெ.(n.) மாமடி பார்க்க; see *māmaḍi. "மற்றை மாமடிகளிடு சாபமும்" (குமர.பிர.மீனாட்.பிள்.67).*

மாமணி *māmaṇi,* பெ.(n.) மாணிக்கம் (சூடா.); ruby.

*[மா + மணி.]*

மாமதக்காணம் *mā-mada-k-kāṇam,* பெ.(n.) பேய்க்கொள்; wild horsegram.

மாமம் *mā-mam,* பெ.(n.) மஞ்சள்; turmeric.

மாமரத்தின்புல்லுருவி *māmarattiṉ-pulluruvi,* பெ.(n.) மாமரத்தை அழிக்கும் ஒருவகை பூச்சிகள்; parasitic plant growing on mango tree.

*[மாமரம் + அத்து + இன் + புல்லுருவி.]*

மாமரம்[1] *māmaram,* பெ.(n.) மரவகை (பிங்.); mango tree. *"வளிவாங்கு சினைய மாமரம் வேர்கீண் டுயர்ந்துழி யுள்ளன பயம்பிடைப் பரப்பி" (பரிபா.7:14–5).*

மாமருத்துநூலோர் *māmaruttu-nūlōr,* பெ.(n.) மருத்துவர்; physicians.

*[மா + மருத்து + நூலோர். மா = பெரிய. மருந்து →மருத்து. நூலோர் = நூலின் பொருளுணர்ந்தோர். நூலறிவுடையோர், அறிஞர்.]*

மாமறையோன் *mā-maṟaiyōṉ,* பெ.(n.) இதளியம் (இரசம்); mercury.

**மாமல்லபுரம்** *māmallapuram*, பெ.(n.) கிழக்குக் கடலோரச் சாலையில் சென்னைக்குத் தெற்கே 60 அயிரமாத்திரி (கிலோமீட்டர்) தொலைவில் அமைந்துள்ள சிற்பக் கலை நகரம்; a town with stone sculptures, 60 kilometer south of Chennai on the East Coast Road.

மறுவ. மகாபலிபுரம், மல்லை, கடல்மல்லை, மாமலைபுரம்.

*[மா + மல்லன் + புரம் = மாமல்லபுரம்]*

இவ்வூர் "உலகப் பண்பாட்டுச் சின்னம்" உள்ள ஊராக அறிவிக்கப்பட்டுள்ளது. நரசிம்மவர்மப் பல்லவனின் பட்டப் பெயரால் அமைந்துள்ளது. பல குடைவரைக் கோயில்களும், கட்டுக் கற்றளிகளும் சிறப்பாக வுள்ளன. அர்ச்சுனன் தவம் என்னும் பாறை செதுக்குச் சிற்பம் பெரும்புகழ் பெற்றுள்ளது. அண்மையில் கழகக் காலத் துறைமுகம் அகழ்வாராய்ச்சியில் கிடைத்துள்ளது. மாமலைபுரம் என்றும் நாட்டுப்புறக் கதைகள் கூறுகின்றன. திருமங்கையாழ்வாரின் பாடல் பெற்ற ஊர்.

**மாமல்லன்** *māmallaṉ*, பெ.(n.) மகேந்திர வர்மப் பல்லவனின் மகன் நரசிம்மவர்மனின் பட்டப் பெயர்களுள் ஒன்று; one of the titles of Narasimhavarman, son of Mahendravarma Pallavan.

*[மா + மல்லன். மா = பெரிய.]*

**மாமல்லை** *mā-mallai*, பெ.(n.) மாமல்லபுரம் பார்க்க; see *māmallapuram*. *"மாமல்லை கோவில்" (திவ்.இயற்.2, 70).*

*[மாமல்லபுரம் →மாமல்லை (மரூஉ).]*

**மாமலகம்** *māmalagam*, பெ.(n.) நெல்லிக் காய்; fruit indian gooseberry.

**மாமலத்து** *māmalattu*, பெ.(n.) மாமிலத்து (வின்.) பார்க்க; see *māmilattu*.

**மாமலர்** *māmalar*, பெ.(n.) சரக்கொன்றை பார்க்க; see *cara-k-koṉṟai*. *"மாமலர்த் தெரியலான்" (சீவக..220038).*

*[மா + மலர்.]*

**மாமலற்கண்ணி** *mā-malaṟ-kaṇṇi*, பெ.(n.) சங்கிலை; leaves of the plant.

**மாமலி** *māmali*, பெ.(n.) அத்தி; fig- *Ficus-racemosa*.

**மாமலைபுரம்** *māmalai-puram*, பெ.(n.) மாமல்லபுரத்தின் பழைய பெயர்களுள் ஒன்று; one of the old names of mamallapuram (சுவடிப்பதிப்பு நூல்).

*[மா + மலை + புரம்.]*

**மாமறையோன்** *mā-maṟaiyōṉ*, பெ.(n.) ஈசுவரமூலி என்னும் பெருமருந்து; a twining plant - indian birthwort.

**மாமன்** *mamaṉ*, பெ.(n.) 1. தாயின் உடன் பிறந்தோன்; mother's brother, maternal uncle. *"மாமனு மருகனும் போலு மன்பின" (சீவக.432.).* 2. மாமனார் பார்க்க; see *māmaṉār*. *"மாமனே விமவான்" (திருவிசை. கருவூ.பதி.8, 5).* 3. அத்தையின் கணவன் (வின்.); father's sister's husband. 4. பெண்கள் தங்கள் கணவரை அழைக்கும் பெயர்; a term used by women in addressing their husbands (C.G.).

தெ. மாம; ம. மாமன்.

*[அம்மான் →மாமன்.]*

மாமன்கிடா *māmaṉ-kiḍā*, பெ.(n.) மண மக்களுக்கு தாய்மாமன் சீர்வரிசையில் ஒன்றாக கொடுக்கப்படும் ஆட்டுக்கிடா; ram gift given by maternal uncle to his sister's son or daughter marriage occasion.

*[மாமன் + கிடா.]*

மாமன்னன் *māmaṉṉaṉ*,பெ.(n.) பேரரசன்; emperor.

*[மா + மன்னன். மா = பெரிய.]*

மாமனார் *māmaṉār*, பெ.(n.) கணவன் அல்லது மனைவியின் தந்தை (பிரபோத.11, 93); father-in-law, wife's or husband's father.

*[மாமன் →மாமனார்.]*

மாமா *māmā*, பெ.(n.) மாமன், 1, 2, 3 பார்கக; see *māmaṉ*.

*[மாமன் →மாமா.]*

மாமாங்கக்குழி *māmāṅga-k-kuḻi*, பெ.(n.) திருமுருகன்பூண்டியில் பிள்ளையார் கோயிலுக்கு எதிரில் 12 ஆண்டுகட்கு ஒருமுறை நீர் சுரக்கும் குழி; a small spring in the sheet rock in front of pillaiyar koil at *Tirumurugaṉpūṇḍi* where holy water is supposed to spring in (சி.பெ.அக.).

*[மாமாங்கம் + குழி.]*

மாமாங்கக்குளம் *māmāṅga-k-kuḷam*, பெ.(n.) கும்பகோணத்தில் 12 ஆண்டுகட்கு ஒரு முறை புண்ணிய நதிகளின் நீர் ஊறுவதாகக் கருதப்படும் ஒரு கோயில் குளம்; a temple tank at *Kumbakōṇam* where the waters from sacred rivers are supposed to spring in.

*[மாமாங்கம் + குளம்.]*

மாமாங்கம்¹ *māmāṅgam*, பெ.(n.) 1. பன்னிரண்டு ஆண்டுகள் கொண்ட காலம்; a period of twelve years. 2. நீண்ட காலம்; long period.

*[மா + மாங்கம்.]*

மாமாங்கம்² *māmāṅgam*, பெ.(n.) மகாமகர் பார்க்க; see *magāmagar*.

மாமாங்கம்³ *māmāṅgam*, பெ.(n.) சேலம் புறநகரில் அமைந்துள்ள ஊர்; a sub urban village of salem city.

மாமாசி *māmāši*, பெ.(n.) சடாமாஞ்சில்; root of a medicinal grass.

மாமாத்தியன் *mā-māttiyaṉ*, பெ.(n.) மாமாத்திரன் (நாமதீப.177) பார்க்க; see *māmāttiraṉ*.

மாமாத்திரன் *mā-māttiraṉ*, பெ.(n.) மருத்துவன் (பிங்.); physician. *"மலர்புகழ் மாமாத்திரர்தங் குலம் பெருக" (பெரியபு. சிறுதொண்ட.2).*

மாமாத்து¹ *mā-māttu*, பெ.(n.) மிகப் பெரியது; that which is very great. *"மறையோர் தமையும் பசவினையும் மாமாத்தென வெண்" (சிவதரு. பாவ.50)*

மாமாத்து² *mā-māttu*, பெ.(n.) 1. பெருஞ் செருக்கு; great arrogance. *"மாமாத்தாகிய மாலயன்" (தேவா.1019, 1).* 2. மாய்மாலம் (இ.வ.); pretension, sham.

**மாமாயி** *mā-māyi,* பெ.(n.) 1. மலைமகள்; *Malaimagaḷ.* 2. பெரியம்மைக்குரிய தேவதை; the Goddess of small-pox.

*[மா + மாயி. மா = பெரிய. மகமாயி→மாமாயி.]*

**மாமாயை** *mā-māyai,* பெ.(n.) 1. மலைமகள் (கூர்மபு.திருக்கல்.20); *Malaimagaḷ.* 2. சுத்த மாயை (சி.போ.பா.2, 2, பக்.133, புதுப்.); pure *māyā.*

*[மா + மாயை.]*

**மாமாலம்** *mā-mālam,* பெ.(n.) 1. பெரு வஞ்சனை; great deceitfulness. 2. போலி பகட்டு (கொ.வ.); pretension.

*[மா + மாயம்.]*

**மாமாலை** *mā-mālai,* பெ.(n.) செடி வகை (பதார்த்த.251); a plant.

**மாமான்** *mā-mān,* பெ.(n.) 1. மாமன், 1 பார்க்க; see *māmaṉ.* *"மாமான் மகளே" (திவ்.திருப்பா.9).* 2. மாமனார் பார்க்க; see *māmaṉār.* *"மாமான் சூட்டொடு கண்ணி" (சீவக.484).*

*[மாமன் →மாமான்.]*

**மாமி** *māmi,* பெ.(n.) 1. அம்மான் மனைவி; maternal uncle's wife. *"அன்புடைய மாமனு மாமியு நீ" (தேவா.1228, 1).* 2. மனைவி யினுடைய அல்லது கணவனுடைய தாய்; mother-in-law, wife's or husband's mother. *"சிறக்கு மாமியர் மூவர்க்கும்" (கம்பரா.சூளா.33).* 3. அத்தை (வின்.); father's sister.

*[மாமன் (ஆ.பா.) →மாமி (பெ.பா.).]*

**மாமிசி** *māmiśi,* பெ.(n.) சடாமாஞ்சி பூண்டு (தைலவ.தைல); spikenard herb.

**மாமியார்** *māmiyār,* பெ.(n.) மாமி, 2 பார்க்க; see *māmi.*

**மாமியார்வீடு** *māmiyār-vīḍu,* பெ.(n.) 1. மனைவியின் அல்லது கணவனின் தாய்வீடு; mother-in-law's house. 2. சிறை; prison, jail (பே.வ.).

*[மாமியார் + வீடு.]*

**மாமிலத்து** *māmilattu,* பெ.(n.) அரசிறைக் குரியது (வின்.); that which pertains to revenue.

**மாமுகத்தன்** *mā-mugattaṉ,* பெ.(n.) மாமுகவன் (உரி.நி.)பார்க்க; see *māmugavaṉ.*

**மாமுகவன்** *mā-mugavaṉ,* பெ.(n.) யானை முகத்தவன்; பிள்ளையார்; *Piḷḷaiyār,* God with Elephant face. *"மாமுகவ ரர்ச்சிக்க" (பூவண.உலா.21).*

**மாமுகன்கை** *māmugaṉ-kai,* பெ.(n.) ஐந்து; five.

*[மா + முகன் + கை.]*

**மாமுகி** *māmugi,* பெ.(n.) நாயுருவி; a plant indian burr.

**மாமுகிலை** *māmugilai,* பெ.(n.) துளசி; a sacred plant, holy basil.

**மாமுடி** *māmuḍi,* பெ.(n.) நெட்டி (மலை.); sola pith.

**மாமுனி[1]** *māmuvi,* பெ.(n.) 1. பெருந்துறவி; great ascetic. *"இராமநுசனென்னும் மாமுனியே" (திவ்.இராமாநுச.16).* 2. அருகன்

(பிங்.); *Arhaṉ*. 3. வசிட்டன் (யாழ்.அக.); *vasiṣṭa*.

*[மா + முனி. மா = பெரிய.]*

**மாமுனி²** *māmuṉi*, பெ.(n.) நாயுருவி (மலை.); a plant growing in hedges and thickets.

**மாமூலர்** *māmūlar*, பெ.(n.) அகநானூற்றில் 27 பாடல்களும், குறுந்தொகையில் ஒரு பாடலும் நற்றிணையில் இரண்டு பாடலும் பாடிய கழகக்காலப் பெரும்புலவர்; a great poet of *śaṅgam* period whose verses 27 of *Agaṉāṉūṟu* one of *Kuṟundogai* and two of *Naṟṟiṇai* were available.

**மாமூலனார்** *māmūlaṉār*, பெ.(n.) மாமூலர் பார்க்க; see *māmūlar*.

**மாமூலி** *māmūli*, பெ.(n.) வெண் காக்கட்டான்; a twiner learning white flowers.

**மாமேதம்** *māmēdam*, பெ.(n.) குதிரை வேள்வி; horse-sacrifice. *"மாமேதமுன் மகமுள்ளன" (சேதுபு.அனும.8).*

**மாமேரு** *māmeru*, பெ.(n.) மேருமலை; Mt. *Mēru*. *"மாமேரு விடையை நூறி" (தக்கயாகப்.108).*

*[மா + மேரு. மா = பெரிய.]*

**மாமை** *māmai*, பெ.(n.) 1. அழகு; beauty. *"மணி மிடை பொன்னின் மாமை சாய" (நற்.304). "மாந்தளிர்போன் மின்னிய மாமை விளர்ப்பதென்" (தஞ்சைவா.22).* 2. கருமை; black colour. *"மாமைக் களங்கனி யன்ன" (மலைபடு.35).* 3. வண்ணம்; colour. *"நெடுந்தகை தற்கண்டு மாமைத் தகையிழந்த" (பு.வெ.12, 2).* 4. மேனி; form. *"மாமை பொன்னிறம் பசப்ப" (பு.வெ.11, பெண்பாற்.6).* 5. துன்பம் (அரு.நி.); grief, distress.

**மாமோகம்** *mā-mōgam*, பெ.(n.) ஐம்புல நுகர்ச்சியிற் பற்று (சி.போ.பா.2, 2, பக்.169); attachment to the objects of the senses.

**மாய்¹-தல்** *māy-*, 2 செ.கு.வி.(v.i.) 1. மறைதல்; to hide, vanish. *"களிறுமாய் செருந்தியொடு" (மதுரைக்.172).* 2. அழிதல்; to perish, to be annihilated, terminated. *"குடியொடுமாய்வர் நிலத்து"* (குறள்.898). 3. இறத்தல்; to die. *"தம்பெயர் தம்மொடு கொண்டனர் மாய்ந்தோர்" (மலைபடு.553).* 4. ஒளி மழுங்குதல்; to become lustreless, as the setting sun. *"பகன்மாய" (கலித்.143).* 5. கவலை மிகுதியால் வருந்துதல்; to suffer from over, annexiety as in love-sickness. 6. அறப்பாடுபடுதல்; to wear oneself to death. *"அந்த வேலையில் மாய்ந்து கொண்டிருக்கிறேன்" (உ.வ).*

*[முல் (பொருந்தற் கருத்துவேர்) →முள்→முய் மய் →மை. கருப்பு, இருள். மைம்மை = கருமை, இருண்மை. மய→மயப்பு→மப்பு = மயக்கம், மட்டித் தன்மை, செருக்கு, செரியாமை. மள்கு→மட்கு. மட்குதல் = மயங்குதல், ஒளி மங்குதல், அழுக்கடைதல், வலி குன்றுதல். மள்கு→மாழ்கு. மாழ்குதல் = கலத்தல், மயங்குதல், சோம்புதல், மங்குதல், கெடுதல். மாள்கு→மாள். மாள்தல் = கெடுதல், கழிதல், அழிதல், சாதல், முடிதல், இயலுதல். மாள்→மாய். ஒ.நோ. நோள்→நோய். நோளையுடம்பு = நோயுண்டவுடம்பு (வே.க.4:61).]*

**மாய்-²தல்** *māy-*, 2 செ.குன்றாவி.(v.t.) மறத்தல்; to forget. *"மாயா வுள்ளமொடு பரிசிறுன்னி" (புறநா.139).*

*[மாய்தல் = மறைதல். மறத்தல் = நினைவிலிருந்து மறைதல்.]*

மாய்[3]–த்தல் *māy-*,2 செ.குன்றாவி.(v.t.) 1. மறைத்தல்; to hide. *"களிறு மாய்க்குங் கதிர்க் கழனி"* (மதுரைக்.247). 2. கொல்லுதல்; to kill. *"மாய்த்த லெண்ணி வாய் முலை தந்த" (திவ்.திருவாய்.4, 3, 4).* 3. அழித்தல்; to destroy, put an end to. *"குரம்பை யிது மாய்க்க மாட்டேன்" (திருவாச.5, 54).* 4. வருத்துதல் (கொ.வ.); to afflict. 5. தீட்டுதல்; to grind and sharpen. *"மாய்த்தபோல மழுகு நுனை தோற்றி" (அகநா.5).*

*[மாள் → மாய். ஒ.நோ. நோள் → நோய். நோளையுடம்பு = நோயுண்டவுடம்பு.]*

மாய்[4] *māy*, பெ.(n.) நரி (இராசவைத்.146); jackle.

மாய்[5] *māy*, பெ.(n.) ஆச்சா மரம் (மலை.); sal tree.

மாய்கை[1] *māygai*, பெ.(n.) 1. வெண்ணீர்; semen. 2. கருக்குழந்தையின் நஞ்சுக் கொடி; naval cord (சா.அக.).

மாய்கை[2] *māygai*, பெ.(n.) 1. பொய்த் தோற்றம் (கொ.வ.); illusion. 2. மயக்கம்; giddiness.

*[மாய் → மாய்கை (வே.க.4:61).]*

மாய்கைவல்லவன் *māygai-vallavan*, பெ.(n.) சித்தரில் தேறினவன்; best of siddhars who had conquered passions.

மாய்ச்சல்[1] *māyccal*, பெ.(n.) சோம்பல்; laziness.

*[மாய் → மாய்ச்சல்.]*

மாய்ச்சல்[2] *māyccal*, பெ.(n.) 1. சாவு (யாழ்.அக.); death. 2. மறைவு (சது.); hiding, vanishing. 3. வருத்தம் (வின்.); great difficulty or trouble.

*[மாய் → மாய்ச்சல் (வே.க.4:61).]*

மாய்ச்சி *māycci*, பெ.(n.) பூட்டுவிலங்கு (யாப்.); manacles, shackles.

மாய்ப்பு *māyppu*, பெ.(n.) மாய்ச்சல்[2], 1, 2 (வின்.) பார்க்க; see *māyccal.*

*[மாய் → மாய்ச்சல் → மாய்ப்பு (வே.க.4:61).]*

மாய்மாலம் *māymālam*, பெ.(n.) 1. போலி நடிப்பு (கொ.வ.); hypocrisy, dissimulation, pretension. 2. மோசடி (யாழ்.அக.); deceit.

*[மாய் + மாலம் (வே.க.4:61).]*

மாய்வு *māyvu*, பெ.(n.) 1. மாய்ச்சல், 1 பார்க்க; see *māyccal. "மாய்வு நிச்சயம் வந்துழி" (கம்பரா.இராவணன்வதை.182).* 2. மாய்ச்சல் 2 பார்க்க; see *māyccal.*

*[மாய் → மாய்வு (வே.க.4:61).]*

மாயக்கள்ளி *māya-k-kaḷḷi*, பெ.(n.) மயக்கி ஏமாற்றுபவள் (வின்.); artful women.

*[மாயம் + கள்ளி.]*

மாயக்காய்[1] *māyakkāy*, பெ.(n.) ஓக் மரத்தின் கொட்டை; oak nut.

மாயக்காய்[2] *māya-k-kāy*, பெ.(n.) மாசிக் காய் (இ.வ.) பார்க்க; see *māśi-k-kay.*

மாயக்காரன் *māya-k-kāran*, பெ.(n.) 1. வஞ்சகம்; hypocrite. 2. செப்பிடு வித்தைக்காரன்; conjurer, juggler.

*[மாயம் + காரன்.]*

மாயக்காரி *māya-k-kāri,* பெ.(n.) 1. மாயக் கள்ளி பார்க்க; see *māya-k-kaḷḷi.* 2. மாயக்காரன் பார்க்க; see *māya-k-kāraṉ.*

*[மாயக்காரன் (ஆ.பா.) →மாயக்காரி (பெ.பா.)]*

மாயக்குரம்பை *māya-k-kurambai,* பெ.(n.) உடல் (நிலையற்றது); body, as unstable. *"மாயக் குரம்பை நீங்க வழி வைத்தார்க்கு" (தேவா.29, 3).*

*[மாயம் + குரம்பை.]*

மாயக்கூத்தன் *māya-k-kūttaṉ,* பெ.(n.) திருமால்; Tirumāl, as one whose actions are wonderful. *"வண்குட பானின்ற மாயக் கூத்தன்" (திவ்.திருவாய்.8, 2, 4).*

*[மாயம் + கூத்தன்.]*

மாயகம் *māyagam,* பெ.(n.) விளாமரம் (சங். அக.); wood apple tree.

மாயக்கலை *māya-k-kalai,* பெ.(n.) சந்திரக் கலை; the vital air passing through the left nostril.

மாயக்கன்னி *māya-k-kaṉṉi,* பெ.(n.) குப்பைமேனி; a plant acalypha indica a vermifuge and expectorant.

மாயச்செயல் *māya-c-ceyal,* பெ.(n.) 1. மாயையின் தோற்றமாகிய உலகம்; the effects of *māyam,* its various changes and manifestations in nature. 2. மாயையின் விளைவுகள்; the body, accessory instruments, world and enjoyments, considered as the products of *māyam.*

மாயாசாலம் *māyā-šālam,* பெ.(n.) வஞ்சனை (வின்.); dissimulation, deceit.

*[மாயம் + சாலம்.]*

மாயசிகிச்சை *māya-šigiccai,* பெ.(n.) காந்தப்பண்டுவம் (மாந்திர சிகிச்சை); magnetic healing.

*[மாயம் + **Skt.** சிகிச்சை.]*

மாயத்தி[1] *māyatti,* பெ.(n.) முத்திருக்கஞ் செவி; a plant asaram europacun.

மாயத்தி[2] *māyatti,* பெ.(n.) மாயக்கள்ளி (இ.வ.) பார்க்க; see *māya-k-kaḷḷi.*

மாயப்புணர்ச்சி *māya-p-puṇarcci,* பெ.(n.) தலைவன் தலைவியரது களவுக் கூட்டம் (தொல்.பொருள்.92, உரை); (Akap.) clandestine union of lovers.

*[மாயம் + புணர்ச்சி.]*

மாயப்பெண் *māya-p-peṇ,* பெ.(n.) 1. மாறு வேடம் பூண்ட பெண்; disguised woman. 2. பெண்வேடமிட்ட ஆண்; man in the garb of a woman.

*[மாயம் + பெண்.]*

மாயப்பொடி *māya-p-poḍi,* பெ.(n.) மாயத் தன்மை செய்யும் பொடி (உபதேசகா. சிவபுண்.288); powder with magic properties.

*[மாயம் + பொடி.]*

மாயப்போர் *māya-p-pōr,* பெ.(n.) 1. வியப்பான (அற்புதமான) போர்; wonderful, miraculous warfare. *"மாயப் போர் வல்லானை" (தேவா.698, 3).* 2. ஏய்ப்பு (வஞ்சக)ப் போர்; treacherous warfare. *"மாயப்போர் மன்னன் மதில்" (பு.வெ.6:11).*

*[மாயம் + போர்.]*

**மாயம்** *māyam*, பெ.(n.) 1. மாயை; illusion false appearance. *"வருந்திட மாயஞ் செய்து நிகும்பலை மருங்கு புக்கான்" (கம்பரா. மாயா சீதை.96).* 2. வஞ்சனை (திவா.); deception. *"மாய மகளிர் முயக்கு" (குறள்.918).* 3. போலி நடிப்பு; hypocrisy. 4. பொய்; falseness, treachery. *"வந்த கிழவனை மாயஞ் செப்பி" (தொல்.பொ.114).* 5. அறிவியலுக்குப் புறம்பானது; spritual ignorance. *"மாய நீங்கிய சிந்தனை" (கம்பரா.சித்திர.51).* 6. கனவு; dream. *"மாயக் கொல்லோ வல்வினை கொல்லோ" (சிலப்.16, 61).* 7. நிலையின்மை; uncertainty, instability. *"என் மாயவாக்கை யிதனுட் புக்கு" (திவ்.திருவாய்.10, 7, 3).* 8. வியப்பு; wonder, astonishment. *"மாயவன் செற்றள்ளற் பொய்ந்நிலத்தே" (திருவிருத். 100, உரை).* 9. அழகு (சூடா.); beauty. 10. தீமை; wickedness. 11. காமம் கலந்தத் தன்மை; lasciviousness. *"கண்டேனின் மாயங் களவாதல்" (கலித்.90).* 12. கருப்பு (சூடா.); blackness.

*[முல் (பொருந்தற்கருத்துவேர்) →முள் →மள் →மள்கு→மள்குதல் = ஒளி குறைதல், குறைதல். மள்கு→மழுகு→மழுகுதல் = ஒளி குறைதல். மழு →மழுங்கு. மழுங்குதல் = ஒளி குறைதல், பொலிவழிதல், கவனிப்பின்றி மறைந்து போதல், கெடுதல். மழுங்கு →மங்கு. மங்குதல் = ஒளி குறைதல், நிறங்குன்றுதல், பெருமை குறைதல், குறைதல், கெடுதல், சாதல். மள்கு→மட்கு. மட்குதல் = மயங்குதல், ஒளி மங்குதல், அழுக்கடைதல், வலி குன்றுதல், கருத்துப் போதல். மள்கு→மாள்கு →மாழ்கு. மாழ்குதல் = கலத்தல், மயங்குதல், சோம்புதல், மங்குதல், கெடுதல். மாள் →மாய். ஒ.நோ. நோள்→நோய். நோளையுடம்பு = நோயுண்டவுடம்பு. மாய் →மாயம் (வே.க.4:61).]*

**மாயம்**[2] *māyam*, பெ.(n.) 1. உயரம்; height. 2. நீளம்; length. 3. தொகை; sum.

*[மாய் →மாயம்.]*

**மாயம்**[3] *māyam*, பெ.(n.) பித்தளை; brass. *"மாயமேகலா பாரம் வாரியே" (தக்கயாகப். 502).*

**மாயமந்திரம்** *māya-mandiram*, பெ.(n.) 1. மாயம் பண்ணும் மந்திரம்; mantram having magic powers. *"உன்முகம் மாய மந்திரந்தான் கொலோ" (திவ்.நாய்ச்.2, 4).* 2. மந்திரம் பார்க்க; see *mandiram.*

*[மாயம் + மந்திரம்.]*

**மாயமயக்கி** *māya-mayakki*, பெ.(n.) மயக்கஞ் செய்பவர்; artful, bewitching woman. *"மாயமயக்கி மருமகளே" (நாஞ்.).*

*[மாயம் + மயக்கி.]*

**மாயமாமூலி** *māya-māmūli*, பெ.(n.) உடம்பிலிருக்கும் பித்து, அங்கப் பிச்சு; the bile in human body.

*[மாயம் + மாமூலி.]*

**மாயமாலம்** *māya-mālam*, பெ.(n.) 1. மாய் மாலம் பார்க்க; see *māy-mālam.* 2. வஞ்சனை யுள்ள பேய் (வின்.); deceitful devil.

*[மாயம் + மாலம்.]*

**மாயயாக்கை** *māya-yākkai*, பெ.(n.) மாய உடம்பு; magic body.

*[மாயம் + யாக்கை.]*

**மாயரூபம்** *māya-rūbam*, பெ.(n.) மாயரூவம் பார்க்க; see *māya-rūvam.*

*[மாய + உருவம் →ரூபம்.]*

த. உருவம் > வ. ரூப.

**மாயரூவம்** *māya-rūvam,* பெ.(n.) மெய் போலத் தோன்றும் பொய்யுருவம் (யாழ்.அக.); form which is seamingly realistic, phantom, shadow.

*[மாயம் + உருவம்.]*

**மாயவண்ணன்** *māya-vaṇṇaṉ,* பெ.(n.) திருமால்; *Tirumāl,* as dark-coloured. *"மாய வண்ணனை மனனுறப் பெற்று" (பதிற்றுப்.7, பதி.).*

*[மாயம் + வண்ணன்.]*

**மாயவள்** *māyavaḷ,* பெ.(n.) 1. கரிய நிறமுடையவள்; woman of dark complexion. 2. கொற்றவை; durga. *"மாயவளாடிய மரக்கா லாடலும்" (சிலப்.6, 59).* 3. தெய்வப் பெண் (பிங்.); female goddess. 4. இடாகினி (சூடா.); a female goblin.

*[மாயம்→மாயவள் (வே.க.4:61).]*

**மாயவன்** *māyavaṉ,* பெ.(n.) கருநிறமுடைய திருமால்; *Tirumāl.* *"மாயவன் மாய மதுவால்" (பு.வெ.9:40). "பெரியவனை மாயவனைப் பேருலக மெல்லாம்" (சிலம்பு. படர்க்கைப். பரவல்.2).*

*[மாய் →மாயவன் (வே.க.4:62).]*

**மாயவன்சோதரி** *māyavaṉ-sōdari,* பெ.(n.) துர்க்கை; durgai.

*[மாயவன் + Skt. சோதரி.]*

**மாயவன்மூலி** *māyavaṉ-mūli,* பெ.(n.) 1. திருமால்கரந்தை எனும் செடி; a plant - *Sphoeranthus idnicus.* 2. துளசி; holy basil plant.

*[மாயவன் + மூலி.]*

**மாயவன்மேனி** *māyavaṉ-mēṉi,* பெ.(n.) நாகப் பச்சை (சங்.அக.); a green stone.

*[மாயவன் + மேனி.]*

**மாயவன்விந்து** *māyavaṉ-vindu,* பெ.(n.) 1. திருமால்கரந்தை எனும் செடி; a herb. 2. வெள்ளரி விதை; cucumbar seed.

*[மாயவன் + விந்து.]*

**மாயவாழ்க்கை** *māya-vāḻkkai,* பெ.(n.) நிலையில்லா உலக வாழ்க்கை; worldly life which is not real.

*[மாயம் + வாழ்க்கை.]*

**மாயவாழ்வு** *māya-vāḻvu,* பெ.(n.) நிலையற்ற வாழ்வு; transitory life.

*[மாயம் + வாழ்வு.]*

**மாயவிஞ்சை** *māya-viñcai,* பெ.(n.) மாய வித்தை பார்க்க; see *māya-vittai.* *"மாயவிஞ்சை மந்திரமோதி" (மணி.18, 148).*

*[மாயவித்தை →மாயவிஞ்சை.]*

**மாயவித்தை** *māya-vittai,* பெ.(n.) இந்திரசால வித்தை; magical art, sleight of hand, art of producing illusion, sorcery.

*[மாயம் + வித்தை.]*

**மாயவித்தைக்காரன்** *māya-vittai-k-kāraṉ,* பெ.(n.) இந்திர சாலஞ் செய்வோன்; sorcerer, magician.

*[மாயவித்தை + காரன்.]*

**மாயவேடம்** *māya-vēḍam,* பெ.(n.) பொய்யுரு; disguise. *"வெகுளி பொங்கவிட்டது மாயவேடம்" (கம்பரா. சடாயுவுயிர்.64.).*

*[மாயம் + வேடம். **Skt.** வேடம். த. புணைவு. மாயப்புணைவு பார்க்க.]*

**மாயன்** *māyaṉ*, பெ.(n.) 1. கரியன்; dark complexioned person. *"வண்ணமு மாய வைனிவன் சேயன்" (தொல்.பொ.307, உரை).* 2. திருமால்; *Tirumāl.* *"மாயனாய்..... மலரவனாகி" (தேவா.1050, 6).* 3. வஞ்சகன் (பிங்.); deceitful person.

*[மாயம் →மாயன் (வே.க.4:62).]*

**மாயன்மாலை** *māyaṉ-mālai*, பெ.(n.) துளசி; holy basil plant.

*[மாயன் + மாலை. மாயன் = திருமால்.]*

**மாயன்வித்து** *māyaṉ-vittu*, பெ.(n.) வெள்ளரி விதை; seeds of cucumber fruit.

*[மாயன் + வித்து.]*

**மாயன்விந்து** *māyaṉ-vindu*, பெ.(n.) முகப் பூச்சு; yellow orpiment.

*[மாயன் + விந்து.]*

**மாயாகாரியம்** *māya-kāriyam*, பெ.(n.) மாயச்செயல் பார்க்க; see *māya-c-ceyal.*

**மாயாசாலம்** *māyā-šālam*, பெ.(n.) மாய வித்தை (வின்.) பார்க்க; see *māya-vittai.*

*[மாயம் + சாலம்.]*

**மாயாதி** *māyādi*, பெ.(n.) மாந்தக்காவு (நரபலி); human sacrifice.

**மாயாதேவி** *māyā-dēvi*, பெ.(n.) 1. மாயையாகிய தேவி (தக்கயாகப்.616, உரை); the goddess of *māyā*.2. புத்தரின் தாய் (சூடா.); the mother of Goutama buddha. *"மாயாதேவி சுதன்".*

*[மாயை + தேவி.]*

**மாயாபாசம்** *māyā-pāšam*, பெ.(n.) மாயையாகிய உறவு (யாழ்.அக.); the bondage of *māyā.*

*[மாயம் + **Skt.** பாசம்.]*

**மாயாமந்திரம்** *māyā-mandiram*, பெ.(n.) மந்திர வகை (யாழ்.அக.); a mantram.

*[மாயம் + மந்திரம்.]*

**மாயாமம்** *māyāmam*, பெ.(n.) புளி; tamarind.

**மாயாமாலம்** *māyā-mālam*, பெ.(n.) மும் மலத்துளொன்றான மாயையாகிய மலம் (சி.சி.2, 85, உரை); *māyā*, one of *mu-m-malam* (q.v.).

*[மாயம் + மலம்.]*

**மாயாவாதி** *māyā-vādi*, பெ.(n.) மாயக் கொள்கையுடையவன்; follower of *maya-vādam.* *"சதசத் விலக்ஷணம் என்று..... மாயாவாதி சொல்லுமா போலே" (திவ்.இயற். திருவிருத்.22, வியா.145).*

*[மாயம் + வாதி.]*

**மாயாவிமோசனம்** *māyā-vimōšaṉam*, பெ.(n.) மாயையினின்று நீங்குகை (யாழ். அக.); freedom from *māyai.*

*[மாயை→ மாயா + **Skt.** விமோசனம்.]*

**மாயாவீடு** *māyā-vīḍu*, பெ.(n.) முத்தி; heaven.

**மாயாள்** *māyāḷ*, பெ.(n.) மாயோள்[1], 3 பார்க்க (நாமதீப.117); see *māyōḷ.*

*[மாயோள் →மாயாள்.]*

மாயாளம் *māyāḷam,*பெ.(n.) பாசாங்கு (இ.வ.); pretension.

*[மாயம் →மாய்மாலம் →மாயாளம் (கொ.வ.).]*

மாயாளி *māyāḷi,*பெ.(n.) வட்டத் திருப்பி (தைலவ.தைல.33); kidney leaved bracteate moon-seed.

மாயி[1] *māyi,*பெ.(n.) மாயாவதி; adherent of *māyāvātām.* *"மாயியை நிசேதிக்கைக்காக அர்த்தம் அருளிச் செய்கிறார்" (ஈடு.1, 5, 4, ஜீ.).*

மாயி[2] *māyi,*பெ.(n.) ஆண் பெண்களைக் களவிற் புணர்ப்பிக்கும் ஆண் மகன் (சுக்கிரநீதி, 369); go-between, panderer.

மாயி[3] *māyi,*பெ.(n.) கொற்றவை; *Korravai.* *"என்னன்னையா மாயியை" (பிரபோத.18, 73).*

*[மய் →மாய் →மாயி (கொ.வ.).]*

மாயிகாஞ்சனம் *māyi-kāñjanam,* பெ.(n.) வித்தியாதரருடைய தந்திர வகை (பெருங்.இலாவாண.1, 67); a magic art of the *vidyādharan.* *"செவியிற்கேட்கு மாயிகாஞ்சனம்" (பெருங்.இலாவண.1, 67).*

மாயிடம் *māyidam,*பெ.(n.) எருமை; buffalo. *"வந்து மாயிட மாகி வளர்ந்ததே" (யசோதர.3, 45).*

*[மை = கருப்பு. மை→மகி→மகிஷ→மயிஷ →மயிஷம்→மயிடம்→மாயிடம்.]*

மாயிரம் *māyiram,*பெ.(n.) புறமாயுள்ளது; that which is outside, outward. *"மாயிர நேமியாதி" (தக்கயாகப்.440).*

மாயிலி *māyili,*பெ.(n.) படகு வகை (வின்.); a kind of boat.

மாயு *māyu,*பெ.(n.) பித்தம் (யாழ்.அக.); bile.

மாயுச்சம் *māyuccam,*பெ.(n.) நாகமணல்; sand containing zinc ore.

மாயுநாடி *māty-nāḍi,*பெ.(n.) பித்தநாடி (வின்.); a pulse indicating bilious humour.

மாயை *māyai,*பெ.(n.) 1. மூலப் பொருள்; primordian matter. *"பூதலயமாகின்ற மாயை முதலென்பர் சிலர்" (தாயு. பரிபுரணா.6).* 2. மும்மலத்துள் விந்து, மோகினி, மாயேயம் என்று மூவகைப்பட்ட மலம்; matter, one of mu-m-malam, (q.v.) of three kind of *vindu, mōgini, māyēyam.* *"இவற்றுண் மாயை தெருளும் விந்து மோகினி, மாயேய மென விவை மூன்று திறமாய்" (பிரபோத.46, 7).* 3. பொய்த்தோற்ற வுரு; unreal or illusory image, phantom, apparition. 4. மாயவித்தை; sorcery, withc croft magic. *"மாயை யினொளித்த மணி மேகலை தனை" (மணிமே.18, 155).* 5. வஞ்சகம் (சூடா.); deception, fraud, trick. 6. மீமாந்த திறன்; extra ordinary or super human power. 7. மாயாதேவி பார்க்க; see *māyā-dēvi.* 8. மாயாபுரி பார்க்க; see *māyāburi.* 9. நிரயவகை (சிவதரு. சுவர்க்க. நரகவி.117); a hell. 10. தூய்மையற்ற மாயை; *śaiva*impure *māyai.* *"ஆதியோதிய மேதகு மாயை" (ஞான.).* 11. மாய பஞ்சகத்துள் ஒன்றாகிய மாயை; *māyai,* one of *māyai-pañjakam.* 12. பொய்த்தோற்றம்; illusion, unreality. 13. கொற்றவை; kali. 14. உமையம்மை (நாமதீப.22); Umaiyammai.

15. திரோதான சத்தி (நாமதீப.753); a boom of siva's energy, which hides spiritual truth from the souls.

*[மள்→ மய்→மாய்→மாயை. ஒ.நோ. சாய் →சாயை (வே.க.4:62).]*

**மாயைமலம்** *māyai-mālam*, பெ.(n.) மும் மலத்துளொன்றான மாயையாகிய மலம்; *māyai*one of the *mummalam*.

*[மாயை + மலம்.]*

**மாயையுற்றாள்** *māyai-y-urrāḷ*, பெ.(n.) மாயை (வின்.) பார்க்க; see *māyai*.

*[மாயை + உற்றாள்.]*

**மாயோள்[1]** *māyōḷ*, பெ.(n.) 1. கரு நிறமுடையவள்; dark coloured woman. *"மாயோள் முன்கை ஆய்தொடி" (பொருந. 14).* 2. மாமை நிறமுடையவள்; woman of dark-brown colour. *"மாயோர் பசனை நீக்கினன்" (ஐங்குறு.145).* 3. பெண் (திவா.); woman. *"ஒடுங்கீ ரோதி மாஅயோளே" (அகநா.86).*

*[மாய் →மாயம்→ மாயோள் (வே.க.4:62).]*

**மாயோள்[2]** *māyōḷ*, பெ.(n.) வஞ்சகி (வின்.); dissembling woman.

*[மாய்→மாயோள். மாய் = வஞ்சகம், கருமை, மயக்கம்..]*

**மாயோன்** *māyōṉ*, பெ.(n.) 1. கரு நிறமுடையவன் (பரிபா.3, 1, உரை); dark coloured person. 2. திருமால்; *Tirumāl*. *"மாயோன் மேய காடுறை யுலகமும்" (தொல். பொருள்.5).*

*[மாய்→மாயோன். மாய் = கருமை.]*

**மாயோன்பூடு** *māyōṉ-pūḍu*, பெ.(n.) துளசி (சங்.அக.); sacred basil.

*[மாயோன் + பூடு.]*

**மாயோன்மருகன்** *māyōṉ-marugaṉ*, பெ.(n.) முருகக் கடவுள் (சூடா.); *Murugaṉ*, as of nephew *Tirumāl*.

*[மாயோன் + மருகன்.]*

**மாயோன்விந்து** *māyōṉ-vindu*, பெ.(n.) முகப்பூச்சு (சங்.அக.); yellow orpiment.

*[மாயோன் + விந்து.]*

**மாயோனாடல்** *māyōṉāḍal*, பெ.(n.) அல்லியம், மற்கூத்து, குடக்கூத்து எனத் திருமாலாடிய கூத்து வகைகள் (சிலப்.6: 48, 49, 55); dances of *Tirumāl*, viz. *alliyam, markūttu, kuḍa-k-kūttu.*

*[மாயோன் + ஆடல்.]*

**மாயோனாள்** *māyōṉāḷ*, பெ.(n.) இருபத் திரண்டாம் நாண்மீனான திருவோணம் (சூடா.); *tiruvōṇam* the 22nd *nāṇmīṉ*.

*[மாயோன் + நாள்.]*

**மார்[1]** *mār*, பெ.(n.) 1. மார்பு, 1, 2 பார்க்க; see *mārbu*. *"இப்பாதகன் மாரினெய் வனென்று" (கம்பரா.இராவணன்வதை.192).* 2. நான்கு முழவளவான நீட்டலளவை; measure of the distance between the tips of the middle fingers when the arms are outstretched = 1 fathom = 4 cubits = 2 yards.

*[முல் (பொருந்தற் கருத்துவேர்)→ மல் →மர்→மரு. மருவுதல் = கலந்திருத்தல், தழுவுதல், பயிலுதல், புணர்தல். மரு→மருமம் = தழுவும் மார்பு, உயிர்நாடியான உறுப்பு, உடம்பு, மறை பொருள். மரு →மார் (வே.க.4:39).]*

மார்² *mār,* பெ.(n.) 1. ஓர் அசை (தொல். எழுத்து.186); an expletive. 2. பல்லோர் படர்க்கை விகுதியுள் ஒன்று (தொல். சொல்.209); a plural ending of verbs in the third person. 3. ஒரு வியங்கோள் விகுதி (நன்.); honorific termination in the optative mood. 4. ஒரு பன்மை விகுதி; a plural ending of nouns. *"தாய்மார் மோர் விற்கப் போவர்" (திவ்.பெரியாழ்.3, 1, 9).*

*[முல் (இளமைக் கருத்துவேர்)→முள்→மள்→மழ→மக = இளமை, பிள்ளை, மகன் அல்லது மகள். மக→மகன் = குழந்தை, ஆண் பிள்ளை, புதல்வன், விளையாடும் பருவத்துப் பெயரீறு. மகன்→மகார் = புதல்வர், சிறு பிள்ளைகள். மகன்→மான் = ஆண்பாற் பெயரீறு. எ-டு. திருமகன்→திருமான். பெருமகன்→பெருமான். மகள் →மாள். (எடு) பெருமகள்→பெருமாள் →பெருமா (கொச்சை.)→வேண்மாள்.]*

*மகன்→மகர்→மார் (வே.க.4:7).*

மார்க்கட்டி *mār-k-kaṭṭi,* பெ.(n.) மார்பில் வரும் புண் (M.L.); abcess in the breast, cancer of the breast.

*[மார் + கட்டி.]*

மார்க்கட்டு¹ *mār-k-kaṭṭu,* பெ.(n.) 1. மார்பின் உறுதியமைப்பு; healthy development of the chest. 2. மார்புக் கச்சை (இ.வ.); bodice.

*[மார் + கட்டு.]*

மார்க்கட்டு² *mār-k-kaṭṭu,* பெ.(n.) மார்பின் குறுக்கேயிடும் வேட்டிக் கட்டு (இ.வ.); fastening of a cloth over the chest.

*[மார் + கட்டு.]*



மார்க்கடம் *mār-k-kaḍam,* பெ.(n.) குரங்குக் கூட்டம்; crowd of monkeys. *"மார்க்கடஞ் சூழ்ந்த வைப்பின்" (கம்பரா. விபீடண.132).*

மார்க்கண்டம்¹ *mār-k-kaṇḍam,* பெ.(n.) மார்க்கண்டவெலும்பு பார்க்க; see *mār-k-kaṇḍa-v-elumbu.*

*[மார் + கண்டம்.]*

மார்க்கண்டம்² *mār-k-kaṇḍam,* பெ.(n.) 1. மார்புப் பகுதி; breast, chest. *"மார்க்கண்டந் துடிக்குதிங்கே மணவாளன் மாண்பிருக்க" (கோவ.க.).* 2. மாரின் கறி; flesh of the chest.

*[மார் + கண்டம்.]*

மார்க்கண்டவெலும்பு *mār-k-kaṇḍa-v-elumbu,* பெ.(n.) மார்பெலும்பு; breast bone, sternum. *"அவனுக்கு மார்க்கண்ட வெலும்பு தெரிகின்றது" (உ.வ.).*

*[மார்க்கண்டம் + எலும்பு.]*

மார்க்கண்டவைத்தியன் *mārkkaṇḍa-vaittiyaṉ,* பெ.(n.) போலி வைத்தியன் (இ.வ.); quack doctor.

**மார்க்கண்டன்** *mār-k-kaṇḍaṉ,* பெ.(n.) என்றென்றும் பதினாறகவை யுடையானா யிருக்குமாறு வரம் பெற்ற ஒரு முனிவன் (கந்தபு.மார்க்கண்.252); a sage blessed with the boon of eternal youth of sixteen years.

**மார்க்கண்டி**[1] *mārkkaṇḍi,* பெ.(n.) மாரெலும்பு; sternum.

**மார்க்கண்டி**[2] *mārkkaṇḍi,* பெ.(n.) மார்க் கண்டன் பார்க்க; see *mārkkaṇḍaṉ.* *"உலந்த மார்க்கண்டிக்காகி யக்காலனை யுதை கொண்ட" (திருவிசைப். திருவாலி. கோயில்.2, 3).*

**மார்க்கண்டேயபுராணம்** *mārkkaṇḍēya-ppurāṇam,* பெ.(n.) பதினெண் தொன்மத்து ளொன்று; a chief *purāṇa*, one of *patiṉeṉ-purāṇam.*

**மார்க்கண்டேயம்** *mārkkaṇḍēyam,* பெ.(n.) மார்க்கண்டேயபுராணம் (அபி.சிந்.) பார்க்க; see *mārkkaṇḍēya-purāṇam.*

**மார்க்கண்டேயன்** *mārkkaṇḍēyaṉ,* பெ.(n.) மார்க்கண்டன் பார்க்க; see *mārkkaṇḍaṉ.* *"தொழுதெழு மார்க்கண்டேயன்" (தேவா. 42, 1).*

**மார்க்கண்டேயனார்** *markkaṇḍēyaṉār,* பெ.(n.) தலைக் கழகத்திருந்தவருள் ஒருவராகக் கருதப்படுபவரும் புறநானூற்றின் 365–ஆம் பாட்டியற்றியவருமாகிய புலவர்; a poet ascribed to the first kaḻagam, author of the 365th verse in *puṟānāṉūṟu.*

**மார்க்கணம்** *mārkkaṇam,* பெ.(n.) 1. அம்பு (உரி.நி.); arrow. 2. இரப்பு; asking, begging. 3. தேடுகை (வின்.); search, inquiry.

**மார்க்கணன்** *mārkkaṇaṉ,* பெ.(n.) இரப்போன் (வின்.); mendicant, begger.

**மார்க்கவம்** *mārkkavam,* பெ.(n.) கையாந்தகரை (தைலவ.தைல.); a plant found in wet places.

**மார்க்குழி** *mārkkuḻi,* பெ.(n.) மார்புக்குழி பார்க்க; see *mārbu-k-kuḻi.*

*[மார்பு + குழி.]*

**மார்க்கூடு** *mār-k-kūḍu,* பெ.(n.) மார்பெலும்புக் கூடு; ribs, as enclosing the chest.

*[மார் + கூடு.]*



**மார்க்கூடுபின்னுதல்** *mār-k-kūḍu-piṉṉudal,* பெ.(n.) 1. மார்க்கூடு சதைப் பற்றின்றி எலும்பு மயமாயிறுகித் தட்டையா யிருக்கை (M.L.); ossification of costal cartilages of ribs and consequent flattening and rigidity of the chest-wall. 2. உடல் மெலிவால் மார்பெலும்பு வெளித் தோன்றுகை; projection of breast bones outward on account of emaciation of the body.

*[மார் க்கூடு + பின்னுதல்.]*

மார்க்கபம் *mārkkabam*, பெ.(n.) மார்புச் சளி; phlegm in the chest.

*[மார் + கபம்.]*

மார்க்கல் *mārkkal*, பெ.(n.) ஒரு வகை மாக்கல்; a kind of soft stone.

*[மாக்கல்→மார்க்கல் (கொ.வ.)]*

மார்கோல்தண்டு *mārkōl-taṇḍu*, பெ.(n.) கடலில் மரக்கலத்தைத் திருப்ப ஏதுவாகும் துடுப்பு (தஞ்சை.மீனவ.); a paddle to which turn the boat.

*[மார்கோல் + தண்டு.]*

மார்ச்சலம் *mār-c-calam*, பெ.(n.) மார் நீர்க்கோவை; bronchial catarrh or cold in the chest.

*[மார் + **Skt.** சலம்.]*

மார்ச்சிரங்கு *mar-c-ciraṅgu*, பெ.(n.) மார்ச்சிலந்தி பார்க்க (M.L.); see *mār-c-cilandi.*

*[மார்ச்சிலந்தி→மார்ச்சிரங்கு.]*

மார்ச்சிலந்தி *mar-c-cilandi*, பெ.(n.) முலைப்பக்கத் துண்டாகும் புண்; mammary abscess.

*[மார் + சிலந்தி.]*

மார்த்தோல் *mār-t-tōl*, பெ.(n.) கள் இறக்கும் மரமேறிகள் மார்பிலிடுந் தோல் (இ.வ.); toddy-drawer's breast-leather.

*[மார் + தோல்.]*



மார்தட்டு-தல் *mār-taṭṭu-*, 4 செ.கு.வி.(v.i.) 1. போட்டிப்போடுதல்; to challenge, to complete with. *"அவர்களையும்........ சிவனோட மார்தட்டுகிறார்" (திருவிருத்.96, வியா.பக். 455, அரும்.).* 2. குறித்த துறையில் தான் மேம்பட்டவனென்பதைக் குறிப்பிக்குமாறு மார்பைத் தட்டுதல்; to boast of one's powers in a particular line, as by striking the chest. *"அன்னதானத்துக்கு மார்தட்டிய துரை" (தனிப்பா.ii, 236, 4).* 3. தற்பெருமை யடைதல்; to pride oneself. *"நானென்று மார்தட்டும்" (திருப்பு..1223).*

*[மார் + தட்டு-.]*

மார்நீர்க்கோவை *mār-nīr-k-kkōvai*, பெ.(n.) 1. நுரையீரலைச் சுற்றியிருக்கும் மென்படலத்தின் இடையில் நீர் தங்குவதால் ஏற்படும் ஒருவகை நோய்; a kind of diseases affecting the memberanous coating of the lungs by causing inflammation and the collection of fluid. 2. பக்க சூலை; pleuritic effusion.

*[மார் + நீர்க்கோவை.]*

மார்நோவு *mār-nōvu*, பெ.(n.) மார்வலி பார்க்க; (M.L.) see *mārvali.*

*[மார்வலி →மார்நோவு.]*

மார்பகம் *mārbagam,* பெ.(n.) மார்பு பார்க்க; see *mārbu.* *"சீதை கொண்கனைத் திருவுறை மார்பகஞ் சேர்த்தான்" (கம்பரா. அயோத்.மந்திரப்.59).*

*[மார் →மார்பம்→மார்பகம் (வே.க.4:39).]*

மார்பம் *mārbam,* பெ.(n.) மார்பு[1, 2] பார்க்க; see *mārbu.* *"பொன்றுஞ்சு மார்பம்" (சிலப்.19, 61).*

*[மார் →மார்பு →மார்பகம் (வே.க.4:39).]*

மார்பாணி *mārbāṇi,* பெ.(n.) 1. ஒரு வகை மார்புப் புண் (வின்.); a kind of eruption on the breast. 2. தலைமையாணி (வின்.); capital or principal nail, king pin. 3. தண்டனையாக மார்பில் தைக்கும் ஆணி; nail driven into one's chest, as a punishment. *"எதிர்த்தவர் மார்பாணி" (தமிழ்நா.293).*

*[மார்பு + ஆணி.]*

மார்பின்னுதல் *mār-piṉṉudal,* பெ.(n.) மார்க்கூடுபின்னுதல் பார்க்க (M.L.); see *mār-k-kūḍu-piṉṉudal.*

*[மார்க்கூடு + பின்னுதல்→மார்பின்னுதல்.]*

மார்பு *mārbu,* பெ.(n.) 1. நெஞ்சு; bosom, breast, chest. *"கள்ளற்றே கள்வநின் மார்பு" (குறள்,1288).* 2. முலை (வின்.); woman's breast. 3. வடிம்பு; rim, top. *"ஏணி யெய்தா நீணெடு மார்பின்..... கூடு" (பெரும்பாண்.245).* 4. தடாகம்; tank. *"மார்பின்மை படி... குலவரை" (பரிபா.15, 9).* 5. அகலம் (சது.); breadth. 6. மார்[1] (இ.வ.) பார்க்க; see *mār.* 7. கருப்பூர வகை (சிலப்.14, 109, உரை); a kind of camphor.

ம. மார்பு

*[மருவுதல் = கலந்திருத்தல், தழுவுதல். மரு→ மருமம் = தழுவும் மார்பு. மரு→மார்→மார்பு (வே.க. 4:39).]*

மார்புக்குழி *mārbu-k-kuḻi,* பெ.(n.) 1. மார்பெலும்பின் கீழுள்ள குழி; heart pit. 2. நெஞ்சங்குலை உறுப்புக்களடங்கிய நெஞ்சின் அறை; thoracic cavity.

*[மார்பு + குழி.]*

மார்புச்சளி *mārbu-c-caḷi,* பெ.(n.) மார்ச்சளி பார்க்க; (M.L.) see *mār-c-caḷi.*

*[மார்ச்சளி →மார்புச்சளி.]*

மார்புநோவு *mārbu-nōvu,* பெ.(n.) 1. மார்பிலுண்டாம் வலி வகை; breast-pang, angina pectoris. 2. மார்பின் சதையி லுண்டாம் நோவு வகை; pleurodynia, pain in the chest.

*[மார்பு + நோவு.]*

மார்புவீக்கம் *mārbu-vīkkam,* பெ.(n.) நெஞ்சு வீங்கியிருக்கை; (M.L.) inflammation of the breast.

*[மார்பு + வீக்கம்.]*

மார்புற *mārbuṟa,* கு.வி.எ.(adv.) மார்போடு சேர்த்து; close to the chest.

*[மார்பு + உற.]*

மார்பெலும்பு *mārbelumbu,* பெ.(n.) நெஞ்செலும்பு, விளா; rib.

*[மார்பு + எலும்பு.]*

மார்பூசி *mārbūśi,* பெ.(n.) மேலாடை யிலணியும் ஊசி (வின்.); breast - pin, brooch.

*[மார்பு + ஊசி.]*

மார்பெலும்பு *mārbelumbu,* பெ.(n.) மார்க்கண்டவெலும்பு (வின்.) பார்க்க; see *mārkkanda-v-elumbu.*

*[மார்பு + எலும்பு.]*

மார்வம் *mārvam,* பெ.(n.) மார்பு, 1 பார்க்க; see *mārbu. "கோளரியா யொண்டிறலோன் மார்வத்துகிர் வைத்தது" (திவ்.இயற்.2, 18). "மைந்தர் மார்வம் வழிவந்த செந்தளிர் மேனியார் செல்ல நீர்ப்ப" (பரிபா.8:122-3).*

*[மார்→மார்பு→மார்வம்.]*

மார்வலி *mārvali,* பெ.(n.) மார்புநோவு (இ.வ.) பார்க்க; see *mārbu-nōvu.*

*[மார் + வலி.]*

மார்வு *mārvu,* பெ.(n.) மார்பு, 1 பார்க்க; see *mārbu. "நின்மார் விற் றார்கோலி மழை" (பு.வெ.9, 16).*

*[மார்பு→மார்வு (கொ.வ.)]*

மார்வுதட்டு-தல் *mārvu-tattu-,* 5 செ.கு.வி. (v.i.) ஒன்று செய்ய ஊக்கத்துடன் முன் வருதல்; to be ready, to be prepared, to be eager to act. *"இவர்களுக்கு வந்த தொன்றுக்கு அவன் மார்வு தட்டிக் கொண்டு வரும்" (ஈடு.10, 2, 1).*

*[மார்வு + தட்டு-,]*

மார்வெழுத்து *mārveluttu,* பெ.(n.) ஒருவனுக்கு அடிமை என்பதற்குக் குறியாக அவ்வடிமையின் மார்பிற் பொறிக்கப்பட்ட தலைவன் பெயர் அல்லது சூட்டுக் குறி (ஈடு.5, 10-ப்ர.); name or mark of a lord imprinted on the breast of his slave.

*[மார்பு + எழுத்து.]*

மார *māra,* பெ.(n.) மகிழமரம்; a tree with very fragrant flowers (சா.அக.).

மாரக்கம் *mārakkam,* பெ.(n.) கையாந்தகரை; a prostate plant (சா.அக.).

மாரகன் *māragan,* பெ.(n.) 1. மரணத்தை யுண்டாக்குவோன் (யாழ்.அக.); one who causes death. 2. மரணத்திற்குக் கரணியமான கோள்நிலை (கிரகம்); (Astrol.) the planet which causes or indicates death.

மாரகாகளம் *mārakākaḷam,* பெ.(n.) குயில்; a bird indian cuckoo, as the trumpet of *Kāman. "மாரகாகள மெழுவதோர் மதுமலர்க் காவில்" (பாரத. குருகுல.8).*

மாரசம் *māraśam,* பெ.(n.) வெள்ளி துகள் (சங்.அக.); calcinated silver.

மாரசயன் *māra-śayan,* பெ.(n.) (மாரனை வென்றோன்) புத்தன் (வின்.); the buddha, as conqueror of *māran.*

மாரட்டம் *mārattam,* பெ.(n.) மராட்டிய நாடு; the Maharatta country. *"மாலை மாரட்டதித் தகதித்தன... குதிரை" (சீவக. 2161).*

மாரடம் *māradam,* பெ.(n.) மருக்காரை; a plant gardenia.

மாரடி[1]-த்தல் *māradi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. இழவில் அழும்பொழுது மார்பில் மகளிர் அடித்துக் கொள்ளுதல்; to beat the breast, as when bewail the dead. *"மாரடித்*

திரியும்" (அரிச்.பு.நாட்.36). 2. வருந்துதல்; to worry oneself.

[மார் + அடி-.]

மாரடி² māradi, பெ.(n.) மாரடிநோன்பு பார்க்க; (madr.) see māradi-nōṉbu.

மாரடித்திருநாள் māradii-t-tirunāḷ, பெ.(n.) மாரடிநோன்பு பார்க்க; see māradi-nōṉbu.

மாரடிநோன்பு māradi-nōṉbu, பெ.(n.) மொகரம் பண்டிகையில் முகம்மதியரில் ஒரு வகுப்பார் மாரடித்துக் கொள்வதாகிய சடங்கு; a religious observance of a sect of muhammadans during the mohurrum festival, characterised by beatings on the breast.

[மாரடி + நோன்பு.]

மாரடிப்பாட்டு māradi-p-pāṭṭu, பெ.(n.) மாரடித்து அழும் போது பாடும் ஒப்பாரிப் பாட்டு; mourning song sung.

[மாரடி + பாட்டு.]

மாரடிப்பு māradippu, பெ.(n.) 1. பெரும் ஏதம்; great affliction, as leading to the beating of breasts. 2. பெருந்துன்பம்; great worry.

[மாரடி →மாரடிப்பு.]

மாரண்டம் māraṇḍam, பெ.(n.) 1. பாம்பு முட்டை; eggs of snake. 2. பாதை; way, path.

[மார் + அண்டம்.]

மாரடைப்பு māradaippu, பெ.(n.) 1. மூர்ச்சை; fainting, swooning. 2. நெஞ்சாங்குலையில் ஏற்படும் குருதி யடைப்பு; heart attack. 3. மார்புநோவு, 1 (வின்.) பார்க்க; see mārbu-nōvu.

[மார் + அடைப்பு.]

மாரணி māraṇi, பெ.(n.) காஞ்சுரை (நாமதீப.299) பார்க்க; see kāñjurai.

மாரத்துச்சாமை mārattu-c-cāmai, பெ.(n.) சாமை வகை (வின்.); a kind of millet.

மாரதந்தி māratandi-, பெ.(n.) காமனின் யானை; elephant of Kāmaṉ.

மாரதன் māradaṉ, பெ.(n.) தேர்ப்படை வீரன்; a warrior on a chariot. "அதிரதரே மாரதரே" (பாரதவெண்.உத்தி.455).

[மா + ரதன். (வ) ரதம் >த. தேர். ரதம் → ரதன்.]

மாரதனுசு māradaṉušu, பெ.(n.) காமன்வில்; bow of Kāmaṉ.

[மார் + தனுசு.]

மாரப்பற்று māra-p-paṟṟu, பெ.(n.) கருப்பூர வகை (சிலப்.14, 109, உரை); a kind of camphor.

மாரபேரி māra-pēri, பெ.(n.) காமன் முரசு; drum of Kāmaṉ.

[மாரன் + பேரி.]

மாரம் māram, பெ.(n.) 1. கோடக சாலை எனும் செடி (மலை.); a very small plant. 2. மரணம்; death.

மாரவேள் māra-vēḷ, பெ.(n.) மாரன், 1 பார்க்க; see māraṉ. "தேவன்மேன் மாரவே ளிங்குநின் றெய்யவும்" (கம்பரா.தாடகை.1).

[மார் + வேள்.]

**மாரளிடுக்கி** *māraḷiḍukki,* பெ.(n.) 1. மோகம்; lust. 2. போகம்; sexual union (சா.அக.).

**மாரன்** *māraṉ,* பெ.(n.) 1. காமன் (பிங்.); *Kāmaṉ. "மாரனார் வரிவெஞ் சிலைக்கு" (திவ்.பெருமாள்.3, 3).* 2. புத்தரை மயக்க முயன்று அவரால் தோல்வியுண்ட ஒரு தேவன்; a god who tempted the Buddha but was vaniquished by him. *"மாரனை வென்று வீரணாகி" (மணிமே.30, 11).*

**மாரன்புட்பம்** *māraṉ-puṭpam,* பெ.(n.) காமனுடைய பூ; flower of kāmaṉ.

*[மாரன் + புட்பம். வ. புட்பம் > த. மலர்.]*

**மாரனாலயம்** *māraṉālayam,* பெ.(n.) (காமனிருக்கை) பெண்குறி; pudendum muliebre.

*[மாரன் + ஆலயம்.]*

**மாராசன்** *mārāśaṉ,* பெ.(n.) அரசன் (இ.வ.); king.

**மாராசி** *mārāśi,* பெ.(n.) அரசி (colas.11, 238); queen.

**மாராசு** *mārāśu,* பெ.(n.) அலரி; a flower-oleander.

**மாராட்டகம்** *mārāṭṭagam,* பெ.(n.) மராட்டிய மாநிலத்துக் குதிரை (திருவாலவா. 27, 73); Maharatta horse.

**மாராட்டம்**[1] *mārāṭṭam,* பெ.(n.) 1. மாரட்டம் (திருவிளை.நரிபதி.106) பார்க்க; see *māraṭṭam.* 2. ஊர்; town.

*[மாரட்டம் → மாராட்டம்.]*

**மாராட்டம்**[2] *mārāṭṭam,* பெ.(n.) 1. துன்பம்; trouble. 2. ஆள் மாறாட்டம்; false impersonation.

**மாராட்டு** *mārāṭṭu,* பெ.(n.) மாரட்டம்[2], 2 பார்க்க; see *māraṭṭam*[2], *2. "மாராட்டரசை யிறக்கி" (விக்கிரம.உலா.).*

*[மாரட்டம் → மாராட்டு.]*

**மாராணி** *mārāṇi,* பெ.(n.) மார்பாணி, 1 (M.L.) பார்க்க; see *mārbāṇi.*

*[மார்பாணி → மாராணி.]*

**மாராதம்** *mārādam,* பெ.(n.) மன்மதன் தேர்; chariot of maṉmadaṉ.

**மாராப்பு** *mārāppu,* பெ.(n.) 1. பெண்கள் தம் மார்பின் மேலிடுஞ் சீலைப்பகுதி; the portion of a saree, covering the bosom of women. 2. முதுகுடன் இணைத்து மூட்டைக் கட்டுங் கச்சை (சீதக்.36); band for holding a pack on the back, fastened over the chest.

*[மார் + யாப்பு → மாராப்பு.]*



**மாராப்புக்கடா** *mārāppu-k-kaḍā,* பெ.(n.) உடல் முழுதும் கருநிறமும் வலது மார்பு அல்லது இடது மார்பில் மட்டும் சிறிது

வெண்ணிறமும் கொண்ட ஆட்டுக்கடா (நாஞ்.); black sheep or goat with white spots in its right or left breast.

*[மாராப்பு + கடா.]*

மாராப்புக்கொட்டகை *mārāppu-k-koṭṭagai,* பெ.(n.) பந்தலின் பக்கச் சுவர் போல் முன்னும் பின்னும் மாற்றியமைக்கப் பயன்படும் தட்டி (செங்கை.வழ.); a screen used as side wall of pandal, and make turn front and back.

*[மாராப்பு + கொட்டகை.]*

மாராப்புச்சீலை *mārāppu-c-cīlai,* பெ.(n.) 1. மாராப்பு, 1 (வின்.) பார்க்க; see *mārāppu.*2. மாராப்பு, 2 (யாப்.) பார்க்க; see *mārāppu.*

*[மாராப்பு + சீலை.]*

மாராப்புப்பட்டை *mārāppu-p-paṭṭai,* பெ.(n.) 1. மாராப்பு, 2 பார்க்க; see *mārāppu.*2. கத்தியின் கச்சை; sword belt.

*[மாராப்பு + பட்டை.]*

மாராப்புமல் *mārāppumal,*பெ.(n.) கை மரங்களை இணைக்கும் குறுக்கு மரம் (நெல்லை.வழக்.); a wooden gross frame joint the frame.

மாராயக்குறி *mārāya-k-kuṟi,* பெ.(n.) மாராயச்சீட்டு (நாஞ்.) பார்க்க; see *mārāya-c-ciṭṭu.*

*[மாராயச்சீட்டு →மாராயக்குறி.]*

மாராயச்சீட்டு *mārāya-c-ciṭṭu,* பெ.(n.) மாராயப்பணம் பெற்றுக் கொண்டதற்குரிய பற்றுச் சீட்டு (நாஞ்.); receipt acknowledging payment of *mārāya-p-paṇam.*

*[மாராயம் + சீட்டு.]*

மாராயஞ்சொல்(லு)-தல் *mārāyañ-collu-,* 8 செ.குன்றாவி.(v.t.) நற்செய்தி கூறுதல் (வின்.); to given good news.

*[மாராயம் + சொல்-,]*

மாராயஞ்சொல்லுபவன் *mārāyañ-collubavaṉ,*பெ.(n.) வண்ணான் (இ.வ.); washerman, as the bearer of good news.

*[மாராயம் + சொல்லுபவன்.]*

மாராயம் = நற்செய்தி. சிற்றூர்களில் பெண்கள் பூப்பெய்தல் முதலிய நன்னிகழ்வுகளை வண்ணான் சென்று சொல்வதால் வந்த பெயராகலாம்.

மாராயப்பணம் *mārāya-p-paṇam,* பெ.(n.) நிலத்துக்குரியவன் பாட்டக் காரனிடமிருந்து பாட்டவுறுதியின் பொருட்டு முற்பட வாங்கும் பணம் (நாஞ்.); advance money received by the owner of a fixed from the lessee thereof as security for the due payment of rent.

*[மாராயம் + பணம்.]*

மாராயப்பாட்டம் *mārāya-p-pāṭṭam,* பெ.(n.) மாராயப் பணம் வாங்கும் பாட்ட வகை (நாஞ்.); a lease in which a sum is received in advance from the lessee as security for the due payment of rent, dist. fr. *veṉ-pāṭṭam.*

*[மாராயம் + பாட்டம்.]*

மாராயம் *mārāyam*, பெ.(n.) 1. வேந்தனாற் பெறுஞ் சிறப்பு; honour bestowed by a king. *"மாராயம் பெற்ற நெடு மொழியானும்" (தொல்.பொருள்.63).* 2. மகிழ்ச்சி; happiness, gladness. *"சிவன் மாராய மிங்கண் மிக்குறுக" (திருவாணைக். நானவழி.36).* 3. நற்செய்தி (இ.வ.); good news, auspicious tidings. 4. பாராட்டுச் சொல் (வின்.); compliment, congratulations. 5. பெண்ணின் பூப்புச் செய்தியைச் சுற்றத்தார்க்கு அறிவிக்கை (இ.வ.); announcement of a girl's puberscence to her relatives.

*[மா + அரையன்→மாராயன்→மாராயம் .]*

மாராயவஞ்சி *mārāya-vañji*, பெ.(n.) அரசனாற் சிறப்பெய்திய வெற்றி வீரரின் பெற்றிமையைக் கூறும் புறத்துறை (பு.வெ.3, 11); (Purap.) theme describing the honours conferred on victorious warriors by their king.

*[மாராயம் + வஞ்சி.]*

மாராயன் *mārāyaṉ*, பெ.(n.) 1. அரசன்; king. 2. அரசனாற் பெறும் பட்டப் பெயர்; honorary title bestowed by a king. *"பஞ்சவ மாராயன்.... கொங்காள்வான்"* (Insc.). 3. திருவிதாங்கூரில் உவச்சரை யொத்த ஒரு சாதி (நாஞ்.); a caste in Travancore, corresponding to uvaccarai.

*[மா + அரையன்.]*

மாராழம் *mārāḻam*, பெ.(n.) மார்பளவுள்ள ஆழம்; depth up to one's breast, as of water.

*[மார் + ஆழம்.]*

மாரி[1] *māri*, பெ.(n.) 1. நீர் (பிங்.); water. 2. மழை (பிங்.); rain, shower. *"மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்" (புறநா.35).* 3. மேகம்; cloud. *"மாரி மாட் டென்னாற்றுங் கொல்லோ வுலகு" (குறள், 211).* 4. மாரிக் காலம் பார்க்க; see *māri-k-kōlam*. *"மாரி மலைமுழைஞ்சின் மன்னிக் கிடந்துறங்கும்" (திவ்.திருப்பா.23).* 5. பூராடம் (பிங்.); the 20th nakstra. 6. கள் (பிங்.); toddy, liquor. 7. புள்வகை (பிங்.); a bird.

*[முல் (பொருந்தற்கருத்து வேர்) →மல்→மால் →மார்→மாரி (வே.க.4-43).]*

மாரி[2] *māri*, பெ.(n.) 1. மரணம் (பிங்.); death. 2. சின்னம்மை; small-pox. 3. சின்னம்மைக்குரிய தேவதை; the goddess of small pox. 4. கொற்றவை ( பிங்.); Durgai.

*[மால்→மார்→மாரி.]*

மாரி[3] *māri*, பெ.(n.) (பெயர்ச் சொற்களோடு இணைந்து) தொடர்ச்சியாக அதிக அளவில் என்ற பொருளைத் தரும் சொல்; a word (which combines with nouns) to mean a shower of something.

மாரிக்கார் *māri-k-kār*, பெ.(n.) கார் நெல் வகை (R.T.) a kind of paddy that grows and matures in the rainy season.

*[மாரி + கார்.]*

மாரிக்காலம் *māri-k-kālam*, பெ.(n.) மழைக்காலம்; the monsoon, rainy season.

*[மாரி + காலம்.]*

**மாரிக்குடா** *māri-k-kuḍā*, பெ.(n.) வடகீழ்த் திசை (வின்.); north-east.

*[மாரி + குடா. குடக்கு=கிழக்கு. குடக்கு→குடம் →குடா.]*

**மாரிக்குருவி** *māri-k-kuruvi*, பெ.(n.) மாரி[1], 7 (வின்.) பார்க்க; see *māri.*

*[மாரி + குருவி.]*

**மாரிகாலம்** *māri-kālam*, பெ.(n.) மாரிக் காலம் (வின்.) பார்க்க; see *māri-k-kālam.*

*[மாரிக்காலம்→மாரிகாலம்.]*

**மாரிசம்[1]** *mārišam*, பெ.(n.) 1. வஞ்சகம்; hypocrisy. *"மாரிசமும் சூதுமிட்ட" (நெல்விடு. 214).* 2. ஒய்யாரம்; affectation.

**மாரிசம்[2]** *mārišam*, பெ.(n.) ஒருவகைக் கீரை; edible green (சா.அக.).

**மாரிசாதம்** *māri-šādam*, பெ.(n.) வானம்பாடி; a bird-sky lark (சா.அக.).

*[மாரி + சாதம்.]*



**மாரிசி** *mārišī*, பெ.(n.) மிளகு (இராசவைத். அரும்.பக்.92); pepper.

**மாரித்தாய்** *māri-t-tāy*, பெ.(n.) பரதவர்கள் வழிபடும் கடவுள்; a name of paradava's god. *"மாரித்தாயே ஏலே லோ" (நாட்டார் பாடல்) (மட்டக்களப்பு. பரத.கலைச்சொ.).*

*[மாரி + தாய்.]*

**மாரிநாள்** *māri-nāḷ*, பெ.(n.) பன்னிரண்டாம் நாண்மீன் (பிங்.); the 12th naksatra.

*[மாரி + நாள்.]*

**மாரிப்பண்** *māri-p-paṇ*, பெ.(n.) மாரிக்காலம் பார்க்க; see *māri-k-kālam.*

*[மாரி + பண்.]*

**மாரிப்போகம்** *māri-p-pōgam*, பெ.(n.) புன்செய் விளைவு (வின்.); produce of dry cultivation.

*[மாரி + போகம்.]*

**மாரிபத்து** *māri-pattu*, பெ.(n.) மாரிபம் பார்க்க; see *māribam.*

*[மாரிபம் →மாரிபத்து.]*

**மாரிபம்** *māribam*, பெ.(n.) மூலம்; part, side, behalf, mean, medium. *'அவன் மாரிபமாகக் கொடுத்தார்' (உ.வ.).*

**மாரிமழை** *māri-maḻai*, பெ.(n.) வேனிற் காலத்திற் பெய்யும் மழை (நாஞ்.); rain during the summer.

*[மாரி + மழை.]*

**மாரிமறுத்தல்** *māri-maṟuttal*, பெ.(n.) 1. மழையில்லாமை; want of rain. 2. மழை நின்று விடுகை (வின்.); cessation of rain.

*[மாரி + மறுத்தல்.]*

**மாரிமா** *māri-mā,* பெ.(n.) 1. காட்டுமா; Indian hog plum. 2. நீண்ட மரவகை; South sea Islands hog plum.

**மாரிமுத்து** *māri-muttu,* பெ.(n.) மாரி[2] பார்க்க; see *māri..*

*[மாரி + முத்து.]*

**மாரியம்மன்[1]** *māriyammaṉ,* பெ.(n.) வெப்பு நோயிலிலிருந்து மக்களைக் காப்பதாக நம்பப்படும் தமிழ்நாட்டுத் தெய்வம்; a rural female diety who is behind to save the people from the disceases of heat. *"எங்கள் முத்து மாரியம்மா, எங்கள் முத்துமாரி" (பாரதியார்).*

*[மாரி + அம்மன்.]*

**மாரியம்மன்[2]** *māriyammaṉ,* பெ.(n.) மாரி[2], 3 பார்க்க; see *māri.*

*[மாரி →மாரியம்மன்.]*

**மாரியம்மன்கொண்டாடி** *māriyammaṉ-koṇḍāḍi,* பெ.(n.) மாரியம்மனின் அருள் பெற்று ஆடுபவன் (வின்.); one possessed by the spirit of māri-y-ammaṉ.

மறுவ. மாரியம்மன் மருளாடி.

*[மாரியம்மன் + கொண்டாடி.]*

**மாரியம்மை** *māriyammai,* பெ.(n.) மாரியம்மன் (வின்.) பார்க்க; see *mārri-y-ammaṉ.*

*[ மாரியம்மன் →மாரியம்மை.]*

**மாரியாத்தாள்** *māria-y-āttāḷ,* பெ.(n.) மாரியம்மன் (இ.வ.) பார்க்க; see *māri-y-ammaṉ.*

*[மாரியம்மன் →மாரியாத்தாள். அம்மன்→ அம்மா →ஆத்தா (கொ.வ.).]*

**மாரியாயி** *māri-y-āyi,* பெ.(n.) மாரியம்மன் (இ.வ.) பார்க்க; see *māri-y-ammaṉ.*

*[மாரியம்மன்→மாரியாயி. அம்மன்→அம்மா →ஆயி (இ.வ.).]*

**மாரியுள்ளான்** *māri-y-uḷḷāṉ,* பெ.(n.) உள்ளான் வகை; common snipe, *Gallingo scopacinus*, as a bird of cold water (m.m.).

*[மாரி + உள்ளான்.]*



**மாரிவலை** *māri-valai,* பெ.(n.) மீன் பிடிக்க உதவும் வலையின் பெயர்; a kind of fishing net.

*[மாரி + வலை.]*

**மாரிவெண்கோ** *mārivenkō,* பெ.(n.) ஔவையாரால் பாடப்பெற்ற சேரவரசன்; a Chera king, praised by Avvaiyar. *"மாரிவெண்கோவும், பாண்டியன் கானப்பேர் கடந்த உக்கிரப் பெருவழுதியும், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் ஒருங்கிருந்தாரைப் பாடியது" (புறநா.367, அடிக்குறிப்பு.).*

மாரிழவு *mār-iḻavu,* பெ.(n.) இழவில் மாரடித்துக் கொள்ளுகை (வின்.); bewailing the dead by beating one's breast.

*[மார் + இழவு.]*

மாருசி *māruśi,* பெ.(n.) மிளகு (இராசவைத். அரும்.பக்.92) பார்க்க; see *miḷagu.*

மாரெரிச்சல் *mār-ericcal,* பெ.(n.) செரியாமையாலுண்டாகும் மார்பெரிச்சல் நோய் (M.L.); heart burn, chest burn due to indigesting food.

*[மார் + எரிச்சல்]*

மாரோடம் *mār-ōḍam,* பெ.(n.) செங்கருங்காலி; red catechu. *"ஆய்பூந் தில்லையு மணிமாரோடமும்" (பெருங். உஞ்சைக்.50, 31).*

மால்[1](லு)-தல் *māl-,* 16 செ.கு.வி.(v.i.) மயங்குதல்; to be confused, perturled. *"மான்று வேட்டெழுந்த செஞ்செவி யெருவை" (அகநா.3).*

*[மல் → மல்லல் = மிகுதி, வளம், செல்வம், வலிமை, பொலிவு, அழகு. மல் → மலை. மலைதல் = ஒத்தல், எதிர்த்தல், பகைத்து மாறுபடுதல், போராடுதல். மல் → மலை → மலைத்தல் = மாறுபடுதல், பொருதல், வருந்துதல். மல் → மால்(லு). மலைதல் = மயங்குதல். மலைத்தல் = மயங்குதல். மல் → மால் (வே.க.4:37]*

பல பொருள்கள் ஒன்று சேர்வதால் குழும்பலும் குழப்பமும் கலக்கமும் மயக்கமும் உண்டாகும். நீரும் மண்ணும் சேரின் கலங்கல் அல்லது கலுழி யெனப்படுவதும், நீரும் பிற பொருளும் சேர்ந்து திண்ணமாயின் குழம்பு அல்லது குழம்பல் எனப்படுவதும், பகலும் இரவும் மயங்கும் (கலக்கும்) வேளை மசங்கல் (மயங்கல்) எனப்படுவதும் காண்க. ஒ.நோ: கல → கலகு → கலங்கு → கலக்கு → கலக்கம். ஒரு கவர்த்த வழியைக் காணின் எது வழியென்று தெரியாது கலங்கவும், அறியாதார் பலர் கூடியிருக்கக் காணின் அவருட் காண வேண்டியவர் யாரென்று தெரியாது மயங்கவும் நேரும். இதனால் பொருட் கலக்கம் மனக் கலக்கத்திற்கும் ஏதுவாம்.

அமைதியான மனத்தில் கவலை அல்லது அச்சம் கலப்பின் மனக்கலக்கம் உண்டாகும். மனத்தெளிவு முற்றும் நீங்குவதே மயக்கம். அது தீய பொருள் உடம்பிற் கலப்பதாலும் உண்டாகும் (வே.க.4:37).

மால்[2](லு)-தல் *māl-,* 16 செ.கு.வி.(v.i.) மாட்சிப்படுதல்; to be magnified, glorified. *"மான்ற பூண் முலையினாள்" (காஞ்சிப்பு. திருக்கண்.174).*

*[மல் → மால்.]*

மால்[3](லு)-தல் *māl-,* 16 செ.கு.வி.(v.i.) எழுதகம் அமைத்தல் (வின்.); to form mouldings on a pillar or wall *"மால்கிறேன், மாலினேன்".*

மால்[4] *māl,* பெ.(n.) 1. மயக்கம்; illusion, delusion, aberration of mind, dullness, stupor, confusion. *"பரேரம் புழகுடன் மாலங் குடைய மலிவன மறுகி" (குறிஞ்சிப்.96).* 2. ஆசை (பிங்.); desire. *"என் பேய் மன மால் கொண்டதே" (திருநூற்.1).* 3. காமம்; love, lust. *"மடப்பிடி கண்டு வயக்கரி மாலுற்று" (பரிபா.10, 42).* 4. கருமை (பிங்.); blackness. *"மால்கடல்" (பெரும்பாண்.487).*

*[மல் → மால் (வே.க.4:37)]*

மால்[5] *māl,* பெ.(n.) 1. பெருமை (பிங்.); greatness. *"சினமால் விடை யுடையான்"*

*(திருவாச.34, 3).* 2. பெருமையுடையவன்; great man. *"மாமஞ்ஞை யூர்ந்து நின்றமால்" (சீவக.286).* 3. திருமால்; Tirumal. *"நீர் செல நிமிர்ந்த மாஅல் போல" (முல்லைப்.3).* 4. அருகன் (சூடா.); arhat. *"இன்பக் கடலாக்கித் தரு மாலை" (சீவக.961).* 5. வானவத்தலைவன் (இந்திரன்) (பிங்.); *Indiran. "தன்றிரு மகனெனப் பெற்றமால்" (குமர.பிர.முத்து. காப்.6).* 6. காற்று (பிங்.); wind. 7. அறிவன் கோள் (பிங்.); the planet mercury. 8. சோழன் (பிங்.); Cola king. 9. மலை (அக.நி.); mountain. 10. வளமை (அக.நி.); plenty, fertility. 11. பழமை (அக.நி.); antiquity. 12. மேகம் (பிங்.); cloud. 13. மால்பு (பிங்.)பார்க்க; see *mālbu.*14. விட்டிணு கரந்தை (மூ.அக.); a plant that grows only in hot and dry places.

*[முல் (பொருந்தற் கருத்து வேர்)→மல்→மால் (வே.க.4:30)]*

**மால்**[6] *māl,* பெ.(n.) 1. எழுதகக் கருவி (வின்.); wooden mould for forming the mouldings of a pillar or cornice of wall. 2. செங்கற்கட்டளை (இ.வ.); mould for making bricks. 3. காளவாய் (இ.வ.); brick-kiln. 4. மாதிரி (வின்.); form, plan, fashion. 5. எல்லை; demarcation, limit. 6. வலை வகை (வின்.); a kind of net. 7. கொட்டடி (இலாயம்); stable, stall. 8. அரசிறை வகை (வின்.); quit, rent. 9. சொத்து; property.

**மால்**[7] *māl,* பெ.(n.) 1. வலையின் ஒரு கூறு (மீனவ.வழக்.); section of a fishing net. 2. செல்வம்; wealth.

**மால்கங்கணி** *māl-kaṅgaṇi,* பெ.(n.) வாலுளுவை (இ.வ.); black-oil.

**மால்கங்கணிவிதை** *māl-kaṅgaṇi-vidai,* பெ.(n.) வாலுளுவைரிசி; seed of intellect plant.

**மால்கண்டகன்** *māl-kaṇḍagaṉ,* பெ.(n.) புட்பராகம்; one of the nine germs.

**மால்கந்தி** *māl-kandi,* பெ.(n.) அரிதாரம்; yellow orpiment (சா.அக.).

**மால்கயிறு** *māl-kayiṟu,* பெ.(n.) வலையை வாங்குதற்குரிய வலைக்கயிறு (செங்கை. மீனவ.); twaist of the fishing net.

*[மால் + கயிறு.]*

**மால்கரந்தை** *māl-karandai,* பெ.(n.) திருமால்கரந்தை எனுஞ் செடி (மூ.அ.); a plant that grows only in hot and dry places.

*[மால் + கரந்தை. மால் = திருமால்]*

**மால்காரை** *māl-kārai,* பெ.(n.) கருந்துளசி; black variety of holy basil.

**மால்குறி-த்தல்** *māl-kuṟi-,*4 செ.கு.வி. (v.i.) மனை கட்டுவதற்கு முன்பாக எல்லையை வரையறை செய்து அடையாளமாக குச்சி நடுதல் (முது.வழ.); to plant a small stick as pole, to determine the boundry of the housing plot, before construction.

*[மால் =எல்லை. மால் + குறி-,]*

**மால்சந்தனம்** *māl-šandaṉam,* பெ.(n.) செஞ்சந்தனம்; red sandal wood.

**மால்சமயத்தோர்** *māl-šamayattōr,* பெ.(n.) திருமாலையே முதற்கடவுளாக வணங்கும் கொள்கையோர் (பிங்.); *Vaisṇavaites* as devotees of *Tirumāl.*

*[மால் + சமயத்தோல். மால் = திருமால்.]*

**மால்தங்கை** *māl-taṅgai,* பெ.(n.) 1. உமை; *Pārvati.* 2. நஞ்சு வகை (யாழ்.அக.); a kind of mineral poison.

*[மால் + தங்கை]*

**மால்தாயம்** *māl-tāyam,* பெ.(n.) கருநெய்தல் எனும் கொடி; a kind of creeper (சா.அக.).

**மால்தீபலம்** *māl-tīpalam,* பெ.(n.) சாதிக்காய்; net meg (சா.அக.).

**மால்துயில்** *māl-tuyil,* பெ.(n.) ஆலமரம்; banyan tree (சா.அக.).

**மால்தேவி** *māl-dēvi,* பெ.(n.) அரிதாரம்; yellow orpiment (சா.அக.).

**மால்தேவிமச்சினி** *māldēvi-maccini,* பெ.(n.) அப்பிரகம்; mica (சா.அக.).

**மால்தொடை** *māl-toḍai,* பெ.(n.) துளசி (மலை.); sacred basil.

*[மால் + தொடை. மால் = திருமால். தொடை = தொடுக்கப்பட்டது, மாலை. ஒ.நோ. உடுக்கப்படுவது உடை.]*

**மால்நிறம்** *māl-niṟam,* பெ.(n.) பச்சை; green (சா.அக.).

*[மால் + நிறம். மால் = திருமால்]*

**மால்பரிதி** *māl-paridi,* பெ.(n.) உடம்பின் கொழுப்பு; fat of the human body (சா.அக.).

**மால்பாகலட்சுமி** *māl-pāga-laṭcumi,* பெ.(n.) அரிதாரம்; yellow orpiment (சா.அக.).

**மால்பு** *mālbu,* பெ.(n.) கண்ணேணி, மூங்கில் ஏணி; bamboo ladder. *"நிலை பெய்திட்டமால்பு நெறியாக" (மலைபடு.316).*

**மால்போடு-தல்** *māl-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) எல்லை வரைதல் (இ.வ.); to draw a plan, to demarcate.

*[மால் + போடு-, மால் = எல்லை]*

**மால்முடி-தல்** *māl-muḍi-,* 4 செ.கு.வி.(v.i.) வலைபின்னுதல் (இ.வ.); to make a net.

*[மால் + முடி-, மால் = வலை. முடி = முடிச்சு போடுதல், பின்னுதல், கட்டுதல், தென்னை யோலைப் பின்னுதலை தென்னை முடிதல் என்றும், பையின் தலைப்பைக் கட்டிக் கொடுத்தலை முடிந்து கொடு என்றும் வழங்கும் வழக்குண்மையை யறிக.]*

**மால்முப்பு** *māl-muppu,* பெ.(n.) தலைப் பிண்டம்; foetus of first confinement (சா.அக.).

**மால்முருகு** *māl-murugu,* பெ.(n.) துளசி (மலை.); sacred basil.

*[மால் + முருகு. மால் = திருமால்]*

**மால்மேனி** *māl-mēṉi,* பெ.(n.) துருசு; copper sulphate (சா.அக.).

**மால்மைத்துனன்** *māl-maittuṉaṉ,* பெ.(n.) 1. சிவன்; *Śivaṉ.* 2. துருசு; blue vitriol.

*[மால் + மைத்துனன். மால் = திருமால்]*

**மால்மைந்தன்** *māl-maindaṉ,* பெ.(n.) காமன் (நாமதீப.57); *Kāmaṉ,* a son of *Tirumāl.*

*[மால் + மைந்தன். மால் = திருமால்]*

**மால்விளக்கு** *māl-viḷakku,*பெ.(n.) தோணியின் பின்னால் கட்டும் விளக்கு (நெல்லை.); a lamp fixed in backside of the boat.

*[மால் + விளக்கு. மால் = வலை, மீன்பிடி வலை.]*

**மால்விளையாட்டு** *māl-viḷaiyāṭṭu,*பெ.(n.) இன்ப நுகர்ச்சி; sexual intercourse. *"இழந்து போகாத வாழ்வை ஈயும் முத்தையனார் கைவேல் வழங்கு நல்லூரண் உண்ணும் போதும், மால்விளையாட்டின் போதும்" (பாம்பன்சுவாமிகள் – சண்முகக் கவசம்).*

**மால்வார்** *mālvār,* பெ.(n.) பழச்சாறு; a kind of fruits juice.

**மால்வீடு** *māl-vīḍu,* பெ.(n.) சாளக்கிராமம் (யாழ்.அக.); black fossil ammonite.

**மால்வெட்டு-தல்** *māl-veṭṭu-,* 5 செ. குன்றாவி.(v.t.) 1. மாதிரி செய்தல் (வின்.); to cut out a form or pattern make a plan or diagram. 2. பாத்தியமைத்தல் (யாழ்.அக.); to form plots bounded by ridges.

*[மால் + வெட்டு-.]*

**மாலக்கண்ணி** *māla-k-kaṇṇi,*பெ.(n.) நீள, அகல வேறுபாடுடைய ஒரு வகை மீன்பிடி வலை; fishing net with a different length and breath.

*[மால + கண்ணி.]*

**மாலகம்**[1] *mālagam,* பெ.(n.) செம்பருத்தி வகை; lotus bendy.



**மாலகம்**[2] *mālagam,* பெ.(n.) வேம்பு (மூ.அ.); neem.

**மாலதீவு** *māla-tīvu,* பெ.(n.) மலையாளக் கடற்கரையை அடுத்துள்ள மாலை போன்றமைந்துள்ள தீவுகள் (வின்.); Māldive islands.

*[மாலை + தீவு]*

**மாலதீவுத்தேங்காய்** *māla-tīvu-t-tēṅgāy,* பெ.(n.) கடற்றெங்கு (வின்.); double coconut.

*[மாலைத்தீவு + தேங்காய்]*

**மாலந்து** *mālandu,*பெ.(n.) கீழ்க்காய் நெல்லி; a plant - *phyllanthus niruri.*

**மாலபதி** *mālapati,* பெ.(n.) உடம்பின் கொழுப்பு; fat of the human body.

**மாலம்** *mālam,*பெ.(n.) 1. பேய்; devil. 2. குங்குமம் (மூ.அ.); saffron.

*[மால் = மாலம். மால் = கருமை, செம்மை]*

**மாலமத்திரி** *māla-mattiri,* பெ.(n.) வட்டத்திருப்பி; a twiner - *cissampelos paneira.*

மாலமாயம் *māla-māyam*, பெ.(n.) பேயின் தந்திரம் (வின்.); deceit or trick of a devil.

*[மாலம் + மாயம்]*

மாலயம்[1] *mālayam*, பெ.(n.) சந்தனம் (மலை.); sandal wood.

மாலயம்[2] *mālayam*, பெ.(n.) மாளயம் பார்க்க; see *māḷayam*.

மாலயற்கரியான் *mālayaṟ-kariyāṉ*, பெ.(n.) சிவபெருமான்; *Śivaṉ*.

*[மால் + அயன் + அரியான். மால் = திருமால். அயன் = பிரமண். அரியான் = இருவராலும் அடிமுடி காண இயலாப் பரம்பொருள்]*

மாலர்[1] *mālar*, பெ.(n.) 1. பிராமணப் பெண்ணுக்குஞ் சூத்திரனுக்கும் பிறந்தோர் (வின்.); children born of a brahmin mother and a sudra father. 2. வேடர் (அக.நி.); hunters, savages. 3. புலைஞர் (அக.நி.); out castes.

தெ. மால.

மாலர்[2] *mālar*, பெ.(n.) மெய்யுறை (அக.நி.); armour.

மாலரும்பு *mālarumbu*, பெ.(n.) மயக்கம் தரும் பொருள் வகை (தைலவ.தைல.); an intoxicating drug.

மாலலங்கல் *māla-laṅgal*, பெ.(n.) துளசி; holy basil.

மாலவம் *mālavam*, பெ.(n.) ஒரு நாடு; a country.

மாலவன் *mālavaṉ*, பெ.(n.) அறிவன் கோள் (திவா.); the planet mercury.

மாலவன்குன்றம் *mālavaṉ-kuṉṟam*, பெ.(n.) திருப்பதிக் குன்றம்; a hill shrine *Tiruppati*.

*[மாலவன் + குன்றம். மாலவன் = திருமால்.]*

தமிழ்நாட்டின் வட எல்லையாகத் திகழ்ந்தது திருவேங்கட மலையாகும். இம்மலை மாலவன்குன்றம்.

மாலவித்தை *māla-vittai*, பெ.(n.) வஞ்சகம்; deceit, cunning. *"மாலவித்தைப் பெண்கள் மன்னக் கேசாள்" (விறலிவிடு. 506).*

*[மால் + வித்தை. மால் = மயக்கம், கருமை, ஏமாற்று, வஞ்சகம்]*

மாலன்[1] *mālaṉ*, பெ.(n.) திருமால்; *Tirumāl*.

*[மால் → மாலன். மால் = கருமை, கருநிற திருமால்]*

மாலன்[2] *mālaṉ*, பெ.(n.) வேடன்; hunter.

*[மால் = வஞ்சகம், ஏமாற்று. மால் → மாலன் ஏமாற்றிக் கொல்பவன், வேடன்.]*

மாலா *mālā*, பெ.(n.) நடுமுள் மட்டுமேயுள்ள வெண்ணிறக் கடல் மீன் (நெல்லை.மீனவ.); a kind of sea fish which is white in colour with middle spine.



மாலாகாரன் *mālākāraṉ,* பெ.(n.) மாலைக்காரன் பார்க்க; see *mālai-k-kāraṉ.*

[மாலைக்காரன்→மாலாக்காரன் (கொ.வ.)]

மாலாதுரிசினம் *mālā-duriśiṉam,* பெ.(n.) பூனை; cat (சா.அக.).

மாலாபலம் *mālāpalam,* பெ.(n.) உருத்திராக்க மணி (சங்.அக.); rudraksa bead.

[மாலா + பலம்]

மாலானி *mālāṉi,* பெ.(n.) சிறு சண்பகம்; small flowers which are fragrant michelia nilagirica.

மாலி[1] *māli,* பெ.(n.) மாலையணிந்தோன்; one who wears a garland.

[மாலை→மாலி]

மாலி[2] *māli,* பெ.(n.) 1. கள் (சூடா.); toddy. 2. ஓர் அரக்கன் (அரு.நி.); a wicked gigantic person.

மாலி[3] *māli,* பெ.(n.) பகலவன்; sun.

மாலி[4] *māli,* பெ.(n.) தோட்டக்காரன்; gardener.

மாலிகாரேகை *māligā-rēgai,* பெ.(n.) மாலிகாவரிகை பார்க்க; see *māligā-varigai.*

[மாலிகை→மாலிகா + ரேகை]

த. ரேகை > வ. வரிசை.

மாலிகாவரிகை *māligā-varigai,* பெ.(n.) நல்வாழ்வைக் குறிக்கும் கைவரிகை (திருவாரூர்க்குற. mss.); a kind of distinctive mark on the palm, believed to indicate prosperity.

[மாலிகை→மாலிகா + வரிகை]

மாலிகை[1] *māligai,* பெ.(n.) 1. சிறு மாலை (சூடா.) (இரகு.திக்குவி.9); garland, string of flowers. 2. வரிசை (வின்.); row, series.

[முல் (பொருந்தற்கருத்து வேர்) →மல்→மால் →மாலை = தொடுக்கப்பட்டது, வரிசையாகப் பொருந்தியது. மாலை→மாலிகை. 'கை' சிறுமைப் பொருட் பின்னொட்டு. ஒ.நோ. குடி = குடிகை (சிறுகோயில்) (வே.க.4:38.]

மாலிகை[2] *māligai,* பெ.(n.) சீமைச் சணல்; flax.

மாலிகைத்துவரை *māligai-t-tuvarai,* பெ.(n.) சின்ன துவரை; small sized red - gram.

[மாலிகை + துவரை]

மாலிமி *mālimi,* பெ.(n.) இளமையிற் செய்யும் நட்பு (சது.); youthful friendship.

மாலிமை *mālimai,* பெ.(n.) பெருமிதம்; dignity, eminence, honour. ***"ஒருவன்கீழ் மாலிமையாய்ப் பெண்டிருந்து வாழ்ந்ததல்லால்" (தெய்வச். விறலி விடு.289).***

மாலியம்[1] *māliyam,* பெ.(n.) பூ (சங்.அக.); flower. *"பிந்தைக் காட்டு மாலியற்கள்" (காஞ்சிப்பு. நகரப்.35).*

மாலியம்[2] *māliyam,* பெ.(n.) திருமாலை வழிபடுபவர்; *vaishnavitties.*

மாலியாங்கம் *māliyāṅgam,* பெ.(n.) பல வகை மாலைகளைத் தொடுக்க உதவுந் தெய்வ மரம் (தக்கயாகப்.757, கீழ்க்குறிப்பு); a celestial tree which gives various kinds of garlands.

மாலிருஞ்சோலை *māl-iruñ-cōlai,* பெ.(n.) மதுரை மாவட்டத்திலுள்ள அழகர்மலை (திவ்.பெரியாழ்.2, 7, 11); the *Aḷagar* hills near *Madurai*.

*[மால் = திருமால். மால் + இருஞ்சோலை.]*

மாலின்தாரம் *mālin-tāram,* பெ.(n.) அரிதாரம்; yellow orpiment.

மாலின்நேத்திரம் *mālin-nēttiram,* பெ.(n.) கல்தாமரை; dry lotus found in the crevices of rocks and mountains (சா.அக.).

மாலினி¹ *mālini,* பெ.(n.) பூமாலைக்காரி; flower wearing women.

மாலினி² *mālini,* பெ.(n.) 1. கொற்றவை; Durgai. 2. மலைமகள் (நாமதீப.20); *Malaimagaḷ.*

மாலினியாமாதா *māliniyā-mādā,* பெ.(n.) கீழ்க்காய் நெல்லி; *phyllanthus niruri* (சா.அக.).

மாலினுக்கிளையநங்கை *mālinuk-k-iḷaiya-naṅgai,* பெ.(n.) மாலினி, 1 (சூடா.) பார்க்க; see *mālini.*

மாலினுக்கிளையாள் *mālinukkiḷayāḷ,* பெ.(n.) மாலினி, 1 (பிங்.) பார்க்க; see *mālini.*

*[மாலினுக்கு + இளையாள்]*

மாலினுடல்மேனி *mālinuḍal-mēni,* பெ.(n.) நாகப்பச்சை; a kind of gem.

மாலுக்கிளையாள் *mālu-k-kiḷaiyāḷ,* பெ.(n.) 1. கொற்றவை; *Durgai.* 2. மால் தங்கை; sister of *Tirumāḷ.*

மாலுங்கம் *māluṅgam,* பெ.(n.) புளி மாதுளை; sour pomegranate fruit.

மாலுடைக்கண்டன் *māluḍai-k-kaṇḍan,* பெ.(n.) நவமணிகளிளொன்றான புட்பராகம் (யாழ்.அக.); topaz.

மாலுதல் *mālutal,* பெ.(n.) மயங்குதல்; getting giddy, being charmed.

*[முல்→மால்→மாலுதல் (வே.க.4:37)]*

மாலுந்திவந்தோன் *mālundi-vandōn,* பெ.(n.) திருமாலின் உந்தியில் தோன்றிய பிரமன் (பிங்.); Brahman, as born of the naval of *Tirumāl.*

*[மால் + உந்தி + வந்தோன்.]*

மாலுமாருதம் *mālumārudam,* பெ.(n.) நாரை; crane.



மாலுறல்¹ *māluṟal,* பெ.(n.) மாறுபாடாய் நினைக்கை; negative thinking.

*[மால் + உறல்]*

மாலுறல்² *māluṟal,* பெ.(n.) மயங்கல்; getting giddy.

மாலூகம் *mālūgam*, பெ.(n.) 1. பேரேலம்; greater cardamom. 2. வால் மிளகு; tail pepper (சா.அக.).

மாலூர் *mālūr*, பெ.(n.) துவரை; redgram (சா.அக.).

மாலூர்தி *māl-ūrti*, பெ.(n.) திருமாலின் ஊர்தியாகிய கருடன் (யாழ்.அக.); kite, as the vehicle of *Tirumāl*.

*[மால் = திருமால். மால் + ஊர்தி]*

மாலை[1] *mālai*, பெ.(n.) 1. பகலும் இரவுங் கலக்கும் அந்திப் பொழுது (பிங்.); evening. *"மாலை யுழக்குந் துயர்" (குறள், 1135). "காரும் மாலையும் முல்லை" (தொல். பொருள். 61).* 2. இரா (பிங்.); night, midnight. *"மாலையும்படா விழித்திரளது" (தக்கயாகப். 155).* 3. இருள்; darkness. *"மாலை மென்கேசம்" (திருப்பு.32).* 4. காலம்; time, opportunity. *"வஞ்சமென் றுணர்ந்த மாலைவாய்" (கம்பரா. திருவவ.51).* 5. குற்றம் (தொல்.சொல்.396, - உரை); fault. 6. பச்சைக்கற் குற்றவகை (சிலப்.14, 184, உரை); a flaw in emerald. 7. இயல்பு; nature, natural, quality. *"கைசெய்தூண் மாலையவர்" (குறள், 1035).* 8. பண்பு (பிங்.); disposition. 9. தொடுக்கப்பட்டது, வரிசையாகப் பொருந்தியது; anything strung together. 10. தொடுத்த பூந்தொடை; garland, wreath of flowers. *"மாலை போற்றூங்குஞ் சினை" (கலித்.106, 27).* 11. மணமாலைபோல தொடுத்த அல்லது கட்டிய மணிமாலை அல்லது முத்து மாலை; மகளிரணி வடம் (பிங்.); woman's necklace or string of jewels, beads, etc. 12. பூமாலை போன்ற பாமாலை (சிற்றிலக்கிய வகை); a kind of poem. *திருவரங்கத்து மாலை.* 13. வரிசை; line, row. *"மாலை வண்டினம்" (சீவக.2397).* 14. கயிறு; cord, bond. *"மாலையு மணியும்" (பரிபா.5, 67).* 15. பண்குடிப் பெண்ணாகிய விறலி; woman who sings and dances. *"பாணர் மாலையர் மாலை யெய்தி" (திருவாலவா.54, 26).* 16. பெண் (திருக்கோ.1, உரை.பக்.9); woman. 17. முத்துமாலை போன்ற வடிவம்; string shape. *மாலைமாலையாய்க் கண்ணீரை வடித்தாள் (உ.வ.).*

*[முல் (பொருந்தற்கருத்து வேர்)→மல்→மால் = மயக்கம், மயக்கும் ஆசை, ஆசை வகையுள் கடுமையான காமம், இடம் பொருள் தெரியாவண்ணம் கண்ணை மயக்கும் இருட்டு, இருள் நிறமான கருமை, கருநிறமான திருமால், கருமுகில், ஆரிய முத்திருமேனிக் கொள்கைப்படி காவல்தொழிலால் திருமாலை யொத்தவனான மாலியச் சோழன்.]*

மால்→மாலை.

பூமாலையையும் பொழுது மாலையையுங் குறிக்கும் மாலை யென்னுஞ் சொல் ஒன்றே. சென்னைப் பல்கலைக்கழகப் பேரகரமுதலியில் அவ் விரண்டையுங் குறிக்குஞ் சொல் வெவ்வேறென்று, காட்டப்பட்டுள்ளது. இது பூமாலையைக் குறிக்குஞ் சொல்லை வடசொல்லென்று காட்ட வகுத்த சூழ்ச்சியே (வே.க.41:38)]

மாலை[2] *mālai*, பெ.(n.) ஒருவகை வலை; a kind of net.

மாலை[3] *mālai*, பெ.(n.) கல்லறைக் கட்டடம் (முகவை.வழக்.); sepulchre building.

மாலைக்கண் *mālai-k-kaṇ*, பெ.(n.) 1. இரவிற் கண் தெரியாமை; night blindness. 2. பார்வைக் குறைவு; defective sight. *"மாலை வண்டின மாலைக்கண் கொண்டவே" (சீவக.2397).*

[மாலை + கண். மாலை = அந்திநேரம்.]

**மாலைக்கண்ணன்** *mālai-k-kaṇṇaṉ*, பெ. (n.) 1. இரவுக்குருடன்; person suffering from night- blindness. 2. பார்வைக் குறைவுள்ளவன்; purblind man.

[மாலை + கண்ணன். மாலை = அந்தி நேரம்]

**மாலைக்கயிறு** *mālai-k-kayiṟu*, பெ.(n.) பந்தல் அமைக்கப் பயன்படும் கயிற்று முடிச்சு வகை (சென்னை.வழ.); a kind of knot in rope.

**மாலைக்கல்** *mālai-k-kal*, பெ.(n.) படிகக்கல்; crystal.

[மாலை + கல்.]

**மாலைக்கல்லூரி** *mālai-k-kallūri*, பெ.(n.) 1. அலுவற்பணி செய்வோரும் பகலில் சென்று பயில இயலாதோரும் பயிலும் வகையில் பாடவேளை அமைக்கப்பட்ட கல்லூரி; evening college. 2. கல்லூரி இட நெருக்கடியைக் கரணியங் காட்டியும், பிறவற்றைக் காட்டியும் பிற்பகல் வேளையில் பாடம் நடத்தப் பெறுங் கல்லூரி (இக்.வழ.); evening session in colleges.

[மாலை + கல்லூரி.]

**மாலைக்காசம்** *mālai-k-kāśam*, பெ.(n.) கண் நோயால் மாலை நேரத்தில் தீவ ஒளி வேறாய்க் காட்டும் ஒருவகைக் கண்நோய்; an eye disease affecting the sight.

[மாலை + காசம்]

**மாலைக்காதம்** *mālai-k-kādam*, பெ.(n.) மாலைநேரம்; evening time.

[மாலை + காதம்]

**மாலைக்காமாலை** *mālai-k-kāmālai*, பெ.(n.) மாலைக்கண், 1 (யாழ்.அக.) பார்க்க; see *mālai-k-kaṇ*

[மாலை + காமாலை]

**மாலைக்காரர்** *mālai-k-kārar*, பெ.(n.) மாலை தொடுப்போர்; garland makers. *"மாலைக்காரருங் காலக் கணிதரும்" (மணிமே.28, 40).*

[மாலை + காரர். 'காரர்' உடைமை குறித்த ஈறு.]

**மாலைக்காலம்** *mālai-k-kālam*, பெ.(n.) மாலை நேரம்; evening time.

[மாலை + காலம்]

**மாலைக்குளி** *mālai-k-kuḷi*, பெ.(n.) மாலைக் குளியல் (பதார்த்த.1307) பார்க்க; see *mālai-k-kuḷiyal.*

[மாலைக்குளியல்→மாலைக்குளி]

**மாலைக்குளியல்** *mālai-k-kuḷiyal*, பெ.(n.) அந்தி நேரத்துக் குளியல் (பதார்த்த, 130, தலைப்பு); evening bath.

[மாலை + குளியல். மாலை = அந்தி வேளை]

**மாலைக்குளியன்** *mālai-k-kuḷiyaṉ*, பெ.(n.) மாலையிற் குளித்து அழகுபடுத்திக் கொள்பவன் (விறலிவிடு.237); fob, dandy, as bathing in the evenings.

[மாலை + குளியன். மாலை = அந்திவேளை]

**மாலைக்கோவில்** *mālai-k-kōvil*, பெ.(n.) உருவம் வகுக்காத சிலையை வைத்து வணங்கும் கோயில் (இ.வ.); shrine where a shapeless stone is worshipped.

[மாலை + கோவில்]

**மாலைகட்டி** *mālai-katti*, பெ.(n.) கோயிலுக்குப் பூமாலை கட்டுவோன் (இ.வ.); one who makes garlands of flowers for use in temples.

*[மாலை + கட்டி]*

**மாலைச்சுரம்** *mālai-c-curam*, பெ.(n.) சாயுங்காலத்தில் காணும் காய்ச்சல்; fever that comes in the evening (சா.அக.).

*[மாலை + சுரம்]*

**மாலைசாத்து-தல்** *mālai-šāttu-*, 5 செ.கு.வி.(v.i.) மாலையால் அழகுபடுத்திக் கொள்ளல் (வின்.); to adorn with garlands as a deity.

*[மாலை + சாத்து-]*

**மாலைசூட்டு-தல்** *mālai-šūttu-*, 5 செ. குன்றாவி.(v.t.) மாலையிடு-தல் பார்க்க; see *mālai-idu*.

*[மாலையிடு→மாலைசூட்டு-,]*

**மாலைத்தீவகம்** *mālaii-t-tivagam*, பெ.(n.) மாலாதீபகம்[3] பார்க்க; see *mālā-tipagam*.

**மாலைத்தீவு** *mālai-t-tivu*, பெ.(n.) மேற்குக் கடற்கரையை யடுத்து மாலைபோல் அமைந்துள்ள தீவுக் கூட்டம்; Maldives.

*[மாலை + தீவு]*

**மாலைநிலை** *mālai-nilai*, பெ.(n.) இறந்த கணவனுடைய எரியில் தீப்பாயும் பொருட்டு அவன் மனைவி மாலைக் காலத்து நின்றநிலை கூறும் புறத்துறை (தொல். பொருள்.77, இளம்பூ.) (பு.வெ.10, 8); theme describing the condition of a wife preparing to immolate herself, in an evening, on the funeral pyre of her deceased husband.

*[மாலை + நிலை]*

**மாலைநுழைஞ்சான்** *mālai-nulaiñcān*, பெ.(n.) மாலையில் மணல் தரையில் தங்குவதும் கரியவுடலும் வெண்மார்பு முடையதுமான குருவி வகை (வின்.); a dark white-breasted little bird which nestles in the sand at dusk.

*[மாலை + நுழைஞ்சான்]*



**மாலைநேரம்** *mālai-nēram*, பெ.(n.) அந்தி வேளை (வின்.); evening.

*[மாலை + நேரம்]*

**மாலைப்படிகம்** *mālai-tp-padigam*, பெ.(n.) பளிங்கு (யாழ்.அக.); crystal.

*[மாலை + படிகம்]*

**மாலைப்பண்** *mālai-p-pan*, பெ.(n.) அந்திக்குரிய பண்; melody type suited to the evenings.

*[மாலை + பண்.]*

**மாலைப்பதநீர்** *mālai-p-padanīr,* பெ.(n.) மாலையிலிறக்கிய பதநீர் (வின்.); sweet toddy fresh drawn in the evening.

*[மாலை + பதநீர்.]*

**மாலைப்பதனி** *mālai-p-padaṉi,* பெ.(n.) மாலைப்பதநீர் (வின்.) பார்க்க; see *mālai-p-padanīr.*

*[மாலை + பதனி. பதநீர்→பதனி (இ.வ.)]*

**மாலைப்பொழுது** *mālai-p-poḻudu,* பெ.(n.) அந்திப்பொழுது; evening time.

*[மாலை + பொழுது]*

**மாலைப்பூத்தல்** *mālai-p-pūttal,* பெ.(n.) மணக்காலம் நேருகை; arrival of the time of marriage.

*[மாலை + பூத்தல்]*

**மாலைமசங்கல்** *mālai-maśaṅgal,* பெ.(n.) மாலைமயங்குநேரம் (இ.வ.) பார்க்க; see *mālai-mayaṅgu-nēram.*

*[மாலை + மசங்கல்.]*

**மாலைமசங்குநேரம்** *mālai-maśaṅgu-nēram,* பெ.(n.) மாலைமயங்குநேரம் பார்க்க; see *mālai-mayaṅgu-nēram.*

*[மாலைமயங்குநேரம்→மாலைமசங்குநேரம்]*

**மாலைமயங்குநேரம்** *mālai-mayaṅgu-nēram,* பெ.(n.) அந்திக் காலத்து மங்கற் பொழுது (இ.வ.); dusk of evening.

*[மாலை + மயங்கும் நேரம். மயங்குதல் = கலத்தல், கலங்குதல். பகலும் இரவும் கலக்கும் காலம்.]*

**மாலைமாடப்புரவி** *mālai-māḍa-p-puravi,* பெ.(n.) குரங்கு; monkey (சா.அக.).

**மாலைமாற்று[1]** *mālai-māṟṟu,* பெ.(n.) மணமக்கள் தத்தம் கழுத்திலணிந்த மாலைகளை மாற்றிக் கொள்ளும் மணவினை; the ceremony of exchanging garlands by the bride and the bridegroom. 2. மணவிழாவில் மணமக்கள் ஒருவருக்கொருவர் மாறி மாறி மாலை யிடுதல்; to exchange garlands, as bridegroom and bride in a marriage.

*[மாலை + மாற்று.]*

**மாலைமாற்று[2]** *mālai-māṟṟu,* பெ.(n.) எழுத்துக்களை ஈறு முதலாகப் படிக்குமிடத்தும் பாட்டு மாறாமல் இருக்கும் மிறைக்கவி வகை (யாப்.வி.பக்.493); (Pros.) a kind of verse that remains identical when its letters are read in the reverse direction. *"திருமாலை மாற்று" (தேவா.123, தலைப்பு).*

*[மாலை + மாற்று.]*

**மாலையணி[1]–தல்** *mālai-y-aṇi-,* 2 செ.கு.வி. (v.i.) புணர்ச்சியின்பந் துய்த்தல்; to enjoy sexual pleasure, lit. to adorn with a garland. *"மாலையணிய விலைதந்தான்" (பரிபா.20, 79).*

*[மாலை +அணி–.]*

**மாலையணி[2]** *mālai-aṇi,* பெ.(n.) அணி வகை (சங்.அக.); a figure of speech.

*[மாலை + அணி.]*

**மாலையந்தி** *mālai-y-andi,* பெ.(n.) பகலும் இரவும் சந்திக்கும் அந்தி வேளை; evening twilight, dusk, dist. fr. *kālai-y-andi.* *"காலையந்தியும் மாலையந்தியும்" (புறநா. 34).*

*[மாலை + அந்தி.]*

**மாலையாகாலம்** *mālai-y-āgālam,* பெ.(n.) மாலையந்தி (யாழ்.அக.) பார்க்க; see *mālai-y-andi.*

*[மாலை + ஆ + காலம்.]*

**மாலையிட்டவன்** *mālai-y-iṭṭavaṉ,* பெ.(n.) கணவன் (கொ.வ.); husband, as one who garlanded his bride.

*[மாலை + இட்டவன்.]*

**மாலையிட்டுப்பிறத்தல்** *mālai-y-iṭṭa-p-piṟattal,* பெ.(n.) தொப்புள் கொடி குழந்தையின் கழுத்தில் சுற்றிப் பிறத்தல்; child born with the naval cord round the neck.

*[மாலையிட்டு + பிறத்தல்.]*

**மாலையிடு—தல்** *mālai-iḍu-,* 17 செ.குன்றாவி. (v.t.) மாலை சூட்டி மணத்தல்; to marry, as the bride garlanding the bridegroom. *"கரித்தோலையிட்டாடுந் தொழிலுடை யோனை முன்னாண் மாலையிட்டாயி தென்னே" (அருட்பா.1, வடிவுடை.13).*

*[மாலை + இடு-.]*

**மாலையீடு** *mālai-y-īḍu,* பெ.(n.) 1. மாலை சூட்டு பார்க்க; see *mālai-šūṭṭu.* *"மாலையீட்டுப் படலம்" (இரகு.).* 2. உடன் கட்டையேறியவளுக்கு எழுப்பிய நினைவுக் கட்டடம் (இலக்.வி.619); monument for wife who immolates herself in the funeral pyre of her deceased husband. 3. அரசர் முதலியவரின் நினைவுச் சின்னம் அமைந்த ஈமம்; cremation ground where monuments for deceased chiefs are erected (Rd).

*[மாலையிடு→மாலையீடு.]*

**மாலையுவமை** *mālai-y-uvamai,* பெ.(n.) பூமாலைபோல் உவமை பல ஒன்றற் கொன்று தொடர்புடையதாய் வரும் அணி வகை (தண்டி.30, 24); (Rhet) a figure of speech in which a number of similes are strung together, as resembling a garland.

*[மாலை + உவமை.]*

**மாலைவடம்** *mālai-vaḍam,* பெ.(n.) தேர் இழுத்தற்கான பெரிய வடக்கயிறு (இ.வ.); large, long rope for dragging a temple car. *"இந்தத் தேருக்கு மாலை வடம் இன்னும் பூட்டவில்லை" (உ.வ.).*

*[மாலை + வடம்.]*



**மாலைவரச்செட்டி** *mālaivara-c-ceṭṭi,* பெ.(n.) பல்லி; lizard (சா.அக.).

**மாலைவன்னி** *mālai-vaṉṉi,* பெ.(n.) அதி மதுரம் (சங்.அக.); liquorice plant.

**மாலைவாங்கு-தல்** *mālai-vāṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) பரிசங் கொடுத்தல்; to pay for sexual pleasure lit. to purchase a garland. *"மாலை வாங்குநர் சாலுநங் கொடிக்கென" (சிலப்.3 : 166).*

*[மாலை + வாங்கு-.]*

**மாலைவாரம்** *mālai-vāram,* பெ.(n.) அந்திப் பொழுது; evening time.

*[மாலை + வாரம்.]*

**மாலைவெயில்** *mālai-veyil,* பெ.(n.) அந்திப் பொழுதின் மஞ்சள் வெயில் (பதார்த்த.1297); yellow glow of the evening sun.

*[மாலை + வெயில்]*

**மாலைவெள்ளி** *mālai-veḷḷi,* பெ.(n.) அந்தியிற் றோன்றும் (சுக்கிரன்) வெள்ளி விண்மீன் (வின்.); venus, when it appears as the evening star.

*[மாலை + வெள்ளி]*

**மாலோன்** *mālōṉ,* பெ.(n.) 1. திருமால் (சூடா.); *visṇu. "அப்புரவலனு மாலோனெனி லவளுந் திருவாமெனில்" (தஞ்சைவா.366).* 2. இந்திரன் (சங்.அக.); *Indiraṉ.* 3. அறிவன் கோள் (சங்.அக.); the planet mercury.

*[மால் →மாலோன்]*

**மாவகம்** *māvagam,* பெ.(n.) 1. இலுப்பை; a long leaved bassia. 2. சுராலை (சாம்பிராணி); frakincense. 3. காஞ்சிரை; a tree yielding a very poisonous nut nuxvomica (சா.அக.).

**மாவச்சிரம்** *māva-c-ciram,* பெ.(n.) குங்கும மரம்; *european saffron.*

**மாவட்டஆட்சியர்** *māvaṭṭa-āṭciyar,* பெ.(n.) ஒரு மாவட்டத்தில் வரி தண்டுதல், ஆளுமை, சட்டம், ஒழுங்கு முதலியவற்றுக்கான முதன்மைப் பொறுப்பில் உள்ள உயர் அரசு அதிகாரி; highest official in the district for revenue collection law and order, development programmes, etc. district collector.

*[மாவட்டம் + ஆட்சியர்]*

**மாவட்டணம்** *māvaṭṭaṇam,* பெ.(n.) நெடும் பரிசை, பரிசுக்கேடயம் (பிங்.); long shield.

**மாவட்டம்**[1] *māvaṭṭam,* பெ.(n.) பெரு வட்டம்; long circle.

*[மா= பெரிய. மா + வட்டம்]*

**மாவட்டம்**[2] *māvaṭṭam,* பெ.(n.) ஆளுகைக் கெளிதாயிருக்கும் பொருட்டு மாநிலத்தின் பரப்பில் ஏற்படுத்திக் கொள்ளும் பிரிவு; district.

**மாவட்டை** *māvaḍai,* பெ.(n.) செவ்வட்டை (சங்.அக.); a species of leech.

*[மா + அட்டை]*

**மாவடம்** *māvaḍam,* பெ.(n.) மாம்பலகை (இ.வ.); mango plank.

*[மா + வடம்.]*

**மாவடி** *māvaḍi,* பெ.(n.) 1. மாவடு பார்க்க; see *māvaḍu.* 2. மாம்போழ் பார்க்க; see *mām-pōḻ. "மாவடி மடக்கண் மாதர்" (பெருங். மகத.25, 149).*

மாவடு *māvaḍu*, பெ.(n.) மாவின் பிஞ்சு; tender, unripe mango. *"மாவடு வகிரன்ன கண்ணி" (திருவாச.24, 8).*

*[மா + வடு.]*

மாவடை *māvaḍai*, பெ.(n.) 1. நிலத்திலடங்கிய விலங்குகள்; game found on the land conveyed, a term used in conveyancing. *"மாவடை மரவடை" (உ.வ.).* 2. சிற்றூரில் கால்நடை அடையும் இடம்; pen for village cattle (R.F.).

*[மா + அடை. மா = விலங்கு.]*

மாவடைகடமை *māvaḍai-kaḍamai*, பெ.(n.) கிராமத்தில் கால்நடைகள் அடையும் பொதுவிடத்திற்கான வரி; tax for cattle stall.

*[மா + அடை + கடமை]*

மாவடைமரவடை *māvaḍai-maravaḍai*, பெ.(n.) ஆவணங்களில் நிலத்திலடங்கிய விலங்கு மரங்களைக் குறிக்க வழங்கும் மரபுத் தொடர் (கோயிலொ.64); an expression used, in conveyancing to denote game and trees on the land conveyed.

*[மாவடை+ மரவடை]*

மாவண்டூர்சிங்கன் *māvaṇḍūr-šiṅgaṉ*, பெ.(n.) கம்பருக்கு எழுத்தாணி செய்து கொடுத்த கம்மியர்; a blacksmith who made a stylus for kambar.

*[மாவண்டூர் - ஊர்ப்பெயர்; சிங்கன் - ஆள்பெயர்]*

ஆழியான் ஆழி ஆயனெழுத் தாணி யென்பான்.
கோழியான் குன்றெறிய வேலென்பான் -
பூழியான். அங்கை மழுவென்பான் அருள் பெரிய
மாவண்டூர்ச் சிங்கன் உலைக்களத்திற் சென்று.

மாவணங்கி *māvaṇaṅgi*, பெ.(n.) குங்குமப்பூ; *crocus sativus* (சா.அக.).

மாவதம் *māvadam*, பெ.(n.) கரிசுகள் யாவும் விலகக் கைக்கொள்ளும் சூளி (அருங்கலச். 87); vow to abstain from all sins.

மாவதை *māvadai*, பெ.(n.) தேனற்ற தேன் கூடு (யாழ்.அக.); empty honey - comb.

மாவயிரக்கல் *māvayira-k-kal*, பெ.(n.) நிலத்தினடியில் அகப்படுங் மாழைப் பொருள் வகை; felspar (M.M.159).

மாவரி *māvari*, பெ.(n.) சல்லடை (யாழ்ப்.); sieve.

மாவலன் *māvalaṉ*, பெ.(n.) மாவலான் (சூடா.) பார்க்க; see *māvalāṉ*.

மாவலா *māvalā*, பெ.(n.) கடல் மீன் வகை; a kind of sea fish.



மாவலான் *māvalāṉ*, பெ.(n.) 1. குதிரை யேற்றத்தில் வல்லவன்; one skilled in horsemanship. *"கைக்கொண்டான் மாவலான்" (பு.வெ.6, 24).* 2. குதிரைப் பாகன்;

groom. 3. யானைப் பாகன் (நிகண்டு); mahout.

*[மா + வலான். மா = விலங்கின் பொதுப் பெயர், குதிரை. வல்லவன் → வலான்]*

மாவலி *māvali*, பெ.(n.) 1. திருமாலால் ஒடுக்கப்பட்ட ஓர் அசுரன்; an asuran subdued by *Tirumāl*. *"மூரிவார் சிலை மாவலி" (மணிமே.19 : 54).* 2. தீப்பொறி சிதறும் கார்த்திகை வாண வகை (இ.வ.); a kind of home made fireworks, encased in cloth and throwing out sparks.

மாவலிக்கிழங்கு *māvali-k-kiḻaṅgu*, பெ.(n.) மாகாளிக்கிழங்கு (பதார்த்த.428) பார்க்க; see *māgāḷi-k-kiḻaṅgu.*

மாவலிகங்கை *māvali-gaṅgai*, பெ.(n.) ஈழத்திலுள்ள பேராறு (திருவாலவா.25, 12); a large river in Çeylon.

மாவலிபுரம் *māvalipuram*, பெ.(n.) மாமல்லபுரம் பார்க்க; see *māmallapuram.*

மாவலிவாணன் *māvali-vāṇaṉ*, பெ.(n.) 1. மாவலியின் மரபினராய்க் கருதப்படும் தமிழ்நாட்டுச் சிற்றரசு பரம்பரை; a dynasty of ruling chiefs in Tamil country, said to be the descendants of *māvali*. *"வையமொரு கோலாற் புரந்தருண் மாவலி வாணன்" (S.I.I.iv.98).* 2. பெருந் தீனிக்காரன் (நாஞ்.); glutton. *"அவன் மாவலி வாணன் அப்பம் ஆயிரமானாலும் ஒரு நொடியில் தீர்த்துவிடுவான்" (நாஞ்.).*

மாவளத்தான் *māvaḷattāṉ*, பெ.(n.) சோழன் நலங்கிள்ளியின் தம்பி; younger brother of *Cōḻaṉ Nalaṅgiḷḷi*. *"சோழன் நலங்கிள்ளி தம்பி மாவலித்தாறும் தாமப்பல் கண்ணனும் வட்டுப் பொருவுழி" (புறநா.43).*

மாவளவன் *māvaḷavaṉ*, பெ.(n.) மருத்துவர் தாமோதரனாரால் பாடப் பெற்ற சோழ மன்னன் (சி.பெ.அக.); a *Cōḷa* king praised by the poet *Maruttuvaṉ Dāmodaranār.*

மாவாகம் *māvāgam*, பெ.(n.) மாவகம், 3 பார்க்க; see *māvagam.*

மாவாட்டு[1]-தல் *māvāṭṭu-*, 5 செ.கு.வி.(v.i.) மாவாக ஆகும்படி அரைத்தல்; grind to paste.

*[மா + ஆட்டு-, மா = மாவு.]*

மாவாட்டு[2]-தல் *māvāṭṭu-*, 5 செ.கு.வி.(v.i.) செய்த செயலையே திரும்பத் திரும்பச் செய்து காலம் போக்குதல்; repeat the same action to delay the things.

*[மாவு + ஆட்டு-.]*

மாவாட்டுதலைப் போலச் செய்ததையே திரும்ப திரும்பச் செய்தல்.

மாவிசாலி *māvi-šāli*, பெ.(n.) பாசிப்பயறு; a variety of green gram (சா.அக.).

மாவிஞ்சி *mā-v-iñji*, பெ.(n.) மாங்காயைப் போல் மணமுடைய ஒரு வகை இஞ்சி; ginger smelling like mango, mango - ginger.

*[மா + இஞ்சி]*

மாவிட்டம் *māviṭṭam*, பெ.(n.) கடனுரை (சங்.அக.); cuttle - bone.

மாவிடக்கட்டி *māviḍa-k-kaṭṭi*, பெ.(n.) காட்டு மருக்கொழுந்து; wild variety of maid's loue (சா.அக.).

மாவிடை[1] *māviḍai,* பெ.(n.) மாவடை பார்க்க; see *māvaḍai.*

மாவிடை[2] *māviḍai,* பெ.(n.) மரச்செறிவு; grove.

மாவிடைமரவிடை *māviḍai-maraviḍai,* பெ.(n.) மாவடைமரவடை பார்க்க; see *māvaḍai-maravaḍai*(w.G.).

*[மாவடைமரவடை → மாவிடைமரவிடை]*

மாவிதை *māvidai,* பெ.(n.) மாம் பருப்பு; seed or kernel of mango fruit which can used as astringent.

*[மா + விதை. மா = மாமரம்]*

மாவிப்பட்டை *māvi-p-paṭṭai,* பெ.(n.) மாவிலிங்கமரப் பட்டை (சங்.அக.); bark of *liṅgam* tree.

மாவியம் *māviyam,* பெ.(n.) பற்பம்; calcined medicinal powder (சா.அக.).

மாவிரதம் *māviradam,* பெ.(n.) 1. சிவனிய மதத்தின் உட்பிரிவு (பிங்.); a sect of saivaism. *"வந்தணைந்த மாவிரத முனிவரைக் கண்டு" (பெரியபு.மானக்கஞ். 26).* 2. மாவதம் பார்க்க; see *mā-vadam.*

மாவிருக்கம் *māvirukkam,* பெ.(n.) சதுரக் கள்ளி (மலை.); squar spurge.

மாவிலங்கு[1] *māvilaṅgu,* பெ.(n.) ஒரு வகை மரம்; a kind of tree.

இதன் பட்டை, வேர் ஆகிய பகுதிகள் மருத்துவக் குணமுடையது.

மாவிலங்கு[2] *māvilaṅgu,* பெ.(n.) மாவிலிங்கம் (நாமதீப.327) பார்க்க; see *mā-v-iliṅgam.*

மாவிலங்கை *māvilaṅgai,* பெ.(n.) அருவா நாடும், அருவா வடதலைநாடும் சேரும் இடத்தில் இருந்த ஒய்மாநாட்டு நல்லியக் கோடன் ஊர்; place of *Oymānāṭṭu Nalliyakkōḍaṉ,* located between *Aruvā Nadu* & *Aruvā vadatalai nāḍu. "பொருபுனல் தரூஉம் போக்கருமரபின் தொன்மாவிலங்கைக் கருவொடு பெயரிய நன்மா விலங்கை மன்னருள்ளும்" (சிறுபா. 120).*

மாவிலங்கை[2] *māvilaṅgai,* பெ.(n.) மாவிலங்கம்[2] (சங்.அக.) பார்க்க; see *māvilaṅgam.*

மாவிலந்தம் *māvilandam,* பெ.(n.) விடத்தேர் (மலை.); a thorny tree.

மாவிலி *māvili,* பெ.(n.) மாவுலிங்கம்; a tree-*Crataevanutvala.*

மாவிலிங்கப்பட்டை *māviliṅga-p-paṭṭai,* பெ.(n.) அரைத்து மோரில், கலந்து குடித்தால் மேகம், கல்லடைப்பு போன்ற நோய்களை நீக்கும் தன்மையுடைய மரப்பட்டை; bark of the tapia it taken with butter milk stone in the bladder, megam will disappear (சா.அக.).

*[மாவிலிங்கம் + பட்டை.]*

மாவிலிங்கம் *māviliṅgam,* பெ.(n.) 1. மர வகை; round - *berried cuspidate*-leaved lingam tree. 2. பெரியமாவிலங்கம் பார்க்க; see *periya-māvilaṅgam.* 3. மகாலிங்கம் பார்க்க; see *magāliṅgam.*

மாவிலிங்கு *māviliṅgu,* பெ.(n.) மாவி லிகங்கம் பார்க்க; see *māviliṅgam.*

மாவிலிங்கை *māviliṅgai,* பெ.(n.) மாவி லிங்கம்[2] பார்க்க; see *māviliṅgam.*

மாவிலுப்பைத்தோணி *māviluppai-t-tōṇi,* பெ.(n.) இலுப்பை மரத்தில் செய்யப்பட்ட பெருந்தோணி; a boat made up of illuppai tree.

*[மா + இலுப்பை + தோணி.]*

மாவிலைத்தண்டு *māvilai-t-taṇḍu,* பெ.(n.) வாசல் நிலைக்கால் சட்டத்தில் மாவிலைத் தண்டு போன்று செதுக்கப்படும் ஓவியம்; a sculpture of mango leaves engrave in door-frame entrance.

*[மா + இலை + தண்டு.]*

மாவிலைத்தோரணம் *māvilai-t-tōraṇam,* பெ.(n.) மங்கலமாக வீடு முதலியவற்றின் முகப்பில் மாவிலையாற் கட்டுந்தோரணம் (இ.வ.); festoon of mango leaves hung over the door of a house, temple etc., as a sign of auspiciousness.

*[மா = மாமரம் . மா + இலை = மாவிலை. மாவிலை + தோரணம்.]*



மாவிளக்கு *māviḷakku,* பெ.(n.) திருக் கோயில் முன்பு சருக்கரை சேர்த்துப் பிசைந்த மாவில் அகல் போலும் குழி செய்து அதில் நெய்யூற்றிப் பஞ்சுத் திரியிட்டு ஏற்றுந் திருவிளக்கு (இ.வ.); flour, light lamp made of sugared dough with cotten wick, fed with ghee and placed in the presence of a deity.

*[மா + விளக்கு. மா = மாவு.]*

மாவிளக்குமா *māviḷakkumā,* பெ.(n.) மாவிளக்கேற்ற உதவும் மாவகை (இ.வ.); dough used for *mā-viḷakku.*

*[மாவிளக்கு + மா. மா = மாவு.]*

மாவிளம் *māviḷam,* பெ.(n.) 1. வில்வம் (பிங்.); bael tree-*Aegle marmelos.* 2. மாம்பருப்பு; kernel or seed of mango fruit.

மாவிறை *māviṟai,* பெ.(n.) ஊர்களிலும் நெடுஞ்சாலைளிலும் அரசு அமைக்கும் குதிரை கொட்டடி போன்ற கட்டுத்தறிகட்கு அரசு பெறும் வரி; tax on cattle stall, horse-stable on highways and villages.

*[மா = விலங்கு, குதிரை.]*

மாவீதல் *mā-vīdal,* பெ.(n.) நிலம் பங்கிடுகை (இ.வ.); apportionment of land.

*[மா + ஈதல். மா = நிலம்.]*

மாவீர்க்கு *māvīrkku,* பெ.(n.) மாவிலையின் நடுத்தண்டு; the mid rib mango leaf.

*[மா + ஈர்க்கு.]*

மாவீரன்[1] *māvīraṉ,* பெ.(n.) பெருவீரன்; great warrior.

*[மா + வீரன்.]*

மாவீரன்[2] *māvīraṉ,* பெ.(n.) சிவன்; *Śivaṉ.*

மாவு[1] *māvu,* பெ.(n.) 1. அரிசி முதலியவற்றின் அரைத்த தூள்; flour, meal, powder. 2. மேற்படியும் நுண்தூசி, துகள்; dust.

மாவு[2] *māvu,*பெ.(n.) மா[6] பார்க்க; see *mā[6].*

மாவுக்கல் *māvu-k-kal,*பெ.(n.) ஒருவகை மென்மையானக் கல்; soft stone used for making vessels etc.

*[மாவு + கல்.]*

மாவுக்காய் *māvu-k-kāy,*பெ.(n.) மாவகம், 3 பார்க்க (இ.வ.); see *māvagam.*

மாவுச்சத்து *māvu-c-cattu,*பெ.(n.) அரிசி, கோதுமை, சோளம், உருளைக் கிழங்கு முதலியவற்றில் உள்ளதும் உடல் உழைப்புக்குத் தேவையான ஊட்டத்தைத் தருவதுமான மாவூட்டப் பொருள்; carbohydrate, starch.

*[மாவு + சத்து.]*

மாவுச்சுக்கு *māvu-c-cukku,* பெ.(n.) மாவைப்போல் மெல்லிய ஒரு வகைச் சுக்கு; dry ginger which has not much of fibre (சா.அக.).

*[மாவு + சுக்கு.]*

மாவுப்பு *māvuppu,*பெ.(n.) தலைமுடியுப்பு; a kind of salt extracted from the human skull (சா.அக.).

மாவுரம் *māvuram,*பெ.(n.) வலிமை; strength.

*[மா + உரம்.]*

மாவுலாச்சி *māvulācci,* பெ.(n.) மாவுளாச்சி (இ.வ.) பார்க்க; see *māvuḷācci.*

மாவுலாசி *māvu-lāśi,*பெ.(n.) மாவுளாச்சி (இ.வ.) பார்க்க; see *māvuḷācci.*

மாவுளாச்சி *māvuḷācci,*பெ.(n.) நீலநிற முடையதும் 4 அடி நீளம் வளர்வதுமான கடல் மீன் வகை; a sea fish bluish, attaining 4 ft. in length.



மாவெனல் *māvenal,*பெ.(n.) அழைத்தற் குறிப்பு (பிங்.); onom. expr. signifying calling.

*[மா + எனல்.]*

மாழ்கி *māḻgi,*பெ.(n.) தொட்டாற் சுருங்கி எனுஞ்செடி; a sensitive plant. *"யாதினு மாழ்குமம் மாழ்கியும்" (நீலகேசி, 365).*

மாழ்கு[1]-தல் *māḻgu-,*7 செ.கு.வி.(v.i.) 1. மயங்குதல்; to be bewildered, to be fascinated. *"குழறி மாழ்கி" (கம்பரா. மாரீசன்வதை.237).* 2. கெடுதல்; to be spoiled or lost. *"ஒஒதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை" (குறள், 653).* 3. சோம்புதல் (திவா.); to grow lazy. 4. கலத்தல் (வின்.); to mingle, to hold, intercourse. 5. மூழ்குதல், மாய்தல்; to be engrossed.

க. மாழ்கு.

*[முல் (பொருந்தற் கருத்துவேர்)→முள்→மள் → மள்கு→மள்குதல் = ஒளி குறைதல். மள்கு → மாள்கு→மாழ்கு (வே.க.4:60).]*

மாழ்கு² *mālgu*,பெ.(n.) சுருள்; curl. *"அட்டை முதலாயினவும் மாழ்கு நீங்கினாற் காரணமின்றி முன்பு போலேயாம்" (நீலகேசி, 365, உரை).*

மாழ்கு³ *mālgu*,பெ.(n.) ஐந்தாம் நாண்மீன் (பிங்.); the fifth naksatra.

மாழா-த்தல் *mālā-*, 4 செ.கு.வி.(v.i.) 1. மயங்குதல்; to be fascinated, to be confused, be wildered. *"மனங்கவில் பின்றி மாழாந் தெழுந்து" (பொருந.91).* 2. ஒளி மங்குதல்; to fade, to become dim. *"நாண்மதியே... மாழாந்து தேம்புதியால்" (திவ்.திருவாய்.2, 1, 6).*

*[மாழ்கு →மாழா-, (வே.க.4:60)]*

மாழாம்பலம் *mālāmbalam*,பெ.(n.) தூக்கம் (அக.நி.); sleep.

*[மாழா →மாழாம்பலம் (வே.க.4:61).]*

மாழை¹ *mālai*,பெ.(n.) 1. இளமை; youth. *"மாழை மடமான் பிணையியல் வென்றாய்" (கலித்.131).* 2. அழகு; beauty. *"மாழை நோக்கொன்றும் வாட்டேன்மினே" (திவ். திருவாய். 2, 4, 10).* 3. பேதைமை; innocence, ignorance. *"மாழை மென்னோக்கி" (திருக்கோ.61).* 4. மாமரம் (பிங்.); mango. *"மாழை யிளந்தளிரே" (கம்பரா. வரைக்காட்சி. 55).* 5. மாவடு; green tender mango fruit. *"மாழை யொண்கண் பரவை" (தேவா.740, 10).* 6. புளிமா (பிங்.); Indian hog plum. 7. மகளிர்க்கூட்டம் (அக.நி.); assembly of women. 8. ஓலை (பிங்.); palm leaf.

*[முள்→மள்→மள்ளன் = இளைஞன். மள்→மள →மழ - இளமை (வே.க.4-5) மழ (மாழ)→மாழை.]*

மாழை² *mālai*,பெ.(n.) 1. மாழை (உலோக)க் கட்டி (பிங்.); lump of metal. *"கனகமாழையால்" (சீவக.913).* 2. பொன் (பிங்.); gold. *"உருகி மாழையும் வெள்ளியும்" (தணிகைப்பு. சீரி.374).* 3. திரட்சி (பிங்.); roundness.

*[முல் (பொருந்தற் கருத்துவேர்) →மல். மல் = பருமை, வளம், வலிமை, மற்போர், மல்லன். பல அணுக்கள் அல்லது உறுப்புகள் அல்லது பொருள்கள் பொருந்துவதால் (ஒன்று சேர்வதால்) திரட்சி அல்லது பருமை உண்டாகும். ஒ.நோ.சேரே திரட்சி (தொல்.25-65) மிகுதியால் வளமும் பருமையால் வலிமையும் உண்டாகும். இருவர் அல்லது இருபடைகள் பொருந்தி அல்லது கூடிப் பொருவதே போர். மல்→மால் = பெருமை, பெருமையுடையவர், வளமை, மலை. மால் →மாள்→மாழை (வே.க.4:31).*

மாள்(ளு)-தல் *māl-*,16 செ.கு.வி.(v.i.) 1. சாதல்; to die. *"வஞ்சமுண்மையேன் மாண்டிலேன்" (திருவாச.5, 93).* 2. அழிதல்; to perish. *"அனுபவித்தாலும் மாளாதபடியான பாபங்கள்" (ஈடு.4:7, 3).* 3. கழிதல்; to be exhausted, expended or finished. *"மாளாவின்ப வெள்ளம்" (திவ்.திருவாய்.4, 7, 2).* 4. இயலுதல்; to be within one's ability. *"அது செய்ய மாளாது" (உ.வ.).*

க. மாள்; ம. மாள்குக.

*[முல் (பொருந்தற் கருத்துவேர்)→முள்→மள் →மள்கு→மட்கு. மட்குதல் = மயங்குதல், ஒளி மயங்குதல், அழுக்கடைதல், வலி குன்றுதல். மள்கு→ மாள்கு→மாழ்கு = கலத்தல், மயங்குதல், சோம்புதல், மங்குதல், கெடுதல். மாள்கு→மாள் (வே.க.4:61).]*

**மாள** *māḷa,* இடை.(part.) ஒரு முன்னிலையசை (தொல்.சொல்.298, உரை); an expletive used with verbs in second person.

**மாளசப்பிளவை** *māḷaša-p-piḷavai,* பெ.(n.) ஆறாத பிளவை; conhealing (சா.அக.).

**மாளவம்** *māḷavam,* பெ.(n.) பண்டிருந்த ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று; the country of *Malwa* one of 56, (q.v). *"வான் குளம்புடையன மாளவத் தகத்த" (சீவக.2159).*

**மாளவி** *māḷavi,* பெ.(n.) ஒரு பண் (பரத. இராக.56); a specific melody - type.

**மாளிகை**[1] *māḷigai,* பெ.(n.) மாடி வீட்டின் மேல் நிலம் (திவ்.பெரியாழ்.2, 7, 3, வ்யா, பக்.393); top floor of a storied building.

*[மால்→மாள்→மாளிகை.]*

**மாளிகை**[2] *māḷigai,* பெ.(n.) 1. அரண்மனை (பிங்.); palace. 2. கோயில்; temple. *"உத்தரகோசமங்கை... மாளிகை பாடி" (திருவாச.16, 3).* 3. மாடமுள்ள பெருவீடு (பிங்.); mansion. *"மறையவர்க்கு மாளிகைகள் பல சமைத்தார்" (பெரியபு.கோச்செங்.16).* 4. வீடு (உரி.நி.); house.

*[முல் (பொருந்தற் கருத்துவேர்)→மல்→மால் = பெருமை, பெருமையுடையவன், வளமை, மலை. மாலுதல் = மாட்சிப்படுதல். மால் →மாள்→மாளிகை (வே.க.4:30). வ. மாளிகா. வடவர் மாலிமா என்னுஞ் சொல்லை மாலா என்பதனொடு தொடர்புபடுத்தி மேன்மாடியுள்ள வீடு என்று பொருளுரைப்பர். மலரடுக்குப் போன்ற மாடியடுக்கு என்பது அவர் கருத்துப் போலும். "a white washed upper, storied house" என்னும் பொருளை மோனியர் வில்லியம்சு அகரமுதலி எங்ஙனம் பெற்றதோ அறிகிலம் (வ.வ.64).]*

**மாளிகைக்கோல்** *māḷigai-k-kōl,* பெ.(n.) நீட்டலளவைக் கருவி வகை; (L.M.P. Tp.726); a measuring rod.

*[மாளிகை + கோல்.]*

**மாளிகைச்சாந்து** *māḷigai-c-cāndu,* பெ.(n.) உயர்ந்த கலவைச் சந்தனம்; scented sandal paste of superior quality. *"இவள் ஆதரித்துச் சாத்தின மாளிகைச் சாந்தை" (திவ்.திருப்பல்.8, வியா.).*

*[மாளிகை + சாந்து (வே.க.4:30).]*

**மாளிகைநாயகம்** *māḷigai-nāyagam,* பெ.(n.) அரண்மனை முறைமை (விசாரணை) மண்டபம் (S.I.I.iv, 336); the office of a seneschal or chamberlain.

*[மாளிகை + நாயகம்.]*

**மாளிகைவாழ்பவன்** *māḷigai-vāḻbavaṉ,* பெ.(n.) ஊர்க்குருவி; sparrow bird (சா.அக.).



**மாளிமந்தம்** *māḷi-mandam,* பெ.(n.) இந்துப்பு (சங்.அக.); rock salt.

மாளுவம் *māḷuvam,* பெ.(n.) மாளவம் பார்க்க; see *māḷuvam. "குடகக் கொங்கரு மாளுவ வேந்தரும்" (சிலப்.30: 159).*

*[மாளவம் → மாளுவம்.]*

மாளுளுவை *māḷuḷuvai,*பெ.(n.) கடல் மீன் வகை; a kind of sea fish.



மாளை *māḷai,*பெ.(n.) புளியம் பட்டை (சங்.அக.); bark of tamarind tree.

மாற்கடலன் *māṟ-kaḍalaṉ,*பெ.(n.) போரில் உயிர் நீத்த ஒரு வீரன்; name of a hero, who lost his life in a battle. *"வாணகோ முத்தரைசரு நாடு பாவிய மேற்கோவலூர் மேல் வந்து தஞ்சிற்றப் படிகளை எறிந்த ஞான்று பட்டான் சேவர்பரி அட்டுங் கொள்ளி துருமாவனார் மகன் மாற்கடலன்" (த.நா.தொ.1971/69).*

*[மால் + கடல் + அன்.]*

மாற்கண்டன் *māṟ-kaṇḍaṉ,*பெ.(n.) மார்க் கண்டன் பார்க்க; see *mār-k-kaṇḍaṉ. "மாற்கண்டன் கண்ட வகையே வரும்" (திவ்.இயற்.நான்மு.15).*

மாற்சாலம் *māṟ-šālam,*பெ.(n.) 1. கோமேதகம்; one of the nine gems. 2. பூனை; cat (சா.அக.).

மாற்சாலமோகினி *māṟ-šāla-mōgiṉi,* பெ.(n.) குப்பைமேனி; a plant (சா.அக.).

மாற்பித்தியார் *māṟ-pittiyār,* பெ.(n.) புறநா.251, 252 ஆகிய பாடல்களைப் பாடிய கழகக் காலப் புலவர்; sangam age poet with verses 251, 252 of Purananuru to his credit.

மாற்பேறு *māṟ-pēṟu,*பெ.(n.) வேலூர் மாவட்டத்தில் திருமால்பூர் என்று வழங்கும் ஊரின் முன்னைப் பெயர்; a town in velur Dt. with the present name *Tirumālpur. "செப்பரிய புகழ் பாலித் திருநதியின் தென்கரைபோய் மைப்பொலியும் கண்டர் திருமாற்பேறு மகிழ்ந்து இறைஞ்சி" (பெரியபு.34–1002). "மருவு கங்கை வாழ் சடையவர் மகிழ்ந்த மாற்பேறு" (பெரியபு.25–31–3–4).*

*[மால் + பேறு.]*

மாற்ற *māṟṟa,*இடை.(part.) ஒருவமைச் சொல் (தொல்.பொருள்.286); a term of comparison.

மாற்றம் *māṟṟam,*பெ.(n.) 1. மாறுபட்ட நிலை; diversity. *"மாற்றமாம் வையகத்தின்" (திருவாச.1, 81).* 2. வஞ்சின மொழி; word of challenge, vow. *"மாற்ற மாறான் மறவிய சினத்தன்" (புறநா.341).* 3. பகை; hatred, enmity. *"மாறுகொளுழுவையு மாற்றந் தீர்ந்தவே" (நைடத. கான்புகு.3).* 4. கடிவு (பரிகாரம்) (வின்.); remedy. 5. மாறி சொல்லும் விடை; answer. *"மாறுதலைக் கடாஅ மாற்றமும்" (தொல்.பொருள். 659).* 6. சொல்; word. *"விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான்" (குறள், 689).* 7. பேச்சு; speech. *"மாற்ற முரைக்கும் வினைநலம்" (நான்மணி.*

*45).* 8. தருக்கம்; logic, debate. *"மன்பெரியான் றிருந்தவையுண் மாற்றந் தாவெனச் சொன்னாள்" (நீலகேசி, 169).*

தெ. மாட; க. மாடு; ம. மாட்டம்.

*[முள் (வளைதற் கருத்துவேர்) →முர்→ முரு→முரி. முரிதல் = வளைதல், வளைந்து ஒடிதல். முரு →முறு→முறுகு→முறுகுதல் = திருகுதல், விரைதல், முறு →மறு→மாறு. மாறுதல் = வேறுபடுதல், பின்வாங்குதல், குறைதல். மாறு→மாற்று = வேறுபடுத்துகை, ஒழிக்கை மாற்று மருந்து, பண்டமாற்று, விலை, மாற்றுடை, பொன்வெள்ளி உரைமாற்று, மாற்று நிறம், எதிர், ஒப்புமை, வலிமை, ஒரேர்மாடு ஒரு நாளில் உழக்கூடிய நிலம். மாற்று→மாற்றம் (வே.க.4:79).]*

**மாற்றமிலி** *māṟṟa-mili,* பெ.(n.) வாய் வாளாயிருப்போன், பேசாதிருப்போன்; silent ascetic.

*[மாற்றம் + இலி. மாற்றம் = சொல்.]*

**மாற்றரசன்** *māṟṟarašaṉ,* பெ.(n.) பகை வேந்தன்; hostile king. *"மாற்றரசர் மணிமுடியும்" (திவ்.பெரியதி.4, 4, 1).*

*[மாற்று + அரசன். மாற்று = பகை.]*

**மாற்றல்**[1] *māṟṟal,* பெ.(n.) ஒரு பணியிடத்தி லிருந்து மற்றொரு பணியிடத்திற்கு அல்லது ஓர் அலுவலகத்தில் இருந்து மற்றொரு அலுவலகத்திற்குச் செல்லுதல்; transfer.

*[மாற்று → மாற்றல்.]*

**மாற்றல்**[2] *māṟṟal,* பெ.(n.) கொடாமை (பிங்.); refusing to give.

**மாற்றலர்** *māṟṟalar,* பெ.(n.) பகைவர்; enemies, foes. *"முனைமுகத்து மாற்றலர் சாய" (குறள், 749).*

*[மாற்று = பகை. மாற்று →மாற்றலர்.]*

**மாற்றவள்** *māṟṟavaḷ,* பெ.(n.) மாற்றாள் பார்க்க; see *māṟṟāḷ. "மாற்றவளைக் கண்டக்கா லழலாதோ மனமென்றாள்" (கம்பரா.சூர்ப்ப.122).*

*[மாற்றாள்→மாற்றவள்.]*

**மாற்றவன்**[1] *māṟṟavaṉ,* பெ.(n.) உடன் கிழவன் (யாழ்.அக.); rival lover.

*[மாற்று→மாற்றவன்.]*

**மாற்றவன்**[2] *māṟṟavaṉ,* பெ.(n.) மாற்றான், 1 பார்க்க; see *māṟṟāṉ. "மாற்றவற் காகிவந்து" (கம்பரா.வாலிவ.19).*

*[மாற்றான் →மாற்றவன்.]*

**மாற்றற்சுரம்** *māṟṟaṟ-šuram,* பெ.(n.) முறை சுரம்; intermittent fever.

*[மாற்று →மாற்றல் + சுரம்.]*

**மாற்றாஞ்சகோதரன்** *māṟṟāñ-šagōdaraṉ,* பெ.(n.) மாற்றாந்தாய்மகன் (இ.வ.); step brother, step mother's son.

**மாற்றாட்டி** *māṟṟāṭṭi,* பெ.(n.) மாற்றாள் பார்க்க; see *māṟṟāḷ. "அந்த மாற்றாட்டிக் கன்பாய்" (உத்தரரா.இலவண.4).*

*[மாற்றாள் →மாற்றாட்டி.]*

**மாற்றாடிச்சி** *māṟṟāḍicci,* பெ.(n.) மாற்றாள் (யாழ்.அக.) பார்க்க; see *māṟṟāḷ.*

**மாற்றாண்மை** *māṟṟāṇmai,* பெ.(n.) பகைமை; enmity, hatred. *"மாற்றாண்மை நிற்றியோ வாழி கனையிருளே" (திவ். திருவாய்.2, 1, 7).*

*[மாறு→மாற்று→மாற்றாண்மை.]*

மாற்றாந்தகப்பன் *mārrān-tagappan,* பெ.(n.) தன் தந்தைக்குப் பின் தாயை மறுமணஞ் செய்து கொண்டதால் தகப்பனாகக் கருதப்படுபவன்; step father.

*[மாறு→மாற்று→மாற்றாம் + தகப்பன்.]*

மாற்றாந்தாய் *mārrāntāy,* பெ.(n.) தன் தந்தையின் மறுதாரம் (கொ.வ.); step mother.

*[மாறு→மாற்று→மாற்றாம் + தாய்.]*

மாற்றாந்தாய்மனப்பான்மை *mārrāntāy-mana-p-pānmai,* பெ.(n.) சமமாகக் கருதி நடத்தப்பட வேண்டியவர்களில் தான் விரும்பியவருக்கு மட்டும் எல்லாச் சலுகையும் அளித்து விரும்பாதவரை முற்றாக ஒதுக்கும் போக்கு, ஒருதலையான நடத்தை; stepmotherly attitude, partiality.

*[மாற்றாந்தாய் + மனப்பான்மை.]*

மாற்றாள்[1] *mārrāl,* பெ.(n.) உடன்கிழத்தி; co-wife, rival wife. *"மாலதி மாற்றாண் மகவுக்குப் பாலளிக்க" (சிலப்.9:5).*

*[மாற்று→மாற்றாள்.]*

மாற்றாள்[2] *mārrāl,* பெ.(n.) 1. ஒரு ஆளுக்கு மாற்றாக நிறுத்தப்படும் ஆள்; install another man as spare. 2. சுழற்சி முறைப் பணியில் ஒருவரை விடுவிக்க வரும் அடுத்த ஆள்; reliever.

*[மாற்று + ஆள்.]*

மாற்றான் *mārrān,* பெ.(n.) 1. பகைவன்; enemy. *"தன்வலியு மாற்றான் வலியும்" (குறள், 471). "மாற்றானுக்கு இடம் கொடேல்" (நீதிநூல். ஆத்திச்சூடி).* 2. ஒட்டுப் பலகை; a piece of wood, joined to a board of insufficient length. 3. மாற்று மருந்து (நாஞ்.); antidote, neutra liusing agent. *"எட்டிக்கு மாற்றான் நவ்வல்". "மாற்றானை உறவென்று நம்ப வேண்டாம்" (உலக நீதி.3).*

*[மாற்று = பகை. மாற்று→மாற்றான்.]*

மாற்றிலக்கம் *mārrilakkam,* பெ.(n.) கணக்கு வகை; logarithm.

*[மாற்று + இலக்கம்.]*

மாற்று[1]–தல் *mārru-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. வேறுபடுத்துதல்; to change, alter. *"பிறப்பு மாற்றினை" (கம்பரா.வீடண.8).* 2. செம்மைப்படுத்துதல் (வின்.); to rectify, convert, cure, set right. 3. நீக்குதல்; to dispel, relieve, remove. *"அப்பசியை மாற்றுவார்" (குறள், 225).* 4. கெடுத்தல் (வின்.); to derange, change or alter for the worse. 5. ஓடச் செய்தல்; to repel, expel. *"வில்லோர் மாற்றி" (ஐங்குறு. 267).* 6. தடுத்தல்; to hinder, prevent. *"மாற்றருங் கூற்றம்" (தொல்.பொருள்.79).* 7. மறுத்துரைத்தல்; to deny, refuse. *"உள்ளதின் றென்று மாற்றலன்" (கம்பரா. பள்ளியடை.113).* 8. அழித்தல்; to destroy, to cancel, repeal. *"புவிபடைத் தளித்து மாற்றி" (கந்தபு.யுத்தகாண்.ஏமகூ.1).* 9. ஒடுக்குதல் (வின்.); to cause involution, reduce the universe to its primitive elements. 10. மறைத்தல்; to conceal, hide. *"பூழிமாலை தள்ளருஞ் சுடர்கண் மாற்றி" (கந்தபு. யுத்தகாண். ஏமகூ.22).* 11. நாணயம் மாற்றுதல்; to change, as money. 12. பண்ட மாற்றுதல்; to exchange, barter, traffic, trade. 13. இருப்பிட வேறுபடுத்துதல்; to shift, to transfer, as from a place. *அவன் வீட்டை மாற்றிவிட்டான் (உ.வ.).*

14. (மாலியம்) ஓரிடத்துச் சமைத்த வுணவை வேற்றிடத்துக்கு அனுப்புதல்; to send food from one place to another (vaisn). 15. பெருக்கிச் சுத்தஞ் செய்தல் (வின்.); to sweap, cleanse, as a house. *"நுண்டுகளோடு சுண்ண மாற்றுதி" (கந்தபு. அரசுசெய்.7).*

*[மாறு→மாற்று (வே.க.4:78).]*

**மாற்று²–தல்** *mārru-,* 5 செ.கு.வி.(v.i.) 1. இடைவிடுதல்; to be interrupted. *"மாற்றாதே பால் சொரியும் வள்ளற் பெரும்பசுக்கள்" (திவ்.திருப்பா.21).* 2. ஒழிதல்; to fail, as rains. *"வறந்தெற மாற்றிய வானமும்" (கலித்.146).* 3. சுணங்குதல் (வின்.); to detain.

*[மாறு →மாற்று–.]*

**மாற்று³** *mārru,*பெ.(n.) 1. வேறுபடுத்துகை; changing. 2. ஒழிக்கை; removal, destruction. *"மாற்றே மாற்றலிலையே" (பரிபா.4, 53).* 3. மாற்றுமருந்து பார்க்க; see *mārru-marundu.* 4. பண்டமாற்று; barter-exchange, sale. 5. விலை (யாழ்.அக.); price. 6. வண்ணான் வெளுத்த உருப்படி (இ.வ.); clothes freshly washed by washerman. 7. சிறப்பு செய் காலங்களில் பந்தல் நடைபாவாடை முதலியவற்றுக்காக ஊரார் பயன்படுத்த வண்ணானாற் கொடுக்கப்படும் துணிகள் (இ.வ.); clothes supplied by washerman to villagers, to be used by them for pandal, etc. on auspicious or inauspicious occasions. 8. மாற்றுப்புடவை (இ.வ.) பார்க்க; see *mārru-p-pudavai.* 9. பொன் வெள்ளிகளின் உரைமாற்று; degree of fineness of gold or silver, as indicated the touchstone. *"மாற்றளவற்ற பொன்னுடுத்தாய்" (அஷ்டப். அழகரந்.2).* 10. தங்கம் (சங்.அக.); gold. 11. ஓரணை மாடு ஒரு நாளில் உழும் நிலம் (வின்.); measure of land as much as a yoke of oxen can plough in a day. 12. எதிர் (யாழ்.அக.); rival. 13. உவமை; similarity, resemblance. *"மாற்றிரி யாடிப் பாவையோடு" (ஞானா.6, 20).* 14. வலிமை; strength, power. *"மாற்றாரை மாற்றழிக்க வல்லானை" (திவ்.திருப்பா.15).* 15. வண்ணம் (ஈடு.4, 3, 7, ஜீ); colour.

*[முல் (வளைந்தற் கருத்து வேர்)→முர்→முரு→முரி. முரிதல் = வளைதல், வளைந்து ஒடிதல். முரு→முறு→முறுகு→முறுகுதல் = திருகுதல், விரைதல் .முறு →மறு→மாறு→மாறுதல் = வேறுபடுதல், பின் வாங்குதல், குறைதல். மாறு→மாற்று (வே.க.4:78).]*

**மாற்றுஒற்றையர்ஆட்டம்** *mārru-orrāiyar-āttam,*பெ.(n.) விளையாட்டுப் போட்டிகளில் ஒருவர் விளையாடிய பின் மீண்டும் மற்றொருவருடன் விளையாடும் போட்டி; reverse singles.

*[மாற்று + ஒற்றையர் + ஆட்டம்.]*

**மாற்றுக்கட்டுச்சாகுபடி** *mārru-k-kattu-c-cāgubadi,*பெ.(n.) ஒரு ஆண்டு விட்டு மறு ஆண்டு வேளாண்மை செய்யும் முறை (இ.வ.); cultivation in alternate years.

*[மாற்று + கட்டு + சாகுபடி.]*

**மாற்றுக்கட்டை** *mārru-k-kattai,*பெ.(n.) 1. பொன் முதலியவற்றின் தாழ்ந்த தரம்; inferiority in quality, as of gold. 2. கெட்ட நடத்தையுடையவ–ன்–ள் (இ.வ.); dissolute man or woman.

*[மாற்று + கட்டை.]*

**மாற்றுக்கதை** *māṟṟu-k-kadai,* பெ.(n.) எதிர் மாறாகச் சொல்லும் விடுகதை (வின்.); conundrum proposed in return.

*[மாற்று + கதை.]*

**மாற்றுக்குறைச்சல்** *māṟṟu-k-kuṟaiccal,* பெ.(n.) மாற்றுக்கட்டை, 1 பார்க்க; see *māṟṟu-k-kaṭṭai. "திருவாங்கோட்டு மின்னல் மாற்றுக் குறைச்சலென்றும்" (பணவிடு.137).*

*[மாற்று + குறைச்சல்.]*

**மாற்றுக்கொடி** *māṟṟu-k-koḍi,* பெ.(n.) மாற்றுக்கதை (வின்.) பார்க்க; see *māṟṟu-k-kadai.*

*[மாற்று + கொடி.]*

**மாற்றுக்கொடு-த்தல்** *māṟṟu-k-koḍu-,* 4 செ.கு.வி.(v.i.) பேற்றுக் காலங்களில் மாற்றுடையாகக் கொடுக்கப்படும் புடவை; to supply a change of clothes, commonly to womens in their confinement, etc.

*[மாற்று + கொடு. மாற்று = உடை.]*

**மாற்றுடை** *māṟṟuḍai,* பெ.(n.) 1. மாற்றி யுடுத்தும் ஆடை (வின்.); change of clothes. 2. விலையுயர்ந்த ஆடை (யாழ்.அக.); costly saree or garment.

*[மாற்று + உடை.]*

**மாற்றுத்தாய்** *māṟṟu-t-tāy,* பெ.(n.) மாற்றாந்தாய் பார்க்க; see *māṟṟān-tāy. "மாற்றுத்தாய் சென்று வனம்போகே யென்றிட" (திவ்.பெரியாழ்.3, 9, 4).*

*[மாற்றாந்தாய் →மாற்றுத்தாய்.]*

**மாற்றுப்புடவை** *māṟṟu-p-puḍavai,* பெ.(n.) மாற்றியுடுத்தும் புடவை; change of saree, spare saree.

*[மாற்று + புடவை.]*

**மாற்றுதவி** *māṟṟu-udavi,* பெ.(n.) கைம்மாறு; help rendered in return.

*[மாற்று + உதவி.]*

**மாற்றுபகாரம்** *māṟṟubakāram,* பெ.(n.) மாற்றுதவி பார்க்க; see *māṟṟu-udavi. "நின்னருள் நிகர்க்கு மாற்றுபகாரம்" (பெருங்.நரவாண.3, 143).*

*[மாற்று + Skt. உபகாரம் > த. உதவி.]*

**மாற்றுமருந்து** *māṟṟu-marundu,* பெ.(n.) கொடிய மருந்து நஞ்சு முதலியவற்றின் தன்மையை நீக்கக் கொடுக்கும் மருந்து (வின்.); antidote; medicine given to nullify the injurious effect of another medicine.

*[மாற்று + மருந்து.]*

**மாற்றுமாலை** *māṟṟu-mālai,* பெ.(n.) மாலை மாற்றில் பயன்படுத்தும் பூமாலை (இ.வ.); garland exchanged between the bridal pair.

*[மாற்று + மாலை.]*

**மாற்றுமை** *māṟṟumai,* பெ.(n.) மாறுபாடு; contrariety, diversity. *"மாற்றுமை கொண்ட வழி" (கலித்.12).*

*[மாற்று →மாற்றுமை.]*

**மாற்றுயர்பொன்** *māṟṟuyar-poṉ,* பெ.(n.) தங்கம்; gold (சா.அக.).

*[மாற்று + உயர்பொன்.]*

**மாற்றுயர்வுவேதை** *mārṟuyarvu-vēdai,* பெ.(n.) பொன்னுக்குப் பழுப்பேற்றி மாற்றுயர்ந்த தங்கம் போலச் செய்யும் மருந்து; a device to increase the degree of fineness in gold (சா.அக.).

*[மாற்றுயர்வு + வேதை.]*

**மாற்றுவேந்தன்** *mārṟu-vēndaṉ,* பெ.(n.) மாற்றரசன் பார்க்க; see *mārṟarašaṉ.* *"மாற்றுவேந்தர் எயிற் புறத்து" (சிலப்.3 : 14, அரும்.உரை).*

*[மாறு→மாற்று + வேந்தன். மாறு = பகை.]*

**மாற்றெண்** *mārṟeṇ,* பெ.(n.) மாற்றிலக்கம் பார்க்க; see *mārṟilakkiyam.*

*[மாற்று + எண்.]*

**மாற்றேர்** *mārṟēr,* பெ.(n.) தனக்குப் பிறனொருவன் விட்ட ஏருக்குப் பதிலாக விடும் ஏர்; plough lent to a person in return for a loan of his plough.

*[மாற்று + ஏர்.]*

**மாற்றேர்விடுதல்** *mārṟēr-viḍu-,* பெ.(n.) தனக்கு ஒருவன் ஏர் உதவி உழுது கொடுத்ததற்கு மாற்றாக அவன் நிலத்தைத் தன்னேர்விட்டு உழுது கொடுத்தல் (நாஞ்.); ploughing in exchange.

*[மாற்றேர் + விடுதல்.]*

**மாற்றோர்** *mārṟōr,* பெ.(n.) பகைவர்; enemies, foes. *"மாற்றோர் கூற்றே" (திருமுரு.257). "மாற்றோ ரும்மிலர் கேளிரு மிலரெனும் வேற்றுமை யின்றது போற்றுநர்ப் பெறினே" (பரிபா.4:54–5).*

*[மாறு→ மாற்று →மாற்றோர். மாறு = பகை.]*

**மாற்றோலைப்படு-தல்** *mārṟōlai-p-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) ஓர் அட்டவணையினின்றும் நீக்கி வேறோரட்டவணையிற் சேர்க்கப் பெறுதல்; to be transferred from one list to another. *"எம்மை மாற்றோலைப் பட்டவர் கூட்டத்து வைத்துக் கொள்கிற்றிரே" (திவ்.நாய்ச்.10, 2).*

*[மாற்று + ஓலைப்படு-.]*

**மாறல்** *māṟal,* பெ.(n.) மூலக்கரணியம் (வின்.); reason, cause.

*[மாறு →மாறல் (வே.க.4:78).]*

**மாறல்சுரம்** *māṟal-šuram,* பெ.(n.) காய்ச்சல் வகை (தஞ்சை.சர.11, 307); a kind of fever (சா.அக.).

*[மாறு→மாறல் + சுரம்.]*

**மாறவச்சிரம்** *māṟa-vacciram,* பெ.(n.) வஞ்சிரக்கல்; diamond (சா.அக.).

**மாறவர்மன்அரிகேசரி** *māṟa-varmaṉ-ari-kēšari,* பெ.(n.) சுந்தரபாண்டியன் என்ற பெயரில் அரசாண்ட பாண்டிய மன்னன்; a pandya king who ruled at Madurai with the title *Sundara Pāṇḍyaṉ.*

இவன் தந்தை சேந்தன் செழியன், கூன் பாண்டியன் என்று பெயரும் கூன் மாறிய பின் நின்ற சீர் நெடுமாறன் என்ற பெயரும் கொண்டவன். சமண சமயத்தைச் சேர்ந்தவன். தனக்கு வந்த வெப்பு நோயைத் தீர்க்க முடியாமையால், தனக்கு மருத்துவம் பார்த்த எண்ணாயிரம் என்ற ஊரைச் சேர்ந்த ஒரு சில சமணரைக் கழுவிலேற்றியவன். பின்னர் சமணத்தை மறந்து, ஞானசம்பந்தரின் வரவால் சைவ சமயத்தைத் தழுவியவன். அதற்கு உறுதுணையாக அவனது மனைவி சோழன் மகள் மங்கையர்க்கரசியும் அவனது அமைச்சர் குலச்சிறையாரும் இருந்தார்கள்.

**மாறவர்மன் அவனிசூளாமணி** *māṟavarmaṉ-avaṉi-šūḷāmaṇi,* பெ.(n.) பாண்டியன் கடுங்கோனுடைய மகன்; son of *Pāṇḍya Kaḍuṅgōṉ.*

**மாறன்[1]** *māṟaṉ,* பெ.(n.) 1. வலிய பாண்டியன்; *Pāṇḍiyaṉ* king. *"பூந்தார் மாற" (புறநா.55).* 2. சடத்திற்கு மாறான நம்மாழ்வார் (சடகோபன்); a *vaisṇava* saint.

*[மாறு→மாறன் (வே.க.4:78).]*

**மாறன்[2]** *māṟaṉ,* பெ.(n.) மாற்றான், 1 பார்க்க; see *māṟṟāṉ. "வல்வினைக்கோர் மாறன்" (திருவரங்கத்தந்.காப்.5).*

*[மாறு→மாறன். மாறு = பகை.]*

**மாறன்எயினான்** *māṟaṉ-eyiṉāṉ,* பெ.(n.) மாறன்காரி என்ற பாண்டிய அமைச்சரின் தம்பி (சி.பெ.அக.); brother of *Māraṉkāri,* a minister in *Paṇḍya* kingdom.

*[மாறன் + எயினாள்.]*

**மாறன்காரி** *māṟāṉ-kāri,* பெ.(n.) நெடுஞ் சடையன் பராந்தகனின் அமைச்சர்; a minister in the court of *Neduñjaḍayaṉ.*

**மாறன்சடையன்** *māṟaṉ-šaḍaiyaṉ,* பெ.(n.) வரகுண பாண்டியனின் வேறுபெயர்; other name of *Varaguṇa Pāṇḍiyaṉ.*

**மாறன்பொறையனார்** *māṟaṉ-poṟaiyaṉār,* பெ.(n.) பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்றான ஐந்திணை ஐம்பது என்னும் நூலின் ஆசிரியர்; author of *Aindiṉai-Aymbadu* classified in *pathineṉ-kīḻkkaṇakku.*

**மாறனகப்பொருள்** *māṟaṉaga-p-perumāḷ,* பெ.(n.) திருக்குருகைப் பெருமாட்கவிராயர் இயற்றிய அகப் பொருணூல்; a treatise on *Agapporuḷ* by *Tiru-k-kurukkai-pperumaṭ-kavirāyar.*

*[மாறன் + அகப்பொருள்.]*

**மாறனலங்காரம்** *māṟaṉalaṅgāram,* பெ.(n.) கி.பி.1525இல் திருக்குருகைப் பெருமாட் கவிராயர் இயற்றிய அணி நூல்; a treatise on poetics by *Tiru-k-kurugai-p-permāṭ-kavirāyar,* written in 1525 A.D.

*[மாறன் + அலங்காரம்.]*

**மாறனாடு** *māṟa-nāḍu,* பெ.(n.) மாறை பார்க்க; see *māṟai.*

**மாறாக** *māṟāga,* வி.அ.(adj.) 1. எதிரான வகையில்; on the contrary. 2. எதிர்பார்த்தற்கு வேறான வகையில்; on different one.

*[மாறு = எதிர். மாறு→மாறாக..]*

**மாறாசநீர்** *māṟāša-nīr,* பெ.(n.) வடபுல நீர்; the water of the northern region (சா.அக.).

**மாறாட்டம்[1]** *māṟāṭṭam,* பெ.(n.) தவறு; error. *"பார்வை மாறாட்ட மின்றி" (மகாராசதுறவு.54).*

*[மாறு →மாறாட்டம்.]*

**மாறாட்டம்[2]** *māṟāṭṭam,* பெ.(n.) 1. மாற்றுகை; changing. 2. புரட்டு; fraud, trickery, cheating, swindling. 3. தடுமாற்றம்; stumbling, stuttering halting. 4. பித்து (வின்.); craziness, aberration of mind.

*[மாறு + மாறாட்டம்.]*

**மாறாட்டு** *māṟāṭṭu,* பெ.(n.) மாறாட்டம் பார்க்க; see *māṟāṭṭam.*

*[மாறாட்டம் →மாறாட்டு.]*

மாறாடி *māṟāḍi,* பெ.(n.) புரட்டன் (வின்.); cheat, swindler.

*[மாறு→மாறாடி.]*

மாறாடு[1]-தல் *māṟāḍu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. உருவம் முதலியன மாறுதல்; to change, vary, as from. *"ஒருவடி வுற்றது மாறாடுறுகாலை" (கம்பரா.முதற்போர்.179).* 2. தடுமாறுதல்; to waver in mind. *"மாறாடுதி பிண நெஞ்சே" (திருவாச.5, 32).* 3. மாறிப் புகுதல்; to change places with one another. *"விடலை யொடுநெஞ்சு மாறாடி" (பெருங். மகத.6, 76).*

*[மாறு→மாறாடு-,]*

மாறாடு[2]-தல் *māṟāḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. எதிர்த்து நிற்றல் (இ.வ.); to oppose. 2. புரட்டுதல் (வின்.); to derange, invert. *"அவன் அதை மாறாடப் பார்க்கிறான்" (உ.வ.).*

*[மாறு →மாறாடு-,]*

மாறாநீர் *māṟā-nīr,* பெ.(n.) கடல்; sea, ocean. *"மாறாநீர் வையக்கணி" (குறள், 707, மணக்.).*

மாறாப்பு *māṟāppu,* பெ.(n.) 1. முந்தானையைத் தோள்களில் மாறியிடுகை; throwing the upper garment across the shoulder, in dressing. 2. மாராப்பு, 1 பார்க்க; see *mārāppu.*

*[மாராப்பு→மாறாப்பு.]*

மாறாப்புணர்ச்சி *māṟā-p-puṇarcci,* பெ.(n.) இடைவிடாத நுகர்ச்சி; indulgence without interval.

*[மாறா + புணர்ச்சி.]*

மாறாப்புமாலை *māṟāppu-mālai,* பெ.(n.) தோள்களில் மாறிக் குறுக்காக இடும் மாலை (நெல்லை.); garland worn across the shoulders.

*[மாறாப்பு + மாலை.]*

மாறி *māṟi,* பெ.(n.) 1. பண்டமாற்றுவோன் (வின்.); one who barters goods. 2. இரண்டகஞ் செய்வோன் (வின்.); double-dealing person. 3. பொன்மாற்று; degree of fineness of gold. *"திருக்கண்மலர் இரண்டு ஒன்பது மாறி"* (S.I.I.ii, 339).

*[மாறு →மாறி. மாறு = விற்றல், பொய்படுதல்.]*

மாறிக்காண்(ணு)-தல் *māṟi-k-kāṇ-,* 16 செ.குன்றாவி.(v.t.) பெருக்குதல் (இ.வ.); to multiply.

*[மாறி + காண்-.]*

மாறிப்போடு-தல் *māṟi-p-pōḍu-,* 19 செ. குன்றாவி.(v.t.) மாற்றுதல் (வின்.); to change

*[மாறு→மாறி + போடு-.]*

மாறிமாறி *māṟi-māṟi,* பெ.(n.) 1. முதலில் ஒன்று பிறகு மற்றொன்று என்ற முறையில் மீண்டும் தொடர்ந்து, அடுத்தடுத்து; alternately, one and then the other. 2. மீண்டும் மீண்டும், திரும்பத் திரும்ப; again and again, repeatedly.

*[மாறி + மாறி. மாறு →மாறி.]*

மாறியடி[1]-த்தல் *māṟi-y-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) காற்றுத் திருப்பி வீசுதல் (வின்.); to whiffle, shift about, as wind.

*[மாறு→மாறி + அடி-.]*

**மாறியடி²–த்தல்** *māṟi-y-aḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) ஏவினவனையே பேய் திருப்பித் தாக்குதல் (இ.வ.); to return and attack, as a devil, the very person who incited it.

*[மாறு→மாறி + அடி–.]*

**மாறியாடு–தல்** *māṟi-y-āḍu-,* 4 செ.கு.வி. (v.i.) காலை மாற்றி நடனமாடுதல்; to change the leg in dancing, as *Śiva* at Madurai. *"கூத்தனார்....... மாறி யாடினார்" (திருவாலவா. 52, 13).*

*[மாறு→மாறி + ஆடு–,]*

**மாறிருமார்பினள்** *māṟiru-mārbiṉaḷ,* பெ.(n.) திருமகள் (பிங்.); Tirumagal.

*[மால் + திருமார்பினள்.]*

**மாறிவிழு–தல்** *māṟi-viḻu-,* 2 செ.கு.வி. (v.i.) 1. தலைகீழாய் விழுதல்; to fall headlong. 2. பேச்சு முன்னுக்குப் பின் முரண்படுதல்; to inconsistent.

*[மாறு→மாறி + விழு–.]*

**மாறு¹–தல்** *māṟu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. வேறுபடுதல்; to become changed, exchanged, altered, reversed. *"மாறா மனங்கொண்டு" (திருநூற்.47).* 2. பின் வாங்குதல்; to withdraw. *"சூன்மகள் மாறா மறம்பூண் வாழ்க்கை" (பெரும்பாண்.136).* 3. குணமாதல்; to be cured. *"நோய் இப்போது கொஞ்சம் மாறியிருக்கிறது" (உ.வ.).* 4. இருப்பிடம் வேறுபடுதல் (இ.வ.); to have a change of residence. 5. நீங்குதல்; to cease, as from sleep. *"உறக்கம் மாறினான்" (கம்பரா. ஆறுசெ.7).* 6. முதுகிடுதல்; to retreat, as showing one's back. *"மாறாமைந்தின்" (மலைபடு.332).* 7. கூத்தாடுதல்; to dance. 8. இறத்தல்; to die. *"இவ்வான் மாக்கள் மாறிப் பிறந்துவரும்" (சி.போ.சிற்.2, 3, பக்.47).* 9. இல்லையாதல்; to be non-existent. *"பரப்புமாறப் பூத்துக்குளிர்ந்த புனலை" (ஈடு.2, 8, 2).* 10. பொய்படுதல்; to become false. *"நாவிற் புனைந்த நன்கவிதை மாறாமை மேவி" (பரிபா.6, 8).* 11. சரிப்படுதல்; to be corrected in state, place, form or appearance.

க. மாறு.

*[முல் (வளைதற் கருத்துவேர்) →முர்→முரு →முருகு = பிறைபோல் வளைந்த காதணி. முரு→முரி. முரிதல் = வளைதல், வளைந்து ஒடிதல், கெடுதல், தோல்வியுறுதல், சிதறுதல், தளர்தல், தவறுதல், நீங்குதல், நிலை கெடுதல், குணங் கெடுதல். முரி=வளைவு, துண்டு, முழுதிற் குறைவானது, எழுதிய ஓலை நறுக்கு, இசைப்பாவில் இறுதிப் பகுதி, முறிவு = மடிப்பு, சுருக்கை. முரு→முறு→முறுகு. முறுகுதல் = திருகுதல், விரைதல், முதிர்தல். முறு→முற்று. முற்றுதல் = சூழ்தல், கோட்டையைச் சூழ்ந்து பொருதல். முறு →மறு. மறுத்தல் = திருப்புதல், திரும்பச் செய்தல், மாற்றுதல், தடுத்தல், நீக்குதல், தடை கூறுதல், இல்லையென்னுதல். மறு→மாறு– (வே.க.4:71).]*

**மாறு²–தல்** *māṟu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. விற்றல்; to sell, to exchange, as goods, barter. *"நாண்மோர் மாறும்" (பெரும்பாண். 160).* 2. பணிசெய்தல்; to comply with, as an order. *"முன்னின பணிமுறை மாற முந்துவார்" (கம்பரா.ஊர்தேடு.49).* 3. கைவிடுதல்; to forsake, cease to support. *"புரிபுநீ புறமாறி" (கலித்.15).* 4. பிறனுக்குதவுதல்; to give, or render help.

"பனவனுக்காப் பாமாறியார்க்கு" (குமர.பிர. மீனாட்.இரட்.5). 5. கழித்தல்; to remove, caste away. "மாறுமென் மலரும்" (பரிபா.6, 46). 6. மறுத்தல் (யாழ்ப்.); to deny. 7. எண் பெருக்குதல்; to multiply. "ஐம்பாலும் பொதுவுமான ஆளானும் மாற நூற்றெட்டாம்" (நன்.269, மயிலை). 8. அடித்தல் (இ.வ.); to belabour, thrash.

[மறு→மாறு-, (வே.க.4:78)]

மாறு³ *māṟu*, பெ.(n.) 1. வேறுபாடு; mutation, change. "மாறிலாத மாக்கருணை வெள்ளமே" (திருவாச.5, 91). 2. எதிர்; contradiction. "அவன் எதற்கும் மாறாயிருக்கிறான்" (உ.வ.). 3. பகை; enmity, hostility. "மாற்றிரு வேந்தர்" (புறநா.42). 4. ஒவ்வாதது; anything which disagrees or is unsuitable. "மாறல்ல துய்க்க" (குறள், 944). 5. ஒப்பு; similarity, equality. 6. மாற்றுருப்படி; change or substitute, as of garment, alternative. "மாறுசாத்தி யென்பிழை பொறுப்பீர்" (பெரியபு. அமர்நீதி. 24). "ஈதலான் மாறு வேறுண்டோ" (கம்பரா.உருக்கா.24). 7. கைம்மாறு; recompense, return. "வழக்கொடு மாறுகொளன்று" (திவ்.இயற். பெரிய. திருவந்.13). 8. மறுமொழி (உத்தரம்); reply. "மாறெதிர் கூறி மயக்குப்படுகுவாய்" (கலித்.116, 15). 9. இம்மை நீங்கும் இறப்பு; death. "நகாஅ லென வந்தமாறே" (புறநா. 273). 10. இறப்பின் பின் பிறப்பு; birth. "மாற்றிடைச் சுழலு நீரார்" (மேருமந்.136). 11. குப்பை கூளம் நீக்கும் துடைப்பம்; broom. "சல்லிகளை மாறெடுத்துத் தூர்த்தும்" (பணவிடு.285). 12. துடைப்பம் போலுதவும் பருத்தி முதலியவற்றின் தூறு; dried stock, as of cotton plant. 13. தூறு போன்றமிலாறு; twing or branch without leaves. 14. வளாறு போன்ற பிரம்பு; rattan. "மாற்றாலாற்றப் புடையுண்டும்" (சீவக.2794). 15. மாறுதல் நேரும் வகை; manner, method. "விளங்கக் கேட்ட மாறு கொல்" (புறநா.5).

க. மாறு.

[முல் (வளைதற் கருத்து வேர்) →முர்→முரு→முறு→மறு→மாறு.]

மாறு⁴ *māṟu-*, இடை.(part.) 1. காரணப் பொருளுணர்த்தும் ஓரிடைச் சொல் (தொல். சொல்.252, உரை); a suffix meaning cause. 2. தொறுப் பொருளில் வரும் ஓர் இடைச் சொல்; an adverbial suffix meaning continuity. "பகல்மாறு வருகிறான்" (உ.வ.).

[மறு→மாறு.]

மாறுகண் *māṟu-kaṉ*, பெ.(n.) கோணல் (வக்கிரக்) கண்; squint eye. "மாறு கண்ணாகியு மிருந்திடில்" (காசிக. மகளிர். 50).

[மாறு + கண்.]

மாறுகம் *māṟugam*, பெ.(n.) சீலை (சது.); cloth.

மாறுகால் *māṟu-kāl*, பெ.(n.) 1. தேசிக் கூத்திற்குரிய கால் வகை (சிலப்.3, 16, உரைக்கீழ்க் குறிப்பு, பக்.90); a leg-pose in *teci-k-kūttu*. 2. ஒரு கைக்கு எதிர்த் திசையில் உள்ள கால்; opposite direction of leg to one side hand.

[மாறு + கால்.]

**மாறுகால்மாறுகை** *mārukāl-mārukai,* பெ.(n.) ஒரு பக்கத்துக் கையும் மறு பக்கத்துக் காலும்; one hand and opposite direction of the leg.

**மாறுகால்மாறுகைவாங்கு-தல்** *māru-kāl-mārukai-vāṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) ஒரு பக்கத்துக் கையையும் மறு பக்கத்துக் காலையும் தண்டனையாக வெட்டுதல்; to cut off a leg and a hand on the opposite sides of a person's body, by way of punishment.

*[மாறுகால் + மாறுகை + வாங்கு-.]*

**மாறுகாலம்** *māru-kālam,* பெ.(n.) பெண்ணின் மாதவிடாய் நிற்பாடு; meno pause (சா.அக.).

*[மாறு + காலம்.]*

**மாறுகூலி** *māru-kūli,* பெ.(n.) மரமேறுவார் பெறுங் கூலி; wages paid to climbers of palm trees.

**மாறுகொள்(ளு)-தல்** *māru-kol-,* 16 செ.கு.வி.(v.i.) பண்டமாற்றாகக் கொள்ளுதல்; exchange the things.

*[மாறுபடு →மாறுகொள்.]*

**மாறுகொள்ளாவுணவு** *māru-kollāvuṇavu,* பெ.(n.) மாறுபாடில்லா உணவு; not in compatible diet.

*[மாறுகொள்ளா + உணவு.]*

**மாறுகொளக்கூறல்** *māru-kola-k-kūral,* பெ.(n.) நூற்குற்றம் பத்தனுள் முன்னொடு பின் முரணாகக் கூறும் குற்றவகை (நன்.12); inconsistency in statements, one of ten *nūr-kurram.*

*[மாறுகொளல் + கூறல்.]*

**மாறுகோள்** *māru-kōl,* பெ.(n.) 1. மாறுபாடு பார்க்க; see *māru-pāḍu.* *"இது மாறுகோளுரைறை" (சி.போ.பா.பக்.11, சுவாமிநா.).* 2. மாறுபாடு, 3 பார்க்க; see *mārupāḍu.* *"மூவகை மாறு கோளும் இல்லாத உணவை" (குறள், 945, உரை).*

*[மாறுகொள் →மாறுகோள்.]*

**மாறுத்தரம்** *māruttaram,* பெ.(n.) மறுமொழி (வின்.); answer, reply.

**மாறுதண்டு** *māru-tandu,* பெ.(n.) தோணியின் வலப்பக்கத்தே வலிக்கப்படும் துடுப்பு; drive the left side of boat. *"மாறுதண்டு ஏலேலோ" (நாட்டார் பாடல்).*

*[மாறு + தண்டு.]*

**மாறுபடப்புணர்-தல்** *mārupaḍa-p-puṇar-,* 2 செ.குன்றாவி.(v.t.) சரி நுகர்ச்சி விளையும்படி செய்யாமல் புணருதல்; without mutual satisfaction, coitous.

*[மாறுபடல் + புணர்-.]*

**மாறுபடு-தல்** *māru-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. மாறிப்போதல் (சங்.அக.); to be changed. 2. முரணுதல்; to be opposed, to disagree, differ, to be discordant, to be in contrst. 3. பகைமை கொள்ளுதல்; to be inimical. *"மாறுபட்டஞ்சென்னை வஞ்சிப்ப" (திருவாச.6, 11).*

*[மாறு + படு-,]*

**மாறுபடுபுகழ்நிலை** *mārupaḍu-pugal-nilai,* பெ.(n.) சொல்லக் கருதிய பொருளை விடுத்து அதனைப் பழிக்கும் பொருட்டு வேறொன்றை வெளிப்படையாகப் புகழும்

அணி வகை (தண்டிபொருள். 28); (Rhet.) a figure of speech which consists in formally praising a person or thing implying thereby disparagement of another person or thing.

*[மாறுபடு + புகழ்நிலை.]*

*"கருதிய பொருடொகுத் தாங்கது பழித்தற்கு*
*வேறொன்று புகழ்வது மாறுபடு புகழ்நிலை"*
*(தண்டிபொருள்.28).*

புலவர் தான் கருதிய பொருளை மறைத்து அதனைப் பழித்தற்கு வேறொன்றினைப் புகழ்வது மாறுபடு புகழ்நிலை என்னும் அணியாகும்.

*"இரவறியா யாவரையும் பின்செல்லா நல்ல*
*தருநிழலுந் தண்ணீரும் புல்லும் – ஒருவர்*
*படைத்தனவுங் கொள்ளாவிப் புள்ளிமான் பார்மேற்*
*என வரும்*
*றுடைத்தனவே யன்றோ துயர்"*

இப்பாடலில் மானைப் புகழ்தலால் இரப்போரின் இழிநிலையைப் பழிக்குமாறு பாடுவதால் இது மாறுபடு புகழ்நிலை யணியாகும்.

மாறுபடுபொருண்மொழி *mārupaḍu-porun-moḻi,* பெ.(n.) முன் மொழிந்ததற்கு மாறாகப் பொருள் தோன்றிவருஞ் சொல்லுடையதாகிய அணி வழு (தண்டி.100); (Rhet.) a defect in composition which consists in making contradictory statements.

*[மாறுபடு + பொருண்மொழி.]*

மாறுபாட்டுக்காரன் *mārupāṭṭu-k-kāraṉ,* பெ.(n.) 1. புரட்டன்; double -dealer. 2. மறுத்துப் பேசுபவன்; one who contradicts.

*[மாறுபாடு + காரன்.]*

மாறுபாடு *māṟu-pāḍu,* பெ.(n.) 1. பகைமை; opposition. 2. முறைகேடு; perverseness. 3. ஒவ்வாமை; unsuitability, disagreeble ness, discrepancy. *"மாறுபாடில்லாத வுண்டி" (குறள், 945).* 4. புரட்டு; double dealing.

*[மாறு→மாறுபாடு.]*

மாறுமுகம் *māṟumugam,* பெ.(n.) நினைத்தவாறு மாற்றிக் கொள்ளும் முகவடிவு; face changeable at will. *"மாறுமுகக் கொண்டு பொருவல் லவுணர்" (கந்தபு.தேவர்கள் போற்.4).*

*[மாறு + முகம்.]*

மாறுரை *māṟurai,* பெ.(n.) மறுமொழி; reply. *"தர்க்கமவைக் கெலாம்....... கன்னி மாறுரை கூறினாள்" (திருவாத.பு, புத்தரை.86).*

*[மாறு + உரை.]*

மாறுவார்க்கை *māṟu-vārkkai,* பெ.(n.) ஒன்றிலிருப்பதை மற்றொன்றில் வார்த்தல்; to transfer by pouring from one to the other as blood from one animal to the other (சா.க.அ.).

*[மாறு + வார்க்கை.]*

மாறுவேடப்போட்டி *māṟu-vēḍa-p-pōṭṭi,* பெ.(n.) மாறுவேடத்தில் வந்து நடித்துக் காட்டும் பலரில் சிறப்பாகச் செய்தவரைத் தேர்ந்தெடுக்கும் போட்டி; fancy dress competition.

*[மாறுவேடம் + போட்டி.]*

மாறுவேடம் *māṟu-vēḍam,* பெ.(n.) உண்மையான தோற்றத்தை மறைத்துப் போட்டுக் கொள்ளும் புனைவு; disguise fancy dress.

*[மாறு + வேடம்.]*

மாறேவி *mārēvi,*பெ.(n.) அரிதாரம் (சங். அக.); yellow orpiment.

மாறை *mārai,*பெ.(n.) பாண்டி மண்டலத்துள்ள ஒரு நாடு (தஞ்சைவா.14); a division of the Pāṇḍiya country.

மாறொடை *māroḍai,*பெ.(n.) துளசி (சங். அக.); holy basil.

மாறொலி *māroli,*பெ.(n.) எதிரொலி (இ.வ.); echo.

*[மாறு + ஒலி.]*

மாறோக்கம் *mārōkkam,*பெ.(n.) மாறோகம் (புறநா.37) பார்க்க; see *mārōgam.*

மாறோகம் *mārōgam,*பெ.(n.) பாண்டி நாட்டிற் கொற்கையைச் சூழ்ந்த பகுதி (தொல்.சொல். 164, சேனா.புதுப்.கீழ்க்குறிப்பு); the portion of the *Pāṇḍya* country round *korkai* in *Tinnevelly* District.

மாறோதியம்பன் *mārōdi-amban,* பெ.(n.) சாரைப் பாம்பு; a kind of snake (சா.அக.).

மான்[1] *māṉ,*பெ.(n.) 1. ஒருவகை விலங்கு; deer, hart, antelope, fawn. *"மானினுரிவை தைஇய வூன் கெடு மார்பின்" (திருமுரு. 128).* 2. விலங்கின் பொது (பிங்.); animal, beast. 3. குதிரை; horse. *"தெம்முனையுண் மானொடு தோன்றி" (பு.வெ.10, பொது.5).* 4. அரிமா; lion. *"விலங்கு மான்குரல் கேட்பின் வெருவுவை" (கலித்.13).* 5. மகரமீன் (பிங்.);magara fish. 6. மகரவோரை (பிங்.); capricorn of he zodiac.

தெ., க., ம., து. மான்.

*[மா →மான்.]*



மான்[2] *māṉ,*இடை.(part.) 1. பெயர் விகுதி; affix to nouns. *"வேண்மான்".* 2. படியாக என்னும் பொருளில் வரும் இடைச் சொல் (தொல்.சொல்.463, உரை); particle meaning ways, times etc.

மான்[3] *māṉ,*பெ.(n.) 1. பெருமை; (phil.) the principle of Intellect. *"மானென்றுரைத்த புத்தி வெளிப்பட்டு" (மணிமே.27:207). "மானாங்காரமனங் கெட" (திவ்.திருவாய். 10, 7, 11).* 2. மூலப் பகுதி; (Saiva) the manifest primordial cause of the material world. 3. மாந்தன்; human being. *"மானுடம்பு விடா" (மேருமந்.72).* 4. பெரியோன்; great person or being. *"மானே தொழுகை வலி" (சி.போ.12, 4 வெண்பா.3).* 5. மலை (பிங்.); mountain.

*[மன் →மான்.]*

மான்[4](னு)-தல் *māṉ-,*16 செ.குன்றாவி. (v.t.) ஒத்தல்; to resemble, to equal. *"மன்னர் சேனையை மானு மன்றே" (கம்பரா.ஆற்று.14).*

*[மன்→ மான் (வே.க..4:34).]*

மான்[5] *māṉ,*பெ.(n.) ஒப்பு (பிங்.); likeness.

*[மான →மான்.]*

# மான் வகை



**மான்⁶–தல் (மான்றல்)** *māṉ-,*16 செ.கு.வி. (v.i.) 1. ஐயுறுதல் (திவா.); to be doubtful. 2. மயங்குதல் (சூடா.); to be confused.

**மான்களங்கம்** *māṉ-kaḷaṅgam,*பெ.(n.) நிலவிலுள்ள மானுருப் போன்ற மறு (யாழ்.அக.); spot on the moon, fancied to resemble a deer.

*[மான் + களங்கம்.]*

**மான்களிக்கண்** *māṉ-kaḷi-k-kaṇ,* பெ.(n.) இருவட்டக்கம்பி (யாழ்.அக.); a kind of wire.

**மான்கீரை** *māṉ-kīraai,* பெ.(n.) கீரை வகை (மூ.அ.); a kind of pot - herb.

*[மான் + கீரை.]*

**மான்குளம்பு** *māṉ-kuḷambu,*பெ.(n.) 1. மானின் பாதம்; foot of a deer. *"மான்குளம்பு அழுத்திய இடத்தை யொத்த" (பொருந.4, உரை).* 2. அடம்பு; hare-leaf.

*[மான் + குளம்பு.]*



**மான்கை** *māṉkai,*பெ.(n.) சாறாயம்; arrack (சா.அக.).

**மான்கையன்** *māṉ-kaiyaṉ,* பெ.(n.) சிவ பெருமான்; *Śivaṉ.*

*[மான் + கையன்.]*

**மான்கொடி** *māṉ-koḍi,*பெ.(n.) கொடிவகை (யாழ்.அக.); a creeper.

*[மான் + கொடி.]*

**மான்கொம்பு¹** *māṉ-kombu,*பெ.(n.) பாதிரி; white flowered trumpet tree.

*[மான் + கொம்பு.]*

**மான்கொம்பு²** *māṉ-kombu,* பெ.(n.) மானின் தலையில் சுருண்டு திரண்ட கொம்பு; deer's horn.

*[மான் + கொம்பு.]*



**மான்சாணம்** *māṉ-šāṇam,*பெ.(n.) மானின் சாணி; funette (சா.அக.).

*[மான் + சாணம்.]*

**மான்சாரை** *māṉ-šārai,*பெ.(n.) 1. நீண்ட மரவகை; auricled leaved glabrous marking-nut. 2. மரவகை; a species of *croton indigo.*

**மான்செவி** *māṉ-ševi,*பெ.(n.) மான்செவிக் கள்ளி (வின்.) பார்க்க; see *māṉ-ševi-k-kaḷḷi.*

*[மான்செவிக்கள்ளி→மான்செவி.]*

**மான்செவிக்கள்ளி** *mānševi-k-kaḷḷi,* பெ. (n.) இலைக்கள்ளி (மலை.); five tubercled spurge.

*[மான்செவி + கள்ளி. மானின் செவி போன்ற இலையையுடைய கள்ளி.]*



**மான்புள்ளிகண்டாங்கி** *māṉ-puḷḷi-k-kaṇḍāṅgi,* பெ.(n.) சேலை வகை (இ.வ.); a kind of saree.

*[மான்புள்ளி + கண்டாங்கி.]*

**மான்புள்ளிச்சேலை** *māṉ-puḷḷi-c-cēlai,* பெ.(n.) சேலை வகை (இ.வ.); a kind of saree.

*[மான் + புள்ளி + சேலை. சீரை→சீலை →சேலை.]*

**மான்மகன்** *māṉ-magaṉ,* பெ.(n.) 1. அயன்; Brahman. 2. மான்மைந்தன் பார்க்க; see *māṉ-maindaṉ. "மான்மகன் போல் வருதிரைய" (சிலப்.7 : 28).*

*[மான் + மகன்.]*

**மான்மதச்சாந்து** *māṉ-mada-c-cāndu,* பெ.(n.) மான்மதச்சேறு பார்க்க; see *māṉ-mada-c-cēṟu. "மான்மதச் சாந்தொடு வந்ததை" (சிலப்.2 : 68).*

*[மான்மதச்சேறு →மான்மதச்சாந்து.]*

**மான்மதச்சேறு** *māṉmada-c-cēṟu ,* பெ.(n.) (கத்தூரி) மான் மதத்தாற் செய்த நறுமணக் குழம்பு (சிலப்.6 : 81, உரை); unguient of musk.

*[மான்மதம் + சேறு.]*

**மான்மதம்** *māṉ-madam,* பெ.(n.) 1. கத்தூரி (திவா.); musk. 2. சவ்வாது (சிலப்.6, 81, உரை); civet.

**மான்மறி** *māṉ-maṟi,* பெ.(n.) 1. மான்குட்டி; fawn. *"மான்மறி விழுந்தது கண்டு" (மணிமே.23 : 115).* 2. பெண்மான் (மணிமே.23 : 115, அரும்.); doe. 3. வள்ளி நாயகி; *Vaḷḷi-nāyagi* the wife of Murugan, as born of a doe. *"மான்மறி தோண் மணந்த ஞான்று" (பரிபா.9, 8).*

*[மான் + மறி. மறி = குட்டி.]*

**மான்மறிக்கரத்தான்** *māṉmaṟi-k-karattāṉ,* பெ.(n.) சிவன்; *Šivaṉ.*

**மான்மியம்** *māṉmiyam,* பெ.(n.) 1. மகிமை; glory, greatness. 2. இடப் பெருமையைக் கூறும் நூல்; treatise on the greatness of a sacred place. *"சிதம்பர மான்மியம்".* 3. மகத்துவம் பார்க்க; see *magattuvam.*

**மான்முருகு** *māṉmurugu,* பெ.(n.) 1. துளசி; sacred basil. 2. துரிசு; blue vitriol (சா.அக.).

**மான்மைத்துனன்** *māṉ-maittuṉaṉ,* பெ.(n.) 1. சிவன்; *Šivaṉ.* 2. மான்முருகு, 2 பார்க்க; see *māṉ-murugu.*

*[மால் + மைத்துனன்.]*

**மான்மைந்தன்** *māṉ-maindaṉ,* பெ.(n.) மன்மதன் (திருமாலின் மைந்தன்) (சூடா.); *Kāmaṉ*, as the son of *Tirumāl.*

**மான்வேடன்** *māṉ-vēḍaṉ,* பெ.(n.) மாரீசன்;

*[மான் + வேடன்.]*

**மான்றல்** *māṉṟal,* பெ.(n.) மயக்கம்; bewilderment. *"மான்றறீர் மதியினான்" (அரிசமய குலசே.129).*

*[மால்→மான்→மான்றல் (வே.க.4:38).]*

**மான்றலை** *māṉṟalai,* பெ.(n.) 1. பெரு விரலுஞ் சிறுவிரலு மொழிந்த இடைவிரல் மூன்றுந் தம்மிலொத்து ஒன்றி முன்னே இறைஞ்சி நிற்கும் இணையாவினைக்கை வகை (சிலப்.3, 18, உரை, பக்.96); (Nātya) a gesture with one hand in which the three fingers other than the thumb and the little finger are joined and bent forward, as resembling the head of a deer, one of 33 *inaiyā-viṉai-k-kai.* 2. ஐந்தாம் விண்மீன்; the fifth naksatra.

*[மான் + தலை.]*

**மான்றார்** *māṉṟār,* பெ.(n.) அறிவு மயங்கினவர்; those who are confused in mind. *"மான்றார் வளியான் மயங்கினார்க்கு" (ஏலாதி, 55).*

*[மன்→மான்→மான்றார்.]*

**மான்றூதி** *māṉṟūdi,* பெ.(n.) காஞ்சிரை; a tree nux-vomic.

**மான்றோல்** *māṉṟōl,* பெ.(n.) மான் தோலாகிய இருக்கை (பு.வெ.8, 14, உரை); deer skin, used by ascetics, etc.

*[மான் + தோல்.]*

**மான** *māṉa,* இடை.(Part.) ஓர் உவமைச் சொல் (தொல்.பொருள்.287); a word of comparison.

*[மான் = ஒப்பு. மான்→மான.]*

**மானக்கஞ்சாறநாயனார்** *māṉakkañcāṟa-nāyaṉār,* பெ.(n.) நாயன்மார் அறுபத்து மூவருள் ஒருவர் (பெரியபு.); a canonized šaivasaint, one of 63.

**மானக்லை** *māṉakkalai,* பெ.(n.) அரையாடை; waist cloth.

*[மான + கலை.]*

**மானக்கவரி** *māṉa-k-kavari,* பெ.(n.) 1. கவரிமான்; yak, bos grunnieus as too sensitive to survive the loss of a single hair. 2. சாமரை; ornamental whisk, made of yak's tail. *"மானக்கவரி மணிவண்டகற்ற" (சீவக.2120).*

*[மான்→மான + கவரி.]*

**மானக்குருடன்** *māṉa-k-kuruḍaṉ,* பெ.(n.) முழுக்குருடன் (வின்.); totally blind man.

*[மான்→மானம் + குருடன். மானம் = ஒப்புமை, அளவு.]*

**மானக்குறை** *māṉa-k-kuṟai,* பெ.(n.) மானக் கேடு (வின்.) பார்க்க; see *māṉa-k-kēḍu.*

*[மான்→மானம் + குறை. மானம் = ஒப்புமை, அளவு, மதிப்பு, பெருமை, வலிமை.]*

**மானக்கேடு** *māṉa-k-kēḍu,* பெ.(n.) பெருமைக்கேடு (வின்.); dishonour, disagree, ignominy.

*[மானம் + கேடு. மானம் = பெருமை.]*

**மானகம்** *mānagam*, பெ.(n.) ஒரு வகை மலையாள சேம்பு; *colacasia indica* (சா.அக.).

**மானகவசன்** *mānaga-vašan*, பெ.(n.) மானத்தையே காப்பாகத் தாங்கியோன்; man whose armour is self-respect. *“பராக்ரமக் கைதவன் மானகவசன் கொற்கை வேந்தன்” (பெருந்தொ.949).*

*[மானம் + கவசன்.]*

**மானங்கா-த்தல்** *mānaṅ-kā-*, 4 செ.குன்றாவி. (v.t.) ஒருவன் அல்லது ஒருத்தியின் மானத்தைப் பேணுதல்; to preserve one's self-respect, chastity or honour.

*[மானம் + கா-.]*

**மானங்காட்டு-தல்** *mānaṅ-kāṭṭu-*, 5 செ.கு.வி.(v.i.) கூரைக்கு முட்டுக் கொடுத்தல் (இ.வ.); to support roof by struts.

*[வானம் → மானம் + காட்டு-.]*

**மானங்கெட்டவள்** *mānaṅ-keṭṭavaḷ*, பெ.(n.) 1. வெட்கங் கெட்டவள் (வின்.); shameless woman. 2. கற்பிழந்தவள் (கொ.வ.); unchaste woman.

*[மானம் + கெட்டவள்.]*

**மானங்கெட்டவன்** *mānaṅ-keṭṭavan*, பெ.(n.) மானமிழந்தவன் (கொ.வ.); person devoid of shame or self-respect.

*[மானம் + கெட்டவள்.]*

**மானசாரம்** *māna-šāram*, பெ.(n.) கட்டடச் சிற்பநூல் முப்பத்திரண்டனுள் ஒன்று (இருசமய. சிற்பசாத்.); a treatise on architecture, one of 32 *ciṟpa-nūl*.

**மானசாலயம்** *māna-šālayam*, பெ.(n.) அன்னப் பறவை; a bird swan.

*[மான + சாலயம்.]*

**மானசிகநரம்பு** *mānašiga-narambu*, பெ.(n.) விதான நரம்பு; phrenic nerve (சா.அக.).

**மானட்கி** *mānaṭki*, பெ.(n.) பூசணிக்காய்; pumpkin (சா.அக.).

**மானத்தாட்சி** *māna-t-tāṭci*, பெ.(n.) மானக்கேடு பார்க்க; see *māna-k-kēḍu*.

*[மானம் + தாழ்ச்சி. தாழ்ச்சி→தாட்சி.]*

**மானத்தாழ்ச்சி** *māna-t-tāḻcci*, பெ.(n.) மானக்கேடு; ignominy.

*[மானம் + தாழ்ச்சி.]*

**மானத்தாழ்வு** *māna-t-tāḻvu*, பெ.(n.) மானக்கேடு (வின்.) பார்க்க; see *māna-k-kēḍu*.

*[மானம் + தாழ்வு.]*

**மானத்தைவாங்கு-தல்** *mānattai-vāṅgu-*, 7 செ.கு.வி.(v.i.) மதிப்பை இழக்கச் செய்தல்; cause or bring disgrace.

*[மானத்தை + வாங்கு-.]*

**மானத்தோல்** *māna-t-tōl*, பெ.(n.) பீசம்; testicle (சா.அக.).

**மானதண்டு** *māna-taṇḍu*, பெ.(n.) அளவைக் கோல்; measuring rod. *“விண்ணினுக் களவாய் வைத்த மானதண் டனைய வெற்பில்” (இரகு.திக்கு.144).*

*[மானம் + தண்டு. மானம் = அளவு, அளவுக்கருவி.]*

மானபோதம் *māṉa-bōdam*, பெ.(n.) சிற்ப நூல் முப்பத்திரண்டனுள் ஒன்று (இருசமய. சிற்பசாத்.3); a treatise on architecture, one of 32 *ciṟpa-nūl*.

மானம்[1] *māṉam*, பெ.(n.) 1. மதிப்பு; honour, dignity. *"நன்றேகாண் மான முடையார் மதிப்பு" (நாலடி, 294).* 2. கற்பு; chastity. 3. பெருமை; pride, eminence. *"புகழு மானமு மெடுத்து வற்புறுத்தலும்" (தொல். பொருள்.41).* 4. புலவி; bouderie, sulks. *"மான மங்கையர் வாட்டமும்" (சீவக.2382).* 5. வலிமை (சூடா.);strength. 6. சூளுரை (சபதம்); vow. *"அப்படியே செய்வேனென மானஞ் செய்து" (இராமநா.அயோத்.7).* 7. கணிப்பு; computation. 8. அளவுக் கருவி; instrument or means of measurment. 9. மாற்றாணி (திருக்கோ.335, உரை); touch - needle. 10. பட்டணம்படியில் அரைப்படி கொண்ட அளவு (G.Sm.D.I.I.286) half a Madras measure. 11. ஒப்புமை; comparison. *"மானமில்லுயர் மணிவண்ணன்" (சீவக..2747).* 12. அன்பு; love, affection. *"பாலும் நீரும்போல மானம் வைத் தாண்டீரே" (இராமநா.அயோத்.7).* 13. ஒட்டுறவு; attachment. *"மறத்திடை மானமேற் கொண்டு" (பு.வெ.5, 6).* 14. அவமானம்; disgrace. *"மானத் தலைவருவ செய்பவோ" (நாலடி, 198).* 15. இலச்சை; shame. *"வஞ்சியை மீட்கிலே னென்னு மானமும்" (கம்பரா. சடாயுவுயிர்நீ. 145).* 16. குற்றம்; fault. *"மெய்ந்நிலை மயக்க மான மில்லை" (தொல்.எழுத்து.47).* 17. வானூர்தி; aerial chariot. *"மானமிசையூர்ந்து" (கந்தபு. அசுரர்யா.14).* 18. கோவில் விமானம்; vaulted roof o the inner shrine of a temple. *"பொன்மானந் தனக்கு வடமேற்றிசை" (திருவிளை. கல்லானைக்.3).* 19. மண்டபம் (பிங்.); pillared hall.

*[முல் (பொருந்தற் கருத்து வேர்) →மல்→மன். மன் = பெருமை, பெரியோன், கணவன், அரசன், அரசு. மன்→மான்→மானுதல் = ஒத்தல். மான்→ மானம் (வே.க.4:34).]*

மானம்[2] *māṉam*, பெ.(n.) அளவு, மதிப்பீடு; measurement, estimation.

மானம்[3] *māṉam*, பெ.(n.) 1. மான்மதம் (கத்தூரி); musk. 2. புனுகு (சவ்வாது); civet.

மானம்[4] *māṉam*, பெ.(n.) வான்; sky. *"செம்மானஞ் செற்று...... மிளிருஞ் சடைக்கற்றை வேதியனே" (தேவா.1200, 10).*

*[மால்→மான்→மானம் (வே.க.4:38).]*

மானம்[5] *māṉam*, பெ.(n.) 1. ஒரு தொழிற் பெயர் விகுதி; a nominal suffix. *'பிடிமானம்', 'சேர்மானம்'.* 2. தொறுப் பொருளில் வரும் இடைச்சொல்; an adverbial suffix meaning continuity. *"தினமானம் இது நடந்து வருகிறது".*

*[மன்→மான்→மானம்.]*

மானம்[6] *māṉam*, பெ.(n.) நிலை, தன்மை போன்ற பொருளில் வரும் பின்னொட்டு; a suffix meaned for state of a thing.

*[மா→மான்→மானம்.]*

ஒண்டமிழ் மொழியில் ஓரெழுத்து ஒருமொழியாய் நிற்பவை 42 எழுத்துகள். அவற்றுள் மா என்பது ஓர் எழுத்து மொழியாகும். அதற்கு அழகு, அறிவு, ஆணி, அரைத்த மாவு, இருபதில் ஒரு பங்கான ஒரெண், மரம், குதிரை, செல்வம்,

நிறம், பெரிய, பெருமை, மிகுதி, மேன்மை, விலங்கு, அளவு என்ற பொருள்களுடன் நிலை என்ற பொருளும் உண்டெனஉணர்க.

1. அடிமானம் = கீழ் மட்டத்தின் நிலை, அடிப்படை நிலை; 2. அடைமானம் = ஒரு பொருளுக்கு ஈடாக அடைவு செய்யும் நிலை; 3. அவமானம் = தன் மதிப்பின் தாழ்நிலை; 4. இனமானம் = இனப்பற்றின் நிலை; 5. கட்டுமானம் = கட்டப்படுகின்ற கட்டடப் பணியின் நிலை; 6. கனபரிமானம் = பலகை, தகடு போன்ற தட்டையான பொருள்களின் தடித்த நிலை; 7. காலமானம் = காலத்தின் நிலை; 8. செரிமானம் = உண்ட உணவு செரிக்கும் நிலை; 9. தன்மானம் = தன் தகுதியின் நிலை; 10. தீர்மானம் = ஒரு கருத்தைப் பற்றிய தீர்வு செய்த நிலை; 11. தேய்மானம் = ஒரு பொருள் தேய்ந்து, குறைந்த நிலை; 12. படிமானம் = கீழ்ப்படிதலின் நிலை; 13. பிடிமானம் = ஒன்றைப் பற்றிக் கொண்ட நிலை; 14. பெறுமானம் = ஒன்றன் மதிப்பீட்டு நிலை; 15. மொழிமானம் = ஒருமொழியைப் பற்றிய நிலை; 16. வருமானம் = ஒன்றன் மூலம் வருகின்ற வரவின் நிலை.

**மானம்⁷** *māṉam*, பெ.(n.) 1. ஆமணக்கு; castor plant. 2. ஆண் அல்லது பெண்குறி; male or female genital.

**மானம்கீழ்மாறுவாங்கு-தல்** *māṉam-kīḻmāṟu-vāṅgu-*,5 செ.கு.வி.(v.i.) அதிகாலைப் பொழுது; early morning.

*[மானம் + கீழ்மாறுவாங்கு-தல்]*

**மானம்பாடி** *māṉam-pāḍi*, பெ.(n.) வானம்பாடி (வின்.); the Indian skylark.

*[மானம் + பாடி. வானம்பாடி→ மானம்பாடி (இ.வ.)]*

**மானம்பார்-த்தல்** *māṉam-pār-*, 4 செ.கு.வி. (v.i.) இறத்தல்; to die.

*[வானம்→மானம் (கொ.வ.) மானம் + பார்-]*

**மானம்பார்த்தபூமி** *māṉam-pārtta-būmi*, பெ.(n.) மழைநீரால் மட்டுமே பயிர் செய்யப்படும் நிலம்; rain-fed arable land.

மறுவ. மானாவாரி நிலம்.

*[மானம் + பார்த்தபூமி. வானம் →மானம் (இ.வ.)]*

**மானமர்** *māṉamar*, பெ.(n.) கள்ளி; spurge.

**மானமரியாதை** *māṉa-mariyādai*, பெ.(n.) மதிப்பு (வின்.); honour, dignity.

*[மானம் + மரியாதை]*

**மானமா** *māṉa-mā*, பெ.(n.) கவரிமான்; yak, as extremely sensitive. *"மானமா வனைய மாட்சியர்" (கம்பரா.உருக்காட்.19).*



**மானமாரி** *māṉa-māri*, பெ.(n.) வானம் பார்த்தநிலம் பார்க்க; see *vāṉam-pārtta-nilam.*

*[மானம் + மாரி]*

மானமுறு-தல் *māṉa-muṟu-*,18 செ.குன்றாவி. (v.t.) பார்த்தல்; to see. *"நும்மாண் மானமுற லுற்றது கொல்" (சேதுபு.காசிப.9).*

*[மானம் + உறு-]*

மானமூடு[1]-தல் *māṉa-mūḍu*, 5 செ.கு.வி. (v.i.) உடை முதலியவற்றால் உடலை மறைத்து மானம் பேணுதல்; to conceal one's shame by covering the body with dress.

*[மானம் + மூடு-]*

மானமூடு[2]-தல் *māṉa-mūḍu*, பெ.(n.) வானம் மேகமூட்டத்துடன் காணப்படுகை; cloud sky. *இரண்டு நாளாக மானம் மூடிக்கிட்டு கிடக்குது (பே.வ.)மூ*

*[வானம்மூடுதல்→மானமூடுதல் (கொ.வ.).]*

மானல்[1] *māṉal*,பெ.(n.) 1. மயக்கம் (சூடா.); confusion. 2. ஐயப்படுதல் (வின்.); doubting.

*[மால்→மான்→ மானல். மால் = மயக்கம்]*

மானல்[2] *māṉal*,பெ.(n.) 1. ஒப்பு ( சூடா.); comparison, resemblance. 2. இலிச்சை (அக.நி.); see shame..

*[மான்→மானல்]*

மானவட்டில் *māṉa-vaṭṭil*,பெ.(n.) அளவுக் கிண்ணம்; measuring cup. *"பொன்னின் மானவட்டில் ஒன்று" (S.I.I.ii, 4).*

*[மானம் + வட்டில். மானம் = அளவு]*

மானவன்[1] *māṉaṉ*,பெ.(n.) மாந்தன்; man.

மானவன்[2] *māṉavaṉ*, பெ.(n.) 1. பெருமையுடையவன்; man of honour. *"ஆர்த்தடு மானவன்" (கந்தபு.துணைவ.32).* 2. அரசன்; king. *"மானவன் மந்திரி" (கலிங்.365).* 3. சேனைத் தலைவன் (திவா.); commander of army. 4. வீரன் (சது.); hero, champion.

*[மானம் = பெருமை, பெரியோன், வலிமை. மானம்→மானவன்]*

மானவாரி *māṉa-vāri*, பெ.(n.) 1. மானவாரி நிலம் பார்க்க; see *māṉavāri-nilam.* 2. மழையை நம்பி விளையும் விளைச்சல் (வின்.); cultivation, whether wet or dry, dependent upon rain. 3. சுறவத் திங்களில் விளையும் நெல் (வின்.); a kind of paddy that matures in the month of *Šuṟavam.*

*[மானம் + வாரி. வானம் > மானம்.]*

மானவாரிக்குளம் *māṉa-vāri-k-kuḷam*, பெ.(n.) மழை பெய்து நிரம்பும் ஏரி; rain fed tank.

*[மானவாரி + குளம்]*

மானவாரிநிலம் *māṉavāri-nilam*, பெ.(n.) மானம்பார்த்தநிலம் பார்க்க; see *māṉam -pārtta-nilam.*

*[மானவாரி + நிலம்]*

மானவாரிப்பத்து *māṉavāri-p-pattu*, பெ.(n.) மானவாரிப்பற்று பார்க்க; see *māṉavāri-p-paṟṟu.*

*[மானவாரிப்பற்று→மானவாரிப்பத்து. பற்று >பத்து]*

மானவாரிப்பற்று *māṉavāri-p-paṟṟu*, பெ.(n.) மானவாரிக் குளத்து நீரால் விளையும் நிலங்களின் மொத்த விளைச்சலிற் பேர் பாதியை அரசு தீர்வையாகக் கைக் கொண்டு தண்டும் முறை; a method of collecting revenue of land under rainfed tanks,

whereby the Government takes one half of the gross produce (R.T.).

*[மானவாரி + பற்று]*

**மானவாரிப்புன்செய்** *māṉavāri-p-puṉšey,* பெ.(n.) மழையால் மட்டுமே விளையும் புன்செய் நிலம்; rain fed dry land.

*[மானவாரி + புன்செய்]*

**மானவிலங்கு** *māṉa-vilaṅgu,* பெ.(n.) கவரிமான்; the yak.

**மானவிறல்வேள்** *māṉa-viṟal-vēḷ,* பெ.(n.) முற்காலத்துச் சிற்றரசர் சிலருக்கு வழங்கிய பட்டப் பெயர்; an ancient title of certain chiefs. *"மான விறல்வே ளழும்பி லன்ன" (மதுரைக்.344). "மானவிறல்வேள் வயிரிய மெனினே" (மலைபடு.164).*

**மானவு** *māṉavu,* பெ.(n.) தெளிவு (சது.); clearness.

**மானவெளி** *māṉa-veḷi,* பெ.(n.) திறந்த வெளியாயிருக்கும் வீட்டின் உள்முற்றம்; open quandrangle in a house.

*[மானம் + வெளி]*

**மானவேதியன்** *māṉa-vēdiyaṉ,* பெ.(n.) வேதங்கற்றவன் (வின்.); one learned in the *Vēdas.*

**மானன்**[1] *māṉaṉ,* பெ.(n.) 1. மானி[2], 1 (சங்.அக.) பார்க்க; see *māṉi.* 2. தலைவன் (யாழ்.அக.); chief.

**மானன்**[2] *māṉaṉ,* பெ.(n.) 1. வேடன்; hunter. 2. மூடன்; dullard.

**மானாகம்** *māṉāgam,* பெ.(n.) பெருநாரை (வின்.); cyrus crane.



**மானாகிமூலி** *māṉāgi-mūli,* பெ.(n.) இஞ்சி; ginger (சா.அக.).

**மானாங்காணி** *māṉāṅg-kāṇi,* பெ.(n.) உத்தரத்தின் மேல் நோக்கிய அமைப்பு (கம்.வழ.); upright pattern of a pillar.

*[மானம் = வானம். மானம் + காணி. மானங்காணி →மானாங்காணி (கொ.வ.)*

**மானாங்குலம்** *māṉāṅgulam,* பெ.(n.) நீட்டலளவு வகை (சிற்பரத்.18); a linear measure, one-six of a talam.

**மானாதிபட்சி** *māṉādi-paṭci,* பெ.(n.) 1. கருங்காக்கை; black crow. 2. நால்வகைச் சாதியில் கடைச்சாதியர்; the last class of human being.

**மானாமதுரை** *māṉā-madurai,* பெ.(n.) சிவகங்கை வட்டத்தில் வைகையாற்றின் கரையில் அமைந்துள்ள ஊர்; it is in *Sivagaṅgai* (Dt.) river bank of vaigai.

பெயர்க்காரணம்: 14ஆம் நூற்றாண்டில் இப்பகுதியை மானவீரன் என்ற பாண்டிய மன்னன் ஆட்சி செய்தான். இவன் பெயரால் மானவீரன் மதுரை என்பது நாளடைவில் மானாமதுரை என வழங்கலாயிற்று.

மானார்[1] *mānār*, பெ.(n.) பெண்டிர்; woman. *"மட்டுப் படாக் கொங்கை மானார் கலவி மயக்கத்திலே" (தனிப்பா.i, 149, 54).*

மானார்[2] *mānār*, பெ.(n.) பகைவர் (சங்.அக.); enemies.

மானார்[3] *mānār*, பெ.(n.) இலைக்கள்ளி; leaf spurge (சா.அக.).

மானாவாரி[1] *mānāvāri*, பெ.(n.) மானவாரி பார்க்க; see *māna-vāri*.

*[மானவாரி→மானாவாரி]*

மானாவாரி[2] *mānā-vāri*, பெ.(n.) 1. மனப் போக்கு (இ.வ.); whim, fancy. 2. பெருவாரி, தாந்தின்னி (இ.வ.); absolue or exclusive enjoyment. *"அவன் அதை மானாவாரியாய் பயன்படுத்துகிறான்" (உ.வ.).* 3. பொறுப்பின்மை; want of attention or care.

மானாவாரி[3] *mānāvāri*, பெ.(n.) மழை நீரை மட்டுமே நம்பி விளையும் விளைச்சல்; dry cropping, cultivation in rain fed tracts.

மானாவி *mānāvi*, பெ.(n.) 1. ஒன்பான் இரவு (நவராத்திரி)த் திருவிழா; the *Navarātri* festival. *"மானாவி சமைப்பாரைப் போலே" (ஈடு.10, 9, 4).* 2. மானாவிச்சோலை பார்க்க; see *mānāvi-c-cōlai*. *"மானாவிபோலே ஆவதழிவதாம் விபூதி" (திருவிருத்.66, வ்யா.).*

க. மானானி

மானாவிச்சோலை *mānāvi-c-cōlai*, பெ.(n.) ஒன்பான் இரவு (நவராத்திரி) விழாவில் அமைக்கும் (அலங்கார) ஒப்பனைச் சோலை; pleasure grove, temporarily formed for the *Navarātri* festival. *"மானாவிச் சோலை போல ஆவதழிவதான" (ஈடு.6, 9, 1).*

மானாள் *mānāḷ*, பெ.(n.) பெண்; woman, girl. *"ஒருத்தர்கிட்ட மானாளை விட்டேனோ" (விறலிவிடு.).*

மானி[1]-த்தல் *māni-*, 4 செ.கு.வி.(v.i.) 1. நாணுதல்; to be bashful, to become ashamed. *"கூற்றமும்... மானித்தது" (பு.வெ.7, 25, உரை).* 2. செருக்குதல், இறுமாப்புக் கொள்ளுதல்; to be proud. *"நின்னைப் பணியாது மானித்து நின்ற அரசன்" (நீலகேசி, 529, உரை).*

*[முல்→மல்→மன் = பெருமை, பெரியோன். மன்→மான். மானுதல் = ஒத்தல். மான்→மானி (வே.க.4: 35)]*

மானி[2]-த்தல் *māni-*, 4 செ.குன்றாவி.(v.t.) பெருமைப்படுத்துதல்; to respect, honour, treat reverently. *"நாணிமானித் தோமே நாமென்பார்" (காளத்.உலா.243).*

*[மான் = பெருமை. மான்→மானி-,]*

மானி[3] *māni*, பெ.(n.) 1. மதிப்புள்ளவ-ன்-ள்; person of honour. 2. செருக்குள்ளவ-ன்-ள், இறுமாப்புள்ளவ-ன்-ள்; proud person. *"களி மடி மானி" நன்.39).*

*[மானம்→மானி]*

மானி[4] *māni*, பெ.(n.) மங்கையர்க்கரசியார்; a canonized *Śaiva* saint. *"வரிவளையாள் மானிக்கு நேசனுக்கு மடியேன்" (தேவா.738, 11).*

மானி[5] *māṉi*, பெ.(n.) அளவைக்கருவி; instrument of measurement, meter.

1. அழுத்தமானி = உடலின் குறை–மிகை அழுத்தங்களை அளக்கும் கருவி; 2. உப்புமானி = ஓரிடத்தில் இருக்கும் உப்பின் அளவை அளக்கும் கருவி; 3. ஒலிமானி = ஒலியின் அளவை அளக்கும் கருவி; 4. குடிநீர்மானி = குழாய் மூலம் பயன்படுத்தும் குடிநீரை அளக்கும் கருவி; 5. கோணமானி = கோணங்களை அளக்கும் கருவி; 6. சுரமானி = உடலின் சுரத்தை அளக்கும் கருவி; 7. நில அதிர்வுமானி = நில நடுக்கத்தை அளக்கும் கருவி; 8. நீர்மமானி = நீர்மப் பொருள்களை அளக்கும் கருவி; 9. பாகைமானி = வட்டச் சிறுபகுதியை அளக்கும் கருவி; 10. பால்மானி = பாலில் கரைந்துள்ள நீரை அளக்கும் கருவி; 11. மழைநீர்மானி = பெய்யும் மழை நீரை அளக்கும் கருவி; 12. மின்மானி = பயன்படுத்திய மின்சாரத்தை அளக்கும் கருவி; 13. வெப்பமானி = வெப்பத்தை அளக்கும் கருவி. 14. பால்மானி = பாலில் நீரளவை அளக்கும் மானி.



மானி[6] *māṉi*, பெ.(n.) மாமன் (இ.வ.); uncle.

மானிகை *māṉigai*, பெ.(n.) வெறியம் (சாறாயம்) (சங்.அக.); spirituous liquor.

மானியார் *māṉiyār*, பெ.(n.) மானி[3] பார்க்க; see *māṉi*. *"மானியார் தாமு மஞ்சி" (பெரியபு. திருஞான.696).*

மானிறம் *māṉiṟam*, பெ.(n.) வெளிறின மஞ்சள் நிறம் (இ.வ.); fawn colour, tawny colour.

*[மான் + நிறம்]*

மானிறைச்சி *māṉiṟaicci*, பெ.(n.) மான்கறி; flesh of deer.

*[மான் + இறைச்சி]*

மானினி *māṉiṉi*, பெ.(n.) பெண் (சூடா.); woman.

மானு–தல் *māṉu-*, 16 செ.குன்றாவி.(v.t.) மான்[5]– (வின்.) பார்க்க; see *māṉ-*.

மானுயர் *māṉuyar*, பெ.(n.) மக்கட் பிறப்பினர்; human beings. *"மானுயரென்னப்படுபவர்" (நீலகேசி, 86).*

*[மான் + உயர்.]*

மானேந்தி *māṉēndi*, பெ.(n.) நிலவு; moon.

மானேந்திமூலி *māṉēndi-mūli*, பெ.(n.) ஈசுர மூலி; a twicer.

மானேறு *māṉēṟu*, பெ.(n.) 1. கலைமான்; stag. 2. பன்னிரண்டாம் விண்மீன்; the 12th naksatra.

மானோட்டி *māṉōṭṭi*, பெ.(n.) மான்கள் பயிரை மேயாமல் வெருட்டும் ஊழியத்திற்காகக் கொடுக்கப்பட்ட நிலம் (R.T.); land given as service-inam for driving the deer away from crops.



